உ

கடவுள் துணை.

தெய்வப்புலமைத்

# திருவள்ளுவ நாயனார்

அருளிச்செய்த

தமிழ்மறையாகிய

# திருக்குறள் மூலமும்,

## பரிமேலழகருரையும்,

இவ்வுரைக்கியையுமாறு

லோகோபகாரி பத்திராதிபர்

பண்டிதர்

## கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய

தெளிபொருள் விளக்கமும், கருத்துரையும்,

குறிப்புரையும்.

[illegible]

ஆங்கில மொழிபெயர்ப்புடன்

இவை

ஷை செட்டியாரவர்களாலும்

மங்கலம் - ஷண்முகமுதலியாரவர்களாலும்

சென்னை, கோமளேசுவரன்பேட்டை,

சச்சிதானந்த அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

முதற்பாகம்.

1919.

*Copy Right Registered.*

விலை ரூபாய் 7.

## முதற்பதிப்பின்

# முகவுரை.

கரண வியாபாரத்தைச் செவ்வையாகவுடைய எவ்வுயிர்களும் சர்வ துக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியும் பெற விரும்புவ தியற்கையாம்; ஆனால், அவை அவற்றிற்குப் பொருளல்லவற்றைப் பொருளாகக் கொள்ளும் மயக்கங் காரணமாக வுண்டாம் காமம் வெகுளி உள்ளவரையிலும் உண்டாகா வென்பது ஒருதலையாம்; பொருளைப் பொருளாகவும், பொருளல்ல வற்றைப் பொருளல்லவாகவுங் கொள்ளுந் தத்துவ ஞான முதித்த விடத்து உண்டா மென்பது "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு, மருளானு மாணாப் பிறப்பு" "ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே, மெய்யுணர் வில்லா தவர்க்கு" "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற, னாமங் கெடக்கெடு நோய்" என்றற் றொடக்கத்துத் திருக்குறளால் நன்கு வெளியாம். உயிர்கள் கீழ்ப்போன ஜன்மங்களிற்செய்த புண்ணிய பரிபாகத்தால் நான்மறை வழங்கும் பரதகண்டத்தில் ஒழுக்கத்தை யுயிரினுஞ் சிறந்ததாகக்கொண்டு கடைப்பிடித்து நன்னெறியிற் செல்லும் நன்மக்கள் குலத்திற்பிறந்து விலக்கியனவற்றை ஒழித்து விதித்தனவற்றையே செய்துவந்தால், அவ்வுயிர்களுக்குத் தத்துவஞான வாயிலாகச் சர்வ துக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோட்சம் ஒருதலையா யுண்டாமென்பது நன்னூல் உணர்ந்தோரது கொள்கையாம். மக்கள் தத்துவஞானம் பெறுதற்பொருட்டு, ஒவ்வொரு சிருஷ்டியி னாரம்பத்திலும் பரமேசுவரன் அநாதியாய வேதத்தை எடுத்துக்கூறி வருகின்றாரென்பதும், தாமே குருவடிவங் கொண்டு வந்து அதனை விரித்தும் சுருக்கியும் சிஷ்ய பரம்பரைக்குக்கூறி வருகின்றா ரென்பதும் சாஸ்திரசம்மதமாம். இதனால், மக்கள் தத்துவஞான மடைதற்கு ஏதுவாயுள்ளது வேதமேயா மென்பது பெறப்படும். இது "சத்திய மாகி வேத மொன்றுமே யளவை யாகும்" "வேத மோதியதே மெய்ப்பொருள் மற்றைப் பொருளெலா மித்தையே" "ஆதலான் மறையிற் சொலப்பட்ட அருத்தமே உண்மையானது" என்று சூதசங்கிதை கூறுவதால் நன்கு விளக்கமாம். இதனை மூலமாகக்கொண்டு எழுந்தநூல்கள் பல; அவற்றுள் திருக்குறளும் ஒன்றாம. இது மாங்குடி மருதனார் "ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி, வேதப் பொருளாய் மிகவிளங்கித்-தீதற்றோர், உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே, வள்ளுவர் வாய்மொழி மாண்பு" என்றும், மதுரைப்பெருமருதனார் "வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார், ஓதவழுக் கற்ற துலகு" என்றும் திருவள்ளுவமாலையிற் கூறியிருத்தலால் செவ்வனே புலனும். ஆகவே, "மறைக்கு விரோதமுறு, மொழியார் அருந் புராணங்கள் முற்றும்பிரமா ணங்களே" என்று சூதசங்கிதை கூறியவாறு திருக்குறளும் பிரமாண நூல்களுள் ஒன்றுமென்றும் பெறப்பட்டது. இத்திருக்குறள் தமிழில் வெளியாய நூல்

களுள் அறம் பொருளின்பங்களை எப்பாலவரும் இயைந்தேற்குமாறு முறைப்படக் கூறுவதுபற்றித் தலைமைபெற்றுத் தமிழறிந்தாரியாவராலும் வேதம்போன்று போற்றப்பட்டுவருதலும், இதன் சிறந்தறிந்து தெலுங்கு, இங்கிலீஷ், பிரஞ்சு, ஜர்மனி முதலிய பாஷைக் குரியாராலும் தத்தம் பாஷையில் மொழிபெயர்த்துக்கொண்டு பொன்னேபோற் போற்றப் பட்டு வருதலும் குன்றின்மேலிட்ட விளக்காம். இத்திருக்குறளை ஒவ்வொருமதஸ்தரும் தத்தம் மதநூலென்று பாராட்டிவருதலினால், இது யாவரும் உய்யுநெறிகண் டௌிதி னெய்யுமாறு இயற்றப்பட்ட நூலாம். இது "சமயக் கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறிப் பொருளிது வென்ற, வள்ளுவன்" என்று கல்லாடங் கூறுமாற்றானும் அறிதற்பாலதாம். "பல்காற் பழகினுந் தெரியா வுளவேல், தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார், மூன்றினு முழங்கு மாண்டினு மிலையேல், வடமொழி வெளிபெற வழங்கு மென்க" என்று இலக்கணக் கொத்துநூலார் கூறுவதனாலும் இதன் மாட்சிமை நன்குவெளியாம். நாயனார், தேவர் என்றற் றொடக்கத்துத் திருநாமங்களுடைய தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரால் அருளிச்செய்யப்பட்ட உத்தரவேதம், தெய்வநூல் என்றற் றொடக்கத்துத் திருநாமங்களுடைய இத்திருக்குறளுக்கு உரையியற்றிய தருமர் முதலிய பதின்மருள் பரிமேலழகர் உரையே சிரிய உரையாய் நிலவிற்றென்பது "நூலிற், பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன், தெரித்தவுரை யாமோ தெரி" என்றுள்ள பிரயோகத்தினால் இனிது விளங்குவதாம். இப்பரிமே லழகருரை தருக்கம், இலக்கணம், சாங்கியம், யோகம், வேதாந்தம், தருமசாஸ்திரம், சங்கநூல் முதலியவற்றிற் பயிற்சியுடையவர்க்கேயன்றி மற்றையோர்க்குப் பெரிதும் பயன்படாதிருப்பது கருதி, இவ்வுரை முழுதிற்கும் நன்கு டனும்வண்ணம் தெளிபொருள்விளக்கமும், கருத்துரையும், அடி உரையில் இலைமறைகாய்போலிருக்கும் விஷயங்கள் நன்கு விளங்குமாறு குறிப்புரையும் (பரிமேலழகர் மேற்கோளாக எடுத்துள்ள செய்யுள்களுக் குரையும் அவர்காட்டிய இலக்கணங்களுக்கு விளக்கமும், சாங்கியமத முதலியவற் றின் சித்தாந்தமும், பெரும்பான்மையும் மேற்கோளாய்க் காட்டியுள்ள செய்யுட்களின் நூற்பெயரும், நூற்பிரமாணங்களும் அக்குறிப்புரையில் விளக்கிக்) கற்றோர்க்கேயன்றி மற்றையோர்க்கும் உபாத்தியாயரின் சகாயம் பெரும்பான்மையுமின்றி யினிது விளங்குமாறெழுதி இந்நூல் அச்சிடப்பட்டது.

இந்நூலில் உரையுடன் திருவள்ளுவமாலையும் திருவள்ளுவரது சரித்திரமும் சேர்க்கப்பட்டிருத்தலே யல்லாமல், நாயனாரது வேறுசரித்திர விசேஷங்களும், அவரது பத்துத் திருநாமங்களுக் கர்த்தமும், திருக்குறளின் பத்துத் திருநாமங்களுக் கர்த்தமும், இலக்கண விசேஷங்களும், பரிமேலழகரது சரித்திரமும், வேறு சில விசேஷமும் எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

15—7—1904. கோ - வடிவேலுசெட்டியார்.

உ

# இரண்டாம் பதிப்பின் முகவுரை.

இப்பதிப்பு இரண்டாவது பதிப்பாம். முதற் பதிப்புச் சஞ்சிகை வடிவமாக அச்சிடப்பட்டமையின், அது காரணமாகச் சில பிழைகள் அப்பதிப்பில் நேர்ந்துவிட்டன ; அவை இப்பதிப்பிற் றிருத்தப்பட்டிருக்கின்றன ; எழுதாது விடப்பட்டனவும் எழுதப்பட்டிருக்கின்றன; பல நூலாராய்ச்சியால் கண்ட பாட பேதங்களும் காட்டப்பட்டிருக்கின்றன ; மூலத்திற்கு முரைககுமொத்த வேறு சில பிரமாணங்களும் காட்டப்பட்டிருக்கின்றன ; நண்பர் பலரது விருப்பின்படி திருக்குறள் மூலத்திற்கு ஆங்கிலேய மொழிபெயர்ப்பும் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

இவ்வாங்கிலேய மொழிபெயர்ப்பை யியற்றியவர் எமது முக்கிய நண்பருள் ஒருவரும், எம்மோடெப்போதும் பழகி வருகின்றவருமாவர். அவர் தம் பெயரை வெளியாக்குதல் கூடாதென் றெம்மைக் கேட்டுக் கொண்டமையால், அவர் பெயரை அவர் விருப்பத்திற் கேற்றவா றெழுதாதுவிட்டனம் அவர் கைம்மாறு கருதாது செய்த இவ்வுதவி யென்ஞான்றும் மறத்தற்பாலதன்றாம்.

இப்புத்தகத்தை யச்சிடும்போது எமமுடனிருந்து வேண்டிய உதவியைச் செய்துவந்த ஸ்ரீமத் - மங்கலம்-சுப்பிரமணிய முதலியாரவர்களுக்கு யாமென்று மறவாத அன்பு செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம்

இப்பதிப்பு அச்சாகி வரும்போது ஐரோப்பா யுத்த மாரம்பமாய் விட்டது ; அதனால், காகிதத்தின் விலை மிக அதிகமாய்விட்டது ; உயர்ந்த காகிதங் கிடைப்பது மிக அருமையாய்விட்டது ; அதுபற்றி மிகச் சில பாகம் முதற்றரமான காகிதத்தில் அச்சிடுதல் கூடாமற் போயிற்று. முதற் பதிப்பு (டிம்மி 8-பக்கங்கொண்ட) 163-பார வளவினதாம் ; இப்பதிப்போ (டிமமி 8-பக்கங்கொண்ட) 185-பார வளவினதாக முடிவுபெற்றது. அது பற்றி இப்பதிப்பின் விலை ஒரு ரூபாய் அதிகமாக வைக்கப்பட்டிருக்கின்றது.

யுத்தங் காரணமாகக் காகிதத்தின் விலை ஒன்றுக்கு நான்கு ஐந்து வீதமாய் விட்டமையால், மிக அதிகவிலை கொடுத்துக் காகிதம் வாங்கி இப்புத்தகத்தை அச்சிடல் வேண்டியதாயிற்று. அதுபற்றி இப்புத்தகத்திற்கு யாம் அதிக விலை வைக்கவில்லை.

இப்பதிப்பினும் பிரார்ந்திப் பிரமாதங்களால் பிழைகள் நேரிட்டிருத்தல் கூடும்; அவற்றை யறிவுடையோர் தெரிவித்தால், அவை பிழைதிருத்தமாகச் சேர்த் தச்சிடப்படுவதுடன் அவர்களுக்கு வந்தனமு மளிக்கப்படும்.

இப்புத்தகம் யாதொரு இடையூறுமின்றிப் பூரணமாக முற்றுப்பெறுமாறு திருவருள் புரிந்த எல்லாம்வல்ல இறைவன் இஃதென்ஞான்றும் நிலைபெறுமாறும் அருள்புரிவாரெனப் பிரார்த்திக்கின்றனம். இதிற்பிழையுளதாயின், உலகம் பொறுக்க.

சென்னை,
1—10—1918.

கோ - வடிவேலு செட்டியார்.

# திருக்குறள்
## பாலியலதிகார அடைவு.

# CONTENTS.

## I - அறத்துப்பால் (38)—On Virtue.

## II-பொருட்பால் (70)-- On Property.

1 அரசியல்—(25) *The duties of the king*

கடவுள் துணை.

# திருவள்ளுவர் சரித்திரம்.

புண்ணிய பூமியாகிய இப் பரதகண்டத்திலே இமயமலையினுச்சியிலே சிறப்புப்பொருந்தி விளங்கும் திருக்கயிலாயத்திலே உயர்வொப்பிலாத செம்பொற்றிருக்கோயிலிலே திவ்வியசிங்காசனத்தின்மீது நித்தியாநந்தவடிவின ராய்ச் சிவபெருமான் பிரமாதி முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத் தெண்ணாயிரம் இருடிகள் கின்னரர் கிம்புருடர் கருடர் காந்தருவர் சித்தர் வித்தியாதரர் முதலானவர் இருபுடையும் சூழ்ந்து வணங்கித் தோத் திரித்து நிற்கவும், பூதர்கள் பலவாத்தியங்களை முழக்கியும் வெண்சாமரை வீசியும் ஆலவட்டம் அசைத்தும் நிற்கவும், ஹரஹர என்னும் பேரொலி எங்கும் தழைத்தோங்கவும், தமது அருட்சத்தியும் உலகமாதாவுமாகிய உமா தேவியார் இடப்பக்கத்தில் வீற்றிருக்கவும், அளவிறந்த பெருங்கருணை யோடு திருவோலக்கமாயெழுந்தருளி யிருந்தனர்.

அப்போது உமாதேவியார் எழுந்து பரமபதியாகிய சிவபிரானைப் பணிந்துநின்று, "சுவாமி! திரிலோகத்திலே இல்லறம் வழுவாது நடாத்தி முத்தியடைந்தவர் உண்டோ? அவரைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும்" எனச், சிவபெருமான் "உமையே! தெய்வலோகத்திலே வசிட்டர், அகத்தியர், அயன், புயங்கன், சம்பு என்னும் ஐவரும் பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவரும், தென்புலத்தார்கடன் தேவர்கடன் விருந்தோம்பல் சுற்றந்தழுவல கபிலைபூசை செய்தல் முதலியன முடித்துக் கற்பின் வழுவாத நற்குண நற்செய்கைகளையுடைய மனைவிகளோடிருந்து இல்லறத்தை நடாத்தி முத்தியடைந்தனர்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பார்வதியார் "பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவர் யார்? அவர் சரித்திரத்தைக் கேட்க விரும்புகின்றேன்" எனச் சிவபிரான், பூர்வத்திலே ஒரு பிரளயம்வர அதனைப் பிரமன் முன்னரேயறிந்து வேற்றுருவடைந்து ஒரு சுரைக்கூட்டிற் புகுந்திருந்து அவ்வெள்ளத்திலே மிதந்து வந்தனன். நாம் யாதும் அறியாதவன்போலச் சுரைக்கூட்டி னருகணைந்து, இதற்குளிருப்பவன் யாவன்? என்று கேட்க, அவன் 'யான்வருங் காலமறிந்து நடத்தவல்ல வள்ளுவன்' என்றான். 'இப்பிரளயத்தில் நீ எப்படிப் பிழைத்திருக்கின்றாய்' என்றோம். அப்போது பிரமன் நம்மை அறிந்துகொண்டு பேரானந்தத்தி லழுந்தி, 'பரமபதியே! ஜகத்ரக்ஷகனே! உமது திருவருளினாலன்றோ பிழைத்திருக்கின்றேன்; தேவரீர் கிருபைகூர்ந்து இத்துன்பந் தரும் நீர்ப்பெருக்கைத் தவிர்க்கவேண்டும்' என்று வேண்ட, அவ்வதிகாரத்தை உமக்கே தந்தோம் என்றுசொல்லி முன்போலவே உலகத்தை அவனாலேயே படைப்பித்தோம்.

இப்படியிருக்கையில், ஆதிகாலத்தில் பூமியிலே பாண்டிநாட்டிலே மதுரைமா நகரத்திலிருந்த சங்கப்புலவர்கள் நம்மை ஊர்கால் அவமதித்ததன் பொருட்டு அவர்கள் கர்வ பங்கமாகும்படி பிரமனைத் திருவள்ளுவராகவும், மஹாவிஷ்ணுவை இடைக்காடராகவும், சரசுவதியை ஒளவையாகவும் பூமியில் அவதரிக்கும்படி அனுப்பினேன்.

ஆதியிலே பிர்ம புத்திரர்களாகிய காசிபர்முதலிய நவப்பிர்மாக்களில் காசிபர் ஊர்வசியைச்சேர்ந்து வசிட்டரைப் பெற்றார்; அவர் அருந்ததியைச் சேர்ந்து சத்தியரைப் பெற்றார்; அவர் புங்கவியைச் சேர்ந்து பராசரைப் பெற்றார்; அவர் மச்சகந்தியைச் சேர்ந்து வியாசரைப் பெற்றார்; இந்நால்வரும் வேதங்களுக் குரியவராயினர்.

பின்பு பிர்மாவானவன் மற்றுஞ் சிலபுத்திரரால் வடமொழியையுந் தென்மொழியையும் விளங்கச்செய்ய வேண்டுமென்றெண்ணி வேதவிதிப்படி ஒரு யாகஞ்செய்தான்; அதன்கண் வைத்திருந்த கும்பத்தினின்றுங் கலைமக ளவதரித்தனள்; அவளைப் பிரமன் விவாகஞ் செய்துகொண்டான்; பின்பு அகஸ்தியர் சூரியவடிவோடு அக்கும்பத்துதித்தனர். அவர் சமுத்திர கன்னிகையை மணந்து பெருஞ்சாகரன் என்பவரைப் பெற்றார் அவர் திருவாரூர்ப் புலைச்சியைச் சேர்ந்து பகவன் என்பவரைப்பெற்று, அவர்க்குச் சகல சாஸ்திரங்களையும் கற்பித்தார் அந்நாளில் பிர்மவம்சத்தில் ஒரு முனி என்பவர் அருந்ததி என்னும் பிராமணமாதைச் சேர்ந்து ஒரு புத்திரியைப் பெற்றதை விட்டு விராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர். அக்குழந்தையை உறையூர்ப் பெரும்பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்து வருகையில், அந்தசேரியில் அகாரணமாய் மண்மாரிபெய்தது; பெய்யவே, மேல் நடக்கப்போகிற காரணத்தினால் இந்தப் பெண் தவிர மற்றவர் யாவரும் இறந்தனர். பின்பு அந்தப்பெண் எப்படியோ அதற்கடுத்த மேலூர் அகரத்திலே நீதியையன் வீட்டையடைந்து வளர்ந்து வந்தனள்.

அப்போது பகவனென்பவர் சகல சாஸ்திர பண்டிதராய்க் கண்டவர் யாவரும் மதிக்கும்படி பிராமண கிர்த்தியத்தில் வழுவாதவராய்க் காசியாத்திரைக் கேகும் மார்க்கத்திலே மேலூர் அகரத்துக்கடுத்த ஒரு சத்திரத்திலிறங்கி நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு சமையல் செய்துகொண்டிருந்தார்; அவ்விடத்தில் அந்தப்பெண் வர, அவளைக் கண்டு 'நீயார்? புலைச்சியோ? வலைச்சியோ? இங்கே என்வந்தாய்' என்று அதட்டி மிகுந்தகோபங்கொண்டு சட்டுவத்தால் அவளது தலையிலே உதிரஞ்சோர அடித்து ஓட்டினார் அவள் அழுதுகொண்டே தன்னிடத்துக்குப் போய்விட்டாள்.

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ்செய்து போஜனம் பண்ணி அதிசீக்கிரத்தில் வழிக்கொண்டு சிலநாளிற் காசிஸ்தலமடைந்து கங்காஸ்நானஞ்செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தமெடுத்துக்கொண்டு வரும்போது முன் தங்கிப்போன சத்திரத்திலேயே வந்திறங்கினார். மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போது யௌவனமும் பேரழகும் உடையவளாய் அங்கே வந்தாள். பகவனென்பவர் இவளுடைய சௌந்தரிய முதலிய

குணங்களைப் பார்த்து மனமருண்டு நிற்க, அச்சத்திரத்து அதிபராகிய நீதி யையர் அக்குறிப்பினைக் கண்டு 'என் பெண்ணை நீர் விவாகம் பண்ணிக் கொண்டு இங்கேயே இருக்கலாம்' என்று சொல்ல, அதற்கவர் 'நான் கொண்டுவந்த கங்கையை இராமேச்சுரத்திற் செலுத்தித் திரும்பி வருவேன்' என்று உறுதிமொழிகூறிச் செலவு பெற்றுக்கொண்டுபோய் இராமலிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணித் திரும்பி வந்தார். அப்போது நீதியையர் பந்து மித்திரர்களோடிருந்து குறித்த கன்னிகையைப் பகவனுர்க்குப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுக்க, நான்குநாளைய சடங்குகள் சந்துஷ்டியாய் நடந்தேறின; ஐந்தாநாள் மங்களஸ்நானஞ் செய்விக்கும்போது பகவனென்பவர் அந்தப் பெண்ணினுடைய தலையில் எண்ணெயைப் பெய்யும்படி மயிரை வகிர்ந்தார்; *அப்போது தாம் முன்பு சட்டுவத்தா லடித்த வடுவைக்கண்டு அனுமானித்து, 'இந்தப் பெண் யார்' என வரலாறு முற்றும் விசாரித்து வியசனமடைந்து, 'ஆதியாளல்லவா?' என்று சொல்லி அவளைவிட்டு ஓடினுர். அவ்வாதியென்னும்பெயரே அவளுக்குக் காரணப் பெயராயிற்று.

அதுகண்டு ஆதி என்பவளும் பின் தொடர்ந்துசென்று, பொழுது போகையில் எதிரே கண்ட பாணர்சேரியில் ஒரு மண்டபத்திலே தங்கிய பகவனென்பவர் அருகிற்சென்று வணங்கிநின்று, 'என் பர்த்தாவே! தெய்வச்செயலால் உமக்கும் எனக்கும் இந்தக்காரியம் நடந்திருக்கச் சகல நீதியும் அறிந்த நீர் என்னைவிட்டு நீங்குதல் தருமமோ' அல்லது தருமமோ?' என்றும், 'உம்மை நீங்கி நான் உயிர்தரியேனே'' என்றும் மிகவும் இரக்கத்துடன் சொல்லப், பிராரத்த காமவசத்தால் இவர் புத்தியிலும் அது சரியென்று தோன்றப் 'பெண்ணே! என்னிடத்தில் உனக்கு அன்பிருக்குமானால் யான் சொன்னபடி கேட்கவேண்டும்; அஃதாவது உனக்குப் பிள்ளைகள் எங்கெங்கே பிறக்கின்றனவோ அப்பிள்ளைகளை அங்கங்கே அப்பொழுதே விட்டுவருவையானால் யான் உன்னைக்கூடச் சம்மதிப்பேன்' என்று சொல்ல, அவள் அதற்கு உடன்பட்டாள்; அதனால், அன்றிரவில் அம்மண்டபத்தி லிருவருங் கூடிக் களித்திருந்தனர்.

அப்போது நமது கட்டளைப்படி சரசுவதி யாவராலும் புகழப்பட்ட ஔவையாகப் பிறந்தனள். உடனே அவ்விருவரும் புறப்பட்டுப் போகை

---

* " அருந்தவ மாமுனி யாம்பக வற்குக், கருவூர்ப் பெரும்பதிக் கட் பெரும்புலைச்சி, யாதி வயிற்றினி லன்றவ தரித்த, காண் டம்மா யாகிய கபில னும் யானே, யென்னுடன் பிறந்தவ ரெத்தனை பேரெனி, லாண்பான் மூவர் பெண்பா னல்வர், யாம்வளர் திறஞ்சிறி தியம்புவல் கேண்மின், ஊற்றுக் காட்டெனு மூர்தனிற் றங்கியே, வண்ணா ரகத்தி லுப்பை வளர்ந்தனள், காவிரிப் பூம் பட்டினத்திற் கள்விலைஞர் சேரியிற், சான்றா ரகந்தனி லுறுவை வளர்ந் தனள், நரப்புக் கருவியோர் நண்ணிடு சேரியிற், பாணா ரகத்தி லௌவை வளர்ந்தனள், குறவர் கோமான் கொய்தினைப் புனஞ்சூழ், வண்மலைச் சாரலில் வள்ளி வளர்ந்தனள், தொண்டை மண்டலத்தில் வண்டமிழ் மயிலை,

யில் தொண்டைநாட்டிலுள்ள ஊற்றுக்காட்டில் ஒரு மடத்திற்கூட உப்பையும், சோழதேசத்தில் கருவூரில் ஒரு சோலையிற்கூட அதிகமானும், காவிரிப்பூம்பட்டணத்தில் ஒரு மண்டபத்திற்கூட உறுவையும், திருவாரூரில் ஒரு மடத்திற்கூடக் கபிலரும், வேளின்மலைச் சாரலிற்கூட வள்ளியம்மையும், திருமயிலாப்பூரில் இலுப்பைத் தோப்பிற்கூடத் திருவள்ளுவரும் பிறந்தனர்.

இக்குழந்தைகளை யாவர் காப்பாற்றுவாரென்று விட்டு நீங்கத் தாய் வருந்தும்போது, அப்பிள்ளைகள் சொல்லிய தனி வெண்பாக்கள்:—

**ஔவை.**

இட்டமுடனென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றோ
நெஞ்சமே யஞ்சாதே நீ.

**உப்பை.**

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்—முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பனோ வன்னா யரன்.

**அதிகமான்.**

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்ய—னுருப்பெற்றா
லூட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்கேள்
வாட்ட முனக்கேன் மகிழ்.

**உறுவை.**

சண்டப்பைக் குள்ளுயிர்தன் றாயருந்தத் தானருந்து
மண்டத் துயிர்பிழைப்ப தாச்சரிய—மண்டி
யலைகின்ற வன்னா யரனுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில்.

**கபிலர்.**

கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கு
முண்ணும் படியறிந் தூட்டுமவர்—நண்ணு
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குந் தொழிலென்ன தான்.

---

பறைய ரிடத்தில் வள்ளுவர் வளர்ந்தன, ரரும்பார் சோலைச் சுரும்பார் வஞ்சி, யதிகனில் லிடை யதிகமான் வளர்ந்தனன், [illegible]ரூர் நீர்நாட் டாரூர் தன்னி, லந்தணர் வளர்க்க யானும் வளர்ந்தேன்" என்று கபிலரகவல் கூறுகின்றது.

### வள்ளியம்மை.

அன்னை வயிற்றி லருத்தி வளர்த்தவன்றா
னின்னும் வளர்க்கானோ வென்றாயே—பின்னரவஞ்
சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றுவிளை
யாடும் பெருமா னவன்.

### திருவள்ளுவர்.

எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண் டோ வில்லையோ
வவ்வுயிரில் யானொருவ னல்லனோ—வவ்வி
யருகுவது கொண்டிங் கலைகுவதே னன்னே
வருகுவது தானே வரும்.

இப்பாடல்களைக் கேட்டுத் தாய் மனந்துணிந்து நீங்க, அவ்விருவருந் தீர்த்த யாத்திரைக்குச் சென்றனர்.

திருமயிலாப்பூரில் விடப்பட்ட குழந்தை அங்குள்ள ஆலயத்திலம்மை ஆத்மார்த்தமாகப் பூசித்துக்கொண்டு, இலுப்பை மரத்தடியிலிருந்து அம்மல ரிற்றுளிக்குந் தேனையுண்டு, பூர்வம் பிர்மாவாதலால் சிகை எக்யோபவீதம் சதுர்வேத புத்தகமுங்கொண்டு வளர்ந்துவருகையில், ஒருவேளாளன்மனைவி புத்திரபாக்கியத்தைக்குறித்து மேற்படி ஆலயத்திலோர்புறம் தவஞ்செய் திருந்தனள். அப்போது 'இக்குழந்தையை நீயெடுத்துக் கொண்டுபோய்த் திருவள்ளுவரென்று நாமகரணஞ்செய்' என்று நம்மால் அசரீரி வாக்குண் டாக்கப்பட்டது; அதனை அவள் கேட்டு மனமகிழ்ச்சியுடன் அக்குழந்தை யை எடுத்துக்கொண்டு போய்க் கணவன்கையிற் கொடுக்க அவனும் இரு கரமுமேந்தி வாங்கித் தன் மடிமேலிருத்தி உச்சிமோந்து, மகிழ்ந்தனன்; பின் அக்குழந்தையை யவ்விருவரும் அருமையாக வளர்த்துவந்தனர். அது கண்டு அவர்கள் சுற்றத்தார் 'ஏதோ ஒரு பிள்ளையை வளர்க்கிறார்கள்' என்று இகழ்ச்சிசெய்ய, அதற் கவர்களஞ்சிப் புறத்திலுள்ள தொழுவத் தில் தொட்டிலிட்டு அதில் அக்குழந்தையைக் கிடத்திப் பண்ணைக்கார ரைக் காவல்வைத்து வளர்த்து வந்தனர். ஐந்துவயதானபின்பு திருவள்ளு வர் தம்மை வளர்ப்பவர் சுற்றத்தார்களால் நிந்தை செய்யப்படுகிறார்களே என்று கருதி அவர்களைப் பார்த்து 'என்னிமித்தம் உங்களுக்கு வருத்தம் வேண்டுவதில்லை; இனி நான் வேறிடத்திலிருந்து நீங்கள் நினைக்கும்போது வந்து வேண்டியதைச் செய்வேன்' என்று சொல்லிப் புறப்பட்டு அவ்வூரில் ஒரு பனைமரத்தினிழலில் இருந்தார். அம்மரத்தடி நிழல் அவரைவிட்டு நீங்காதிருந்தது; அதனைக் கண்டவர்களெல்லாம் 'இப்பிள்ளை தேவனோ, முனிவனோ' என்று துதிக்க, நாயனார் அவ்விடம்விட்டுத் திருமூலர், போகர் முதலிய சித்தர்கள் வாசஞ்செய்யும் மலைக் கெழுந்தருளினார். இங்கிருந்த திருமூல ரிவரைக்கண்டு 'வள்ளுவரே! பூர்வத்தில் நந்தி எனக் கனுக்கிரகம் பண்ணினபோது அங்கிருந்தீரே? உலகத்தார்க்குச் சித்தி

மூர்த்தியருளும்படிக்கும், அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலையுந் தமிழில் அருளிச் செய்யும்படிக்கும், இங்குவந் தவதரித்தீரோ?' என்று துதிக்க, நாயனார் மகிழ்ந்து அங்குத் தவஞ்செய்வோரில் ஒருவராகத் தாமு மிருந்தனர்.

அக்காலத்தில் தொண்டைமண்டலத்தில் ஒரு வேதாளமானது பயிர்களை அழித்தும், உயிர்களை வதைத்தும், பிராணிகளுக்குப் பல துன்பங்களைச் செய்துவந்தது; வருகையில், காவேரிப்பாக்கமென்னும் ஊரிலிருக்கும் ஆயிரம் ஏர்வைத்துப்பயிர்த்தொழில் நடாத்தும் மார்க்கசகாயனென்னும் ஒரு வேளாளன் அதனை யடக்கினவர்க்கு வேண்டிய திரவியமும் ஒரும் தருகிறேனென்று பிரசித்தப்படுத்தி யிருந்தான். அதனையடக்குதல் ஒருவர்க்கும் முடியாமையால், அவ்வேளாளன் பெரியோர்கள் வாசஞ்செய்யும் மலையில்வந்து திருமூலர் முதலானவருடன் சொல்ல, அவர்கள் 'அதோ இருக்கும் திருவள்ளுவருடன்சொல்' என்றனர். அதனை யறிந்து சிவகாருண்யராகிய நாயனார் அவ்வேதாளத்தை ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தால் வென்று யாவரையுங் காத்தனர்.

அதுகண்டு அவ்வேளாளன் நாயனாரைத் துதித்து 'யான் கொடுக்கும் ஊரையும் திரவியங்களையும் பெற்றுக்கொண்டு, வாசுகியென்னு மெனது பெண்ணையுந்தேவரீர் அங்கீகரித் தருளல்வேண்டும்' என்றுபிரார்த்தித்தான். நாயனார் உலகத்தார்க் கில்லறம் நடாத்திக் காட்டவேண்டிய காரணத்தை யோசித்து அந்தப்பெண் நான் கொடுக்கும் மணலை அன்னமாக்கி எனக்குப் படைக்குமானால் அப்படியே விவாகஞ்செய்து கொள்ளுவேன்' என்றார். அந்தப்பெண் அதற்குச் சம்மதித்து அவர் கொடுத்த மணலைச்சமைத்துப் படைத்தனள். பின்பு நாயனார் வாசுகி என்னுமப்பெண்ணை விதிப்படி விவாகஞ் செய்துகொண்டு சிலநாளங்கிருந்து திருமயிலைக்குத் தம்மனைவியுடன்வந்து, ஓர் இல் ஆக்கிக்கொண்டு, செய்தொழில்களில் பாவமில்லாதது நெய்தற்றொழில் என்று தீர்மானித்து, அவ்வூரிலிருக்கும் ஏலேலசிங்கனென்னும் வர்த்தகரிடத்தில் நூல்வாங்கி ஆடைநெய்து அதனால்வருங் கூலியால் காலங்கழித்திருந்தனர்.

அக்காலத்தில் திருவாலங்காட்டில் சபாநாயகராக எழுந்தருளியிருக்கும் நாம் மகிடாசுர சங்காரஞ்செய்து கர்வித்திருந்த பத்திரகாளியுடன் பலவித நடனம் புரிகையில் அக்காளியும் சோர்வுறாமல் நடனம்புரிந்தனள்; அப்போது நமது குண்டலங்கழன்றது; அதனைக்காதில் சேர்க்கும்படி ஊர்த்துவ பாதமாக நடனஞ்செய்தோம்; அப்படி பத்திரகாளியாட நாணி நின்றனள். அதுகண்டு தேவர்கள் சந்தேகமுற்றுத் தற்செயலாய் நாம் ஊர்த்துவ நடனஞ்செய்த காரணந் தெரியாமல்மயங்க, அப்போது நீங்கள் திருமயிலையிலிருக்கும் திருவள்ளுவரிடத்து இதனைத்தெரிந்து கொள்ளுங்களென்று ஆக்ஞாபித்தோம். தேவர்க ளங்கேபோய் அவர் முன்னின்றனர்; நாயனார் அவர் நின்ற குறிப்பறிந்து

௺

வெண்பா.

பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க—நாவி
விழைநக்கி நூனொருடு மேழையறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து.

என்று கூறியருளினார்- அதனைக்கேட்டு அவர்கள் சந்தேகந் தெளிந்தார்கள்.

ஒருநாள் நாயனார் நூல் வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கர் வீட்டுக்குப் போய்ச் 'செட்டியார் எங்கே?' என்றுகேட்க, அங்குள்ளார் 'சிவபூசை செய்கிறார்' என்றனர்; 'அவர் சிவபூசை இங்குச்செய்கிறாரோ குப்பத்தில் செய்கிறாரோ' என்றனர்; அதனை அவர்பத்தினி கேட்டு உள்ளேபோய்ச் செட்டியார்க்குக் கூற, அவர் திடுக்கிட்டுச் சிவபூசைவிட்டு ஓடிவந்து நாயனாருடைய உபயசரணங்களையும் வணங்கி, 'சுவாமி! அடியேனைப் பந்தசாகரத்தினின்றும் எடுத்துக் கரையேற்றி யருளல் வேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்தனர். பின்பு ஒருநாள் நாயனார் அவரது பக்குவத்தையும் மற்றுஞ் சில மாணாக்கர் பக்குவத்தையும் சோதிக்கவெண்ணி அவர்களை யழைத்துக்கொண்டு ஒருவனத்திற்செல்ல, அங்குப் பெருகி வரும் வெள்ளத்தில் தம்மைப் பின்றொடா மனேதிட மற்றவராய்ச் சில மாணாக்கர் பயந்து நின்றுவிட, ஏலேலசிங்கர் மாத்திரம் அவர்தம்மைத் தொடர்ந்துவந்தனர். அவ்வெள்ளம் வழிவிட்டது. பின்பு நாயனார்ஏலேலசிங்கரைப் பார்த்து, ஓர் உயர்ந்த மரத்தினுனியி லேறும்படி கூறினார்; அவர் ஏறிய பின்பு 'நின்ற கொம்பையும் பிடித்த கொம்பையும் விட்டுவிடு' என்று கூறினார்; அவர் அவ்வாறே யோசியாமல் விட்டனர்; விட்டும், ஓர் அபாயமுமில்லாம லிருக்கக்கண்டு ஏலேலசிங்கரை நாயனார் தமது மடிமீதுவைத்து ஞானோபதேசஞ் செய்தருளினர். பின்பு திருமயிலை நாட்டுக் காசனாகிய அச்சுதராஜன் ஒருநாள் ஏலேலசிங்கரோடு பேசிக் கொண்டிருக்கையில் 'உமக்குப் புத்திரப்பேறில்லையே; உமது ஞானாசாரியரைக் கேட்கலாகாதா' என்றனன். அவர் 'நல்லது' என்று போய் நாயனாரைக்கண்டு விண்ணப்பஞ்செய்ய, நாயனார் 'சுவாமி கடாக்ஷிப்பார்' என்று அனுக்கிரகம் பண்ணினார்.

பின்பு ஒருநாள் ஏலேலசிங்கரும் அவர் மனைவியாரும் தாம் வழக்கப்படி காலையில் தரிசிக்கும் பசுவின் வாற்புறத்தில் நாம் சிறுகுழவியாயிருந்தழுவதைக் கண்டு அக்குழந்தையை எடுத்து உச்சிமோந்து முத்தமிட்டு ஆனந்தசாகரத்திலழுந்தி ஞானகுருவாகிய நாயனார் சந்நிதிக்குக் கொண்டுபோய் வைத்து வணங்கினார்கள். அவர் அக்குழந்தைக்கு 'அழகானந்தர்' என்று நாமகரணஞ் செய்தனுப்பினார். இச்செய்தியை ஏலேலசிங்கர் அச்சுதராஜனுக்கறிவிக்க, அவன் 'அப்படி தெய்வீகமாய்க் கிடைத்திருந்தால் அக்குழந்தை இங்கு வரலாமே' என்றான். உடனே அரசனது மடியில் குழந்தை வந்திருந்தது. அதுகண்டவ்வரசன் ஆச்சரியமடைந்து 'இஃதழகானந்தமோ'

என்று ஆனந்தமடைந்து, அதனைத் தன் மனைவி கையிற் கொடுக்க அவளும் ஆனந்தமடைந்து அருமையாக வளர்த்துவந்தனள். பின்பு நாயனார் அநேகர்க்குஞானோபதேசஞ்செய்துகொண்டுஅதிமகிமையோடுவாழ்ந்திருந்தனர்.

மற்றொரு தினத்தில் ஏலேலசிங்காது கப்பல் கரைதட்டிப்போயிற்று; அதனை அவர் அரசனுக்குச்சொல்ல, அவன் 'உம்முடைய ஆசிரியருடனே சொல்லும்' என்றனன். நாயனார் அதனை முன்னமேயறிந்து தமது திருமுன் விண்ணப்பஞ்செய்ய வருகின்ற ஏலேலசிங்கரை யழைத்துக் கொண்டு கப்பலருகிற்சென்று தமது திருக்கரங்களால் அதனைத்தொட்டு * 'ஏலேயாவென் றிழுங்கள்' என்று கட்டளையிட்டனர்; அப்படியே யிழுக்க வுடனேகப்பல் சரியாகநின்றது.

பின்பொருகாலத்தில் மழையில்லாமையால் தானியங் கொள்ளக் கிடையாமல் அநேகரிறந்துபோவதைக் கண்டு ஜீவகாருண்யராகிய நாயனார் தமக்கன்புள்ள ஏலேலசிங்கரைப் பார்த்து 'நீர் இந்தப் பஞ்சம் மாறுகிறவரைக்கும் வாங்கிவைத்திருக்கும் நெல்லையெல்லாம் வாங்கின விலைக்குக் குறுணி யேற்றமாக விற்கக்கடவை'என்றருளினர்;அவர் அவ்வாறே குருமொழிதவறாதுவிற்றனர். பொருள் மலைபோற் குவிந்தது. கட்டி யிருந்த நெற்கூடோ குறையாமலே யிருந்தது. பின்பு மழைபெய்ய உலகம் செழிப்படைந்தது. மறுபடியும் நாயனார் ஏலேலசிங்கரை நோக்கிக் 'குறுணி குறையவில்' என்றார்; அவர் அவ்விதமாகவே விற்க, மறுநாளைக்குள் அவரிடத்திலிருந்த நெல்லெல்லாம் செலவாய்விட்டன.

நாயனார் ஏலேலசிங்கரைப்பார்த்து 'நீ நெல்லுவிற்று விருத்திசெய்திருக்கிற பொருள்களைமாற்றிப் பொன்னுக்கி உருக்கித்திரட்டிக்கடலிற் போட்டுவிடு' என்றனர்; அவர் அப்படியே செய்தனர். அதனை யொரு மீன்விழுங்கிற்று. சிலநாள் சென்றபின் அம்மீன் வலைக்காரர் கையிலகப்பட,அவர்கள் அதனைச் சேதிக்கையில் அதன் வயிற்றில் மலினம்படிந்த வொருதம்பமிருக்கக்கண்டு அதிசயித்து, அதனை ஏலேலசிங்கர்க்குக் கொடுத்தனர். அவர் அதனைக் கல்லென்று நினைத்து ஸ்நானஞ்செய்யு மிடத்திற் போடுவித்தார். அது நடத்தல் முதலிய பயிற்சியால் மலினம் நீங்கிப் பிரகாசித்தது; அவர் அதில் தமது பேர் வெட்டியிருக்கக் கண்டு † 'இது குருவருள்' என்று மகிழ்ச்சி யடைந்தார்.

திருவள்ளுவர் இப்படி அநேக அற்புதங்களைச்செய்துகொண்டிருக்கும் நாளிலே பாண்டிய நாட்டிலே மதுரையில் நக்கீரர்முதலிய சங்கப் புலவர்கள் தாம் அடைந்திருந்த கல்விப்பெருக்கத்தால்கர்வமடைந்து அங்குப்போந்த வித்வச்சிரோமணிகளை எல்லாம் அவமதித்துநடப்பதைக்கேள்வியுற்றிருந்த

---

* இது முதற்கொண்டு பளுவிழுப்போர் "ஏலேலோ ஏலவலி" என்று சொல்லிக்கொண்டு வருகின்றனர் என்று சொல்லப்படுகிறது.

† இது முதற்கொண்டு "ஏலேலசிங்கன்பொன் எழுகடல்போனாலும் மறுபடியும் வரும்" என்னும் பழமொழி வழங்கப்பட்டு வருகின்றதென்று சொல்லப்படுகின்றது.

அழகானந்தர் முதலிய பெரியோர்கள் திருவள்ளுவரைப் பார்த்து, 'கற்றற்கெளிதாகவும் இம்மைமுதலிய மும்மைக்கு முதலியாகவும், உலோகோபகாரமாகவும் உமது பெயரால் ஒரு நூல் செய்யவேண்டும்' என்று வேண்ட, நாயனார் வேதாகம சாரங்களையெல்லாந் திரட்டி அறம், பொருள், இன்பம் என முப்பாலாக்கி (1330) குறள் வெண்பாவா லொருநூல் செய்தருளினர். அழகானந்தர் முதலாயினோர் அதனைக்கண்டு சந்தோஷித்து இதனைக் கொண்டு சங்கத்தாரை வெல்லலாம் என்று துணிந்து, நாயனார்க்குத் தங்கள் எண்ணத்தைத் தெரிவித்தனர். நாயனார் அடியார் வேண்டுகோளுக்கிசைந்து தமது மனைவியை இல்லின்கணிறுத்திப் புறப்பட்டு இடைக்கழிநாட்டின் வழியாகப் போகையில், ஔவையார் நேர்பட அவரோடும் போனார்; போம்போது இடைக்காடரைக் கண்டு தாம் செல்லுங் காரணத்தைத் தெரிவிக்க, இடைக்காடரும் நாயனாரை நோக்கி 'இடையாலுங் கடையாலு மழியக்கடவதென்று சுவாமி தம்மை நிராகரித்த நக்கீரர் முதலிய சங்கப் புலவரைச் சபித்திருக்கின்றனர்; ஆதலால் என்னாலும் உம்மாலு மச்சங்க மழிவுபடப் போகின்றதாகையால், நாமும் உம்முடன்வருவோம்' என்றனர். பின்பவர்கள் சென்று மதுரையை யடைந்து வையை நதியில் ஸ்நானஞ்செய்து சபதபங்களை முடித்துக்கொண்டு பிரதக்ஷிணமாக ஆலயத்திற்குட்சென்று அங்கு மீனாட்சி சொக்கலிங்க மூர்த்தமாகி யமர்ந்துள்ள நம்மைத் தரிசனஞ்செய்தனர். பின்பு நாயனார் மேற்படி சந்நிதானத்தில் பாண்டியராஜன் மந்திரி பிரதானி முதலானவர்கள்சூழ, ஔவையார் இடைக்காடர் மற்றுமுள்ளவருமிருந்து கேட்கும்படி தாமருளிய திருக்குறள் முப்பாலைச் சங்கத்தார் நெஞ்சில் திகிலேறவும், ஏனையர் நெஞ்சிற் களிப்பேறவும், அரங்கேற்றி முடித்தனர். அதனைச் செவியாரக்கேட்ட பாண்டிய ராஜன் முதலானவர் மிருந்த ஆநந்தபரவசராய் நாயனாரைப் புகழ்ந்து துதித்தனர்.

அதன் பின்பு நாயனார், இடைக்காடர் ஔவையார் முதலாயினோர் தம்மைச் சூழ்ந்துவரப், பொற்றாமரைத் தீர்த்தத்தின்கண்ணே சங்கப்பலகை மீது தமிழ்க்கரசாக வீற்றிருக்கின்றவரும், திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் பாடிய திருக்கோவையார் நானூற்றுக்கும் நூறு குற்றங் கூறினவரும், நம தன்பனாகிய தருமி என்னும் பிராமணனுக்குப் பொற்கிழி கொடுத்தற்பொருட்டு நாம் அருளிச்செய்த

அகவல்.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறிஎயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே.

என்னுந் திருமுகப் பாசுரத்திற்குக் குற்றங் கூறினமையால் நாம் ஒருவித்து வானகைப்புலவீர் சபைக்கேகி நக்கீரனைப் பார்த்து,

வெண்பா.

அங்கந் தலைப வரிவாளி னெய்பூசிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்
கீர்கீரென வறுக்குங் கீரனோ வெண்கவியை
யாராயு முள்ளத் தவன்.

என்று கேட்டபோது, நக்கீரன் நம்மை யறிந்துகொண்டு,

வெண்பா.

சங்கறுப்ப தெங்கள்குலஞ் சங்கரனுர்க் கேதுகுலம்
பங்கமறச் சொன்னாற் பழுதாமோ—சங்கை
யரிந்துண்டு வாழ்வோ மரனோநின் போல
விரந்துண்டு வாழ்வ திலை.

என்று சொல்ல, நாம் நமது நெற்றிக்கண்ணைக்காட்ட, அப்போதும் அஞ்சாமல் நெற்றிக்கண்ணேயன்றி உடம்பெல்லாங் கண்ணுகைக் காட்டினுலுங் குற்றங் குற்றமேயென்று கூறினவரும், மற்றப் புலவர் பாடலையெல்லாம் கொள்ளையிட்டவரும், பழுதற இலக்கண விலக்கிய வாராய்ச்சியுள்ளவருமாகிய நக்கீரர்முதலிய புலவர்களுடைய தைரியமும் தருக்கும் அறிவுங்கலங்கிச் சோர்வடையும்படி அவர்களிடத்திற் சென்று, அவர்கள் தம்மை வினவிய அசதி வினைக்களுக்கெல்லாம் செந்தமிழ்ப்பாவா லுத்தாங் கொடுத்தனர். பின்பு சங்கத்தார் நாயனுரை நோக்கி 'நீ ரெந்தவூர்' என்றனர்; அதற்கவர்

எந்தவூ ரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீ
ரந்தவூர் செய்தி யறியீரோ—வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமா
யப்பாழும் பாழா யறும்.

என்றற்றொடக்கத்து ஞானார்த்தமான செய்யுட்களால் அவர் வினவியவினைக்களுக்கெல்லாம் உத்தரங் கொடுத்தனர். பின்பு சங்கத்தாரை நோக்கி ஔவையார் கைச்செய்கையாய் 'இவை என்ன' என்று வினவிய வினவிற்கு அவர்கள்

இவ்வளவு கண்ணினு ளிவ்வளவு சிற்றிடையா
ளிவ்வளவு போன்ற விளமுலையா—ளிவ்வளவாய்க்
காமத் தலைவனையுங் காணுது கன்றினு
ணாமத்தை நாட்டுகுறி நன்கு.

என்று விடைகூற, இது தகுதியான உத்தரமன்றென்று அக்குறிகளுக்கு ஔவையார்

ஐயமிடுமி னறநெறியைக் கைப்பிடிமி
னிவ்வளவே னும்மனத்தை யிட்டுண்மின்—றெய்வ
மொருவனே யென்ன வுணரவல் லீரே
லருவினைகளோந்து மறும்.

என்று மொழிந்தனர்; அதுகேட்டுச் சங்கத்தார் திகிலடைந்து, இவரை வெல்லுதல் முடியாதென்று துணிந்து, இடைக்காடருடனே பேசு, அவர்

ஆற்றங் கரையி னருகிருந்த மாமரத்திற்
காக்கை யிருந்துகஃ கஃகெனக்—காக்கைதனை
பெய்யக்கோ லில்லாம லிச்சிச் செனவெய்தான்
வையக்கோ னர்தம் மகன்.

என்று கூறினர். பின் சங்கத்தார் இதுபோன்ற செய்யுட்களுக்கு உத்தரங் கொடுக்கச் சக்தியில்லாமல் இவர்களை வெல்வதரிதென் றறிந்து நாணமுற்று, நாயனரைப் பார்த்து 'நீர் பாடிய குறளை நாங்க ளொப்புக்கொள்ளுவதற்கு ஐயமொன் றுளது; அஃதியாதெனின், நாங்களிருக்கு மிந்தப்பலகை தெள்ளிய செந்தமிழ் நூலைக்கண்டால் இடங்கொடுக்கு மாதலால், இஃ தொப்புக்கொள்ளுமாயின், எங்களுக்கெல்லாம் சம்மதமாம்' என்று சொல்ல, அவ்வாறே நாயனர் தாமருளிச்செய்த திருக்குறளை அச்சங்கப்பலகைமீது வைத்தனர். உடனே அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றாமரைத் தீர்த்தத்தில் விழும்படி தெய்வத்தன்மை பொருந்திய திருக்குறட் புத்தகத்தி னளவாகச் சுருங்கி அதற்குமாத்திரம் இடங்கொடுத்தது. அதனைக் கண்டவர் யாவரும் களிகூர்ந்தனர்; அவருட்சிலர், இதுவே தமிழ் வேதமென்றும், ஆகமமென்றும், சாஸ்திரமென்றும், மதனூலென்றும் பலவாறுஞ் சொல்லித் துதித்தனர். பின்பு பொற்றாமரைத் தீர்த்தத்தில் விழுந்துதடுமாறி வருந்திய சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மருங் கரையேறி நாயனரையும் திருக்குறளையும் புகழ்ந்து நாற்பத்தொன்பது வெண்பா பாடினர். அது திருவள்ளுவமாலை எனப் பெயர் பெறும்.

மேற்படி சங்கத்தாரும் உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டியன் முதலானவரும் நாயனரைத் துதித்து 'இந்நூலை அகஸ்தியரும் ஒப்புக்கொள்ளின், அதுநன்றாம்' என, அதற்கு நாயனர் சம்மதித்துப் பொதிய மலைக்குப்போய் அகஸ்தியர் முதலிய முனிவர்களைக்கண்டு தாஞ்செய்த நூலைக் காண்பித்தனர். அவர்கள் அதனை நன்குணர்ந்து அடைந்த சந்தோஷம் அநந்தனுக்கும் சொல்லுதல் முடியாது. அவ்விடத்தில் கொங்கண சித்தர் தம்மை வழிபட நாயனர் அவர்க்கனுக்கிரகித்து, அவ்விடத்திருந்து நீங்கி நாமெழுந்தருளியிருக்கும் ஸ்தலங்களை யெல்லாந் தரிசனஞ்செய்து கொண்டு திருமயிலைக்குச் சமீபமாக வருகையில், அப்பதியாரும் ஏலேல சிங்கருங் கேள்விப்பட்டுஎதிர்கொண்டழைத்துவர, நாயனரும் தமதில்லஞ் சேர்ந்து வாசுகியாரோடு கூடிக் களித்திருந்தனர்.

இங்ஙன மிருக்கையில், ஒருவர் அவரில்லின்கட்சென்று '[illegible]றம் பெரிதோ துறவறம்பெரிதோ அடியேனுக் கனுக்கிரகஞ் செ[illegible]ம்

என்று வெகுநாள்காத்திருந்தனர், நாயனுர் அதற்குஉத்தரமொன்றுஞ்சொல்லாமல் அவரே யறிந்துபோகும்படி செய்தனர். ஒருநாள் நாயனுர் தமது மனையாள் கிணற்றில் சலந் தூக்கிக்கொண் டிருக்கையில் அழைக்கப் பாதிக் கிணற்றளவில் தூக்கின குடத்தை நிற்கவிட்டு அவ்வம்மையார்வந்ததையும், ஒருநாள் அந்த அம்மையார் நாயனுர்க்குப் பழையது பரிமாறிநிற்கையில் 'இதுசுடுகின்றது' என அவ்வம்மையார் சீக்கிரத்தில் விசிறிகொண்டுவிசிறியதையும், மற்றொருநாள் பகலில் நாயனுர் நெய்யும்போது கையிலிருந்து குழல் தவறி வீழ்ந்ததை யெடுக்க மனையாளைநோக்கித் 'தீபங்கொண்டுவா' என, அவ்வம்மையார் தீபங்கொண்டுவந்ததையும் வந்திருந்தவர் கண்டு கற்புடைய மனையாள் வாய்க்கில் இல்லறமேபெரிது, இல்லையேல் துறவறமே பெரிது என்றெண்ணிக்கொண்டு நாயனுரை வணங்கிப் போய்விட்டனர்.

இவ்வாறு யாவருங்காண நாயனுரும் அவர்தம்மனைவியாரும் அருமையாக இல்லறம் நடாத்திவருங் காலத்தில்,வாசுகியம்மையார் முத்தியடையும் போது நாயனுர் திருமுகத்தைப்பார்த்தனர். நாயனுர் 'யாதுவிரும்புகின்ருய்' என; அவ்வம்மையார் 'என்னை மணஞ்செய்தவன்று தொடங்கித் தேவரீர்க்கு அன்னம் பரிமாறுகையில் தேவரீர் சிறுபாத்திரத்தில் சலமும் ஊசியும்சமீபத்தில் வையென்று கட்டளையிட்டதன் காரணம் இன்று வரையில் அடியேற்குத் தெரியவில்லை' என்று விண்ணப்பஞ்செய்தனர். நாயனுர் அன்னம் புறத்திற்சிதறுமாயின், அதனை யெடுத்துப் பரிசுத்தஞ் செய்வதற்கு' என்று கூறினுர். அதனைக்கேட்டவர் உடனே முத்தியடைந்தனர். அப்போது நாயனுர்

> அடிசிற் கினியாளே யன்புடை யாளே
> படிசொற் றவறாத பாவா—யடிவருடிப்
> பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ
> வென் றூங்கு மென்க ணிரா.

என்றுரைத்து அவ்வம்மையார் திருமேனியைச் சமாதிபண்ணினுர். பின்பு நாயனுர் மகாவற்புதங்களைச் செய்துகொண்டிருந்து ஏலேலசிங்கர் முதலிய சீடர்களுக்குப் பூரணுனுக்கிரகஞ்செய்து ஏலேலசிங்கரைப் பார்த்து, 'நமக்குப் பரிபூரணதசை நேரிட்டிருப்பதால், நமது சரீரத்தைப் புரிகட்டி இழுத்தூர்க்குப் புறத்திற்போட்டுவிடு' என்று கட்டளையிட்டு நிஷ்டை கூடிப்பரிபூரணமானவர்போலிருந்தனர். அதுகண்டு, ஏலேலசிங்கர் அவரைப் பொற்பெட்டியில்வைத் தடக்கஞ்செய்ய யத்தனித்தனர். அதுகண்டு நாயனுர் கண்விழித்துப் பார்த்து, 'அப்பா! நான் சொன்னசொல்லைக்கடவாதே' என்று சொல்லி உடனே விதேகமுத்தி யடைந்தனர். ஏலேலசிங்கர் நாயனுர் கட்டளையை நிறைவேற்றுகையில் அவரது சரீரப் பரிசமடைந்த பிராணிகளெல்லாம் பொன்னிறமடைந்து சுவர்க்கம் பெற்றன' என்று உமாதேவியார்க்குப் பரம கிருபாளுவாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளினர்.

திருவள்ளுவர் சரித்திரம் முற்றிற்று.

# திருவள்ளுவர் வரலாறு.

## நேரிசை யாசிரியப்பா.

நயமிகு புகழ்ச்சோ ணாட்டுளோ ரந்தண
னுயர்மனைக் கிழத்தியங் குயிர்த்தவோர் மைந்தற்
கியாணர்சால் பகவ னெனப்பெய ரீந்துபின்
கோணிலை நாணிலை குறித்தசா தகத்தாற்
புன்குல மாதுமோ தாள புணருமென் றோர்ந்திஃ
தென்குலக் கிழுக்கதா மெனவுளங் கழுமிய
பீழையி னோடுறீஇப் பின்பொரு சில்நாள்
மாழையுண் கண்ணியை மதலையைத் தணந்து
கோணைநீர்க் கங்கையிற் குடைகுவா னேகினன்
பேணுமச் சிறுவனும் பிரும சரியமேற்
றோவா வருமறை யோதிநூ லுணர்ச்சியின்
மூவா நலத்தினும் மூவாட் டைபனு
யெந்தைநிற் பிரிதாற் கேதுவென் னெனத்தாய்
புந்திநைந் துரைசெயப் பொருள்வட புலநதுரீஇப்
போதரு நெறியிடைப் புலைமகள் கருவூ
ராதியென் பெயரின ளரும்பெறற் செவ்வியள்
பொற்கொடி போன்றெதிர் புகமருண் டினிய
சொற்கொடு புதுநலந் தோய்ந்துணர்ந் ததன்பி
னிச்செய றகாதென வெண்ணிவிட் டேகுழி
மெய்ச்சொற் கற்பினள் விடாதுடன் றொடரக்
கண்டொருத் தொருசிலை கைக்கொடு நுதன்மிசைப்
புண்டர வெறிந்தவட் போக்குபு விரைந்துபோய்த்
திகழ்பா கீரதி தீரமே லுளபதி
யகமெலாந் தேடியு மத்தனைக் கண்டிலா
தரங்கையிற் றனுதுநா டடைகுவான் மீண்டு
வரும்பொழு திரவவன் மருவுறச் சாலையிற்
றற்பிரி வாற்றுத் தளர்ச்சியோ டோதொறு
மற்பக னேடுறு மாதிதற் காணு
வுற்றடி வணங்கலு முயர்மறை யோனவ
ணெற்றியிற் சிலைவடு நேரி னோக்கிமுன்
பிணங்குமா தெனத்தெளிந் திவண்வர லென்னென
வணங்குநிற் பிரிந்துறி னுவிவா ழேனென
வீன்றிடு மகவெலா மீன்றுழி யேவிடுத்

துன்றிய துணிபொடு முடன்வர வல்லையேல்
வருகென வண்ணலம் மடவர லிசைதலா
லிருவருந் தலந்தொறு மியங்குகா லங்களி
லுப்பை யௌவை யுறுவை வள்ளியென்
றிப்புவி போற்றுமீ ரிருவர் மகளிரு
மன்னுசீ ரதிகமான் வள்ளுவர் கபில
ரென்னு மாடவ ரிம்மூ வரும்பிறந்
தெவ்வத் தலமெவ ரெவர்க்குப் பிறப்பிட
மவ்வத் தலங்களி னவரவர் வளர்ந்தனர்
செப்புமவ் வெழுவருட் டிருவள் ளுவர்தா
மைப்புய லணிபொழின் மயிலாப் பூரில்
வள்ளுவர் மனையிடை வளர்ந்தன ராங்கவ
ருள்ளுமுத் தேவரு ளொருவ ராகிய
சதுர்முகன் றிருவவ தார மாகலின்
முதுமறை யாகம முத்தமிழ்க் கலைபிற
வையந் திரிபிலா தனைத்துநன் குணர்ந்து
தெய்வப் புலமையிற் சிறந்தரன் குருவா
யற்புத நீறணிந் தைந்தெழுத் தியம்பித்
தற்பர லிங்கமெய் தரித்தருள் செயப்பெறீஇ
வலங்கொள்பூ வைசியர் மரபினுற் றெண்குண
மிலங்குறு வாசுகி யெனும்பெயர்த் தையலை
மணந்தக னமர்ந்து மகிழ்ந்துற வறத்தரும்
வணங்குற வில்லற வாழ்வினுற் றருளா
லென்னி னுயர்வுறு மினித்தமிழ் மொழியென்
முன்னுறு பொருவட மொழியமுக் காறுற
மலைதரும் பற்பல மதத்தரும் வியந்து
தலைமிசைக் கொண்டிது தக்கதென் றேத்த
விம்மை மறுமைவீ டெய்தவிந் நூலொன்
றம்ம வமையுமென் றறிஞருள் ளுவப்ப
வெவைகட் கிணையிலை யெனத்தருக் குறுகடைச்
சங்கப் புலவரத் தருக்குளத் தொழிய
வீரிரு வேதமே யெழுவா யாகிய
சீரிய விழுமிய செவ்விய நூல்களிற்
சிறந்த பொருளெலாஞ் செந்தமிழ்க் குறளி
லறம்பொருள் காமமென் றுகுமுப் பாலாற்
கூறின ரொருநூல் கொண்டுளந்
தேறினர் பயனெலாஞ் சேர்ந்துவாழ் குவரே.

## நாயனார் சோரூபஸ்துதி.

*திருமுடி மிசையார் மயிர்முடி யழகுந் தீர்க்கபுண் டர நுத லழகும்-திரண்மணி புயங்கை வருஞ்செவி யழகுந் திகழ்நெடுந் தாடியி னழகும், அருமுடி செபமா லிகையின்முத் திரைசேர பய நேர் வலக்கையி னழகும் - அமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வரத மமைதரு மிடக்கையி னழகும், கருமுடி யோகப் பட்டையி னழகுங் கடிகொள்கீட் கோவண வழகும்-கழல்களிற் றிகிரி வளை வரை யழகுங் கமலநல் லாதனத் தழகும், தருமுடி முகிலோய் மயிலையி னிடைமா தவர்கள்கண் டிறைஞ்சவீற் றிருக்கும் - தமைபுகழ்த் திருவள் ளுவரெனு நாம சற்குரு சரணமே சரணம்.*

---

## திருவள்ளுவர் சரித்திரத்தைப் பற்றிய வேறு குறிப்புக்கள்:

ஒருநாள் சாயங்காலம் திருவள்ளுவநாயனார் தாம் நெய்த ஆடையை விற்றற்குக் கடைத்தெருவிற்குப்போய் அவ்வாடையைக் கையிற் பிடித்துக்கொண்டு நிற்கையில், இவரது திருக்குறளைப்படித்த வொரு சிறுவன் இவரிடத்து இவர் கூறிய நூலுக்கேற்றபடி யொழுக்கமிருக்கின்றதாவென்று ஆராயவெண்ணி, நாயனாரிடத்துச்சென்று "இவ்வாடையின் விலையென்ன" என்று கேட்க, அவர் "ஒரு பணம்" என்ன, அச்சிறுவன் அதனை வாங்கிக் குறுக்கே கிழித்து "இப்பாதியின் விலையென்ன" என்று வினவ, அதற்கு அவர் "அரைப்பணம்" என்ன, அவன் அப்பாதியையும் பாதியாகக் கிழித்து "இதன்விலையென்ன" என்று கேட்க, அவர் "காற்பணம்" என்று கூறினர். அதுகேட்டு அச்சிறுவன் நாயனாரது பொறுமையைக் கண்டு மகிழ்ந்து விலகிப்போய் இன்னும் இவரது பொறுமையைப் பரிசோதிக்கவேண்டுமென்றெண்ணி, மறுநாட் காலையில் அவரது இல்லின்கட்சென்று வாசுகியாரைச் சண்டைக்கிழுத்துத் தொந்தரவு செய்ய வாரம்பித்தான். அதனைக்கண்டு நாயனார் நெய்தற்றொழிலைவிட் டெழுந்து போய் அச்சிறுவனை நையப்புடைத்தனர். புடையுண்ட அச்சிறுவன் நாயனாரை நோக்கி "ஐயரே! நீர் 'அகழ்வாரைத் தாங்கு நிலம் போலத் தம்மை,யிகழ்வார்ப் பொறுத்த றலை' என்று கூறிய குறள் பயனற்றதாயிற்றே" என்றனன். அதற்கு நாயனார் "நீ திருக்குறளை முற்றும் படிக்கவில்லைபோலும்! திருக்குறளில் 'செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க, செய்யாமை யானுங் கெடும்' என்னும் செய்யுளைப் படித்திருந்தால் இக்காரியஞ் செய்யமாட்டாய்" என்று கூற, அதற்கு அச்சிறுவன் திருக்குறளில் சமயோசிதமாகக் கூறவேண்டிய விஷயமனைத்தும் மாறுபாடின்றி யமைந்திருத்தலையறியாது வீணே பெரியாரைப் பழித்த பாவத்திற்காளானேனென்று மனம்வருந்தி நாயனாரிடத்தில் மன்னிப்புக்கேட்டுக்கொண்டு விடைபெற்றுச்சென்றனன் என்பதும்,

நாயனாரில்லாத வேளையில் இவரில்லின்கட் சென்ற ஓரருந்தவ சித்தர் நாயனாரது இல் கிலமான குடிசையாயிருத்தலைக்கண்டு, தமது தவமகிமை யால் அவ்வில்லை இராஜ மாளிகைபோலாக்கிச் சென்றனர். அவர் சென்ற பின்னர் நாயனார் வந்து பார்த்து "ஆட் கொல்லியுள்ளவிடத்து நாமிருக்க லாகாது" என்று கூறி மனைவியை யழைத்துக்கொண்டு சென்று வேறோ ரிடத்து ஒரு சிறு குடிசை கட்டி அதிற் குடிபுகுந்திருந்தனர். சிலநாள் கழித்து அச்சித்தர் நாயனாரைத் தரிசிக்கவந்து தாமமைத்துத்தந்த மாளிகை யிற் காணாது விசாரித்துச்சென்று, மற்றோர் குடிசையிலிருக்கக்கண்டு, அவருடன் தனிமையாய்த் தத்துவங்களி னிலைமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கையில், அவர் பெய்த மூத்திரம் பட்டகல்லொன்று மாற்றுயர் ந்த பொன்னானதைக்கண்டு மனமுடைந்து, நம்மினுமுயர்ந்த சித்திபெற் றுள்ள இப்பெரியார்க்கு நாம் மாளிகையமைத்துத்தருதல் அவமான காரிய மாமென்றெண்ணி, நாயனாரிடத்து யான்செய்த காரியத்தை மன்னித்தல் வேண்டுமென்று மன்னிப்புக்கேட்டுக்கொண்டு சென்றனர் என்பதும்,

ஒருநாள் நாயனார் தமது மனைவியார் ஆபரணங்களின்மேல் ஆவல் கொண்டிருப்பதையறிந்து அவரது வியர்வை நீரால் சூளையில் வெந்து கொண்டிருந்த பாத்திரங்களை யெல்லாம் பொற்பாத்திர மாக்கிக் காட்டி, "உன துடம்பின் வியர்வை நீரே மட்பாத்திரங்களை யெல்லாம் பொற் பாத்திரங்களாக்கும் தன்மையதாயிருக்க, நீ ஆபரணத்துக் காசைகொள்ளு தல் பயனற்றகாரியமாம்" என்றுகூறி, அவ்வம்மையார்க்குப் பொருளு டையார்க்குவரும் ஆபத்தினை விரித்துபதேசித்தனர்; அது முதற்கொண்டு "பொன்னின் குடத்திற்குப் பொட்டிட்டுப் பார்ப்பதேன்" என்னும் பழ மொழி வழங்கிவருகின்றது என்பதும்,

ஔவையாரும் இடைக்காடரும் நாயனாரைச் சந்தித்த போது அவர் கள் அவரை நோக்கி "சீரியற்றிய குறளைத்தன்மைத்து" என்றுவினவ, அதற்கவர் "குறுமுனிவன் முத்தமிழு மென்குறளு நங்கை, சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்" என்று விடை பகர்ந்தனர்; அதுகேட்ட ஔ வையாரும் இடைக்காடரும் முறையே "ஐம்பொருளு நாற்பொருளு மூப் பொருளிற் பெய்தமைத்த, செம்பொருளை யெம்மறைக்குஞ் சேட்பொரு ளைத் - தண்குருகூர்ச், சேய்மொழிய தென்பர் சிலரியா னிவ்வுலகின், தாய்மொழிய தென்பேன் றகைந்து" என்றும், "சேய்மொழியோ தாய் மொழியோ செப்பி லிரண்டுமொன்றவை, வாய்மொழியை யாரு மறை யென்ப - வாய்மொழிபோ, லாய்மொழிகள் சால வுளவெனினு மம்மொழி யின், சாய்மொழியென் பேன்யான் றகைந்து" என்றும் கூறினரென்ப தும், பிறவும் கர்ணபரம்பரையாக வழங்கிவருகின்றன.

ஒருசாரார் நாயனார் ஸ்மார்த்தப் பிராமணரென்றும், அவர் வாக்கே அதற்குச் சான்றுமென்றும், யோகானுபவ முடைய அவர் இன்னுமுயிரோ டிருக்கின்றாரென்றும், வேளாளர் வீட்டில் வளர்ந்தார், பறையர் வீட் டில் வளர்ந்தார், வள்ளுவர் வீட்டில் வளர்ந்தாரென்று கூறுதல் கட்டுக்கதை யாமென்றும், வள்ளுவனார் என்னும் பெயர் சாதிபற்றிய பெயரன்றென் றும், பிறவும் கூறுவர்.

திருவள்ளுவமாலையில் ஆக்கியோன்பெயர், வழி, எல்லை, நூற்பெயர், யாப்பு, நுதலியபொருள், கேட்போர், பயன், காலம், களம், காரணமென்னும் பதினொன்றும் நன்குவிளங்கிக் கிடத்தலின், அவற்றைவிரிக்காது விட்டனம்.

திருவள்ளுவனார் திருக்குறளேயன்றி ஞானவெட்டி, திருவள்ளுவர் எண்ணூறு (இது வைத்தியநூல்), திருவள்ளுவராயிரம் [இது சோதிடநூல்] என்றற்றொடக்கத்தனவற்றையும் இயற்றினாரென்று கூறுவாருமுளர். திருக்குறளுக்கும் ஞானவெட்டி முதலிய நூற்களுக்குமுள்ள வேற்றுமை மின்னலுக்கும் மின்மினிப்பூச்சிக்குமுள்ள வேற்றுமைபோலிருத்தலின், அஃதாராய்ச்சியில்லாதார் கூற்றெனவிடுக்க.

கடைச்சங்கத்து வழங்கிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தொகைநூல்களுளொன்றான பதினெண்கீழ்க் கணக்கிற் சேர்ந்தநூல்களுள் திருக்குறளும் ஒன்றென்பர் சிலர்; திருக் குறளரங்கேறியபின் கடைச்சங்கமழிந்து விட்டமையால், அதன்கண் வழங் கிய பதினெண் கீழ்க்கணக்கில் திருக்குறளெப்படிசேரும்? அதுகூடா தென்பர் சிலர்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு பதினெண்கீழ்க்கணக்கென்பவை இன்னின்னவென்பதை,

நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் றோங்கு பரிபாடல
கற்றறிந்தா ரேத்துங் கலியே யகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூல
மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு

என்னும் வெண்பாக்களினறிக

ஈண்டுள்ள முப்பால் என்பது திருக்குறளாகாதெனல் திருவள்ளுவ ரது சரித்திரப்படி பார்த்தால் விளங்குவதாம்

## காலம்.

திருவள்ளுவநாயனாரது காலம் மதுரையில் கடைச்சங்க மிருந்தகால மென்று அவரது சரித்திர வாயிலாக வெளியாவதால், இந்நூற்குக் கற்

றேறக்குறைய இரண்டாயிர வருடத்திற்கு முன்னும். சரித்திர ஆராய்ச்சியுடையார் "சிலப்பதிகாரம்" "மணிமேகலை" முதலிய நூல்களினுதாவினுலும் பிறவாற்ருலும் திருவள்ளுவர் கி. பி. முதனூற்ருண்டில் இருத்தல்வேண்டும் என்பர்.

சாதி.

இவரது சாதி இவரது சரித்திரத்தின்படி பிராமண சாதியாம். இவர் சாதியை யொத்துக்கொண்டவரென்பது "மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" என்னுங்குறளாலும் பிறவாற்ருலும் நன்குவிளங்கும்

மதம்.

இவரைச் சைவரென்றும், வைணவரென்றும், அத்வைதியென்றும், பௌத்தரென்றும் சமணரென்றும், கிறிஸ்தவரென்றும் அவ்வவ்வகுப்பினர் கூறுகின்றனர்.

சைவர், வைணவர், அத்வைதிகள் என்பார் மூவரும்ஒத்துக்கொண்டுள்ள வேள்வியை இவர் "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற னுயிர்செகுத் துண்ணாமை நன்று" என்றும், "செவியுணவிற் கேள்வி யுடையாரவியுணவி, னான்ருரோ டொப்பர் நிலத்து" என்றும் சிறப்பித்துடம்பட்டுக் கூறுதலினுலும், பௌத்தர் - சமணர் - கிறிஸதவர்கள் அதனைப் பல்லாற்ருனும் இழித்துக் கூறுதலினுலும், இவரது மதம் வைதிகமதமேயாம். வேதவழித்தாய மதம் வைதிக மதமாம். "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், நின்றது மன்னவன் கோல்" என்னுங் குறளாலும் பிறவாற்ருலும் இவர் வேதத்தைப் பிரமாணமாகக்கொண்ட வாதியென்பது செவ்வனே விளக்கமாம். இவர் உலகிற்குக்காரணம் ஆதிபகவன் என்று கூறியிருத்தலால், சாங்கிய ராதியோருமாகார் சாங்கிய ராதியோர் கடவுளை யொப்பாது வேதத்தினைப் பிரமாணமெனக் கொண்டமையின், அவர்கள் வைதிக நாஸ்திகராவர். உலகிற்குக் காரணம் கடவுளென்பதை யொப்பாத பௌத்தரும் சமணரும் "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" என்று உலகிற்குக் காரணம் கடவுளென்று கூறிய நாயனுரைத் தத்தம் மதத்தினரென்று கூறுவதும், மறுபிறப்பையும் புலாலுண்ணாமையையு மொப்பாத கிறிஸ்தவர் மறுபிறப்பையும் புலாலுண்ணாமையையுமொப்பிய நாயனுரைத் தமது மதத்தினரென் றுரைப்பதும் வியப்பேயாம்.

நாயனுரை வைதிகமதத்தினரென்று கூறுவதற்குத் திருக்குறளில் தக்கவேதுக்கள் வெளிப்படையா யிருத்தல்போல, சைவரென்ருவது வைணவரென்ருவது அத்வைதியென்ருவது குறிப்பிட்டுரைப்பதற்குத் தக்கவேதுக்கள் வெளிப்படையாயின்மையின், இவரை அவருள் ஒருவரெனக் குறிப்பிட்டுரைத்தலியலாது.

ஔவையார்

மேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியும் - கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

என்று கூறியிருத்தலினாலும் திருக்குறள் வேதவழித்தாயநூல் என்பது செவ்வனே விளங்கும்.

இந்நூலாசிரியர் திருநாமங்கள் 10.

(1) திருவள்ளுவர்
(2) நாயனார்
(3) தேவர்
(4) முதற்பாவலர்
(5) தெய்வப்புலவர்
(6) நான்முகனார்
(7) மாதாநுபங்கி
(8) செந்நாப் போதார்
(9) பெருநாவலர்
(10) பொய்யில் புலவர்

இவற்றின் பொருள் வருமாறு —

(1) திருவள்ளுவர்.

திரு - அறிவுடையவரால் விரும்பப்படுந்தன்மை; வள்ளுவர் - ஈகையுடையார். வள்ளுவரென்பது வண்மையென்னும் பண்படியாகப் பிறந்த பெயர் வண்மை - ஈகை. எனவே, வள்ளுவரென்பது சுருதி ஸமிருதி புராணேதிகாசங்களில் இலைமறைகாய்போலிருந்த முக்கிய விஷயங்களை யெல்லாந் தமிழ்மக்க ளெளிதி லறிந்துய்யுமாறு தொகுத்தருள் செய்தவ ரென்னுங் குறியீடு பெற்றதாயிற்று. குறியீடு - காரணம்பற்றி வரும் பெயர் இங்ஙனமன்றி, முரசறைபுந் தொழிலுடைய வள்ளுவரிடத்து வளர்ந்தமைபற்றி இவ்வாசிரியர்க்கு வள்ளுவரென்னும் பெயருண்டாயிற் றெனக் கூறினும் பொருந்தும் இதுபற்றித்தான் மாமூலனார் " மறந்தேயும், வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற், கொள்ளா ரறிவுடை யார்" என்று கூறினார்போலும்!

(2) நாயனார்.

நாயன்—நடத்துவோன். நாயன் என்பது இறையனார் — நக்கனார் என்பவற்றைப்போல உயர்வுப்பொருளுணர்த்தும் ஆர் விகுதி புணர்ந்து நாயனார் என்றாயிற்று. நாயன் என்பதன் பொருள் நடத்துவோனென்பது " கோநாய " " அசுவநாய " என்றற் றொடக்கத்துப் பிரயோகங்களால் நன்கு விளங்கும். எனவே, நாயனார் என்பது திருக்குறள் வாயிலாக மக்களை நன்னெறியிற் செல்லுமாறு நடத்தும் முதன்மை பெற்றவரென்னுங் குறியீடு பெற்றதாயிற்று. மதுரைப் பெருமருதனார் " வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார், கோதறவுழுக் கற்ற துலகு " என்று கூறியதிங் குணர்தற் பாலதாம்.

## (3) தேவர்.

தேவர்—தெய்வத்தன்மையுடையவர். ஈண்டுத் தெய்வத்தன்மையாவது பிறபுலவர் எடுத்துச் சொல்லுதற்கரிய முக்கிய விஷயங்களை யெல்லாம் மக்களெளிதி லறியுமாறு தொகுத்துச் சொல்லுதலாம். உறையூர் முதுகூற்றனார் " தேவிற்சிறந்த திருவள்ளுவர் " என்று கூறியதிங் குணர்தற்பாலதாம். இங்ஙனமன்றி, தேவர் என்பதற்கு மற்றப் புலவரினும் மிகுதியான பிரகாசத்தினை (மிகுபுகழை) யுடையவரென்று பொருள் கூறுதலும்பொருந்தும். தேவர் என்பதன் பகுதியதான திவ் என்பதற்குப் பிரகாசம் என்பது பொருளாம்.

## (4) முதற்பாவலர்.

முதற்பாவலர்—முதன்மையாகிய பாவலர். முதன்மை—எப்பாவலரினுஞ் சிறந்து நிற்றல்; பாவலர்—பாவியற்றுவதில் வன்மையுடையார். பா—பாட்டு. இங்ஙனமன்றி, பாக்களில் முதன்மையுடைய வெண்பாக்களில் முதன்மையாயுள்ள குறள்வெண்பாவினால் சொற்சுருங்கிப் பொருள் விரிந்துநிற்க நூலியற்றினமைபற்றி இவ்வாசிரியர்க்கு முதற்பாவலர் என்று பெயருண்டாயிற்றென்று கூறினுமொக்கும். ஆசிரியர் நல்லந்துவனார் ' முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா, ரெப்பா வலரினு மில் " என்றும், கீரந்தையார் " தப்பா முதற்பாவாற் றமாண்ட பாட்லினாற், முப்பாலி னாற்பான் மொழிந்தவர், ✕ ✕ தெய்வத் திருவள் ளுவர் " என்றும் கூறி னமையிங்குக் கவனித்தற் பாலதாம்.

பாக்கள் நான்கு. அவை:—வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன.

வெண்பா எழுவகையாம். அவை:—குறள்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா, நேரிசைச் சிந்தியல்வெண்பா, இன்னிசைச் சிந்தியல்வெண்பா, சவலைவெண்பா என்பன.

## (5) தெய்வப்புலவர்.

தெய்வப்புலவர் - தெய்வத்தன்மை பொருந்திய அறிவுடையவர். புலமை-கல்வியறிவு தெய்வப்புலமை-பிறர்மாட் டோதுதற் காரணமாகப் புலமை பெறாது இயல்பாகவே புலமை நிரம்பப் பெறுதல். இங்ஙனமன்றி, அசரீரி (கடவுள்)—நாமகள் என்னுந் தெய்வங்களால் சிறப்பித்துச் சொல்லப்பட்ட புலமையுடையவரானதினாலே இவ்வாசிரியர் தெய்வப்புலவரென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டாரெனினு மொக்கும். " சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கு " என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையில் சேனாவரையர் " சிறப்பாவது மன்னர் முதலாயினார் பெறுஞ் வரிசை " என்று கூறி, உதாரணங்களுள் " தெய்வப்புலவன் றிருவள்ளுவன் " என்றும் கூறியிருத்தலால், திருவள்ளுவர்க்குத் தெய்வப்புலவர் என்னும்பெயர் சிறப்புப்பெயரா மென்பதாயிற்றென்க. இவர் தெய்வப்புலவ ரானமை பற்றி

யன்றோ அசரீரி "திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ, டொருத்தகு நற் பலகை யொக்க - விருக்க, உருத்திர சன்மர்" என்று கூறிற்று

## (6) நான்முகனார்.

நான்முகனார்-நான்முகனது அம்சமாகப் பிறந்தவர். நான்முகன் - பிரமன்; அம்சம்—கூறு ஆரியபாஷை வாயிலாக வேதத்தை வெளியிட்டருளிய நான்முகனாரே திருவள்ளுவராகப் பிறந்து தமிழ்ப்பாஷை வாயிலாக வேதத்தி னருங்கருத்துக்களை வெளியிட்டருளினமைபற்றி, இவ்வாசிரியர் நான்முகனாரென்றுசொல்லப்பட்டார். உக்கிரப்பெருவழுதியார் "நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன், றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த-நூன்முறையை" என்றும், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் "மெய்யாய வேதப் பொருள்விளங்கப்-பொய்யாது, தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி, யந்தா மரைமே லயன்" என்றும் கூறியுள்ளவை யிங்குக் கவனித்தற்பாலனவாம்

## (7) மாதாநுபங்கி.

மாதாநுபங்கி - தருக்கொழிதலுடையான் தருக்கு - அகங்கரித்தெழுகுதல். மாதாநுபங்கி என்பது மாதம், அநுபங்கியென்னும் இருமொழியாலாயதொடர்மொழி. மாதம் - தருக்கு; அநு - உபசர்க்கம்; பங்கி — பங்கஞ்செய்தவன். இங்ஙனமன்றி, மாதாநுபங்கி யென்பதற்கு மாதாவைப் போலும் ஒழுக்கினன் என்று பொருள் கூறுதலுமுண்டு. தாய் தனது பிள்ளையினிடதது அன்புசெலுத்துதல் போன்று இவர் உலகத்தாரிடத்து அருள் செலுத்துபவர் என்பது இதன் திரண்டபொருளாம். நல்கூர் வேள்வியார் "இப்பக்கம், மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப், போதார் புனற்கூடற் கச்சு" என்று கூறியதிங் குணர்தற்பாலதாம்.

## (8) செந்நாப்போதார்.

செந்நாப்போதார் - செம்மைவாய்ந்த நாவாகிய மலரையுடையார். செம்மை - சொல்லின்கண் கோணுதலின்மை; அஃதாவது மனத்தின்கண் கோணுதலின்றி அறங்கிடந்தவாறு சொல்லுதல். நாயனார் தாங்கூறுவதை "நன்றெனஎப்பாவலரும்" இயையுமாறுதேன்போலினிக்கக்கூறுதல்பற்றி அவரது நாவானது தேனிருத்தற்கிடனான பூவாகவுருவகிக்கப்பட்டது. நாமகள் "பின், வள்ளுவன் வாயதென் வாககு" என்று கூறியவுரிமைபற்றித் திருவள்ளுவரது நாவை (வெண்டாமரைப்)பூவாககிச் செந்நாப்போதார் என்று அவர் கூறப்பட்டாரெனினுமமையும். நல்கூர்வேள்வியார் "செந்நாப், போதார் புனற்கூடற் கச்சு" என்று கூறியது மறிக.

## (9) பெருநாவலர்.

பெருநாவலர் - பெருமை பொருந்திய நாவலர் பெருமை - பிறர்க்கில்லாத சிறப்பு; நாவலர் - நாவன்மையுடையவர். நாவன்மை - நட்பினரேயன்றிப் பகைவரும் விரும்பி யேற்றுக்கொள்ளுமாறு சொல்லுஞ் சொல்,

வன்மை. இது "கேட்டார் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாஞ் சொல்" என்னும் குறளாலும், "இதனுற் சொல்வினதிலக்கணங் கூறப்பட்டது" என்னுமதனுரையாலும் நன்குவிளங்கும். அரிசிற்கிழார் "பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு, தெரிந்து திறந்தொறுஞ் சேரச் - சுருங்கிய, சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல், வல்லாரார் வள்ளுவரல் லால்' என்றும், கௌணியனார் "நாப்புலமை வள்ளுவனார்' என்றும் கூறியன விங்குக்கவனித்தற்பாலனவாம்

## (10) பொய்யில்புலவர்.

பொய்யில் புலவர் - பொய்ம்மையின்றிய புலமையுடையார். எனவே, திருவள்ளுவர் ஐயந்திரிபின்றி யுள்ளதையுள்ளபடி யுலகத்தார்க்குணர்த்தினவரென்பதாயிற்று. ஈண்டுப்பொய்ம்மை - ஐயந்திரிபு. பாணர் "வாலறிவின் வள்ளுவரும்" என்றும், காரிக்கண்ணனார் "மெய்யாய வேதப் பொருள்விளங்கப் - பொய்யாது, தந்தா னுலகிற்கு" என்றும், தேனீக்குடிக்கீரனார் "பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத, மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே - முப்பாலிற், றெய்வத் திருவள் ளுவர்செப்பியகுறளால், வையத்து வாழ்வார் மனத்து" என்றும் கூறியன விங்குணர்தற்பாலனவாம்

## இந்நூலின் திருநாமங்கள் 10.

| | |
|---|---|
| (1) திருக்குறள் | (6) பொய்யாமொழி |
| (2) முப்பால் | (7) வாயுறைவாழ்த்து |
| (3) உத்தரவேதம் | (8) தமிழ்மறை |
| (4) தெய்வநூல் | (9) பொதுமறை |
| (5) திருவள்ளுவர் | (10) திருவள்ளுவப்பயன் |

இவற்றின் பொருள் வருமாறு:—

## (1) திருக்குறள்.

திருக்குறள் - சிறந்த குறள்வெண்பாவினாலாகியநூல். திருவென்னும் அடையடுத்த (குறுமைப்பண்பின் விகாரமாகிய) குறள் என்னும் பண்புப் பெயர் அதனையுடைய வெண்பாவிற்காதலால், அடையடுத்த பண்பாகுபெயராம்; அது தன்னாற்சமைந்த நூலுக்காதலால், கருவியாகுபெயராம். ஆகவே, இஃது இருமடியாகு பெயராமென்க.

## (2) முப்பால்.

முப்பால் - அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என்னும் மூன்று பால்களையுடையநூல். பால் - பகுப்பு. முப்பாலென்பது மூன்றாகிய பகுப்புடைய தெனப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்க் காரணக்குறி பெற்றுநின்றது.

## (3) உத்தரவேதம்.

*உத்தரவேதம் - பின்தோன்றியவேதம். உத்தரம் - பின் ; வேதம் - (உண்மைப்பொருளை) அறிவிப்பது. திருக்குறள் வேதப்பொருளைத் தன்னகத்தடக்கிப் பின்னெழுந்தமைபற்றி உத்தரவேதம் என்று கூறப்பட்டது. உத்தரம் என்னுமடையடுத்த வேதமென்னும் காரியப்பெயர் அதனை யுணர்த்துதற்குக் கருவியாகிய நூலிற்காதலால், அடையடுத்த காரியவாகுபெயராம். இது தானியாகுபெயரென்று கூறற்குமியையும்*

## (4) தெய்வநூல்.

*தெய்வநூல்-தெய்வத்தன்மையமைந்த சாஸ்திரம். தெய்வத்தன்மை — எந்நூலகத்துமில்லாத மாட்சிமையை யுடையதாயிருத்தல். இது தெய்வத்தினருளால் தோன்றிய நூலெனினும் ஒக்கும். நூல்-உவமையாகுபெயர். இதன் றன்மையைப் " பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா-வெஞ்சாத,கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா நூன்முடியு மாறு" என்னும் வெண்பாவினாலறிக.*

## (5) திருவள்ளுவர்.

*திருவள்ளுவர்-திருவள்ளுவராலருளிச் செய்யப்பட்டநூல். திருவள்ளுவர் என்னுங் கருத்தாவின் பெயர் அவராலருளிச் செய்யப்பட்ட நூலுக்காதலால், கருத்தாவாகுபெயராம்.*

## (6) பொய்யாமொழி.

*பொய்யாமொழி—பொய்ம்மைகலவாத மொழியினாலாகிய நூல் ; உள்ளதையுள்ளவாறுணர்த்தும்நூலென்றவாறும்.பொய்யா என்னுமடையடுத்த மொழியென்னும் கருவியின்பெயர் அதன் காரியமாகிய நூலுக்காதலால், அடை யடுத்த கருவியாகுபெயராம்.சினைச்சிறப்புப்பெயரே சினையாகுபெயராய் வருமென்னும் நியதியறியாதார் இதனை அடையடுத்த சினையாகு பெயரென்று கூறுவர். பொய்யாமொழி யென்பதனை அன்மொழித்தொகையென்று கூறுதலுமுண்டு; பொய்யாமொழி யென்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத் தொடராகலின், அது பொருந்தாதென்க.*

## (7) வாயுறைவாழ்த்து.

*வாயுறைவாழ்த்து-உடற்குறுதியாயவற்றைச்செய்யும்மருந்துபோன்று உயிர்க்குறுதியாய வற்றைக் கூறும் நூல். வாயுறை-சொன்மருந்து; வாழ்த்து-வாழச்செய்தல். எனவே, இது மக்களுக்கு நீதிகளை வற்புறுத்திக் கூறுவதென்றாயிற்று; ஆகவே, மக்களுக்கு மருந்து போல்வதென்றாயிற்று. கௌணியனார் 'சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய, வந்த விருவினைக்கு மாமருந்து " என்றனர். " வாயுறை வாழ்த்தே வயங்க காடின்,*

வேம்புங் கடுவும் போல வெஞ்சொற், றாங்குத லின்றி வழிநனி பயக்குமெ ன், றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரமும், "முற்பருவத்துக் கைத்தும் பிற்பருவத்து உறுதிபயக்கும் வேம் புங்கடுவும்போல வெய்யவாய் இன்சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்கு மெனக்கருதிப் பாதுகாத்துக் கிளக்குங் கிளப்பினுண்மெய்யாக அறிவுறுத்து வது வாயுறைவாழ்த்தெனப்படும்" என்று நச்சினார்க்கினியர் கூறிய அத னுரையு மிங்குக் கவனித்தற்பாலனவாம்

## (8) தமிழ்மறை.

தமிழ்மறை-தமிழ்வேதம். மறை - இரகசியப்பொருளைக் கூறுவது. பிரத்தியட்சத்தாலும் அநுமானத்தாலும் எவரும் எளிதிலறிய முடியாத பொருளைத் தெளிவாய்க் காட்டுஞ் சொன்மயக் கருவியாயுள்ளது வேதமாக லின், அது தமிழில் மறையென்று கூறப்பட்டது. தமிழ்மறை - தமிழிற் கூறிய வேதம் என்று விரியும். செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார் "வே தப் பொருளை விரகால் விரித்துலகோ, ரோதத் தமிழா லுரைசெய்தார்" என்றும், வண்ணக்கஞ்சாத்தனார் " ஆரியம், வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனா, ரோது குறட்பா வுடைத்து"என்றும் கூறியவை யிங்குணர்தற் பாலனவாம்.

## (9) பொதுமறை.

பொதுமறை-பொதுவாகிய வேதம். பொதுமை-நான்கு வருணத் தார்க்கு முரிமையுடையதாதல். அந்தணர் அரசர் வைசியரென்னுந் துவி சர் மூவரும் ஓதுதற்குரிய சிறப்பியலுடைய வேதம்போலாகாது, நான்கு வருணத்தாரும் ஓதுதற்குரிய பொதுவியலுடைமை பற்றித் திருக்குறள் பொதுமறை என்று கூறப்பட்டது வெள்ளிவீதியார் " செய்யா மொழிக் குந் திருவள் ளுவர்மொழிந்த, பொய்யா மொழிக்கும் பொருளொன்றே— செய்யா, வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை,யிதற்குரிய ரல்லாதா ரில்" என்று கூறியதிங்குணர்தற்பாலதாம்

## (10) திருவள்ளுவப்பயன்.

திருவள்ளுவப்பயன்-திருவள்ளுவரா லருளிச்செய்யப்பட்ட பயனிறைந்த நூல். இங்குப்பயன்-அறம், பொருள், இன்பம், வீடென்பனவற்றை யுடை யச்செய்தல். " அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே" என்பது சூத்திரம். திருவள்ளுவப்பயனென்பது மூன்றும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த வன்மொழித்தொகைக் காரணக்குறிப்பெயராம். கொடி ஞாழன் மாணிபூதனார் " அறனறிந்தேமான்ற பொருளறிந்தே மின்பின், றிறனறிந்தேம் வீடு தெளிந்தே-மறனெறிந்த, வாளார் நெடுமாற வள்ளு வனார் தம்வாயாற், கேளா தனவெல்லாங் கேட்டு " என்று கூறினமை காண்க. இப்பெயர்களேயன்றி, இதற்குப் "பொருளுரை" "முதுமொழி" "பான் முறை" என்னும் பெயர்களுமுண்டு.

கடவுள் துணை.

# திருவள்ளுவர்

# திருக்குறள்.

## மூலமும் உரையும்.

---

### உரைப்பாயிரம்.

பரி.— † இந்திரன் முதலிய இறையவர் ‡ பதங்களும் அந்தமி லின்பத் தழிவில் வீடும் § நெறி யறிந்து செய்துதற் குரிய ¶ மாந்தர்க் குறுதியென உயர்ந்தோரா †† னெடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை ‡‡ அறம்

---

† இந்திரன் முதலிய இறையவர்:—இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானனென்னு மெண்மர்.

‡ பதங்கள்—அமராவதி, தேஜோவதி, சம்யமினி, கிருஷ்ணாங்கனை, சிரத்தாவதி, கந்தவதி, அளகாபுரி, யசோவதி என்னு மெட்டுமாம்.

§ நெறியறிந்து—இதுவே கொள்ளத்தக்க சன்மார்க்கமென்று நல்லாசிரியர் வாயிலாக வுணர்ந்து.

¶ மாந்தரெனப் பொதுப்படக்கூறினமையின், ஆண், பெண் என்னு மிருபாலாரும் முத்தியடைதற் குரியராவரெனபதும், தேவர் முதலியோர் அதற்குரிய ரல்லரென்பதும் பெறப்படுமாறறிக.

†† 'எடுக்கப்பட்ட' என்றமையின், அறமுதலியவை தொன்றுதொட்டு நிகழ்ந்து வருவன வென்பது பெறப்படும்.

‡‡ அறமுதலியவற்றை வடநூலார் முறையே தருமார்த்தகாமமோக்ஷ மென்பர்; புருஷார்த்த மெனப்படும் இந்நான்கனுள், அறம் பொருளின்பங்களைத் திரிவர்க்கமெனவும மோக்ஷத்தை அபவர்க்கமெனவுங் கூறுவர்.

இவற்றுள், முன்னைய மூன்றும் கௌணமும், பின்னையதொன்று முக்கியமுமாம். புருஷார்த்தம் - புருஷனால் விரும்பப்படுவது. அபவர்க்கம் திரிவர்க்கத்தினின்றும் நீங்கல்.

i. அறம்-தர்மம். அஃதாவது மநுமுதலிய நூல்கள் விதித்தவற்றைச் செய்து, விலக்கியவற்றைச் செய்யா தொழிதலாம்.

ii. பொருள் - அர்த்தம். அஃதாவது மனைவி, மக்கள், பூமி, பசு, தாசி, தாசன், திரவியம், மனை, தானிய மெனட்டனவாம்.

பொருளின்பம் வீடென்பன. அவற்றுள், வீடென்பது † சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத் தாகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது ‡ இலக்கண வகையாற் கூறப்படாமையி னூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்.

அவற்றுள், அறமாவது மநுமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன வொழிதலுமாம். அஃது ¶ ஒழுக்கம், வழக்கு, தண்டமென மூவகைப்படும்.

அவற்றுள்,ஒழுக்கமாவது அந்தணர் முதலிய * வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய 0 நிலைகளினின் றவ்வவற்றிற் கோதிய அறங்களில் வழுவா தொழுகுதல்.

வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே யெனதெனதென் றிருப்பார் அது காரணமாகத் தம்முண் மாறுபட்டப் பொருண்மேற் ¶¶ செல்வது. அது $ கடன் கோடன் முதலிய பதினெட்டுப் பதத்ததாம்

---

iii. இன்பம்-காமம். அஃதாவது பொருள் துணைக்காரணமாக ஒரு காலத்து ஒருபொருளால் ஐம்புலன்களும் நுகர்தற் சிறப்புடையதாம். ஒருபொருளென்றது கற்புடைய மனைவியை.

iv. வீடு - மோட்சம். அஃதாவது உயிர் அவிச்சை முதலிய பஞ்சக் கிலேசத்தினின்றும் நீங்குதல். இவற்றுள், அறம் இம்மைப்பயன், மறுமைப்பயன், வீடென்னு மூன்றையும், பொருள் இம்மைப்பயன் மறுமைப் பயனென்னு மிரண்டையும், இன்பம் இம்மைப்பய னொன்றையும் தருவதாம். அற முதலியவற்றைப் பொருளென்றது வைசேடிகமதம் பற்றியாம்.

"ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினை ந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு." என்று ஔவைப் பிராட்டியார் அறமுதலிய வற்றிற் கிலக்கணங் கூறுமாறு முணர்க.

† இதனை "வாக்குமன முங்கண்ணு மற்றுளவிந் தியங்களுமே, நோக்கரிய பரஞ்சுடர்" என்று புராணங் கூறுமாற்றானு முணர்க.

‡ இலக்கண வகையாற் கூறல்:—பிருதிவிக் கிலக்கணம் கந்தமுடைமை, அப்புவிற் கிலக்கணம் குளிர்ந்தபரிச முடைமை என்றற் றொடக்கத்தனவாகக் கூறுதல் போல்வதாம். அசாதாரண தர்மம் (சிறந்தகுறி) இலக்கண மெனப்படும்.

¶ ஒழுக்கம், வழக்கு, தண்டமென்பன முறையே ஆசாரம், வியவகாரம், பிராயசித்தம் (கழுவாய்) என்று கூறப்படும்.

* வருணம் - சாதி. 0 நிலை-ஆச்சிரமம்.

¶¶ சொல்வது என்றும் பாடமுண்டு.

$ கடன்கோடல் முதலியவாவன:—கடன்கோடல், ஒருவனிடத்துக் காக்கும்படி வைத்தபொருள், உடையவனல்லான் விற்றல், கூடியிலாபஞ்

தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயி னாரை அந்நெறி நிறுத்துதற்பொருட் § டொப்பநாடி யதற்குத்தக வொறுத்தல்.

இவற்றுள், வழக்குந் தண்டமு மூலக்நெறி நிறுத்துதற் பயத்தலானு நல்லொழுக்கம்போல மக்களுயிர்க் குறுதி பயத்தற் சிறப்பில வாதலானும், அவைதாம் நூலானேயன்றி யுணர்வு மிகுதியானுந் தேயவியற்கை யானு மறியப்படுதலானும், அவற்றையொழித் தீண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய வொழுக்கமே அறமென வெடுத்துக்கொள் ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடை மையின், சிறுபான்மையாகிய அசிறப்பியல்புகளொழித் தெல்லார்க்கு மொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்பு பற்றி இல்லறந் துற வறமென இருவகை நிலையாற் கூறப்பட்டது.

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடுஞ் செய் யப்படுவ தாகலின், அதனை முதற்கட் கூறுவான் தொடங்கி ¶ எடுத்துக் கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

சம்பாதித்தல், தானஞ்செய்த பொருளைக் கொடாமை, சம்பளங்கொடா மை, கட்டுப்பாட்டை மீறி நடத்தல், ஒருபொருளை விற்றுவது வாங்கியா வது பின்பு சந்தேகித்தல், மாட்டை உடையவனுக்கும் மேய்ப்பவனுக்கும் வரும் வழக்கு, எல்லை வழக்கு, அடித்தல், திட்டல், திருட்டு, வன்செய்கை, அயலான மனைவியை யபகரித்தல், மாதராடவர் தருமம், தாயபாகம், சூதாடல் என்பனவாம். இவ்வாறு மநுதர்மசாஸ்திரம எட்டா மத்தியாயத் திற் கூறப்பட்டிருக்கின்றது.

§ ஒப்ப நாடி யத்தக வொறுத்தி என்பது புறநானூறு 10 - வது செய்யுளிலுள்ளது. இதன் பொருள் - நீதிநூற்குத்தக வாராய்ந்து அத் தீமைக்குத் தகத் தண்டஞ்செய்வை என்பது.

¶ எடுத்துக்கொண்டநூ லிடையூறின்றி யினிது முடிதற்பொருட்டு நூன்முகத்துச செய்யப்படும் வாழ்த்து மங்கலமெனப்படும். அது வஸ்து நிர்த்தேசம் (பொருளியல் புரைத்தல்), நமஸ்காரம் (வணக்கு), ஆசீர்வாதம் (வாழ்த்து) என மூவகைத்தாம்.

(i.) நமஸ்கார முதலியனவின்றிக் கேவலம் கடவுளின் சங்கீர்த்தனம் (ஸ்துதி) வஸ்துநிர்த்தேசவடிவ மங்கலமாம். (ii.) நமஸ்காரத்திற்குத்தகுதி யான கடவுள் குரு முதலியோரிடத்து நமஸ்காரஞ் செய்பவன் தனதிழி தகைமையை யுணர்த்துதற்பொருட்டு மனோவாக்குக் காயமென்னும் இவி

தெனி:—இந்திரன் முதலிய தலைவர்களுடைய பதங்களையும், முடிவில்லாத இன்பத்தையுடைய அழிவில்லாத வீட்டையும், வழியறிந்து அடைதற்கு உரிய மனிதர்க்கு உறுதியைத் தருவதென உயர்ந்தோரால் எடுக்கப்பட்ட பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாம். அவற்றுள், வீடென்பது இப்படிப் பட்டதென்று குறிப்பிட்டு நினைக்கவும் குறிப்பிட்டுச் சொல்லவும்கூடாத நிலைமையை யுடையதாதலால், அது துறவறமாகிய காரணவகையால் சொல்லப்படுவதல்லாமல் இலக்கண வகையினால் சொல்லப்படாமையால், நூல்களாற் சொல்லப்படுவன மற்றைய மூன்றுமேயாம்.

அவற்றுள், அறமாவது மநுமுதலிய நூல்களில் விதித்தனவற்றைச் செய்தலும் விலக்கியனவற்றை ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூன்றுவகைப்படும்.

அவற்றுள், ஒழுக்கமாவது பிராமணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளில் நின்று அந்தந்த நிலைகளுக்குச் சொல்லிய அறங்களில் வழுவாமல் நடத்தலாம்.

வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்று இருப்பவர் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருளின்மேற் செல்வது. அது கடன்கோடல் முதலிய பதினெட்டு வகையினதாம்.

தண்டமாவது அவ்வொழுக்க வழியிலும் வழக்கு வழியிலும் தவறினவரை அவ்வழியில் நிறுத்துதற் பொருட்டு நீதிநூற்குத்தகுதியாக வாராய்ந்து அக்குற்றத்திற்குத் தகுதியாகத் தண்டித்தலாம்.

---

கரணங்களாலுஞ் செய்யப்படும் வியாபார விசேடம் நமஸ்காரவடிவமங்கலமாம். (iii.) நூலாசிரியர் தாம் விரும்பியபொருளையும் தமதுமாணாக்கர் விரும்பிய பொருளையு மடைதற்பொருட்டுக் கடவுளைப் பிரார்த்தித்தல் ஆசீர்வாதவடிவ மங்கலமாம். 'அகரமுதல' என்னுங் குறள் வஸ்துநிர்த்தேசவடிவ மங்கலமாம். ஏனையகுறள்களில் ஏனைய மங்கலங்கள் வருமாற்றினை யுய்த்துணர்க.

"அகர முதல வெழுத்தெல்லாம்" என்புழி அகரம் கடவுள் வாசகமாயிருத்தலின், அதுவே யீண்டு மங்கலமொழியாம். அகரம் கடவுள் வாசகமாமென்பது "ஆரு மறியா ரகார மவனென்று" என்று திருமூலரும் "அக்கரங்களி லகாரனான" என்று கண்ணபிரானும் கூறுவதால் இனிது விளங்கும்.

'அகர முதல வெழுத்தெல்லாம்' என்பதில் பிரணவாட்சரத்தின் வடிவமாய அகர, உகர, மகரமெய் அமைந்திருத்தலின் அகர, உகர, மகரமெய் வடிவப் பிரணவாட்சரம் மங்கலமொழியாக வைக்கப்பட்டதெனினும் பொருந்தும்.

இவற்றுள், வழக்கும் தண்டமும் உலகவழியில் நிறுத்துதலாகிய பயனைத் தருவனவாவதல்லாமல் ஒழுக்கம்போல மக்களுயிர்க்கு உறுதியை(நன்மையை)த் தருவதாகிய சிறப்புடையனவல்ல வாதலாலும், அவைதாம் நூலாலே யல்லாமல் அறிவு மிகுதியாலும் தேசவியற்கையாலும் அறியப் படுதலாலும், அவ்விரண்டையும் ஒழித்து இங்குத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாராற் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது.

அவ்வறந்தான் நால்வகை நிலைகளை உடையதாய் வருணந்தோறும் வேறுபாடு உடைமையால் சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளை யொழித்து, எல்லார்க்கும் ஒத்திருத்தலால் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி இல்லறம் துறவறம் என இருவகை நிலைகளாற் சொல்லப் பட்டது.

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற வழியில் நின்று அதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடும் செய்யப்படுவதாதலின், அதனை முதலிற்கூறத் தொடங்கி எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

---

வீடொன்று பாயிர நான்கு விளங்கற, நாடிய முப்பத்து மூன்றொன் றூழ்—கூடுபொரு, ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம், வள்ளுவர் சொன்ன வகை.

அறநான் கறிபொரு ளேழொன்று காமத், திறமூன் றெனப்பகுதி செய்து - பெறலரிய, நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார், போலு மொழிந்த பொருள்.

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே, தூய துறவறமொன் றூழாக - வாய, வறத்துப்பா னால்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்,றிறத் துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

அரசிய லையைந் தமைச்சிய லீரைந், துருவல் லரணிரண்டொன் றொண்கூ-ழிருவிய, றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன், றெண் பொரு ளேழா மிவை.

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு, பூண்பா லிருபாலோ ராறாக-மாண்பாய, காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்,நாமத் தின் வள்ளுவனார் நன்கு.

இத்திருவள்ளுவ மாலைச் செய்யுட்களால் திருக்குறளினது பால் முதலியவற்றி னடைவு நன்கு விளங்கும்.

கடவுள் துணை.

# திருவள்ளுவர் திருக்குறள்.

## 1. அறத்துப்பால்—ON VIRTUE.

### 1. பாயிரம்—Preface.

### முதல் அதிகாரம்—கடவுள் வாழ்த்து—*praise of God.*

பரிமேலழகர்:—அஃதாவது கவி தான் § வழிபடு கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட் கேற்புடைக் கடவுளை யாதல் வாழ்த்துதல். அவற்றுள், இவ்வாழ்த் தேற்புடைக் கடவுளை யெனவறிக; என்னை? † சத்துவமுதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட் ‡ கவற்

---

§ (i) *நூலாசிரியர் தாமெடுத்துக் கொண்ட நூலிற் கூறும் விஷயத்திற்கேற்ப நூன்முகத்திற் கடவுள்வாழ்த்துக் கூருது தாம் வழிபட்டுவரும் கடவுளை வாழ்த்துதல் வழிபடுகடவுள் வாழ்த்தாம். அஃது ஆத்திசூடியில் "ஆத்தி சூடி யமர்ந்த தேவனை, யேத்தி யேத்தித் தொழுவோ மியாமே" என்பது போல்வதாம்*

(ii) *நூலாசிரியர் நூன்முகத்தில் நூலிற்கூறும் விஷயத்திற் கேற்பக் கடவுளைவாழ்த்துதல் ஏற்புடைக்கடவுள் வாழ்த்தாம். அது ஞான வாசிட்டத்தில் "பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத், தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது, மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்த், துன்னுவ தப்பொரு டொழுதி றைஞ்சுவாம்" என்பது போல்வதாம். 'அகரமுதல' என்றற் றொடக்கத்துக் குறள் ஏற்புடைக்கடவுள் வாழ்த்தெ ன்பது வெளிப்படையாம்.*

† *'சத்துவ முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு' என்பதற்கு—சத்துவகுணத்தால் அறமும், இராசதகுணத்தால் பொருளும், தாமதகுணத்தால் இன்பமும் ஆகிய உறுதிப்பொருட்கு எனக்கொள்க.*

‡ *'அவற்றான் மூவராகியமுதற்கடவுள்' என்பதற்கு—சத்துவம் ரஜசு தமசு என்னும் முக்குணங்களால் காத்தல், படைத்தல், அழித்தல் செய் தற்பொருட்டு முறையே அரி, அயன், அரனென்னும் மும்மூர்த்திகளின் வடிவமாகிய பரப்பிரஹ்மம் என்று கொள்க.*

*படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை" என்பது தேவாரம்; "குலவு மூவ ருருவமுங் கொண்டதே" என்பது பாகவதம்.*

றன் மூவராகிய முதற் ¶ கடவுளோ டியைபுண்டாகலான், அம்மூன்று பொருளையுங் கூறலுற்றார்க் † கம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாக லின், இவ்வாழ்த் தம் மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரென வுணர்க.

தெளிபொருள் விளக்கம்:—அஃதாவது கவி தான் வழிபடுங் கடவுளையாவது எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்புடைய கடவுளையாவது வாழ்த்துதலாம். அவற்றுள், இவ்வாழ்த்து ஏற்புடையகடவுளை யென்றறிக; எங்ஙனமெனின், சத்துவமுதலிய முக்குணங்களால் அறம் பொருள் இன்பமென மூன்றாகிய உறுதிப் பொருளுக்கு அம்முக்குணங்களால் அரியயனரனென மூவராகிய முதற்கடவுளோடு சம்பந்தமுண்டா யிருத்தலின், அம்மூன்று பொருள்களையும் சொல்லத்தொடங்கிய நாயனார்க்கு அம்மூவரையும்வாழ்த்துதல் முறைமையாதலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படச் சொல்லினாரென் றறிக.

க. ‡ அகர முதல வெழுத்தெல்லா § மாதி
பகவன் முதற்றே யுலகு.

---

¶ கடவுள் என்பதன்பொருள்—மன மொழி மெய்களுக் கப்பாற்பட்டது என்பது.

† அம் மும்மூர்த்திகளில் எம்மூர்த்தியை வாழ்த்தினும் பயன் வேறுபடுவதின்றென்பது "உணர்ந்துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை, யுணர்ந்துணர்ந் துணரினு மிறைநிலை யுணர்வரி துயிர்காள், ளுணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியய னரனென்னு மிவரை, யுணர்ந் துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட தொன்றே" என்று பெரியாருரைத்தலால் நன்கு விளங்கும்.

இவ்வதிகாரத்தின் 1. 2. 4. 5. 7. 10. வது எண்ணுள்ள குறள் முதற் கடவுளது வாழ்த்தும், 3. வது எண்ணுள்ள குறள் அயனதுவாழ்த்தும், 6. 8. வது எண்ணுள்ள குறள் அரியினது வாழ்த்தும், 9. வது எண்ணுள்ள குறள் அரனது வாழ்த்துமாம். இதனை யூகித்துணர்க.

‡ அந்தணர் வந்தார், வசிட்டரும்வந்தா ரென்புழி, அந்தணருட் டலைமைநோக்கி, அந்தணருள் ஒருவராகிய வசிட்டரைப் பிரித்துக்கூறுவது போன்று 'அகர முதல வெழுத்தெல்லாம்' என்புழி, எழுத்துக்களுட் டலைமைநோக்கி, எழுத்துக்களுள் ஒன்றாகிய அகரம் பிரித்துக் கூறப் பட்ட தென்க. "முனிவர்வந்தார் அகத்தியனும் வந்தான்" என்பது மிதுவேயாம்.

§ "அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" ஆதலின், நாயனார் தமதன்னையாகிய ஆதியையும், பிதாவாகிய பகவனையும் உலகிற்கு முதலாகிய கடவுளாகப் பாவித்து 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என்றனர் என்று கூறுவாருமுளர்.

**பரி.—(இதன்பொருள்) அகரமாகிய முதலையுடையன எழுத்துக்க ளெல்லாம்; அதுபோல, ஆதிபகவனாகிய முதலையுடைத் துலகு.—(என்ற வாறு).**

*இது தலைமைபற்றிவந்த † எடுத்துக்காட்டுவமை. ‡ அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி § நாதமாத்திரையாகிய வியல்பாற் பிறத்தலா னும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கை யுணர்வானன்றி இயற்கை யுணர் வான் முற்று முணர்தலானுங் கொள்க. தமிழெழுத்திற்கேயன்றி வட வெழுத்திற்கு முதலாதலனோக்கி 'எழுத் தெல்லாம்' என்றார். ¶ ஆதி*

---

*† எடுத்துக்காட் டுவமையாவது உவமானத்தையும் உவமேயத்தையும் வெவ்வேறு வாக்கியமாக நிறுத்தி இஃதுவமானம் இஃதுவமேயம் என்பது தோன்ற இடையில் அதுபோல என்னும் உவம உருபு கொடா மற் கூறுவதாம். இதுபற்றி இலக்கணவிளக்கநூலார் அணியியலில் "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு' என்புழி இரண்டு பொருள் வேறுவேறு கூறியதன்றி அகரமுதல எழுத்தெல்லாம் அதுபோ ல என்றானும், ஆதிபகவன் முதற்றே உலகு அதுபோல என்றானும் ஒன்றா கத் துணியுமாற்றான் உவமையும் பொருளும் நீதியின் நிறுவாமையின் அது வேறுபட வந்த உவமத் தோற்றமாய் இதன்பாற்படும்; என்னை? 'வேறு படவந்த உவமத் தோற்றம், கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்'. என்பவாகலின். மறுபொருளுவமை எனினும் எடுத்துக்காட் டுவமை எனினும் ஒக்கும்" என்றனர்.*

*‡ "சிறப்பினு மினத்தினும்" என்னும் நன்னூற் சூத்திர விருத்தி யுரையில், அகரத்தைப்பற்றிக் கூறுமிடத்து "நாதமாத்திரையா யெல்லா வெழுத்திற்குங் காரணமாய் முன்னிற்றலின் அம்முதல்" என்று கூறப் பட்டிருத்த லீண்டறியத்தக்கதாம்.*

*§ நாதம் என்பது வெண்கலமணி யடித்தபின் கலீரென் றுண்டாகும் பொதுச் சத்தம்போன்ற தொடர்ச்சியாகிய சத்தம்; அஃது உயிர் முயற்சியா லெழுகின்ற வுதானவாயுவாற் றோன்றுவது.*

¶ ஒரு பொருளை யுணர்த்துதற் பொருட்டு நடுவே ஆகியவென்னும் பண்புருபு தொக்கு நிற்கப் பொதுப்பெயருஞ் சிறப்புப் பெயரும் தம்முட் புணர்ந்து வருவது இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம். ஆதிபகவ னென்பது ஆதியாகிய பகவனெனவிரியும்; இதில் ஆதியென்பது சிறப்புப் பெயரும் பகவனென்பது பொதுப்பெயருமாம். அது தமிழ்நூன் முடிபா யின் "நம்பிக் கொற்றன்" என்பதுபோன்று வல்லொற்றுமிகும். 'அகர முதல' என்பதும் இருபெய ரொட்டுப் பண்புத் தொகையாம்.

*பகவனென்னுமிருபெயரொட்டுப்பண்புத்தொகை வடநூன்முடிபு. †உல கென்ற நீண் டுயிர்கண்மேனின்றது. ‡ காணப்பட்ட வுலகத்தாற் காணப்

* ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, சம்பத்து, ஞானம், வைராக்கிய மென்னு மறுகுணங்கட்கும் பகமென்னும் பெயருண்மையின், பகவனென் பதன்பொருள் அவ்வாறு குணங்களையு முடையானென்பதாம்.

† உலகென்பது உயிர்ப்பொருள் உயிரில் பொருளென்னு மிரண் டையு முணர்த்துவதாக, அவ்விரண்டற்கும் ஆதிபகவன் முதலெனக் கூறாது உயிர்ப்பொருட்கு மாத்திரம் ஆதிபகவன் முதலெனக் கூறியது யாதுபற்றியெனின், உயிர்ப்பொருள் மெய்யுணர்வால் அவிச்சை முத லிய மாசு நீங்கி முத்திபெறுதற் குரியதாஞ் சிறப்புப்பற்றி, உலகென்ற நீண் டுயிர்கண்மே னின்றது' என்று கூறப்பட்டதே யன்றி, உயிரில் பொருட்கு ஆதிபகவன் முதலன்றென்னுங் கருததால் கூறப்பட்ட தன் றும். உயிர்ப்பொருள் உயிரில்பொருளென்னு மிரண்டிற்கு மிறைவன் முதலாமென்பது "தானே திசையொடு தேவரு மாய்நிற்குந், தானே யுடலு யிர் தத்துவ மாய்நிற்குந், தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந், தானே யுலகிற் றலைவனுமாமே". என்று திருமந்திரங் கூறுவதாலினிது விளங்கும்.

‡ காணப்பட்ட புகையால் காணப்படாத அதன் காரணமாய நெருப் புண்டென்று அனுமானித்தல் போன்று காணப்பட்ட உலகத்தால் காண ப்படாத அதன்காரணமாய கடவுட்கு (உலகம் தனக்கொரு முதலையுடை யது; தோற்றமுடையதாகலின், யாது தோற்றமுடையது அது தனக் கொரு முதலையுடையது கடம்போல என்று) உண்மை கூறவேண்டி, புகையானது தீயை உடைத்தாயிருக்கின்றது என்பதுபோல 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என ஆதிபகவனை உடைமையாகவும் உலகை உடைய தாகவும் வைத்துக் கூறினர் அங்ஙனம் கூறினரேனும் உலகத்தை உடை மையாகவும் ஆதிபகவனை உடையவனாகவும் கொள்ளவேண்டு மென்பது தோன்ற, 'உலகிற்குமுத லாதிபகவனென்பது கருத்தாகக் கொள்க' என்று கூறப்பட்டது. காணப்பட்ட வுலகென்பது உயிர்ப்பொருளுக்காமிடத்து உடம்போடு (கூடி) காணப்படுவரு முயிர்ப்பொருளென்றும், உயிரில் பொருளுக்காமிடத்துப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்னும ஸ்தூல பூதமைந்தனுள் பிருதிவி அப்பு தேயுவடிவ வுயிரில் பொருளென் றுங்கொள்க. " நிலநீர் தீவளி விசும்போ டைந்துங், கலந்த மயக்க முலக மா தலின்" என்பது தொல்காப்பியம். இதுபற்றி ஆசிரியர் நச்சினார்க்கினியார் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் மொழிமரபு 'மெய்யி னியக்க மகரமொடு சிவணும்' என்னும் சூத்திரவுரையில் "இறைவ னியங்கு திணைக்கண்ணு நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் றன்மையாய் நிற் குமா றெல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரம் உயிர்க்கண்ணும் தனி மெய்க்கண்ணும் கலந்தவற்றின் றன்மையாயே நிற்குமென்பது சான்றோ ரக் கெல்லா மொப்ப முடிந்தது. 'அகரமுதல' என்னும் குறளான் அகர மாகிய முதலையுடைய வெழுத்துகக ளெல்லாம் அதுபோல இறைவனாகிய

படாத கடவுட் குண்மை கூறவேண்டுதலின், 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என வுலகின்மேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும், உலகிற்கு முத லாதிபகவ னென்பது கருத்தாகக்கொள்க. ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுள துண்மை கூறப்பட்டது.

தெளி:—(இதனது பதப்பொருள்). எழுத்தெல்லாம் - * எழுத்துக்க ளெல்லாம், அகரமுதல - அகரமாகிய முதலை யுடையன (அதுபோல), உலகு—உலகமானது, ஆதிபகவன் முதற்று—ஆதிபகவனாகிய முதலை யுடையது, (எ-று).

இக்குறள் தலைமைபற்றி வந்த வெடுத்துக்காட் டுவமையணி. அகரத் திற்குத் தலைமை (முதன்மை) † விகாரத்தாலன்றி நாதமாத்திரையாகிய வியல்பாற் பிறத்தலாலும், ஆதிபகவனுக்குத் தலைமை செயற்கை யுணர்வா லன்றி யியற்கை யுணர்வால் முற்று மறிதலாலுங்கொள்க. தமிழெழுத்துக் களுக்கே யல்லாமல் வடவெழுத்துக்களுக்கும் முதலாதலை நோக்கி 'எழுத் தெல்லாம்' என்றார். ஆதிபகவனென்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகை வடநூல் முடிபாதலின் வல்லொற்றுமிகாது இயல்பாயிற்று. உல கென்ற திங்கு உயிர்களின்மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தைக் கொ ண்டு காணப்படாத கடவுளுக்கு இருப்பைச் சொல்லவேண்டுதலின் 'ஆதி பகவன் முதற்றே யுலகு' என்று உலகின்மேல் வைத்துச் சொல்லினார்; அப் படிச் சொல்லினாராயினும், உலகிற்கு முதல் ஆதிபகவனென்பது கருத்தா கக்கொள்க. 'முதற்றே' என்னும் ஏகாரம் தேற்றப்பொருளது. இச்செய்யு ளால் முதற் கடவுளது இருப்புச் சொல்லப்பட்டது.

(கருத்து). உலகம் கடவுளை முதலாகவுடையது என்பது.

1. As the letter A is the intimate cause of all letters, so God is the intimate cause of the world.

௨. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றாள் தொழாஅ ரெனின்.

---

முதலை யுடைத் துலகமென வள்ளுவனார் உவமைகூறிய வாற்றானும், கண் ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யான்' எனக்கூறிய வாற்றானும், பிறநூல்களானும் உணர்க", என்றார்.

* ஈண்டெழுத் தென்றது பரை, பைசந்தி, மத்திமை, வைகரி யென்னு நால்வகை வாக்கினுள், அகத் தெழுவனவாகிய பரைமுதல் மூன் றனையு மொழித்தெழுந்து புறத்திசைப்பதாகிய வைகரி வாக்கினை.

† விகாரத்தாலன்றி என்பதற்கு அண்பல் முதனா விளிம்புறல் முதலிய தொழில்களால் பிறப்பதாகாது என்றும், இயல்பாற்பிறத்த லென்பதற்கு அங்காந்து கூறு முயற்சியாற் பிறத்தலென்றும், செயற்கை யுணர்வென்பத ற்கு நூலாராய்ச்சி முதலியவற்றாலாய வறிவு என்றும், இயற்கையுணர் வெ ன்பதற்கு இயல்பாகவேயுள்ள (ஐயந்திரிபின்றிய)வறிவு என்றும் கொள்க.

பரி.—(இ - ள்). எல்லா நூல்களையுங் கற்றவர்க் கக்கல்வியறிவா லுய பயன் யாது, ‡ மெய்யுணர்வினை யுடையானது நல்ல தாள்களைத் தொழாராயின், (எ-று).

எவனென்னும் வினாப்பெயர் என்னென்றாய் ஈண்டின்மை குறித்து நின்றது. கொல்லென்ப தசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் 'நற்றாள்' என்றார் * ஆகம வறிவிற்குப்பயன் அவன்றாளைத் தொழுது பிறவி யறுத்தலென்பது இதனாற் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). கற்றதனால் - (எல்லா நூல்களையுங் கற்றவர்க்கு அக்)கல்வி யறிவினால், ஆய - உண்டாகிய, பயன் - பிரயோசனம், என் - யாது, வாலறிவன் - மெய்யறிவினை யுடையவனது, நற்றாள்-நல்லவடிகளை, தொழாஅ ரெனின் - வணங்காராயின், (எ - று).

எவனென்னும் வினாப்பெயர் என்னென்று யிங்கு இல்லை யென்னும் பொருளைக்குறித்து நின்றது. கொல்-அசைநிலை. பிறவிப்பிணியையொழித் தற்கு மருந்தாதலின் 'நற்றாள்' என்றார். நூலறிவிற்குப்பயன் அவனடிகளை வணங்கிப் பிறவியை யொழித்த லென்பது இதனாற் சொல்லப்பட்டது.

(க-து). மெய்யறிவுடைய கடவுளடியை வணங்காதவரது கல்வி யறிவு பயனுடையதன்றாம் என்பது.

2. What benefit have those derived from learning, who worship not the good feet of Him who is possessed of pure knowledge.

ரு. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

பரி.—(இ-ள்). மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார் எல்லாவுலகிற்கு மேலாய வீட்டுலகின்கண் அழி வின்றி வாழ்வார், (எ - று).

அன்பானினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடி வோடு விரைந்து சேறலின் 'ஏகினான்' என இறந்த காலத்தாற் கூறினார்; என்னை? †"வாராக் காலத்து நிகழுங் காலத்து, மோராங்கு வரூஉம் வினைச்

‡ மெய்யுணர்வு - ஐயந்திரி பின்றிய ஞானம்

* "ஆகம மென்பன மறுமுத லாகிய, வறனொடு புணர்ந்த திறனறி நூலே" என்பது தண்டியலங்காரம்.

† இது தொல்காப்பியம் சொல்லதிகாரம் வினையியல் நாற்பத்தினான் காஞ் சூத்திரம்.

இதன்பொருள் " எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் ஒருபடியாகவரும் வினைச்சொற் பொருண்மை யிறந்தகாலத்தாற் சொல்லுதல் விரைவுப்பொரு ருளையுடைய." என்பது. [இது சேனாவரையருரை].

சொற் :கிளவி, 'யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்தபொருள வென்மனார் புலவர்". என்ப தோத்தாகலின். இதனைப் * "பூமேனடந் தான்" என்பதோர் பெயர்பற்றிப் பிறிதோர் கடவுட் கேற்றுவாரு முளர். சேர்தல்—இடைவிடாது நினைத்தல்.

தெளி:—(இ-ள்). மலர்மிசை-(அன்பரது மனத் தாமரையாகிய) மலரினிடத்து, ஏகினான்-சென்றவனது, மாணடி-பெருமை பொருந்திய வடிகளை, சேர்ந்தார் - சேர்ந்தவர்,நிலமிசை - (எல்லாவுலகங்களுக்கு மேலாகிய) முத்தியுலகத்தின்கண், நீடுவாழ்வார் - அழிவில்லாது வாழ்வார், (எ - று).

மலரென்பது மலரையொத்தமனத்திற்காதலின் உவமையாகுபெயர். அன்பால் தியானிக்கின்றவரது மனத்தாமரையிடத்து அவர் நினைந்தவடிவோடு விரைந்து செல்லுதலால் ஏகுவானெனை எதிர் காலத்தாற் கூறாது "ஏகினான்" என இறந்தகாலத்தாற்சொல்லினர். இது விரைவுபற்றி வந்த காலவழுவமைதி. மலர்மிசை யேகினானென்பதை வேறு கடவுள்மீ தேற்றிக் கூறுவாருமுளர். சேர்தல் - இடைவிடாது தியானித்தல்.

(க-து). கடவுளடியைத் தியானிப்பவர் முத்தி யடைவர் என்பது.

3. They who meditate the sacred feet of Him who passes swiftly into the flower of the mind, shall flourish long in the highest of worlds.

ச. வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
யாண்டு மிடும்பை யில.

பரி.—(இ-ள்). ஒருபொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவனடியைச் சேர்ந்தார்க் கெக்காலத்தும் பிறவித் துன்பங்கள் உளவாகா.

‡ பிறவித்துன்பங்களாவன:—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவும் என மூவகையான் வருந்துன்பங்கள். அடிசேர்ந்தார்க் கவ்விரண்டு மின்மையின், அவைகாரணமாகவரு மூவகைத்துன்பங்களும் இலவாயின.

* மண்டலபுருடனிகண்டு அருகன் (சமணமதக்கடவுள்) பெயரைக் கூறுமிடத்து "பூமிசைநடந்தோன் போதன்" என்றும், புத்தன் (பௌத்த மதக்கடவுள்) பெயரைக்கூறுமிடத்து "பூமிசைநடந்தோன் புத்தன்" என்றுங் கூறுதலின், 'பூமேனடந்தான்' என்பது அருகனையாவது புத்தனையாவது குறிக்குமெனக.

‡ பிறவித்துன்பங்களை வடநூலார் ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ப.

தெளி.—(இ-ள்). வேண்டுதல் - (ஒரு பொருளையும்) விரும்புதலும், வேண்டாமை-வெறுத்தலும், இலான் - இல்லாதவிறைவனது, அடி-பாதங்களை, சேர்ந்தார்க்கு - சேர்ந்தவர்க்கு, யாண்டும் - எக்காலத்திலும், இடும்பை - பிறவித்துன்பங்கள், இல - உண்டாவனவல்ல, (எ-று.)

*பிறவித் துன்பங்களாவன:—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவும் என மூவகையால் வருந்துன்பங்களாம். இறைவனது அடியைச சேர்ந்தார்க்கு அவ்விருப்பு வெறுப்பிரண்டு மில்லாமையால் அவ்விருப்பு வெறுப்பு காரணமாக வருகின்ற மூவகைத் துன்பங்களும் இல்லையாயின.*

*(க-து). கடவுளடியைச் சேர்ந்தவர்களுக்குப் பிறவித்துன்பங்க ளிலவாம் என்பது.*

4. To those who are united to the feet of Him who is without desire or aversion, evil shall never come.

ரு. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

பரி.—(இ-ள). மயக்கத்தைப்பற்றி வரும் நல்வினை தீவினையென்னு மிரண்டு வினையு முளவாகா, இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து, (எ-று).

*இன்ன தன்மைத்தென ஒருவரானுங் கூறப்படாமையின் † அவிச்சையை 'இருள்' என்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான் 'இருவினையுஞ் சேரா' என்றுங் கூறினார். ‡ இறைமைக் குணங்களிலராயினாரை யுடையரெனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேரா வாகலின், அவை முற்றுமுடைய இறைவன் புகழே 'பொருள்சேர்புகழ்' எனப்பட்டது. புரிதல் - எப்பொழுதுஞ் சொல்லுதல்.*

தெளி.—(இ-ள்). இருள்சேர்—*மயக்கத்தைப்பற்றி வருகிற, இருவினையும்-(நல்வினை தீவினையென்னும்) இரண்டுவினைகளும், சேரா-உண்டாகாவாம். இறைவன்-தலைவனது, பொருள்சேர் - மெய்ம்மைசேர்ந்த, புகழ்-கீர்த்தியை, புரிந்தார் மாட்டு - விரும்பினவரிடத்து, (எ-று).*

---

† *அவிச்சையை இருளென்பது "போதமென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாம்" என்று தாயுமானவர் கூறுமாற்றானு முணரப்படும். அவிச்சையென்பதன் பொருள் விச்சையினும் வேறுபட்டதென்பது; விசசை - ஞானம்.*

‡ *இறைமைக் குணங்கள்—வியாபகத்துவம், சர்வஞ்ஞத்துவம், சர்வசக்திமத்துவம், நிட்களத்துவம், நியாமகத்துவம், சர்வபிரேரகத்துவம், அத்விதீயத்துவம், சர்வசுதந்தரத்துவம், சர்வேசுவரத்துவ முதலியனவாம்.*

இத்தன்மையதான சொரூபமுடைய தென்று (கல்வியறிவால் மேம்பாடடைந்த மக்களுள்) ஒருவராலுங் குறிப்பிட்டுச் சொல்லப்படாமையால் அஞ்ஞானத்தை 'இருள்' என்றும், நல்வினையும் பிறத்தற்குக்காரணமாயிருத்தலால் 'இருவினையுஞ்சேரா' என்றும் சொல்லினர். தலைமைக்குணங்களில்லாதவரை அக்குணங்கள் உடையவரென்று நினைத்து அறிவிலார் சொல்லுகின்ற கீர்த்திகள் பொருள்சேராவாகலின் அவைமுழுதுமுடைய தலைவனது கீர்த்தியே 'பொருள்சேர் புகழ்' எனப்பட்டது. புரிதல் - எப்பொழுதும் வாயால் துதித்தல்.

(க-து). கடவுளைத் துதிப்பவரிடத்துப் பிறவிக்கேதுவாகிய வினைகளிரண்டு மடையாவாம் என்பது.

5. The two-fold deeds (virtue & vice) that spring from darkness shall not adhere to those who delight in the true praise of God.

சு. † பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

பரி.—(இ-ள்). மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் அறுத்தானது ‡ மெய்யான வொழுக்க நெறியின்கண் வழுவாது நின்றார் பிறப்பின்றி யெக்காலத்து மொரு தன்மையராய் வாழ்வார், (எ-று).

புலன்கள் ஐந்தாகலான் அவற்றின்கட் செல்கின்ற அவாவும் ஐந்தாயிற்று. ஒழுக்கநெறி ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமையின் ஆண்டை ஆறனுருபு * செய்யுட்கிழமைக்கண் வந்தது; "கபிலரது பாட்டு" என்பது

† பொறிவாயி லைந்தவித்தா னென்பது இருஷீகேச னென்னும் வடமொழிப்பெயரின் மொழிபெயர்ப்பாம். இதன் பொருள் இந்திரியங்கட் கீச (தலைவ)னயிருப்பவனென்பது. இது விஷ்ணுவின் திருநாமங்களு ளொன்று.

‡ மெய்யான வொழுக்க நெறியைப் போதிப்பது வேதமாகலின் அதன்நெறி பொய்தீ ரொழுக்கநெறி' என்று கூறப்பட்டது. இது 'வேதமு மற் றொன்றினுக்குச் சேட மாகா, தெத்தகைய வுயிர்களுக்குந் தாய்போல வுண்மையே யெடுத்தியம்பும்' என்றும், "ஆதலான் மறையிற் சொலப்பட்ட வருத்தமே யுண்மையானது" என்றும் சூதசங்கிதை கூறுவதால் நன்கு விளங்கும்.

* செய்யுட்கிழமை ஒலிவடிவால் தற்கிழமையும் வரிவடிவால் பிறிதின் கிழமையுமாம்; இது பொருட்பிறிதின்கிழமையி லடங்கும்.

போல, இவை நான்கு பாட்டாலும் இறைவனை நினைத்தலும் வாழ்த்த லும் அவனெறி நிற்றலுஞ்செய்தார் வீடுபெறுவரென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). பொறிவாயில் - (மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்) பொறிகளை வழிகளாகவுடைய, ஐந்து - ஐந்தாசைகளை யும், அவித்தான் - ஒழித்தவனது, பொய்தீர் - மெய்யான, ஒழுக்கநெறி- ஒழுக்கவழியில், நின்றார் - (வழுவாது) நின்றவர், நீடுவாழ்வார்-பிறப்பில்லா மல் எக்காலத்திலும் ஒரு தன்மையராய் வாழ்வார், (எ-று).

சுவை, ஒளி, ஊறு, ஓசை,நாற்றம் என விஷயங்கள் ஐந்தாகலின் அவ ற்றிற் செல்லுகிற ஆசையும் ஐந்தாயிற்று. ஐந்தவித்தானது ஒழுக்கவழி அவனாற்சொல்லப்பட்ட வேதமார்க்கம். ஐந்தவித்தான் பொய்தீரொழுக்க நெறி என்புழித் தொக்குநின்ற ஆறனுருபு செய்யுட்கிழமைப்பொருளது. அது விரியுமிடத்து ஐந்தவித்தானது பொய்தீரொழுக்கநெறி என விரியும். இவை நான்கு பாட்டாலும் கடவுளை நினைத்தலும் வாழ்த்துதலும், அவன் வழியில் நிற்றலுமுடையார் முத்திபெறுவரென்பது சொல்லப்பட்டது.

(க-து.) கடவுள் கூறிய நூல் வழியே யொழுகுபவர் பிறப்பகன் றினிதிருப்பர் என்பது.

6. Those shall long prosper who abide in the faultless way of Him who has cut off the five desires of the senses.

எ. * தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

பரி.—(இ-ள்). ஒருவாற்றானுந் தனக்கு நிகரில்லாதவனது தாளைச் சேர்ந்தார்க் கல்லது மனத்தின்கணிகழுந் துன்பங்களை நீக்குத லுண் டாகாது, (எ-று).

† "உறற்பால நீண்டா விடுத லரிது" என்றாற்போல ஈண் டருமை இன்மைமேனின்றது. தாள்சோராதார் பிறவிக்கேதுவாகிய காமவெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின் பிறந்திறந் தவற்றான் வருந்துன்பங் களுள் அழுந்துவ ரென்பதாம்.

தெளி.—(இ-ள்.) தனக்கு உவமையில்லாதான் - (ஒருவகையினாலும்) தனக்கு ஒப்பில்லாதவனது, தாள் - பாதங்களை, சேர்ந்தார்க்கல்லால்-சேர்ந்

* 'தனக்குவமையில்லாதான்' என்று கூறப்பட்டதாயினும் தனக்கு மிக்காருமில்லானென்றுங் கொள்க. "ஈடு மெடுப்புமி லீசன்" என்பது திரு வாய்மொழி.

† இது நாலடியார் பழவினை 9-வது செய்யுளின்க ணுள்ளது. இதன் பொருள் (ஊழால்) வரத்தக்கவை (ஒருவரை) சேராமற்போவது இல்லை யென்பது.

தவர்களுக்கல்லது, மனக்கவலை - மனத்தில் (தோன்றும்) துன்பங்களை, மாற்றல் - நீக்குதல், அரிது - உண்டாகாது, (எ-று).

இங்கு அரிதென்னுஞ்சொல் பகுதியாகிய அருமை இல்லையென்னும் பொருளில் வந்தது. உவமையில்லாதவனது பாதங்களைச் சேராதவர் பிறவிக்குக்காரணமாகிய காமவெகுளிமயக்கங்களை நீக்கமாட்டாமையின், பிறந்திறந்து அக்காம வெகுளி மயக்கங்களால் வருகிற துன்பங்களுள் அழுந்துவா ரென்பதாம்.

(க-து). கடவுளடியைச் சேர்ந்தவர்களுக்கு மனக்கவலை யில்லை என்பது.

7. Anxiety of mind cannot be removed, except from those who are united to the feet of Him who is without likeness.

௮. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

பரி.—(இ-ள்). அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது, (எ-று).

அறம் பொருளின்பமென உடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப்பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் எனப்பட்டன. † பலவேறு வகைப்பட்ட அறங்களெல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையனாகலின் 'அறவாழியந்தணன்' என்றார். 'அறவாழி' என்பதனைத் தருமசக்கரமாக்கி அதனையுடைய அந்தணனென்றுரைப்பாருமுளர். அப்புணையைச் சேராதார் கரைகாணாது நடுவுள்ளே அழுந்துவராகலின் 'நீந்தலரிது' என்றார். ‡ இஃதேகதேச வுருவகம்.

தெளி.—(இ-ள்). அறவாழியந்தணன்-தருமக்கடலாகிய கடவுளது, தாள் - அடியாகிய (மரக்கலத்தை), சேர்ந்தார்க்கல்லால் - சேர்ந்தவர்களல்லாமல், பிறவாழி - (அதனின்) வேறாகியகடல்களை, நீந்தல் - கடத்தல், அரிது - கூடாது, (எ-று).

அறம்பொருளின்பமென வுடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்புபிரித்ததனால் மற்றைப்பொருளு மின்பமும் 'பிற' எனப்பட்டன.

† "அறமே சிவனுக் கொருவடிவ மாகும்" என்பது காஞ்சிப்புராணம்.

‡ ஏகதேசவுருவகமாவது ஒருபகுதியை யுருவகஞ்செய்து மற்றொரு பகுதியை யுருவகஞ்செய்யாமல் விடுவது. உருவகமாவது உவமையையும் பொருளையும் வேற்றுமையொழித் தொன்றென்னும் உள்ளுறை தோன்றவைப்பது. பிறவென்னும் பொருளின்பங்களை ஆழி (கடல்) எனவுருவகப்படுத்தித் தாளை (அடியை) ப்புணையென் றுருவகப்படுத்தாமையின் ஏகதேச வுருவகமாயிற்று.

பலவேறு வகைப்பட்ட அறங்க ளெல்லாவற்றையுந் தனக்கு வடிவமாக உடையவனாதலின் 'அறவாழியந்தணன்' என்றார். அறவாழி என்பதற்குத் தருமசக்கரமெனப் பொருள் கூறுவாருமுளர். அம் மரக்கலத்தைச் சேராதவர் கரைகாணாது பொருளின்பமென்னுமக்கடலுள்ளே அழுந்துவாராகலின் 'நீந்த லரிது' என்றார். இஃது ஏகதேச உருவகவணி.

(க-து). கடவுளடியைச் சேராதவர் பொருளும் இன்பமுமாகிய கடல்களி லுழலுவர் என்பது.

8. None can swim the sea of vice, but those who are united to the (ship of) feet of that gracious Being who is himself a sea of virtue.

கூ. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

பரி.—(இ-ள்). தத்தமக் கேற்ற புலன்களைக் கோள்கையில்லாத பொறிகளபோலப் பயன்படுதலுடையவல்ல, எண்வகைப்பட்ட குணங்களை யுடையானது தாளை வணங்காத தலைகள், (எ-று).

† எண்குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவி லாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்திற் கூறப்பட்டது. ‡ அணிமாவை

† எண் குணங்களின அர்த்த விசேடங்களைச சிவஞானவள்ளலார் பதிசங்கையிற் காண்க.

‡ 'அணிமாவை முதலாக வுடையன' எண்வகைப்படும். அவை அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவமென்பன. (1) தேகம் பரமாணுபோன்று மிகச்சிறிய வுருவினை யுடையதாதல் அணிமாவெனவும், (2) தேகம் ஆகாயம்போன்று மிகப்பெரிய வுருவினை யுடையதாதல் மகிமாவெனவும், (3)தேகம் மலைபோன்று மிகக்கனத்திருத்தல் கரிமாவெனவும், (4) தேகம் துரும்புபோன்று கனமின்றி மிகநொய்தாயிருத்தல் லகிமாவெனவும், (5)விரும்பியதை விரும்பியவா றடைதல் பிராப்தியெனவும், (6) பரகாயப் பிரவேசஞ்செய்தல் ஆகாய கமனம்புரிதல் இச்சித்த சர்வபோகங்களையு மிருந்தவிடத்திற் பெறுதல் சூரியவொளியால் பொருள்களைக் காணுமாறு போன்று தனதுடலொளியால் பொருள்களைக்காண்டல் திரிகாலவுணர்ச்சி முதலியன பிராகாமியமெனவும், (7) எத்தகையோர்க்கு மேம்பட்டிருத்தல் ஈசத்துவமெனவும்' (8) சராசரப்பொருள்க ளியாவற்றையுந் தன்வசமாக்கல் வசித்துவமெனவு மறிக. இவற்றின் விரிவைத் திருவிளையாடற் புராணம் அட்டமாசித்தி யுபதேசித்த படலத்திற் காண்க.

முதலாகவுடையன வெனவும், † கடையிலா வறிவை முதலாகவுடையன வெனவும் உரைப்பாருமுளர். காணாத கண்முதலியனபோல வணங்காத தலைகள் பயனில வெனத் தலைமேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும், ¶ இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில வென்பதூஉங் கொள்க. இவை மூன்றுபாட்டானும் அவனை ‡ நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலும் செய்யாவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). கோளில்-(தத்தமக்கேற்ற விஷயங்களைக்) கொள்ளுதலில்லாத, பொறியின்—இந்திரியங்களைப்போல, எண்குணத்தான்-எண்வகைப்பட்ட குணங்களையுடைய இறைவனது, தாளை-பாதங்களை, வணங்காத்தலை-தொழாத தலைகள், குணமிலவே-பயன்படுதலுடையனவல்லவாம், (எ - று).

எண் குணங்களாவன:—சுவதந்திரத்துவம், விசுத்ததேகம், நிராமயான்மா, சர்வஞ்ஞத்துவம், அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசத்தி, திருப்தி என்பனவாம். இங்ஙனம் சைவாகமத்திற் சொல்லப்பட்டது. எண்குண மென்பதற்கு அணிமாமுதலிய வெண்குணமென்றும் கடையிலாவறிவுமுதலிய வெண்குணமென்றும் பொருள் கூறுவாருமுளர். காணாத கண்முதலானவைபோல வணங்காத தலைகள் பயனில வெனத் தலைமேல் வைத்துச் சொல்லினார்; அங்ஙனஞ் சொல்லினாரேனும் இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அப்படியே பயனிலவா மென்பதுங்கொள்க.

இவை மூன்றுபாட்டாலும் அவனை நினைத்தலும் வாழ்த்தலும், வணங்கலும் செய்யாவிடத்துண்டாகின்ற குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து). கடவுளது அடியை வணங்காத தலையும் வாழ்த்தாத நாக்கும் பயன்படுதலுடையன வாகாவாம் என்பது.

9. The head that worships not the feet of Him who is possessed of eight - fold attributes, is as profitless as a sense without the power of sensation.

† 'கடையிலாவறிவை முதலாகவுடையன' எண்வகைப்படும். அவை கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம், கடையிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு என்பனவாம். இவ்வாறு சமணர்கள் கூறுவர். "கடையிலா வறிவொடு" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளிங் கறியத்தக்கதாம்.

¶ வணங்காததலைகள் வாழ்த்தாத நாக்களுக்கு உபலட்சணமாய் நின்றன. உபலட்சணமாவது ஒருமொழி ஒழிந்தகின்ற தன்னினங்களைக் கொள்ளுதற்குரித்தாய் வருவது. இது விடாத வாகுபெயரின்பாற் படும்.

‡ நினைத்தல் மனத்தின்வினையும், வாழ்த்தல் வாக்கின்வினையும், வணங்கல் காயத்தின் வினையுமாமென்க.

க0. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

பரி.—(இ-ள்). இறைவ னடியென்னும் புணையைச் சேர்ந்தார், பிறவியாகிய பெரியகடலை நீந்துவர், அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனு ளழுந்துவர், (எ-று).

** காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் 'பிறவிப் பெருங்கடல்' என்றார். சேர்ந்தா ரென்பது † சொல்லெச்சம். ‡ உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும் ¶ அவ்வாறன்றி மாறி நினைப்பார்க் கஃதறாமையும் ஆகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.*

தெளி —(இ-ள்). இறைவன்-தலைவனது, அடி - பாதமாகிய (மரக்கலத்தை) (சேர்ந்தார்), பிறவிப்பெருங்கடல்-பிறவியாகிய பெரிய கடலை, நீந்துவர்-கடப்பார், சேராதார் - (அம்மரக்கலத்தைச்) சேராதவர், நீந்தார் - கடக்கமாட்டாதவராகி யக்கடலு ளழுந்தா நிற்பர், (எ - று).

** வித்தினால் முளையு (மரமு) ம் முளையினால் வித்தும் தொன்று தொட்டுத் தோன்றி வருவது போல, முற்சன்மத்தின் கருமத்தா லிச்சன்மமும் இச்சன்மத்தின் கருமததா லினிவருஞ் சன்மமுமாகத் தொன்று தொட்டுக் காரண காரியத் தொடர்ச்சி யுடையதாய்ச் சன்மம்முடிவில்லாது வருதலின் அது 'பிறவிப்பெருங்கடல்' என்று கூறப்பட்டது. பிறவியைக் கடலாக வுருவகப்படுத்திக்கூறுவதேயன்றி மரமாக வுருவகப்படுத்திக்கூறுவதுமுண்டு. பிறவிக்கடலின் வர்ணனையைச் சிவஞான போதத்திலும் பிறவிமரத்தின் வர்ணனையைப் பகவற்கீதை பதினைந்தாவ தத்தியாயத்திலுங் காண்க.*

*† சொல்லெச்சமாவது செய்யுளி லொருசொற்கு முன்னாவது பின்னாவது சொல்மாத்திரம் குறைந்து நிற்பது. "சொல்லென் னெச்ச முன்னும் பின்னுஞ், சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே" என்பது தொல்காப்பியம்.*

*‡ உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைத்தல் சவிகற்ப சமாதி, அல்லது சம்பிரஞ்ஞாத சமாதியெனப்படும். இதற்கிலக்கணம் " விஜாதீயப் பிரத்தியய விருத்திகளின் அந்தராயமி (மறைப்பி) ன்றிய தைலதாரைபோன்று இடையீடில்லாத சஜாதீயப் பிரஹ்மாகார விருத்திப்பிரவாகம்" என்று யோகநூல் கூறுகின்றது.*

*¶ அவ்வாறன்றி மாறிநினைத்தல்—அவ்வாறு சமாதிபுரியாது தான் (ஆத்மா) அல்லாத வுடம்பை யானென்றும் தன்னோ டியைபில்லாத பொருளை யெனதென்றுங் கருதுதல்.*

இப்பிறப்பிற்கு முற்பிறப்புக் காரண மாகவும் இப்பிறப்பு இனிவரும் பிறப்பிற்குக் காரணமாகவு மிருத்தலின் இப்பிறப்பு முற்பிறப்பை நோக்கக் காரியமும் இனிவரும் பிறப்பை நோக்கக் காரணமுமாம். இவ்வாறு தொன்றுதொட்டுக் காரணகாரியத் தொடர்ச்சி யுடையதாய்ப் பிறவி யெல்லையில்லாது வருதலால் 'பிறவிப் பெருங்கடல்' என்றார். சேர்ந்தார் என்னுஞ் சொல் குறைந்து நின்றமையின் அது வருவித் துரைக்கப்பட்டது. இவ்வாறு வருவது சொல்லெச்சமெனப்படும். உலகியல்பை நினையாமல் கடவுளடிகளையே நினைப்பவர்க்குப் பிறவி நீங்குதலும் அங்ஙனஞ்செய்யாது வேறுபட்டு (உலகியல்பாகிய பொருளின்பங்களை) நினைப்பவர்க்கு அப்பிறவி நீங்காமையுமாகிய விரண்டும் இக்குறளால் நிச்சயிக்கப்பட்டன.

(க-து). கடவுளது அடியைச் சேர்ந்தவர் பிறவிக்கடலைக் கடத்தலும், சேராதவர் அதனைக் கடக்க மாட்டாமையு முடையராவர் என்பது.

10. None can swim the wide extended sea of births, but those who are united to the (ship of) feet of God.

## இரண்டாம் அதிகாரம்.

## வான்சிறப்பு—The Excellence of Rain.

பரி.—அஃதாவது † அக்கடவுள தாணையான் உலகமும் அதற் குறுதியாகிய அறம் பொரு ளின்பங்களும் நடத்தற் ‡கேதுவாகிய மழையினது சிறப்புக்கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி.—அஃதாவது கடவுளது வலலால் உலகமும் அதற்கு உறுதியைத் தருவதாகிய அறம் பொரு ளின்பங்களும் நடத்தற்குத் துணைக்காரணமாகிய மழையினது சிறப்பைச் சொல்லுதலாம். கடவுள் வாழ்த்தின் பின் வான்சிறப் பென்னும் அதிகாரம் வைத்த முறைமையும் இதனாலே விளங்கும்.

க. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

---

† ஒவ்வொரு சிருட்டியி னாரம்பத்திலுங் கடவுளிடத்து ஜீவர்களின் காலகன்ம பரிபாகத்திற் கியைய இவ்வளவுகாலம் மழையுண்டாகுக, இவ்வளவுகாலங் குளிருண்டாகுக, இவ்வளவுகாலம் வெயிலுண்டாகுக என்றற் றொடக்கத்தனவாகச் சங்கற்ப முண்டாகின்றதென்பது சாஸ்திர நிச்சயம்.

‡ "கருவி மாமழை" என்பது நைடதம், சிந்தாமணி.

பரி.—(இ-ள்). மழை யிடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலான் அம்மழை தான் உலகத்திற் † கமிழ்தமென் றுணரும் பான்மையை யுடைத்து. (எ - று).

‡ நிற்ப வென்பது நின்றெனத் திரிந்து நின்றது. உலக மென்றது ஈண்டுயிர்களை. அவை நிலைபெற்று வருதலாவது பிறப்பிடையறாமையின் எஞ்ஞான்று முடம்போடு காணப்பட்டு வருதல். அமிழ்த முண்டார் சாவாது நிலைபெறுதலின், உலகத்தை நிலைபெறுத்துகின்றவானை 'அமிழ்த மென் றுணரற்பாற்று' என்றார்.

தெளி.—(இ-ள்). வான—மழையானது. நின்று - (நடுவே நீங்காது) நிற்க, உலகம் - உயிர்கள், வழங்கிவருதலால் - நிலைபெற்று வருதலினால், தான் - (அம்மழை) தான், அமிழ்தமென்று - (உயிர்களுக்கு) அமிழ்த மென்று, உணரற்பாற்று - அறியுந்தன்மையை யுடையதாம். (எ-று).

நிற்பவென்பது நின்றெனத் திரிந்தது உலகமென்பதிங் குயிர்கள் மேல் நின்றது. அவ்வுயிர்கள் நிலைபெற்று வருதலாவது பிறப்பு நடுவே நீங் காமையால் எந்நாளும் உடம்போடு காணப்பட்டுவருதல். அமிழ்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின் உயிர்களை நிலைபெறச் செய்யும் மழையை 'அமி ழ்தமென் றுணரற்பாற்று' என்றார்.

(க-து). உயிர்கள் நிலைபெற்று வருதற்கேது மழையாம் என்பது.

1. As by the continuance of rain the world subsists, it is worthy to be called ambrosia.

உ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

பரி.—(இ-ள்). உண்பார்க்கு நல்ல வுணவுகளை யுளவாக்கி அவற்றை யுண்கின்றார்க்குத் தானுமுணவாய் நிற்பதூஉ மழை, (எ-று).

தானு முணவாதலாவது தண்ணீரா யுண்ணப்படுதல். சிறப்புடைய வுயர்திணைமேல் வைத்துக் கூறினமையின், அஃறிணைக்கு மிஃதொக்கும். இவ்வா றுயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கிவருத லுடையவாயின என்பதாம்

† அமிழ்தம் - மரணத்தை யொழிப்பதென்னும் பொருளது. இஃது அம்ருதமென்னும் வடமொழியின் திரிபு.

‡ "நின்றென்னும்" செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம் வழங்கி வருதலாவென்னும் வேறு வினைமுதல்வினையைக்கொண்டு முடிதற்கு விதி யில்லாமையின் "நிற்ப வென்பது நின்றெனத்திரிந்து நின்றது" என்றார்.

தெளி:—(இ-ள்). துப்பார்க்கு - உண்பவருக்கு, துப்பாய - நன்மையாகிய, துப்பாக்கி - உணவுகளையுண்டாக்கி, துப்பார்க்கு-(அவ்வுணவுகளை) உண்கின்றவருக்கு, துப்பாயதூஉம் - (தானும்) உணவாய்நிற்பதும், மழை-மழையாம், (எ-று).

தானும் (மழையும்) உணவாதலாவது தண்ணீரா யுண்ணப்படுதல். (துப்பார்க்கென்று) சிறப்புடைய உயர்திணை மேல் வைத்துச் சொல்லுதலின், (மற்றையுயிர்களாய) அஃறிணைக்கும் இஃது ஒக்கும். (உணவாக்கல் உணவாதலென்று) இப்படி உயிர்களது பசியையுந் தாகத்தையும் நீக்குதலால், அவ்வுயிர்கள் வழங்கிவருதல் உடையனவாயின வென்பதாம்.

(க-து). உண்பவருக் குணவுகளை யுண்டாக்கித் தானும் உணவாக நிற்பதும் மழையாம் என்பது.

2. Rain produces good food, and is itself food for those who eat.

௩. *விண் †ணின்று பொய்ப்பின் ‡விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

பரி:—(இ-ள்). மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின் கடலாற் சூழப்பட்ட அகன்ற வுலகத்தின்கணிலைபெற் றுயிர்களை வருத்தும் பசி, (எ-று).

கடலுடைத் தாயினு மதனாற் பயனில்லை யென்பார் 'விரிநீர் வியனுலகத்துள்' என்றார். உணவின்மையின் பசியா னுயிர்க ளிறக்கும் என்பதாம்.

தெளி:—(இ-ள்). விண்-மழையானது, இன்று - (பெய்யவேண்டிய காலத்தில்) பெய்யாமல், பொய்ப்பின்-பொய்க்குமாயின், விரிநீர்-கடலாற் சூழப்பட்ட, வியனுலகத்துள் - பரந்த வுலகத்தினுள், பசி - பசியானது, நின்று-நிலைபெற்று, உடற்றும் - (உயிர்களை) வருத்தும், (எ-று).

கடலுடைத்தாயினும் அதனாலுயிர்களுக்குப் பயனில்லை யென்பார் 'விரிநீர் வியனுலகத்துள்' என்றார். உணவில்லாமையினால் பசியால் உயிர்கள் இறக்குமென்பதாம்.

(க-து). மழைபெய்தல் தவறுமாயின் பசியால் உயிர்கள் வருந்தி யிறக்கும் என்பது.

---

* விண் - ஆகாயம்; அஃது இடவாகுபெயராய் மழைக்காயிற்று.

† இல்லாமலென்னும் பொருளையுடைய இன்றி யென்னுஞ்சொல் ஈண்டு இன்று எனத்திரிந்து நின்றது. நின்றெனவும் பிரிக்கலாம்.

‡ கடலிலும் விரிந்தநீர் மற்றொன்றில்லாமையின், அது 'விரிநீர்' என்று சொல்லப்பட்டது.

3. When clouds withhold rain deceiving (our hopes), hunger will long give distress to the sea-girt spacious world.

௪. ஏரி னுழாஅ ருழவர் ¶ புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

பரி:—(இ-ள்). உழவர் ஏரா னுழுதலைச் செய்யார், மழையென்னும் வருவாய் தன்பயன் குன்றின், (எ-று).

குன்றியக்காலென்பது குறைந்தின்றது. உணவின்மைக்குக் காரணங் கூறியவாறு.

தெளி.—(இ-ள்). உழவர் - உழுதொழில் செய்வோர், ஏரின் - ஏரினால், உழாஅர்-உழுதலைச்செய்யார், புயலென்னும் வாரி - மழையென்னும் வருவாய், வளங்குன்றிக்கால்-(பெய்தலாகிய தன்) பயன்குறையின், (எ-று).

குன்றியக்காலென்பது செய்யுள் விகாரத்தால் குன்றிக்கா லெனக் குறைந்துநின்றது. உணவில்லாமைக்குக் காரணஞ் சொல்லியபடியாம். "மல்லொடு வளமே வாரி பகுதியும் வருவா யின்பேர்" என்பது நிகண்டு.

(க-து). மழை வளங்குறைந்தால் பயிர்செய் மாக்கள் ஏருழா ரென்பது.

4. If the flow of wealth-imparting rain diminish, the fruitful toils of the plough must cease.

௫. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

பரி:—(இ-ள்). பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம் அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப் பெய்து முன்கெடுத்தாற்போல எடுப்பதூஉம் இவை யெல்லாம் வல்லது மழை, (எ-று).

* மற்று வினைமாற்றின்கண் வந்தது. † ஆங் கென்பது மறுதலைத்

---

¶ புயல்—மேகம்; அது கர்த்தாவாகுபெயராய் மழைக்காயிற்று.

* பெய்யாது நின்று கெடுப்பதென்னும் வினையைப் பெய்துகெடுக்காது எனமாற்றியதினால் மற்று வினைமாற்றின்கண்வந்தது.

மற்று என்னும் இடைச்சொல் முன் சொல்லுகின்ற தொழிய இனி வேறொன்று என்னும் பொருளைக் குறிக்குமிடத்து வினைமாற்றெனப் படுகின்றது.

† எடுப்பது என்னும் தொழிலுக்கு விரோதமாகிய கெடுப்பது என்னும் மறுதலைத்தொழிலை யுவமையாக ஆங்கு என்பது (முன் கெடுத்தாற்போல எனச்) குறிப்பித்தல்பற்றி 'ஆங்கென்பது மறுதலைத் தொழிலுவமத்தின்கண் வந்தது என்று கூறப்பட்டது.

தொழி லுவமத்தின்கண் † வந்தது. கேடும் ஆக்கமும் எய்துதற் குரியார் மக்களாதலின் 'கெட்டார்க்கு' என்றார். 'எல்லாம்' என்றது அம் மக்கண் முயற்சி வேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல்கடாம் பலவாதல் நோக்கி. வல்ல தென்பது ‡ அவாய்நிலையான் வந்தது. மழையின தாற்றல் கூறியவாறு.

தெளி:—(இ-ள்). கெடுப்பதூஉம்-(பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று) கெடுப்பதும், கெட்டார்க்கு - (அவ்வாறு) கெட்டவர்க்கு, சார்வாய் - துணையாய்ப் (பெய்து), மற்றாங்கே - முன்கெடுத்தாற்போல, எடுப்பதூஉம் - (அவரை) எடுப்பதும், எல்லாம் - (இவை) எல்லாம் (வல்லது), மழை - மழையாம், (எ-று).

மற்று கெடுக்காதென்னும் வினைமாற்றுப்பொருளில் வந்தது. ஆங்கென்பது மறுதலைத்தொழிலுவமைப்பொருளில் வந்தது. கேடும் பெருக்கமும் பெறுதற்குரியவர் மக்களாதலால் கெட்டார்க்கு' என்றார். 'எல்லாம்' என்றது அம்மக்களது முயற்சி வேறுபாடுகளால் கெடுதலெடுத்தல்கள் பலவாதலை நோக்கியாம். வல்லதென்பது அவாய் நிலையால் வந்தது. மழையினது வல்லமையைச் சொல்லியபடியாம்.

(க-து). மக்களைக் கெடுப்பதுங் காப்பதும் மழையாம் என்பது.

5. Rain by its absence ruins men, and on the other hand helping, restores them to fortune; such is the power of rain.

---

சு. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

பரி.—(இ-ள்). மேகத்திற் றுளிவீழ்ந் காண்பதல்லது வீழாதாயின் அப்பொழுதே பசும்புல்லினது தலையையுங் காண்டலரிது, (எ-று).

விசும்பு—ஆகுபெயர். மற்று வினைமாற்றின்கண் வந்தது. இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஓரறி வுயிரும் இல்லை யென்பதாம்.

தெளி.—(இ-ள்). விசும்பின் - மேகத்தினின்றும், துளி - மழைத் துளிகள், வீழினல்லால் - வீழிற்காண்பதல்லாமல், மற்று - வீழாதாயின், ஆங்கே-அப்பொழுதே, பசும்புற்றலை-பசும்புல்லினது தலையையும், காண்பு-காணுதல், அரிது - கூடாது, (எ-று).

விசும்பு—இடவாகுபெயர். மற்று வீழாதாயி னென்னும் வினைமாற்றுப் பொருளில் வந்தது. தலையுமென்னும் இழிவு சிறப்பும்மை செய்யுள்

---

† வந்த வுவமச்சொல் என்றும் பாடமுண்டு.

‡ அவாய்நிலையாவது ஒருபதம் தன்னைமுடிப்பதொருபதம் இல்லாதவழி முடிவு பெறாது நிற்றல். எல்லாமென்பது வல்லதென்பதை யவாவி நின்றது.

விகாரத்தால் தொக்கது. (புல்முதலிய) ஓரறிவுயிரும் இல்லையாம் போமெ ன்பதாம். புற்றலை எனபதற்குப் பனைமரத்தின் கொழுந்தென்று பொருள் கூறுவாருமுளர்.

(க-து): மழை பெய்யாதாயின் ஓரறிவுயிரையுங் காணுதலரி தென்பது.

6. If no drop fall from the cloud, not even a head of green blade of grass will be seen.

ஏ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

பரி:—(இ-ள). அளவில்லாதகடலுந் தன்னியல்பு குறையும்,மேகந் தான் அதனைக்குறைத் ததன்கட் பெய்யாது விடுமாயின், (எ-று).

உம்மை - சிறப்பும்மை. தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் பிறவாமையும் * மணிமுதலாயின படாமையுமாம். ஈண்டுக் குறைத்தலெ ன்றது முகத்தலை; அது ¶ " கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந் து " என்பதனானு மறிக. மழைக்கு முதலாய கடற்கும் மழைவேண்டு மென்பதாம்.

இவை யேழு பாட்டானும் மழை உலக நடத்தற் கேதுவாதல் கூறப் பட்டது.

தெளி.—(இ-ள்). நெடுங்கடலும் - அளவிடற் கியையாத கடலும், தன்னீர்மைகுன்றும் - தன்னியல்பு குறையும், எழிலிதான் - மேகந்தான், தடிந்து - (அக்கடலைக்) குறைத்து, நல்காதாகிவிடின் - (அக்கடலிடத்துப) பெய்யாது விடுமாயின், (எ-று).

கடலுமென்ற உம்மை உயர்வுசிறப்பும்மை. தன்னியல்பு குறைதலா வது நீர்வாழும் மீன்முதலிய வுயிர்கள் பிறவாமையும் மணிமுதலானவை உண்டாகாமையுமாம். இங்குக் குறைத்த லென்றது மொள்ளுதலை. மழை க்கு முதலாகிய கடலுக்கும் மழைவேண்டு மென்பதாம்.

இவை ஏழுபாட்டாலும் மழை உலகம் நடைபெறுதற்குத் துணைக் காரணமாதல் சொல்லப்பட்டது.

---

* மணிமுதலாயின - முத்து, பவளம் முதலியனவாம. " கடலுக்குப் பெருமை முத்தும் பவளமும் படுவது. வைகாசியிலே ஞாயிற்றுச் சோதி யின் மழையிலே முத்திற்குக்கரு, ஐப்பசிப் பூசத்து மழையிலே பவளத் திற்குக்கரு; ஆகலின் மழையில்லாத விடத்துக் கடல்பெருமை குறையும்" என்பர் கடலியல்புணர்ந்தார்.

¶ பரிபாடல். இதன்பொருள்(மேகமானது)கடலினின்றும்மொண்ட நீரை மலையினது நிலைமை குறையும்படி(அதன்கண்)பொழிந்தது என்பது.

(க-து). மழை பெய்யாவிட்டால் கடலும் வளங்குறையு மென்பது.

7. Even the wealth of the wide sea will diminish, if the cloud that has drawn (its waters) up give them not back again (in rain).

அ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

பரி.—(இ-ள்). தேவர்கட்கு மிவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழவோடுகூடிய பூசை நடவாது, மழைபெய்யாதாயின், (எ-று).

† நைமித்திகத்தோடு கூடிய நித்திய மென்றாராகலின் 'செல்லாது' என்றார். உம்மை சிறப்பும்மை. நித்தியத்திற் றாழ்வு தீரச்செய்வது நைமித்திக மாதலின் அதனை முற்கூறினார்.

தெளி.—(இ-ள்).—வானோர்க்கும்-தேவர்களுக்கும், ஈண்டு - இவ்வுல கத்தில், சிறப்பொடு-(மக்களாற் செய்யப்படும்) திருவிழாவுடன் (கூடிய), பூசனை - பூசையானது, செல்லாது - நடவாது, வானம்வறக்குமேல் - மழைபெய்யாதாயின், (எ - று).

(விழாவென்னும்) நைமித்திகத்துடன் கூடிய (பூசையென்னும்) நித் தியமென்று ராதலால் 'செல்லாது' என்றார். நித்தியத்தில் (பூசையில்) தாழ்வு தீரச்செய்வது (விழா வென்னும்) நைமித்திகமாதலின் அதனை (சிறப்பொடு என) முன்பு கூறினார். வானோர்க்கு மென்ற வும்மை உயர்வு சிறப்பும்மை.

(க-து). மழை பெய்யா தொழியின் தேவர்கட்குந் திருவிழா வுடன் கூடிய பூசை நடவாதென்பதாம்.

8. If the heaven dry up, neither yearly festivals, nor daily worship will be offered in this world to (Gods) inhabitants of heaven.

௯. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

† யாதானுமோர் நிமித்தம் பற்றிச் செய்யுங்கன்மம் நைமித்திக கன்ம மெனப்படும். அது கிரகண காலத்திற் செய்யும்சிரார்த்தம் சமுத்திர ஸ்நான முதலியனவாம். எப்போதும் செய்யுங் கன்மம் நித்திய கன்மமெனப்படும், அது ஸ்நானம், சந்தியாவந்தனம், தேவபூஜை முதலியனவாம்.

பரி.—(இ-ள்). அகன்ற வுலகின்கண் தானமுந் தவமுமாகிய விரண் டறமும் உளவாகா, மழை பெய்யாதாயின், (எ - று).

*தானமாவ தறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்குவகையோ டுங்கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களா னுண்டிசுருக்கல் முதலாயின. பெரும்பான்மைபற்றித்தானம் இல்லறத்தின்மேலும் தவம் துறவறத்தின் மேலும் நின்றன.*

தெளி.—(இ-ள்). *வியனுலகம் - விரிந்தவுலகத்தில், தானந் தவமிரண் டும்—தானமும் தருமமுமாகிய விரண்டறங்களும், தங்கா-உளவாகாவாம், வானம் - மழை, வழங்காதெனின் - பெய்யாதாயின், (எ-று).*

*தானமாவது தருமவழியால் வந்தபொருள்களைப் பெரியோர்க்கு மகி ழ்ச்சியோடுங்கொடுப்பது. தவமாவது மனம் (கண்முதலிய) பொறிவழியிற் போகாமல் நிற்கும்பொருட்டு விரதங்களால் உணவைச் சுருக்குதல் முத லானவையாம். மிகுதிபற்றித் தானம் இல்லறத்தின் மேலும் தவம் துறவற த்தின் மேலும் நின்றன.*

(க-து). *மழை பெய்யா தொழியின் தானமும் தவமு முண் டாகா வென்பது.*

9. If rain fall not, alms - deeds and penance will not dwell within the spacious world.

கய. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

பரி.—(இ-ள்). எவ்வகை மேம்பாட்டார்க்கும் நீரை யின்றி உலகி யல் அமையாதாயின், அந்நீர் இடையறு தொழுகும் ஒழுக்கும் வானை யின்றி யமையாது, (எ - று).

*பொருளின்பங்களை உலகியல் என்றார்; அவை இம்மைக்கண்ணவா கலின். இடையறாதொழுகுதல் எக்காலத்துமெவ்விடத்து முளதாதல். நீரின்றமையா துலகென்பது எல்லாரானும் தெளியப் படுதலின் அது போல ஒழுக்கும் வானின் றமையாமை தெளியப்படுமென்பார், 'நீரின் றமையா துலகெனின்' என்றார். † இதனை நீரையின்றியமையா துலகா*

*† இக் குறளுக்கு நீரின்று - நீரையின்றி, அமையாது-பொருந்தாது, உலகெனின்-உலகியலாயின், யார் யார்க்கும்-எத்திறத்தோர்க்கும்,வானின் று-மழையையின்றி, ஒழுக்கமையாது - ஒழுக்கம் நிரம்பாது என்று பொ ருள் கூறுவாரு முண்டு. ஒழுக்கம்—வருணாசிரம தருமத்திற் கேற்றவாறு நடத்தல்.*

யின் எத்திறத்தார்க்கும் மழையையின்றி யொழுக்கம் நிரம்பாதெனவுரைப் பாருமுளர்.

இவைமூன்று பாட்டானும் மழை அறம் பொருளின்பங்கள் நடத்தற் கேதுவாதல் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). யார்யார்க்கும்-எவ்வகை மேம்பாட்டினை யுடையோர்க்கும், நீர்-நீரை, இன்று - இல்லாமல், உலகு - உலகியலானது, அமையாதெனின்-பொருந்தாதாயின், ஒழுக்கு-(அந்நீர்நடுவேநீங்காது செல்லும்) செலவும், வான் - மழையை, இன்று - இல்லாமல், அமையாது-பொருந்தாது, (எ-று).

இம்மைப்பயனு யனுபவிக்கப்படுவன வாதலின் பொருளின்பங்களை உலகியல் என்றார். நடுவே நீங்காதுசெல்லுதல் எக்காலங்களிலும் எவ்விடங்களிலும் நீருண்டாயிருத்தல். நீரில்லாவிடின் உலகிய லாகிய பொருளின்பங்கள் பொருந்தாவென்பது யாவரானுந் துணிந் தறியப் பட்டிருத்தலின், அதுபோல நீரினொழுக்கமும் மழையின்றாயின் பொருந்தாமை துணிந் தறியப்படுமென்பார் 'நீரின்றமையா துலகெனின்' என்றார்.

இவை மூன்று பாட்டாலும் மழை அறம் பொரு ளின்பங்கள் நடைபெறுவதற்குத் துணைக்காரணமாதல் சொல்லப்பட்டது.

(க-து). உலகியல் நீரில்லாமலும் அந்நீரொழுக்கம் மழையில்லாமலும் பொருந்தாவென்பது.

10. If it be said that the duties of life cannot be discharged by any person without water, so without rain there cannot be the flowing of water.

## மூன்றாம் அதிகாரம்.

## நீத்தார்பெருமை - *The greatness of ascetics.*

பரி.—அஃதாவது முற்றத்துறந்த * முனிவரது பெருமைகூறுதல். அவ்வற முதற்பொருள்களை உலகிற் குள்ளவா றுணர்த்துவார் அவராகலின் இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது (யானெனதென்னு மபிமானத்தை) முற்றும் விட்ட முனிவரது பெருமையைச் சொல்லுதலாம். (வான்சிறப்பிற்கூறிய) அவ்வறம் பொரு ளின்பமாகிய பொருள்களை உலகத்தார்க்கு உள்ளவாறு அறிவிப்பவர் அம்முனிவராதலால் இந்நீத்தார் பெருமை வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

* இறைவனை மனனஞ் (தியானஞ்) செய்பவர் முனிவரெனப்படுவர்.

க. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

பரி.—(இ-ள்). தமக்குரிய வொழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தாரது பெருமையை விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிதென விரும்பும் நூல்களது துணிவு, (எ-று).

*தமக்குரிய வொழுக்கத்தின் கண்ணே நின்று துறத்தலாவது:— † தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய வொழுக்கங்களில் வழுவா தொழுக அறம்வளரும், அறம்வளரப் பாவந்தேயும், பாவந்தேய அறியாமை நீங்கும், அறியாமை நீங்க ‡ நித்த ¶ அநித்தங்களது வேறுபாடுணர்வும் அழிதன் மாலைய வாய இம்மை மறுமை யின்பங்களின் உவர்ப்பும் பிறவித் துன்பங்களுந் தோன்றும், அவைதோன்ற * வீட்டின்கண் ஆசையுண்டாம், அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய § யோகமுயற்சியுண்டாம், அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும்; ஆகலான், இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்துவிடுதலெனக் கொள்க. பனுவலெனப் பொதுப்படக் கூறியவதனான், †† ஒன்றையொன் றொவ்வாத சமய நூல்களெல்லாவற்றிற்கும் இஃதொத்த துணிவென்பது பெற்றாம். ‡‡ செய்தாரது துணிவு பனுவன்மே லேற்றப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *பனுவல் - நூல்களது, துணிவு - நிச்சயமானது, ஒழுக்கத்து - (தமக்குரிய) வொழுக்கத்திலே (நின்று), நீத்தார் - துறந்தவரது, பெருமை - மகிமையை, விழுப்பத்து-சிறந்த பொருள்கள் பலவற்றுள்ளும், வேண்டும் - (இதுவேசிறந்த பொருளென்று) விரும்பும், (எ-று).*

---

† *இவ்வடிக்குச் சூதசங்கிதை பிரசாதக் கிரமத்திற் கூறிய வடிக்கிற் கிணக்கமாயிருத்தலறிக.*

‡ *அழிவுபாட் டபாவத்திற் கெதிர்மறையாகாதது நித்தமெனப்படும். அஃதாவது நாசமின்றி யிருப்பதென்பது.*

¶ *அழிவுபாட் டபாவத்திற் கெதிர்மறையாவது அநித்தமெனப்படும். அஃதாவது நாசத்தை யடைவதாயிருப்பதென்பது.*

* *இது முமுட்சுத்துவ மெனப்படும்.*

§ *ஒரிலட்சியத்தில் (குறியில்) வியாபாரமில்லாது மனம் லயப்பட்டிருத்தல் யோகமெனப்படும்.*

†† *ஒன்றற்கொன்று சிறப்பியலில் மாறுபட்டிருத்தல்பற்றி 'ஒன்றையொன்றொவ்வாத சமய நூல்கள்' என்று கூறப்பட்டது.*

‡‡ *இது கருத்தாவின் தொழிற்பண்பு காரியத்தின்மே லாய உபசார வழக்கு.*

தமக்குரிய வொழுக்கத்திலே நின்று துறத்தலாவது:—தத்தமது சாதிக்கும் ஆசிரமத்திற்கும் உரிய ஒழுக்கங்களில் நின்றுதவறுது நடக்கப் புண்ணியம்வளரும், புண்ணியம்வளரப் பாவங்குறையும்,பாவங் குறைய அறியாமை நீங்கும், அறியாமை நீங்க, இது நித்தியம் இஃது அநித்தியம் என்னும் பகுத்தறிவும் அழியுந் தன்மையவான இம்மை மறுமையின்பங்களில் வெறுப்பும் பிறவித்துன்பங்களும் தோன்றும், அவை தோன்ற மோக்ஷத்தில் விருப்பமுண்டாம், அஃது உண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய(பொருளின்பங்களைத் தேடுதற்குரிய)வீண் முயற்சிகளெல்லாம் நீங்கி மோக்ஷத்திற்கு நிமித்தகாரணமாகிய யோகமுயற்சி உண்டாம், அஃது உண்டாகத் தத்துவஞானம் பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய நானென்பதுமாகிய மமகாரமும் அகங்காரமும் நீங்கும்; ஆதலின், இவ்விரண்டு பற்றுக்களையும் இம்முறையே வெறுத்து விடுதலெனக் கொள்க. பனுவலென்று பொதுவாகச் சொல்லியதால் ஒன்றையொன் றொத்திராத மதநூல்களெல்லாவற்றிற்கும் இஃதொத்த நிச்சயமாமென்பது பெறப்பட்டது. நூல்செய்தவரது நிச்சயம் நூலின்மேல் ஏற்றப்பட்டது.

(க-து). துறந்தவர் மகிமையே சிறப்புடையபொருள்கள் பலவற்றுள்ளும் மேலானதென்பது நூல்களின் நிச்சயமா மென்பது.

1. The clear sense of every treatise desires beyond all other excellence, the greatness of those who, while abiding in the rule of conduct peculiar to their state have forsaken all desire.

உ. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

பரி.—(இ-ள்). இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையை இவ்வளவென்றெண்ணாற்கூறி யறியலுறின், அளவு படாமையான், இவ் வுலகத்துப் பிறந் திறந்தாரை யெண்ணி யித்துணையரென வறிய லுற்றாற்போலும், (எ - று).

முடியாதென்பதாம். கொண்டாலென்னும் வினையெச்சம் கொண்டெனத் திரிந்து நின்றது.

தெளி.—(இ-ள்). துறந்தார் (யானெனதென்னு மிருவகைப் பற்றினையும்) விட்டவரது, பெருமை - மகிமையை, துணைக்கூறின் - (இவ்வளவென்று) எண்ணிக்கையினாற் சொல்லி அறியப்புகுந்தால் (அளவுபடாமையால்), வையத்து - இவ்வுலகத்தில், இறந்தாரை-(பிறந்து) இறந்தவரை, எண்ணிக்கொண்டற்று - எண்ணி (இத்தனைபேர்களென்று) அறியப் புகுந்தாற்போலும், (எ - று).

எண்ணியறிதல் முடியாதென்பதாம். கொண்டாலென்னும் செயி னென்னும் வாய்பாட்டு வினையெச்சம் கொண்டென்னுஞ் செய்தெனெச்ச மாகத் திரிந்து நின்றது.

(க - து). துறந்தவரது பெருமைக் களவில்லை யென்பது.

2. To describe the measure of the greatness of those who have forsaken the two - fold desires, lis like counting those who have died in this world.

---

ங. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

பரி.—(இ-ள்). பிறப்பு வீடென்னும் இரண்டனது துன்பவின்பக் கூறுபாடுகளை யாராய்ந்தறிந்து அப்பிறப்பறுத்தற்கு இப்பிறப்பின்கண் துறவறத்தைப் பூண்டாரதுபெருமையே உலகின்கணுயர்ந்தது,(எ-று).

* "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப் போல † இருமை யென்ப தீண் டெண்ணின்க ணின்றது. பிரிநிலையேகா ரம் விகாரத்தாற் றொக்கது. இதனால் திகிரியுருட்டி யுலகமுழுதாண்ட அரசர் முதலாயினார் பெருமை பிரிக்கப்பட்டது.

இவை மூன்று பாட்டானும் நீத்தார் பெருமையே எல்லாப் பெரு மையினு மிக்கதென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). இருமை - (பிறப்புவீடென்னும்) இரண்டனது, வகை - (துன்பவின்பக்) கூறுபாடுகளை, தெரிந்து-ஆராய்ந்தறிந்து (அப்பிற ப்பை நீக்குதற்கு), ஈண்டு-இப்பிறப்பின்கண், அறம் - துறவறத்தை, பூண் டார் - கொண்டவரது, பெருமை - மகிமையே, உலகு - உலகத்தில், பிற ங்கிற்று - உயர்ந்தது, (எ - று).

* பரிபாடல். ஆராயப்பட்ட மாட்சிமையுடைய இயலிசை நாடக மென்னு மூன்று தமிழையுமுடைய தெற்கின்கணுள்ளவழகிய பொதிய வெற்பன் என்ப திதன்பொருள். மும்மைத்தமிழ் என்று கொள்க.

† மும்மைத்தமிழ் என்பதில் மும்மையென்பது மூன்றன் தன்மை யையுணர்த்தாமல் மூன்றென்னு மெண்ணை யுணர்த்தினாற் போல இரு மை யென்பது இரண்டன் தன்மையை யுணர்த்தாது இரண்டென்னு மெண்ணை யுணர்த்தி நின்றதென்க. இவ்வாறு வருவது பகுதிப்பொருள் விகுதியென்னும் சுவார்த்தபாவதத்திதப் பிரத்தியய மெனப்படும். அஃ தாவது சொன்னிலையாற் பகுபதமாயும் பொருணிலையாற் பகாப்பதமாயு மிருப்பதாம்.

இருமையென்பதிங் கிரண்டென்னும் பொருளில்வந்தது. பெருமையே யென்னும் பிரிநிலை யேகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. இவ்வேகாரத்தால் ஆக்ஞாசக்கரத்தைச்செலுத்தி உலக முற்று மாண்டவரசர் முதலானவருடைய பெருமை பிரிக்கப்பட்டது.

இவை மூன்று பாட்டாலும் துறந்தவரது பெருமையே எல்லாப் பெருமைகளினும் உயர்ந்ததென்பது சொல்லப்பட்டது.

(க - து). துறவறத்தைக் கொண்டவரது பெருமையே உலகின்கண் மேம்பாடுடைய தென்பது.

3. The greatness of those who have discovered the properties of both states of being, and clothed themselves in virtue, shines forth in this world (beyond all others).

ச. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

பரி.— (இ - ள்). திண்மை யென்னுந் தோட்டியாற் § பொறிகளாகிய யானையைந்தனையும் தத்தம் ‡ புலன்கண்மேற் செல்லாமற் காப்பான், எல்லாநிலத்தினு மிக்கதென்று சொல்லப்படும் வீட்டுநிலத்திற்கோர் ¶ வித்தாம், (எ - று).

§ பொறிகள் - இந்திரியங்கள். அவை சுரோத்திரம் (காது), தொக்கு (உடம்பு), சட்சு (கண்), சிங்குவை (நாக்கு), ஆக்கிராணம் (மூக்கு) ஆம்.

‡ புலன்கள் - விஷயங்கள். அவை சத்தம் (ஒலி), பரிசம் (ஊறு), ரூபம் (உருவம்), ரசம் (சுவை), கந்தம் (நாற்றம்) ஆம்.

¶ அறிவினால் இந்திரியங்களை விஷயங்களிற் செல்லாவண்ணங் காப்பவன் மோட்சநிலத்தில் முளைக்குமோர் வித்தென் றுருவகப் படுத்தினமையின் இஃதேகதேசவுருவகவணியாம். "உரனென்னும்-காப்பா"னென்றது போகவிச்சையற்றுப் பிரணவோபாசனை செய்யுஞ் சந்நியாசியை. இவன் மறுமையில் பிரம லோகத்தையடைந்து பிரமனுக்குச் சமமாகப் போகத்தையனுபவித்து அவ்வுலகத்திற்கு நாசம்வரும்போது தத்துவஞானமுண்டாகப்பெற்று முத்தியடைவனென்பது சாஸ்திர நிச்சயமாகையால், 'வித்து'என்று கூறப்பட்டான். இஃது"அங்குநாதனே முன்னிற்கி னணுகுவர்நற்றூளே." என்று சிவஞானசித்தியார் கூறுவதாலு முணரப்படும்.

¶ இஃதேகதேச வுருவகம். திண்மை யீண்டறிவின்மேற்று. அந்நிலத்திற்சென்று மூளைத்தலின் 'வித்து' என்றார். ஈண்டுப் பிறந்திறந்து வரும் மகனல்ல னென்பதாம்.

தெளி.—(இ-ள்). உரனென்னுந் தோட்டியான் - அறிவென்னு மங்குசத்தினால், ஓரைந்தும் - (பொறிகளாகிய யானைகள்) ஐந்தையும், காப்பான் - (தத்தம் புலன்களின்மீது செல்லாமற்) காப்பவன், வரனென்னும் வைப்பிற்கு - (எல்லா நிலங்களிலும்) மேலானதென்று சொல்லப்படுகிற மோக்ஷநிலத்திற்கு, ஓர்வித்து-ஒருவிதையாவான், (எ - று).

இக்குறள் ஏகதேச வுருவகவணி. திண்மையென்பதிங்கு அறிவென்னும் பொருளின்மேலாயது. அம் மோக்ஷநிலத்திற் போய் மூளைத்தலின் 'வித்து' என்றார். இவ்வுலகத்திற் பிறந்தும் இறந்தும் வரும் மனிதனல்ல னென்பதாம்.

(க-து). இந்திரியங்களை விஷயங்களிற் செல்லாவாறு தடுப்பவன் முத்தியடைதற் குரியவனாவனென்பது.

4. He who guides his five senses by the hook of wisdom will be a seed in the world of excellence.

ரு. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

பரி.—(இ - ள்). புலன்களிற்செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கினானது வலிக்கு அகன்ற வானத் துள்ளா ரிறைவனாகிய இந்திரனே அமையுஞ் சான்று, (எ - று).

ஐந்து மென்னு முற்றும்மையும் ஆற்றற்கென்னு நான்கனுருபுஞ் செய்யுள் விகாரத்தாற் றொக்கன. $ தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று,

¶ உரனென்னு மறிவைத் தோட்டியாக வுருவகப்படுத்தினவர் 'ஓரைந்தும்' என்று எண்ணலளவை யாகுபெயராகக் கூறிய இந்திரிய மைந்தையும் யானைகளென்று உருவகப்படுத்தாமையின், இச்செய்யுள் ஏகதேச வுருவக மாயிற்றென்க.

$ இந்திரிய நிக்கிரகஞ் செய்யாத விந்திரன் இந்திரியநிக்கிரகஞ் செய்துள்ள கௌதம முனிவரது மனைவியாகிய அகலிகையைக் கரவிற்புணர்ந்து, அக்கௌதமரால் "ஆயிர மாதர்க் குள்ள வறிகுறி" தனதுடலிலுண்டாகச் சாபமடைந்த கதையை இராமாயணம் பாலகாண்டம் அகலிகைப்படலத்திற்காண்க. "எனைத்துணைய ராயினு மென்னாம்" என்னுங் குறளின் விசேடவுரையில் "இந்திரன்போல எல்லாப்பெருமையு மிழந்து சிறுமையெய்தல் நோக்கி 'என்னாம்' என்றார்" என்றுகூறி யிருத்தலு மிங்கறியத்தக்கதாம்.

அவித்தவனதாற்ற லுணர்த்திஞ் ஞகலின் 'இந்திரனே சாலுங்கரி' என்ருர்.

தெளி.—(இ - ள்). ஐந்தவித்தான் - (சப்தாதிவிடயங்களிற் செல்லுகின்ற) ஐந்தாசைகளையுமொழித்தவனது, ஆற்றல் - வல்லமைக்கு, அகல்விசும்புளார் - அகன்றபொன்னுலகத்துள்ள தேவர்க்கு, கோமான் - அரசஞகிய, இந்திரனே - தேவேந்திரனே, சாலுங்கரி - போதுமான சாட்சியாம், (எ - று).

ஐந்தும் என்னு மிணைத்தென் றறிபொருளில்வந்த முற்றும்மையும் ஆற்றற்கு என்னும் நான்காம் வேற்றுமையுருபும் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றன. இந்திரன் தான் ஐநதாசைகளையும் ஒழிக்காமல் சாபமடைந்துநின்று அவ்வாசைகளை ஒழித்தவஞகிய கௌதம முனிவனது வல்லமையைத் தெரிவித்தாஞதலின் 'இந்திரனே சாலுங்கரி' என்ருர்.

(க - து). இந்திரிய நிக்கிரகஞ் செய்தவர்க்கன்றி யேனையோர்க்குச் சாபாநுக்கிரக வல்லமை யுண்டாகாது என்பது.

5. Indra, the king of the inhabitants of the spacious heaven, is himself a sufficient proof of the strength of him who has subdued his five senses.

---

சு. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

பரி.—(இ - ள்). ஒத்த பிறப்பினராய மக்களுள்செய்தற்கெளியவற்றைச்செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர், அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்ய மாட்டாதார் சிறியர், (எ-று).

செயற் கெளியவாவன:—மனம்வேண்டியவாறே அதனைப்பொறிவழிகளாற் புலன்களிற்செலுத்தலும் வெஃகலும் வெருடலுமுதலாயின. செயற்கரியவாவன:—இயம நியம முதலாய † எண்வகை யோக வுறுப்புக்கள்.

---

† எண்வகை யோகவுறுப்புக்கள் - யோகத்திற்குரிய வெண்வகை யங்கங்கள். அவை இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி யென்பன. இவற்றுள்:—

இயமம் - கொல்லாமை, மெய்ம்மைகூறல், திருடாமை, பிறர்பொருட்கண் ஆசையில்லாமை, இநதிரியங்களை யடக்கலென்னு மைந்துமாம்.

நியமம்-தவம், சௌசம் (உடலைநீரிஞலும் மனதைச் சத்தியத்திஞலும் தூய்மை யாக்கல்), தத்துவநூலாராய்ச்சி, பெற்றதுகொண்டு மகிழ்தல், தெய்வவழிபாடென்னு மைந்துமாம்.

* நீர்பலகால் மூழ்கல் முதலாய நாலிருவழக்கிற் றாபதபக்கமென் பாருமுளர். அவை நியமத்துள்ளே யடங்கலின், நீத்தாரது பெருமைக் கேலாமை யறிக.

ஆசனம் (இருப்பு):—பத்திரம் (பீஜத்தின் கீழ்ப்பாக நரம்பினிரு பக்கங்களிலும் இருகாற் பரட்டையுஞ் சேர்த்து அவ்விரண்டு காலையும் இரண்டு கைகளாலு மிறுகப்பிடித்து அசையாது இருத்தல்), கோமுகம் [சகன பக்கத்தி (பிருஷ்டபாகத்தி) லிருகாற் பரட்டையும் மாறவைத்து அவ்விருகாற் பெருவிரல்களைக் கரங்களால் பிடித்திருத்தல்],பங்கயம் (இரு தொடைமேலும் இரண்டுள்ளங்காலையுமாறித் தோன்றவைத்தல்), கேசரி (பீஜத்தின் கீழ்ப்பாக நரம்பி னிருபக்கங்களிலும் இரண்டு பரடுகளை யுஞ்சேர்த்து முழந்தாளின் மீது இரண்டு கைகளையும் நன்றாய்ப் பொருந் தும்படிவைத்து அக்கைகளின் விரல்களைச் செவ்வையாய் விரித்து வாய் திறந்து நாக்கை நீட்டிக்கொண்டு மூக்கு நுனியைப் பார்த்திருத்தல்), சுவஸ் திகம் (தொடைக்கும் முழங்காற்கு மிடையே யிரண்டுள்ளங் காலையுஞ் செ லுத்தி யிறுமாந்திருத்தல்) என்னு மைந்துமாம்.

பிராணாயாமம்-இரேசக (வாயுவை மூக்கின் வலது துவாரவாயிலாக விடு தல்), பூரக (வாயுவை மூக்கின் இடது துவார வாயிலாக வுள்ளுக்கிழுத் தல்), கும்பகம்(வாயுவை யுள்ளேயடக்குதல்) செய்தலாம்.

பிரத்தியாகாரம் - விஷயங்களில் செல்லாவண்ணம் சகல இந்திரியங் களையுந் தடுத்து உண்ணோக்கியிருத்தலாம்.

தாரணை - தைலதாரைபோன்று இடைவிடாது அந்தக்கரணம் ஒரு வகைப்பட் டிருத்தலாம்.

தியானம்-கடவுளிடத்துச் செல்லும் அநதக்கரணத்தின் பிரவாகமாம்.

சமாதி - உண்டாயிருக்கும் சம்ஸ்காரங (வாசனை) களின் ஒழிவும் அடங்கியிருக்கும் சம்ஸ்காரங்களின் வெளிப்பாடு முண்டாகி யந்தக்கரண மொருமுகமாய்ப் பரிணமித்திருத்தலாம்.

இயமம் பத்துவகைப்படு மென்பதும், நியமம் பத்துவகைப்படுமென் பதும், ஆசனம் எண்பத்துநான்கு வகைப்படு மென்பதும், பிராணாயாம மிருவகைப்படுமென்பதும் எண்வகைப்படுமென்பதும், பிறவுமாகிய இவற் றின் விரிவை அடயோகப் பிரதீபிகை முதலியவற்றிற் காண்க.

* 'நீர் பலகால் மூழ்கல் முதலாய நாலிருவழக்கிற்றாபதபக்கம்' என்ப தற்கு நீரின்கண்பலமுறைமூழ்கலும், வெறுநிலத்துறங்கலும், மான்றோலை யாடையாகத்தரித்தலும், சடைதரித்தலும், எரியோம்புதலும், ஊரடை யாமையும், கானகத்துண்டலும், கடவுளைப்போற்றலுமென்னும் எண்வகை மார்க்கத்துத் தவம்புரியுங் கூறு என்று கொள்க. இது

"நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாய்ச், சோர்சடை தாழச் சுடரோம்பி-யூரடையார், கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம் பல், வானகத் துய்க்கும் வழி" என்னும் புறப்பொருள் வெண்பாமாலைச்

தேளி.—(இ-ள்). (ஒத்தபிறப்பினராகிய மனிதர்களுள்) பெரியர் - பெரியோர், செயற்கரிய - (செய்வதற் கெளிமையானவற்றைச் செய்யாமல்) செய்வதற்கருமையானவற்றை, செய்வார்-செய்வர், சிறியர்-சிறியோர், செயற்கரிய—(அவ்வெளிமையான வற்றைச் செய்து) செய்வதற் கருமையானவற்றை, செய்கலாதார் - செய்யமாட்டாதார், (எ-று).

செய்வதற் கெளிமையாவன:—மனம்விரும்பியபடியே அதனை (கண் முதலிய) இந்திரிய வாயிலாக விடயங்களிற் செலுத்தலும் விரும்புதலும் கோபித்தலு முதலாயினவாம். செய்வதற் கருமையாவன:—இயமம் நியம முதலான எண்வகை யோகாங்கங்களாம்.

(க-து.) பெரியோர் செய்வதற் கரியவற்றையும் சிறியோர் செய்வதற் கெளியவற்யையும் செய்வார்களென்பது.

6. The great will do those things which it is dfficult to do; the mean cannot do those things which it is difficult to do.

எ. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

பரி.—(இ-ள்). சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமுமென்று சொல்லப்பட்ட தன்மாத்திரைகளைந்தனது கூறு பாட்டையும் ஆராய்வா னறிவின் கண்ணதே உலகம், (எ-று).

† அவற்றின் கூறுபாடாவன:—‡ பூதங்கட்கு முதலாகிய அவைதாமைந்தும், அவற்றின்கட் டோன்றிய அப்பூதங்களைந்தும், அவற்றின்கூறுகிய $ ஞானேந்திரியங்களைந்தும், ¶ கன்மேந்திரியங்களைந்தும் ஆக விரு

---

செய்யுளானும், தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியலில் "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னும் சூத்திரத்திலுள்ள "நாலிருவழக்கிற் றாபத பக்கமும்" என்றவடிக்குள்ள வுரையில் நச்சினார்க்கினியர் "நீஇ ராட னிலக்கிடை கோட, றோஒ லுடுத்த றெல்லெரி யோம்ப, லூரடை யாமை யுறுசடை புனைதல், காட்டி லுணவு கடவுட் பூசை, யேற்ற தவத்தி னியல்பென மொழிப." என்று காட்டிய மேற்கோட் செய்யுளினாலும் விளக்கமாமென்க.

† அவற்றின்:— சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றங்களின்.

‡ பூதங்கள்:—பிருதிவி (மண்), அப்பு (நீர்), தேயு (அக்கினி), வாயு (காற்று), ஆகாயம் (வெளி).

$ ஞானேந்திரியம் —அறிகருவி. அவை சுரோத்திரம் (காது), தொக்கு (உடம்பு), சட்சு (கண்), சிங்ஙுவை (நாக்கு), ஆக்கிராணம் - (மூக்கு).

¶ கன்மேந்திரியம்.—தொழிற்கருவி. அவை வாக்கு (வாய்), பாதம் (கால்), பாணி (கை), பாயுரு (குதம்), உபத்தம் (குறி).

பதுமாம். 'வகைதெரிவான் கட்டு' என ‖ வுடம்போடு புணர்த்ததனுல் தெரிகின்ற புருடனும், அவன்தெரிதற் கருவியாகிய † மான அகங்கார மனங்களும் அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் பெற்றும். தத்துவ மிருபத்தைந்தனையுந் தெரிதலாவது மூலப்பகுதியொன்றிற் ‡ ரேன்றிய தன்மையிற் பகுதியே யாவதல்லது விகுதியாகாதெனவும், அதன்கட்டோ ன்றிய மானும் அதன்கட் டோன்றிய அகங்காரமும் அதன்கட் டோன் றிய $ தன்மாத்திரைகளு மாகிய வெழுந் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும் தங்கட்டோன்றுவன வற்றை நோக்கப் பகுதி யாதலு முடையவெனவும், அவற்றின்கட் டோன்றிய மனமும் ஞானேந் திரியங்களும் கன்மேந்திரியங்களும் பூதங்களுமாகிய பதினுறும் தங் கட் டோன்றுவன வின்மையின் விகுதியே யாவதல்லது பகுதியாகா வெனவும், புருடன் தாளென்றிற் ரேன்றுமையானுந் தன்கட் டோன் றுவன வின்மையானும் இரண்டும் அல்லனெனவுஞ் †† சாங்கிய நூலு ளோதியவாற்று ணராய்தல். இவ்விருபத்தைந்து மல்ல துலகெனப் பிறி

---

‖ உடம்பொடு புணர்த்தலென்னுமுத்தியை வடநூலார் நிபாதம் என் பர். அஃதாவது கூறவேண்டிய அருத்தத்தை வெளிப்படையாகக்கூறுது தான் கூறுவதன் குறிப்பினுல் விளங்கச்செய்தல். இவ்வுத்தியை நச்சினுர்க் கினியர் ஒருதலை மொழிதல் எனனும் உத்திக்கு இனமாகக் கொண்டு "உடம்பொடு புணர்த்துச் சொல்லுவன அதற்கு இனமெனப்படும்; என் னை? விதியல்லாதது விதிபோல மற்றொருவழிச சேறலின் " என்றுர். ஈண்டு 'சுவையொளி யூறேசை நாற்றமென் றைந்தின் வகை' என்ற தனுல் சுவைமுதலின வாகிய தன்மாத்திரைகளும், அவற்றின் காரியமா கிய பிருதிவிமுதலிய பூதங்களும், அத்தன்மாத்திரைகளின் கூறுபாடாகிய ஞானேந்திரியங்களும் கருமேந்திரியங்களும் ஆகிய இருபதுதத்துவங்களை யுங்கூறிஞற் போன்று புருஷனும் அவன் தெரிதற்குக்கருவியாகிய மான் அகங்காரமனங்களும், அந்தமான் முதலானவற்றிற்குக் காரணமாகிய மூல ப் பிரகிருதியும் ஆகிய ஐந்தையும் வெளிப்படையாகக் கூறுது, 'தெரிவான்' எனக் கூறியதன் குறிப்பினுல் பெறவைத்தமையினு லுடம்பொடு புணர்த் தலாயிற்று. 'சுவை......வகை' என்னுமிருபதையு முடம்பாக நிறுத்தி,'தெ ரிவான்' என்னுங் குறிப்பினுல் அவற்ருேடு புருடன்முதலிய வைந்தையும் புணர்த்தினமையின், உடம்பொடு புணர்த்தலாயிற் றென்பது மொன்று.

† மான்—புத்தி. ‡ தோன்றியதன்மையின்—(தோன்றியது + அன் மையின்) தோன்றிய தல்லாமையினுல். $ தன்மாத்திரைகள்—சூக்கும பூதங்கள். †† சாங்கியம் ஸேசுர சாங்கியம், நிரீசுவர சாங்கியம் என இரு வகைப்படும். இவ்விரண்டனுள், முன்னது பாகவதம் மூன்றுங்கந்தத்திற் கூறப்படும் கருத்தமரிஷியின் புத்திரரான கபிலராற் சொல்லப்பட்டது; பின்னது மற்றொருகபிலராற் சொல்லப்பட்டது. ஈண்டுக் கூறியது நிரீசு வர சாங்கியமாம். இதன் தத்துவம் (பாதார்த்தம்) 25.

தொன் றில்லையென வுலகின தன்மையறிதலின், அஃது அவனறிவின்கண்ணதாயிற்று. இவை நான்குபாட்டானும் பெருமைக்கேது ஐந்தவித்தலும் யோகப் பயிற்சியுந் தத்துவ வுணர்வுமென்பது கூறப்பட்டது.

---

அவையாவன:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) பிரதானம் | ... 1. | (6) ஞானேந்திரியம் | ... 5. |
| (2) மகத்தத்துவம் | ... 1. | (7) கன்மேந்திரியம் | ... 5. |
| (3) அகங்காரம் | ... 1. | (8) மனம் | ... 1. |
| (4) தன்மாத்திரை | ... 5. | (9) புருடன் | ... 1. |
| (5) ஸ்தூலபூதம் | ... 5. | | ஆக—25. |

இவற்றுள்:—பிரதானம் என்பது பிரகிருதியாம். பிரகிருதி என்பது மூதற்காரணமாம். இது மகத்தத்துவத்திற்கு மூதற்காரணமா யிருப்பதால் பிரகிருதி என்றாயிற்று. இஃது அநாதியாயிருப்பதால் விகிருதியாவதின்று. விகிருதி என்பதுகாரியம். இப்பிரகிருதி மூலம் (சித்தம்), புரியட்டகம் (சத்தாதி தன்மாத்திரைகளைந்தும் மனம் புத்தி அகங்காரமும் சேர்ந்தது), விகிருதி (ஸ்தூலதேகமும் பிரபஞ்சமும்) என மூன்றாகிப் பரம்,சூக்குமம், ஸ்தூலமென நிற்கும் மகத்தத்துவம், அகங்காரம், பஞ்சதன் மாத்திரைகளாகிய ஏழும் பிரகிருதிகளாயும் விகிருதிகளாயு மிருக்கின்றன. எங்ஙனமெனின், முன்னுள்ளது பின்னுள்ளதற்குப் பிரகிருதியாயும், பின்னுள்ளது முன்னுள்ளதற்கு விகிருதியாயும் இருப்பதாலென்க. தன்மாத்திரைகளும் (ஸ்தூல) பஞ்சபூதங்களுக்குப் பிரகிருதிகளா யிருக்கின்றன. இவ்வாறு மேற்சொன்ன மகதாதி ஏழு பிரகிருதிகளும் விகிருதிகளாயிருக்கின்றன. பஞ்சபூதங்கள், தசேந்திரியங்கள்(ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள்) மனம்ஆகிய இந்த 16-ம் விகிருதிகளேயாம்; பிரகிருதிகளாவதில்லை. இம்மதப்படி மான் (மகத்தத்துவம்) எனினும் புத்தி எனினும் ஒக்கும். அப்படியே புருடன், ஆத்துமா என்பனவுமாம். புருடன் அல்லது ஆத்துமா பல; ஒவ்வொன்றும் வியாபகமே. பிரகிருதியும் வியாபகமே. உலகம் சத்தியம். இதற்குக்கர்த்தா ஒருவன் இல்லை. புருடன் ஒன்றற்கும் காரணமாகாமையின் பிரகிருதியன்று;காரியமாகாமையின் விகிருதியுமன்று. ஆதலா லவன் அசங்கனுவன். மூலமாதி மூன்று வகையாகப் பிரகிருதி பேதிக்க அதனைப் புருடன் தனதெனக்கொண்டு நிற்பன். முடவனுங் குருடனுங் கூடியபோது (குருடனதுதோளில் முடவன் ஏறியபோது) நடத்தலென்னுந் தொழிலுண்டாமாறுபோன்று முக்குணவடிவப் பிரகிருதியும் அசங்க உதாசீனனுன புருடனும் கூடியபோது வியவகார முண்டாகும். சுதந்தரமான பிரகிருதியே ஜகத்திற்குக் காரணமாயிருந்து புருஷனுடைய போகமோக்ஷங்களின் பொருட்டுப் பிரவர்த்திக்கின்றது; புருஷன் பிரவர்த்திப்பதில்லை. பிரகிருதியின் விஷயவடிவப் பரிணமத்தால் புருஷனுக்குப் போகம் (இன்பத் துன்பங்கள் புலப்படத் தோன்றல்) உண்டாகின்றது. புத்திவாயிலாக விவேகவடிவப் பிரகிருதியின் பரிணமத்தால் மோக்ஷமுண்டாகின்றது. புரு

தெளி.—(இ-ள்).உலகு - உலகமானது, சுவையொளி யூறோசை நாற்றம் - சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமும், என்று - என்று சொல்லப்பட்ட, ஐந்தின் - பஞ்ச தன்மாத்திரைகளது, வகை - கூறுபாட்டையும், தெரிவான்கட்டே - ஆராய்பவ னறிவினிடத்ததே, (எ-று).

அப்பஞ்சதன்மாத்திரை (சூக்கும பூதங்)களது கூறுபாடாவன:—(ஸ்தூல)பூதங்களுக்குக் காரணமாகிய அப்பஞ்சதன்மாத்திரைகளைந்தும், அவற்றின்கண் தோன்றிய அப்பூதங்களைந்தும், அப்பஞ்ச தன்மாத்திரைகளின் கூறாகிய ஞானேந்திரியங்களைந்தும்,கன்மேந்திரியங்களைந்தும் ஆகவிருபதுமாம். 'வகைதெரிவான்கட்டு' என்று உடம்பொடு புணர்த்திக்கூறியதினால் தெரிகின்ற புருடனும் அவன் தெரிதற்குக் காரணமாகிய மான் அகங்கார மனங்களும் அவற்றிற்குக் காரணமாகிய மூலப்பகுதியும் பெற்றனம். தத்துவ மிருபத் தைந்தையு மாராய்தலாவது: மூலப்பகுதி யொன்றினின்றுமுண்டானதன்றாகலின் அது பகுதியே யாவதல்லாமல் விகுதியாகாதென்றும், அம்மூலப் பகுதியிலுண்டான மகத்தத்துவமும் அம்மகத் தத்துவத்திலுண்டான அகங்காரமும், அவ்வகங்காரத்திலுண்டான (பஞ்ச)தன் மாத்திரைகளுமாகிய ஏழும் தத்தமக்குக் காரணமா யிருப்பதைநோக்கவிகுதியாவ

டன் அசங்கனு யிருப்பதால் அவனிடத்தில்போக மோக்ஷங்கள் பொருந்துதலின்று; ஆயினும், ஞானம், சுகம், துக்கம், இராகம், துவேஷம் முதலியன புத்தியின் பரிணமமா யிருக்கின்றன. இந்தப் புத்திக்கு ஆத்ம விவேகமில்லை; ஆனால், அவிவேகமிருக்கின்றது. அதனால், பந்தமோக்ஷங்கள் ஆத்மாவின்கண் ஆரோபிக்க (கற்பிக்க)ப் படுகின்றனவே யன்றி, பரமார்த்த (உண்மை) மாக இல்லை; அவிவேகத்தாற் சித்திக்கிற போகத்தால் ஆத்மா போக்தாவெனச்-சொல்லப்படுகிறது. பரமார்த்தமாக ஆத்மா போக்தாவன்று; புத்தியே போக்தா. புத்தி ஆத்துமாவிற்கு வேறு. பிரகிருதி யித்தன்மைய தென்றும் புருஷன் இத்தன்மையனென்றும வெவ்வேறாகப் பகுத்துணர்ந்து பிரகிருதியை யொழித்து வேறாதலே முத்தியிலை என்பது.

இந்திரியங்களும் மனமும் அகங்காரத்தின் காரியமாமென்பதிங் கறியத்தக்கது. இதனது விரிவைச் சர்வதரிசன சங்கிரகத்தின் சாங்கிய தரிசனத்திற் காண்க.

இச்சாங்கிய சூத்திரத்தைக் கபிலர் ஆறத்தியாயங்களாக்கி, முதலத்தியாயத்தில் விஷயநிரூபணஞ்செய்து, இரண்டாவதத்தியாயத்தில் மகதாதி தத்துவங்கள் பிரதானத்தின் காரியங்களென்றுகாட்டி, மூன்றாவதத்தியாயத்தில் விஷயத்தினின்றும் வைராக்கியமடையும் வழியைவிளக்கி, நான்காவ தத்தியாயத்தில் விரக்தர்களுடைய சரித்திரங்களைச்சொல்லி, ஐந்தாவதத்தியாயத்தில் ஆக்ஷேப கண்டனம் பண்ணி, ஆறாவதத்தியாயத்தில் முதலைந்து அத்தியாயங்களிற் கூறியவற்றைச் சுருக்கிமுடித்துள்ளார்.

இதனைப் பரிமேலழகர் ஈண்டு விதந்து கூறியது, இது பதார்த்த விசாரணைக்குத் தக்கதா யிருப்பது பற்றி அவ்விசார மாத்திர மேற்கொண்டென்க.

னும் தம்மிடத் துண்டாவனவற்றை நோக்கப் பகுதியாவது முடையனவெ ன்றும், அவ் வகங்காரத்தி லுண்டாயமனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும், அத் தன்மாத்திரையி லுண்டாய பூதங்களுமாகிய பதி னாறும், தம்மிடத் துண்டாவன வில்லாமையின் விகுதியே யாவதல்லாமல் பகுதியாகா வென்றும், புருடன் தான் ஒன்றினின்று முண்டாகாமையா லும் தன்னிடத்துண்டாவன வில்லாமையாலும் (காரியமாதல் காரணமாத லென்னும்) இரண்டுமுடைய னல்லனென்றும் சாங்கிய சாஸ்திரத்திற் கூறிய வகையா லாராய்தலாம். இவ்விருபத்தைந்து தத்துவமுமல்லாமல் உலகெனப் பிறிதொரு பொருளில்லையென்று உலகினது உண்மையை யறிதலின் அவ்வுலகு அவனது அறிவினிடத்ததாயிற்று.

இவை நான்கு பாட்டாலும் பெருமைக்குக் காரணங்கள் ஐம்பொறி யடக்கலும், யோகாப்பியாசமும் தத்துவ ஞானமும் ஆமென்பது சொல்லப் பட்டது.

(க-து). உலகமானது தத்துவக்கூட்டங்களை யாராய்ந்தறிபவ னது அறிவினிடத்ததா மென்பது.

7. The world is within the knowledge of him who knows the properties of taste, sight, touch, hearing and smell.

---

அ. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
* மறைமொழி காட்டி விடும்.

பரி.—(இ-ள்). நிறைந்த மொழியினை யுடைய துறந்தாரது பெருமையை நிலவுலகத்தின்கண் அவராணையாகச் சொல்லிய மந்திரங்களே ‡ கண்கூடாகக் காட்டும், (எ-று).

நிறைமொழி யென்பது † அருளிற் கூறினும் ¶ வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தேவிடும் மொழி. காட்டுதல்-பயனுணர்த்துதல்.

தெளி.—(இ-ள்). நிறைமொழி- (பயன்) நிறைந்த சொல்லையுடைய, மாந்தர் - முனிவரது, பெருமை - மகிமையை, நிலத்து - நிலவுலகத்தில், மறைமொழி - (அவராணையாகசசொல்லிய) மந்திரங்களே, காட்டிவிடும்- (பிரத்தியக்ஷமாகக்) காட்டும், (எ-று).

---

* மறைமொழி -"புறத்தார்க்குப் புலனாகாமல் (அறியாவாறு) மறைத் துச்சொல்லும் சொற்றொடர்." என்பர் நச்சினார்க்கினியர். இதனால் மறை மொழி மந்திரமாயிற் றென்க. "நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திர மென்ப" என்பதுதொல்காப்பியம்.

‡ கண்கூடு - பிரத்தியட்சம்; அஃதாவது இந்திரியவிஷய சம்பந்தத்தால் தோன்றும் ஞானம்.

† அருளிற்கூறல்-அனுக்கிரகமொழி. ¶ வெகுண்டுகூறல் - சாபமொழி.

பயனிறைந்த சொல்லென்பது அருளினாற் கூறினாலுங் கோபித்துக் கூறினாலும் அந்தவந்தப் பிரயோசனத்தைக் கொடுத்தே விடுகிற சொல். காட்டுதல் - பிரயோசனத்தால் தன்மகிமையை யறிவித்தல்.

(க-து). துறந்தவரது மகிமையை அவரது பயனிறைந்த சொற்களே வெளிப்படையாகக் காட்டுமென்பது.

8. The hidden words (Mantras) of men whose words are full of effect will shew their greatness to the world.

கூ. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

பரி.—(இ-ள்). துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடியின்கணேறிநின்ற முனிவரது வெகுளி தானுள்ள வளவு கணமேயாயினும் வெகுளப்பட்டாரால் றடுத்தலரிது,(எ-று).

§ சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைக் குன்றாக வுருவகஞ்செய்தார். குணம் ‡ சாதியொருமை. || அநாதியாய் வருகின்றவாறு பற்றி ஒரோவழி வெகுளி தோன்றிய பொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் 'கணமேயும்' என்றும், நிறைமொழிமாந்தராகலின் 'காத்தலரிது' எனவும், கூறினார். இவை இரண்டு பாட்டானும் அவாவினை கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) குணமென்னுங்குன்று - (துறவு தத்துவஞானம் ஆசையில்லாமை முதலிய) நற்குணங்களாகிய மலையின்முடியினிடத்து, ஏறி நின்றார் - ஏறிநின்ற முனிவரது, வெகுளி - கோபமானது, கணமேயும் - (தானுள்ளவளவு) க்ஷணகாலமேயாயினும், காத்தல் - (கோபிக்கப்பட்டவரால்) தடுத்தல், அரிது - அரிதாம், (எ-று).

---

§ சலியாமையினாலும், பெருமையினாலும் குணங்களை மலையாகக் கூறியது ஏது உருவக அலங்காரமாம்.

‡ "சாதியொருமையைச சாத்தியேகவசன மென்பர். அஃதாவது ஒருசொல் ஒருமையீறு தோன்ற நின்றும், தோன்றாதுநின்றும், பின் ஒருமைப் பன்மை வினையீறாக மேல்வந்து முடிக்குஞ் சொற்களுமின்றித் தானே பன்மைப்பொருளுணர்த்துவது. ஈறு தோன்றிய சாதி யொருமையு, மீறு தோன்றாத சாதி யொருமையு, மெனவிரு திறப்படு மிருதிணை மருங்கினும் இஃதுரைசசூத்திரம்" என்றார் பிரயோக விவேக நூலார். ஈண்டுக் கூறியுள்ள குணம் ஈறுதோன்றாத அஃறிணைச் சாதியொருமைப் பெயர்

|| அநாதி - உற்பத்தியில்லாதது.

அசையாமையும் பெருமையும் பற்றிக் குணங்களை மலையாக உருவகம் செய்தார். குணம்-சாதியொருமைப் பெயர். அநாதியாய் வருகின்ற வகையால் ஒரோவிடத்துக் கோபந்தோன்றியபொழுதே அக்கோபத்தினைத் தத்துவஞானம் அழிக்குமாகலால் 'கணமேயும்' என்றும், பயனிறைந்த சொல்லையுடைய துறவிகளாதலின் 'காத்தலரிது' என்றும், சொல்லினர். இவையிரண்டு பாட்டாலும் அவராணை (கட்டளை) சொல்லப்பட்டது.

(க-து). முனிவர்களது கோபத்தை அவர்களாற் கோபிக்கப் பட்டவராலே தடுத்தல் கூடாது என்பது.

9 The anger of those who have ascended the mountain of goodness(good dispositions), though it continue but for a moment, connot be resisted.

கO. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

பரி.—(இ-ள்). எல்லா வுயிர்கண்மேலுஞ் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுகலான், அந்தணரென்று சொல்லப்படுவார் துறவறத்தி னின்றவர், (எ-று).

பூணுதல்-விரதமாகக் கோடல். * அந்தணரென்ப தழகிய தட்பத்தை யுடையாரென வேதுப்பெயராகலின், அஃதவ் வருளுடையார்மேலன்றிச் செல்லாதென்பது கருத்து. அவ்வாருணையுடையாராயினும் உயிர்கண்மாட் டருளுடையரென்ப திதனாற் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). எவ்வுயிர்க்கும் - எல்லாவுயிர்களின்மேலும், செந்தண்மை - செவ்வையானவருளை, பூண்டு - (விரதமாகக்)கொண்டு, ஒழுகலான் - நடத்தலால், அந்தணரென்போர் - அந்தணரென்று சொல்லப்படுவோர், அறவோர் - துறவறத்தினின்றவர், (எ-று).

மற்று - அசைநிலை. அந்தணரென்பது அழகிய குளிர்ச்சி (கருணை) யை யுடையவரெனக் காரணப்பெய ராகலின், அஃதவ்வருளுடையார் மேலல்லாது மற்றவர்மேல் செல்லாதென்பது கருத்து. அப்படி ஆணையை யுடையவராயினும் உயிர்களிடத்துக் கருணையுடையாரென்பது இதனாற் சொல்லப்பட்டது.

---

* "அந்தத்தையணவுவாரந்தணர் என்றது வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டொர்ப்பார்" என்பர் நச்சினார்க்கினியர்.

(க-து). *அந்தணரென்று சொல்லப்படுவோர் உயிர்களிடத்துக் கருணையுடைய முனிவர்களே என்பது.*

10. The virtuous are truly called Andhanar, because in their conduct towards all creatures they are clothed in kindness.

## நான்காம் – அதிகாரம்.

## அறன்வலியுறுத்தல்—*The Power of Virtue.*

பரி.—(இ - ள்). அஃதாவது அம்முனிவரானுணர்த்தப்பட்ட அம்மூன்றனுள், ஏனைப் பொருளும் இன்பமும் போலாது, அறன் இம்மை மறுமை வீடென்னு மூன்றனையும் பயத்தலான், அவற்றின் வலியுடைத்தென்பது கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானேவிளங்கும்.‡"சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு,மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல" என்றார் பிறரும்.

*தெளி.—அஃதாவது அம்முனிவரால் அறிவிக்கப்பட்ட அறம்பொருளின்பமென்னும் மூன்றனுள்,மற்றைப் பொருளுமின்பமும்போலாகாமல், அறம் இம்மைப்பயன் மறுமைப்பயன் வீடு என்னும் மூன்றையும் தருதலால், அப்பொருளின்பமென்னு மிரண்டிலும் உறுதியுடையதென்பது சொல்லுதலாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.*

க. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

பரி.—(இ-ள்). வீடுபேற்றையுந்தரும்; துறக்க முதலிய செல்வத்தையுந்தரும்; ஆதலான், உயிர்கட் கறத்தின்மிக்க ஆக்கம் யாது? (எ-று).

*எல்லாப் பேற்றினுஞ் சிறந்தமையின் வீடு 'சிறப்பு'எனப்பட்டது.ஆக்கந் தருவதனை 'ஆக்கம்' என்றார். ஆக்கம்-மேன்மேலுயர்தல். ஈண்டுயிரென்றது மக்களுயிரை; சிறப்புஞ் செல்வமும் எய்துதற்குரிய ததுவேயாகலின். இதனான் அறத்தின் மிக்க வுறுதி யில்லை யென்பது கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *சிறப்பு - மோக்ஷமடைதலையும், ஈனும் - கொடுக்கும், செல்வமும் - (சுவர்க்கமுதலாகிய) செல்வத்தையும், ஈனும் - கொடுக்*

---

‡ *இது புறநானூறு கக - வது செய்யுட்கணுள்ளது. இதன்பொருள் மேன்மை யுடைய முறைமையினால் பொருளுங் காமமும் தருமத்தின் பின்னே தோன்றுங் காட்சியைப்போல என்பது.*

கும், (ஆதலால்), உயிர்க்கு - (மக்கள்) உயிர்கட்கு, அறத்தினூஉங்கு - தருமத்தின்மேற்பட்ட, ஆக்கம் - பெருக்கத்தைத்தருவது, எவன - யாது? (எ-று).

ஓ - அசை நிலை. எல்லாப் பேறுகளினும் சிறந்ததாகலின் மோக்ஷம் 'சிறப்பு' என்று கூறப்பட்டது. ஆக்கத்தைத்தருவதாகிய அறத்தை (காரிய வாகுபெயரால்) 'ஆக்கம்' என்று கூறினார். ஆக்கம்-மேன்மேலுயர்தல். சிறப்புஞ் செல்வமு மடைதற்குரியது மக்களுயிரேயாதலின், இங்கே யுயிரென றது மக்களுயிரை. இதனால் அறத்தைப்பார்க்கினும் மிக்க உறுதியைத்தருவது வேறொன்றில்லை யென்பது சொல்லப்பட்டது.

(க-து). மக்களுயிர்க்கு நன்மையைத் தருவது தருமத்தினும் மேம்பட்ட தொன்றில்லை என்பது.

1. Virtue will confer Moksha and wealth (Heaven &c); what greater source of happiness can man possess.

உ. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

பரி.—(இ-ள்). ஒருவனுக் கறஞ்செய்தலின் மேற்பட்ட வாக்கமுமில்லை; அதனை மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை, (எ-று).

'அறத்தினூஉங் காக்கமு மில்லை' என மேற்சொல்லியவதனையே * அநுவதித்தார்; ‡ அதனாற் கேடுவருதல் கூறுதற் பயனோக்கி. இதனால் † அது செய்யாவழிக் கேடுவருதல் கூறப்பட்டது.

---

* அநுவதித்தல் - அநுவாதம. அஃதாவது யாதானுமோர் நிமித்தத்தால் ஒன்றனை முற்கூறி, வேறொரு நிமித்தத்தா லதனையே பின்னுங் கூறுதல். அனுவாதமெனினும் வழிமொழிதலெனினு மொக்கும். அனுவதித்தற்கு முன்னர்ப் பெறப்பட்ட தொன்றனை வடநூலார் புரோவாதமென்பர். (புரோவாதம் - முன்பு கூறுதல்). இதனால் அனுவாதம் கூறியது கூற லன்றென்ப தாயிற்று. கூறியது கூறலாவது "அங்க மிலாத வனங்கன்" என்பதுபோல் யாதாயினுமோர் நிமித்தமின்றி முன்னர்க்கூறியதனையே பின்னருங்கூறுதல். அஃதாவது இருகாற்சொல்லி யொருகாற் பயன கொள்ளுதல். பிரயோக விவேகநூலார் "ஒருபொருளை முன்னரெடுத்துக் கூறுவது புரோவாதம்: அதனை யொருநிமித்தத்தாற் பின்னருமெடுத்துக்கூறுவது அனுவாதம். உதாரணம் 'அறத்தினூஉங் காக்க மெவனோ வுயிர்க்கு' 'அறத்தினூஉங் காக்கமு மில்லை' எனவரும்." என்றார். இங்கே "அறத்தினூஉங காக்க;மெவனோ வுயிர்க்கு" என்பது புரோவாதம், 'அறத்தினூஉங காக்கம்' என்று மதனையே 'மறத்தலி னூங்கில்லை கேடு' என்னும் நிமித்தம் பற்றிப் பின்னருங் கூறியது அநுவாதம்.

‡ அதனால் - அறஞ்செய்தலை மயக்கத்தினால் மறத்தலினால்.
† அது செயயாவழி - தருமஞ்செய்யா விடத்து.

தேளி.—(இ-ள்). (ஒருவனுக்கு) அறத்தினூஉங்கு - தருமஞ் செய்தலின் மேற்பட்ட, ஆக்கமும் - பெருக்கத்தைத் தருவதும், இல்லை—, அதனை - அத்தருமத்தை, மறத்தலினூங்கு - (மயக்கத்தால்) மறந்துவிடுதலின் மேற்பட்ட, கேடு - கேட்டைத்தருவதும், இல்லை, (எ-று).

'அறத்தினூஉங் காக்கமு மில்லை' என முன்னர்ச் சொல்லியவதனையே அநுவாதஞ் செய்தார்; அதனாற் கேடுவருதலைச் சொல்லுதலாகிய பயனோக்கி. இதனால் அது செய்யாதவிடத்துக் கேடுவருதல் சொல்லப்பட்டது

(க-து). தருமஞ்செய்தலின் மேற்பட்ட செல்வமும் அதனை மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை யென்பது.

2. There can be no greater source of good than (the practice of) virtue; than the forgetfulness of it, their can be no greater source of evil.

—≡|≡—

ரு. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

பரி.—(இ-ள்). தத்தமக்கியலுந் திறத்தான் † அறமாகிய நல்வினையை யொழியாதே அஃதெய்துமிடத்தா னெல்லாஞ்செய்க, (எ-று).

இயலுந்திறமாவது இல்லறம் பொருளளவிற் கேற்பவும் துறவறம் யாக்கைநிலைக் கேற்பவுஞ் செய்தல். ஓவாமை - இடைவிடாமை. எய்துமிடமாவன: மனம் வாக்குக் காயமென்பன. அவற்றாற் செய்யும் அறங்களாவன முறையே ‡ நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலுமென இவை. இதனான் அறஞ்செயுமாறு கூறப்பட்டது.

தேளி.—(இ-ள்). ஒல்லும்வகையான்-(தத்தமக்குக்)கூடும்வகையால், அறவினை - தருமமாகிய நல்வினையை, ஓவாதே - ஒழியாமலே, செல்லும்வாயெல்லாம் - (அவ்வறவினை) செல்லு மிடங்களிலெல்லாம், செயல் - செய்யக் கடவர், (எ - று).

கூடும்வகையாவது இல்லறம் பொருளளவிற்கு ஏற்பவும் துறவறம் சரீரநிலைக்கு ஏற்பவும் செய்தலாம். ஓவாமை - நடுவே நீங்காமை. செல்லுமிடங்களாவன: மனமும் வாக்கும் காயமுமாம். அவற்றினாற்செய்யும் அற

---

† அறத்திற் (தருமத்திற) கேதுவாகிய நல்வினையை யென்றுகொள்க. நல்வினையால் தருமமும் அதனால் சுகமுமுண்டா மென்பதிங் குணரத்தக்கதாம்.

‡ மனத்தால் நல்லனவற்றை யெண்ணுதலும், வாயால் நல்லனவற்றைச் சொல்லுதலும், உடம்பால் நல்லனவற்றைச் செய்தலுமாம்.

ங்களாவன முறையே நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலுமாம். இத னால் அறஞ் செய்யும் வகை சொல்லப்பட்டது.

(க-து). மனம் வாக்குக் காயமென்னுந் திரிகரணத்தாலுங் கூடுமானவளவு இடைவிடாது தருமஞ் செய்யக் கடவர் என்பது.

3. As much as possible, in every way, incessantly practise virtue.

---

ச. மனத்துக்கண் மாசில னாதல் லனைத்தற
னாகுல நீர பிற.

பரி.—(இ-ள). * அவ்வாற்றான் அறஞ்செய்வான் தன் மனத்தின்கட் குற்றமுடைய னல்லனாக; அவ்வளவே அறமாவது; அஃதொழிந்த சொல்லும் வேடமு மறமெனப்படா, ‡ ஆரவார நீர்மைய, (எ-று).

குற்றம் - † தீயன சிந்தித்தல். பிறரறிதல் வேண்டிச் செய்கின்றனவாகலின் 'ஆகுலநீர' என்றார். மனத்து மாசுடையனாயவழி § அதன் வழிய வாகிய மொழி மெய்களாற் செய்வன பயனில வென்பதூஉம் பெறப்பட்டது.

தெளி.—(இ-ள்). மனத்துக்கண் - (அவ்வகையாக அறஞ்செய்பவன் தன்) மனத்தினிடத்து, மாசிலனாதல் - குற்ற மில்லாதவனாகக் கடவன், அறம் - தருமமாவது, அனைத்து - அவ்வளவே, பிற - அஃதொழிந்த சொல்

---

* அவ்வாற்றான் - கூடுமளவினால்.

‡ ஆரவாரநீர்மைய-பிறரறியச்செயயும் ஆடம்பரத் தன்மையுடையனவாம்.

'பயனோக்கா தாற்றவும் பாத்தறிவொன் றின்றி, யிசைநோக்கி யீகின்ற ரீகை...கூலிக்குச் செய்துண்ணு மாறு" என்பது பழமொழி.

† தீயன சிந்தித்தலாவது பிறர்பொருளை யெவ்வா றபகரிக்கலா மென்றெண்ணுதல், பிரமஹத்தி முதலிய தகாதகாரியங்களைச் செய்ய விரும்புதல், தேகமே ஆன்மாவென் றதனிடத்து (பரலோகப் பிரயோஜனங் கருதாது) வீணே அபிமானம் வைத்தல் முதலியனவாம்.

§ வாக்கும் காயமும் மனத்தினிஷ்டப்படி ஒழுகுதலன்றித் தம்மிஷ்டப்படி ஒழுகுதற் கியலாமை பற்றி 'அதன்வழியவாகிய மொழிமெய்கள்' என்று கூறப்பட்டது. மாசுடைய மனத்தின் வழிப்பட்ட வாக்கு: கடினமாகப்பேசுதல் பொய்சொல்லுதல் கோட்சொல்லுதல் பயனில்லாத வார்த்தைகளைப் பேசுதல் முதலியவற்றையும், காயம் பிறரது பொருளைத் திருடுதல் ஜீவஹிம்சை செய்தல் பிறமாதரைப் புணர்தல் முதலிய வற்றையும் உடையனவா யிருக்குமென்க.

லும் வேடமும், ஆகுலநீர - (அறமெனப்படுவனவல்ல) ஆரவார குணத்தை யுடையனவாம், (எ-று).

குற்றம்—தீயனவற்றை நினைத்தல். பிறரறியவேண்டிச் செய்கின்றன வாதலால் 'ஆகுல நீர' என்றார். மனத்தின்கண் குற்ற முடையவனாகிய போது அம்மனத்தின் வழியிற் பொருந்துவதாகிய வாக்கினாலும் காயத்தி (உடம்பி) னாலும் செய்யுந் தருமங்கள் பயன்தருவதில்லை யென்பதும் பெறப்பட்டது.

(க-து). தருமஞ்செய்பவன் மனத்தின்கண் மாசற்றிருத்தலே தருமமாம் என்பது.

4. Whatever is done with a spotless mind is virtue ; all else is vain show.

ரு. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ லான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

பரி.—(இ-ள்). ¶ பிறராக்கம் பொறாமையும் * புலன்கண்மேற் செல்கின்ற அவாவும் அவையேதுவாகப் பிறர்பால் வரும் வெகுளியும் அதுபற்றி வருங் கடுஞ்சொல்லுமாகிய இந்நான்கினையுங் கடிந்து இடை யறாது நடந்தது அறமாவது, (எ-று).

இதனான் இவற்றோடு விரவி யியன்றது அறமெனப்படா தென்பது உங்கொள்க. இவைஇரண்டுபாட்டானும் அறத்தினதியல்புகூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அழுக்காறு - (பிறருயர்ச்சி) பொறாமையும், அவா- (ஐம்புலன்கள்மீது செல்லுகின்ற) ஆசையும், வெகுளி - (அவைகாரண மாகப் பிறர்மே லுண்டாகின்ற) கோபமும், இன்னாச்சொல் - (அதுபற்றி வருகின்ற) கடுஞ்சொல்லும். நான்கும்-(ஆகிய விந்) நான்கினையும்,இழுக்கா- கடிந்து, இயன்றது-(ஒழிவில்லாமல்)நடந்தது, அறம்-தருமமாவது,(எ-று).

இதனால் அழுக்காறுமுதலிய இந் நான்கோடுங்கலந்து நடந்தது அற மெனப்படாது என்பதுங்கொள்க. இவை இரண்டு பாட்டாலும் அறத்தி னது இயல்பு சொல்லப்பட்டது.

---

¶ பிறராக்கம் பொறாமையாவது அன்னியருக்குண்டாகும் கல்வி செல் வம் அதிகாரம் மரியாதை முதலாயினவற்றைக் கண்டு அசூயையடைதல்.

* புலன்கள் - விரோதமின்றிய சப்தாதி விஷயங்கள்.

(க-து). பொறாமை ஆசை கோபம் கடுஞ்சொல் என்னு மிந் நான்கினையு மொழித்து நடைபெறுவது தருமமாம் என்பது.

5. That conduct is virtue which is free from the four things: malice, desire, anger, and bitter speech.

---

ரு. † அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

**பரி.—(இ-ள்).** யாம் இது பொழுது இளைய மாகலின் இறந்த ஞான்று செய்துமெனக் கருதாது அறத்தினை நாடோறுஞ்செய்க; அவ்வாறு செய்தவறம் இவ்வுடம்பினின்று முயிர்போங்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம், (எ-று).

*மற்றென்ப தசைநிலை. 'பொன்றாத் துணை' என்றார்; * செய்தவுடம் பழியவும் உயிரோடொன்றி யேனையுடம்பிலுஞ் சேறலின். இதனுன் இவ்வியல்பிற்றாய அறத்தினை நிலையாதயாக்கை நிலையினபொழுதே செய்க வென்பது கூறப்பட்டது*

**தெளி.—(இ-ள்).** *(நாம்இப்போது இளையோமாகலின்) அன்று - இறக்குநாளில், அறிவாமென்னாது - செயவோமென்று நினையாமல், அறம்-தரு*

---

† *"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது, கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின், முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா, னற்கா யுதிர்தலு முண்டு" என்பது நாலடி.*

* *மனோ வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களாலும் செயயப்படுகின்ற கிரியைகள் கர்மங்களெனப்படும்; அக்கிரியைகள் அனுஷ்டான மான (செய்த) வுடன் பின்வரும் நன்மை தீமைகளுக்கேதுவான தர்மா தர்மங்களை யுற்பத்திசெய்து கெடுகின்றன. இத்தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தில் அநுற்பூதமாய் (வெளிப்படாது) தங்குகின்றன. அந்தக்கரணம் விடாது பிறவிகள் தோறும் அவ்வவ் வுடம்புகளைப்பற்றியே யிருத்தலின் அவ்வந்தக்கரணத்தில் அநுற்பூதமாயிருக்கும தர்மாதர்மங்கள் அவ்வப்பிறவிகளி லுண்டாகும் நன்மைதீமைகளுக் கேதுவாயிருக்கின்றன. இவ்வாறு அந்தக்கரணத்தி லநுற்பூதமாய்த்தங்கி யவ்வப்பிறவிகளில் இன்பத்துன்பங்கள் புலப்படுதல் வாயிலாக அனுமிக்கப்படும் தர்மாதர்மங்களையே " பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே " என்று பெரியார் கூறியுள்ளாரெனக. இவ்விரண்டி லொன்றாகிய தருமத் (அறத்) தினைச 'செய்தவுடம் பழியவும் உயிரோடொன்றி(உயிரோடுள்ள அந்தக்கரணத்தி லநுற்பூதமாய்த்தங்கி) யேனையுடம்பிலுஞ் சேறலின்' என்று கூறினாரெனக.*

மற்றதை, செய்க - (தினந்தோறுஞ்) செய்யக்கடவர், அது - அப்படிச்செய்த தருமமானது, பொன்றுங்கால் - இவ்வுடம்பினின்று முயிர்போங்காலத்து, பொன்றாத்துணை - (அவ்வுயிர்க்கு) அழியாததுணையாம், (எ-று).

மற்று - அசை. தன்னைச்செய்த வுடம்பழியவும் உயிரோடு கூடி மற்றையுடம்பிலுஞ் செல்லுதலால் அறத்தினை 'பொன்றாத்துணை' என்றார். இதனால், இத்தன்மையினதான தருமத்தை நிலையில்லாதவுடம்பு இருக்கின்ற பொழுதே செய்க என்பது சொல்லப்பட்டது.

(க-து). இறக்கும்பொழுது தருமஞ் செய்வோமென் றெண்ணாது இருக்கும்போதே தருமஞ்செய்தால் அஃதிறக்கும்போதுதவியாம் என்பது.

6. Say not we will hereafter make choice (of virtue): be virtuous now; in the hour of death, she will be to you a deathless help.

எ. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

பரி.—(இ-ள்). அறத்தின்பயன் இதுவென்று யாம் ஆகமவளவை யான் உணர்த்தல்வேண்டா, சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவைதன்னானே யுணரப்படும், (எ-று).

* பயனை 'ஆறு' என்றார்; $ பின்னதாகலின். †'என' என்னும் எச்சத்தாற் சொல்லாகிய ‡ ஆகம வளவையும், 'பொறுத்தானோ டூர்ந்தானிடை' என்றதனாற் காட்சி அளவையும் பெற்றாம். உணரப்படு மென்பது சொல்லெச்சம். இதனா லறம் பொன்றாத் துணையாதல் தெளிவிக்கப்பட்டது.

தெளி.—(இ-ள்). அறத்தாறு - தருமத்தின்பயன், இதுவென - இது வென்று (யாம் ஆகமப்பிரமாணத்தாலறிவித்தல்), வேண்டா - வேண்டிய

* அறமார்க்கத்திற் செல்லுவதாலடையும் பயனை 'ஆறு (வழி)' என்றது கருவியாகுபெயராம்.

$ 'பின்னதாகலின்' என்றற்கு அறத்தின்பயன் அறத்தைக் கைக்கொண் டொழுகியதன்பின்ன ருண்டாகின்ற தாகலின் என்றுகொள்க.

† 'என' என்னும் செயவெனெச்சத்திற்கு என்று சொல்ல என்பது பொருளாகலால் ஆகம (சாஸ்திர)ப்பிரமாணமும், 'சிவிகை பொறுத்தானோ டூர்ந்தானிடை' என்று குறித்துச் சொன்னதினால் பிரத்தியட்சப் பிரமாணமும், பொருள்முடிவின்மையினால் உணரப்படும் என்னும் சொல்லெச்சமும் பெற்றாம்.

‡ உண்மையனுபவ அறிவிற்குக் கருவியாயுள்ளது அளவை யெனப்படும். அளவையெனினும் பிரமாணமெனினு மொக்கும.

தில்லை, சிவிகை - பல்லக்கை, பொறுத்தானோடு - சுமப்பவனோடு, ஊர்ந்தானிடை-(அதன்கணிருந்து அதை)செலுத்துவோனிடத்து (பிரத்தியட்சப் பிரமாணத்தினாலே யறியப்படும்), (எ-று).

அறத்தின்பயன் அறத்தின்பின்னுண்டாவதாகலின், பயனை ஆறு என்றார். 'என' என்னுஞ் செயவெனெச்சத்தால் சப்தமாகிய ஆகமப் பிரமாணமும், 'பொறுத்தானோ டூர்ந்தானிடை' என்றதனால் பிரத்தியக்ஷப் பிரமாணமும் பெற்றனம். அறியப்படுமென்பது (குறைந்துநின்றதனால்)சொல்லெச்சம். இதனால் அறம் அழியாத துணையாதல் தெளிவாகக் கூறப்பட்டது.

(க-து). தருமத்தின் பயன் சப்தப்பிரமாணத்தாலே யன்றிப் பிரத்தியட்சப் பிரமாணத்தினாலு மறியப்படும் என்பது.

7. You need not describe (in books) the fruit of virtue; it may be inferred from seeing the bearer of a palankeen and him who rides in it.

அ. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

பரி.—(இ-ள்). செய்யாது கழியுநாளுளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின், அச்செயல் அவன் யாக்கையோடு கூடுநாள் வரும்வழியை வாராமலடைக்குங் கல்லாம், (எ-று).

ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகைவினையு முள்ளதுணையும் உயிர் யாக்கையோடுங் கூடிநின் றவ்வினைகளது இருவகைப்பயனையுநுகருமாகலான், அந்நாண்முழுவதும் 'வாழ்நாள்' எனப்பட்டது. குற்றங்கள் ஐந்தாவன:—‡ 1 அவிசசை, 2 அகங்காரம், 3 அவா, 4 விழைவு, 5 வெறுப்பென்பன. இவற்றை வடநூலார் † பஞ்சக்கிலேசமென்ப. வினையிரண்டாவன:- நல்வினை தீவினையென்பன. பயனிரண்டாவன:—இன்பதுன்பமென்பன. இதனான் அறம் வீடு பயக்குமென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்). ஒருவன்-, வீழ்நாள்-(செய்யாமற்)கழியுநாள், படாஅமை - உண்டாகாமல், நன்று - தருமத்தை, ஆற்றின் - செய்வானாயின், அஃது - அச்செய்கையானது, வாழ்நாள்-(அவன் சரீரத்தோடு) கூடும்நாள்,

‡ 1 அவிச்சை - அநாதியாய வஞ்ஞானம். 2 அகங்காரம்—அவ்வவிச்சைபற்றி யானென மதிக்குஞ் செருக்கு. 3 அவா-அவ்வகங்காரம் பற்றி யெனக்கிது வேண்டுமென்பது. 4 விழைவு - அவ்வவாபற்றி அப்பொருட்கண் செல்லும் ஆசை. 5 வெறுப்பு - அவ்வாசைபற்றி யதன் மறுதலைக்கண் செல்லுங் கோபம்.

† பஞ்சக்கிலேசம் - ஐவகைக்குற்றம்.

வழி - (வரும்) வழியை, அடைக்குங்கல் - (வாராமல்) அடைக்குங் கல் லாம், (எ-று).

அஞ்ஞானம், அகங்காரம், அவா, விருப்பு, வெறுப்பு என்னும் ஐவகைக் குற்றங்களால் வருகிற நல்வினை தீவினை என்னும் இருவகை வினைகளும் உள்ளவரைக்கும் உயிர் உடம்போடுங் கூடிநின்று அவ்விருவினைகளது பயன்களாகிய சுகதுக்கங்களிரண்டையும் அனுபவிக்கு மாதலால் அக்காலமுழுதும் 'வாழ்நாள்' எனப்பட்டது.

இதனால் தருமம் மோட்சந் தருமென்பது சொல்லப்பட்டது.

(க-து). ஒருவன் சோர்வடையாது தருமத்தைச் செய்தால் அஃதவன் பிறப்பை நீக்கும் என்பது.

8. He who suffers no day to pass unimproved, but (continually) does some good, such conduct will be a stone to block the passage to other births.

கூ. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

பரி.—(இ-ள்). இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது; அதனோடு பொருந்தாது வருவன வெல்லாம் இன்பமாயினுந் துன்பத்தினிடத்த; அதுவேயுமன்றிப் புகழுமுடைய வல்ல, (எ-று).

ஆனுருபு ஈண்டு ¶ உடனிகழ்ச்சிக்கண் வந்தது. † "தாங்கு கையானோங்கு நடைய" என்புழிப்போல. இன்பம் - காமநுகர்ச்சி. அஃதாமாறு ‖ காமத்துப்பாலின் முதற்கட் சொல்லுதும். இன்பத்திற் புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தான் வரும் பிறனில்விழைவு முதலாயின அக்

¶ உடனிகழ்ச்சிப் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளின் தொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக வுடையபொருள், ஈண்டு 'அறத்தான் வருவதேயின்பம்' (இல்லறத்தோடு பொருந்திவருவதேயின்பமாவது) என்பதில் இன்பம் வினைகொண்டு முடியும்பொருள்; வருவது என்பது அப்பொருளின் தொழில். அவ்வருவது என்னுந்தொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக வுடையபொருள் அறமாதலால் அறம் உடனிகழ்ச்சிப் பொருளதாயிற்றென்க.

† புறநானூறு 22. இதன் பொருள் அசைந்த (பெருங்) கையுடனே (தலையெடுத்து நடக்கும்) உயர்ந்தநடையை யுடையன என்பது.

‖ காமத்துப்பாலின் முதலில் "ஈண்டின்ப மென்றது ஒருகாலத் தொரு பொருளான் ஐம்புலனுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத் தினை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

கணத்துள் இன்பமாய்த்தோன்றுமாயினும் பின் துன்பமாய் விளைதலின் 'புறத்த' என்றார். அறத்தோடு வாராதன 'புகழுமில' எனவே, வருவது புகழுமுடைத்து என்பது பெற்றாம். இதனான் அறஞ்செய்வாரே இம்மை யின்பமும் புகழும் எய்துவர் என்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அறத்தான் - இல்லறத்தோடு (பொருந்தி), வருவதே—, இன்பம்-இன்பமாம், மற்றெல்லாம் அவ்வில்லறத்திளேடு பொருந்தாது வருவனவெல்லாம் (இன்பமாயினும்), புறத்த - துன்பத்துட் சேர்வனவாம், (அதுவுமல்லாமல்) புகழும் - புகழையும், இல-உடையனவல்ல, (எ-று).

அறத்தானென்னும் ஆனுருபு இங்கு உடனிகழ்ச்சிப்பொருளில்வந்தது. இன்பம்-காமத்தினனுபவம். அஃதாகுவிதம் காமத்துப்பாலின் முதலிற் கூறப்படும். (மற்ற[illegible]) இன்பத்தின் புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தால்வரும் பிறனது மனைவியை விரும்புதல் முதலானவை அச்சமயத்தில் இன்பமாய்த்தோன்றுமாயினும் பின்பு துன்மாய் விளைதலால் 'புறத்த' என்றார். இல்லறத்தோடு பொருந்தி வாராதன 'புகழுமில' எனவே, அவ்வில்லறத்தோடு பொருந்தி வருவதாகிய வின்பம் புகழு முடைத்தாமென்பது பெற்றாம். இதனால் அறஞ்செய்வாரே இம்மை இன்பமும் புகழும் பெறுவாரென்பது சொல்லப்பட்டது.

(க-து). இல்லறத்தோடு கூடிவரு மின்பமே இன்பமாம்; அதனோடு பொருந்தாதுவரு மின்பந் துன்பமாமென்பது.

9. That pleasure only which flows from domestic virtue is pleasure; all else is not pleasure, and it is without praise.

---

௪0. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

பரி.—(இ-ள்). ஒருவனுக்குச் செய்தற் பான்மையது நல்வினையே; ஒழிதற் பான்மையது தீவினையே, (எ-று).

ஒருமென்பன இரண்டும் அசைநிலை. தேற்றேகாரம் பின்னுங்கூட்டப்பட்டது § பழிக்கப் படுவதனைப் 'பழி' என்றார். இதனாற் † செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன.

§ பழியென்பது செயப்படுபொருளுணர்த்தும் இகரவிகுதி புணர்ந்து கெட்ட தொழிற்பெயர். அல்லது பழியென்பது பழிப்பதற்கேதுவாகிய தீவினையையுணர்த்தலால் காரியவாகுபெய ரெனினு மொக்கும்.

† செய்வது நல்வினையும், ஒழிவது தீவினையுமாம்.

தெளி.—(இ-ள்). ஒருவற்கு - ஒருவனுக்கு, செயற்பாலது - செய்தற் றன்மையது, அறனே - நல்வினையே, உயற்பாலது - ஒழிதற்றன்மையது, பழி(யே) - தீவினையே, (எ-று).

அறனேயென்னும் தேற்றேகாரம் பழியென்பதனோடுங் கூட்டப்பட்டது. ஒருமிரண்டும் அசை நிலைகள். பழிக்கப்படுவதாகிய தீவினையைப் 'பழி' என்றார். இதனாற்செய்வதும் ஒழிவதும் நியமிக்க (நிச்சயிக்க)ப் பட்டன.

(க-து). செய்யத்தக்கது நல்வினையும் செய்யத்தகாதது தீவினையுமா மென்பது.

10. That which it is meet to do is virtue ; that which it is meet to abandon is vice.

பாயிரம் முற்றிற்று.

அதிகாரம் நான்கிற்குச் செய்யுள்—40.

## 2. இல்லறவியல்—

# On Domestic Virtue.

முதல் அதிகாரம்.

### இல்வாழ்க்கை—*The Domestic State.*

பரி:—அஃதாவது இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. இன்னிலை (இல்-நிலை) அறஞ்செய்தற்குரிய இருவகை நிலையுள் முதலாதலின், இஃது அறன்வலியுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—*அஃதாவது மனையாளோடு கூடி வாழ்தலினது சிறப்பாம். இல்வாழ்க்கை நிலையானது அறஞ்செய்தற்குரிய இல்லறம் துறவறமென்னும் இருவகை நிலைகளுள் முதலாவதாதலின், இஃது அறன்வலியுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.*

க. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை.

பரி:—(இ-ள்). இல்லறத்தோடு கூடி வாழ்வானென்று சொல்லப்படுவான் அறவியல்பினையுடைய ஏனை மூவர்க்கும் அவர்செல்லும் நல்லொழுக்க நெறிக்கண் நிலைபெற்ற துணையாம், (எ-று).

* *இல்லென்பதாகுபெயர். † என்பானெனச் செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது. ஏனை மூவராவார் ஆசாரியனிடத்தினின்றோதுதலும் விரதங் காத்தலுமாகிய பிரமசரிய ஒழுக்கத்தானும், இல்லை விட்டுத் ‡ தீயொடு வனத்தின்கட்சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கத்தானும், முற்றத்துறந்த யோகவொழுக்கத்தா*

---

* *இல்லின் (வீட்டின்) கண் செய்யப்படும் அறத்தை இல் என்றது இடவாகுபெயர்.*

† *மூன்றும் வேற்றுமைக் கருத்தாவிற்குச் செயப்படுபொருள் முதல் வேற்றுமையாக வருதல்பற்றி 'என்பானெனச் செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது' என்று கூறப்பட்டது. என்பான் என்பதில் அகரச்சாரியையும் படுவிகுதியும் தொக்குநின்றன. சொல்லின்கண் படுவிகுதி தொக்குப் பொருளின்கண் அது விரிந்து வருவதனைப் பிரயோக விவேகநூலார் திங்குப்படலம் மூன்றுஞ் செய்யுளினுரையில் "நயக்காய்த் தோன்றி யக்காய்ப் பொருள் விரியுமாறு காண்க" என்பர்.*

‡ *தீ - நித்தியாக்கினி.*

னும் என இவர். இவருள் முன்னை யிருவரையும் ¶ பிறர்மத மேற்கொண்டு கூறினர். இவ ரிவ்வொழுக்க நெறிகளை முடியச் செல்லுமளவும் அச் செலவிற்குப்பசிநோய்குளிர் முதலியவற்றான் இடையூறுவாராமல் § உண்டியும் மருந்தும் உறையுளு முதலிய உதவி அவ்வந் நெறிகளின் வழுவாமற் செலுத்துதலான் 'நல்லாற்றினின்ற துணை' என்றார்.

தெளி.—(இ-ள்). இல்வாழ்வா னென்பான் - இல்லறத்தோடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவோன், இயல்புடைய - (அற) இயல்பினையுடைய, மூவர்க்கும் - (மற்றை) மூவர்க்கும், நல்லாற்றில்-(அவர்செல்லும்) நல்லொழுக்க வழிகளில், நின்ற - நிலைபெற்ற, துணை - துணையாவான், (எ-று).

இல்லென்பது அதனறத்தை உணர்த்தலால் ஆகுபெயர். என்பானெனச் செயப்படுபொருள் எழுவாய் போலச் சொல்லப்பட்டது. மற்றை மூவராவார் ஆசாரியனிடத்திருந்து வேதம் ஓதுதலும் விரதங்காத்தலும் ஆகிய பிரமசரிய வொழுக்கமுடையவனும், வீட்டைவிட்டுத் தீயுடன் காட்டினிடத்துப் போய் மனையாள் தொண்டுசெய்யத் தவஞ்செய்கின்றவனாகிய வானப் பிரஸ்தனும், எல்லாப் பற்றுக்களையும்விட்டுச் சமாதிபுரிபவனாகியசந்நியாசியும் என்னுமூவர். இம்மூவருள் பிரமசாரி வானப்பிரஸ்தனென்னுமிருவரையும் பிறமதத்தை யுடன்பட்டுக் கூறினர். இவர்கள் இவ்வொழுக்கநெறிகளை முற்றுப் பெறச்செய்து முடிக்குமளவும் அவ்வொழுக்கத்திற்கு இல்வாழ்வான் பசி நோய் குளிர் முதலானவற்றால் இடையூறு வாராது உண்டியும் மருந்தும் உறையுளு முதலியவற்றையுதவி அவரவரை அவ்வவ்வொழுக்கவழிகளில் தப்பாமல் நடத்துகையினால்'நல்லாற்றினின்ற துணை' என்றார்.

(க-து). இல்லறத்தில்வாழ்பவன் பிரமசாரி வானப்பிரஸ்தன் சந்நியாசி யென்னும் மூவர்க்குந் தக்கதுணையாவானென்பது.

1. He will be called a (true) householder, who is a firm support to the virtuous of the three orders (of Bramachari, Vanaprastan, Sanyasi) in their good path.

---

¶ இல்லறந்துறவறமென விருவகை நிலையாக வகுத்துக்கொண்டநாயனார் மற்றைப் பிரமசரியநிலையினையும் வானப்பிரஸ்த நிலையினையும் "உடன்படல்" என்னும் மதம்பற்றி மேற்கொண்டு 'மூவர்க்கும்' எனக்கூறினமைபற்றி 'பிறர்மதமேற்கொண்டு கூறினர்' என்று கூறப்பட்டது.

§ உண்டியும் மருந்தும் உறையுளும்-பசிதீர உணவும், நோய்தீர மருந்தும், வசிக்க இடமும். முதலிய என்றதனால் ஆடை, புத்தகமுதலியனவுங் கொள்க.

உ. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.

பரி:—(இ-ள்). களைகணுனவரால் துறக்கப்பட்டார்க்கும் நல்கூர்ந்தார்க்கும் ஒருவரு மின்றித் தன்பாலவந் திறந்தார்க்கும் இல்வாழ்வா னென்று சொல்லப்படுவான் துணை, (எ-று).

*துறந்தார்க்குப் பாவம் ஒழிய † அவர்க்குக் களைகணுய்நின்று வேண்டுவன செய்தலானும், துவ்வாதவர்க் குணவுமுதலிய கொடுத்தலானும், இறந்தார்க்கு $ நீர்க்கடன் முதலிய செய்து நல்லுலகின்கட் செலுத்தலானும் 'துணை' என்றார். இவை யிரண்டுபொட்டானும் இன்னிலை எல்லா வுபகாரத்திற்கும் உரித்தாதல் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்). *துறந்தார்க்கும் - (ஆதாரமானவரால்) விடப்பட்டவர்க்கும், துவ்வாதவர்க்கும் - வறுமையுடையவர்க்கும், இறந்தார்க்கும்- (ஒருவரு மில்லாமல் தன்னிடத்து வந்து) இறந்தவர்க்கும், இல்வாழ்வா னென்பான்-இல்வாழ்வா னென்று சொல்லப்படுவான், துணை - துணையாவான், (எ-று).*

*ஆதாரமானவரால் விடப்பட்டவர்க்குப் பாவமொழிய அவர்க்கு ஆதாரமாய் நின்று வேண்டுவனவற்றைச் செய்தலாலும், வறுமையுடையவர்க்கு உண்டி முதலியவற்றைக் கொடுத்தலாலும், இறந்தவர்க்கு நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து நல்லுலகத்தின் (சுவர்க்கத்தின்) கண் (அவரை) அனுப்புதலாலும் 'துணை' என்றார். இவையிரண்டுபொட்டாலும் இல்வாழ்க்கை எல்லா வுபகாரங்களுக்கும் உரித்தாதல் சொல்லப்பட்டது.*

(க-து). *ஆதாரமற்றவர்க்கும் வறியவர்க்கும் இறந்தவர்க்கும் இல்வாழ்வான் துணையாமென்பது.*

2. He will be said to flourish in domestic virtue who aids the forsaken, the poor and the dead.

ந. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

பரி:—(இ-ள்). பிதிரர் தேவர் விருந்தினர் சுற்றத்தார் தானென்று சொல்லப்பட்டவைந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவாமற் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம், (எ-று).

† *அவர் (இல்வாழ்வார்) என்றும் பாடமுண்டு.*

$ *நீர்க்கடன் - திலதருப்பணம்; திலம்-எள்.*

* பிதிராவார் படைப்புக்காலத் தயனாற் படைக்கப் பட்டதோர் கடவுட்சாதி; அவர்க்கிடந் தென்றிசை யாகலின் 'தென்புலத்தார்' என்றார். தெய்வமென்பது சாதியொருமை. விருந்தென்பது புதுமை. அஃதீண்டாகுபெயராய்ப் புதியராய் வந்தார்மேனின்றது. அவர் இருவகையர்: பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், † அஃதின்மையிற் குறியாது வந்தாருமென. ஒக்கல் - சுற்றத்தார். எல்லா வறங்களும் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின் தன்னை யோம்பலும் அறனாயிற்று. $ என்ற என்பது விகாரமாயிற்று. ஆங்கு - அசை. ஐவகையும் அறஞ்செய்தற் கிடனாகலின் 'ஐம்புலம்' என்றார். அரசனுக் ¶ இறைப்பொருள் ஆறி லொன்றாயிற்று; இவ்வைம்புலத்திற்கும் ஐந்து கூறுவேண்டுதலாமென்பதறிக.

தெளி:—(இ-ள்). தென்புலத்தார் - பிதிரரும், தெய்வம் - தேவரும், விருந்து - அதிதியரும், ஒக்கல் - சுற்றத்தாரும், தான் - தானும், என்ற - என்று சொல்லப்பட்ட, ஐம்புலத்து - ஐந்திடத்தும் (செய்யும்), ஆறு-(அற) வழியை, ஓம்பல் - வழுவாமற் செய்தல், தலை - (இல்வாழ்வானுக்குச்) சிறப்புடைய வறமாம், (எ-று)

பிதிராவார் சிருஷ்டிகாலத்திற் பிரமனாற் சிருட்டிக்கப்பட்டதோர் தேவசாதியார்; அவர்க்கு இடம் தென்திசையாதலின் 'தென்புலத்தார்' என்றார். தெய்வமென்பது சாதியொருமைப்பெயர். விருந்து - புதுமை. அஃது இங்குப் பண்பாகுபெயராய்ப் புதியவராய் வந்தவரை உணர்த்திற்று. விருந்து - பண்புப்பெயர். அவ்விருந்தினர் முன்னறிந் திருக்கின்றமை பற்றிக் குறிச்து வந்தாரும் அஃதில்லாமை பற்றிக் குறியாது வந்தாருமென் றிருதிறத்தராவர். எல்லா வறங்களையும் தான் செவ்வையாயிருந்துகொண்டு செய்யவேண்டுதலின் தன்னைக் காப்பாற்றுதலும் அற

* இறந்து போனவரது புத்திரர் முதலியோர் செய்யுங் கருமங்களினால் திருப்தியடைந்து இறந்தவர்க்கும் அவரினத்தவர்க்கும் நேர்ந்த துர்க்கதியை நீக்கவும் நற்கதியை யளிக்கவும் வல்ல வொருவகையானதேவசாதியார் பிதிர்க்களெனப்படுவர்; இவர்கள் இயற்கைத் தேவாகளி லொருவகையினரா யிருத்தல்பற்றி 'பிதிராவார் படைப்புக்காலத்தய(பிரம)னாற்படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி' என்று கூறப்பட்டது [இயற்கைத் தேவர்களல்லாதார், கருமதேவர்களெனப்படுவர். அவர்கள் புண்ணியத்திற் கேற்பச் சுவர்க்காதிகளிற்போகங்களையனுபவித்துப் புண்ணியங்கழிந்த வுடனே அவ்விடத்தினின்றும் நீங்கிவிடுபவர்கள்].

† அஃதின்மையின்-முன்னறிந்திராமைபற்றி. முன்னறிதல் - முன்னறிமுகமா யிருத்தல்.

$ என்றாங்கு (என்ற-ஆங்கு) என்பதிலுள்ள என்ற என்பதில் அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது.

¶ இறைப்பொருள் - வரிப்பணம்.

மாயிற்று. என்ற என்பதன் அகரம் தொக்கு நின்றது. ஆங்கு - அசை. தென்புலத்தார் முதலிய வைந்துவகையும் தருமஞ்செய்தற்கு இடங்களா கையால் 'ஐம்புலம்' என்றார். இவ்வைந்திடங்களுக்கும் ஐந்து பங்கு வேண் டுதலால் அரசனுக்குப் பகுதிப்பொருள் ஆறிலொரு பங்காயிற்று.

(க-து). பிதிரர்க்கும் தெய்வத்திற்கும் விருந்தினர்க்கும் இன த்தார்க்கும் தனக்கும் வழுவாது தருமஞ்செய்தல் இல்லறத்தா னுக்குத் தலைமையான தருமமா மென்பது.

3. The chief duty of the householder is to preserve the fivefold rule of conduct towards the manes, the Gods, his guests, his relations and himself.

ச. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

பரி:—(இ-ள்). பொருள் செய்யுங்காற் பாவத்திற் கஞ்சி யீட்டி அப்பொருளை யியல்புடைய மூவர் முதலாயினோர்க்கும் தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டலை ஒருவ னில்வாழ்க்கை யுடைத்தாயின் அவன்வழி யுலகத் தெஞ்ஞான்றும் நிற்றல் அல்லது இற த்தலில்லை, (எ-று).

பாவத்தான் வந்த பிறன்பொருளைப் பகுத்துண்ணின், அறம் பொரு ளுடையான் மேலும் பாவந் தன்மேலுமாய் நின்று வழியெஞ்சுமாகலின 'பழியஞ்சி' என்றார். ‡ வாழ்வான துடைமை வாழ்க்கைமே லேற்றப் பட்டது.

தெளி:—(இ-ள்). (பொருள் சம்பாதிக்கும்போது) பழி - பாவத் திற்கு, அஞ்சி - பயப்பட்டுச் (சம்பாதித்து), பாத்து-(அப்பொருளை இயல் புடையமூவர் முதலிய † பதின்மர்களுக்கும்) பங்கிட்டு, ஊண்-(தான்) உண் ணுதலை, வாழ்க்கை - (ஒருவனது) இவ்வாழ்க்கையானது. உடைத்தாயின் - உடையதானால், வழி - (அவனது) சந்ததியானது (உலகத்தில்), எஞ் ஞான்றும் - எந்நாளும் (நிற்பதல்லாமல்), எஞ்சல் - இறத்தல், இல் - இல்லை, (எ-து).

---

‡ வாழ்வானது உடைமை பகுத்துண்டல். அஃதவனது வாழ்க்கை யின்மேலேற்றி 'உடைத்தாயின் வாழ்க்கை' என்று கூறப்பட்டது. இஃது உடையானது ஒருடைமையை அவனது மற்றோருடைமையின்மே லேற் றிக் கூறிய உபசாரவழக்காம்.

† பிரமசாரி, வானப்பிரஸ்தன், சன்னியாசி, துறந்தார், துவ்வாதவர், இறந்தார், பிதிரர், தெய்வம், விருந்தினர், சுற்றத்தாரென்னும் பதின்மர்.

பழியென்பது பழிப்பிற் கேதுவாகிய பாவத்திற்காதலின் காரியவாகு பெயராம். பாவத்தால் வந்த பிறன்பொருளைப் பங்கிட்டுண்டால், அறமான து பொருளுடையான் மேலும் பாவமானது தன்மேலுமாய் நின்று சந்ததி குறையுமாதலால் 'பழியஞ்சி' என்றார். வாழ்வானது பழியஞ்சிப் பகுத் துண்டலாகிய உடைமை வாழ்க்கையின்மேல் ஏற்றப்பட்டது.

(க-து). பாவத்திற்குப் பயந்து பொருளைத் தேடிப் பிரமசாரி முதலியோர்க்குப் பங்கிட் டுண்ணுகின்றவனது சந்ததி யானது குறைதலில்லை யென்பது.

*4.* His descendants shall never fail who, living in the domestic state, fears vice in the acquisition of property and shares his food with others.

---

ரு. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

பரி.—(இ-ள்). ஒருவன் இல்வாழ்க்கை தன்துணைவிமேற் செய் யத்தகும் அன்பினையும் பிறர்க்குப் பகுத்துண்ட லாகிய அறத்தினையும் உடைத்தாயின், அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம், (எ-று).

* நிரனிறை. இல்லாட்கும் கணவற்கும் நெஞ்சொன்றாகாவழி இல் லறங் கடைபோகாமையின், அன்புடைமை பண்பாயிற்று அறனுடைமை பயனாயிற்று. இவை மூன்று பாட்டானும் இன்னிலையி னின்றான் அறஞ் செய்யுமாறு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). இல்வாழ்க்கை - (ஒருவனது) இல்வாழ்க்கையான து, அன்பும் - (தன்மனையாளிடத்துச் செய்யத்தகும்) அன்பினையும், அற னும்- (பிறர்க்குப் பகுத்துண்ணுதலாகிய) அறத்தினையும், உடைத்தாயின்- உடையதானால், அது - அவ்வுடைமையானது (அவ்வில் வாழ்க்கைக்கு), பண்பும் - குணமும், பயனும் - பிரயோசனமும் ஆம், (எ-று).

மனையாளுக்கும் கணவனுக்கும் மனவொருமை இல்லாதபோது இல் லறம் முடிவு பெறாதாகையால், இல்வாழ்க்கைக்கு அன்புடைமை பண்பா யிற்று; அறனுடைமை பயனாயிற்று. அன்பையும் அறனையும் முன்வைத்த வொழுங்கின்படி அவற்றோடு சம்பந்தமுள்ள பண்பையும் பயனையும் வைத்தலால் இது முறை நிர னிறையணி. அன்பு பண்பும், அறன் பயனு மாம். இதுவும் வாழ்வானது அன்பும் அறனுமாகிய உடைமையை அவ னது வாழ்க்கையின்மே லேற்றிக் கூறிய உபசாரவழக்காம். இவைமூன்று பட்டாலும் இல்வாழ்வோன் அறஞ்செய்யுமாறு சொல்லப்பட்டது.

---

* நிரனிறையாவது வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்களுக்குச் சம்பந்த முள்ளவற்றை யம்முறையே சொல்லுதல்.

(க-து). ஒருவ னில்வாழ்க்கை அன்பையு மறத்தையுமுடைய தாயி னவ்வுடைமையானது அதற்குக் குணமும் பிரயோசனமு மா மென்பது.

5. If the married life possess love and virtue, these will be both its duty and reward.

சு. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

பரி.—(இ-ள). ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவனாயின், அவன் அதற்குப் புறமாகிய நெறியிற்போய்ப் பெறும் பயன் யாது, (எ-று).

*அறத்தாறென்பது பழியஞ்சிப் பகுத்துண்டலும் அன்புடைமையு மென ¶ மேற்சொல்லிய ஆறு. † புறத்தாறு - இல்லைவிட்டு வனத்துச் செல்லுகிலை. § அந்நிலையின் இது பயனுடைத் தென்பார் 'போஒய்ப் பெறுவதெவன்' என்றார்.*

தெளி.—(இ-ள்). (ஒருவன்) இல்வாழ்க்கை-இல்வாழ்க்கையை, அறத் தாற்றின் - தருமத்தின்வழியே, ஆற்றின் - செலுத்துவானாயின், புறத்தாற் றில் - (அவன் அவ்வில்வாழ்க்கைக்குப்) புறமாகியவழியில், போய்-சென்று, பெறுவது-பெறும்பயன், எவன் - யாது, (இல்லை யென்றபடி), (எ-று).

*தருமத்தின்வழி யென்பது பழியஞ்சிப் பகுத்துண்ணுதலும் அன் புடைமையுமென முன்சொல்லிய வழியாம். புறததாறு - மனையைவிட்டு வனத்திற்செல்லும் நிலை. அநநிலைதரும் மறுமைப்பயன் போன்று இவ் வில்வாழ்க்கைநிலை மறுமைப்பயன் தருதலுடைய தென்பார் 'போஒய்ப் பெறுவதெவன்' என்றார்.*

---

¶ *மேற்சொல்லிய - இவ்வதிகாரத்தின் நான்காவது குறளிலும் ஐந்தா வது குறளிலுங் கூறிய.*

† *புறத்தாறு - வானப்பிரஸ்தநிலை. இது "விரதானுஷ்டான முள்ள துவிஜன் இவ்வாறு கிருகஸ்தாசிரமத்திலிருந்து பரிசுத்தனாயிந்திரியங்களை யடக்கிக்கொண்டு வானப்பிரஸ்தா சிரமத்தை யடைந்து தபோவனத்தில் வசிக்கவேண்டும்" என்பது மனுதரும சாஸ்திரம்.*

§ *வானப் பிரஸ்தனுக்கு மறுமைப்பயன் மனுதரும சாஸ்திரம் "இங் ஙனங் கூறிவந்த மகாமுனி, விரதங்களுள் எதையாவது அனுஷ்டித்துத் தன் சரீரத்தை விடுவானாயின், அவன் பயம் துக்கமென்னு மிவையின்றிப் பிரமலோகத்திற் பரமசுகத்தை யடைவன்" என்று கூறுவதறிக.*

(க-து). ஒருவன் இல்வாழ்க்கையைத் தருமவழியாக நடத்துவானாயின், அவன் துறவறத்திற்போய்ப் பெறும்பயன் ஒன்றுமில்லை என்பது.

6. What will he who lives virtuously in the domestic state gain by going into the other ascetic state?

எ. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை

பரி.—(இ-ள்). இல்வாழ்க்கைக்கணின்று அதற்குரிய இயல்போடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவான் ‡ புலன்களை விட முயல்வாரெல்லாருள்ளும் மிக்கவன், (எ-று).

*முற்றத் துறந்தவர் விட்டமையின், முயல்வாரென்றது மூன்றாநிலையினின்றாரை. அந்நிலைதான் பலவகைப்படுதலின் 'முயல்வாருளெல்லாம்' எனவும், முயலாதுவைத்தும் பயனெய்துதலின் 'தலை' எனவுங் கூறினார்.*

தெளி.—(இ-ள்). இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையில் நின்று, இயல்பினான் - (அவ்வில்வாழ்க்கைக் குரிய) இயல்போடு கூடி, வாழ்பவ னென்பான் - வாழ்பவனென்று சொல்லப்படுவோன், முயல்வாருளெல்லாம் - (ஐம்புலன்களைவிட) முயற்சி செய்வா ரெல்லாருள்ளும், தலை - மேம்பட்டவனாவான், (எ-று).

*முற்றத் துறந்தவராகிய சந்நியாசிகள் ஐம்புலன்களையும் விட்டமையால், முயல்வாரென்றது வனத்திலே தவஞ்செய்வோராகிய வாணப்பிரஸ்தரை. அவ்வானப்பிரஸ்தாசிரமம் பலவகைப்பட்டிருத்தலின் 'முயல் வாருளெல்லாம்' எனவும், இல்வாழ்வோன் அம்முயற்சி செய்யாமலே பயனைப் பெறுதலினால் 'தலை' எனவும் கூறினார்.*

(க-து). இல்வாழ்க்கைக் குரிய தருமவியல்போடு கூடி யில்லறத்தில் வாழ்பவன் தவஞ்செய்வா ரெல்லாருள்ளுந் தலையாவானென்பது.

7. Among all those who perform penance for future happiness he is greatest who lives well in the household state.

அ. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாக்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

பரி.—(இ-ள்). தவஞ் செய்வாரையுந் தத்த நெறியின்கண் ஒழுகப்பண்ணித் தானுந் தன்னறத்திற் றவறாத இல்வாழ்க்கை அத்தவஞ்செய்வார் நிலையினும் பொறையுடைத்து, (எ-று).

‡ புலன்களைவிட - இந்திரிய நிக்கிரகஞ்செய்ய.

பசி முதலிய இடையூறு நீக்கலின் 'ஆற்றினொழுக்கி' என்றார். நோற்பா ரென்பதாகுபெயர். நோற்பார் நிலைக்கு அவர்தம்மையுற்ற நோயல்லது இல்வாழ்வார் நிலைபோற் பிறரையுற்ற நோயும் † பொறுத்தல் இன்மையின் 'நோற்பாரி னோன்மை யுடைத்து' என்றார்.

தெளி.—(இ-ள்). (தவஞ் செய்வோரையும்) ஆற்றின் - (தத்தமது) வழியிலே, ஒழுக்கி - நடத்தி, அறன் - (தானுந்தன்) அறத்தினின்றும், இழுக்காத-தவறாத, இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையானது, நோற்பாரின் - அத்தவஞ்செய்வாரது நிலையினும், நோன்மை-பொறுமையை, உடைத்து - உடையதாம், (எ-று).

(தவத்தினர்க்குப்) பசி முதலாய இடையூற்றைத் தீர்த்தலால் 'ஆற்றி னொழுக்கி' என்றார். நோற்பா ரென்பது அவரதுநிலையை உணர்த்தலால் பொருளாகுபெயர். தவஞ்செய்வாரது நிலைக்கு அவர் தம்மையடைந்த நோயைப் பொறுத்தல் அல்லது இல்வாழ்வார் நிலைபோல் பிறரையடைந்த நோயையும் பொறுத்த லில்லாமையால் 'நோற்பாரி னோன்மை யுடைத்து' என்றார். (இடையூறு - தடை).

(க-து). தவத்தோரைத் தவவழியினடத்தித் தானுந்தவறாதவனது இல்வாழ்க்கையானது தவஞ்செய்வோரது நிலையினும் மேன்மையுடைய தென்பது.

8. The householder who, not swerving from virtue, helps the ascetic in his way, endures more than those who endure penance.

௯. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

பரி.—(இ-ள்). இருவகை யறத்தினும் நூல்களான் அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட தில்வாழ்க்கையே; ஏனைத் துறவறமோ எனின், அதுவும் பிறனாற் பழிக்கப் படுவதில்லையாயின் அவ்வில்வாழ்க்கையோ டொருதன்மைத்தாக நன்று, (எ-று).

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது; இதனாற் பிரிக்கப்பட்டது துறவறமாகலின், அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் அதன்மேனின்றது. பிறன் பழிப்ப

† பொறுத்தல் - மருந்துமுதலியன கொடுத்து நீக்குதல்.

தென்றது † கூடா வொழுக்கத்தை. ‡ துறவறம் மனத்தையும்பொறிகளை யும் ஒறுத்தடக்க வல்ல அருமை யுடைத்தாய வழியே, அவற்றை ஒறுக்க வேண்டாது ஐம்புல வின்பங்க ளாரத்துய்க்கு மேன்மை யுடைய வில்வா ழ்க்கையோடு அறமென வொருங்கெண்ணப்படுவ தென்றவா றாயிற்று.

இவை நான்கு பாட்டானும் இன்னிலையே பயனுடைத்தென இதன் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (இருவகை யறத்திலும்) அறனெனப்பட்டது - (நூல்களால்) அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது, இல்வாழ்க் கையே—, (மற்றைத்துறவறமோ வெனின்), அஃதும் - அத்துறவறமும், பிறன்பழிப்பது-பிறனாற்பழிக்கப்படுவது, இல்லாயின் - இல்லாதிருந்தால், நன்று-(அவ் வில்வாழ்க்கையோடு ஒரு தன்மையதாக) நன்றாம். (எ-று).

பிரித்துக்கூட்டிய ஏகாரம் பிரிநிலைப் பொருளது. இவ்வேகாரத்தால் (இல்லறத்தினின்றும்) பிரிக்கப்பட்டது துறவற மாதலால் அஃதென்னுஞ் சுட்டுப் பெயர் அத்துறவறத்தின்மேல் நின்றது. பிறன்பழிப்ப தென்றது கூடாவொழுக்கத்தை. துறவறம் மனத்தையும் இந்திரியங்களையும் வரு த்தியடக்கவல்ல அருமையுடைய தாயவிடத்தே, அம்மனத்தையும்இந்திரி யங்களையும் வருத்தியடக்க வேண்டாது ஐம்புல வின்பங்களையும் நிரம்ப வனுபவிக்கும் மேம்பாடுடைய இல்வாழ்க்கையுடன் அறமென்று ஒன்றாக வெண்ணப்படுவது என்றவாறாயிற்று. ஐம்புல வின்பம் - சப்தப் பரிசாதி ஐந்து விஷயங்களின வாயிலாக வருஞ் சுகம்.

இவை நான்குபாட்டாலும் இல்லறமே பயனுடையதென்று இதன் சிறப்புச சொல்லப்பட்டது.

(க-து). துறவறம் பிறர் பழித்தற்கிடமின்றி யிருக்குமாயின் அறனென்று சொலலபபட்ட இல்வாழ்க்கையுடன் ஒரு தன்மைய தாகச் சிறப்புடையதாம என்பது. (கூ)

9. The marriage-state is truly called virtue The other (ascetic) state is also good, if *others* do not reproach it (for the vices of those who profess it)

† கூடாவொழுக்கமென்னு மிந்நூலின் அதிகாரத்தைப்பார்க்க.

‡ துறவறத்தில் மனத்தையு மிந்திரியங்களையு மடக்க வேண்டிய வருத்தமிருத்தலால் அது முற்றுப் பெறுவது அரிது; இல்லறத்திலே அவ் வருத்தமில்லாமையால் இது முற்றுப்பெறுவது எளிது. அவ்வாறிருத்த லால் அத்தன்மையதாய துறவறம் தவறின்றி நடைபெறும் போது இல் லறத்துடன் சேர்த்து எண்ணப்படுவதாகின்ற தென்பதாம்.

௧௦. ¶ வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

பரி.—(இ-ள்). இல்லறத்தோடு கூடி வாழுமியல்பினால் வையத்தின்கண் வாழ்பவன் வையத்தானே எனினும் வானின்கண் உறையும் தேவருளொருவனாக வைத்து நன்கு மதிக்கப்படும், (எ-று).

பின்றேவனாய் அவ்வறப்பய னுகர்த லொருதலை யாகலின் 'தெய்வத்துள் வைக்கப்படும்' என்றார். இதனான் இன்னிலையது மறுமைப்பயன் கூறப்பட்டது. இம்மைப்பயன் புகழ். அதனையிறுதிக்கட் கூறுப.

தெளி.—(இ-ள்). வாழ்வாங்கு - (இல்லறத்தோடு கூடி) வாழுமியல் பினால், வையத்துள்-மண்ணுலகத்துள், வாழ்பவன்-, (மண்ணுலகத்தானே யாயினும்), வானுறையும் - விண்ணுலகத்தி லிருக்கின்ற, தெய்வத்துள் - தேவருள், வைக்கப்படும் - (ஒருவனாக) வைத்து (நன்றாக) மதிக்கப்படு வான், (எ-று).

(வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் இறந்த)பின்பு தேவனாய்ப்பிறந்து அவ்வறப்பயனாகிய சுகத்தை அனுபவித்தல் நிச்சயமாதலின் 'தெய்வத்துள் வைக்கப்படும்' எனறார். இதனால் இல்லறத்தின் மறுமைப்பயன் சொல்லப் பட்டது. இம்மைப்பயன்புகழ். அதை இறுதியி(புகழதிகாரத்தி)ற் கூறுவர்.

(க-து). இல்லறத்துள் வாழுவாறு வாழ்பவன் தெய்வத்து ளொருவனாக வைத்து மதிக்கப்படுவா னென்பது.

10. He who on earth has lived in the conjugal state as he should live, will be placed among the gods who dwell in heaven.

## இரண்டாம் — அதிகாரம்.

## வாழ்க்கைத்துணை நலம்—The Virtue of Wife.

பரி.—அஃதாவது அவ் வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

தெளி.—அஃதாவது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மையாம். அதிகாரமுறைமையும் இதனாலேயே விளங்கும்.

---

¶ "இம்மையிற் சுகத்தையும், மறுமையிற் சாஸ்வதமான புண்ணிய லோகத்தையும் எவனடைய விரும்புகின்றானோ அவன் கிருகஸ்தாசிரமத்தை முயற்சியோடு காப்பாற்றல் வேண்டும்" என்பது மனுதரு மசாஸ்திரம்.

**க. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

**ப.—(இ-ள்). மனையறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகளை யுடையளாய்த் தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையை யுடையாள் அதற்குத் துணை, (எ-று).**

*நற்குணங்களாவன:—துறந்தார்ப்பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட் டருளுடைமையு முதலாயின. நற்செய்கைகளாவன:—வாழ்க்கைக்குவேண்டும் பொருள்களறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழில் வன்மையும், * ஒப்புரவு செய்தலு முதலாயின. வருவாய்க்குத்தக்க வாழ்க்கையாவது முதலையறிந் ததற்கியைய வழித்தல். இதனான் † இவ்விரண்டு நன்மையுஞ் சிறந்தனவென்பது கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *மனைத்தக்க - இல்லறத்திற்குத்தக்க, மாண்புடையளாகி - நற்குண நற்செய்கைகளை யுடையவளாகி, தற்கொண்டான் - தன்னைக்கொண்ட கணவனது, வளத்தக்காள் - வரவுக்குத் தக்க வாழ்க்கையை யுடையவள், வாழ்க்கை - அவ்வில்லற வாழ்க்கைக்கு, துணை - துணையாவாள், (எ-று).*

*நற்குணங்களாவன:—துறந்தவரை யுபசரித்தலும், விருந்தினரை யுண்பித்தலும், வறியவரிடத்து அருளுடைமையும் முதலானவையாம். நற்செய்கைகளாவன:—இல்வாழ்க்கைக்குவேண்டும் பொருள்களறிந்து காப்பாற்றி வைத்தலும், உணவுகளைச் சுவைப்படச் சமைத்தற்றொழில் வல்லமையும், உபகாரஞ்செய்தலும் முதலானவையாம். வருவாய்க்குத்தக்க வாழ்க்கையாவது (பொருளின்) முதலையறிந்து அதற்குத் தக்கபடி செலவுசெய்தல். இதனால் இவ்விரண்டு நன்மைகளும் சிறந்தனவென்பது சொல்லப்பட்டது.*

(க-து). *நற்குண நற்செய்கை யுடையவளாய்த் தனது கணவனது வரவுக்குத் தக்கவாறு செலவுசெய்பவள் இல்வாழ்க்கைக்குத் துணையாவா ளென்பது.*

1. She who has the excellence of home virtues, and can prudently expend the property within the means of her husband, is a help in the domestic state.

உ. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்.

**பரி.—(இ-ள்). மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள்**

---

* ஒப்புரவுசெய்தல் - உலகநடையையறிந்து அதற்குத்தக நடத்தல்.

† மனைத்தக்க மாண்புடையளாதல், தற்கொண்டான்வளத்தக்காளாத லென்னு மிரண்டு நன்மையும்.

ஒருவனில்லாளிடத் தில்லையாயின், அவ்வில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சிமையுடைத்தாயினும் அஃதுடைத்தன்று, (எ-று).

'இல்' என்றார்; பயன்படாமையின்.

தெளி.—(இ-ள்). மனைமாட்சி - இல்லறத்திற்குத் தகுந்த நற்குண நற்செய்கைகள், இல்லாள்கண் - (ஒருவனது) மனையாளிடத்தில், இல்லாயின் - இல்லையானால், வாழ்க்கை - அவ்வில்வாழ்க்கையானது, எனைமாட்சித்தாயினும் - (செல்வத்தால்) எவ்வளவு பெருமையை உடையதாயினும், இல் - (அப்பெருமையை) உடையதன்று, (எ-று).

(அவ்வாழ்க்கை அம்மனைவியால்)பயன்படுவதின்மையால்'இல்'என்றார்.

(க-து). நற்குண நற்செய்கையுடைய மனையவளில்லாவிடத்து இல்வாழ்க்கை எவ்வளவு சிறப்புடைத்தாயினும் பயன்படுவதில்லை என்பது.

2. If the wife be without domestic excellence, whatever (other) greatness (be possessed in) the conjugal state, it is nothing.

---

ங. இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை.

பரி.—(இ-ள). ஒருவனுக் கில்லாள் நற்குண நற்செய்கைய ளாயினக்கால் இல்லாதது யாது? அவள் அன்ன ளல்லாக்கால் உள்ளது யாது? (எ-று).

‡ மாண்பென்னுங் குணத்தின்பெயர் குணியின்மே னின்றது.

இவை யிரண்டு பாட்டானும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது இல்லாளது மாட்சியே, பிறவல்ல என்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (ஒருவனுக்கு) இல்லவள் - மனையாள், மாண்பானால் - நற்குண நற்செய்கையை யுடையவளானால், இல்லது - இல்லாதது.

‡ 'பண்பென்பன அவற்றின் (பண்பியின்) குணமாய்த் தோன்றித் தமக்கு வேறு குணமின்றி நிகழ்வன' என்றும், "பண்பியென்பன காட்சிப் பொருளுங் கருத்துப்பொருளுமாகிய இயங்குதிணையும் நிலைத்திணையுமாம்" என்றும், குணகுணிகளினிலக்கணம் தண்டியலங்காரவுரையிற் கூறப்பட்டிருக்கிறது. பண்பெனினும் குணமெனினும் ஒக்கும்; பண்பியெனினும் குணியெனினும் ஒக்கும். குணியே திரவியமெனப்படும். ஈண்டு மாண்பென்னும் குணம் அதனையுடைய குணியை (இல்லாளை) பண்பாகு பெயரா யுணர்த்துதல் பற்றி 'மாண்பென்னும் குணத்தின்பெயர் குணியின் மேனின்றது' என்று கூறப்பட்டது. பிரயோகவிவேகநூலார் இலக்கணை கூறுமிடத்து "இல்லதெ னில்லவண் மாண்பானால், மாண்புடையாளானால், இது குணகுணியானது" என்றனர்.

என் - யாது? இல்லவள் - அம்மனையாள், மாணுக்கடை - அந்நற்குண நற்செய்கைகளுடையவளாக இருந்தால், உள்ளது-இருப்பது, என் - யாது? ()

மாண்பென்னுங் குணத்தின் பெயர் அதனையுடையவளுக் காயிற்று.

இவ்விரண்டுபாட்டாலும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது மனையாளது நற்குண நற்செய்கையே, மற்றவையல்லவென்பது சொல்லப்பட்டது.

(க-து). மனையவள் நற்குண நற்செய்கை யுடையவளாயின் இல்லாத பொருள் யாது மில்லை; அவள் அவை யில்லாதவளாயின் உள்ளபொருள் யாது மில்லை என்பது.

3. If his wife be eminent (in virtue) what does (that man) not possess? If she be without excellence what does (he) possess?

௪. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

பரி.—(இ-ள்). ஒருவனெய்தும் பொருள்களுள் இல்லாளின் மேம்பட்ட பொருள்கள் யாவையுள? அவண்மாட்டுக் § கற்பென்னுங் கலங்கா நிலைமை யுண்டாகப் பெறின், (எ-று).

கற்புடையாள்போல அறமுதலிய மூன்றற்கும் ஏதுவாவன பிறவின்மையின் 'யாவுள' என்றார். இதனாற் கற்புநலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (ஒருவன் அடையும் பொருள்களுள்) பெண்ணின் - மனையாளினும், பெருந்தக்க-உயர்வாகிய பொருள்கள், யா - எவை, உள - இருக்கின்றன, கற்பென்னுந்திண்மை - (அவளிடத்து) கற்பென்னுங் கலங்கா நிலைமை, உண்டாகப் பெறின் - உண்டாயிருக்கப் பெற்றால், (எ-று).

கற்புடைய மனைவியைப்போல அறமுதலிய மூன்றற்கும் ஏதுவாம் பொருள்கள் வேறில்லாமையின் 'யாவுள' என்றார். இதனால் கற்புநலத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது

(க-து). ஒருவன் பெறும் பொருள்களுள் கற்புடைய மனைவியினும் மேம்பட்டது ஒன்று மில்லை என்பது.

§ "கொண்டானிற் சிறந்த தெய்வம இன்றெனவும் அவனை இன்னவாறே வழிபடுக வெனவும் இருமுது குரவர்கற்பித்தலானும் அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேயத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச்சுட்டியும் ஒழுகும் ஒழுக்கந்தலைமகன் கற்பித்தலானும் கற்பாயிற்று. இனித்தலைவனுங் களவின்கண் ஓரையும் நாளுந் தீதென்று அதனைத் துறந்தொழுகினாற்போல ஒழுகாது ஒத்தினுங் கரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு அறனுறத்திற் செல்லுந் துணையும் இல்லற நிகழ்த்துதலிற் கற்பாயிற்று":—நச்சினார்க்கினியர்.

4. What is more excellent than a wife, if she possess the stability of chastity ?

௫. தெய்வந் தொழாஅள் கொழுநற் ¶ றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

பரி.—(இ-ள்) பிறதெய்வந் தொழாது தன் தெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள பெய்யென்று சொல்ல மழை பெய்யும், (எ-று).

*தெய்வந் தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங்காலத் தாகலின் 'தொழுதெழுவாள்' என்றார். () தொழாநின் றென்பது தொழுதெனத் திரிந்து நின்றது. தெய்வந்தா னேவல்செய்யு மென்பதாம். இதனாற் கற்புடையவளது ஆற்றல் கூறப்பட்டது.*

தெ.—(இ-ள்). *தெய்வம் - (பிற) தெய்வத்தை, தொழாஅள் - வணங்காளாகி, கொழுநன் - (தனது தெய்வமாகிய) கணவனை, தொழுது-வணங்காநின்று, எழுவாள் - (நித்திரைவிட்டு) எழுந்திருப்பவள், பெய்யென - பெய்யென்று சொல்ல, மழை - மழையானது, பெய்யும்—, (எ-று),*

*கடவுளை வணங்குவதற்கு மனந்தெளிந் திருப்பது துயிலெழுங் காலத்திலாகலின் 'தொழுதெழுவாள்' என்றார். தொழுதென்பது தொழாநின்றென்பதன் விகாரம். தெய்வமும் கற்புடையவளுக்கு ஏவல் செய்யுமென்பதாம். இதனால் கற்புடையவளது வல்லமை சொல்லப்பட்டது.*

---

*¶ 'தொழுதெழுவாள்' என்பதற்குப் பரிமேலழகர் 'தொழா நின்று துயிலெழுவாள்' என்றுரை கூறியது அசம்பாவிதமாகும்; 'எழுந்து தொழுவாள்' எனப்பொருள் படுத்தவேண்டும்; தொழாநின்று துயிலொழிதல் கூடாது என்று கூறுவாருமுளர். துயில்கூடுங்காலத்து எந்தஸ்மிருதி (நினைவு)அந்தக்கரணததில் சம்ஸ்காரமா(வாசனையா)கின்றதோ அந்தஸ்மிருதி விழிக்குங் காலத்துச் சம்ஸ்கார வாயிலாக அவ்விழித்தலை முன்னாகக்கொண்டு வெளிப்பட்டு முன்பின் என்பதின்றி நிகழுதல் பிரசித்தமாயிருத்தலின், 'தொழுதெழுவாள்' என்பதற்குப் பரிமேலழகர் அனுபவ முதிர்ச்சி காரணமாகத் 'தொழாநின்று துயிலெழுவாள்' என்றுரை கூறியதை மறுத்துக்கூறியது அசம்பாவிதமா மெனக. மேலும், திருக்கோவையாரின் "தினைவளங்காத்து" என்னுஞ் செய்யுளிலுள்ள "தொழுதெழுவார்" என்பதற்குப் பேராசிரியர் "தொழாநின்று துயிலெழுவார்" என்றும், 'தொழுதெழுவார் என்றது துயிலெழுங்காலத்தல்லது முன்னுணர் வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் என்றவாறு." என்றும் கூறியவாற்றானுமறிக.*

*() தொழாநின்றென்னும் செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் தொழுதெனச் செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகத் திரிந்து நின்றது. ஆநில் - நிகழ்காலவிடைநிலை.*

(க-து). பிறதெய்வத்தைவணங்காது கணவனைத் தெய்வமாக வணங்கி யெழுகின்றவளது சொல் பிழைபடுவதில்லை என்பது.

5. She who does not worship God, but who on rising worships her husband, if she say "Let it rain," it will rain.

---

௬. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

பரி.—(இ-ள்). கற்பினின்றும் வழுவாமற் றன்னைக்காத்துத் தன்னைக் கொண்டவனையும் உண்டிமுதலியவற்றாற் பேணி * இருவர்மாட்டு நன்மை யமைந்த புகழ் நீங்காமற் காத்து மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடி யுடையாளே பெண்ணாவாள், (எ-று).

*தன்மாட்டுப் புகழாவது வாழுமூர் கற்பாற் றன்னைப் புகழ்வது. சோர்வு - மறவி. இதனாற் றற்புகழ்தற் சிறப்புக் கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *தற்காத்து - (கற்பினின்றும் வழுவாமல்) தன்னைக் காப்பாற்றி, தற்கொண்டாற்பேணி-தன்னைக்கொண்ட கணவனையும் (உண்டி முதலானவற்றால்) உபசரித்து, தகைசான்ற-(தம்மிருவரிடத்தும்) நன்மையமைந்த, சொற்காத்து-புகழை (நீங்காமற்) காப்பாற்றி, சோர்விலாள் - (முற்கூறிய நற்குண நற்செய்கைகளிலும்) உறுதியுடையவளே, பெண் - பெண்ணாவாள், (எ-று).*

*தன்னிடத்துப் புகழாவது (தான்)வாழும் ஊரார் கற்புடைமைபற்றித் தன்னைப் புகழுதல். சோர்வு - மறத்தல். இதனால். தன்னைப் புகழ்தலின் சிறப்புச் சொல்லப்பட்டது.*

(க-து). *கற்பிற்றவறாது தன்னைக் காத்துத் தன்கணவனையு முபசரிக்குங் கீர்த்தி யமைந்த நற்குண நற்செய்கை யுடையவளே மனைவியாவாள் என்பது.*

6. She is a wife who unweariedly guards herself, takes care of her husband and perserves an unsullied fame.

---

எ. † சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

---

* *இருவர்மாட்டு நன்மை யமைந்த புகழாவது இவளைக் கொள்ளுவதற்கு இவன் என்னதவஞ்செய்தானோவெனக் கொண்டவனையும் கற்புடைமையைக்கண்டு அவன் மனைவியையும் அவர்கள் வாழும் ஊரார்புகழ்தலாம்.*

† " *மாதாகள் தங்களைத் தம்மேகாத்தல்வேண்டும், அதுவே அவர்களுக்குச்சிறந்த காவலாகும். சிறந்த காவலரைவைத்துப் புறத்தேபோகவிடாது வீட்டிலியே நன்றாகக் காத்தாலும் அதனாலவர்கள் காக்கப்படுவதில்லை":— மநுதருமசாஸ்திரம்.*

பரி.—(இ-ள்). மகளிரைத் தலைவர் சிறையாற்காக்குங் காவலென்ன பயனைச்செய்யும்? அவர் தமது நிறையாற் காக்குங் காவலே தலையாய காவல், (எ-று).

‡ சிறை—மதிலும் வாயிற்காவலு முதலாயின. § நிறை—நெஞ்சைக் கற்புநெறியினிறுத்தல். காவல் இரண்டினும் நிறைக்காவலில்வழி யேனைச் சிறைக்காவலாற் பயனில்லை யென்பார் 'நிறைகாக்குங் காப்பேதலை' என்றார். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனாற் றற்காத்தற் சிறப்புக் கூறப்பட்டது.

தேனி—(இ-ள்). மகளிர் - பெண்டிரை, (தலைவர்), சிறை - சிறையினால், காக்கும் - பாது காக்கும் காப்பு - காவலானது, எவன் - என்னபிரயோசனத்தை, செய்யும்—, நிறை - (தமது) நிறையால், காக்கும் - (அவர்) பாதுகாக்கும், காப்பே - காவலே, தலை - முதன்மையான காவல், (எ-று).

சிறை - மதிற்காவல் வாயிற்காவல் முதலானவை. நிறை-மனதைக் கற்பின்வழியிலே நிறுத்தல் சிறைக்காவல் நிறைக்காவலென்னு மிரண்டினும் நிறைக்காவல் இல்லாத விடத்து மற்றைச் சிறைக் காவலால் பயன் இல்லை என்பார் 'நிறைகாக்குங் காப்பேதலை' என்றார். காப்பே என்னும் ஏகாரம் பிரிநிலை. இதனால் தற்காத்தலினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து). பெண்கள் கற்பால் தங்களைக் காத்துக் கொள்ளுங் காவலே காவலாவதன்றி யேனையகாவல் காவலாகாது என்பது.

7. What avails the guard of a prison ? The chief guard of woman is her chastity.

அ. ¶ பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

பரி.—(இ-ள்). பெண்டிர் தம்மை யெய்திய கணவனை வழிபடுதல் பெறுவாராயின், புத்தேளிர் வாழும் உலகின்கண் அவராற் பெருஞ் சிறப்பினைப் பெறுவர், (எ-று).

வழிபடுதலென்பது சொல்லெச்சம். இதனாற் றற்கொண்டாற்பேணிய மகளிர் புத்தேளிராற் பேணப்படுவ ரென்பது கூறப்பட்டது.

---

‡ சிறையாவது தானினைத்தவா றொழுகுதலின்றிப் பிறர் நினைத்தவாறே யொழுகும்படி காத்தல்.

§ "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை":—கலித்தொகை.
"காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கும்":—நக்கீரர்.

¶ "மாதர்கட்கு ஐம்பெரும்வேள்வி,உபவாசம், விரதமுதலியன சுதந்தரமாகவில்லை; கணவனுக்குப் பணிவிடை செய்வதனாலேயே சுவர்க்கத்திற் பெருமை யடைகிறார்கள்":—மநுதருமசாஸ்திரம்.

தெளி.—(இ-ள்). பெண்டிர் - மனைவியர், பெற்றான் - (தம்மைக்) கொண்டகணவனை, பெறின் - (வணங்கியுபசரித்தல்) பெறுவாராயின், புத்தேளிர்-தேவர், வாழும்-வாழ்வதற்கிடமாகிய, உலகு-உலகத்தில், பெருஞ்சிறப்பு—(அத்தேவராற் செய்யப்படும்) பெரிய சிறப்பினை, பெறுவர் - அடைவார். (எ-று).

வணங்கியுபசரித்த லென்பது குறைந்து நின்றமையின் அது சொல்லெச்சமாம். இதனால் தன்னைக்கொண்ட கணவனைத் தெய்வமாக வணங்கும் பெண்டிர் மறுமையில் தேவர்களால் வணங்கப்படுவ ரென்பது சொல்லப்பட்டது.

(க-து). கணவரைவணங்கும்மனைவியர் மறுமையில்தேவரால் (சுவர்க்கத்தில்) வணங்கப்படும் பெருஞ்சிறப்படைவர் என்பது.

8. If women shew reverence to their husbands they will obtain great excellence in the world where the gods fiourish.

௯ புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

பரி—(இ-ள்). புகழை விரும்பிய இல்லாளை யில்லாதார்க்கில்லை, தம்மை யிகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்கவேறுபோல நடக்கும் பெருமித நடை, (எ-று).

புரிந்தவென்னும் பெயரெச்சத் தகரம் விகாரத்தாற்றொக்கது. பெருமித முடையானுக்குச் சிங்கவேறு நடையா ¶ னுவமமாகலின் 'ஏறுபோல்' என்றார். இதனாற்றகைசான்றசொற்காவாவழிப்படுங்குற்றங்கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). புகழ் - கீர்த்தியை, புரிந்த - விரும்பிய, இல்-மனையாளை, இல்லோர்க்கு-இல்லாதவர்க்கு, இகழ்வார்முன் - (தம்மை) அவமதித்துப்பேசும் பகைவர்முன், ஏறுபோல்-ஆண் சிங்கம்போல, (நடக்கும்), பீடு நடை-கம்பீரமானநடை, இல்லை - இல்லையாம், (எ-று).

புரிந்தவென்னும் பெயரெச்சத்தின் அகரவீறு (விகுதி) செய்யுள்விகாரத்தால் தொக்கது. தருக்குடையவனுக்கு ஆண்சிங்கம் நடையினால் உபமானமாதலால் 'ஏறுபோல்' என்றார். இதனால் மனையாள் நன்மையமைந்த புகழைக் காப்பாற்றாதவிடத்துண்டாகுங் குற்றம்சொல்லப்பட்டது.

(க-து). கீர்த்தியை விரும்பிய மனைவியை யில்லாதவர்க்குத் தமது பகைவர்முன் மேம்பாடாகச்செல்லும் நடையின்றாம்.

9. The man whose wife seeks not the praise (of chastity) cannot walk with lion-like stately step, before those who revile him.

¶ இது புலிபோலப் பாய்ந்தானென்பது போலத் தொழிலுவமை.

௧௦ மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல னன்மக்கட் பேறு.

பரி.—(இ-ள்). ஒருவற்கு நன்மையென்று சொல்லுவர் அறிந்தோர் மனையாளது நற்குண நற்செய்கைகளை; அவைதமக்கு நல்ல அணிகல மென்று சொல்லுவர் நல்ல புதல்வரைப் பெறுதலை, (எ-று).

*அறிந்தோரென்பது எஞ்சிநின்றது. மற்று - அசைநிலை. இதனால் வாழ்க்கைத்துணைக் காவதோர் அணிகலங்கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

தெளி.—(இ-ள்). (அறிந்தோர்) மனை - மனையாளது, மாட்சி - நற்குண நற்செய்கைகளை, மங்கலம்-(ஒருவனுக்கு) நன்மையாம், என்ப-என்று சொல்லுவார், நன்மக்கட்பேறு - நல்ல புதல்வரைப் பெறுதலை, அதன்- அந்நற்குண நற்செய்கைகளுக்கு, நன்கலன் - நல்ல ஆபரணமாம், (என்ப - என்று சொல்லுவார்), (எ-று)

*அறிந்தோரென்பது குறைந்து நின்றமையின் சொல்லெச்சம். மற்று- அசை. இதனால் வாழ்க்கைத் துணைக்காவதோ ரணிகலஞ் சொல்லி, அதனால் பின்வருவதாகிய அதிகாரத்திற்குத் தோற்றுவாய் (தொடக்கம்)செயயப்பட்டது.*

(க-து). *மனையாளது நற்குண நற்செய்கைகள் அவளது கணவனுக்கு நன்மையைத் தருவனவாம்; அவள் நல்லபுத்திரரைப் பெறுதல் அவற்றிற் காபரணமாம் என்பது.*

10. The excellence of a wife is the good of her husband: and good children are the jewels of that goodness.

## மூன்றும் – அதிகாரம்

## புதல்வரைப் பெறுதல்—*Obtaining Children.*

பரி.—அஃதாவது i. இருபிறப்பாளர் மூவரானும், ii. இயல்பாக இறுக்கப்படுங் கடன் மூன்றனுள் iii முனிவர் கடன் கேள்வியானும்,

i. *இருபிறப்பாளராவார் - முதற்பிறப்புத் தாயினுலும் இரண்டாம் பிறப்பு உபநயன சம்ஸ்காரத்தாலு முண்டாகப்பெற்ற அந்தண ரரசர் வைசியர். உபநயன சம்ஸ்காரம் இரண்டாம் பிறப்பென்பது "திருமார் பின் மலர்மடந்தை திருக்கழுத்தின் மங்கலநா ணென்ன முந்நூற், பெரு மார்பின் வந்தொளிரப் பிறப்பிரண்டா வதுபிறந்து சிறந்த பின்னர்" என்று கலிங்கத்துப்பரணி கூறுவதாலுமறிக இருபிறப்பாள ரெனினும் துவிஜரெனினு மொக்கும்.*

ii. " *மூன்று கடன்கழித்த பார்ப்பானும் " என்பது திரிகடுகம்.*

iii *முனிவர்கடன் கேள்வியா - (வேதாத்தியயனத்தா) லும், தேவர் கடன் வேள்வியா(யாகஞ்செய்வதா)லும்,தென்புலத்தார்கடன்புதல்வரைப்*

தேவர்கடன் வேள்வியானும், தென்புலத்தார்கடன் புதல்வரைப் பெறு தலானும் அல்லது இறுக்கப்படாமையின், iiii அக்கடனிறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல். அதிகாரமுறைமை மேலே பெறப்பட்டது.

*தெளி.—அஃதாவது இருபிறப்பாளர் மூவராலும் தருதியாகச்செலுத் தப்படும் கடன் மூன்றனுள், முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும், தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலாலும் அல்லது செலுத்தப்படாமையால், அக்கடன் செலுத்துதற்பொருட்டு நல்லமக்களைப் பெறுதலாம். அதிகாரமுறைமை முன்னே பெறப்பட்டது.*

க. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

பரி.—(இ-ள்). ஒருவன் பெறும் §§ பேறுகளுள் அறியவேண்டுவன அறிதற்குரிய மக்களைப் பெறுதல் அல்லது பிறபேறுகளை யாமதிப்ப தில்லை, (எ-று).

‡ *அறிவென்பது அறிதலைச் செய்வதென அத்தொழின்மே னின்றது. காரணமாகிய § உரிமை காரியமாகிய அறிதலைப் பயந்தேவிடு மாதலான், அத்துணிவுபற்றி 'அறிந்த' என † இறந்தகாலத்தாற் கூறினர். || 'அறிவறிந்த' என்றதனான் மக்களென்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது. இதனாற் புதல்வர்ப்பேற்றினது சிறப்புக் கூறப்பட்டது.*

---

*பெறுதலானும் அல்லது இறுக்கப்படாமையின்' என்பதன் பொருள் மனு தரும சாஸ்திரம் மூன்றா மத்தியாயத்தில் "வேதாதத்தி யயனத்தாலே ருஷிகளையும், ஓமத்தினாலே தேவர்களையும்,சிரார்த்தத்தினாலே பிதிர்க்களை யும்......திருப்தி செய்வித்தல் வேண்டும்" என்று கூறுவதாலும் நன்கு விளங்கும்.*

iiii *அக்கடனிறுத்தற் பொருட்டு-தென்புலத்தார் (பிதிர்க்கள்) கடனை (சிரார்த்த முதலியன செய்து) செலுத்தும் நிமித்தம்.*

§§ *புகழ், கல்வி, ஆற்றல், வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாளென்னும் பதினாறு பேறுகளுள்.*

‡ *அறிவதென்றும் பாடமுண்டு.* § *உரிமை - அறிவுடைமை.*

† *அறிதற்குரிய மக்களை 'அறிந்தமக்கள்' என இறந்தகாலத்தாற் கூறியது துணிவுபற்றி வந்த காலவழுவமைதி. துணிவு—தெளிவு.*

|| *மக்களென்னும் பொதுப்பெயர் அறிவறிந்த என்னுங் குறிப்பால் பெண்பாலை யொழித்து ஆண்பாலைக் காட்டியது பற்றி 'அறிவறிந்த' என்றதனான் மக்களென்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது' என்று கூறப்பட்டது. இவ்வாறு வருதல் ஒன்றொழி பொதுச்சொல் எனப்படும். ஈண்டு மக்களென்னும் பொதுப்பெயரில் பெண்ணை யொழித்து ஆணைக் கொண்டதற்கேது "நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும், பெண்*

தெளி.—(இ-ள்). பெறுமவற்றுள்—(ஒருவன்) பெறும் பேறுகளுள், அறிவறிந்த - அறியவேண்டுவனவற்றை யறிதற்குரிய, மக்கட்பேறல்ல - புதல்வரைப் பெறுதலல்லது, பிற - மற்றைப்பேறுகளை, யாம்—,அறிவதில்லை - மதிப்பதில்லை, (எ-று).

*அறிவென்னும் பண்புப்பெயர் அறிதலைச் செய்வதெனை அறிதலைச் செய்யு மத்தொழிலின்மேல் நின்றது. அறியவேண்டுவனவற்றை யறிதற்குக் காரணமாகிய வுரிமை காரியமாகிய அவ்வறிதலை யுண்டாக்கியே விடுமாதலின், அத்துணிவுபற்றி 'அறிந்த' என இறந்தகாலத்தாற் சொல்லினார். 'அறிவறிந்த' என்றதனால் மக்களென்னும் பெயர் பெண்பாலை ஒழித்து ஆண்பாலைக்காட்டி நின்றது. இதனால் புதல்வரைப் பெறுதலினது சிறப்புச் சொல்லப்பட்டது.*

(க-து). ஒருவன் பெறும் பேறுகளுள் அறிய வேண்டுவனவற்றை யறிதற்குரிய மக்கட்பேற்றின்மேம்பட்டபேறு இல்லை.

1. Among all the benefits that may be acquired, we know no greater benefit than the acquisition of intelligent children.

உ. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

பரி.—(இ-ள்). வினைவயத்தாற் பிறக்கும் பிறப்பேழின்கண்ணும் ஒருவனைத் துன்பங்கள் சென்றடையா, பிறராற் பழிக்கப்படாத நற்குணங்களையுடைய புதல்வரைப் பெறுவானாயின், (எ-று).

*அவன் தீவினை வளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரைப்பெறுவனாயின என்றவாறாயிற்று. பிறப்பேழாவன:— * "ஊர்வ பதினொன்று மொன்பது மானுட, நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ் - சீரிய, பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த, வந்தமில்*

*ளறி வென்பது பெரும்பேதை மைத்தே" "பேதைமை யென்பது மாதர்க் கணிகலம் " என்றற் றொடக்கத்தனவாய்வரும் பிரயோகங்களாம்.*

** இதன்பொருள் ஊர்ந்து செல்லும் பிராணிகளின் பிறப்பின்வகை பதினொன்று; மனிதப்பிறப்பின் வகை யொன்பது; நீரில்வாழும் பிராணிகள் பறவைகள் மிருகங்களாகிய இவற்றின் பிறப்பின் வகை தனித்தனிப் பத்துப்பத்து; சிறப்புப் பொருந்திய முறைமையினையுடைய தேவப்பிறப்பின் வகை பதினான்கு; பிரமனாற் படைக்கப்பட்ட முடிவில்லாத சீரினையுடைய நிலைத்திணையின் பிறப்பின் வகை யிருபது என்பது. இங்குத் தொகையாகு மெண்பத்து நான்கினையும் எண்பத்து நான்கு இலட்சமெனக் கொள்க, என்னை? "நானிலநீர் வைபமுட்டை நால்வகை யோனிசுரர், மானுட நீர் வாழ்பறவை மாகிருமி-ஞானமிலா, மண்பட்ட தாவரமென் றேழாய் வரும் பவநா, றெண்பத்தி னன்கா யிரம்" என்று கூறப்படுதலி னென்க.*

சீர்த் தாவரா லெக்து." தந்தைதாயர் தீவினை தேய்தற்பொருட் டவரை நோக்கிப் புதல்வர் செய்யுந் தானதருமங்கட் கவர் நற்குணங் காரணமாக லின், † பண்பென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மேனின்றது.

தெளி.—(இ-ள்). எழுபிறப்பும்—(வினைவசத்தினுற் பிறக்கும்) பிறப் பேழினும், தீயவை - துன்பங்கள், தீண்டா - (சென்று ஒருவனை) அடை யாவாம், பழிபிறங்கா - (பிறரால்) பழிக்கப்படாத, பண்புடை - நற்குணங் களையுடைய, மக்கட்பெறின் - புதல்வரைப் பெறுவானுயின், (எ-று).

அவன் தீவினைபெருகாது குறைதற்குக் காரணமாகிய நல்வினை களைச் செய்யும் புதல்வரைப் பெறுவானுனல் என்றவாறுயிற்று. பிறப்பே ழாவன:—தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவர மென்பனவாம், இவற்றின் யோனிபேதம் எண்பத்திளுன்கு நூறுயிரமாம். தந்தைதாய்களது தீவினை குறைதற் பொருட்டு அவரைக் குறித்துப் புதல் வர்செய்யும் தானதருமங்களுக்கு அவரது நற்குணம் காரணமாகலின் 'பண் பென்னுங் காரணப்பெயர்தானதருமமென்னுங்காரியத்தின்மேல்நின்றது.

(க-து). பழிக்கப்படாத நற்குணமுடைய புதல்வரைப் பெறு பவன் எழுவகைப் பிறப்பினுந் துன்பமடையான் என்பது.

2. The evils of the seven births shall not touch those who obtain children of a good disposition, and free from vice.

ரு. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும்.

பரி.—(இ-ள்). தம்புதல்வரைத் தம்பொருளென்று சொல்லுவர் அறிந்தோர்; அப்புதல்வர் செய்த் பொருள் தம்மை நோக்கி அவர் செய்யும் () நல்வினையானே த்ம்பால் வரும் ஆதலான், (எ-று).

தந்தம்வினை யென்புழித் தொக்குநின்ற ஆறும்வேற்றுமை "முருக னது குறிஞ்சிநிலம்" என்புழிப்போல, * உரிமைப் பொருட்கண் வந்தது. பொருள் செய்த மக்களைப் பொருளென † உபசரித்தார்.

இவை யிரண்டு பாட்டானும் நன்மக்கட்பெற்றூர் பெறும் மறுமைப் பயன் கூறப்பட்டது.

† நற்குணமென்னும் காரணப்பெயர் அக்குணத்தின்காரியமாய நல் வினைகளின்மேல் நின்றதுபற்றி 'பண்பென்னும் காரணப்பெயர் காரியத் தின்மேனின்றது' என்று கூறப்பட்டது.

() நல்வினை:—சிரார்த்தமுதலிய சற்கருமங்கள்.

* உரிமை - சுதந்தரம். "பொருளிடங் கால மிருவகை நூலெண, வுரி மையாய்த் தோன்ற லுரைக்கப் படுமே" என்பது இலக்கணக்கொத்து.

† உபசரித்தல் - உபசாரம். அஃதாவது ஒன்றன்தன்மையை மற் ரென்றன்மே லேற்றிக் கூறுவது. இது காரியம் காரணமாய வுபசார

தெளி:—(இ-ள்). தம்மக்கள் - தம்முடையபுதல்வரை, தம்பொருள் - தம்முடைய பொருள்கள், என்ப - என்றுசொல்லுவர் (அறிந்தோர்), அவர்பொருள் - அப்புதல்வர் சம்பாதித்த பொருள்கள், தந்தம் வினையால் - தம்மைக்குறித்து அவர் செய்யும் நல்வினையினுலே, வரும்—(தம்மிடத்து) வரும் (ஆதலால்), (எ-று).

தந்தம்வினையென்னு மிடத்துத் தொக்குநின்ற ஆறும் வேற்றுமை யுருபு உரிமைப் பொருளது. பொருள் சம்பாதித்த புதல்வரைப் பொரு ளென வுபசரித்துக் கூறினர். இவை யிரண்டு பாட்டாலும் நல்ல புத்திர ரைப் பெற்றோர் அடையும் மறுமைப் பயன் சொல்லப்பட்டது.

(க-து). புதல்வர் சம்பாதித்த பொருள்: அவர்செய்யும் நல்வி னை வாயிலாக மறுமையில் பயன் வடிவமாய்ப் பிதாவைச் சென் றடைதலால் அவர் அப்பிதாவிற்குப் பொருளெனப் படுகின்றனர்.

3. Men will call their sons their wealth, because it flows to them through the deeds which they (sons) perform on their behalf.

ச. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

பரி.—(இ-ள்). சுவையான் அமிழ்தத்தினு மிகவினிமை யுடைத்து; தம் மக்களது சிறுகையான் அளாவப்பட்ட சோறு, (எ-று).

சிறுகையான் அளாவலாவது § "இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து, நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்" தல்.

தெளி.—(இ-ள்). தம்மக்கள் - தம்முடைய மக்களது, சிறுகை-சிறிய கைகளால், அளாவிய - அளையப்பட்ட, கூழ் - சோறானது, அமிழ்தினும்-(சுவையினுல் மிகுந்த) அமிர்தத்தினும், ஆற்ற வினிது - மிகவு மினிமை யுடையதாம் (எ-று).

வழக்கு. பொருள் - காரியம், மக்கள் - காரணம். சிவப்பிரகாச சுவாமிகள் "ஆளினையே யருமரசென் பதுபோல வுபசாரிகம்" என்றார். காரணம் காரிய மாகவும், காரியம் காரணமாகவும், குணம் குணியாகவும், குணிவினை குண வினையாகவும், ஒருபொருளின் வினை மற்றொருபொருளின் வினையாக வும், இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மே லாகவும், சினை வினை முதல்வினையாகவும், பிறவாகவும் வரும்பொழுது உபசாரவழக்குக் கொள்ளப் படுகிறதென்க. இஃது இலக்கணையி லடங்கும். இதன் விரி வைப் பிரயோக விவேகம் "மருளதுகாரணம்" என்னும் செய்யுளி னுரை யிற் காண்க.

§ புறநானூறு ௱அ௮. இதன்பொருள் (தரையிலே) இட்டும், கூடப் பிசைந்து தோண்டியும், வாயாற் கவ்வியும், கையால் துழாவியும், நெய்யை யுடைய சோற்றை யுடம்பின்கண் படச் சிதறுதல் என்பது.

சிறுகையாலளாவலாவது - மக்கள் தாய்தந்தையரோடு உடனிருந்து உண்ணும்போது தங் கையாற்சோற்றைத் துழாவுதல் முதலியனவாம்.

(க-து). தாய் தந்தையருக்குத் தம்மக்கள் சிறுகையா லளாவிய சோறானது அமிர்தத்தினும் மிக வினியதாமென்பது.

4. The rice in which the little hand of their children has dabbled will be far sweeter (to the parent) than ambrosia.

௫. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

பரி.—(இ-ள்). ஒருவன் மெய்க்கின்பமாவது மக்களது மெய்யைத் தீண்டுதல்; செவிக்கின்பமாவது அவரது சொல்லைக் கேட்டல், (எ-று).

¶ மற்று - வினைமாற்று. மக்களது மழலைச் சொல்லே யன்றி அவர் கற்றறிவுடையராய்ச் சொல்லுஞ் சொல்லும் இன்பமாகலின், பொதுப் படச் 'சொல்' என்றார். § தீண்டல் கேட்டலென்னுங் காரணப்பெயர்கள் ஈண்டுக் காரியங்களின்மே னின்றன.

தெளி.—(இ-ள்). உடற்கு - (ஒருவனது) உடம்பிற்கு, இன்பம் - இன்பமாவது, மக்கண் - மக்களது, மெய் - உடம்பை, தீண்டல் - தொடுத லாம், செவிக்கு - (அவனது) காதிற்கு, இன்பம் - இன்பமாவது, அவர் - அவரது, சொல் - சொற்களை, கேட்டல் - கேட்டலாம், (எ-று).

மற்று - வினைமாற்றுப் பொருளது பிள்ளைகளது மழலைச்சொல்லே யன்றி அவர் நூல்களைக்கற்று அறிவுடையவராய்ச் சொல்லுஞ் சொல்லும் இன்பமாமாகலின், அவை யிரண்டிற்கும் பொதுப்படச் 'சொல்' என்றார், தீண்டலாலாய வின்பத்தைத் தீண்டலின்பமென்றும் கேட்டலாலாய இன் பத்தைக் கேட்ட லின்பமென்றும் கூறினார். இங்குக் காரணப்பெயர்கள் காரியஙகளின்மேல் நின்றவாறறிக.

(க-து). மக்க ளுடலைத் தொடுதல் உடற் கின்பமும், அவர் சொற்களைக் கேட்டல் செவிக் கின்பமுமாம் என்பது.

5. The touch of children gives pleasure to the body and the sound of their voice is pleasure to the ear.

¶ மற்றென்பது தீண்டலென்னும் வினையையொழித்துக் கேட்ட லென்னும் வினையைக் கூற மிடத்து வந்தமையின் வினைமாற்றுப் பொருளதாயிற்று.

§ தீண்டல் கேட்ட லென்னுந் தொழிற்பெயர்கள் அத்தொழில்களா லாய இன்பங்களை யீண்டுணர்த்துதல் பற்றி 'தீண்டல் கேட்ட லென்னுங் காரணப்பெயர்கள் ஈண்டுக் காரியங்களின்மே னின்றன' என்று கூறப் பட்டது. இது காரணங் காரியமாய வுபசாரவழக்காம். காரணம் - காரியத் திற்கு நியதமாய் முன்னிற்பது. காரியம் - முன்னின்மைக்கு எதிர்மறை.

௬. குழலினிது யாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

பரி.—(இ-ள்). குழலிசை யினிது யாழிசை யினிதென்று சொல்லுவர்; தம் புதல்வருடைய குதலைச்சொற்களைக் கேளாதவர், (எ-று).

* குழல் யாழ் என்பன ஆகுபெயர். கேட்டவர் அவற்றினு † மழலைச் சொல் இனி தென்ப ரென்பது ‡ குறிப்பெச்சம். இனிமைமிகுதிபற்றி மழலைச் சொல்லைச் சிறப்பு வகையானுங் கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும் இம்மைப்பயன் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). தம்மக்கள் - தம்முடைய புதல்வரது, மழலைச் சொல் - குதலைச்சொற்களை, கேளாதவர்—, குழல்-குழலினிசை, இனிது-, யாழ் - வீணையினிசை, இனிது - , என்ப - என்று சொல்லுவர், (எ-று).

குழல் யாழ் என்பன அவற்றி னிசைக்காதலின் ஆகுபெயர்கள். கேட்டவர் அவற்றி னிசையிலும் மழலைச்சொல் இனிதென்று சொல்லுவா ரென்பது குறிப்பெச்சம். இனிமை மிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்பு வகையாலும் சொல்லியவாறும்.

இவை மூன்று பாட்டாலும் இம்மைப்பயன் சொல்லப்பட்டது.

(க-து). தம்மக்களது மழலைச் சொற்களைக் கேளாதவர் புள்ளாங்குழலினிசை யினிதென்றும், வீணையினிசை யினிதென்றுஞ் சொல்லுவர் என்பது.

6. " The pipe is sweet, the lute is sweet, " say those who have not heard the prattle of their own children.

௭. ¶ தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

பரி.—(இ-ள்). தந்தை புதல்வனுக்குச் செய்யு நன்மையாவது கற்றோரவையத்தின்கண் அவரினு மிக்கிருக்குமாறு கல்வி யுடையனாக்குதல், (எ-று).

---

* குழல் (புள்ளாங்குழல்) யாழ் (வீணை) என்பன அவற்றாலாய ஓசைக் காதலின் கருவியாகு பெயராம்.

† மழலைச்சொல் - இளஞ்சொல். அஃதாவது சொல்வடிவம் நன்கு விளங்காதிருப்பது.

‡ குறிப்பெச்சம் - சொல்லாற்றல் பொருளாற்றல்களால் வேண்டி நிற்குஞ் சொற்கள் குறைந்து நிற்பது; குறிப்பா லுணரப்படுவ தென்சிநிற்றல்.

குறிப்பெச்சம்:—" குறிப்பின்கட்டோன்றிய வெச்சம்" என்பர் நச்சினார்க் கினியர்; இஃதருத்தாபத்தியின்பாற்படும்.

¶ " சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே" என்பது புறநானூறு.

பொருளுடைய னுக்குதன் முதலாயின துன்பம் பயத்தலின், நன்மை யாகாவென்பது கருத்து. இதனாற் றந்தை கடன் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). தந்தை - தகப்பனானவன், மகற்கு - புதல்வனுக்கு, ஆற்றும் - செய்யத்தகும், நன்றி-உபகாரமாவது அவையத்து - (கற்றவரது) சபையினிடத்து, முந்தியிருப்ப-(அவரினும்) மேம்பட்டிருக்கும்படி, செயல் - (கல்வியுடையவன்) ஆக்குதலாம், (எ-று).

பொருளுடையவ னுக்குதல் முதலானவை பின்னே துன்பத்தைத் தருதலின், அவை நன்மையைத் தருவனவாகா வென்பது கருத்து. இதனால் தநதை மைந்தனுக்குச செய்யுஙகடன் சொல்லப்பட்டது.

(க-து). பிதா பிள்ளைக்குச் செய்யும் உதவி கற்றோர் சபையில் அவன் கல்வியால் மேம்பட்டிருக்கச செய்தலாம் என்பது.

7. The benefit which a father should confer on his son is to give him precedence in the assembly of the learned.

அ. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

பரி.—(இ-ள்). தம்மக்களது அறிவுடைமை பெரியநிலத்து மன்னுநின்ற வுயிர்கட் கெல்லாந் தம்மினு மினிதாம், (எ-று).

ஈண்டறிவென்றது இயல்பாகிய அறிவோடு கூடிய கல்வி யறிவினை. மன்னுயி ரென்றது ஈண்டறி வுடை யார்மேனின்றது; அறிவுடைமைகண்டின்புறுதற்குரியவர் அவராகலின். இதனாற் § றாய் தந்தையரினும் அவையத்தார் உவப்பரென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). தம்மக்கள் - தம்மக்களது, அறிவுடைமை - அறிவுடைமையானது, மாநிலத்து - பெரியநிலத்தில், மன் - நிலைபெற்ற, உயிர்க்கெல்லாம்—உயிர்களுக்'கெல்லாம், தம்மின் - தமக்கு இனிய தாதலினும், இனிது - இனியதாயிருக்கும், (எ-று).

இங்கு அறிவென்றது இயற்கை யறிவோடு கூடிய கல்வி யறிவை. அறிவுடைமை கண்டு மகிழ்தற் குரியவர் அறிவுடையோ ராதலால் இங்கு மன்னுயிரென்றது அறிவுடையார்மேல் நின்றது. இதனால் தாய் தந்தையரிலும் அறிவுடையார் (சபையார்) பெரிதும் மகிழ்வரென்பது சொல்லப்பட்டது.

(க-து). மக்களது அறிவுடைமையைக் கண்டு அவரது தாய் தந்தையரினும் அறிவுடையார் பெரிதும் மகிழ்வர் என்பது.

8. That their children should possess knowledge is more pleasing to all the powerful creatures of this great earth than to themselves.

§ தந்தையினும் எனவும் பாடமுண்டு. இது பிறழ்ந்தபாடமாம்.

௯. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

பரி.—(இ-ள்). தான் பெற்றபொழுதை மகிழ்ச்சியினு மிகமகிழும், தன்மகனைக் கல்வி கேள்விகளால் நிறைந்தானென் றறிவுடையார் சொல்லக் கேட்ட தாய், (எ-று).

+ *கவானின்கட் கண்ட பொழுதுவகையினும் சால்புடைய னெனக் கேட்ட சிறப்புவகை பெரிதாகலின் 'பெரிதுவக்கும்' எனவும், பெண்ணியல்பாற் றானாக அறியாமையின் 'கேட்டதாய்' எனவுங் கூறினர் அறிவுடையாரென்பது வருவிக்கப்பட்டது; சான்றோ னெனற் குரியவர் அவராகலின். தாயுவகைக் களவின்மையின், அஃதிதனாற் பிரிந்துக் கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *தன்மகனை—,சான்றோனென - (கல்வி கேள்விகளினால்) நிறைந்தோனென்று (அறிவுடையார்) சொல்ல, கேட்டதாய்—, ஈன்ற பொழுதின் - (தான) பெற்றகாலத்து மகிழ்சசியிலும், பெரிதுவக்கும் - மிகமகிழ்வாள், (எ-று).*

*(ஈன்றபோது தனது) தொடையின்மீது மகனைக் கண்ட (போது உண்டாகிய) பொதுவாகிய மகிழ்சசியினும் அவன் நிறைந்த கல்வி கேள்விகளை யுடையவனென் றறிவுடையார் சொல்லக் கேட்ட (போது உண்டாகிய) சிறப்பாகிய மகிழ்சசி பெரிதாகலின் 'பெரிதுவக்கும்' எனவும், பெண்மைக் குணத்தினால் தானாக அறிய மாட்டாமையால் 'கேட்டதாய்' எனவும் சொல்லினர் அறிவுடையா ரென்பது வருவிக்கப்பட்டது; சான்றோனென்று அறிதற் குரியவர் அவராகையால். தாய் மகிழ்சசிக்கு அளவில்லாமையால், அஃது இதனால் பிரித்துச சொல்லப்பட்டது.*

(க-து). *தன் மகனைக் கல்வியறிவால் மேம்பட்டவனென் றறிஞர் சொல்லக்கேட்ட தாய் பெற்றகாலத்திலும் பெரு மகிழ்சசியடைவாள் என்பது.*

9. The mother who hears her son called "a wise man" will rejoice more than she did at his birth

௰. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

பரி.—(இ-ள்). கல்வியுடையவனுக்கிய தந்தைக்கு மகன் செய்யுங் கைம்மாறாவது தன்னறிவும் ஒழுக்கமுங் கண்டார் இவன் றந்தை இவனைப் பெறுதற் கென்னதவஞ் செய்தான்கொல்லோ என்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல், (எ-று).

---

+ *கவானின் மகற்கண்டபொழுதை யுவகையினும் என்றும் பாடமுண்டு. "வயாவும் வருத்தமு மீன்றக்கா னோவும், கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு" என்பது நாலடி.*

† சொல்லென்பது நிகழ்த்துதலாகிய தன் காரணந் தோன்ற நின்றது. நிகழ்த்துதல் அங்ஙனஞ் சொல்ல ஒழுகுதல். இதனாற் புதல்வன் கடன் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). தந்தைக்கு - (தன்னைக் கல்வியுடையவ னாக்கிய) தகப்பனுக்கு, மகன்—, ஆற்றும்-செய்யும், உதவி-பிரதியுபகாரமாவது, (தன்னறிவையும் ஒழுக்கத்தையுங் கண்டவர்) இவன்-இவனது, தந்தை-தகப்பன், (இவனைப்பெறுதற்கு), என் - என்னதவத்தை, நோற்றான்கொல் - செய்தானோ, என்னுஞ் சொல் - என்று சொல்லுஞ் சொல்லை (உண்டாக்குதலாம்), (எ-று).

சொல்லென்பது உண்டாக்குதலாகிய தன்காரணந்தோன்றுமாறு நின்றது. உண்டாக்குதல் - அப்படிச் சொல்ல நடத்தல். இதனால் புதல்வன் தந்தைக்குச் செய்யுங் கடன் சொல்லப்பட்டது.

(க-து). பிள்ளை பிதாவிற்குச செய்யு முதவி இவன் பிதா இவனைப் பெறுதற் கென்னதவஞ் செய்தானோ வென்று பிறர் சொல்ல வொழுகுதலாம்.

10. (So to act) that it may be said "by what great penance did his father beget him," is the benefit which a son should render to his father.

## நான்காம் அதிகாரம்.

## அன்புடைமை—Love.

பரி.—அஃதாவது அவ்வாழ்க்கைத் துணையும் புதல்வரு முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். இல்லறம் இனிது நடத்தலும் பிறவுயிர்கண்மேல் அருள பிறத்தலும் அன்பின்பய னாகலின்,இது வேண்டப்பட்டது. வாழ்க்கைத் துணைமேல் அன்பில்வழி இல்லறம் இனிது நடவாமை, * "அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலுந், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை" என்

† சொல்லென்னுங் காரியம் தனது காரணமாகிய நிகழ்சதுதலின்மேல் நின்றது. அது மகனது அறிவும் ஒழுக்கமுமாம்.

* சிலப்பதிகாரம் கொலைக்களக்காதை எக,எஉ,எங: இதன் பொருள் துறவாது விரதங்காப்பாராகிய (சாவக நோன்பிகளென்னும்) பிரமசாரிகளுக்கு அவர்கள் விரும்புவனவற்றைக் கொடுத்தலும், புலன்களைவிடமுயல்வாராய்த் துறவறத்தில் நின்ற அந்தணரென்னும் வானப்பிரஸ்தரைக்காத்தலும், சந்நியாசிகளை யெதிர்கொண்டு சென் றுபசரித்தலும், தொன்று தொட்டு நடைபெற்று வரும் ஒப்பற்ற சிறப்பினையுடைய அதிதிகளை யெதிர்சென்றழைத்துவந் தூண்பித்தலுமாகிய இவற்றை யிழந்த என்னை என்பது.

பதனுனும், † அதனு லருள் பிறத்தல், ‡ "அருளென்னு மன்பீன்குழவி" என்பதனுனு மறிக.

தெளி.—அஃதாவது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியும் புதல்வரும் முதலாகிய சம்பந்த முடையவரிடத்து ஆசையுடையவனாயிருக்கை. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும். இல்லறத்தைச் செவ்வையாக நடத்தலும் பிற வுயிர்களின்மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயனாதலால், இது வேண்டப்பட்டது. இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியின்மீது அன்பில்லாவிடத்து இல்லறம் செவ்வையாக நடைபெறாதெனவும் அந்த அன்பினால் அருளுண்டாகு மெனவுமறிக.

க. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

பரி.—(இ-ள்). அன்பிற்கும் பிறரறியாம லடைத்துவைக்குந் தாழுளதோ? தம்மா லன்புசெய்யப்பட்டாரது துன்பங்கண்டுழி அன்புடையார் கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே உண்ணின்ற அன்பினை யெல்லாரும் அறியத்தூற்றும் ஆதலான், (எ-று).

உம்மை சிறப்பின்கண் வந்தது. ஆர்வலரது புன்மை கண்ணீர்மேலேற்றப்பட்டது. காட்சியளவைக் கெய்தாதாயினும் § அனுமான வளவையான் வெளிப்படு மென்பதாம்.

---

† அதனு லருள்பிறத்தல் - அவ்வன்பினால் அருளுண்டாதல். அருளாவது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா வுயிர்களின் மேலுஞ் செல்வதாகிய கருணை.

‡ திருக்குறள் பொருள்செயல் வகை எ. அன்பென்னு மன்னையாலீனப்பட்ட அருளென்னுங்குழந்தை யென்பது.

§ குறியாராய்ச்சி அனுமானமெனப்படும். ஈண்டனுமான மாமாறு:— இராம னிலக்குவனிடத் தன்புடையான்; இலக்குவனது துன்பங் கண்டவிடத்து இராமனதுகண்களி லழுகைநீர்வருதலின், என்பது. இதுபற்றி இறையனாரகப் பொருள் "அன்பினைந்திணை" என்னுஞ் சூத்திரவுரையில் நக்கீரனார் "அன்பினைந்திணை யென்றவிடத்து அன்பு அறிந்தே னயினன்றே அன்பினுடைய ஐந்திணையும் அறிவதெனின், அது குடத்துள் விளக்கும் தடத்துள் வாளும்போல இதுகாண் அன்பென்றுதந்துகாட்டலாகாது, அன்புடையாரானகுணங் கண்டவிடத்து இவையுண்மையான் இங்கு அன்புண்டென்று அனுமித்துக் கொள்ளற்பாற்று" என்றும், தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் "ஆங்கவையொருபால்" என்னுஞ் சூத்திர வுரையில் நச்சினார்க்கினியர் "அன்பென்பது அருட்கு முதலாகி மனத்தி னிகழும் நேயம்; அஃதுடையார்க்குப் பிறர்கட் டுன்பங் கண்டவழிக் கண்ணீர் விழுமாகலின் அவ்வருளானே அன்புடைமை விளங்கு மென்பது. இவையெல்லாம் தத்த மனத்தி னிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப் பட்டன" என்றும் கூறியவாற்றானு மறிக.

*இதனால் அன்பினதுண்மை உணர்த்தப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *அன்பிற்கும் - அன்பினுக்கும், அடைக்கும் - (பிறரறியாமல்) அடைத்துவைக்கும், தாழ் - தாழும், உண்டோ - ,(தம்மால் அன்பு செய்யப்பட்டவரது துன்பங் கண்டவிடத்து), ஆர்வலர் - அன்புடையாரது, புன்கணீர் - (பொழிகின்ற) புல்லியகண்ணீரே, பூசறரும் - (உள்ளேயிருக்கின்ற அன்பினை எல்லாரும் அறியத்) தூற்றும் (ஆதலால்), (எ-று).*

*உம்மை அன்பைச் சிறப்பித்து நிற்றலின் உயர்வுசிறப்பும்மை. அன்புடையாரது புன்மை அவரது கண்ணீர்மேலேற்றப்பட்டது. அன்பு பிரத்தியட்சப் பிரமாணத்திற்கு வெளிப்படாதாயினும் அனுமானப் பிரமாணத்தால் வெளிப்படுமென்பதாம். தாழ் - தாழ்ப்பாள், ஓ - எதிர்மறை. தூற்றும் - வெளிப்படுத்தும்.*

*இதனால் அன்பினது உண்மை உணர்த்தப்பட்டது.*

(க-து). *அன்பு செய்யப்பட்டவரது துன்பத்தைக் கண்டவிடத்து அன்புடையவரது கண்ணினின்றுவருமழுகைநீரே யுள்ளிருக்கின்ற அன்பை வெளிப்படுத்து மென்பது.*

1. Is there any fastening (that can shut in) love ? The sorrowful tear of the affectionate will publish the love that is within.

---

உ. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

**பரி.—(இ-ள்). அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளாலும் தமக்கே உரியர்; அன்புடையார் அவற்றனே யன்றித் தம்முடம்பாலும் பிறர்க்குரியர், (எ-று).**

*ஆனுருபுகளும் பிரிநிலை ஏகாரமும் விகாரத்தாற் றொக்கன.* ‡ *என்பு - ஆகுபெயர். என்புமுரியராதல்* ¶ "*தன்னகம் புக்க குறுநடைப் புறவின்,*

---

‡ *என் (எலும்) பென்னுஞ் சிறப்புச் சினைப்பெயர் அதன் முதலாகிய வுடம்பிற் காதலின் சினையாகுபெயர். பொதுமைச்சினை சினையாகு பெயராய் வருதலின்று.*

¶ *புறநானூறு, சங. இதன்பொருள்: தன்னிடத்தை யடைந்த குறிய நடையையுடைய புறவினது அழிவினைக் கண்டஞ்சித் (தன்னழிவிற் கஞ்சாது) தராசுத் தட்டிலேறிய சிபிச்சக்கரவர்த்தி என்பது. சிபிச் சக்கரவர்த்தி (தன்னைப் பரிட்சிக்குமாறு) புறாவடிவெடுத்து வந்து தன்னிடத்து அடைக்கலம் புகுந்த அக்கினியினிமித்தம் அப்புறாவைத் துரத்தி வந்த வேட வடிவங்கொண்டுள்ள இந்திரனுக்குத் தனது மாமிசத்தை யறுத்துத் தராசுத்தட்டில் வைத்து நிறுக்கும்போது, புறாவினெடைக்கு*

*றபுதிகண் டஞ்சித்" துலைபுக்கோன் ¶ முதலாயினோர்கட் காண்க.*

தெளி.—(இ-ள்). *அன்பிலார் - அன்பில்லாதவர், (பிறர்க்குப் பயன் படாமையால்), எல்லாம் - எல்லாப்பொருள்களாலும், தமக்கு - தமக்கே, உரியர்-உரியவராவர், அன்புடையார்-, (அவற்றாலே யல்லாமல்), என்பும் - (தம்) உடம்பாலும், பிறர்க்கு - , உரியர் - உரியவராவர், (எ-று).*

*எல்லா வற்றானும் என்பானுமென்ற ஆனுருபுகளும் தமக்கே என்ற பிரிநிலை யேகாரமுஞ் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றன. என்பு உடம்பிற் காதலால் ஆகுபெயர். என்பு முரியராகுதல் புறவிற்காகத் துலை யேறிய சிபி முதலாயினோரிடத்துக் காண்க.*

(க-து). *அன்பில்லாதவர் எல்லாப் பொருளானுந் தமக்கே யுரியவரும் அன்புடையவர் பிறர்க்குப் பொருளையேயன்றித் தம் முடம்பையுங் கொடுக்க வுரியவருமாவர் என்பது.*

2. Those who are destitute of love appropriate all they have to themselves; but those who possess love consider even their bones to belong to others.

---

ரு. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

பரி.—(இ-ள்). பெறுதற்கரிய மக்களுயிர்க் குடம்போ டுண்டாகிய தொடர்ச்சியினை அன்போடு பொருந்துதற்கு வந்த நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர், (எ-று).

*பிறப்பின தருமை பிறந்த வுயிர்கண்மேல் ஏற்றப்பட்டது.* * இயை

---

*மாமிசத்தின் எடை குறைவானது கண்டு,தானே யத்தராசுத்தட்டிலேறிய சமயத்தில் அவ்விரு தேவரும் பிரத்தியட்சமாகி யச்சக்கரவர்த்திக்கு வேண்டிய வரங்களைத் தந்து போயினாரென்பது கதை. இக்கதையின் விரிவைப் பாரதம் ஆரண்ணிய பருவத்திற் காண்க. இச்சக்கரவர்த்தியைப் பற்றி இராமாயணம் "பறவை மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினான்" என்றும், "புறவொன்றின் பொருட்டால் யாக்கை புண்ணுற வரிந்த புத்தேள்" என்றும் கூறுகின்றது.*

¶ *முதலாயினோர் என்பதனால் தமது முதுகெலும்பை விருத்திராசுரனை வெல்லும் பொருட்டு இந்திரனுக்குக் கொடுத்த ததீசி முனிவரே யன்றி, தனது மரணத்தைக் கருதாது தன்னுடன் பிறந்துள்ள கவச குண்டலங்களை அந்தணவடிவங் கொண்டுவந்து யாசித்த இந்திரனுக்குக் கொடுத்த கர்ணனையும் பிறரையுங் கொள்க.*

* *அன்போடியையவந்த (அன்போடு பொருந்துதற்குவந்த) என்பது அன்போடியைந்த என்று வந்தமையின், இயைந்த (பொருந்திய) என்பது ஒருவினை அதனோடு சம்பந்தமுடைய மற்றொரு வினைக்காய உபசார*

ந்த வென்ப துபசார வழக்கு. † வழக்கு - ஆகுபெயர். உடம்போ டியைந் தல்லது அன்புசெய்ய லாகாமையின், அது செய்தற் பொருட் ‡ டித் தொடர்ச்சி யுளதாயிற்றென்பதாம். ஆகவே, இத்தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமையென் றுயிற்று.

தெளி.—(இ-ள்). ஆருயிர்க்கு - பெறுதற்கரிய மனிதருயிர்க்கு, என் போடு - உடம்போடு, இயைந்த - உண்டாகிய, தொடர்பு - சம்பந்தத்தை, அன்போடு - , இயைந்த - பொருந்துவதற்குவந்த, வழக்கு - வழியின்பய னும், என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர், (எ-று).

(மனிதப்) பிறப்பினது அருமை பிறந்த (அப்பிறப்பினை யடைந்த) உயிர்களின்மேல் ஏற்றப்பட்டது. இஃதுடைமையின் தரும முடையான் மேலாய உபசார வழக்காம். இயைந்த என்பது இயையவந்த என்பதற்காத லின் இஃது முபசார வழக்காம். வழக்கென்பது அதன் பயனுக்காதலின் ஆகுபெயர். வழக்கு - நீதி, உடம்போடு கூடி யல்லாமல் அன்பு செய்தல் கூடாமையால், அவ்வன்பு செய்தற்பொருட்டு இத்தொடர்ச்சி யுண்டாயிற் றென்பதாம். ஆகவே, இத்தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமையென் றுயிற்று.

(க-து). உயிருக்கு மக்களுடம்போ டுண்டாகிய சம்பந்தம் அன் போடு பொருந்துதற்கு வந்த வழியின் பயனும் என்பது.

3. They say that the union of Atma and in man is the fruit of the union of love and virtue (in a former birth).

௪. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

பரி.—(இ-ள்). ஒருவற்குத் தொடர்புடையார் மாட்டுச் செய்த அன்பு அத்தன்மையாற் பிறர்மாட்டும் விருப்ப முடைமையைத்தரும்; அவ்விருப்ப முடைமைதான் இவற்குப் பகையும் * நொதுமலும் இல் லையாய் யாவரு நண்பென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத் தரும் (எ-று).

உடைமை-உடையனுந் தன்மை; யாவரு நண்பாதல் எல்லாப் பொருளு மெய்துதற் கேதுவாகலின், அதனை 'நாடாச்சிறப்பு' என்றார்.

---

வழக்காம். அன்பினைப்பற்றிப் பிரபுலிங்கலீலை "துறவற மனைய றஞ்சேர் தூய்மைநற் கல்வி நல்லோர், உறவொடு மகங்க டான மொண்டவம் விரதம், பூசை, யறிவிவை யனைத்து மில்லை யாதர வில்லை யாயின்" என்று கூறுகின்றது.

† வழக்கினுலாய பயனை வழக்கென்றது கருவியாகுபெயர்.

‡ இத்தொடர்ச்சி - உயிர்க்கு (மக்கள்) உடம்போ டுண்டான சம்பந்தம்.

* விருப்பிற்கும் வெறுப்பிற்கும் விஷயமாகாதிருப்பது நொதும லெனப்படும். இங்கே நொதுமல் பகைநட்பில்லார்மேல் நின்றது.

தெளி.—(இ-ள்). அன்பு (ஒருவனுக்குச் சம்பந்த முடையவரிடத்துச் செய்த) அன்பானது, (அத்தன்மையினால்) ஆர்வமுடைமை - (பிறரிடத்தும்) விருப்ப முடைமையை, ஈனும் - தரும், அது - அவ்விருப்ப முடைமையானது, நண்பென்னும் - (இவனுக்குப் பகைவரும் நொதுமலருமில்லையாய் யாவரும்) நட்பினரென்று சொல்லப்படுகிற, நாடாச்சிறப்பு - அளவிறந்த சிறப்பை, ஈனும் - தரும், (எ-று).

ஆர்வ முடைமை - விருப்பமுடையவனாகுந் தன்மை. யாவரும் நட்பினராதல் எல்லாப் பொருளையும் அடைதற்குக் காரணமாமாதலின், அதனை 'நாடாச் சிறப்பு' என்றார்.

(க-து). அன்பு பிறரிடத்து விருப்பத்தையும் அவ்விருப்பம் அவராது சிநேகத்தையும் தரும் என்பது.

4. Love begets desire and that (desire) begets the immeasurable excellence of friendship.

ரு. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

பரி.—(இ-ள்). அன்புடையராய் இல்லறத்தோடு பொருந்திய நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர், இவ்வுலகத்து இல்வாழ்க்கைக்கணின்று இன்பநுகர்ந்து அதன்மேற் றுறக்கத்துச் சென்றெய்தும் பேரின்பத்தினை, (எ-று).

வழக்கு - ஆகுபெயர். இல்வாழ்க்கைக்கணின்று மனைவியோடும், மக்களோடும், ஒக்கலோடுங் கூடி யின்புற்றார் தாஞ்செய்த ‡ வேள்வித்தொழிலாற் றேவராய் ஆண்டும் இன்புறுவாராகலின் 'இன்புற்றா ரெய்துஞ் சிறப்பு' என்றார். தவத்தாற் றுன்புற் றெய்துந் துறக்க இன்பத்தினை ஈண்டும் இன்புற் றெய்துதல் அன்பானன்றி யில்லையென்பதாம்.

தெளி.—(இ-ள்). அன்பு - அன்பை, உற்று - உடையவராகி, அமர்ந்த - (இல்லறத்தோடு) பொருந்திய, வழக்கு - வழியின் பயனாகும், என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர், வையகத்து - இவ்வுலகத்தில், இன்புற்றார் - (இல்வாழ்க்கையில் நின்று) இன்பத்தை யனுபவித்தவராகி, எய்தும் - (அதன்பின்னே விண்ணுலகத்திற் சென்று) அடையும், சிறப்பு - பேரின்பத்தினை, (எ-று).

வழக்கு அதன் பயனுக்காதலின் ஆகு பெயர். இல்வாழ்க்கையில் நின்று மனைவியோடும், மக்களோடும், சுற்றத்தாரோடும் கூடி இன்பமுற்றவர் தாம் செய்த வேள்வித் தொழிலினால் தேவராய்ப் பிறந்து அவ்விடத்திலும் இன்பத்தை யனுபவிப்பாராகலின் 'இன்புற்றா ரெய்துஞ் சிறப்பு'

‡ வேள்வி - விரும்பிச்செய்வது. ஈண்டிஃது ஐம்பெரும் வேள்வியையும் குறித்துநின்றது.

என்றார். தவத்தினால் துன்பமுற்று அடையும் விண்ணுலக வின்பத்தை இவ்விடத்திலு மின்பமுற்றடைத லன்பாலன்றி இல்லையென்பதாம்.

(க-து). விண்ணுலகி லடையும் பேரின்பம் மண்ணுலகில் இல்வாழ்க்கையிற் பொருந்திய அன்பின் பயனும் என்பது.

5. They say that the felicity (of heaven) and the happiness (of earth) are the fruit of virtue and love (in the conjugal) state.

௬. அறத்திற்கே யன்புசார் பேன்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

பரி.—(இ-ள்). அன்பு துணையாவது அறத்திற்கே யென்று சொல்லுவர் சிலரறியார்; ஏனைமறத்திற்கும் அவ்வன்பே துணையாவது, (எ-று).

ஒருவன் செய்த பகைமைபற்றி உள்ளத்து † மறநிகழ்ந்துழி அவனை நட்பாகக் கருதி அவன்மே லன்புசெய்ய அது நீங்குமாகலின், மறத்தை நீக்குதற்குந் துணையாமென்பார் 'மறத்திற்கு மஃதே துணை' என்றார்; ‡ "துன்பத்திற் கியாரே துணையாவார்" என்புழிப்போல.

இவை ஐந்துபாட்டானும் அன்பினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அறியார் - அறியாதவர் (சிலர்), அன்பு - அன்பானது, சார்பு - துணையாவது, அறத்திற்கே - தருமத்திற்கே, என்ப - என்று சொல்லுவார், மறத்திற்கும் - (மற்றைய) மறத்தை நீக்குவதற்கும், அஃதே - அவ்வன்பே, துணை - துணையாவது, (எ-று).

ஒருவன் செய்த பகைமையினால் மனத்தினிடத்து மறந்தோன்றிய விடத்து அவனை நட்பாக நினைத்து அவன்மேல் அன்புசெய்ய அவ்வன்பினால் அம்மறம் நீங்கு மாதலின், மறத்தை நீக்குதற்குந் துணையாமென்பார் 'மறத்திற்கு மஃதே துணை' என்றார்.

இவை யைந்துபாட்டாலும் அன்பினது சிறப்புச் சொல்லப்பட்டது.

---

† மறம் - சினம். "கோபம் நீட்டித்து நிற்கின்றது சினம்" என்பர் நச்சினார்க்கினியர்.

‡ திருக்குறள் நெஞ்சொடு புலத்தல் ௯. இதன்பொருள் துன்பத்தை நீக்குவதற்குத் துணையாயிருக்கின்றவர்களெவர் என்பது. மறத்திற்கும் என்பதில் நீக்குவது என்பதை நடுவே கூட்டி 'மறத்தை நீக்குவதற்கும்' என்று கொண்டது துமர்த்தம் எனப்படும். துன்பத்திற்கு என்றவிடத்து துன்பத்தை நீக்குவதற்கு எனப் பொருளுரைத் திருப்பதிலும் நீக்குவது என்பது இடையேகூட்டியிருத்தலறிக. பிரயோகவிவேகநூலார் காரகபடலம் 16-வது செய்யுளினுரையில் "பூவிற்குச் சென்றான்" 'துன்பத்திற் கியாரே துணையாவார்' 'மறத்திற்கு மஃதேதுணை' 'பிணிக்குமருந்து' என்பவற்றின்கண் பறித்தல் நீக்குதல் என நடுவேபெய்து பொருளுரைத் துத் துமர்த்தமென்பதுங் கொள்க" என்று கூறியிருத்தலு மறிக.

(க-து). அன்பு அறத்திற்கே யன்றி மறத்தை நீக்குதற்குந் துணையாம் என்பது.

6. The ignorant say that love is an ally to virtueouly, but it is also a help to get out of vice.

எ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

பரி.—(இ-ள்). என்பில்லாத வுடம்பை வெயில்காய்ந்தாற்போலக் காயும், அன்பில்லாத வுயிரை அறக்கடவுள், (எ - று).

என்பில தென்றதனுன் உடம்பென்பதூஉம், அன்பில தென்றதனுன் உயிரென்பதூஉம் பெற்றும். வெறுப்பின்றியே யெங்கும் ஒரு தன்மைத்தாகிய வெயிலின்முன் * என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறு போல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லது தன்னியல்பாற் சென்றுகெடு மென்பதாம். † அதனைக் ‡ காயுமென வெயி லறங்களின்மே லேற்றினுர்; ¶ அவற்றிற்கும் அவ்வியல் புண்மையின். இவ்வாறு § "அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" எனப் பிறருங் கூறினுர்.

தெளி.—(இ-ள்). என்பிலதனை - எலும்பில்லாத வுடம்பை, வெயில் போல - வெயில் காய்ந்தாற் போல, அன்பிலதனை - அன்பில்லாத வுயிரை, அறம் - அறக்கடவுள், காயும் - வருத்தும், (எ-று).

ஏ-அசைநிலை. என்பிலதென்றதனுல் உடம்பென்பதும், அன்பிலதென்றதனுல் உயிரென்பதும் பெறப்பட்டன. வெறுப்பில்லாமலே எங்கும் ஒரு தன்மையதாகிய வெயிலின்முன்னே புழு தனதியல்பாற் சென்று கெடும் வகைபோல அப்படிப்பட்டதாகிய அறத்தின்முன்னே அன்பில்லாத வுயிர் தனதியல்பாற் சென்று கெடுமென்பதாம். வெயிலின் முன்பும் அறத்தின் முன்பும் என்பில்லதும் அன்பில்லதும் தம்மியல்பாற் சென்று கெடுவதனைக் காயுமென்று வெயிலின்மேலும் அறத்தின்மேலுமேற்றிக்கூறினுர்; அவ்விரண்டற்கும் அக்காயுந்தன்மை யிருத்தலினென்க. இஃதொன்றன் தருமம் மற்றென்றற்காய வுபசார வழக்காம்.

(க-து). அன்பில்லாதவனை அறக்கடவுள் வருத்தும். ()

7. Virtue will burn up the Atma which is without love, even as the sun burns up the creature which is without bone.

* என்பில்லது - புழு. † அதனை—அவ்வாறு கெடுவதனை. ‡ காய்தல்—காய்ந்து கொல்லுதல்.

¶ அவற்றிற்கும் அவ்வியல்புண்மையின்—வெயிலுக்கும் அற (தரும) த்திற்கும் காய்தற் றன்மை யிருக்கின்றமையின்.

§ நான்மணிக்கடிகை - 85: இதன்பொருள் பாவத்தொழிலைச் செய்பவருக்குத் தருமதேவதை யமனுகும் என்பது.

அ. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை † வன்பாற்கண்
‡ வற்றன் மரந்தளிர்த் தற்று.

பரி.—(இ-ள்). மனத்தின்கண் அன்பில்லாத வுயிர் இல்லறத்தோடு கூடிவாழ்தல் வன்பாலின்கண் வற்றலாகியமரந் தளிர்த்தாற்போலும்.

*கூடாதென்பதாம். வன்பால்-வன்னிலம். § வற்றலென்பது பால்விளங்கா அஃறிணைப் படர்க்கைப்பெயர்.*

தெளி.—(இ-ள்). *அகத்து - மனத்தின்கண், அன்பில்லா வுயிர் - அன்பில்லாத வுயிரானது, வாழ்க்கை-(இல்லறத்தோடுகூடி) வாழ்தலானது, வன்பாற்கண் - வன்பாலென்னும் பாலை நிலத்தில், வற்றன்மரம் - உலர்ந்ததாகிய மரமானது, தளிர்த்தற்று - தளிர்த்தாற் போலும், (எ-று).*

*பாலை நிலத்தில் வற்றல்மரம் தளிர்த்தல் கூடாதுபோல அன்பின்பில்லாதவ னில்லறத்தோடு கூடிவாழ்தல் கூடாதென்பதாம். வன்பால்-கடினமாகிய பூமி. வற்றலென்பது பால்பகா வஃறிணைப்பெயர்.*

(க-து). *அன்பில்லாதவன் இல்லறத்தோடு கூடி வாழுதல் பயனுடையதாகாது என்பது.*

8. The domestic state of that man whose mind is without love, is like the flourishing of a withered tree upon the parched desert.

௯௰. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

பரி.—(இ-ள்). யாக்கை யகத்தின்கணின்று இல்லறத்திற் குறுப்பாகிய அன்புடைய ரல்லாதார்க்கு ஏனைப் புறத்தின்கணின்று உறுப்பாவனவெல்லாம் அவ்வறஞ்செய்தற்கண் என்ன வுதவியைச் செய்யும்.

** புறத்துறுப்பாவன:—இடனும் பொருளும் ஏவல்செய்வாரு முதலாயின. துணையொடு கூடாதவழி அவற்றாற் பயனின்மையின் 'எவன் செய்*

---

*† வன்பார்க்கண் என்றும் பாடமுண்டு.*

*‡ "வற்றன் மரம்போ னிற்பேனே" என்பது திருவாசகம்.*

*§ வற்றல் என்பது வினைமுதற் பொருளுணர்த்தும் அல்லீற்றுத் தொழிற்பெயர். அதன்பொருள் வற்றுவ தென்பது; அதன்கண் ஒன்றன்பாலிற்குரிய விகுதியாவது பலவின்பாலிற் குரிய விகுதியாவது இல்லாமை பற்றி 'வற்றலென்பது பால்விளங்கா அஃறிணைப் படர்க்கைப் பெயர்' என்று கூறப்பட்டது. வற்றன் மரம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.*

** "இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற், றெல்லா மிருந்து மவற் கென்செய்யும்" என்பது நன்னெறி.*

யும்' என்றார். † உறுப்புப்போறலின் உறுப்பெனப் பட்டன. $ யாக்கையிற் கண் முதலிய வுறுப்புக்களெல்லாம் என்னபயனைச்செய்யும்; மனத்தின்கண் உறுப்பாகிய அன்பில்லாதார்க்கென் றுரைப்பாருமுளர். ‡ அதற்கு இல்லறத்தோ டியாது மியைபில்லாமை யறிக.

தெளி.—(இ-ள்). யாக்கையகத்து - உடம்பினகத்தில் (நின்று), உறுப்பு - (இல்லறத்திற்கு) அங்கமாகிய, அன்பிலவர்க்கு - அன்புடையராகாதவர்க்கு, புறத்து - மற்றைப்புறத்தில் (நின்று), உறுப்பெல்லாம் - அங்கமாவனவெல்லாம், எவன் - (அவ்வறஞ் செய்தலில்) என்னவுதவியை, செய்யும்—, (எ-று).

புறத்துறுப்பாவன:—இடமும் பொருளும் ஏவல் செய்வாரு முதலாயினவாம். அன்பாகிய துணையோடு கூடாதவிடத்து அவ்விடமும் பொருள் முதலியவற்றாற் பயனில்லாமையால் 'எவன் செய்யும்' என்றார். உறுப்பையொத்திருத்தலின் இடமுதலானவை உறுப்பெனப்பட்டன. அகம்-உள்.

(க-து). இல்லறத்திற் குறுப்பாய உள்ளன்பில்லா தார்க்கு இடம் பொருள் முதலிய வற்றால் யாதும் பயனின்றாம் என்பது.

9. What will all the external members (of the body) avail those who are destitute of love, the internal member of the body?

---

கo. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

பரி.—(இ-ள்). அன்புமுதலாக அதன்வழிநின்றவுடம்பே உயிர்நின்ற வுடம்பாவது ; அவ்வன்பில்லாதார்க் குளவான வுடம்புகள் என்பினைத் தோலாற் போர்த்தனவாம், உயிர்நின்றனவாகா, (எ-று.)

இல்லறம் பயவாமையின் * அன்னவாயின. இவை நான்குபாட்டானும் அன்பில்வழிப்படுங் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அன்பின்வழியது - அன்புமுதலாக அவ்வன்பின் வழியில் நின்ற உடம்பே, உயிர்நிலை - உயிர்நின்ற உடம்பாகும், அஃதி

---

† உறுப்பு (அவயவம்) போன்ற இடம் பொருள் முதலியவற்றை உறுப்பு என்றது உவமை யாகுபெயர்.

$ யாக்கை - உடம்பின்கண், புறத்துறுப்பெல்லாம் - கண் முதலிய அவயவங்களெல்லாம், எவன் செய்யும் - என்னபயனைச்செய்யும், அகத்து - மனத்தின்கண், உறுப்பன்பி லவர்க்கு - அங்கமாகிய அன்பில்லாதவர்க்கு என்று பொருள் கூறுவாரு முளர்.

‡ அதற்கு இல்லறத்தோடியாது மியைபில்லாமை-அவ்வுரைக்கு இல்லறத்தோடு யாதொரு சம்பந்தமு மில்லா திருப்பதை.

* அன்னவாயின - எலும்பினைத்தோலால் மூடிய உடம்புகளாயின.

லார்க்கு - அவ்வன்பில்லாதார்க்கு (இருப்பனவாய), உடம்பு - உடம்புகள் என்பு - எலும்பை, தோல் - தோலினால், போர்த்த - போர்த்தனவாம், (உயிர்நின்ற வுடம்பாகா), (எ-று).

இல்லறத்தின் பயனைத் தாராமையின் அப்படிப்பட்ட வுடம்புகளாயின. இவை நான்கு பாட்டாலும் அன்பில்லாதவிடத் துண்டாகுங் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து). அன்புடையவரே யுயிருடையோராவர், அஃதில்லாதவர் பிணத்திற் கொப்பாவர் என்பது.

10. That body alone which is inspired with love, is the dwelling place of Atma; the body of those who are without love is merely bone covered with skin.

## ஐந்தாம் - அதிகாரம்.

## விருந்தோம்பல்—On Hospitality.

பரி.—(இ-ள்). அஃதாவது † இருவகை விருந்தினரையும் புறந்தருதல். தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துண் முன்னைய விரண்டுங் கட்புலனாகாதாரை நினைந்து செய்வன வாகலானும், பின்னைய விரண்டும் பிறர்க்கீத லன்மையானும், இடை நின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்று. வேறுகாத அன்புடையிருவர் கூடியல்லது செய்யப்படாமையின், இஃதன்புடைமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது இருவகையாய விருந்தினரையு முபசரித்தல். தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்னும் ஐந்திடத்துஞ் செய்யும் அறங்களுள், முன்னுள்ள இரண்டும் கண்ணுற் காணுதவரை நினைத்துச் செய்வன வாதலாலும், பின்னுள்ள இரண்டும் பிறர்க்குக் கொடுத்த லல்லாமையாலும், நடுநின்ற விருந்தோம்பல் சிறப்பை யுடையதாகி இல்லறங்களுக்கு முதலாயிற்று. வேறுபாடில்லாத அன்பை யுடைய கணவனும் மனையாளும் கூடியல்லது விருந்தோம்பல் செய்யக் கூடாமையால், இஃது அன்புடைமையின்பின் வைக்கப்பட்டது.

க. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

† இருவகை விருந்தினர் - முன்னறிந் திருக்கின்றமை பற்றி வந்த அதிதிகளும் அஃதில்லாமைபற்றி வந்த அதிதிகளுமாவர். சமைத்துண்டு வாழாதவர் அதிதிகளெனப்படுவர். இதனை "அட்டுண்டு வாழ்வார்க் கதிதிகளென்ஞான்றும், அட்டுண்ணு மாட்சி யுடையவர்" என்று அறநெறிச்சாரங் கூறுதலானுமறிக. எனவே, அவர்கள் இல்வாழ்வோராகா ரென்பது பெற்றாம்.

பரி.—(இ-ள்). மனைவியோடும் வனத்திற் செல்லாது இல்லின்க ணிருந்து பொருள்களைப் போற்றிவாழுஞ் செய்கையெல்லாம் விருந்தி னரைப்பேணி அவர்க்குபகாரஞ் செய்தற்பொருட்டு, (எ-று).

*எனவே, வேளாண்மை செய்யாவழி இல்லின்க ணிருத்தலும் பொ ருள் போற்றலுங் காரணமாக வருந் துன்பச் செய்கைகட் கெல்லாம் பய னில்லை என்பதாம்.*

தெளி.—(இ-ள்). *(மனைவியோடுங் காட்டிற் செல்லாமல்) இல் - இல் லினிடத்து, இருந்து - , ஓம்பி - (பொருள்களைக்) காப்பாற்றி, வாழ்வ தெல்லாம் - வாழுஞ் செய்கையெல்லாம், விருந்து - விருந்தினரை, ஓம்பி- உபசரித்து, வேளாண்மை - (அவ்விருந்தினர்க்கு) உபகாரத்தை, செய்தற் பொருட்டு - செய்தற்பொருட்டாம், (எ-று).*

*எனவே, உபகாரஞ் செய்யாதவிடத்து இல்லி லிருத்தலும், பொரு ளைச் சம்பாதித்துக் காப்பாற்றலும் காரணமாக உண்டாகின்ற துன்பச் செயல்களுக் கெல்லாம் பயனில்லை யென்பதாம்.*

*(க-து). இல்வாழ்க்கையி விருந்து வாழ்வது விருந்தினரை யுபசரித்து உபகாரஞ்செய்தற் பொருட்டாம் என்பது.*

1. The whole design of living in the domestic state and laying up (property) is(to be able) to exercise the benevolence of hospitality.

உ. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

பரி.—(இ-ள்). உண்ணப்படும் பொருள் அமிர்தமே யெனினும் தன்னை நோக்கி வந்த விருந்து தன் இல்லின் புறத்ததாகத் தானே யதனை யுண்டல் விரும்புதன் முறைமை யுடைத்தன்று, (எ-று).

*சாவாமருந்து - சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. * விருந்தின் றியே ஒருகாற் றுணுண்டலைச் சவாமருந்தென்பா ருளராயினும், அதனை ஒழிகவென் றுரைப்பினும் அமையும். இவை யிரண்டு பாட்டானும் விருந் தோம்பலின் சிறப்புக் கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *சாவா மருந்தெனினும் - (உண்ணப்படும்பொருள்) அமிர்தமேயாயினும், விருந்து-(தன்னை நோக்கிவந்த) விருந்தினர், புறத்த தாக - (தன்வீட்டின்) புறத்திருக்க, தானுண்டல் - தானே (அவ்வமிர்*

---

** தன்னைநோக்கி வந்த விருந்தினர் தன்வீட்டின் புறத்தே இருக்க அவரோடுண்ணுதலில்லாமலே ஒருமுறை யொன்றைத்தானுண்ணுதலைச் சாவாமருந்து (அமிர்தம்) என்று தாபிப்பா ரிருப்பாராயினும் அவ்வாறுண் ணுதலை யொழிக என்பதாம்.*

தத்தை) உண்ணுதல், வேண்டற் பாற்றன்று - விரும்பும் முறைமையை யுடையதன்றாம், (எ-று).

சாவாமருந்து - இறவாதிருத்தற்குக் காரணமாகிய மருந்து. விருந்து புறத்ததாக - விருந்தின்றியே, தானுண்டல் - (ஒருகால்) தானுண்டலே, சாவாமருந்தெனினும் - சாவாமருந்தென்று கூறவாருளராயினும், வேண்டற்பாற்றன்று-அதனை யொழிக என்றுரை கூறினும் பொருந்தும். இவையிரண்டு பாட்டாலும் விருந்தோம்பலின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து). ஒருவன் தன்னை நோக்கி வந்த விருந்தினரை விட்டுத் தானேயுண்ணுதல் தகாது என்பது.

2. It is not fit that one should wish his guests to be outside (his house) even though he were eating the food of immortality.

ரு. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

பரி.—(இ-ள்). தன்னைநோக்கி வந்த விருந்தை நாடோறும் புறந்தருவானதில்வாழ்க்கை நல்குரவான் வருந்திக் கெடுதலில்லை, (எ-று).

நாடோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற் பொருள் தொலையாது மேன்மேற் கிளைக்கு மென்பதாம்.

தெளி.—(இ-ள்). வருவிருந்து - (தன்னைநோக்கி) வந்த விருந்தினரை, வைகலும் - நாள்தோறும், ஓம்புவான் - உபசரித்து வருபவனது, வாழ்க்கை - இல்வாழ்க்கையானது, பருவந்து - (வறுமையால்) வருந்தி, பாழ்படுதலின்று - கெடுதலில்லை, (எ-று).

தினந்தோறும் விருந்தினரை யுபசரித்து வருபவனுக்கு அதனாற் பொருள் குறையாமல் மேலுமேலும் வளருமென்பதாம்.

(க-து). தன்னிடத்து வந்த விருந்தினரை யுபசரிப்பவனது வாழ்க்கை கேடடைவதில்லை என்பது.

3. The domestic life of the man that daily entertains the guests who come to him, shall not be laid waste by poverty.

ச. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

பரி.—(இ-ள்). திருமகள் மனமகிழ்ந்து வாழா நிற்கும், முகமினியனாய்த் தக்க விருந்தினரைப் பேணுவானது இல்லின்கண், (எ-று).

மனமகிழ்தற்குக் காரணம் தன் செல்வம் நல்வழிப்படுதல். தகுதி - ஞான வொழுக்கங்களா னுயர்தல். இதனாற் பொருள் கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு.

தே ளி.—(இ-ள்). முகனமர்ந்து-முகமலர்ச்சியுடையனாய், நல்விருந்து-தகுந்த விருந்ினரை, ஓம்புவான் - உபசரிப்பவனது, இல் - வீட்டினிடத்து, செய்யாள் - இலக்குமி, அகனமர்ந்து - மனமகிழ்ந்து, உறையும் - வாழாநிற்பள், (எ-று).

இலக்குமி மனமகிழ்தற்குக் காரணம் தன்செல்வம் நல்வழியிற்பயன் படுதலாம். விருந்தினர்க்குத் தகுதியாவது ஞானத்தினாலும், ஆசாரத்தினாலும் மேம்படுதல். இதனால் பொருள் வளர்தற்குக் காரணம் சொல்லியபடி.

(க-து). விருந்தினரை யுபசரிப்பவனது வீட்டில் செல்வம் நிலைபெற்றிருக்கும் என்பது.

4 Lakshmi with joyous mind shall dwell in the house of that man who with cheerful countenance entertains the good as guests.

ரு. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

பரி.—(இ-ள்). முன்னே விருந்தினரை மிசைவித்துப் பின் மிக்கதனைத் தான் மிசைவானது விளைபுலத்திற்குவித்திடுதலும்வேண்டுமோ, வேண்டா, (எ-று).

கொல்லென்பது அசைநிலை. * தானே விளையுமென்பது குறிப்பெச்சம். இவை மூன்று பாட்டானும் விருந்தோம்புவார் இம்மைக்கணெய்தும் பயன் கூறப்பட்டது.

தேளி.—(இ-ள்). விருந்தோம்பி - (முன்னே) விருந்தினரையுண்பித்து (பின்), மிச்சில் - மிகுந்த வுணவை, மிசைவான் - (தான்) உண்பவனது, புலம் - விளைநிலத்திற்கு, வித்து மிடல் - விதை விதைத்தலும், வேண்டுங்கொல் - வேண்டுமோ, (வேண்டுவதில்லை), (எ-று).

கொல்லென்பது அசைநிலை. (விளைநிலம் ஒருவர் வித்திட வேண்டாமலே) தானே விளையுமென்பது குறிப்பெச்சம். இவை மூன்று பாட்டாலும் விருந்தோம்புவார் இம்மையிலடையும் பயன் சொல்லப்பட்டது.

---

* (திருவாசகம்) "விச்ச தின்றியே விளைவு செய்குவாய் விண்ணுமண்ணக முழுது மியாவையும்" என்பதற்கு (சிவவாக்கியம்) "வித்திலாத சம்பிரதாய மேலுமில்லை கீழு மில்லை" என்பது பற்றிப் பிறிதொரு காரணங் கருதப் படுவது போன்று, விளைநிலம் வித்திடுதலின்றித் 'தானே விளையும்' என்பதற்கும் பிறிதொரு காரணங் கொள்ளல் வேண்டும். அஃதாவது விருந்தினரை முன்னே யுண்பித்துப் பின்னே தானுண்ணுவானது விளைநிலத்தில் தெய்வந்தானே வித்திட்டு விளையச் செய்யுமென்பதாம். காரணம் பிரசித்தமாய்க் காணப்படாமைபற்றித் 'தானேவிளையும்' என்று கூறப்பட்டது. காரணம் பிரசித்தமா யறியப்படாதனவற்றைப் பிறிதொரு காரணமின்றியே தாமே யுண்டாயினவென் றுரைக்கும் வழக்குண்மை சுயம்புலிங்கம் என்பதனாலு மறிக.

(க-து). விருந்தினரை யுபசரிப்பவனது விளைநிலந் தானே விளையும் என்பது.

5. Is it necessary to sow seed in the field of the man who having feasted his guests eats what may remain?

சு. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு.

பரி.—(இ-ள்). தன்கட்சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக் கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண்ண இருப்பான் மறு பிறப்பிற் றேவனாய் வானினுள்ளார்க்கு நல்விருந்தாம், (எ-று).

† வருவிருந்தென்பது இடவழுவமைதி. நல்விருந்து - ‡ எய்தா விருந்து. இதனான் மறுமைக்கணெய்தும் பயன் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). செல்விருந்து - (தன்னிடத்து)வந்த விருந்தினரை, ஓம்பி-உபசரித்து, வருவிருந்து - (பின்) வரத்தக்க விருந்தினரை, பார்த்து - எதிர்நோக்கி, இருப்பான் - (தான் அவரோடுண்ண) இருப்பவன் (மறு பிறப்பில் தேவனாய்), வானத்தவர்க்கு - வானிலுள்ள தேவருக்கு, நல்விருந்து - நல்ல விருந்தினனாவான், (எ-று).

தன்மை முன்னிலைகளுக்குரிய வருசொல் விருந்தென்னும் படர்க்கை யோடு கூடி வந்தது இடவழுவமைதியாம். நல்விருந்து - கிடைத்தற்கரிய விருந்தினர். இதனால் மறுமையிலடையும் பயன் சொல்லப்பட்டது.

(க-து). வந்த விருந்தினரை யுபசரித்து வரும் விருந்தினர்க் கெதிர்பார்த் திருப்பவன் மறுமையில் தேவர்களுக்குச் சிறந்த விருந்தினனாவன் என்பது.

6. He who, having entertained the guests that have come, looks out for others who may yet come, will be a welcome guest to the inhabitants of heaven.

---

† (தொல்காப்பியம்) "தருசொல் வருசொல் லாயிரு கிளவியும், தன்மை முன்னிலை யாயீ ரிடத்த" என்னும் விதிப்படி தன்மை முன்னிலை யென்னு மிரண்டிடங்களுக்கு முரிய வருசொல் விருந்தென்னும் படர்க்கையிடத்தோடு கூடிவந்தமைபற்றி 'வருவிருந்தென்பது இடவழுவமைதி' என்று கூறப்பட்டது. இலக்கணப் பிழை யுடையதாயினும் அறிவுடைய முன்னோரா லங்கீகரித் தமைக்கப்பட்டது வழுவமைதியெனப்படும்.

‡ எய்தாவிருந்து-விதுரர் வீட்டிற்குக் கண்ணபிரானும் அப்பூதியடிக ளில்லத்திற்கு அப்பர்சுவாமிகளும் விருந்தாகச் சென்றாற் போல்வது.

எ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

**பரி.—(இ-ள்). விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் இன்ன வளவிற் றென்பதோ ரளவுடைத்தன்று; அதற்கு அவ்விருந்தின் றகுதி யளவே அளவு, (எ-று).**

** ஐம்பெருவேள்வியி லொன்றாகலின் 'வேள்வி' என்றும், பொரு ளளவு † "தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" ஆகலின் 'இனைத்துணைத்தென்ப தொன்றில்லை' என் றுங் கூறினர். இதனான் இருமையும் பயத்தற்குக்காரணங் கூறப்பட்டது.*

*தெளி.—(இ-ள்) வேள்விப்பயன் (விருந்தினரை யுபசரித்தலாகிய) வேள்வியினது பயன், இனைத்துணைத்தென்பது-இன்னவளவின தென்ப தாகிய, ஒன்றில்லை - ஓரளவினை யுடையதன்று, (அப்பயனுக்கு), விருந் தின் - அவ்விருந்தினரது, துணை-(தகுதி) அளவே, துணை - அளவாம், ().*

*பிரமயாகம், தேவயாகம், பூதயாகம், பிதிர்யாகம், மனிதயாகம் என் னும் ஐம்பெருவேள்வியில் மனிதயாகம் என்னும் விருந்தோம்பலும் ஒன்*

---

** "கிருகஸ்தன் யந்திரம் அல்லது முறம், அம்மி, துடைப்பம், உரல் உலக்கை, தண்ணீர்க்குட மென்னு மிவ்வைந்தினையு முபயோகப் படுத்திக் கொள்ளுவதால் அவனுக்கு ஐவகைக் கொலைப்பாவங்க ளுண்டாகின்றன". "அவ்வைந்து பாவங்களையும் போக்குவதற்காக மகரிஷிகளால் தினந் தோறும் ஐந்து மகா யக்ஞயங்கள் கிருகஸ்தனுக்குக் கிரமமாக விதிக்கப்பட் டிருக்கின்றன". "அவ்வைந்து யக்கியங்களில் வேதமோதுதல் பிரமயக்கி யம். அன்னத்தினாலாவது ஜலதருப்பணத்தினாலாவது பிதிர்க்களைக் குறித் துத் திருப்தி செய்வது பிதிர்யக்யம். தேவதைகளைக்குறித்து அக்கினியி லோமஞ் செய்வது தேவயக்யம். வாயச (காக்கை) பலி முதலானவை வைப்பது பூதயக்யம். அதிதிகளுக் குணவிடுவது மானுடயக்யம். ஆக மகா யக்யம் ஐந்து". "இவ்வைந்து மகாயக்யங்களையுந் தன் சக்திக்குத் தக்கபடி யெவன் செய்கிறானோ அவன் கிருகஸ்தாசிரமத்தி லிருந்தபோதிலும் மேற் சொன்ன ஐந்து கொலைகளின் தோஷங்களையுமடைவதில்லை" என்று மனு தருமசாஸ்திரம் மூன்றாமத்தியாயத்தில் ஐம்பெரும் வேள்வி செய்வதற் கேதுசொல்லப்பட் டிருக்கின்றது." ஒண்பிரம மேவேத மோதுதலோ மம்வளர்த்தல், எண்டெய்வ மீதல்பலி யேபூதம் - ஒண்டொடியீர், எண் ணீர்க் கடனிற்ற லேபிதிர் விருந்தோம்பல், அண்ணீர்மை மானுடயாகம்" என்னும் வெண்பாவினாலும் ஐம்பெரும் வேள்வியின் தன்மை யுணர்தற் பாற்றாம்.*

*† நாலடியார் அறன்வலி யுறுத்தல், அ.*

*இதன்பொருள்:- அறமார்க்கத்திற் செலுத்தப்படும் பொருள் அற்பமா யிரு ப்பினும் யோக்கியர் கையிற் சேர்ந்தால் ஆகாயமும் அற்பமாகும்படி மூடி விடும் (பொருள் கொடுத்ததினாலாய பயன் விருத்தியாகும்) என்பது.*

ருகலின் 'வேள்வி' என்றும், பொருளளவு சிறிதாயினும் சற்பாத்திரத்திற் சேர்ந்ததாயின் அதன் பயன் மிகப்பெரிதாமாகலின் 'இனைத்துணைத்தென்ப தொன்றில்லை' என்றும் சொல்லினர். இதனால் இம்மைப்பயன் மறுமைப் பயனென்னு மிரண்டையுந் தருதற்குக் காரணம் சொல்லப்பட்டது.

(க-து). விருந்தினரை யுபசரிப்பதன் பயன் அவ்விருந்தின ரது தகுதியினளவே யளவாம் என்பது.

7. The advantages of benevolence cannot be measured; the measure (of the virtue) of the guests (entertained) is the only measure.

அ. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

பரி.—(இ-ள்). நிலையாப்பொருளை வருந்திக் காத்துப் பின் அதனை யிழந்து இதுபொழுது யாம் பற்றுக்கோடில மாயினேமென்றிரங்குவர், அப்பொருளான் விருந்தினரை யோம்பி வேள்விப்பயனை யெய்தும் பொறியிலாதார், (எ-று).

‡ "ஈட்டிய வொண்பொருளைக்,காத்தலு மாங்கே கடுந்துன்பம்" ஆக லின் 'பரிந்தோம்பி' என்றார். ‖ வேள்வி - ஆகுபெயர்.

தெளி.—(இ-ள்). விருந்து - விருந்தினரை, ஓம்பி - (நிலையாப்பொ ருளைக்கொண்டு) உபசரித்து, வேள்வி - வேள்வி[illegible]யனை, தலைப்படாதார்- அடையும் அறிவிலாதவா, பரிந்தோம்பி - (அந்நிலையாப்பொருளை) வருந் திக் காத்து, (பின்பு அப்பொருளை யிழந்து), பற்றற்றேம் - (இப்போது யாம்) ஆதாரமிலமாயினேம், என்பர் - என்றிரங்குவார், (எ-று).

சம்பாதித்த பொருளைக் காத்தலும் பெருந்துன்ப மாதலால் 'பரிந் தோம்பி' என்றார். வேள்வி அதன்பயனுக்காதலின் ஆகுபெயர்.

(க-து). விருந்தினரை யுபசரியாதவர் பொருளைக் காப்பாற்றி வினை யிழந்தோ மென்றிரங்குவர் என்பது.

8. Those who have taken no part in the benevolence of hospitality shall (at length lament) saying, "we have laboured and laid up wealth and are now without support."

‡ நாலடியார் ஈயாமை - ம். இதன்பொருள் சம்பாதித்த நல்ல பொரு ளைக் காப்பாற்றுவது மப்படியே மிகுந்த துன்பம் என்பது.

‖ வேள்வி யென்பது அதனாலாய பயனுக்காதலால் கருவியாகு பெயராம்.

கூ. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

பரி.—(இ-ள). உடைமைக் காலத் தின்மையாவது விருந்தோம்பலை யிகழும் பேதைமை; * அஃதறிந்தார்மாட்டு உளதாகாது, பேதையார் மாட்டே யுளதாம், (எ-று).

*உடைமை - பொருளுடையனாந் தன்மை. பொருளாற் கொள்ளும் பயனை இழப்பித்தது உடைமையை இன்மையாக்கலின், † மடமையை இன்மையாக வுபசரித்தார். பேதைமையான் விருந்தோம்பலை யிகழின், பொருள் நின்றவழியும் அதனாற் பயனில்லை யென்பதாம். இவையிரண்டு பாட்டானும் விருந்தோம்பாவழிப்படுங் குற்றம் கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). உடைமையுள் - (பொருள்) உடையவனாயிருக்குங் *காலத்து, இன்மை - வறுமையாவது, விருந்தோம்பல் - விருந்தினரை யுபசரித்தலை, ஓம்பா - (விரும்பாது) இகழும், மடமை - பேதைமையாகும், (அஃது அறிந்தாரிடத் துளதாகாது), மடவார்கண்-அறிவில்லாதவ[illegible]டத்தே, உண்டு-உளதாம், (எ-று).*

*மடமையானது பொருளாற் கொள்ளும் பயனை இழக்கச்செய்து உடைமையை இல்லாமையாக்கலால், அம்மடமையை இன்மையாக உபசரித்தார். பேதைமையால் விருந்தோம்புதலை இகழ்ந்தால், பொருளிருந்த விடத்தும் அப்பொருளால் பயனில்லை யென்பதாம. இவை யிரண்டு பாட்டாலும் விருந்தோம்பாத விடத்து உண்டாகுங் குற்றஞ் சொல்லப்பட்டது.*

(க-து). *செல்வத்துள் வறுமையாவது விருந்தினரை யுபசரியாமை. அஃதறிவி[illegible]ா ரிடத் துண்டு என்பது.*

9. That stupidity which exercises no hospitality is poverty in the midst of wealth. It is the property of the stupid.

கய. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

பரி.—(இ-ள்). அனிச்சப்பூ () மோந்துழி யன்றிக் குழையாது; ‡ விருந்தினர் முகம் வேறுபடு நோக்கக் குழைவர், (எ - று).

* *அஃ தறிவுடையவர்மாட் டென்றும் பாடமுண்டு.*

† *உடைமைக் காலத்து இன்மைக் கேதுவாகிய (விருந்தோம்பலையிகழும்) பேதையை இன்மை யென்று (காரணத்தைக் காரியமாகக்) கூறியது பற்றி 'மடமையை இன்மையாக வுபசரித்தார்' என்று கூறப்பட்டது. இது காரணம் காரியமாய வுபசாரவழக்கு. காரணம்-மடமை; காரியம்-இன்மை.*

() *மோந்துழியன்றிக் குழையாது-மோந்தவிடத்தல்லாமல் வாடாது.*
‡ *"ஓரிராத்திரி பரியந்தம் புதிதாகவந்திருப்பவன் அதிதியெனக் கருதத்தக்கவன்; நாடோறும் வாராது ஒருகாலத்து வருபவனுக்கு அதிதி என்று பெயர்." மனு - 3 வது அத்தியாயம்.*

¶ அனிச்சம்-ஆகுபெயர். § செய்மைக்கட் கண்டுழி இன்முகமும் அது பற்றி நண்ணியவழி இன்சொல்லும், ‡ அது பற்றி உடன்பட்டவழி நன்றாற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள், முதலாய இன்முகம் இல்வழிச் செய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், தீண்டியவழி அல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியரென்பதாம். இதனான் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டுமென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அனிச்சம் - அனிச்சப்பூவானது, மோப்ப - மோந்தவிடத்து, குழையும் - வாடும், (அதுபோல), விருந்து - விருந்தினர், முகந்திரிந்து-முகம் வேறுபட்டு, நோக்க - பார்க்க, குழையும் - வாடுவர், (எ-று).

அனிச்சம்-பொருளாகுபெயர். தூரத்திற் கண்டவிடத்து முகமலர்ச்சி காட்டலும், அம்முகமலர்ச்சி பற்றிச் சமீபத்தில் வந்தவிடத்து இன்சொற் சொல்லுதலும், அவ்வின்சொற்பற்றி உடன்பட்டபோது உபசாரஞ் செய்தலும் என்று விருந்தோம்புவார்க்கு அவசியமிருக்கவேண்டிய மூன்றனுள் முதலாவதாகிய முகமலர்ச்சி யில்லாதபோது விருந்தினர் தூரத்திலிருந்தே முகம்வாடிநீங்குதலால் தீண்டிய விடத்தல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியரா யிருப்பரென்பதாம். இதனால் விருந்தோம்புவார்க்கு முதலில் முகமலர்ச்சி வேண்டு மென்பது சொல்லப்பட்டது.

(க-து). விருந்தினர் தம்மை இல்வாழ்வார் முகம்வேறுபட்டுப் பார்த்தபோது தாமும் முகம்வேறுபட்டு நீங்கிப்போவர் என்பது.

10. As the Anicham flower fades in smelling, so fades the guest when the face is turned away.

## ஆறாம் அதிகாரம்.

## இனியவைகூறல்—On Sweetness of Speech.

பரி.—அஃதாவது மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனியசொற்களைச் சொல்லுதல். இதுவும் விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதாகலின், விருந்தோம்பலின் பின் வைக்கப்பட்டது.

---

¶ அனிச்சமென்பது ஒரு மரவிசேடம்; அஃதீண்டு அதன் பூவிற்காதலின் பொருளாகு பெயராம்.

§ "வந்த விருந்து மலராத வதன நோக்கு முன்குழையு
மந்த வடைவா லகத்தன்பை யலர்ந்த முகத்தான் வெளிப்படுத்திச்
சந்த மணிவா யினுந்தோன்றச் சீற்றும் வஞ்சங் கலவாமே
யுந்துஞ் சுவையின் மொழியென்று முரைதத்தல் வேண்டும் பயன்வே
[ண்டின்"—.விநாயகபுராணம்.

‡ அவை பற்றி என்றும் பாடமுண்டு.

தெளி.—அஃதாவது மனத்திலுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துவனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதலாம். இதுவும் விருந்தோம்புவார்க்கு அவசியம் வேண்டியதாகலின், விருந்தோம்பலின் பின் வைக்கப்பட்டது.

க. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

பரி.—(இ-ள்). இன்சொலாவன அன்போடு கலந்து வஞ்சனையிலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயிற் சொற்கள், (எ-று).

† ஆல் - அசைநிலை. அன்போடு கலத்தல் - அன்புடைமையை வெளிப்படுத்தல். படிறின்மை - வாய்மை. மெய்யுணர்ந்தார் நெஞ்சிற் கெல்லாஞ் செம்மை யுடைத்தாய்த் தோன்றலின், அறம் 'செம்பொருள்' எனப்பட்டது. இலவாஞ்சொல்லென இயையும். ‡ வாயென வேண்டாது கூறினார்; தீயசொற்பயிலா வென்ப தறிவித்தற்கு. இதனான் இன்சொற் கிலக்கணங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). இன்சொல் - இனியசொற்களாவன, ஈரமளைஇ-அன்போடு கலந்து, படிறிலவாம் - வஞ்சனை யில்லாதனவா யிருக்கின்ற, செம்பொருள் - அறத்தினை, கண்டார் - அறிந்தவரது, வாய்ச்சொல் - வாய்ச்சொற்களாகும், (எ-று).

ஆல் - அசை. அன்போடு கலத்தல் - அன்புடைமையை வெளிப்படுத்துதல். படிறின்மை - மெய்ம்மை. மெய்யுணர்ந்தவர் மனத்துக்கெல்லாம் செம்மையுடையதாய்த் தோன்றலால், அறம் 'செம்பொருள்' எனப்பட்டது. இலவாஞ் சொல்லெனக்கூட்டுக. தீயசொற்களைக் கூறுதல என்பதறிவித்தற்கு வாய் எனவேண்டாது சொல்லினர். இதனால் இனிய சொல்லுக்கு இலக்கணம் சொல்லப்பட்டது.

---

† ஆல் - சொலால் என்பதிலுள்ள ஆல்.

‡ கண்டார்சொல் என்பதே போதுமானதாயிருக்க அவ்வாறுகூறாது, வேண்டுதலில்லாத 'வாய்' என்பதனைக் கூட்டிக் 'கண்டார்வாய்ச்சொல்' எனக் கூறியது 'தீயசொற்பயிலா' எனத் தாம்வேண்டியதை முடித்தற்கென்க. இதனை "ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய, வழுக்கியும் வாயாற் சொலல்" என்னுங் குறளுரையில் "சொல்லெனவே அமைந்திருக்க 'வாயால்' எனவேண்டாது கூறினர்; நல்லசொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு" என்றும், "துறந்தாரிற் றூய்மையுடையர்" என்னுங் குறளுரையில் "வாய் எனவேண்டாது கூறினர்; தீயசொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதனிழிபு முடித்தற்கு" என்றும் கூறுவதாலுமுணர்க. இவ்வாறு வேண்டாதுசொல்லுஞ் சொல் விதப்புக் கிளவியெனப்படும். "விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்" என்பது சூத்திரம்.

(க-து). *அறத்தினை யறிந்தவரது வாய்ச் சொற்களே இனிய சொற்களாம் என்பது.*

1. Sweet words are those which imbued with love and free from deceipt flow from the mouth of the virtuous.

௨. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

பரி.—(இ-ள்). நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டிய தொருபொரு ளைக்கொடுத்தலினும் நன்று, கண்டபொழுதே முகமினியனாய் அதனோடு இனிய சொல்லையு முடையனாகப் பெறின், (எ-று).

*† இன்முகத்தோடு கூடிய இன்சொல் ஈதல்போலப் பொருள்வயத் ததன்றித் தன்வயத்த தாயினும், அறநெஞ் சுடையார்க்கல்ல தியல்பாக வின்மையின், அதனினும் அரிதென்னுங் கருத்தான் 'இன்சொலனாகப் பெறின்' என்றார்.*

தெளி.—(இ-ள்). *முகனமர்ந்து - (கண்ட பொழுதே) முகமலர்ச்சி யுடையவனாய், இன்சொலனாக - (அதனோடு) இன்சொல்லையு முடையவனாக, பெறின்-(ஒருவன்) பெற்றால் (அது), அகனமர்ந்து - மனமகிழ்ந்து, ஈதலின் - (ஒருவனுக்கு வேண்டியதொரு பொருளைக்) கொடுத்தலினும், நன்று - நல்லதாம், (எ-று).*

*முகமலர்ச்சியோடு கூடிய இன்சொல் கொடுத்தல் போலப் பொருள் வசத்ததாகாமல் தன்வசத்ததாயிருந்தாலும், அவ்வின்சொல் தருமசிந்தை யுடையவர்க் கல்லது பிறர்க்குச் சுபாவமாக விராதாகையால், அக்கொடுத்த லினும் இன்சொற்சொல்லுதல் அரிதென்னுங்கருத்தால் 'இன்சொலனா கப்பெறின்' என்றார்.*

(க-து). *ஒருவன் முகமலர்ந்தினிய சொற்களைச் சொல்லுவா னாயின், அஃதொருவனுக்கு மனமகிழ்ந்து பொருளைக்கொடுத்தலி னுஞ்சிறந்ததாம் என்பது.*

2. Sweet speech, with a cheerful countenance is better than a gift made with a joyous mind.

௩. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்.

---

*† "ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்த
லோகோ கொடிது கொடிதம்மா".—நீதிநெறிவிளக்கம்.*

பரி.—(இ-ள்). கண்டபொழுதே முகத்தான் விரும்பி யினிதாக நோக்கி, பின் நண்ணியவழி மனத்துடனாகிய இனிய சொற்களைச் சொல்லுதலின் கண்ணதே அறம், (எ-று).

† நோக்கி யென்னும் வினையெச்சம் இன்சொலென அடையடுத்து நின்ற முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது. $ அறம் ஈதலின் கண்ண தன்றென்றவாறு. இவை யிரண்டு பாட்டானும் இன்முகத்தோடு கூடிய இன்சொல் முன்னரே பிணித்துக் கோடலின் விருந்தோம்புதற்கட் சிறந்த தென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அறம் - தருமமானது, முகத்தானமர்ந்து-(கண்ட போதே) முகத்தால் விரும்பி, (முகமலர்ச்சி காட்டி), இனிதுநோக்கி-இனி தாகப் பார்த்து, (பின்சேர்ந்த விடத்து), அகத்தானாம் - மனத்துடனாகிய, இன்சொலினதே-இனிய சொற்களைச் சொல்லுதலி னிடத்ததே, (எ-று).

நோக்கியென்னும் வினையெச்சம் இன் (இனிமை) என்னு மடையடுத்து நின்ற சொல்லென்னு முதனிலைத் தொழிற்பெயரைக் கொண்டது. அறமானது இன்சொல்லினிடத் துண்டாவதன்றி ஈகையினிடத்துண் டாவதன் றென்பதாம். இவை யிரண்டு பாட்டாலும் முகமலர்ச்சியோடு கூடிய இன்சொல் முன்னாகவே விருந்தினரைப் பற்றிக் கொள்ளுதலால் விருந்தோம்புதலிற் சிறந்ததென்பது சொல்லப்பட்டது.

(க-து). அறம் இன்சொல்லி னிடத்ததே யாம் என்பது.

3. Sweet speech, flowing from the heart, (uttered) with a cheerful countenance and a sweet look is true virtue.

ச. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

பரி.—(இ-ள்). எல்லார்மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன் சொல்லை யுடையார்க்குத் துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு இல்லை யாம், (எ-று).

நா முதலிய பொறிகள் சுவை முதலிய புலன்களை நுகராமை யுடைமையின் ‡ 'துவ்வாமை' என்றார். யார்மாட்டும் இன்புறா உமின்சொ

† நோக்கி யென்னும் வினையெச்சம் இன்னென்னுமடையடுத்து நின்ற சொல்லென்னு முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது என்றும் பாடமுண்டு.

$ இன்சொல் விளைநிலனா வீதலே வித்தாக, வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி, யன்புநீர் பாய்ச்சி யறக்கதி ரீனவோர், பைங்கூழ் சிறுகாலைச்செய்.—அறநெறிச்சாரம்.

‡ துப்பு - அனுபவம், துவ்வாமை—அனுபவியாமை; எனவே, அது வறுமையாயிற் றென்க.

லவர்க்குப் பகையும் கொதுமலு மின்றி உள்ளது நண்பேயாம்;ஆகவே,அவர் எல்லாச் செல்வமு மெய்துவரென்பது கருத்து.

தெளி.—(இ-ள்). யார்மாட்டும் - எல்லாரிடத்தும், இன்புறாஉம்-இன்பத்தை மிகச்செய்யும், இன்சொலவர்க்கு-இனியசொற்களை யுடையவர்க்கு, துன்புறாஉம் - துன்பததை மிகச்செய்யும், துவ்வாமை - வறுமையானது, இல்லாகும் - இல்லையாம், (எ-று).

நாமுதலிய இந்திரியங்கள் சுவைமுதலிய விஷயங்களை யனுபவியாமையை யுடைமையால் வறுமையைத் 'துவ்வாமை' என்றார். யாவரிடத்துமின்பத்தைமிகசசெய்யும் இன்சொல்லையுடையவர்கருப்பகையும்கொதுமலுமில்லாது இருப்பது நட்பேயாம்; ஆகவே, அவர் எல்லாச் செல்வமும் பெறுவரென்பது கருத்து.

(க-து). இன்சொல்லுடையவர்க்கு வறுமை யுண்டாவதில்லை.

4. Sorrow-increasing poverty shall not come upon those who use in all cases pleasure-increasing sweetness of speech.

௫. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

பரி.—(இ-ள்). ஒருவனுக் கணியாவது தன்னாற் ‡ றொழப்படுவார்கட் டாழ்ச்சியுடையனாய் எல்லார்கண்ணும் இனியசொல்லையுமுடையனாதல்; இவை யிரண்டுமன்றி மெய்க்கணியும் பிறவணிகள் அணியாகா,(எ-று).

இன்சொல னாதற் கினமாகலின், பணிவுடைமையும் உடன் கூறினார். மற்று - அசைநிலை. வேற்றுமையுடைமையால் 'பிற' எனவும், * இவை போலப் பேரழகு செய்யாமையின் 'அல்ல' எனவுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் இனியவை கூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது.

தெ.—(இ-ள்). ஒருவற்கு - ஒருவனுக்கு, அணி - ஆபரணமாவது, பணிவுடையன்-(தன்னால் வணங்கப்படும்பெரியாரிடத்து) வணக்கமுடையவனாகி, இன்சொலனாதல் - (எல்லாரிடத்தும்)இனிய சொல்லையுமுடையவனாதலாம், பிற-(இவ்விரண்டு மல்லாமல் உடம்பில் அணியும்) மற்றையாபரணங்கள், அல்ல - ஆபரணங்களாகாவாம், (எ-று).

ஒருவன் இன்சொல்லுடையவனாவதற்கு இனமாயிருப்பதாதலால் பணிவுடைமையும் உடன் கூறினார். மற்று-அசை. தன்னின் வேறாயிருக்கையால் அணியும் ஆபரணங்களைப்'பிற' எனவும், இவைபோலப் பேரழகு செய்யாமையால்'அல்ல'எனவும்சொல்லினார். இவை யிரண்டு பாட்டாலும்

‡ தொழப்படுவார் - அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், தம்முன்னோர், தந்தை, தாயென்னுமிவர்.

* இவைபோல - பணிவுடைமையும் இன்சொல்லும் போல.

இனியசொற்களைச் சொல்லுவார்க்கு வரும் இம்மைப் பயன் சொல்லப்பட்டது.

(க-து). ஒருவனுக்காபரணம் பணிவுடைமையுமின்சொல்லுமாம் என்பது.

5. Humility and sweetness of speech are the ornaments of man, all others are not (ornaments).

சு. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

பரி.—(இ-ள்). பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ் சொற்களை மனத்தான் ஆராய்ந்து இனியவாக ஒருவன் சொல்லுமாயின், அவனுக்குப் பாவங்கள் தேய அறம் வளரும், (எ-று).

தேய்தலாவது தன் பகையாகிய அறம் வளர்தலின் தனக்கு நிலையின்றிமெலிதல். † "தவத்தின்முன்னில்லாதாம் பாவம்"என்பதூஉம் ‡ இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங் காலுங் கடியவாகச் சொல்லின், அறனாகா தென்பதாம். இதனான் மறுமைப்பயன் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). நல்லவை - (பொருளாற் பிறர்க்கு) நன்மையைத் தருஞ் சொற்களை, நாடி - (மனத்தால்) ஆராய்ந்து, இனிய - இனிமையுள்ளனவாக, சொலின் - (ஒருவன்) சொல்லுவானாயின், (அவனுக்கு), அல்லவை - பாவங்கள், தேய-குறைய, அறம்-தருமமானது, பெருகும் - வளரும், (எ-று).

பாவந் தேய்தலாவது தன்பகையாகிய அறம் வளர்தலால் தனக்கு இருப்பிடமில்லாது வாடுதல். நல்லசொற்களைஒருவன் மனத்தாலாராய்ந்து சொல்லுமிடத்தும் கடினமாகச் சொல்லின், அஃது அறமாகா தென்பதாம். இதனால் மறுமைப்பயன் சொல்லப்பட்டது,

(க-து). இன்சொற் கூறுபவனுக்குப் பாவங்குறையப் புண்ணியம் வளரும் என்பது.

6. If a man while seeking to speak usefully, speaks also sweetly, his sins will diminish and his virtue increase.

எ. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

பரி.—(இ-ள்). ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையு முண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும், பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப்பண்பி னீங்காத சொல், (எ-று).

† நாலடியார் துறவு—௪. இதன்பொருள் (ஒருவன்செய்த) தவம் விளங்குமிடத்து (அவன்முன்செய்த) தீவினையானது (அவனிடத்து) நிற்கமாட்டாது (ஒழியுமென்றபடி) என்பது.

‡ இப்பொருட்டு - இவ்வர்த்தத்தை யுடையது.

நீதி - உலகத்தோடு பொருந்துதல். § பண்பென்பது ஈண்டதிகாரத்தான் இனிமைமே னின்றது. ¶ தலைப்பிரிதல் ஒருசொன்னீர்மைத்து.

தெளி.—(இ-ள்). பயனீன்று - (பொருளினுற் பிறர்க்கு) நன்மையைக் கொடுத்து, பண்பின்-(இனிமைக்) குணத்தினின்றும், தலைப்பிரியா-நீங்காத, சொல் - சொற்கள் (ஒருவனுக்கு), நயனீன்று - (இம்மைக்கு) நீதியையும் உண்டாக்கி, நன்றிபயக்கும் - (மறுமைக்கு) அறத்தையும் தரும், (எ-று).

நீதி - உலகத்தோடொட்டவொழுகுதல். பண்பென்பது இங் கினியவை கூறலென்னு மதிகாரத்தால் இனிமைமேல் நின்றது. தலைப்பிரிதல் - ஒருசொல்.

(க-து). இன்சொற் கூறுபவன் இம்மைக்குரிய நீதியையும் மறுமைக்குரிய தருமத்தையும் உடையவனுவன் என்பது.

7. That speech which, while imparting benefits, ceases not to please will yield righteousness (for this world) and merit for the next world.

அ. * சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

பரி.—(இ-ள்). பொருளாற் பிறர்க்கு நோய் செய்யாத இனிய சொல் ஒருவனுக்கு இருமையினும் இன்பத்தைப் பயக்கும், (எ-று).

மறுமையின்பம் பெரிதாகலின், முற்கூறப்பட்டது. இம்மையின்பமாவது உலகம் தன்வயத்த தாகலான் நல்லன வெய்தி இன்புறுதல்.

இவை யிரண்டொட்டானும் இருமைப்பயனும் ஒருங்கெய்துதல் வலியுறுத்தப்பட்டது.

---

§ உருவ முதலியவற்றையுணர்த்தும் பண்பென்னும் பொதுப்பெயர் இங்கு இனியவை கூறலென்னு மதிகாரத்திற்கேற்ப இனிமையென்னும் சிறப்புப்பண்பி (குணத்தி)ன் மேல் நின்றது. அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை வடநூலார் அநுஷங்க மென்பர். இதன் விரிவை இலக்கணக் கொத்தின் "அதிகா ரத்தா லவாய்நிலை தன்னல்" என்னுஞ் சூத்திரவுரையிற் காண்க.

¶ தலைப்பிரித லென்பது இரண்டு சொல்லாகத் தோன்றினும் அஃதீண்டு நீங்குதலென்னு மொருபொருளை யுணர்த்துதலின் ஒரு சொல்லின் தன்மையை யுடையதாம். ஈண்டுத் தலையென்பது பொருளுணர்த்தாது நின்ற வுபசர்க்கம்.

* சிறுமை - துன்பம். அது கடுஞ்சொல்லின் பயனுதலால் 'சிறுமையுணீங்கிய வின்சொல்' [ (நோய்க் கேதுவாகிய) துன்பத்தினின்றும் நீங்கிய வினியசொல்] என் று கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). சிறுமையுணீங்கிய-(பொருளினுற் பிறர்க்கு) நோய் செய்யாத, இன்சொல் - இனியசொற்கள் (ஒருவனுக்கு), மறுமையுமிம்மையும் - மறுமை யிம்மையென்னுமிருமையிலும், இன்பம்-இன்பத்தை, தரும்-கொடுக்கும், (எ-று).

மறுமையினபம இம்மையின்பத்திலும்பெரிதாமாகலின்,முன்புமறுமை சொல்லப்பட்டது. இம்மை இன்பமாவது உலகத்தார் தன் வசப்படுதலால் நல்லனவற்றையெல்லாமடைந்து இன்பமடைதல். இவையிரண்டு பாட்டாலும் இருமைப்பயன்களும் ஒருசேர அடைதல் உறுதி செய்யப்பட்டது.

(க-து). இன்சொற்களுடையவனுக் கிருமையிலும் இன்பமுண்டாம் என்பது.

8. Sweet speech, free from harm to others, will give pleasure both in this world and in the next.

கூ இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

பரி.—(இ-ள்). பிறர் கூறிய வின்சொல் தனக்கின்பம் பயத்தலை அனுபவித் தறிகின்றவன், † அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொல்லைச் சொல்லுவது என்னபயன் கருதி, (எ-று).

இனிதென்பது வினைக்குறிப்புப்பெயர். கடுஞ்சொல் பிறர்க்கும் இன்னாதாகலின், அது கூறலாகா தென்பது கருத்து.

தெளி.—(இ-ள்). இன்சொல்(பிறர்சொல்லிய)இனியசொற்கள், இனிதீன்றல்-(தனக்கு) இன்பந்தருதலை, காண்பான்-அனுபவித்தறிகின்றவன், (அதுநிற்க), வன்சொல் - கடுஞ்சொற்களை, வழங்குவது - (பிறரிடத்து) சொல்லுவது, எவன் - என்னபயனைக் குறித்து, (எ-று).

இனிதென்பது இன்பமென்னும் பொருளில் வந்தமையின் குறிப்பு வினையாலணையும் பெயர். கடுஞ்சொல் பிறர்க்கும் இனிதன்றாகையால், அக்கடுஞ்சொல்லைச் சொல்லலாகா தென்பது கருத்து.

(க-து). பிறர் கூறிய இன்சொல் தனக்கின்பந் தருதலையறிபவன் பிறரிடத்து வன்சொல்லைச் சொல்லுவதென்னோ என்பது.

9. Why does he use harsh words who sees the pleasure which sweet speech yields ?

௧0. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

† அது நிற்க - அவ்வின் சொற்களைப் பேசுதலொழிந்து.

பரி.—(இ-ள்). அறம் பயக்கும் இனிய சொற்களும் தனக்குளவா யிருக்க அவற்றைக் கூறாது, பாவம் பயக்கும் இன்னாத சொற்களை ஒருவன் கூறுதல், இனிய கனிகளும் தன்கைக்கண் உளவாயிருக்க அவற்றை நுகராது இன்னாதகாய்களை நுகர்ந்ததனோடொக்கும், (எ-று).

* கூறலென்பதனாற் சொற்களென்பது பெற்றாம். † பொருளை விசேடித்துநின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ் சென்றன. ‡ இனியகனிக

---

* 'இனிய வுளவாக வின்னாதகூறல்' என்பதில் 'கூறல்' என்று கூறுவதனால் இனியவென்பது இனிய சொற்களென்றும் இன்னாதவென்பது இன்னாத (கடுஞ்) சொற்களென்றும் பெற்றாம். இங்கு இனிய இன்னாத வென்னும் பெயரொச்சங்கள் தாம் கொண்டுமுடியும் சொற்களை யவாவி நிற்றல்பற்றிச் சொற்கள் என்பன வருவிக்கப் பட்டனவென்க.

† சொற்களென்னும் பொருளை (உபமேயத்தை) விசேடித்து (பிரித்துக்காட்டி)நின்ற இனிய இன்னாத என்னும் (குறிப்புப்பெயரெச்சமாகிய) பண்புச்சொற்கள் முறையே கனியென்னும் உவமானத்தையும் காயென்னு முவமானத்தையும் விசேடித்து நின்றன என்பது. இதனால் இனியசொற்கள் இன்னாத சொற்கள் என்பனபோலக் கனி காய் என்பனவற்றையும் இனியகனி இன்னாதகாய் என்று கொள்ளவேண்டு மென்பதாயிற்றென்க. உவமேய மெனினும் வர்ணியமெனினும் புகழ் பொருளெனினும், புனைவுளியெனினு மொக்கும்; உவமானமெனினும், அவர்ணியமெனினும், அல்பொருளெனினும், புனைவிலியெனினும் ஒக்கும். இதுபற்றி இலக்கணக் கொத்தின் "ஆற்றொழுக்கடிமறி" என்னுஞ் சூத்திரவுரையுள் "இனிய வுளவாக வின்னாத கூறல், கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" என்புழி இனியகனி இன்னாதகாய் எனப்பின்னும் பிரித்துப் பொருத்தலே பண்பு" எனறிருத்தலையுங்காண்க.

‡ ஔவையார் அதியர்கோமான் என்னும் வள்ளலிடத்திருந்து அமிழ்தின் தன்மையையுடைய கருநெல்லிக் கனியைப் பெற்றுண்டதனால் இருநூற்று நாற்பதுவருஷம் ஜீவித்திருந்தாரென்பது கதை. இது புறநானூற்று ௯௧-வது செய்யுளில் 'தொன்னிலைப், பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது, ஆதல் நின்னகத் தடக்கிச், சாதல் நீங்க வெமக்கீத் தனையே". (இதன்பொருள் - பழைய நிலைமையையுடைய பெரியமலையிடத்து விடரின்கண் அரிய உச்சிக்கட்கொள்ளப்பட்ட சிறிய இலையினையுடைய நெல்லியின் இனியபழத்தைப் பெறுதற்கு அரிதென்று கருதாது அதனாற் பெறும் பெரும்பேற்றினை எமக்குக் கூறாது நின்னுள்ளேயடக்கிச்சாதலொழிய எமக்கு அளித்தாய் என்பது) என்று ஔவையார் கூறியிருப்பதனாலும், இதையனுசரித்துச் சிறுபாணாற்றுப் படையில் "கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி,யமிழ்துவிளை தீங்கனியௌவைக்கீந்த வுரவுச் சினங்கனலு மொளிதிகழ் நெடுவேல், அரவக் கடற்றானையதிகனும்" என்று இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்பாடியிருப்பதாலும் விளங்கு மென்க. அதியர்கோமானுக்கு அதிகனென்றும், அதியமான்நெடுமானஞ்சி

ளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாவனவற்றை. இன்னாத காய்களென்றது காஞ்கிரங்காய்போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற் சொல்லுதல் முடிவிற்றனக்கே யின்னாதென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் இன்னாத கூறலின் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). இனிய - (அறத்தையுண்டாகும்) இனியசொற்களும், உளவாக - (தனக்கு) உண்டாயிருக்க (அவற்றைச்சொல்லாமல்), இன்னாத - (பாவத்தையுண்டாக்கும்) கடுஞ்சொற்களை, கூறல் - (ஒருவன்) சொல்லுதல், கனி -(இனிய) கனிகளும், இருப்ப - (தன்கையினிடத்து) உண்டாயிருக்க (அவற்றைத்தின்னாமல்),காய் -(இனிமையில்லாத) காய்களை, கவர்ந்தற்று - தின்பதனோடொக்கும், (எ-று).

கூறல் என்பதனால் (இனிய) சொற்கள் (இன்னாத) சொற்களென்பன பெறப்பட்டன. சொற்களென்னு முவமேயத்தை விசேடித்து நின்ற இனிய இன்னாத என்னும் பண்புகள் முறையே கனி காய் என்னும் உவமானத்திலுஞ் சென்றன. இனியகனிகளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனிபோல் அமிர்தமாவனவற்றை. இன்னாதகாய்களென்றது எட்டிக்காய்போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற் சொல்லுதல் முடிவில் தனக்கே இனிதாகாதென்பதாம். இவையிரண்டு பாட்டாலும் கடுஞ்சொற் சொல்லுதலின் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து). இன்சொற்கூறாது வன்சொற் கூறுபவனுக்கு இன்பமுண்டாகாது துன்பமுண்டாம் என்பது.

10. To say disagreeable things when agreeable are at hand, is like eating unripe fruit when there is ripe.

---

யென்றும்,நெடுமானஞ்சிஎன்றும், அஞ்சி என்றும்பெயருண்டு. இவ்வாறன்றி, காவிரிப்பூம் பட்டினத்திருந்த பந்தனென்னுமோர் வைசியன்வியாபாரவிஷயமாகக்கடல் யாத்திரைசெய்யும்போது ஆதிசேடனது சூழ்ச்சியால்நாகலோகஞ்சென்று,ஆதிசேடன்மகளை(நாக கன்னியை)மணம்புரிந்து,அங்குப் பன்னிரண்டு வருடமிருந்து, ஆதிசேடனிடத்திருந்து அளவிறந்த நாகரத்தினங்களும் பூஷணங்களும்,போர்த்துக்கொள்ளின் இளமை மாறாதிருக்கத்தக்கதொருபொற்படாமு(ஆடையு)ம், உண்டால்நீடூழிகாலம்உயிர்வாழத்தக்கதொரு கருநெல்லிக்கனியும்பெற்று,காவிரிப்பூம் பட்டினம் வந்து, தான்பெற்றுவந் துள்ளவற்றுள் ஒன்றான கருநெல்லிக் கனியிற்பாதியை யரசனுக்குக் கொடுத்து, மற்றைப்பாதியையும் பொற்படாத்தையும் தன்மேல் நவமணிமாலையும் அந்தாதியும்பாடிய ஔவையார்க்குக்கொடுத்து வாழ்ந்தனன் என்னுமொரு கதையுமுண்டு. பந்தனிடத்திருந்து கருநெல்லிக் கனியைப் பெற்றவரசன் அதியர்கோமானென்றும், அவ்வதியர் கோமான் பந்தனிடத்துப் பெற்ற கருநெல்லிக்கனியிற் பாதியையே ஔவையார்க்குக் கொடுத்தானென்றும் கூறுவாருமுளர்.

## ஏழாவது அதிகாரம்.

### செய்ந்நன்றியறிதல்—On Gratitude.

பரி.—அஃதாவது தனக்குப் பிறர்செய்த நன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு § உய்தியில் குற்றம் செய்ந்நன்றி கோறலேயாகலின், $ அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட்டு, இஃதினியவை கூறலின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—*அஃதாவது தனக்குப் பிறர்செய்த நன்றியை மறவாமை. இனிய சொற்களைச்சொல்லி இல்லறத்தின் வழுவாதவர்க்கு உய்தியில்லாத குற்றம் செய்ந்நன்றியை மறத்தலேயாதலின், அதனைப் பாதுகாத்து நீக்குதற்பொருட்டு, இஃது இனியவைகூறலின்பின் வைக்கப்பட்டது.*

க. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

பரி.—(இ-ள்). தனக்கு முன் னொருதவியுஞ் செய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்தவுதவிக்கு மண்ணுலகும் விண்ணுலகும் கைம்மாறகக் கொடுத்தாலும் ஒத்தலரிது, (எ-று).

*கைம்மாறுகளெல்லாம் காரணமுடையன வாகலின், காரணமில்லாத உதவிக்கு ஆற்றாவாயின. செய்யாமைச் செய்த வுதவியென்று பாடமோதி ‡ மறித்துதவ மாட்டாமை யுள்ளவிடத்துச் செய்தவுதவியென் றுரைப்பாரு முளர்.*

தெளி.—(இ-ள்). *செய்யாமல்-(தனக்குமுன் னொருதவியும்) செய்யாதிருக்க, செய்த - (ஒருவன்பிறனுக்குச்) செய்த, உதவிக்கு— உபகாரத்திற்கு, வையகமும் - மண்ணுலகத்தையும், வானகமும் - விண்ணுலகத்தையும், மாற்றல் - ஈடாகக் கொடுத்தாலும் (ஒத்தல்), அரிது - கூடாது,(எ-று).*

*பிரதியுபகாரங்களெல்லாம் காரணமுடையனவாதலின், காரணமில்லாத வுபகாரத்திற்கு அவை யொப்பாகாவாயின.*

(க-து). *தனக்குபகாரஞ் செய்யாதவனுக் கொருவன் செய்த வுபகாரத்திற் கொப்பாகத் தரத்தக்கது ஒன்றுமின்றும் என்பது.*

1. (The gift of) heaven and earth is not an equivalent for a benefit which is conferred where none had been received.

---

*§ உய்தியில்குற்றம் - பிராயச்சித்தத்தா லொழிதலில்லாத பாவம்.*

*$ அதனைப்பாதுகாத்துக் கடிதற்பொருட்டு-செய்ந்நன்றி மறத்தலைத் தம்மிடத் தணுகவொட்டாது விலக்கும் நிமித்தம்.*

*‡ மறித்துதவ மாட்டாமை யுள்ளவிடத்துச் செய்தவுதவி - பிரதியுபகாரஞ்செய்தற்கியலாமையுள்ள (ஏழைகள்) இடத்துச் செய்தவுபகாரம்.*

௨. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது.

பரி.—(இ-ள்). ஒருவனுக் கிறுதிவந்த எல்லைக்கண் ஒருவன் செய்த வுபகாரம், † தன்னை நோக்கச் சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தை நோக்க நிலவுலகத்தினு மிகப்பெரிது, (எ-று).

*அக்கால நோக்குவ தல்லது பொருணோக்கலாகா தென்பதாம். * காலத்தினாலென்பது வேற்றுமை மயக்கம்.*

தெளி.—(இ-ள்). *காலத்தினால்-(ஒருவனுக்கு ஆபத்துவந்த) அளவில், செய்த - (ஒருவன்) செய்த, நன்றி-உபகாரமானது, சிறிதெனினும்(தன்னை நோக்கச்) சிறிதாயிருந்ததாயினும், (அக்காலத்தை நோக்க), ஞாலத்தின்-நிலவுலகத்தினும், மாணப்பெரிது - மிகப் பெரிதாம், (எ-று).*

*ஆபத்துவந்த அக்காலத்தை நோக்கவேண்டுவ தல்லாமல் தன்னிடத்துள்ள பொருளை நோக்கலாகா தென்பதாம். காலத்தினா லென்பது காலத்தில் என வந்தமையின் வேற்றுமைமயக்கம்.*

(க-து). *ஒருவன் துன்பம்வந்த காலத்திற் செய்த வுதவி சிறிதாயினு மக்காலத்தை நோக்க அது நிலவுலகினும் பெரிதாம் என்பது.*

2. A favour conferred in the time of need, though it be small (in itself) is (in value) much larger than the world.

௩. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

பரி.—(இ-ள்). இவர்க் கிதுசெய்தால் இன்னது ‡ பயப்பரென்று ஆராய்தல் இலராய்ச் செய்த வுதவியாகிய ஈரமுடைமையை ஆராயின், அதனன்மை கடலினும் பெரிதாம், (எ-று).

*இவை மூன்று பாட்டானும் முறையே காரணமின்றிச் செய்ததூஉம் காலத்தினாற் செய்ததூஉம், பயன் றூக்காராய்ச் செய்ததூஉம் அளவிலவாதல் கூறப்பட்டது*

† *தன்னை நோக்க- அவன் தனனுடைய பொருளைப் பார்க்க.*

* *காலத்தினால் என்பதிலுள்ள மூன்றனுருபு தனக்குரிய பொருளில் வாராது ஏழனுருபிற்குரிய இடப்பொருளில் (காலத்தில் என) வந்தமை பற்றி 'காலத்தினா லென்பது வேற்றுமை மயக்கம்' என்றுகூறப்பட்டது. வேற்றுமைமயக்க மெனினும் உருபு மயக்கமெனினு மொக்கும். அஃதாவது தன்பொருளிற் நீங்கி பிறிதோருருபின் பொருட்டாதல்.*

‡ *பயக்கு (தரு) மென்று என்றும் பாடமுண்டு.*

தெளி.—(இ-ள்). பயன் - (இவர்க்கிவ்வுதவி செய்தால் அவரிவ்வுதவியைச் செய்வரென்னும்)பயனை, தூக்கார் - ஆராய்தலிலராய், செய்த—, உதவி - உதவியாகிய, நயன் - அன்புடைமையை, தூக்கின் - ஆராயின், நன்மை - (அவ்வுதவியின்) நன்மையானது, கடலின் - கடலினும், பெரிது - பெரியதாம், (எ-று).

இவை மூன்றுபாட்டாலும் முறையே காரணமில்லாமற் செய்ததும், காலத்தினாற் செய்ததும், பிரயோசனத்தை யாராயாதவராய்ச் செய்ததும் அளவில்லாதன வாதல் சொல்லப்பட்டது.

(க - து). பின்வரும் பயனைக்கருதாது செய்த வுதவியின் நன்மை கடலினும் பெரிதாம் என்பது.

3. If we weigh the excellence of a benefit which is conferred without weighing the return, it is larger than the sea.

ச. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

பரி.—(இ - ள்). தமக்குத் தினையளவிற்றாய உபகாரத்தை ஒருவன் செய்தானாயினும் அதனை அவ்வளவிற்றாகக் கருதாது பனை யளவிற்றாகக் கருதுவர் அக்கருத்தின் பயன் தெரிவார், (எ-று).

தினை பனையென்பன சிறுமை பெருமைகட்கு || காட்டுவன சில வளவை. அக்கருத்தின் பயனாவது அங்ஙனங்கருதுவார்க்குவரும் $ பயன்.

தெளி.—(இ - ள்). தினைத்துணைநன்றி - (தமக்குத்) தினையளவினதாகிய உபகாரத்தை, செயினும் - (ஒருவன்) செய்தானாயினும், (அதனை அவ்வளவினதாக நினையாமல்), பனைத்துணையா - பனையளவினதாக, கொள்வர் - நினைப்பார், பயன் - (அந்நினைப்பின்) பயனை, தெரிவார் - அறிபவர், ().

தினை பனை யென்பன சிறுமை பெருமைகளுக்குக் காட்டுவனவாகிய சில அளவைகள். அந்நினைப்பின் பயனாவது அப்படி நினைப்போர்க்கு வரும் பிரயோசனம்.

(க-து). பெரியோர் சிறியவுபகாரத்தையும் பெரியவுபகாரமாகக் கொள்ளுவர் என்பது.

4. Though the benefit conferred be as small as a millet seed those who know its advantage will consider it as large as a palmyra fruit.

---

|| காட்டுவனவாகிய சிலவளவை யென்றும் பாடமுண்டு. இவ்வளவை உவமான அளவையின் பாற்படும்.

$ பயன் - புகழ் புண்ணியங்கள்.

ரு. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

பரி.—(இ-ள்). கைம்மாறன உதவி * காரணத்தானும் பொருளா னுங் காலத்தானும் ஆகிய மூவகையானும் முன் செய்த உதவி யளவிற் றன்று; அதனைச் செய்வித்துக் கொண்டவர்தம் அமைதி யளவிற்று, (எ-று).

*சால்பு எவ்வளவு பெரிதாயிற்று உதவியும் அவ்வளவு பெரிதாமென் பார் 'சால்பின் வரைத்து' என்றார். இவை யிரண்டுபொட்டானும் † மூன்று மல்லாத உதவி மாத்திரமும் அறிவார்க்குச் ‡ செய்தவழிப் பெரிதாமென் பது கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *உதவி-எதிர்செய்யும் உதவியானது, உதவிவரைத் தன்று - (காரணமும் பொருளுங் காலமுமாகிய மூவகையாலுமுன்செய்த) உதவியளவினதன்று, உதவி செயப்பட்டார்-அவ்வுதவியைச் செய்யப்பெற் றுக் கொண்டவரது, சால்பின் வரைத்து - தகுதி யளவினதாம்,* (எ-று).

*சால்பு எவ்வளவு பெரிதாயுள்ளது உதவியும் அவ்வளவு பெரிதாமென் பார் 'சால்பின்வரைத்து' என்றார். இவை யிரண்டு பாட்டாலும் செய்யா மற் செய்தவுதவி முதலிய மூன்றுமல்லாத உதவிமாத்திரமும் அறிவோர் க்கு உதவி செய்த விடத்து அவ்வுதவி பெரிதா மென்பது சொல்லப் பட்டது.*

(க-து). *உதவிசெய்யப் பெற்றுக்கொண்டவரது மகிழ்ச்சி யளவே யுதவிக் களவாம் என்பது.*

* *காரணமும் பொருளும் காலமுமாகிய மூவகையானும் என்றும் பாடமுண்டு.*

† *மூன்று மல்லாத உதவி - காரணமில்லாமற் செய்த வுபகாரமும் ஆபத்து வந்த காலத்திற் செய்த வுபகாரமும் பயனை யெதிர் நோக்காது செய்த வுபகாரமுமல்லாத வுபகாரம். அஃதாவது பிறர் செய்த வுபகாரத் தை யேற்றுக் கொண்டவர் அவருக்கு அவர் செய்த வுபகாரத்தினது கார ணம் பொருள் காலமென்பனவற்றிற்கேற்பப் பிரதியுபகாரஞ் செய்யாது தமது தகுதிக்கேற்றவண்ணம் பிரதி யுபகாரஞ் செய்தலாம். இதனால் உபகாரம்: காரணமில்லாமற் செய்வதும் ஆபத்து நேர்ந்த காலத்திற் செய் வதும் பயனை யெதிர் பாராது செய்வதும் பிறர் செய்த வுதவிக் கேற்றவண்ணம் பிரதி யுபகாரஞ் செய்யாது அவர் மனங்களிக்கும்படி தமது தகுதிக்கேற்ற வாறு பிரதி யுபாரஞ் செய்வதுமென நால்வகைத்தா யிற்றென்க. எனவே, காரணங் கருதியும் பொருள் கருதியும் காலங் கருதி யும் செய்யுமுபகாரம் ஒரு பிரயோசனத்தை நோக்கிச் செய்வதா யிருத்த லின் அது சிறந்ததாகாதென்க.*

‡ *செய்தவழிப் பெரிதாமென்பது—உபகாரஞ்செய்தவிடத்து அஃது இராமபாணம்போல் மிகுதியாமென்பது.*

5. The benefit itself is not the measure of the benefit; the worth of those who have received it is its measure.

சு. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

பரி.—(இ-ள்). துன்பக்காலத்துத் தனக்குப் பற்றுக் கோடாயினாரது நட்பை விடாதொழிக; அறிவொழுக்கங்களிற் குற்றமற்றாரது கேண்மையை மறவாதொழிக, (எ-று).

*கேண்மை - கேளாந்தன்மை. $ இம்மைக் குறுதி கூறுவார் மறுமைக் குறுதியும் உடன் கூறினர்.*

தெளி.—(இ-ள்). *துன்பத்துள் - துன்பமுண்டாய காலத்தில், துப்பாயார் - (தனக்கு) உதவியானவரது, நட்பு - சினேகத்தை, துறவற்க - விடாதிருக்கக் கடவன், மாசற்றார் - (அறிவொழுக்கங்களிற்) குற்றமற்றவரது, கேண்மை - கேளாந்தன்மையை, மறவற்க - மறவாதிருக்கக் கடவன், (எ-று).*

*கேளாந்தன்மை - நட்பாந்தன்மை. இம்மைக் குறுதிசொல்ல வந்தவர் மறுமைக் குறுதியு முடன்சொல்லினர்.*

(க-து). *துன்பக்காலத் தூதவிசெய்தவரது சினேகத்தை விடாதும் குற்றமற்றவரது சினேகத்தை மறவாதும் இருத்தல் வேண்டும் என்பது.*

6. Forget not the benevolence of the blameless, forsake not the friendship of those who have been your staff in adversity.

எ. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

பரி.—(இ-ள்). தங்கண் எய்திய துன்பத்தை நீக்கினவருடைய நட்

*$ ஒன்றின முடித்தல் தன்னினமுடித்தலெனனு முத்தியால் இம்மைக்குறுதியாகிய துன்பத்துட் டுப்பாயார் நட்பு துறவற்க என்று கூறினவர் அதனோடு மறுமைக் குறுதியாகிய மாசற்றார் கேண்மையையும் மறவற்க என்று கூறினரென்க. இம்மை - இப்பிறப்பு. மறுமை - வருபிறப்பு; அஃதாவது மரணத்தின்பின் வருகிலே. இவ்விடதததது சுவர்க்கமாம். மாசற்றார் கேண்மை மறுமைக்குறுதி யாமென்பது "இம்மை யடக்கத்தைச செய்து புகழாக்கி, யும்மை யுயர்கதிக் குய்த்தலான் - மெய்ம்மையே, பட்டாங் கறமுரைக்கும் பண்புடை யாளரே, நட்டா ரெனப்படு வார்" என் றறநெறிச்சாரங் கூறுவதனானு மறியப்படும்.*

பினை § எழுமையினை யுடைய தம்மெழுவகைப் பிறப்பினும் நினைப்பர் நல்லோர், (எ-று).

எழுமையென்றது * வினைப்பயன்தொடரும் எழுபிறப்பினை; † அது வளையாபதியுட் கண்டது. எழுவகைப்பிறப்பு ‡ மேலே யுரைத்தாம். ¶ விரைவுதோன்றத் 'துடைத்தவர்' என்றார். நினைத்தலாவது துன்பந் துடைத்தலான் அவர் மாட்டுளதாகிய அன்பு பிறப்புத்தோறுந் தொடர்ந்து †† அன்புடைய ராதல். இவை யிரண்டு பாட்டானும் நன்றி செய்தாரது நட்பு விடலாகா தென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). தங்கண் - தம்மிடத்து (உண்டாகிய), விழுமம் - துன்பத்தை, துடைத்தவர்-நீக்கினவரது, நட்பு-நட்பினை, எழுமை-(வினைப் பயன்தொடரும்) எழு பிறப்பினையுடைய, எழுபிறப்பும் - (தமது) எழு வகைப் பிறப்பிலும், உள்ளுவர் - (நல்லோர்) நினைப்பார், (எ-று).

எழுவகைப் பிறப்பினை மேலே கூறினோம். விரைவு தோன்றுமாறு 'துடைத்தவர்'என்று இறந்தகாலத்தாற் கூறினார். நினைத்தலாவது துன்பத் தை நீக்குதலால் அவரிடத்துண்டாகிய அன்பு பிறவிதோறுந் தொடர்

§ எழுமையினையுடைய தம்மெழுவகைப் பிறப்பினும் என்பதற்கு நல் வினை தீவினைகளின் பயனாகிய சுகதுக்கங்கள் தொடர்ந்து வரும் ஊர்வன முதலாகிய எழுவகைத் தோற்றத்து (பிறப்பினு)ள் யாதாவதொன்றாக மாறிமாறிவருதலை யுடைய தமது எழுபிறப்பிலும் என்றுகொள்க. இவ்வா றன்றி எழுவகைத்தோற்றத்துள் முறையே ஒவ்வொன்றனது எழுபிறப் பிலு மென்றுங்கூறலாம்; அது பொருந்துமாயிற்கொள்க. "நூறுகோடி கற்பங்களாலும் அஞ்ஞானியின் கன்மம் போக மின்றி நாசமாவதில்லை ; ஆனால் செய்த சுபாசுபகன்மங்கள் இன்றியமையா தனுபவிக்கத் தக்கன வாம்" என்பது சுருதி.

* வினைப்பயன் எழுபிறப்பு வரையிலும் தொடருமென்பது "ஒரு மையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி, னெழுமையு மேமாப் புடைத்து" என்றும், "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" என்றும் மேல்வருங் குறள்களானும் விளங்கும்.

† அது - வினைப்பயன் தொடரும் எழு பிறப்பு. வளையாபதி ஐம் பெருங் காப்பியங்களு ளொன்று.

‡ மேலேயுரைத்தாம் என்றது புதல்வரைப்பெறுதலதிகாரம் 2-வது பாட்டி னுரையிற் கூறிய "ஊர்வ பதினொன்றாம்" என்னுஞ் செய்யுளை.

¶ துடைக்கிறவர் துடைப்பவரென நிகழ்காலத்தாலேனும் எதிர் காலத்தாலேனுங் கூறாது 'துடைத்தவர்' என இறந்தகாலத்தாற் கூறியது விரைவுபற்றி வந்த காலவழுவமைதியாம்.

†† 'குறப்பாவை' என்னும் திருக்கோவையார்ச் செய்யுளில் "பிறப்பா னடப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே" என்றிருத்த லிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

*ந்து (வா) அன்புடையவராதல். இவ்விரண்டு செய்யுளாலும் உதவிசெய்தவ ரது நட்பினை விடலாகாதென்பது சொல்லப்பட்டது.*

(க-து). *நல்லோர் தமது துன்பத்தை நீக்கினவரது சினேகத்தைத் தம்மெழுவகைப் பிறப்பிலும் நினைப்பர் என்பது.*

7. (The wise) will remember throughout their seven-fold births the love of those who have wiped away their affliction.

அ. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

பரி.—(இ - ள்). ஒருவன் முன்செய்த நன்மையை மறப்பது ஒருவற்கு அறனன்று; அவன் செய்த தீமையைச் செய்தபொழுதே மறப்பது அறன், (எ-று).

*இரண்டும் ஒருவனாற் செய்யப்பட்ட வழி மறப்பதும் மறவாததும் வகுத்துக் கூறியவாறு.*

தெளி.—(இ - ள்). *நன்றி - (ஒருவன்முன்செய்த)நன்மையை, மறப்பது—, நன்றன்று - (ஒருவனுக்கு) அறனல்ல, நன்றல்லது - (அவன்செய்த) தீமையை, அன்றே - செய்தபொழுதே, மறப்பது—, நன்று-அறமாம்,()*

*இதனால் நன்மையும் தீமையும் ஒருவனால் செய்யப்பட்ட விடத்து அவ்விரண்டனுள் மறப்பதும் மறவாததும் வகுத்துச் சொல்லியவாறும்.*

(க-து). *ஒருவர் பிறர்செய்த நன்றியை மறவாது அவர்செய்த தீமையை மறக்கவேண்டும் என்பது.*

8. It is not good to forget a benefit : it is good to forget an injury even in the moment (in which it is inflicted).

கூ. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

பரி.—(இ-ள்). தமக்கு முன்னொரு நன்மை செய்தவர் பின்கொன்றலொத்த இன்னாதவற்றைச் செய்தாராயினும், அவையெல்லாம் அவர் செய்த நன்மை யொன்றனையும் நினைக்க இல்லையாம், (எ - று).

*§ தினைத்துணை பனைத்துணையாகக் கொள்ளப் படுதலின், அவ்வொன்றுமே அவற்றையெல்லாங் கெடுக்கு மென்பதாம். இதனான் நன்றல்லது அன்றே மறக்குந் திறங் கூறப்பட்டது.*

---

*§ ‘ தினைத்துணை பனைத்துணையாகக் கொள்ளப்படுதலை ’ ‘‘தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்தெரி வார்’’ என்னுங் குறளானறிக.*

தெளி.—(இ - ள்). (தமக்கு முன்னொருநன்மைசெய்தவர்) கொன்றன்ன - (பின்) கொன்றாற்போலும், இன்னா - வெறுக்கப்படுவனவற்றை, செயினும்-செய்தாராயினும், அவர்செய்த—, ஒன்றுநன்று - நன்மையொன்றையும், உள்ள - நினைக்க, கெடும்—(அவையெல்லாம்) இல்லையாம் (எ-று).

தினையளவு நன்றி பனையளவு நன்றியாகக் கொள்ளப் படுதலினால் அவ்வொன்றுமே அவ்வெறுக்கப்படுவனவற்றை யெல்லாங் கெடுக்குமென்பதாம். இதனால் நன்றல்லதை அன்றேமறக்கும் விதம் சொல்லப்பட்டது.

(க - து). முன்னொருபகாரத்தைச் செய்தவர் பின் பலதீமைகளைச் செய்தாலும் அவை முன்செய்த வுபகாரத்தை நினைக்கக் கெடும் என்பது.

9. Though one inflict an injury great as murder, it will perish before the thought of a single benefit (formerly) conferred.

கo. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

பரி.—(இ - ள்). பெரிய வறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தினீங்கும்வாயிலுண்டாம்; ஒருவன் செய்தநன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃதில்லை, (எ - று).

பெரிய வறங்களைச் சிதைத்தலாவது * ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல். இதனாற் செய்ந்நன்றி கோறலின் கொடுமை கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). எந்நன்றி- எந்தவறங்களை (பெரியவறங்களை), கொன்றார்க்கும்-கெடுத்தவர்க்கும், உய்வு-பாவத்தினீங்கும்வழி, உண்டாம்—உண்டாகும், செய்ந்நன்றி - (ஒருவன்) செய்தவுபகாரத்தை, கொன்றமகற்கு - கெடுத்த மனிதனுக்கு, உய்வு-அப்பாவததினீங்கும்வழி, இல்லை—,(எ-று).

பெரிய அறங்களைச்சிதைத்தலாவது பசுவின்முலையையறுத்தலும், மகளிர் கருவையழித்தலும், அந்தணரைக் கொல்லுதலும் முதலாகிய பாதகங்

* ஆன்முலையறுத்தல் - ஆவின்முலையை யறுத்தல். மகளிர் கருவினைச் சிதைத்தல் - பெண்களின் கருப்பத்தை யழித்தல். பார்ப்பார்த் தபுதல் - பிராமணரைக் கொல்லுதல் கோஹத்தி (பசுவதை) சிசுஹத்தி (சிசுவதை) பிரமஹத்தி (பிராமணவதை) யென வாக்காற்சொல்லவும் படாமை பற்றி ஆன்முலையறுத்தல் என்றற் றொடக்கத்தனவாக மறைத்துக் கூறினார். இஃது " ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு, மாணிழை மகளிர் கருசிதைத் தோர்க்கும், பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும், வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென, நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்,செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென, வறம்பாடிற்றே யாயிழை கணவ" என்று புறநானூறு(௩௪) கூறுவதாலு மறிதற் பாற்றாம்.

களைச்செய்தல், இதனால் செய்ந்நன்றியை மறத்தலின் கொடுமை சொல்லப்பட்டது.

(க - து). பிறர்செய்த உபகாரத்தை மறந்தவர்கட்கு எவ்வகையாலும் பாவத்தில் நீங்கும்வழி யில்லை என்பது.

10. He who has killed every virtue may yet escape; there is no cscape for him who has killed a benefit (by forgetting it).

---

## எட்டாவது அதிகாரம்.

## நடுவுநிலைமை—On Equity.

பரி.—அஃதாவது பகை நொதுமல் நண்பென்னும் மூன்றுபகுதியினும் அறத்தின்வழுவாது ஒப்பநிற்கு நிலைமை. ¶ இது நன்றி செய்தார்மாட்டு அந்நன்றியினை நினைத்தவழிச் சிதையுமன்றே, அவ்விடத்துஞ் சிதையலாகா தென்றற்குச் செய்ந்நன்றி யறிதலின்பின் வைக்கப்பட்டது.

தெளி.— அஃதாவது பகைவர் அயலோர் நட்பினரென்னும் மூவகையோரிடத்தும் அறத்தினவழுவாமல் ஒப்பநிற்கும்நிலைமை. இது நன்றிசெய்தவரிடத்து அந்நன்றியை நினைத்தவிடத்துக் கெடுமென்றே, அவ்விடத்தும் கெடலாகா தென்றற்குச் செய்ந்நன்றி யறிதலின்பின் வைக்கப் பட்டது.

க. தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

பரி.—(இ-ள்). நடுவுநிலைமையென்று சொல்லப்படும் ஓரறமுமே நன்று: பகை நொதுமல் நண்பென்னும் பகுதிதோறும் தன்முறைமையை விடாதொழுகப் பெறின், (எ - று).

§ தகுதியுடையதனைத் தகுதியென்றார். † "ஊராஞேர் தேவகுலம்" என்பது போலப் பகுதியானென்புழி ஆனுருபு ‡ தொறுமென்பதன் பொருட்டாய் நின்றது. பெறினென்பது அவ்வொழுக்கத் தருமைதோன்ற நின்றது. இதனான் நடுவுநிலைமையது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). தகுதியெனவொன்றே - நடுவுநிலைமையென்று சொல்லப்படும் ஓரறமுமே, நன்று—,பகுதியால்-(பகைவர் அயலோர் நட்

---

¶ இது - நடுவுநிலைமை.

§ தகுதியை (யோக்கியத்தை) யுடைய நடுவுநிலைமையைத் தகுதியென்றமையின் அது பண்பாகு பெயராம்.

† ஊர்தோறு மொரு தேவகோயில் என்பது பொருள்.

‡ தொறுமென்பதன் பொருட்டாய் நின்றது - தொறும் என்பதன் பொருளதாய் நின்றது . தொறுமென்பது தன்னையேற்ற பெயர்ப் பொருளெங்கும் அப்பெயர்ப் பொருளோ டியையும் பொருளிருப்பது.

பினர் என்னும்) பிரிவு தோறும், பாற்பட்டு - (தன்)முறைமையைவிடாது, ஒழுகப்பெறின் - நடக்கப்பெற்றால், (எ-று).

ஏகாரம் - பிரித்து (ஒன்று என்பதனோடு) கூட்டப்பட்டது. தகுதி- ஆகுபெயர். பகுதியாலென்னு மூன்றனுருபு தொறுப்பொருளில் வந்தது. பெறினென்பது அவ்வொழுக்கத்தி னருமைதோன்றநின்றது. இதனால் நடுவுநிலைமையது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து). மாறுபாடத நடுவுநிலைமை அறங்களுள் மேம்பாடுடையது என்பது.

1. That equity which consists in acting with equal regard to each of (the three) divisions of men (enemies, strangers and friends) is a pre-eminent virtue.

உ. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

பரி.—(இ-ள). நடுவுநிலைமையை உடையவனது செல்வம் பிறர் செல்வம்போல் அழிவின்றி அவன் வழியினுள்ளார்க்கும் வலியாதலை யுடைத்து, (எ-று).

* விகாரத்தாற் றொக்க வெச்சவும்மையான், ‡ இறக்குந் துணையும் அவன்றனக்கும் ஏமாப்புடைத்தென்பது பெற்றாம். அறத்தோடு வருதலின், ¶ அன்னதாயிற்று. † தான் இறந்துழி எஞ்சி நிற்பதாகலின் 'எச்சம்' என்றார்.

தெளி.—(இ-ள்). செப்பமுடையவன் - நடுவு நிலைமையை யுடையவனது, ஆக்கம்-செல்வமானது, சிதைவின்றி - (பிறர்செல்வம்போல்) அழிதலின்றி, எச்சத்திற்கும - (அவன்) சந்ததியார்க்கும், ஏமாப்பு - உறுதியாதலை, உடைத்து - உடையதாம, (எ-று).

விகாரத்தினாற் றொக்கு நின்ற எச்சவும்மையால் சாமளவும் அவனுக்கும் உறுதியுடையதென்பது பெறப்படும். அறத்தோடு வருதலால் அப்

* (செப்ப முடையவனுக்கே யன்றி யவனது) எச்சத்திற்கு மென்னு மிறந்தது தழீஇய வெச்சவும்மை செய்யுள்விகாரத்தால் தொக்கு நின்றது.

‡ நடுவுநிலைமை யுடையவனுக்கு வரும்பொருள் தருமமார்க்கத்திற்கு விரோதமின்றியதாயிருத்தலின் அதனு(பொருளா)ல் அவனேயன்றி யவன் சந்ததியாரும் இன்புறுதல் நிச்சயமாதல் பற்றி ' இறக்குந்துணையும் அவன் றனக்கும் ஏமாப்புடைத் தென்பது பெற்றாம்' என்று கூறப்பட்டது.

¶ அன்னதாயிற்று - (செல்வம்) எச்சத்திற்கு முறுதியாதலை யுடையதாயிற்று.

† தானிறந்தபோதும் மிகுந்து நிற்பது தன்சந்ததியாதலின் அச்சந்ததியினை எச்சம் (மிகுந்து நிற்பது) என்று கூறினர்.

படிப்பட்டதாயிற்று. தானிறந்தவிடத்து எஞ்சி நிற்பதுபற்றிச் சந்ததியை 'எச்சம்' என்றார்.

(க-து). நடுவுநிலைமை யுடையவனது செல்வம் அவன்சந்ததிக்கும் உறுதியாதலையுடையதாம் என்பது.

2. The wealth of the man of rectitude will not perish, but will bring happiness to his posterity.

௩. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

பரி.—(இ-ள்).—தீங்கன்றி நன்மையே பயந்ததாயினும், நடுவு நிற்றலை யொழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே ஒழிய விடுக, (எ-று).

நன்மைபயவாமையின் $ 'நன்றேதரினும்' என்றார் இகத்தலானென்பது இகந்தெனத் திரிந்துநின்றது. இவை யிரண்டு பட்டாலும் முறையே நடுவுநிலைமையான் வந்தசெல்வம் நன்மை பயத்தலும், ¶ வினைச்செல்வம் தீமை பயத்தலுங் கூறப்பட்டன.

தெளி.— (இ-ள்). நன்றேதரினும் - (தீஙகன்றி) நன்மையே தந்தாயினும், நடுவிகந்து - நடுவுநிற்றலை நீங்கலால், ஆம் - உண்டாகின்ற, ஆக்கத்தை - செல்வத்தை, அன்றே - அப்போதே, ஒழிய—நீங்கிப்போக, விடல்-விடக்கடவன், (எ-று).

நன்மையைத் தாராமையால் 'நன்றேதரினும்' என்றார். இகத்தலானென்னும்வினை இகந்தெனத் திரிந்துநின்றது. இஃதெச்சத் திரிபெனப்படும். இவை யிரண்டுபாட்டாலும் முறையே நடுவுநிலைமையால் வந்தசெல்வம் நன்மையைத் தருதலும் மற்றைய வழியால் வந்த செல்வந் தீமையைத் தருதலுஞ் சொல்லப்பட்டன.

(க-து). நடுவுநிலைமை யில்லாது வருஞ்செல்வம் நன்மையைத்தந்ததாயினு மதனை யப்பொழுதே விடவேண்டும் என்பது.

3. Forsake even in the moment (of acquisition) that gain which though it should bring advantage is without equity.

௪. தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

---

$ நடுவு நிலைமையை விட்டதனு லுண்டாகின்ற செல்வமானது அப்போது நன்மையைத் தருவதுபோலக் காணப்படினும் அனுபவத்தில் தீமையைத் தருவதாகவேயிருத்தலின் 'நன்றேதரினும்' என்று கூறப்பட்டது. தரினும் என்னுமும்மை எதிர்மறைப் பொருளது.

¶ வினைச்செல்வம் - நடுவுநிலைமை யின்மையான் வந்தபொருள்.

பரி.—(இ-ள்). இவர் நடுவுநிலைமை யுடையர் இவர் நடுவுநிலைமை யிலரென்னும் விசேடம், அவ்வவருடைய நன்மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும், (எ-று).

† தக்கார்க்கு எச்ச முண்டாதலும் $ தகவிலார்க்கு இல்லையாதலும் ஒருதலை யாகலின், ‡ இருதிறத் தாரையும் அறிதற்கு அவை குறியாயின. இதனால் தக்காரையுந் தகவிலாரையும் அறியுமாறு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). தக்கார் - (இவர்) நடுவுநிலைமையை யுடையவர், தகவிலர் - (இவர்) நடுவுநிலைமையை யில்லாதவர், என்பது - என்னும் விசேஷம், அவரவர் - அவரவருடைய, எச்சத்தால் - நல்ல புதல்வரது இருப்பினாலும் இல்லாமையாலும், காணப்படும் - அறியப்படும், (எ-று).

நடுவுநிலைமையை யுடையவருக்குச் சந்ததி உண்டாதலும், அஃதில்லாதவர்க்கு அஃதில்லாமற்போதலும் நிச்சயமாதலின், அவ்விருவகையினரையும் அறிதற்கு அவை அடையாளங்களாயின. இதனால் நடுவுநிலைமையுடையவரையும், அஃதில்லாதவரையும் அறியும்வழி சொல்லப்பட்டது.

(க-து). இவர் நடுவுநிலைமை யுள்ளவர் இவர் நடுவுநிலைமை யில்லாதவர் என்பது அவரவர்களது சந்ததியாற் காணப்படும்.

---

† தக்கார்க்கு எச்ச முண்டாதலும்-நடுவுநிலைமையுடையோர்க்கு நல்ல பிள்ளைக ளுண்டாதலும். $ தகவிலார்க்கு இல்லையாதலும் - நடுவுநிலைமை யில்லாதவர்களுக்கு நல்லபிள்ளைக ளில்லையாதலும்.

‡ இருதிறத்தாரையும் அறிதற்கு அவை குறியாயின - நடுவுநிலைமையுடையாரையும் அஃதில்லாதாரையும் தெரிந்து கொள்ளுவதற்கு அவரவர்களது நல்லபிள்ளைகளிருத்தலும் துஷ்டபிள்ளைக ளிருத்தலும் அடையாளங்களாயின. (1) இவர்தக்கார் ; நன்மக்களை யுடையரா யிருந்தலின். (2) இவர்தகவிலர்;நன்மக்களையுடையவராயிராமையின் என்பன ஈண்டனுமானமாம் இவ்விஷயம் மனுதரும சாஸ்திரம் மூன்ற மத்தியாயத்தில் "முக்கியமாய் உத்தமமான விவாகத்தாற் பிறக்கும் பிள்ளைகள் சாதுக்களாயிருப்பார்கள். நிந்திக்கத்தக்க விவாகத்தாற் பிறக்கும் பிள்ளைகள் துஷ்டர்களாயிருப்பார்கள்" என்றும், நான்மணிக்கடிகை "மகனுரைக்குந் தந்தை நலத்தை" "பழியின்மை மக்களாற் காண்க" என்றும் கூறுவதாலு மறியப்படும். இதனால் வித்தின் விசேட குணத்திற்கேற்ப முளையுண்டாவது போன்று அவரவர்களது விசேட குணத்திற்கேற்பப் பிள்ளைகளுண்டாவரென்பது பெறப்படுகின்றது. இது (பெருந்திரட்டு) "முக்குணந் தம்மின் மாறி முயங்கிடுந் தந்தைக் கப்போ, தெக்குண முதிக்கும் பிள்ளைக் கது குணம் விதியதாமால்", (குறுந்திரட்டு) " தந்தைக் கெந்தக் குணமுதிக்குஞ் சனிக்கும் பொழுதின் மைந்தற்கு, மந்தக்குணமாம்" என்று வரும் பிரயோகங்களா லினிதுவிளங்கும். "செந்நெல்லா லாய செழுமுளை மற்றுமச், செந்நெல்லே யாகிவிளைதலா—லந்நெல், வயனிறையக் காய்க்கும் வளவய லூர, மகனறிவு தந்தை யறிவு" என்று நாலடியார் கூறுவதுமறிக.

4. The worthy and the unworthy may be known by (the character of) their offspring.

ரு. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

பரி.—(இ-ள). தீவினையாற் கேடும் நல்வினையாற் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடந்தன ; அவ்வாற்றை யறிந்து அவை காரணமாக மனத்தின்கட் கோடாமையே அறிவான் அமைந்தார்க்கு அழகாவது, (எ-று).

† அவை காரணமாகக் கோடுதலாவது அவை இப்பொழுது வருவன வாகக் கருதிக் கேடுவாராமையைக் குறித்தும் பெருக்கம் வருதலைக்குறித்தும் ஒருதலைக்க ணிற்றல். $ அவற்றிற்குக் காரணம் ‡ பழவினையே, கோடுதலன்று என உண்மை யுணர்ந்து நடுவுநிற்றல் சால்பினை அழகு செய்தலின் 'சான்றோர்க் கணி' என்றார்.

தெளி.—(இ-ள்). கேடும்-(தீவினையினால் பொருள் முதலியன) கெடுதலும், பெருக்கமும் - (நல்வினையினாலவை) பெருகுதலும், இல்லல்ல - (யாவருக்கும்) இல்லாதவையல்ல, (முன்னமே அமைந்து கிடந்தனவாம்), (அவ்வழியை அறிந்து), நெஞ்சத்து-மனத்தின்கண், கோடாமை - (அவை காரணமாகச்) சாய்தலில்லாமையே, சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோர்க்கு, அணி - அழகாம், (எ-று).

அவை காரணமாகச சாய்தலாவது அக்கேடும் பெருக்கமும் (பழவினையினாலே வந்து கொண்டிருக்க), இப்போது (செய்முயற்சியால்) வருவனவாக நினைத்துக் கேடுவாராமையைக் குறித்தும், பெருக்கம் வருதலைக் குறித்தும் ஒரு பக்கத்திற் சாய்தலாம். அவற்றிற்குக் காரணம் பழவினையே, சாய்தலல்லவென உண்மை யுணர்ந்து நடுவுநிலை யுடையவராயிருத்தல் அறிவால் நிறைந்திருத்தலை அழகு செய்தலால் 'சான்றோர்க் கணி' என்றார்.

(க-து). எப்போதும் நடுவுநிலைமையினின்றுந் தவறாமையே பெரியோர்க்கு அழகாம் என்பது.

5. Loss and gain come not without cause ; it is the ornament of the wise to preserve evenness of mind (under both).

---

† அவை - கேடும் பெருக்கமும், $ அவற்றிற்கு-கேட்டிற்கும் பெருக்கத்திற்கும்.

‡ பழவினை - முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினை. "பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு" - என்பது நாலடியார்.

௬. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்.

பரி.—(இ-ள்). ஒருவன் தன்னெஞ்சம் நடுவுநிற்றலை யொழிந்து நடுவல்ல வற்றைச்செய்ய நினைக்குமாயின், அந்நினைவை யான் கெடக்கடவே னென்றுணரு ‡ முற்பாதமாக வறிக, (எ-று).

*நினைத்தலும் செய்தலோடொக்கு மாதலின் 'செயின்' என்றார்.*

தெளி.—(இ-ள்). *தன்னெஞ்சம் - (ஒருவன்) தனதுமனம், நடுவு - நடுவு நிற்றலை, ஒரீஇ - நீங்கி, அல்ல-நடுவுநிற்ற லல்லாதனவற்றை (பாவச் செயல்களை), செயின்-செய்ய நினைக்குமாயின் (அந்நினைவை), யான் - நான், கெடுவல் - கெடக்கடவேன், என்பது - என்றுணரு முற்பாதமாக, அறிக - அறியக்கடவன, (எ-று).*

*யாதாவதொன்றனைச் செய்ய நினைத்தலுமதனைச் செய்தலோடொக்கு மாதலின் 'செயின்' என்றார். நினைத்தல் காரணமும் செய்தல் காரியமுமாம்.*

(க-து). *நடுவுநிலைமையி னின்றுந் தவறினவனுக்குத் தவறாது கேடுண்டாம் என்பது.*

6. Let him whose mind, departing from equity, commits sin well consider thus within himself, "I shall perish."

---

௭. கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

பரி.—(இ-ள்). நடுவாக நின்று அறத்தின்கண்ணே தங்கினவனது வறுமையை வறுமையென்று கருதார் உயர்ந்தோர், (எ-று).

*கெடுவென்பது * முதனிலைத் தொழிற்பெயர். செல்வமென்றுகொள்ளுவரென்பது குறிப்பெச்சம். + இவை மூன்றுபாட்டாலும் முறையே கேடும் பெருக்கமுங் கோடுதலான் வாரா வென்பதூஉம், கோடுதல் கேட்டிற் கேதுவா மென்பதூஉம், கோடாதவன் தாழ்வு ‡ கேடன் றென்பதூஉம் கூறப்பட்டன.*

தெளி.—(இ-ள்). *உலகம் - உயர்ந்தோர், நடுவாக-நடுவு நிலைமையாக (நின்று) நன்றிக்கண் - அறத்தின் கண்ணே, தங்கியான் - தங்கினவனது, தாழ்வு வறுமையை, கெடுவாக - வறுமையென்று, வையாது - வையார் (நினையார்), (எ-று).*

---

‡ *உற்பாதம் - பின்வரும் நன்மை தீமைகளை முன்னறிவிக்குங் குறி.*

* *முதனிலைத் தொழிற்பெயராவது பகுதியே தொழிற்பெயர்ப் பொருள்தாய நிற்பது.*

‡ *செல்வ மென்பதூஉம் என்றும் பாடமுண்டு.*

கெடுவென்பது புடைபெயர்ச்சியையுணர்த்துந் தல் விகுதிகெட்டு வந்தது. (உயர்ந்தோர் நடுவு நிலைமையுடையவனது வறுமையை) செல்வமென்றுகொள்ளுவாரென்பது குறிப்பெச்சம். இவை மூன்று பாட்டாலும் முறையே கேடும் பெருக்கமும் நடுவுநிலைமை தவறுதலால் வருவனவல்லவென்பதும், நடுவு நிலைமைதவறுதல் கேட்டிற்குக் காரணமாமென்பதும், நடுவுநிலைமையிற் றவறாதவனது தாழ்வு கேடாகாதென்பதும் சொல்லப்பட்டன.

(க-து). நடுவுநிலைமையோடு தருமவழியிலொழுகுகின்றவனது வறுமையைப் பெரியோர் தாழ்வாக நினையார் என்பது.

7. The great will not regard as poverty the low estate of that man who dwells in the virtue of equity.

அ. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

பரி.—(இ-ள்). முன்னே தான் சமனாக நின்று பின்தன்கண்வைத்த பாரத்தை வரையறுக்குந் துலாம்போல, இலக்கணங்களான் அமைந்து ஒரு பக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு அழகாம், (எ-று).

† உவமை அடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற் கோடாமையும் உவமைக்கண்ணும் கூட்டிச், சான்றோர் சீர்தூக்கலாவது ‡ தடைவிடைகளாற் கேட்டவற்றை ¶ ஊழான் உள்ளவாறுணர்தலாகவும், ஒருபாற் கோடாமையா

† கோலெ (தராசுக்கோலெ)ன்னும் உவமானத்தின் அடையா (விசேஷணமா)ன சமன்செய்தலையுஞ் சீர்தூக்கலையும் சான்றோரென்னும் உவமேயத்திற் சேர்த்துச் சமன்செய்தலையும் சீர்தூக்குதலையு முடைய சான்றோரென்றும், சான்றோரென்னும் உவமேயத்தி (பொருளி)ன் அடையான அமைதலையும் ஒருபாற் கோடாமையையும், கோலென்னுமுவமேயத்திற் சேர்த்து அமைதலையும் ஒருபாற் கோடாமையையுமுடைய கோலென்றும் கொள்ளவேண்டுமென்க. எனவே சமன்செய்தலும், சீர்தூக்கலும், அமைதலும, ஒருபாற் கோடாமையு மென்னும் நான்கும் கோலுக்கும் சான்றோர்க்கும் விசேஷணமாயின வென்பது பெற்றாம்.

‡ "தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னித்,தொடைவிடை யூழிவை தோலாத்-தொடைவேட், டழிபடலாற்ற லறிமுறையென் றெட்டின், வழிபடுதல் வல்ல தவை" என்பது புறப்பொருள்வெண்பாமாலை. தடைவிடைகளாற் கேட்டவற்றை—ஆட்சேப சமாதானவாயிலாக வாதிப்பிரதிவாதிகளிடத்துக் கேட்ட விஷயங்களை. தடையென்பதற்குத் தொடையென்றும்பாடபேதமுண்டு. தொடையென்பதற்கு ஆட்சேபித்தலென்பது பொருள்.

¶ ஊழான்—அறநூல் கூறிய விதிப்படி. இவ்வாறன்றி ஊழான் என்பதற்கு இயற்கை யறிவால் எனினு மொக்கும்.

வது அவ் வுள்ளவாற்றை மறையாது பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதலாகவும் உரைக்க. † இலக்கணங்களான் அமைதல் இருவழியும் ஏற்பனகொள்க.

தெளி.—(இ-ள்). சமன்செய்து - (முன்னேதான்) சமனாகநின்று, சீர்தூக்கும் - (பின்னே தன்னிடத்து வைத்தபொருள்களை) அளவு செய்யும், கோல்போல் - துலாம்போல, அமைந்து - (இலக்கணங்களால்) நிறைந்து, ஒருபால் - ஒருபக்கத்தில், கோடாமை - சாயாமையானது, சான்றோர்க்கு- (அறிவால்) நிறைந்தோருக்கு, அணி - அழகாம், (எ-று).

உவமானத்தினிடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் உவமேயத்தினிடத்தும் உவமேயத்தினிடையாகிய அமைதலும் ஒருபாற் கோடாமையும் உவமானத்தினிடத்தும் கூட்டுக. சான்றோர் சீர்தூக்கலாவது (வாதிப் பிரதிவாதிகள் கூறும்)தடையாலும் விடையாலும் கேட்ட வற்றை முறைமையாகவுள்ளபடி யறிதல். ஒருபாற் கோடாமையாவது அவ்வுள்ளபடியறிந்தவற்றை மறைக்காமல் பகைவர், அயலோர், நட்பினரென்னும் மூவகையோருக்கும் ஒப்பச் சொல்லுதல். இலக்கணங்களாலமைதல் உவமான வுவமேயமெனுமிரண்டிடத்தும்பொருந்துவனகொள்க. துலாம்-நிறைகோல்.

(க-து). நடுவு நிலைமையை விட்டு ஒருவர் பக்கத்திற் சார்ந்து பேசாமையே பெரியோர்க்கு அழகாம் என்பது.

8. To incline to neither side, but to rest impartial as the even fixed scale is the ornament of the wise.

கூ. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

பரி.—(இ-ள்). நடுவுநிலைமையாவது சொல்லின்கட் கோடுத லில்லாததாம்; ‡ அஃதன்னதாவது மனதின்கட் கோட்ட மின்மையைத் திண்ணிதாகப் பெறின், (எ-று).

---

† இலக்கணங் (அவ்வியாத்தி யதிவியாத்தி யசம்பவமென்னு மூக் குற்றங்களும் நீங்கிய தன்மை)களால் அமைதல் (பொருந்துதல்) இருவழியும் (உவமானமான கோலினகண்ணும் உவமேயமான சான்றோர் கண்ணும்)ஏற்பன (ஏற்கத்தக்கவைகளை)கொள்க. ஏற்பனவாவன:—ஐயந்திரப் பொருளை யுரைத்தல், மிகினும் குறையினும் நில்லாதாதலாம. "துலாக்கோ லியல்பே தூக்குங் காலை, மிகினுங் குறையினு நில்லா தாகலு,மையந் தீர்த்தலு நடுவு நிலைமையோ, டெய்தக் கூறுப வியல்புணர்ந் தோரே", "ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலு,மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே"என்னும் சூத்திரங்களும் ஈண்டறியத் தக்கனவாம்.

‡ அஃதன்னதாவது சொல்லில் கோணுத லில்லாமலிருப்பது. அஃதறமாவது எனறும் பாடமுண்டு.

சொல்- † ஊழான் அறுத்துச்சொல்லுஞ்சொல். (இவையிரண்டு பாட்டானும்) ‡ காரணம்பற்றி ஒருபாற்கோடாத மனத்தோடு கூடுமாயின், அறங்கிடந்தவாறு சொல்லுதல் நடுவு நிலைமையாமெனவே, அதனோடுகூடாதாயின் அவ்வாறுசொல்லுதல் நடுவு நிலைமை யன்றென்பது பெறப்பட்டது.

தெளி.—(இ-ள்). செப்பம்-நடுவு நிலைமையாவது, சொல் - சொல்லினிடத்து, கோட்டமில்லது - கோணுதலில்லாததாம் (அஃதத்தன்மையதாவது), உள் - மனத்தினிடத்து, கோட்டமின்மை-கோணுதலில்லாமையை, ஒருதலையா - உறுதியாக, பெறின் - பெற்றால், (எ-று).

சொல் - முறைமையாக வகையறுத்துச் சொல்லுஞ்சொல். (இவையிரண்டுபாட்டாலும் சபையானது) காரணம்பற்றி யொருபக்கத்திற் சாய்தலில்லாத மனத்துடன் கூடுமானால் அறங்கிடந்தபடி கூறுதல் நடுவு நிலைமையாமென்று கூறவே, அத்தன்மையதாகியமனத்தோடு கூடாதானால் அப்படி கூறுதல் நடுவுநிலைமை யல்லவென்பதுபெறப்பட்டது. (கூறப்பட்டது என்றும் பாடம்).

(க-து). மனக்கோட்ட மற்றுச் சொல்லினிடத்துக் கோணுதலில்லாமையே நடுவு நிலைமையாம் என்பது.

9. Freedom from crooked speech is rectitude if it be accompanied by steady freedom from crookedness within.

கU. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

பரி.—(இ-ள). பிறர் பொருளையும் தம்பொருள்போலப் பேணிச்செய்யின், வாணிகஞ்செய்வார்க்கு நன்றாய வாணிகமாம், (எ-று).

* பிறவுந் தமபோற் செய்தலாவது கொள்வது மிகையுங் கொடுப்பது

† ஊழான் அறுத்துச் சொல்லுஞ் சொல்—அறநூல் கூறிய விதிப்படி வரையறுததுச சொல்லுந் தீர்ப்பு.

‡ காரணம் பற்றி...பெறப்பட்டது என்பதன் பொருள்(நியாய) சபையார் பகைவர் சிநேகரென்னும் காரணம்பற்றி யொருபக்கத்திலும் சார்தலில்லாத மனத்தோடு கூடுவாராயின அவர் அறநூல் விதித்தபடி தீர்ப்புச சொல்லுதல் நடுவுநிலைமையாமென்று சொல்லவே, ஒருபக்கத்திலுஞ் சார்தலில்லாத மனத்தோடு அவர் கூடாராயின் அறநூல் விதித்தபடி தீர்ப்புச் சொல்லுதல் நடுவுநிலைமையல்ல வென்பது பெறப்பட்டதென்க. இதனால் அறநூல் விதித்தபடி தீர்ப்புச சொன்னாலும் சொல்வாரது மனத்தில் பட்சபாத மிருக்குமானல் அத்தீர்ப்பு நடுவுநிலைமையாகா தென்பது பெற்றாம்.

* தமவும் பிறவு மொப்ப நாடிப், கொள்வதூஉ மிகைகொளாது கொடுப் பதூஉங் குறைபடாது, பல்பண்டம் பகர்ந்து வீசும்" என்பது பட்டினப்பாலை.

குறைவுமாகாமல் ஒப்பநாடிச்செய்தல். இப்பாட்டுமூன்றனுள் || முன்னைய விரண்டும் அவையத்தாரை நோக்கின; § வினையது வணிகரைநோக்கிற்று. ¶ அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறுகச்சிறந்தமையின். (இதனால் நடுவு நிலைமை வகை கூறப்பட்டது).

தெளி.—(இ-ள்). பிறவும் - பிறர்பொருளையும், தமபோல் - தம்முடைய பொருளைப்போல, பேணி-பாதுகாத்து, செயின்-செய்தால், (அச்செய்கையானது) வாணிகஞ்செய்வார்க்கு - வியாபாரஞ் செய்வார்க்கு, வாணிகம் - (நல்ல) வியாபாரமாம், (எ-று).

பிறவுந்தமபோற் செய்தலாவது தாம் கொள்ளும் பொருள் தாங்கொடுக்கும் பொருட்கு மிகுதியும், தாம் கொடுக்கும்பொருள் தாம் வாங்கும் பொருட்குக் குறைவும் ஆகாமல் பொருந்த வாராய்ந்து செய்தல்.

இச்செய்யுள் மூன்றனுள், முன்னுள்ள விரண்டும் சபையாரை நோக்கினவாம், மற்றது வர்த்தகரை நோக்கியதாம்; அவ்விருவகையார்க்கும் நடுவுநிலைமையென்னுமிவ்வறம் வேறுகச்சிறந்திருத்தலின். (இதனால் நடுவு நிலைமையது கூறுபாடு சொல்லப்பட்டது).

(க-து). பிறர்பொருளையுந் தமது பொருளைப்போலப் பாதுகாத்துச்செய்யும் வியாபாரமே சிறந்த வியாபாரமாம் என்பது.

10. The true merchandize of merchants is to guard and to do by the things of others as they do by their own.

---

## ஒன்பதாவது - அதிகாரம்

## அடக்கமுடைமை—Self = Control.

பரி.—(இ-ள்). அஃதாவது மெய், மொழி, மனங்களை தீநெறிக்கட் செல்லாது அடங்குதலுடையனுதல். அஃது † வதிலார்தற்றம்போற் றங் குற்றமுங் காணும் நடுவு நிலைமை யுடையார்க்காதலின், ‡‡ இது நடுவு நிலைமையின்பின் வைக்கப்பட்டது.

---

|| முன்னையவிரண்டும் அவையத்தாரை நோக்கின; 'சமன்செய்து' என்னுங் குறளும் 'சொற்கோட்டமில்லது' என்னுங் குறளும் (நியாய) சபையாரைக் குறித்து நின்றன.

§ வினையது—"வாணிகஞ்செய்வார்க்கு" என்னுமிக்குறள்.

¶ அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறுகச் சிறந்தமையின் - சபையார் வணிகரென்னு மிருவர்க்கும் இந்த நடுவுநிலைமையாகிய தருமம் வேறுகச் சிறந்திருத்தலின். இதனால் சபையோர்க்கும் வணிகர்க்கும் நடுவு நிலைமை யாவரினும் மிகுதியுமாக விருக்க வேண்டு மென்பது திண்ணமாயிற்று. † புறங்கூறுமை. 10 - வது குறள்.

‡‡ இது - அடக்கமுடைமை யென்னு மிவ்வதிகாரம்.

தெளி.—அஃதாவது காயமும், வாக்கும், மனமும் நியவழியிற் செல் லாமல் அடங்குதலுடையனு யிருத்தல். அவ்வடக்கம் அயலாரது குற் றம் போலத் தமதுகுற்றமுங் காணும் நடுவுநிலைமை யுடையவருக்கு உரிய தாதலால் இது நடுவுநிலைமையின் பின் வைக்கப்பட்டது.

க. அடக்க || மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

பரி.—(இ-ள்). ஒருவனை அடக்கமாகிய அறம் பின் றேவருலகத் துய்க்கும்; அடங்காமையாகிய பாவம் தங்குதற்கரிய இருளின்கட்செலுத் தும், (எ-று).

* இருளென்பது ஓர் நரகவிசேடம். ‡ "எல்லாம், பொருளிற் பிறந்து விடும்" என்றாற்போல § உய்த்துவிடுமென்பது ஒரு சொல்லாய் நின்றது.

தெளி.—(இ-ள்). அடக்கம் - (ஒருவனை) அடக்கமாகிய அறமானது, அமரருள் - (பின்) தேவருலகத்தில், உய்க்கும் - கொண்டுபோய்விடும், அடங்காமை - அடங்காமையாகிய பாவமானது, ஆரிருள் - வசித்தற் கரிய நரகத்தில், உய்த்துவிடும் - செலுத்திவிடும், (எ-று).

இருளென்பது நரகவகையு ளொன்று. உய்த்துவிடுமென்ப தொரு சொல்.

(க-து). அடக்கமுடையவர் சுவர்க்கத்தையும் அஃதில்லாதவர் நரகத்தையு மடைவர் என்பது.

---

|| அமரர் என்பது மரணமில்லாதவ ரென்னும் பொருளது.

* இருள் என்பது அதற்குத்தானமாகிய நரகத்திற்காதலின் தானி யாகு பெயராம். எஞ்ஞான்றுமிருள் செருங்கியுள்ள நரகத்திற்கு அதிதமம் என்று பெயர்.

‡ நான் மணிக்கடிகை, எ. இதன் பொருள் போகம் கீர்த்திமுதலிய யாவும் திரவியத்தினுல் பிறக்கும் என்பது. பிறந்துவிடுமென்பது ஒரு சொல்.

§ உய்த்துவிடு மென்பது செலுத்தும் என்னும் ஒருமொழிப்பொரு ளதாயிருத்தல்பற்றி 'ஒருசொல்லாய் நின்றது' என்று கூறப்பட்டது. உய்த்துவிடும் என்பதில் உய்த்துவிடு என்பது பகுதி. இதில் விடு துணி வுப்பொருளுணர்த்திற்று. பாவபுண்ணியங்களிரண்டும் இம்மையிலே மனி தர்களால் செய்யப்பட்டுச் செயப்படு பொருள்களாக நிற்பினும், மறுமை யிலே அவை வினைமுதலாக நின்று தம்மைச் செய்தவர்களைச் செயப்படு பொருளாக்கி நரகசுவர்க்கங்களுக் கனுப்புதல்பற்றி 'அடக்க மமரரு ளுய்க் கும்' என்றும் "அடங்காமை யாரிரு ளுய்த்து விடும்" என்றும் கூறப்பட் டன வென்க.

1. Self-control will place (a man) among the Gods ; the want of it will drive (him) into the thickest darkness (of hell).

உ. காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

பரி.—(இ-ள்). உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வமில்லை; ஆகலான், அவ்வடக்கத்தை உறுதிப்பொருளாகக்கொண்டு அழியாமற்காக்க.

உயிரென்பது சாதியொருமை. அஃது ஈண்டு மக்களுயிர்மேனின்றது; அறிந்தடங்கிப் பயன்கொள்வது அதுவேயாகலின்.

தெளி.—(இ-ள்). அடக்கத்தை—அடக்கத்தினை, பொருளா - (உறுதிப்) பொருளாக(கொண்டு), காக்க - (அழியாமற்) காக்கக்கடவன, உயிர்க்கு- உயிர்கட்கு, அதனினூஉங்கு- அவ்வடக்கத்தின்மேற்பட்ட, ஆக்கம்-செல்வமானது, இல்லை—,(ஆதலால்), (எ-று).

உயிரென்பது சாதியொருமைப்பெயர் அஃது இவ்விடத்து மக்களது உயிரின் மேல் நின்றது; (அறியத்தக்கனவற்றை) அறிந்து மனமொழி மெய்க ளடங்கிப் பயனைப்பெறுவது அவ்வுயிரேயாதலின்.

(க-து). அடக்கத்தின் மிக்க செல்வமின்மையின், அதனை யழியாவாறு காத்தல் வேண்டும என்பது.

2. Let self - control be guarded as a treasure; there is no greater source of good for man than that.

ங. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

பரி.—(இ-ள்). அடங்குதலே நமக்கு அறிவாவதென்று அறிந்து நெறியானே ஒருவன் அடங்கப்பெறின், அவ்வடக்கம் நல்லோரான் அறியப்பட்டு அவனுக்கு விழுப்பத்தைக் கொடுக்கும், (எ-று).

இல்வாழ்வானுக்கு அடங்குநெறியாவது மெய்ம்முதன் மூன்றும் தன் வயத்தவாதல்.

தெளி.—(இ-ள்). அறிவறிந்து - (அடங்குதலேநமக்கு) அறிவாவதென்று அறிந்து, ஆற்றின் - நல்வழியாலே, (ஒருவன்), அடங்கப்பெறின் - அடங்கப்பெற்றால், செறிவு - அவ்வடக்கமானது, அறிந்து - (நல்லோரால்) அறியப்பட்டு, சீர்மை - மேம்பாட்டை, பயக்கும் - (அவனுக்குத்) தரும், (எ-று).

இல்வாழ்வானுக்கு அடங்கும் வழியாவது காயமும், வாக்கும், மனமும் தன்வசமாக வாதலாம்.

(க-து). ஒருவன் மனம் வாக்குக் காயமென்னுந் திரிகாணத்தாலும் அடங்கிநடப்பானாகில் அவ்வடக்கம் அவனுக்கு மேன்மையைத் தரும் என்பது.

3. If a man, knowing that self-control is knowledge, control himself, in the prescribed way such self-control, known by the wise, will bring distinction.

௪. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

பரி.—(இ-ள்). இல்வாழ்க்கையாகிய தன்னெறியின் வேறுபடாது நின்று அடங்கினவனது உயர்ச்சி மலையினுயர்ச்சியினும் மிகப்பெரிது. ()

*திரியாதடங்குதல் - பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல். மலை - ஆகுபெயர்.*

தெளி.—(இ-ள்). *நிலையின் - (இல்வாழ்க்கையாகிய தன்) வழியில் திரியாது - வேறுபடாது (நின்று), அடங்கியான் - அடங்கினவனது, தோற்றம் - உயர்ச்சியானது, மலையினும் - மலையினுயர்ச்சியினும், மாணப் பெரிது - மிகப்பெரிதாம், (எ-று).*

*வேறுபடாது நின்றுஅடங்குதல்-செவி முதலிய வைந்திந்திரியங்களாலும் சத்தமுதலிய வைம்புலன்களையும் அனுபவித்துக் கொண்டிருந்தே அடங்குதல். மலையென்னு முதற்பொருளின் பெயர் அதன் பண்பாகிய வுயர்ச்சிக்காதலின் பொருளாகுபெயராம்.*

(க-து). *அடங்கி நடப்பவனது மேன்மை மலையி னுயர்ச்சியினும் பெரிதாம் என்பது.*

4. More lofty than a mountain will be the greatness of that man who without swerving from his proper (domestic) state controls himself.

௫. எல்லார்க்கு நன்றும் பணிதல் அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

பரி.—(இ-ள்). பெருமித மின்றி யடங்குதல் எல்லார்க்கும் ஒப்ப நன்றேயெனினும், அவ்வெல்லாருள்ளும் செல்வமுடையார்க்கே வேறொரு செல்வமாஞ் சிறப்பினை யுடைத்து, (எ-று).

*பெருமிதத்தினைச் செய்யுங் கல்வியுங் குடிப்பிறப்பும் உடையார் அஃதின்றி † அவைதம்மானே அடங்கியவழி அவ்வடக்கம் சிறந்து காட்டாதாகலின் 'செல்வர்க்கே செல்வந் தகைத்து' என்றார் ¶ செல்வத்*

† *அவைதம்மானே - கல்வியினாலும் குடிப்பிறப்பினாலும்.*

¶ *செல்வத்தகைத்து என்பது மெலிக்கும்வழி மெலித்தலென்னும் செய்யுள் விகாரத்தால் செல்வந்தகைத்து என மெலிந்து நின்றது. [தகரவொற்று நகரவொற்றானது விகாரம்].*

தகைத் தென்பது மெலிந்து நின்றது. † பொது வென்பாரையும் உடன் பட்டு நின்றே சிறப்பாதல் கூறியவாறு. இவையைந்துபாட்டானும் பொது வகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). பணிதல் - (பெருமைப்பாடில்லாது) அடங்கு தல், எல்லார்க்கும்—, நன்றாம் - (ஒப்ப)நன்றாகும், (ஆயினும்), அவருள்ளும்- அவ்வெல்லாருள்ளும், செல்வர்க்கே - செல்வ முடையவர்களுக்கே, செல் வந்தகைத்து - (வேறொரு) செல்வமாய்த் தோன்றுஞ் சிறப்பினை யுடைய தாம், (எ-று).

பெருமைப்பாட்டினை (செருக்கினை) யுண்டாக்கும் கல்வியும் குடிப் பிறப்பும் உடையவர் அப்பெருமைப்பாடில்லாமல் அவற்றாலே அடங்கிய விடத்து அவ்வடக்கம் சிறந்து தோன்றுதாகலின் 'செல்வர்க்கே செல் வந் தகைத்து' என்றார். செல்வத் தகைத்தென்பது செல்வந்தகைத்தென மெலித்தல் விகாரமடைந்து நின்றது. அடக்கம் யாவர்க்கும் பொதுவான தருமமாமென்பாரையு மங்கீகரித்து நின்றே அது சிறப்பாதலைக் கூறியவா றாம். இவை யைந்துபாட்டாலும் பொதுவகையால் அடக்கத்தினது சிறப் புச் சொல்லப்பட்டது.

(க-து). செல்வ முடையவரிடத்தே அடக்கம் சிறந்து விளங் கும் என்பது.

5. Humility is good in all ; but especially in the rich it is (the excellence of) a higher riches.

சு. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

பரி.—(இ-ள்). ஆமைபோல ஒருவன் ஒரு பிறப்பின்கண் ஐம் பொறிகளையும் அடக்கவல்லனாயின், அவ்வன்மை அவனுக்கு ஏழுபிறப் பின்கண்ணும் அரணாதலை உடைத்து, (எ-று).

---

† பொதுவென்பாரையு முடன்பட்டுநின்றே சிறப்பாதல் கூறியவாறு என்பதற்குக் கல்வியுடையார் குடிப்பிறப்புடையார் செல்வமுடையா ரென்னு மூன்று திறத்தினர்க்கும் அடக்கமென்னுங்குணம் பொதுவான தாகு மென்பாரது அபிப்பிராயத்தையு மொப்புக்கொண்டே பொருளுடை யார்க்கே அவ்வடக்கம் இன்றியமையாச் சிறப்பினதாகுமென்று கூறிய விதமாம். இதனால் அடக்கமானது கல்வியுடையாரிடத்தும் குடிப்பிறப் புடையாரிடத்தும் சிறந்துவிளங்காமல்பொருளுடையாரிடத்தேசிறந்துவிள ங்குமென்பது பெறப்பட்டது. பொருளில்லாவிடத்துச் செருக்கு மிகுதற் கேதுவின்மையின் செருக்கு மிகுதற்கேதுவான பொருளுடையாரிடத்து அடக்கமிருப்பின் அவ்வடக்கம் கல்வியுடையாரது அடக்கத்திலும் குடிப் பிறப்புடையாரது அடக்கத்திலும் மேம்பட்டு விளங்குமென்பது கருத்து.

‡‡ ஆமை ஐந்துறுப்பினையும் இடர்புகுதாமல் அடக்குமாறுபோல இவனும் ஐம்பொறிகளையும் பாவம்புகுதாமல் அடக்கவேண்டுமென்பார் 'ஆமைபோல்' என்றார். ஒருமைக்கட்செய்த வினையின் பயன் எழுமையுந் தொடருமென்பது இதனானறிக. இதனான் மெய்யடக்கங்கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). ஒருமையுள் - (ஒருவன்) ஒருபிறப்பினிடத்து, ஆமைபோல் - ஆமையைப்போல, ஐந்து - ஐம்பொறிகளையும், அடக்கலாற்றின் - அடக்க வல்லவனாகில், (அவ்வல்லமை அவனுக்கு), எழுமையும் - ஏழுபிறப்பின் கண்ணும், ஏமாப்புடைத்து - காவலாதலை யுடையதாம், ()

ஆமையானது தனது கால்கள் நான்கும், தலையொன்றுமாகிய வைந்தவயவங்களையுந்துன்பம் வாராதபடி யடக்கும் விதம்போல இவனும் மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்பொறிகளையும் பாவம் வாராதபடி அடக்கவேண்டு மென்பார் 'ஆமைபோல்' என்றார். ஒரு பிறப்பிற் செய்த வினைப்பயன் ஏழுபிறப்பிலுந் தொடருமென்பது இதனாலறிக. இதனால் காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.

(க-து). ஒருவன் ஐம்பொறிகளையும் அடக்க வல்லவனாயின் அவனுக்கு அவ்வடக்கம் ஏழுபிறப்பிலுந் துணையாம் என்பது.

6. He who throughout one birth like a tortoise keeps in his five senses, the fruit of it will prove a safeguard to him throughout the seven - fold births.

எ. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

பரி.—(இ-ள்). தம்மாற் காக்கப்படுவன எல்லாவற்றையும் காக்க மாட்டாராயினும் * நாவொன்றனையுங் காக்க; அதனைக் காவாராயின் சொற்குற்றத்தின்கட் பட்டுத் தாமே துன்புறுவர், (எ-று).

யாவென்பது அஃறிணைப்பன்மைவினாப்பெயர்; அஃது ஈண்டு எஞ்சாமை உணரநின்றது. முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. சொற்குற்

---

‡‡ ஆமை தன் னைந்துறுப்புக்களையும்அடக்குவதுபோல ஒருவன் ஐம்பொறிகளையு மடக்கவேண்டுமென்பதன் பயன் பகவத்கீதை சாங்கிய யோகவத்தியாயத்தில் "இவன் (துறவி) ஆமையானது (தன்) அவயவங்களை (உள்ளுக்கிழுத்துக் கொள்வது) போலச் சகலமான விஷயங்களிலிருந்தும் இந்திரியங்களை யெப்போது இழுத்துக்கொள்ளுகிறானோ அப்போது அவனுடைய ஞானமானது நிலைத்தது" என்று கூறுவதனாலுமறிக.

* "ஆக்கப் படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும், காக்கப் படுவன விந்திரிய மைந்தினுங், நாக்கல் இல்லை நனிவெல்லு மாறே" என்பது வளையாபதி.

றம் - சொல்லின்கட்டோன்றுங் குற்றம். † அல்லாப்பர், செம்மாப்பர் என் பனபோலச் சோகாப்பரென்பது ஒரு சொல்.

தெளி.—(இ-ள்). யா - (தம்மால் காக்கப்படுவனவாகிய) எல்லாவற்றையும், காவாராயினும் - காக்கமாட்டாராயினும், நா - நாவொன்றையும், காக்க - காக்கக்கடவர், காவாக்கால் - (அந்நாவினைக்) காக்கமாட்டாராயின், சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலகப்பட்டு, சோகாப்பர் - (தாமே) துன்படைவர், (எ-று).

யாவென்பது எவையென்னும் பொருளையுணர்த்தும் அஃறிணைப்பன்மை வினைப்பெயர். அஃதிங்குக் குறையாமையென்பதறியுமாறு நின்றது. யாவுமென்னும் முற்றும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்குநின்றது. சொற்குற்றம் - சொல்லினிடத்துத் தோன்றுங் குற்றம். அது குன்றக் கூறல் முதலியனவாம். சோகாப்பரென்பது ஒருசொல்.

(க-து). நாவடக்கமில்லார் சொற்குற்றத்திலகப்பட்டுத் துன்புறுவர் என்பது.

7. Though you guard nothing else, guard your tougue; as for those who do not guard it their words will be drawn into evil and they will suffer distress.

அ. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்.

பரி.—(இ-ள்). தீயவாகிய சொற்களின் பொருள்களாற் பிறர்க்கு வருந் துன்பம் ஒன்றயினும் ஒருவன்பக்கல் உண்டாவதாயின், அவனுக்குப் பிறவறங்களான் உண்டான நன்மை தீதாய்விடும், (எ-று).

தீயசொல்லாவன : தீங்குபயக்கும் பொய், குறளை, கடுஞ்சொல்லென்பன. ‡ ஒருவன் நல்லவாகச்சொல்லுஞ் சொற்களின்கண்ணே ஒன்றாயி

---

† சோகம் என்பதன் விகாரமாகிய சோ என்னும் சொல்லும் காப்பர் என்னும் சொல்லும் ஆகிய இரண்டுசொல்லும் சேர்ந்து சோகாப்பர் என்றாயின என்பாரது கூற்றை யொப்பாது 'அல்லாப்பர் செம்மாப்பர் என்பன போலச் சோகாப்பரென்பது ஒருசொல்' என்று கூறப்பட்டது. சோகாப்பர் என்பதில் துன்பமென்னும் பொருளை யுணர்த்தும் சோகம் என்னும் பண்புப்பெயரின் விகாரமாகிய சோகாப்பு என்பது பகுதி, அல்லாப்பர் செம்மாப்பர் என்பனவற்றில் அல்லாப்பு செம்மாப்பு என்பன பகுதிகள்.

‡ 'ஒன்றானுந்தீச்சொற் பொருட்பய னுண்டாயின்' என்பதற்கு ஒன்றானும் - (ஒருவன் நல்லனவாகச் சொல்லும் சொற்களிடத்தே) ஒரு சொல்லாயினும், தீச்சொற் பொருட்பயன் - தீயசொலொலுண்டாகும் பொருளினது பயன், உண்டாயின் - (பிறர்க்கு) உண்டாவதாயின் என்று பொருள் கூறுவாருமுளர் என்பது.

னும் தீச்சொற்பயம் பொருளினது பயன் பிறர்க்குண்டாவதாயின் என்றுரைப்பாருமுளர்.

தெளி.—(இ-ள்). தீச்சொல் - தீயவாகிய சொற்களின், பொருட்பயன் - பொருள்களால் (பிறர்க்குவரும் துன்பமாகிய) பயனானது, ஒன்றானும் - ஒன்றாயினும், உண்டாயின் - (ஒருவனிடத்தில்) உண்டாவதாயின், நன்று - (அவனுக்குப் பிறவறங்களாலுண்டாகிய) நன்மையானது, ஆகாதாகிவிடும் - தீதாய்விடும், (எ-று).

தீயசொற்களாவன:—தீமையைத்தரும் பொய், குறளை, கடுஞ்சொல் என்பனவாம்.

(க-து). ஒருவன் கடுஞ்சொற்களைச் சொல்லுவானாயின் அச்சொற்கள் அவனது நன்மையனைத்தையுங் கெடுக்கும் என்பது.

8. If a man's speech be productive of a single evil, all the good done by him will be turned into evil.

கூ. தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

பரி.—(இ-ள்). ஒருவனை ஒருவன் தீயினாற் சுட்டபுண் மெய்க்கட்கிடப்பினும் மனத்தின்கண் அப்பொழுதே ஆறும்; அவ்வாறன்றி வெவ்வுரையுடைய நாவினாற் சுட்டவடு அதன் கண்ணும் எஞ்ஞான்றும் ஆறாது.

ஆறிப்போதலால் தீயினாற்சுட்டதனைப் 'புண்' என்றும், ஆறாமையின் நாவினாற்சுட்டதனை 'வடு' என்றுங் கூறினார். தீயும் வெவ்வுரையுஞ் சுடுதற்றொழிலான் ஒக்குமாயினும், ஆறாமையாற் றீயினும் வெவ்வுரை கொடிதென்பது போதரலின், இது ‡ குறிப்பான்வந்த வேற்றுமை யலங்காரம். இவை மூன்று பாட்டானும் மொழியடக்கங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (ஒருவனை யொருவன்), தீயினாற் சுட்ட—நெருப்பாற்சுட்ட, புண்-புண்ணானது, (உடம்பினிடத்திருந்தாலும்), உள்-மனத்தினிடத்து, ஆறும்-(அப்போதே) ஆறிப்போம், (அப்படியல்லாமல்), நாவினால்-

‡ உவமானமான தீயு (நெருப்பு)ம் உவமேயமான கடுஞ்சொல்லும் சுடுகிற(பிறரைவருத்துகின்ற)தொழிலினால் தம்முள் சமானமுடையனவாயிருந்தாலும் (தீயினாற் சுட்டபுண் உடம்பில் ஆறிப்போவதுபோலாகாது நாவினாற் சுட்ட வடு மனத்தின்கண் ஆறாது கிடத்தலின்) நெருப்பைப் பார்க்கிலும் கடுஞ்சொல் கொடியது என்னும் வேற்றுமை ' ஆறாதே நாவினாற் சுட்டவடு'என்னுங் குறிப்பாற்பெற வைத்தமையின் இது குறிப்பான் வந்த வேற்றுமையலங்காரமாயிற்று. வேற்றுமையலங்காரமாவது வெளிப்படையாகவாவது குறிப்பாகவாவது ஒப்புடைய இருபொருளை யொருபொருளாகவைத்து அவற்றைத் தம்முள் வேற்றுமைபடச் சொல்லுதலாம்

*(தீயசொற்களையுடைய) நாவினால், சுட்ட—,வடு-வடுவானது, (அம்மனத்தினிடத்தும் எப்போதும்) ஆறாது—ஆறாதாம், (எ-று).*

*ஆறிப்போதலால் தீயினாற்சுட்டதனைப் 'புண்' என்றும், ஆறாதிருத்தலால் நாவினாற் சுட்டதனை 'வடு' என்றும், சொல்லினார். தீயும் கடுஞ்சொல்லும் சுடுதற்றொழிலால் தம்முளொக்குமாயினும் ஆறாமையினால் தீயினும் கடுஞ்சொல் கொடியதென்பது தோன்றுதலால் இது குறிப்பால் வந்த வேற்றுமையணி. இவை மூன்றுபாட்டாலும் வாக்கின தடக்கம் சொல்லப்பட்டது.*

(க-து). *வருத்துந்தொழிலால் கடுஞ்சொல் தீயினுங் கொடியது என்பது.*

9. The wound which has been burnt in by fire may heal, but a wound burnt in by the tongue will never heal.

௧0. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

பரி.—(இ-ள்). மனத்தின்கண் வெகுளிதோன்றாமற் காத்துக் கல்வி யுடையவனாய் அடங்குதலை வல்லவனது செவ்வியை, அறக்கடவுள் பாரா நிற்கும்; அவனை யடையு நெறியின்கட் சென்று, (எ-று).

*அடங்குதல்—மனம் புறத்துப் பரவாது அறத்தின் கண்ணே நிற்றல். செவ்வி—தன்குறை கூறுதற்கேற்ற மன மொழி முகங்கள் இனியனாங் காலம். இப்பெற்றியானை அறந் தானே சென்றடையும் என்பதாம். இதனான் ‡‡ மனவடக்கங் கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *கதம் - கோபத்தை, காத்து (மனத்தின்கண் தோன்றாமல்) பாதுகாத்து, கற்று - கல்வியுடையவனாகி, அடங்கல் - அடங்குதலில்,ஆற்றுவான்-வல்லவனாயிருப்பவனது, செவ்வி-சமயத்தை, அறம்-அறக்கடவுள், பார்க்கும் - பாரா நிற்கும், ஆற்றில் - (அவனைச்சேரும்) வழியில், நுழைந்து - சென்று, (எ-று)*

*அடங்குதல்-மனம் பராமுகப்பட்டு (பாவவழியிற்) செல்லாது அறத்திலே நிற்றல். செவ்வி - தன்குறையைச் சொல்லுதற்கேற்ற மனமொழி முகங்கள் இனிமையுடையவனா யிருக்கிற காலம், இத்தன்மையுடையவனை அறக்கடவுள் தானே சென்று அடையுமென்பதாம். இதனால் மனத்தி னடக்கம் சொல்லப்பட்டது.*

---

*‡‡ மெய்ம்முதலிய வற்றின் அடக்கத்தைப்பற்றி நீதிநெறிவிளக்கம் "பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கு, மெய்தாமை சொல்லின் வழுக்காது - மெய்யிற், புலமைந்துங் காத்து மனமா சகற்று, நலமன்றே நல்லா றெனல்" என்றும், திரிகடுகம் "வாயி னடங்குத றுப்புரவாமாசற்ற, செய்கை யடங்குத றிப்பியமாம் - பொய்யின்றி, நெஞ்ச மடங்குதல் வீடாகும்" என்றும் கூறுமாறறிக.*

(க-து). கல்வியறிவுடையவனுக்கோபம்வாரா தடங்கியிருப்பவனிடத்து எல்லாவறங்களும் நிலைபெறும் என்பது.

10. Virtue, seeking for an opportunity, will come into the path of that man who, possessed of learning and self-control, guards himself against anger.

---

## பத்தாவது அதிகாரம்.

## ஒழுக்கமுடைமை—

## *Observance of the proprieties of life.*

பரி.—அஃதாவது தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினை யுடையராதல். இது மெய்ம்முதலிய அடங்கினூர்க் கல்லது முடியாதாகலின், அடக்கமுடைமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது தத்தமது சாதிக்கும் ஆசிரமத்திற்கும் சொல்லப்பட்ட ஆசாரத்தை யுடையவராயிருத்தல். இது காயமுதலானவை யடங்கினவர்க்கல்லது முடியாதாகலின், அடக்கமுடைமையின்பின் வைக்கப்பட்டது.

க. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

பரி.—(இ-ள்). ஒழுக்கம் எல்லார்க்குஞ் சிறப்பினைத் தருதலால் அவ்வொழுக்கம் உயிரினும் பாதுகாக்கப்படும், (எ-று).

உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் ஒப்ப விழுப்பந்தருதலின், பொதுப்படக் கூறினூர். சுட்டு வருவிக்கப்பட்டது. அதனால் அங்ஙனம் விழுப்பந்தருவதாயது ஒழுக்கமென்பது பெற்றாம். † உயிர் எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாயினும் ஒழுக்கம்போல விழுப்பந் தாராமையின் 'உயிரினு மோம்பப்படும்' என்றார்.

தெளி —(இ-ள்). ஒழுக்கம் - ஆசாரமானது, விழுப்பம்-சிறப்பினை, தரலான் - (எல்லார்க்கும்) கொடுத்தலால், ஒழுக்கம்-அவ்வாசாரமானது, உயிரினும் - உயிரைப்பார்க்கிலும், ஓம்பப்படும் - பாதுகாக்கப்படும், (எ-று).

ஒழுக்கம் உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் சமமாகச்சிறப்பினைத்தருதலால் 'ஒழுக்கம் விழுப்பந் தரலான்'எனப்பொதுப்படச்சொல்லினூர். (அவ்வொழுக்கமென) அகரச்சுட்டுவருவிக்கப்பட்டது. அச்சுட்டினுல் அவ்வாறு சிறப்பினைத் தருவதாயது ஒழுக்கமென்பதுபெற்றாம். ஒருவனுக்கு உயிரா

---

† ஒருவனுக்கு உயிர்போலச் சிறந்தது யாதொரு பொருளுமில்லை. அவ்வாறாயினும் அவ்வுயிர் நல்வினைக்கும் தீவினைக்கும் காரணமாய்நின்று இன்பத்துன்பங்களை வருவித்துக்கொள்ளுகின்றது. ஒழுக்கமோ அவ்வாறாகாமல் இன்பத்தை யுண்டாக்குவதற்கே காரணமாயிருக்கின்றது; அதனுல் ஒழுக்கம் உயிரைப்பார்க்கிலுஞ் சிறந்ததா மென்க.

னது எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாயினும் ஒழுக்கம்போலச் சிறப்பைத் தாராமையால் அஃது 'உயிரினுமோம்பப்படும்' என்றார்.

(க-து). ஆசாரம் உயிரினும் சிறப்புடையதாம் என்பது.

1. Propriety of conduct leads to eminence, therefore should it be preserved more carefully than life.

௨. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

பரி.—(இ-ள்). ஒழுக்கத்தினை ஒன்றனும் அழிவுபடாமற் பேணி வருந்தியுங் காக்க,‡ அறங்கள் பலவற்றையும் ஆராய்ந்து அவற்றுள் இருமைக்குந் துணையாவது யாதென்று மனத்தை ஒருக்கித் தேர்ந்தாலும் துணையாய் முடிவது அவ்வொழுக்கமே யாகலான், (எ-று).

† பரிந்துமென்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. இவையிரண்டுபாட்டானும் ஒழுக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). ஒழுக்கம் - ஆசாரத்தை, ஓம்பி - (ஒன்றாலும்அழிவு படாமல்) பாதுகாத்து, பரிந்து-வருந்தியும், காக்க-காக்கக்கடவன், தெரிந்து, (அறங்கள்பலவற்றையும்)ஆராய்ந்து,(அவற்றுள் இம்மை மறுமையென்னும் இருமைக்குந் துணையாவதுஎவ்வறமென்று), ஓம்பி - (மனத்தை) அடக்கி, தேரினும்-தெளிந்தறிந்தாலும், துணை - துணையாய்முடிவது, அஃதே - அவ்வாசாரமே, (ஆதலால்), (எ-று).

பரிந்து மென்னும் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. இவை இரண்டு பட்டாலும் ஒழுக்கத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து). அறங்களுள் சிறந்த துணையாயிருப்பது ஆசாரமாதலின் அதனைப்பழுதுபடாமல் காத்தல்வேண்டும் என்பது.

2. Let propriety of conduct be laboriously preserved and guarded; though one know and practise and exell in many virtues, that will be an eminent aid.

௩. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

‡ அறங்கள்பலவாவன;ஆதுலர்க்குச்சாலை,ஓதுவார்க்குணவு,அறுசமயத்தார்க்குண்டி, பசுவிற்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், நோய்மருந்து, பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம்,தடம்,சோலை,ஆவுரிஞ்சுதறி,விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம் என்றற்றொடக்கத்தன.

† இவ்வும்மை இழிவு சிறப்பும் எதிரதுதழீயதுமாம்.

பரி.—(இ-ள்). எல்லார்க்குந் தத்தம் வருணத்திற் கேற்ற ஒழுக்க முடைமை குலனுடைமையாம்; அவ்வொழுக்கத்திற் றவறுதல் அவ்வருணத்திற் றாழ்ந்த வருணமாய்விடும், (எ-று).

‡ பிறந்த வருணத்துள் இழிந்த குலத்தாராயினும் ஒழுக்கம் உடையராக உயர்குலத்தாராவராகலின் 'குடிமை'யா மென்றும், உயர்ந்த வருணத்துப் பிறந்தாராயினும் ஒழுக்கத்திற்றவறத் தாழ்ந்த வருணத்தாராவராகலின் 'இழிந்தபிறப்பாய் விடும்' என்றும் கூறினர். உள்வழிப்படுங் குணத்தினும் இல்வழிப்படுங் குற்றம் பெரிதென்றவாறு. § பயன் இடையீடின்றி எய்துதலின், அவ்விரைவுபற்றி அவ்வேதுவாகிய வினைகளே பயனாகவோதப்பட்டன.

தெளி.—(இ-ள்). (எல்லார்க்கும்) ஒழுக்கமுடைமை-(தத்தமதுவருணத்திற்குப்பொருந்திய) ஆசார முடைமையானது, குடிமை - குலமுடைமையாம், இழுக்கம் - (அவ்வாசாரத்தினின்றுந்) தவறுதல், இழிந்த பிறப்பாய் விடும்-(அவ்வருணத்தில்) தாழ்ந்த வருணமாய் விடும், (எ-று).

பிறந்த சாதியுள் இழிந்த குலத்தவரானாலும் ஆசாரமுடையவராகஉயர்ந்த குலத்தினராவ ராதலின்: 'குடிமை' ஆம் என்றும், உயர்ந்தசாதியிற்பிறந்தவ ரானாலும்ஆசாரத்திற்றவறத் தாழ்ந்தசாதியாராவராதலின் 'இழிந்தபிறப்பாய் விடும்' என்றுஞ்சொல்லினர். ஆசாரமுள்ளவிடத் துண்டாகுங் குணத்தினும் அவ்வாசாரமில்லாவிடத் துண்டாகுங் குற்றம் பெரிதாமென்பதாம். (ஒழுக்கம் இழுக்கம் என்பவற்றின்) பயன் தடையில்லாம லடைதலால், அவ்விரைவுபற்றி அப்பயனுக்குக் காரணமாகிய வினைகளே பயனாகச் சொல்லப்பட்டன. வருணம் - சாதி. குலம் - குடிச்சிறப்பு.

(க-து). ஆசாரமுடையவர் உயர்ந்த குலத்தாரும் அஃதில்லாதவர் இழிந்த சாதியாருமாவர் என்பது.

3. Propriety of conduct is true greatness of birth; impropriety will sink into a mean birth.

---

‡ "நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ், சொல்லள வல்லாற் பொருளில்லைத் - தொல்சிறப்பி, னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை, யென்றிவற்றா னாகுங் குலம்" என்பது நாலடியார்.

ஒருவர் பிறந்தசாதியுள் தாழ்ந்த குலத்தவரானாலும் ஒழுக்கமுடையவராயிருந்தால் அவர் உயர்ந்த குலத்தாராவர் என்றும், ஒருவர் உயர்ந்த சாதியுள் பிறந்தவரானாலும் அவர் ஒழுக்கத்தினின்றும் தவறினால் தாழ்ந்த சாதியராய் விடுவாரென்று மறிக.

§ குலனுடைமையும் தாழ்ந்த வருணமுமாகிய பயன் (பிரயோஜனம்) இடையீடின்றி (காலதாமத மின்றி) யெய்துதலின் (உண்டாதலினால்) அவ்விரைவுபற்றி (அந்தவிரைவு நோக்கி) அவ்வேதுவாகிய வினைகளே (குலனுடைமையும் தாழ்ந்தவருணமுமுண்டாவதற்குக் காரணமாகிய ஒழுக்கமுடைமையும் இழுக்கமுமாகிய வினைகளே) பயனாக (குலனுடைமை இழிந்தபிறப்பு என்னும் பிரயோஜனமாக) ஓதப்பட்டன. இது காரணம் காரியமாக வந்த வுபசார வழக்கு.

ச. மறப்பினு ‡ மோத்துக் கொளலாகும் $ பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

பரி.—(இ-ள்). கற்ற வேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணங் கெடாமையிற் பின்னும் அஃதோதிக் கொளலாம், அந்தணனது உயர்ந்த வருணம் தன்னொழுக்கங் குன்றக் கெடும், (எ-று).

*மறந்தவழி இழிகுலத்தனுமாகலின், மறக்கலாகாதென்னுங் கருத்தான் 'மறப்பினும்' என்றார். † சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின், இஃது ஏனையவருணங்கட்குங் கொள்ளப்படும்.*

தெளி.—(இ-ள்). *ஒத்து - (கற்ற) வேதத்தினை, மறப்பினும்-மறந்தானாயினும், கொளலாகும் - (அவ்வருணங் கெடாமையிற் பின்னும் அதனை) ஓதிக்கொள்ளலாம், பார்ப்பான் - பிராமணனது, பிறப்பு - உயர்ந்தவருணமானது, ஒழுக்கங்குன்ற - (தனது) ஆசாரங்குறைய, கெடும்—அழியும், ()*

*கற்றவேதத்தினை மறந்தவிடத்து இழிகுலத்தானுவனுதலால், அதனை மறக்கலாகாதென்னுங்கருத்தால் 'மறப்பினும்' என்றார். மறப்பினுமென்ற உம்மை எதிர்மறைப்பொருளது. சிறப்புடைய முதல் வருணத்திற்குச் சொல்லுதலினால், இவ்வொழுக்கம் மற்றைய வருணங்களுக்குங்கொள்ளப்படும்.*

(க-து). *ஒருவனிடத்து ஆசாரங் குறைந்தால் அவனது சாதி கெடும் என்பது.*

4. A Brahmin though he should forget the Veda may recover it by reading ; but if he fail in propriety of conduct even his high birth will be destroyed.

ரு. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

பரி.—(இ-ள்). அழுக்கா றுடையான்மாட்டு ஆக்கமில்லாதாற் போல ஒழுக்கமில்லாதவன் மாட்டும் உயர்ச்சி யில்லை, (எ-று).

---

‡ *தொன்றுதொட்டு ஒருவர்க் கொருவரால் ஓதப்பட்டுவருங் காரணத்தினால் வேதத்திற்கு ஒத்து என்னும் பெயர் வழங்கப்படுகின்றது.*

$ *பிராமணர் வேதத்தின் பொருளையே பிரதானமாகக் கொண்டு பார்ப்பதுபற்றி அவர் பார்ப்பார் என்று சொல்லப்படுகின்றார். கலித்தொகையுரையில் நச்சினார்க் கினியர் "வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார்" என்று கூறியதும் ஈண்டறியத்தக்கதாம்.*

† *சிறப்புடைய வருணத்தவராகிய பிராமணருக்கு ஆசாரங்குறையச் சாதிகெடும் என்று சொல்லினமையின், ஆசாரங்குறையச்சாதிகெடுமென்னுமிவ்விஷயம் மற்றைய சாதியாருக்கும் கொள்ளப்படுமென்று கூறியது உபலட்சணமாம்.*

§ உவமையான் ஒழுக்கமில்லாதவன் சுற்றத்திற்கும் உயர்ச்சி யில்லை யென்பது பெற்றாம்; என்னை? ‡ "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம்" மும் நல்கூர்தலின். உயர்வு - உயர்குலமாதல்.

தெளி.—(இ-ள்). அழுக்காறுடையான்கண் - பொறாமையுடையவனிடத்து, ஆக்கம்போன்று - செல்வமில்லாமைபோன்று, ஒழுக்கமிலான்கண் - ஆசாரமில்லாதவனிடத்தும், உயர்வு - உயர்ச்சியானது, இல்லை—,()

கொடுப்ப தழுக்கறுப்பானது சுற்றத்தாரும் வறுமையடைதலின், உவமானத்தினால் ஒழுக்கமில்லாதவனது சுற்றத்தாருக்கும் உயர்ச்சியில்லை யென்பது பெறப்பட்டது. உயர்வு - உயர்ந்தகுலமாதல்.

(க-து). ஆசாரமில்லாதவனுக்கு மேன்மை யில்லை என்பது.

5. Even as the envious man will be without wealth, so will the man destitute of propriety of conduct be without greatness.

சு. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

பரி.—(இ-ள்). செய்தற்கருமைநோக்கி ஒழுக்கத்திற் சுருங்கார் மனவலியுடையார்; அவ்விழுக்கத்தால் தமக்கு இழிகுலமாகிய குற்றமுண்டாமாற்றை யறிந்து, (எ-று).

† ஒழுக்கத்திற்சுருக்கம் அதனையுடையார்மே லேற்றப்பட்டது. கொண்ட * விரதம் விடாமைபற்றி 'உரவோர்' என்றார்.

தெளி.—(இ-ள்). உரவோர் - மனவலிமையை யுடையார், (செய்தற் கருமைநோக்கி), ஒழுக்கத்தின் - ஆசாரத்தினின்றும், ஒல்கார் - சுருங்கார், இழுக்கத்தின் - அத்தவறுதலால், ஏதம் - (தமக்கிழிகுலமாகிய) குற்றம், படுபாக்கு - உண்டாகும்வழியை, அறிந்து - தெரிந்து, (எ-று).

---

§ 'அழுக்காறுடையான்கணுக்கம் போன்று' என்னுமுவமானத்தினால் ஒழுக்க மில்லாதவனது சுற்றத்தாருக்கும் மேன்மையில்லை யென்பது பெற்றாம். (ஏனெனின், ஒருவன் பிறர்க்குக் கொடுக்கும் பொருளைக் குறித்துப்பொறாமையடைகின்றவனது சுற்றத்தாரும் தரித்திரத்தை அடைவதாலென்க). இவ்வுவமையின் கருத்து ஒருவன் பிறர்க்குக் கொடுக்கும் பொருளைக் குறித்துப் பொறாமை யடைகின்றவனுக்கேயன்றி அவன் சுற்றத்தாருக்கும் செல்வமில்லாமை போன்று, ஒழுக்கமில்லாதவனுக்கேயன்றி அவன் சுற்றத்தாருக்கும் உயர்ச்சி (மேன்மை) யில்லை என்பதாம். ‡ அழுக்காறாமை—சு.

† ஒல்காமை - ஒழுக்கத்தின்றருமம்; அதனையுடையவர் - ஒல்கார்.

* இன்னதருமஞ் செய்வனெனவும் இன்னபாவ மொழிவனெனவும் தமது சக்திக்குப் பொருந்தும்படி யேற்படுத்திக் கொள்வன விரதமாம்.

ஒழுக்கத்தினது சுருக்கத்தை அதனை உடையார்மே லேற்றி 'ஒல்கார்' என்றுகூறப்பட்டது. இஃது உடைமையின் தர்மம் உடையார்மேலாய உபசார வழக்கு. மேற்கொண்ட விரதம் விடாமைபற்றி'உரவோர்' என்றார்.

(க-து). ஆசாரங் குறைதலால் வருங்குற்றத்தை யறிந்தோர் அவ்வாசாரத்திற் றவறார் என்பது.

6. Those firm in mind will not slacken in their observance of the proprieties of life, knowing the misery that flows from the transgression from them.

எ. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

பரி.—(இ-ள்). எல்லாரும் ஒழுக்கத்தானே மேம்பாட்டை யெய்துவர்; அதனினின் றிழுக்குதலானே தாம் எய்துதற்குரித்தல்லாத † பழியை யெய்துவர், (எ-று).

பகைபற்றி அடாப்பழி கூறியவழி அதனையும் இழுக்கம்பற்றி உலகம் அடிக்குமென்று கொள்ளுமாகலின், எய்தாப்பழியெய்துவர் என்றார். இவை யைந்து பாட்டானும் ஒழுக்கம் உள்வழிப்படுங் குணமும் இல்வழிப்படுங் குற்றமுங் கூறப்பட்டன.

தேளி.—(இ-ள்). (எல்லாரும்) ஒழுக்கத்தின்-ஆசாரத்தினாலே, மேன்மை - மேம்பாட்டை, எய்துவர் - அடைவார், இழுக்கத்தின் - (அவ்வாசாரத்தினின்றும்) தவறுதலாலே, எய்தாப்பழி-(தாம்) அடைதற்கு உரியதல்லாதபழியை, எய்துவர் - அடைவார், (எ-று).

(ஒழுக்கத்தினின்றுந்தவறியவன்மீது ஒருவன்)பகைமையால் அடாதபழியைச்சொல்லிய விடத்து அதனையும தவறுபற்றி உலகத்தார் அடிக்குமென்று கொள்ளுவாராகலின் எய்தாப்பழி யெய்தவர் என்றார். இவை ஐந்துபாட்டாலும் ஆசாரமுள்ளவிடத்து உண்டாகும்குணமும் அஃதில்லாவிடத்து உண்டாகும்குற்றமும் சொல்லப்பட்டன.

(க-து). ஆசாரத்தினாலுயர்வும் அஃதில்லாமையினா லிழிவுமுண்டாம் என்பது.

7. From propriety of conduct men obtain greatness; from impropriety comes insufferable disgrace.

அ. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

---

† பழியை - பழியையும் என்றும் பாடமுண்டு.

பரி.—(இ-ள்). ஒருவனுக்கு நல்லவொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்; தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினுந் துன்பம் பயக்கும், (எ-று).

* 'நன்றிக்கு வித்தாகும்' என்றதனால் தீயொழுக்கம் பாவத்திற்குக் காரணமாதலும், † 'இடும்பைதரும்' என்றதனால் நல்லொழுக்கம் இன்பந் தருதலும்பெற்றாம்; ‡ ஒன்றுநின்றே வினையதை முடிக்குமாகலின். இதனாற் $ பின்விளைவு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). நல்லொழுக்கம் - (ஒருவனுக்கு)நல்லவாசாரமானது, நன்றிக்கு - அறத்திற்கு, வித்தாகும் - காரணமாகும், (காரணமாயிருமையிலும் இன்பந்தரும்), தீயொழுக்கம்-தீயவாசாரமானது, என்றும்-எப்போதும் (பாவத்திற்குக் காரணமாயிருமையிலும்), இடும்பை - துன்பத்தை, தரும் - கொடுக்கும், (எ-று)

நல்லொழுக்கம் அறத்திற்குக்காரணமாமென்றதனால் தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாதலும், தீயவொழுக்கம் இருமையிலும் துன்பம் தருமென்றதனால் நல்லொழுக்கம் இருமையிலும் இன்பம் தருதலும்பெறப் படும்; ஒன்றுநின்றே மற்றதை முடிக்குமாதலின். இதனால் பின்விளைவது சொல்லப்பட்டது.

(க-து). நல்லொழுக்கம் இன்பத்தைத்தருந் தருமத்திற்கும் தீயொழுக்கம் துன்பத்தைத்தரும் பாவத்திற்குங் காரணமாம்.

8. Propriety of conduct is the seed of virtue; impropriety will ever cause sorrow.

கூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

---

* நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகும் எனவும் பாடமுண்டு.

† தீயொழுக்க மிடும்பைதரும் எனவும் பாடமுண்டு.

‡ ஒன்றுநின்றே-நன்றிக்குவித்தாகு நல்லொழுக்கமென்னுமொன்று நின்றே, வினையதைமுடிக்குமாகலின்-தீயொழுக்கம் பாவத்திற்குக்காரணமாகுமென்னு மற்றதை முடிக்குமாகலான் என்றும், ஒன்றுநின்றே-தீயொழுக்கமென்று மிடும்பைதருமென்னு மொன்றுநின்றே,வினையதை முடிக்குமாகலின் - நல்லொழுக்கம் என்றும் இன்பந்தருமென்னு மற்றதை முடிக்குமாகலான் என்றுங்கொள்க [ஒன்றுநின்றே வினையதை முடிக்குமாகலின் என்பது முறைப்பட வகுத்துக்கூறப்பட்டது].

$ பின்விளைவு - நல்லொழுக்கத்தினாலும் தீயொழுக்கத்தினாலும்பின் (மறுமையில்) (முறையே) உண்டாகும் இன்பதுன்பங்கள்.

பரி.—(இ-ள்). † மறந்துந் தீயசொற்களைத் தம்வாயாற் சொல்லுந் தொழில்கள் ஒழுக்கமுடையவர்க்கு முடியா, (எ-று).

*தீயசொற்களாவன:-பிறர்க்குத் தீங்குபயக்கும் பொய்ம்முதலியனவும், வருணத்திற் குரியவல்லனவு மாம். அவற்றது பன்மையாற் சொல்லுதற் றொழில் பலவாயின. சொலல்-சாதியொருமை. 'சொலல்' எனவே அமைந்திருக்க'வாயால்' எனவேண்டாது கூறினார்;நல்லசொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு. இதனை வடநூலார் தாற்பரியமென்ப.*

தெளி.—(இ-ள்). *வழுக்கியும்-மறந்தும், தீய-தீயசொற்களை, வாயாற் சொலல் (தமது) வாயினாற் சொல்லுந்தொழில்கள், ஒழுக்கமுடையவர்க்கு-ஆசாரமுடையவர்களுக்கு, ஒல்லா - முடியாவாம், (எ-று).*

*தீயசொற்களாவன:—பிறர்க்குத் தீமையைத்தரும் பொய்சொல்லுதல் முதலானவையும், வருணத்திற்கு உரியன வல்லாத சொற்களுமாம். அச்சொற்களது பன்மையால் சொல்லுதலாகியதொழில் பலவாயின. சொலல்-சாதியொருமைப்பெயர். 'சொலல்'எனவே(வாயென்பதுதானே) அமைந்திருக்க ' வாயால் ' என்றுவேண்டாது சொல்லினார்; (அவ்வாய்) நற்சொற்களைப் பேசிப்பழகியதென்று தாம்வேண்டியதன சிறப்பை முடித்தற்பொருட்டு. இவ்வாறு கூறுவதனை வடநூலார் தாற்பரியமென்பர். தாற்பரியம்-அவ்வப்பொருளுணர்ச்சி விருப்பால் உச்சரிக்கப்படுந்தன்மை.*

(க-து). *நல்லொழுக்க முள்ளவர்கள் மறந்துந் தீய சொற்களைச் சொல்லுதலில்லை என்பது.*

9. Those who study propriety of conduct will not sepak evil even forgetfully.

---

கo. § உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

பரி.—(இ-ள்). உலகத்தோடு பொருந்த வொழுகுதலைக்கல்லாதார் பலநூல்களையுங் கற்றாராயினும் அறிவிலாதார், (எ-று).

*உலகத்தோடு பொருந்தவொழுகுதலாவது உயர்ந்தோர் பலரும் ஒழுகிய வாற்றான் ஒழுகுதல். அறநூல் சொல்லியவற்றுள் ‡ இக்காலத்திற்கு*

---

† *ஒழுக்கமுடையவர் மறந்து சொல்லினும் பிறர்க்கு நன்மையையுண்டாக்குஞ் சொற்களையே சொல்லுவரென்பது பெறப்படுமாறறிக.*

§ *"எவ்வ துறைவ துலக முலகத்தோ, டவ்வ துறைவ தறிவு" என்னுங் குற ளிங்குக் கவனிக்கத்தக்கதாம்.*

‡ *"பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" என்னும் நன்னூற் சூத்திரமும் இங்குக் கவனிக்கத்தக்கதாம்.*

லாதன வொழிந்து சொல்லாதனவற்றுள் ஏற்பன கொண்டு வருதலான் அவையும் அடங்க 'உலகத்தோ டொட்ட' என்றும், கல்விக்குப்பயன் அறிவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமும் ஆதலின் அவ்வொழுகுதலைக் கல்லாதார் பலகற்றும் அறிவிலாதார் என்றுங் கூறினார். † ஒழுகுதலைக்கற்றலாவது ‡ அடிப்படுதல். இவையிரண்டு பாட்டானும் சொல்லானுஞ் செயலானும்வரும் ஒழுக்கங்களெல்லாம் ஒருவாற்றாற் றொகுத்துக் கூறப்பட்டன.

தெளி.—உலகத்தோடு - உயர்ந்தாரோடு, ஒட்ட - பொருந்த, ஒழுகல் - நடத்தலை, கல்லார் - கல்லாதவர், பல - பலநூல்களையும், கற்றும் - கற்றாராயினும், அறிவிலாதார் - அறிவில்லாதவராவர் (எ - று).

உயர்ந்தாரோடு பொருந்த நடத்தலாவது உயர்ந்தார்பலரும்நடந்தவழியாக நடத்தல். தருமசாஸ்திரம் கூறியவற்றுள், இக்காலத்திற்குப்பொருந்தாதனவற்றை விட்டு, கூறாதனவற்றுள் பொருந்துவனவற்றைக் கொண்டு வருதலால் அவையும் அடங்குதற்கு 'உலகத்தோடொட்ட' என்றும், கல்விக்குப்பயன் அறிவும் அறிவிற்குப்பயன் ஒழுக்கமும் ஆதலின் அவ்வொழுக்கத்தைக் கல்லாதார் பலகற்றும் அறிவிலாதார் என்றும் சொல்லினர். ஒழுகுதலைக்கற்றலாவது பின் பற்றி நடத்தல். இவையிரண்டு பாட்டாலும் சொல்லாலும் செயலாலும் வரும் ஒழுக்கங்களெல்லாம் ஒருவிதத்தினால் தொகுத்துச் சொல்லப்பட்டன.

(க - து). உலகத்தோடு பொருந்த நடத்தலைக் கல்லாதவர்களது கல்வியறிவு பயனுடைய தாகாது என்பது.

10. Those who know not how to act agreeably to the world, though they have learnt many things, are still ignorant.

## பதினொன்றாவது அதிகாரம்.

## பிறனில் விழையாமை—

## *Against desiring the wife of another.*

பரி.—அஃதாவது காம மயக்கத்தாற் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. இஃது ஒழுக்கமுடையார் மாட்டே நிகழ்வதாகலின், ஒழுக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது காம மயக்கத்தினால் பிறனது மனையாளை விரும்பாமை. இப்பிறனில்விழையாமை ஒழுக்கமுடையவரிடத்தே உண்டாவதாகலின், ஒழுக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

---

† ஒழுகுதலைக் கற்றல்-பெரியோர் நடந்தபடி நடக்கத் தொடங்குதல்.

‡ அடிப்படுதல் - அப்பெரியோ ரொழுக்கத்தை மேற்கொண் டாசரித்து வருதல்.

**க. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.**

பரி.—(இ - ள்). பிறனுக்குப் பொருளாந் தன்மையையுடையாளைக் காதலித்தொழுகுகின்ற அறியாமை ஞாலத்தின்கண்அறநூலும் பொருணூலுமாகிய விரண்டையும் ஆராய்ந்தறிந்தார்மாட் டில்லை, (எ-று).

*பிறன்பொருள் - * பிறனுடைமை. † அறம் பொருளென்பன ஆகுபெயர். ‡ செவ்வெண்ணின் றொகை விகாரத்தாற்றொக்குநின்றது. இன்பம் ஒன்றையே நோக்கும் ¶ இன்பநூலுடையார் இத்தீயொழுக்கத்தையும் § பாகீயமென்று கூறுவாராகலின் 'அறம்பொருள் கண்டார்கணில்' என்றார்; எனவே, அப்பேதைமையுடையார் மாட்டு அறமும் பொருளும் இல்லை யென்பது பெறப்பட்டது.*

தெளி.—(இ - ள்). *பிறன் - பிறனுக்கு, பொருளாள் - உடைமையாந்தன்மையையுடையவளை, பெட்டு-இச்சித்து, ஒழுகும்-நடக்கின்ற, பேதைமை-அறியாமையானது, ஞாலத்து - பூமியின்கண், அறம்-அறநூலும், பொருள் - பொருள்நூலும் (ஆகிய விரண்டையும்), கண்டார்கண் - ஆராய்ந் தறிந்தவரிடத்து, இல் - இல்லை, (எ - று).*

*அறமும் பொருளும் அவற்றையுணர்த்தும் நூல்களுக்காதலின் காரியவாகுபெயர்கள். அறம் பொருளிரண்டும் என்னும்பெயர்ச்செவ்வெண்ணின்*

---

* *பிறனுடைமை - அன்னியனுக்குரிமையா (சொந்தமா) யிருப்பது.*

† *அறம் பொருள் என்னுங் காரியங்களின்பெயர் அவற்றை (அறத்தையும் பொருளையும்) உணர்த்துதற்குக் கருவியாகிய நூற்களுக்கு (தருமசாஸ்திரத்திற்கும் அருத்தசாஸ்திரத்திற்கும்) ஆதலால் காரியவாகுபெயர்.*

‡ *அறமும் பொருளுமென உம்மைவைத்தெண்ணாது அறம் பொருளென எண்ணியது ஈண்டுச் செவ்வெண்ணும். இச்செவ்வெண் (அறம் பொருளிரண்டும் எனத்)தொகைபெற்றே வரல்வேண்டும். அத்தொகை (இரண்டுமென்னுந்தொகை) இங்குசசெய்யுள் விகாரத்தால் தொக்குகின்றமையின் 'செவ்வெண்ணின் றொகை விகாரத்தாற்றொக்குநின்றது' என்று கூறப்பட்டது. செவ்வெண்ணாவது எண்ணிடைச் சொற்கள் தொக்குநிற்ப வருவது. உம்மைத்தொகைக்கும் செவ்வெண்ணிற்கும் வேறுபாடு "பலமொழிகளையுந்திரட்டி யொருபிண்டமாகக் கூறியவழி உம்மைத்தொகையாகவும்,பிளவுபடக்கூறியவழிச்செவ்வெண்ணாகவும் கொள்ளப்படுமென்க" என்று நன்னூல் விருத்தியுரை கூறுகின்றது.*

¶ *இன்பநூல் - காமநூல். அது கொக்கோக முதலியனவாம்.*

§ *பாகீயம்-அன்னியருக்குரியது.இதன்முரண்மொழி சுவகீயம்(தனக்குரியது). பாகீய மென்பதற்குப் பிரதியாகப் பாரதிகம் என்றும் பாடமுண்டு. (அதன் பொருள் பிறனது மனையாளைக்கூடிக்களித்தலென்பது).*

தொகை செய்யுள்விகாரத்தால் தொக்கு நின்றது. இன்பமொன்றையே கருதுங் காமநூலுடையார் (பிறனுக்குரியவளை விரும்பி நடத்தலாகிய) இப்பொல்லாத வொழுக்கத்தையும் பரகீயமென்று கூறுவாராதலால்'அறம் பொருள் கண்டார்க ணில்' என்றார். எனவே அவ்வறிவில்லாதவரிடத்து அறமும்பொருளும் இல்லையென்பது பெறப்பட்டது.

(க - து). பிறன் மனைவியை விரும்பி யொழுகுதல் அறநூலை யும் பொருள் நூலையும் ஆராய்ந்தறிந்தவரிடத்தில்லை என்பது.

1. The folly of desiring her who is the property of another will not be found in those who know (the attributes of) virtue and (the rights of) property.

உ. அறன்கடை நின்றா ரௌல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

பரி.—(இ - ள்). காமங் காரணமாகப் பாவத்தின்கண் நின்றரெல் லாருள்ளும் பிறனில்லாளைக் காதலித்து அவன் வாயிற்கட்சென்று நின் றார்போலப் பேதையாரில்லை, (எ - து).

‡ அறத்தினீக்கப்பட்டமையின் 'அறன்கடை' என்றார். அறன்கடை நின்ற ¶ பெண்வழிச்செல்வாரையும், † வரைவின் மகளிரோடும் $ இழி குலமகளிரோடுங்கூடி யின்ப நுகர்வாரையும்போல, அறமும் பொருளும் இழத்தலே யன்றிப் § பிறன் கடை நின்றார் அச்சத்தால் தாங்கருதிய வின் பமும் இழக்கின்றா ராகலின் 'பேதையாரில்' என்றார்; எனவே இன்பமு மில்லையென்பது பெறப்பட்டது.

---

‡ அற (தரும)த்தி னின்று நீக்கப்பட்டு அவ்வறத்தின் பின்னே (கடையிலே) நிற்பது பாவமாதலால் அஃது 'அறன்கடை' என்று சொல் லப்பட்டது.

¶ பெண்வழிச்செல்வார் - தமதுவழியில் நடத்தற்கு உரிய மனைவிய ரது வழியே நடப்பவர்.

† வரைவின்மகளிர் - விலைகொடுப்பார் யாவருக்கும் தம் நலத்தை விற்பதே யன்றி அந்நலத்தை யனுபவித்தற்கு இன்னாரானவர் இன்னா காதா ரென்னும் வரம்பில்லாத வேசியர். வரம்பு - எல்லை.

$ இழிகுலமகளிர் - தாழ்ந்த குலத்திற் பிறந்த பெண்கள்.

§ பிறன்கடை நின்றார் அச்சத்தால் தாங்கருதிய வின்பமுமிழக்கின்றா ரென்பது ''புக்க விடத்தச்சம் போதரும் போதச்சந், துய்க்கு மிடத்தச்சந் தோன்றாமற் காப்பச்ச, மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ, வுட் கான் பிறனில் புகல்'' என்று நாலடியார் கூறுவதாலு மறியப்படும்.

(தெளி.—(இ - ள்). அறன்கடை - (காமங்காரணமாக) பாவத்தின் கண், நின்றாருளெல்லாம் - நின்றவரெல்லாருள்ளும், பிறன்கடை - (பிறனது மனையாளை விரும்பி) அப்பிறனது வாயிலினிடத்து (சென்று), நின்றாரின்-நின்றவர்போல, பேதையார்-மூடர், இல் - இல்லை, (எ - று).

அறத்தினின்றும் நீக்கப்பட்டமையின் பாவத்தை 'அறன்கடை' என்றார். பாவச்செயலில் நின்ற பெண்வழிநடப்பவரையும், பரத்தையரோடும் இழிகுலமகளிரோடும் கூடி இன்பமனுபவிப்பவரையும்போல, அறத்தையும் பொருளையும் இழந்துபோவதேயல்லாமல் பிறனது மனையாளிடத்துச் செல்வார் அச்சத்தினால் தாமெண்ணிய இன்பத்தையும் இழந்துவிடுகின்றாராதலால், 'பேதையாரில்' என்றார்; எனவே, (அவர்க்கு) இன்பமுமில்லையென்பது பெறப்பட்டது.

(க - து). பிறன் மனைவியை விரும்பி நடப்பவர் அறம்பொருளின்பங்களை யிழத்தலின் பெருமூடராவர் என்பது.

2. Among all those who stand on the outside of virtue there are no greater fools than those who stand outside their neighbour's door.

---

ங. விளிந்தாரின் வேறல்லர் * மன்ற தெளிந்தாரிற்
 றீமை புரிந்தொழுகு வார்.

பரி.—(இ-ள்). தம்மை ஐயுறுதார் இல்லாள்கண்ணே பாவஞ்செய்தலை விரும்பி ஒழுகுவார் உயிருடையரேனும் இறந்தாரேயாவர், (எ-று).

அறம் பொருளின்பங்களாகிய பயன் எய்தாமையின் 'விளிந்தாரின் வேறல்லர்' என்றும், அவர் தீமை புரிந்தொழுகுவது இல்லுடையவரது தெளிவுபற்றியாகலின் 'தெளிந்தாரில்' என்றுங் கூறினர்.

தெளி.—(இ-ள்). மன்ற - நிச்சயமாக, தெளிந்தார் - (தம்மைநல்லவரென்று) தெளிந்தவரது, இல் - மனையாளிடத்தே, தீமை - பாவஞ்செய்தலை, (கூடுதலை), புரிந்து - விரும்பி, ஒழுகுவார் - நடப்பவர், (உயிருடையவராயிருந்தாலும்), மன்ற-நிச்சயமாக, விளிந்தாரின் - செத்தவரினும், வேறல்லர் - வேறாகார், (இறந்தவரேயாவர்), (எ-று).

அறம் பொருளின்பங்களாகிய பயன்களை உயிர் அடையாமையால் 'விளிந்தாரின் வேறல்லர்' என்றும், அவர் பாவஞ்செய்தலை விரும்பி நடப்பது மனையாளையுடையவரது தெளிவுபற்றியாதலால் 'தெளிந்தாரில்' என்றும் சொல்லினர்.

---

* மன்ற என்பது நிச்சயமென்னும் பொருளையுணர்த்தும் இடைச்சொல். " மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது தொல்காப்பியம். மன்றவென்பதனை விளிந்தாரின் வேறல்லர் என்

(க-து). *தம்மிடத்துச் சந்தேகமில்லாதவரது மனையாளிடத்துக் களவிற் புணருதலை விரும்பி நடப்பவர் இறந்தவரே யாவர்.*

3. Certainly they are no better than dead men who desire evil towards the wife of those who undoubtingly confide in them.

சு. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

பரி.—(இ-ள்). எத்துணைப்பெருமை யுடையராயினும் ஒருவர்க்கு யாதாய் முடியும், காமமயக்கத்தாற் றினையளவுந் தம்பிழையை யோராது பிறனுடைய இல்லின்கட்புகுதல், (எ-று).

† *இந்திரன்போல எல்லாப்பெருமையு மிழந்து சிறுமையெய்தல் நோக்கி 'என்னும்' என்றார். ‡ "என்னீ ரறியாதீர் போல விவைகூறி, னின்னீர வல்ல நெடுந்தகாய்" என்புழிப்போல § உயர்த்தற்கட் பன்மை யொருமை மயங்கிற்று. ✻ தேரான் பிறனென்பதனைத் தம்மை ஐயுறாத பிறனென் றுரைப்பாரு முளர்.*

---

† *கௌதமமுனிவரது மனைவியாகிய அகலிகையை விரும்பிப்புணர்ந்த இந்திரன் அத்தீச்செய்கையினால் தனதுபெருமைகெட்டு இழிவையடைந்தாற்போன்று பிறன்மனையாளை விரும்பிப்புணர்வோர் மிக்க மேம்பாட்டையுடையோராயினும் அத்தீச்செய்கையினால் அம்மேம்பாடு கெட்டு இழிவை யடைதலைக்குறித்து "என்னும்" எனறார். என்னும் என்பது பெருங்கெடுதியாய் முடியுமென்பதை யுணர்த்தி நின்றது.*

‡ *கலித்தொகை - பாலை, ௫. இதன்பொருள் (உன்னைப்பிரிந்தால்) யானுயிர்தாங்கி யிருத்தலாற்றாது இறந்துபடுதலை அறியாதிருந்தீர்போல உடன்சேற (செல்லுத)லை மறுத்த இம்மொழிகளைக் கூறுதலால் பெற்றது என்? பெருமைக்குணமுள்ளவனே, இக்கூற்று-(இவ்வார்த்தை) உனக்கு உரியநன்றாகிய நீர்மைகளையுடைய வல்ல என்பது.*

§ *கலித்தொகைப்பாட்டில் அறியாதீர் என்றுயர்த்திச்சொல்லுதற் பொருட்டுவந்த பன்மைப்பால் நின்என்னும் ஒருமைப்பாலோடு மயங்கின்றாற் போன்று, இக்குறளில் எனைத்துணையர் என்றுயர்த்திச் சொல்லுதற்பொருட்டுவந்த பன்மைப்பால் தேரான் என்னும் ஒருமைப்பாலோடு மயங்கிநின்றதென்க. இவ்வாறுவருவது பால் வழுவமைதி யெனப்படும். நன்னூல் விருத்தியுரைகாரர் "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்" என்பது செறலின் (கோபத்தினால்) பலர்பால் ஒருமைப்பா லாயிற்று" என்பர்.*

✻ *தேரான்பிறன் என்பதற்கு தேரான் - (தம்மிடத்துச்) சந்தேகமடையாத, பிறன் - பிறனது என்று பொருள் கூறுவாருமுளர்.*

தெளி.—(இ-ள்). *தினைத்துணையும் - (காமமயக்கத்தினால்) தினையள வும், [சிறிதாயினுமென்றபடி], தேரான்-(தமது பிழையை) கருதாது, பிற னில் - பிறனுடைய மனையாளிடத்து, புகல் - செல்லுதல், எனைத்துணைய ராயினும் - எவ்வளவு பெருமையை யுடையவரா யிருப்பினும், என்னாம் - (ஒருவர்க்கு) யாதாய்முடியும், (எ-று).*

*இந்திரன் போல எல்லாப்பெருமைகளையும் இழந்து சிறுமையை அடைதலைக்குறித்து 'என்னாம்' என்றார். உயர்த்துதற்கண் வந்த எனைத் துணையரென்னும் பன்மை தேரானென்னும் ஒருமையோடு மயங்கிற்று.*

(க-து). *பிறனது மனையாளைக் காவிற்சென்று கூடுகின்றவன் எவ்வளவு பெருமையையுடையவனாயிருப்பினும் அவன் அப்பெரு மையையிழந்து சிறுமையை யடைவான் என்பது.*

4. However great one may be what does it avail if without at all considering his guilt he goes unto the wife of another.

ரு. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

பரி.—(இ-ள்). எய்துதல் எளிதென்று கருதிப் * பின்விளைவு கரு தாது பிறனில்லின்கண் இறப்பான், மாய்தலின்றி எஞ்ஞான்றும் நிலைநிற் கும் † குடிப்பழியினை யெய்தும், (எ-று).

*இல்லின்கண் இறத்தல் - இல்லாள்கண் நெறிகடந்து சேறல்.*

தெளி.—*(இ-ள்) எளிதென - (இவளைச்சேருதல்) எளிதென்று (நினைத்து), (பின்விளைவைநினையாமல்), இல்-(பிறனது) மனைவியினிட த்து, இறப்பான் - செல்லுவோன், விளியாது - அழிதலின்றி, எஞ்ஞான் றும் - எக்காலமும், நிற்கும் - நிலைநிற்பதாகிய, பழி - (குடிப்) பழியை, எய்தும் - அடைவான், (எ - று).*

*இல்லிறத்தல் - (பிறனது) மனையாளிடத்து நீதிதவறிச் செல்லுதல்.*

(க - து). *அஞ்சாது பிறனது மனையாளிடத்திற் செல்பவன் நீங்காத குடிப்பழியை யடைவான் என்பது.*

5. He who thinks lightly of going unto the wife of another acquires guilt that will abide with him imperishably and for ever.

---

* *பின்விளைவு - பின்னருண்டாகும் பகை, பாவம், அச்சம், பழி.*

† *"காணிற்குடிப்பழியாம்" என்பது நாலடியார்.*

சு. ‡ பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

பரி.—(இ-ள்). பிறன் இல்லாள்கண் நெறிகடந்து செல்வானிடத்துப் பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியு மென்னும் இந்நான்கு குற்றமும் ஒருகாலும் நீங்காவாம், (எ - று).

*எனவே, இருமையும் இழத்தல் பெற்றும். இவை யாறு பாட்டானும் பிறனில் விழைவான்கட் குற்றங் கூறப்பட்டது.*

தெளி.—(இ - ள்). *இல் - (பிறனது) மனையாளிடத்து, இறப்பான் கண் - நீதிதவறிச் செல்லுவோனிடத்து, பகை பாவ மச்சம் பழி யென நான்கும்-பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியும் என்னும் இந்நான்கு குற்றங்களும், இகவாவாம் - (ஒருபோதும்) நீங்காதனவாம், (எ - று).*

*'இகவாவாம்' எனவே, அவன் இருமைப்பயன்களையும் இழப்பானென்பது பெறப்பட்டது. இவை ஆறு பாட்டாலும் பிறனதுமனையாளை விரும்புவோனிடத்துக் குற்றம் சொல்லப்பட்டது.*

(க-து). *பிறன் மனையாளைச் சேர்பவனிடத்துப் பகை பாவம் அச்சம் பழி யென்னுமிந்நான்கு குற்றங்களும் விட்டு நீங்காவாம்.*

6. Hatred, sin, fear, disgrace; these four will never leave him who goes unto his neighbour's wife.

எ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

பரி.—(இ-ள்). அறனுகிய வியல்போடுகூடி இவ்வாழ்வானென்று சொல்லப்படுவான், பிறனுக்குரிமை பூண்டு அவனுடைய இயல்பின் கண்ணே நிற்பாளது பெண்டன்மையை விரும்பாதவன், (எ-று).

*$ ஆனுருபு ஈண்டு உடனிகழ்ச்சிக்கண்வந்தது. இல்லறஞ் செய்வானெனப்படுவா னவனே யென்பதாம்.*

தெளி.—(இ-ள்). *பிறனியலாள் (பிறனுக்குரிமை பூண்டுஅப்) பிறனுடைய வியல்பிலே நிற்பவளது.பெண்மை-பெண்தன்மையை, நயவாதவன் - விரும்பாதவன், அறனியலான்-அறமாகிய வியல்போடு(கூடி), இல்வாழ்வா னென்பான் - இல்வாழ்வானென்று சொல்லப்படுவான், (எ-று).*

---

‡ *"பிறன்றாரம், நச்சுவரர்ச் சேரும் பகைபழி பாவமென், றச்சத்தோடிந்நாற் பொருள்" என்பது நாலடியார்.*

*$ அறனியலான் என்பதன்கணுள்ள (மூன்றனுருபாகிய) ஆனுருபு. பெண்மைநயவாதவனது வினையாகிய வாழ்தற்றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாகவுடையது அறவியலாதலால், அஃது உடனிகழ்ச்சிப் பொருளதாயிற்று*

*அறனியலான் என்னும் மூன்றனுருபு இங்கு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. இல்லறஞ்செய்வானெனப்படுவோன் (பிறனியலாள் பெண்மை நயவாத) அவனே யாவன் என்பதாம்.*

(க-து). பிறனது மனைவியை விரும்பாதவன் அறவியல்போடு கூடி யில்வாழ்வானென்றுசொல்லப்படுவான் என்பது.

7. He who desires not the womanhood of her who should walk according to the will of another will be praised as a virtuous householder.

அ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

பரி.—(இ-ள்). பிறன்மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண்டகைமை சால்புடையார்க்கு அறனுமாம், நிரம்பிய வொழுக்கமுமாம், (எ-று).

*புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் * உட்பகையாகிய காமம் அடக்குதற்கருமையின், அதனை யடக்கிய ஆண்மையைப் 'பேராண்மை' என்றார். † ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். செய்தற்கரிய அறனும் ஒழுக்கமும் ‡ இதனைச் செய்யாமையே பயக்குமென்பதாம்.*

தேளி.—(இ-ள்). *பிறன்மனை - பிறனது மனையாளை, நோக்காத - உட்கொள்ளாத, பேராண்மை - பெரிய ஆண்தன்மையானது, சான்றோர்க்கு - (பலகுணங்களாலும்) நிறைந்தோர்க்கு, அறனொன்றோ—அறமுமாம், ஆன்ற வொழுக்கு - நிறைந்த வொழுக்கமுமாம், (எ-று).*

*புறப்பகையாகிய சத்துருக்களை அடக்கும் ஆண்மையுடையோர்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குவதற்கு அருமையாகவிருத்தலால், அவ்வுட்பகையாகிய காமத்தை அடக்கிய ஆண்மையைப் 'பேராண்மை' என்றார். ஒன்றோ என்பது எண்ணுப்பொருளில் வந்த இடைச்சொல். செய்தற்கரிய அறமும்ஒழுக்கமும் (பிறமனை நோக்கலென்னும்) இதனைச் செய்யாமையே தருமென்பதாம்.*

---

* *உட்பகையாகிய காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம் (லோபம்), மானம், உவகை, மதமெனப் பட்டவாறனுள் காமமே மற்றவற்றிற்குக் காரணமாயொழித்தற் கரிதா யிருப்பதுபற்றி 'உட்பகையாகிய காமம் அடக்குதற் கருமையின்' என்று கூறப்பட்டது.*

† *ஒன்றோ என்பது ஒழுக்கத்தோடுங்கூடி அறனுமாம் ஒழுக்கமுமாமென எண்ணுப் பொருள்பட்டுவந்தமையின் எண்ணிடைச்சொல்லாயிற்று.*

‡ *இதனை - பிறன்மனையாளைக் கூடக் கருதுதலை.*

(க-து). பிறனது மனைவியை விரும்பாதபேராண்மையே பெரியோர்க்குத் தருமமும் ஒழுக்கமுமாம் என்பது.

8. That noble manliness which looks not at the wife of another is the virtue and dignity of the great.

கூ. நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

பரி.—(இ-ள்). அச்சந் தருங் கடலாற் சூழப்பட்ட உலகத்து எல்லா நன்மைகளும் எய்துதற்குரியார் யாவரெனின், பிறனொருவனுக்கு உரிமையாகியாளுடைய தோளைச் சேராதார், (எ-று).

அகலம், ஆழம், † பொருளுடைமை முதலியவற்றான் அளவிடப்படாமையின் 'நாமநீர்' என்றார். ‡ உரிசொல் லீறு திரிந்து நின்றது. ¶ நலத்திற்கென்பது நலக்கெனக் குறைந்து நின்றது. இருமையினும் நன்மையெய்துவ ரென்பதாம்.

தெளி —(இ-ள்). நாமநீர் - அச்சந்தருங் கடலால் (சூழப்பட்ட), வைப்பில் - பூவுலகத்தின்கண், நலக்கு - (எல்லா) நன்மைகளையும் பெறுதற்கு, உரியார்யாரெனின் - உரியவர் யாவரென்றால், பிறற்கு - பிறனொருவனுக்கு, உரியாள் - உரிமையானவளது, தோள்-தோள்களை, தோயாதார்-சேராதவர், (எ-று).

அகலம், ஆழம், பொருளுடைமை முதலியவற்றால் அளவிடப்படாமைபற்றிக் கடலை 'நாமநீர்' என்றார். நாம் என்னுமுரிச்சொல் நாம என ஈறுதிரிந்து நின்றது. நலத்திற்கென்பது நலக்கெனவிகாரப்பட்டுநின்றது. (பிறற்குரியாள்தோள்தோயாதார்) இருமையிலும் நன்மை யடைவாரென்பதாம்.

(க-து). நன்மைகளெல்லாவற்றையு மடைதற் குரியவர்பிறன் மனைவியைச் சேராதா ராவர் என்பது.

9. Is it asked, "who are those who shall obtain good in this world surrounded by the terror-producing sea?" Those who touch not the shoulder of her who belongs to another.

---

† பொருள் - சங்கு, பவளம், முத்து, உப்பு முதலியன.

‡ அச்சப் பொருளுணர்த்தும் நாம் என்னும் உரிச்சொல் நாம என ஈறுதிரிந்து நின்றது. "பேநா முருமென வரூஉங் கிளவி, யாமுறை மூன்று மச்சப் பொருள" என்பது தொல்காப்பியம்.

¶ நலத்திற்கு என்பது அத்துச்சாரியையும் இன்சாரியையும் செய்யுள் விகாரத்தால் தொக்குநிற்க நலக்கு என வந்தது.

கo அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

பரி.—(இ-ள்). ஒருவன் அறத்தைத் தனக்குரித்தாகச் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும், அவனுக்குப் பிறனெல்லைக்கண் நிற்பாளது பெண்மையை விரும்பாமை யுண்டாயின், அதுநன்று, (எ-று).

*இக்குணமே மேற்பட்டுத் தோன்று மென்பதாம். இவைநான்கு பாட்டானும் பிறனில் விழையாதான்கட் குணங்கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). (ஒருவன்) *அறம் - அறத்தை, வரையான் - (தனக்குரியதாகச்) செய்யாமல், அல்ல - பாவங்களை, செயினும் - செய்வானாயினும்* (அவனுக்கு), *பிறன்வரையாள் - பிறனெல்லையில் நிற்பவளது, பெண்மை - பெண்தன்மையை, நயவாமை - விரும்பாமை* (உண்டானால்), *நன்று*- (*அது*) *நல்லது*, (எ-று).

(*அறத்தைத் தனக்குரியதாகச் செய்யாது பாவங்களைச் செய்யுங்குற்றங்களிலும் பிறன்மனையாளை விரும்பாமையாகிய*) *இக்குணமே சிறந்துவிளங்கு மென்பதாம். இவை நான்கு பாட்டாலும் பிறன்மனையாளை விரும்பாதவனிடத்துக் குணம சொல்லப்பட்டது.*

(க-து). *தருமத்தைச் செய்யாது பாவத்தைச்செய்பவனிடத்துப் பிறனது மனைவியை விரும்பாமை யுண்டாயிருக்குமாயின், அஃது அவனிடத்திற் சிறந்து விளங்கும் என்பது.*

10. Though a man perform no virtuous deeds and commit (every) vice, it will be well if he desire not the womanhood of her who is within the limit (of the house) of another.

## பன்னிரண்டாவது அதிகாரம்.

## பொறையுடைமை.—*Patience.*

பரி.—அஃதாவது காரணம் பற்றியாதல் மடமையானாதல் ஒருவன் தமக்கு மிகைசெய்தவழித் தாமும் அதனை அவன்கட்செய்யாது பொறுத்தலையுடையராதல். *நெறியினீங்கிய செய்தாரையும் பொறுக்கவேண்டுமென்றற்கு, இது பிறனில் விழையாமையின்பின் வைக்கப்பட்டது

தெளி.—*அஃதாவது காரணம் பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தமக்குத் தீங்குசெய்தவிடத்துத் தாமும்அத்தீங்கினை அவனிடத்துச் செய்யாது பொறுத்தலை யுடையராதலாம். நெறியில் நீங்கியவற்றைச்*

* *நெறியினீங்கிய செய்தாரையும் - நல்லொழுக்கத்தி னின்றும் நீங்கிப் பிறன்மனையாளை விரும்புதல் முதலிய தீயகாரியங்களைச் செய்தவர்களையும். "நெறியி னீங்கியோர் நீரல கூறினு, மறியா மையென் றறிதல் வேண்டும்" என்பது சிலப்பதிகாரம்.*

செய்தாரையும் பொறுக்கவேண்டு மென்பதற்கு (பொறையுடைமை யென்னும்) இது பிறனில்விழையாமையின்பின் வைக்கப்பட்டது.

க. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

பரி—(இ-ள்). † தன்னை யகழ்வாரை வீழாமற்றாங்கும் நிலம் போலத், தம்மை யவமதிப்பாரைப் பொறுத்தல் தலையாய வறம், (எ-று)

இகழ்தல்—மிகையாயின செய்தலும் சொல்லுதலும்.

தெளி.—(இ-ள்). அகழ்வாரை-(தன்னைத்)தோண்டுபவரை, தாங்கும்-(வீழாமற்) சுமக்கும், நிலம்போல-நிலத்தைப்போல, தம்மை இகழ்வார்-தம்மையவமதிப்பவரை, பொறுத்தல்—,தலை - முதன்மையான அறமாம்.

இகழ்தல் - தீமையாயினவற்றைச் செய்தலும் சொல்லலுமாம்.

(க-து). பிறர் தம்மை யவமதிப்பதைப் பொறுத்துக் கொள்ளுதலே ஒருவர்க்குத் தலைமையான அறமமாம் என்பது.

1. To bear with those who revile us, even as the earth bears up those who dig it, is the first of virtues.

உ. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

பரி.—(இ-ள்). பொறை நன்றாகலால், தாமொறுத்தற்கு இயன்ற காலத்தும் பிறர்செய்த மிகையைப் பொறுக்க; அதனை உட்கொள்ளாது அப்பொழுதே மறத்தல் பெறின், ‡ அப்பொறையினும் நன்று, (எ-று)

மிகையென்றது மேற்சொல்லிய இரண்டனையும். பொறுக்குங்காலும் உட்கொள்ளப் படுதலின், மறத்தலை 'அதனினு நன்று' என்றார்.

தெளி.—(இ-ள்). இறப்பினை (பொறுமை கடலினும் பெரிதாகலால்) (பிறர்செய்த)தீமையை, என்றும்-(தாம்) தண்டித்தற்குத்தக்க காலத்திலும் பொறுத்தல் - பொறுக்கக்கடவர், அதனைமறத்தல்-அத்தீமையை நினையாமல்-(அப்பொழுதே) மறத்தலை (பெற்றால்), அதனினும் - (அம்மறத்தல்) அப்பொறுமையிலும், நன்று - மிகநல்லது, (எ-று).

தீமையென்றது முன்சொல்லிய தீமையாயினவற்றைச் செய்தலும் சொல்லலுமாகியவிரண்டு குற்றங்களையும். அத்தீமையைப் பொறுக்கும் போதும் அது நினைக்கப்படுதலால் மறத்தலை 'அதனினு நன்று' என்றார்.

(க-து). பிறர்செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொண்டு அக்குற்றத்தை யப்பொழுதே மறந்துவிடல் வேண்டும் என்பது

† 'தன்னை யகழ்வாரை வீழாமற் றாங்கும் நிலம்போல' என்று கூறினமையின் தம்மைக் கொலைசெய்வதை யொத்த குற்றஞ் செய்தாலரையும் பொறுப்பதும் பொறுத்திருந்தே யவர்களைக் காப்பதும் சிறந்த தருமமாமென்[illegible] பெறப்பட்டதென்க.

‡ அப்பொறையினும் - அஃதப்பொறையினும் என்றும் பாடமுண்டு.

2. Bear with reproach even when you can retaliate; but to forget it will be still better than that.

ரு. $ இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

பரி.—(இ-ள்). ஒருவனுக்கு வறுமையுள் * வைத்து வறுமையாவது விருந்தினரை யேற்றுக்கொள்ளாது நீக்குதல்; அதுபோல, வன்மையுள் வைத்துவன்மையாவது ‡ அறிவின்மையான் மிகைசெய்தாரைப் பொறுத்தல், (எ-று).

இஃது § எடுத்துக்காட்டுவமை. † அறனல்லாத விருந் X தொரால் பொருளுடைமை யாகாத வாறுபோல, மடவார்ப்பொறையும் மென்மை யாகாதே வன்மையாமென்பது கருத்து.

---

$ "உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா, மடமை" என்று விருந்தோம்பலிற் கூறப்பட் டிருத்தலறிக.

* வைத்து என்பது உம்மைப்பொருளது.

‡ அறியார்மாட்டுக் குற்றநிகழ்ந்துழி அக்குற்றத்தைப் பொறுத்தல் என்றும் பாடமுண்டு.

§ எடுத்துக்காட்டுவமையைப்பற்றி 'அகரமுதல' என்னுங் குறளின் குறிப்புரையில் எழுதி யிருத்தலைக் கண்டுணர்க

இச்செய்யுளில் 'இன்மையு ளின்மை விருந்தொரால்' என்னும் வாக்கியமும் 'வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை'என்னும்வாக்கியமும்வந்திருத்தலையும் இடையில் அதுபோல என்னுஞ்சொல் தொக்கிருப்பதையும் காண்க.

† ஐம்பெரும் வேள்வியிலொன்றாகிய விருந்தோம்பலை யிகழ்வாரது பொருள்அறனல்லாத (தருமஞ் செய்தற் குரியதாகாத) பொருளாயிருத்தலின் அறனல்லாத என்னும் எதிர்மறைக்குறிப்புப் பெயரெச்சத்தை விருந்தென்பதனோ டியைக்காது பொருளென்பதனோ டியைத்துக்கொள்க.

X தழுவல் என்பது தழாலென்றாயது போன்று ஒருவல் என்பது ஒரால் என்றாயிற்று. ஒரால் - நீக்குதல்.

விருந்தினரை யிகழுவார்க்குள்ள பொருள் தருமத்திற்கு உரிமை யாகாத பொருளாயிருத்தலின், அது போக்கின்றி நின்றவழியும் அதனால் பொருளுடையவர் பயன் கொள்ளாதிருக்கிறார்; இருக்கவே, அவர் பொருளுடையவரா யிருந்தும் ("வைத்துப் பொருளைத் தானுகரான் வழங்கானிருந்துஞ் செத்தானே, செத்த பின்னரென்செய்வான் றீயார் கொள்வ ரீட்டுதலான், மெத்தும் வருத்த மேயன்றி வேறொன்றில்லை" "எனதெனதென்றிருக்கு மேழை பொருளை, யெனதெனதென்றிருப்பன் யானுந் - தனதாயின், றானு மதனை வழங்கான் பயன்றுவ்வான், யா[illegible] மதனை யது" என்றுள்ளபடி) பொருளில்லாதவராகவே யிருத்தல் போன்று அறி

தெளி.—(இ-ள்). (ஒருவனுக்கு) இன்மையுளின்மை - வறுமையுள்ளும் வறுமையாவது, விருந்தொரால் - விருந்தினரை (ஏற்றுக்கொள்ளாமல்) நீக்குதலாம், (அதுபோல), வன்மையுள்வன்மை - வலிமையுள்ளும் வலிமையாவது, மடவார் - அறிவில்லாமையினால் தீமை செய்தவரை,பொறை- பொறுத்தல், (எ - று).

இக்குறள் எடுத்துக்காட்டுவமையணி. விருந்தினரை நீக்குதற்கேதுவாகிய பொருள் அறத்திற்குரிய பொருளாகாதவாறு போன்று அறிவிலார் செய்த தீமையைப் பொறுத்தலும் எளிமையாகாதே வலிமையாமென்பது கருத்து.

(க-து). வல்லமை பலவற்றுள்ளும் வல்லமையாவது அறிவிலார்செய்த குற்றத்தைப் பொறுத்தலாம் என்பது:

3. To neglect hospitality is poverty of poverty. To bear with the ignorant is might of might.

ச. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

பரி.—(இ-ள்). ஒருவன் † சால்புடைமை தன்கணின்று நீங்காமை வேண்டுவனாயின், அவனாற் பொறையுடைமை தன்கண் அழியாமற் காத்தொழுகப்படும், (எ-று).

பொறையுடையாற் கல்லது சால்பில்லை யென்பதாயிற்று. இவை நான்கு பாட்டானும் பொறையுடைமையது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (ஒருவன்) நிறையுடைமை-சால்புடைமையானது, நீங்காமை - (தன்னிடத்தினின்றும்) நீங்காமை, வேண்டின் - வேண்டு

---

விலார் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுதல் மென்மை (எளிமை) யானாலும் அது மென்மையாகாது வன்மை (வலிமை) யாயே யிருக்கின்றதென்பது கருத்தாமென்க.

இதனால் விருந்து விலக்கலின் மேற்பட்ட தரித்திரமும் பிறர் செய்த குற்றத்தைப் பொறுத்தலின் மேற்பட்ட வல்லமையும் இல்லை யென்றுயிற்று. ஆகவே, விருந்தினரை யோம்புகின்றவன் பொருளில்லாதவனாயிருந்தாலும் பொருளுடையவனாகவே கருதப்படுவா னென்பதும் பிறரியற்றிய குற்றத்தைப் பொறுத்துக் கொள்பவன் இந்திரிய நிக்கிரகஞ் செய்யும் வல்லமை யில்லாதவனா யிருந்தாலும் அவ்வல்லமை யுடையவனாகவே கருதப்படுவானென்பதும் பெற்றாம்; பெறவே, இந்திரிய நிக்கிரகஞ்செய்யும் வலிமையிலும் பிறர் செய்த குற்றத்தைப் பொறுக்கும் வலிமை மேன்மையுடைய தாயிற்றென்க.

† சால்புடைமை - நற்குணங்களெல்லாம் ஒன்றுனுங் குறைவின்றி பூரணமா யிருத்தல்.

வானுயின், (அவனால்), பொறையுடைமை - பொறுமையுடைமையானது, போற்றி-(தன்னிடத்தழியாமற்) பாதுகாத்து, ஒழுகப்படும்-நடக்கப்படும்.

பொறுமையுடையவனுக்கல்லாமல் மற்றவருக்கு நிறையுடைமையில்லை யென்பதாயிற்று. இவை நான்குபாட்டாலும் பொறையுடைமையின் சிறப்புச்சொல்லப்பட்டது.

(க-து). நிறையுடைமையை விரும்புகின்றவன் பொறையுடைமையைத் தன்னிடத்து அழியாமற் காக்கக் கடவன் என்பது.

4. If you desire that greatness should never leave you, preserve in your conduct the exercise of patience.

ரு. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

பரி.—(இ-ள்). பிறன் தமக்குத் தீங்குசெய்தவழிப் பொறாது அவனை ஒறுத்தாரை அறிவுடையார் ஒரு பொருளாக மனத்துக் கொள்ளார்; அதனைப் பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து கொள்வர் (எ-று).

ஒறுத்தவர் தாமும் அத்தீங்கு செய்தவனோ டொத்தலின் 'ஒன்றாக வையார்' என்றார். பொதிந்து வைத்தல் - சால்புடைமைபற்றி † இடைவிடாது நினைத்தல்.

தெளி.—(இ-ள்). (பிறன் தமக்குத் தீமை செய்த விடத்து) ஒறுத்தாரை - (பொறுக்காமல் அவனை) தண்டித்தவரை, (அறிவுடையார்), ஒன்றாக - ஒருபொருளாக, வையார் - மனத்துட்கொள்ளார், பொறுத்தாரை - (அத்தீமையைப்) பொறுத்தவரை, பொன் போல் - பொன்னைப் போல, பொதிந்து - முடிந்து, வைப்பர் - மனத்துட்கொள்வர் (எ-று).

தண்டித்தவரும் அத்தீமை செய்தவனோடொத்தலால்'ஒன்றாகவையார்' என்றார். பொதிந்துவைத்தல் - நிறையுடைமைகாரணமாக இடைவிடாது நினைத்தல்.

(க-து). அறிவுடையவர் பொறுமையில்லாதவரை யொருபொருளாக மதியாது அஃதுடையவரைப் பொன்னைப்போல மதிப்பர்.

5. The wise will not at all esteem the resentful. They will esteem the patient even as the gold which they lay up with care.

† இடைவிடாது நினைத்தலாவது தம்மைத் தண்டித்தவரைத் தண்டியாது பொறுத்துக்கொண்டவரது பொறுமையைப் பொன்னை முடிந்து வைத்துக்கொண்டிருப்பவன் அப்பொன்னைக் காப்பதுபோன் றறிவுடையா ரெண்ணியிருத்தல்.

சு. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

பரி.—(இ-ள்). தமக்குத் தீங்கு செய்தவனை ஒறுத்தார்க்கு உண்டாவது அவ் வொருநாளை யின்பமே, அதனைப் பொறுத்தார்க்கு உலகம் அழியுமளவும் புகழுண்டாம், (எ-று).

*ஒருநாளையின்பம்—அந்நாளொன்றினும் கருதியது முடித்தே மெனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம். † ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றுமாகலின், ஏற்புடை உலகமென்னுஞ் சொல் வருவித் துரைக்கப்பட்டது.*

தெளி.—(இள்) *ஒறுத்தார்க்கு-(தமக்குத் தீமை செய்தவனைத்) தண்டித்தவர்க்கு (உண்டாவது), ஒருநாளை யின்பம்-அவ்வொருநாளை யின்பமே, பொறுத்தார்க்கு - (அத்தீமையைப்) பொறுத்தவர்க்கு, பொன்றுந்துணையும்-(உலகம்) அழியுமளவும், புகழ் - கீர்த்தி (உண்டாம்), (எ-று).*

*ஒருநாளையின்பம்-அந்நாளொன்றிலும் நினைத்தது முடித்தோ மென்று செருக்கி யிருக்கும் பொய்யின்பமாம். தனக்காதாரமாகிய உலகம் அழியப் புகழும் அழியுமாதலின், பொருத்த முடைய உலகமென்னுஞ் சொல் வருவித்துக் கூறப்பட்டது. செருக்கு-கர்வம்,*

(க-து). *தமக்குத் தீமைசெய்தவனைத் தண்டித்தவருக் கொருநாளை யின்பமும், அத்தீமையைப் பொறுத்தவருக் குலக மழியுமளவும் புகழுமுண்டாம் என்பது.*

6. The pleasure of the resentful continues for a day. The praise of the patient will continue until the world passes away.

எ. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

பரி.—(இ-ள்). செய்யத் தகாத கொடியவற்றைத் தன்கட்பிறர் செய்தாராயினும், அவர்க்கு அதனால் வருந்துன்பத்திற்கு நொந்து தான் அறனல்லாத செயல்களைச்செய்யாதிருத்தல் ஒருவனுக்குநன்று,(எ-று).

---

† *ஆதாரமாகிய வுலகம் பொன்ற (கெட) ஆதேயமாகிய புகழும் பொன்று (கெடு) மாகலின் ஏற்புடை (தகுதியுடைய) உலகமென்னுஞ் சொல் வருவித்துரைக்கப்பட்டது. இங்ஙனங் கூறியதினால் ஆதாரமாகிய வுலக முள்ளவரைக்கும் ஆதேயமாகிய புகழிருக்குமென்பது பெறப்பட்டது. இஃது "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றுது நிற்பதொன் றில்" எனப் புகழதிகாரத்திற்கூறுவதனாலும் விளங்கும்.*

உம்மை சிறப்பும்மை. துன்பத்திற்கு நோதலாவது ‡ "உம்மை யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்" என்று பரிதல்.

தெளி.—(இ-ள்). திறனல்ல - செய்யத்தகாத தீயசெயல்களை, தன் - தன்னிடத்து, பிறர் - அயலார், செய்யினும் - செய்தாராயினும், நோ - (அவருக்கு அதனால் வரும்) துன்பத்திற்காக, நொந்து - வருந்தி, அறனல்ல - (தான்) அறமல்லாத செயல்களை, செய்யாமை-செய்யாதிருத்தல், நன்று - (ஒருவனுக்கு) நல்லதாம், (எ-று).

செய்யினுமென்றவும்மை இழிவுசிறப்பும்மை. துன்பத்திற்காக வருந்துதலாவது இப்பாவத்தினால் இவர் மறுமையில் எரிவாய் நரகத்தில் வீழ்வாரேயென் றிரக்கங்கொள்ளுதல்.

(க-து). செய்யத்தகாத கொடியசெயல்களைத் தன்னிடத்துச் செய்தவருக்குப் பின்வருந் தீங்கிற்கஞ்சித் தருமமல்லாத செயல்களை அவரிடத்துச் செய்யாதிருத்தல் ஒருவனுக்குச் சிறப்புடைய வறமாம் என்பது.

7. Though others inflict injuries on you, yet compassionating the sorrow that will come upon them it will be well not to do to them any thing contrary to virtue

அ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

பரி.—(இ-ள்). மனச்செருக்கால் தங்கட் டீயவற்றைச் செய்தாரைத் தாம் தம்முடைய பொறையான் வென்று விடுக, (எ-று).

தாமும் அவர்கட் டீயவற்றைச் செய்து தோலாது பொறையான் அவரின் மேம்பட்டு † வெல்க வென்பதாம். இவை நான்கு பாட்டானும் பிறர் செய்தன பொறுத்தல் சொல்லப்பட்டது.

தெளி.—(இ-ள்). மிகுதியால் - மனச்செருக்கினால் (தம்மிடத்து), மிக்கவை - தீயசெயல்களை, செய்தாரை - செய்தவர்களை, தாம் - தாங்கள், தந்தகுதியால் - தமது பொறுமையினால், வென்றுவிடல் - வென்று விடக்கடவர், (எ-று).

தாமும் அவரிடத்துத் தீயசெயல்களைச்செய்து தோல்வியடையாது பொறுமையால் அவரினும்மேம்பட்டு வெல்லுகவென்பதாம். இவை நான்கு பாட்டாலும் பிறர்செய்த குற்றங்களைப் பொறுத்தல் சொல்லப்பட்டது.

‡ நாலடியார், துறவு, அ. இதன்பொருள் மறுமையி லெரிகின்ற வாயையுடைய நரகத்திலே வீழ்வார்களோ என்பது.

†† "வெல்வது, வேண்டின் வெகுளி விடல்" என்பது நான்மணிக்கடிகை.

(க-ள்). *தீமைசெய்தவரைப் பொறுமையால் வெல்லவேண்டும் என்பது.*

8. Let a man by patience overcome those who through pride commit excesses.

கூ. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்

பரி.—(இ - ள்). இல்வாழ்க்கைக்க ணின்றேயும் துறந்தாரைப் போலத் தூய்மையுடையார், நெறியைக்கடந்தார்வா யின்னாத சொல்லைப் பொறுப்பவர், (எ - று).

*தூய்மை - ¶ மனமாசின்மை. வாயென வேண்டாது கூறினார்; தீய சொற்கள் பயின்றதெனத் தாம்வேண்டியதன் இழிபு முடித்தற்கு.*

தெளி.—(இ-ள்). *இறந்தார் (நல்வழியைக்) கடந்தவரது, வாய்-வாயினின்றுண்டாகும், இன்னாச்சொல்-வெறுக்கப்படுஞ் சொற்களை, நோற்கிற்பவர்-பொறுப்பவர்,(இல்வாழ்க்கையிலேயிருந்தாலும்), துறந்தாரின்-துறந்தவரைப்போல, தூய்மை - பரிசுத்தகுணத்தை, உடையர்-உடையவ்ராவர்.*

*தூய்மை - மனவழுக்கில்லாமை. வாயென்று வேண்டாது சொல்லினார்; (அவ்வாய்) தீயசொற்களைப்பேசிப்பழகியதெனத் தாம்வேண்டியதன் இழிபு தோன்றுதற்கென்க.*

(க - து) *தீயவழியில் நடப்பவரது கொடுஞ் சொற்களைப் பொறுப்பவர் துறவிகள் போலப் பரிசுத்தகுண முடையவராவர்.*

9. Those who bear with the uncourteous speech of the insolent are purer than ascetics.

கO. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

பரி.—(இ - ள்). விரதங்களான் ஊனைத்தவிர்ந்து உற்ற நோயைப் பொறுப்பார் எல்லாரினும்பெரியர்; அவர் பெரியராவது தம்மைப் பிறர் சொல்லும் இன்னாதசொல்லைப் பொறுப்பாரிற்பின், (எ - று).

*பிறர் - அறிவிலாதார். * நோலாமைக் கேதுவாகிய இருவகைப் பற்*

*¶ மனமாசின்மை-மனத்தின்கண்காமம்வெகுளி மயக்கங்களில்லாமை.*

** நோலாமைக் கேதுவாகிய இருவகைப்பற்று - விரதங்களினால் உணவைவிட்டுத் தம்மையடைந்த பசி நோய் முதலியவற்றைப் பொறுத்துக்கொள்ளாமைக்குக் காரணமான யானெனதென்னுஞ் செருக்கு. (தானல்லாத வுடம்பையானென்று கருதி யதனிடத்தில் வைக்குமபிமானம் யானென்னுஞ்செருக்கு. இஃது அகங்காரமெனப்படும். தன்னோடுசம்பந்த*

ரோடு நின்றே † நோற்றலின் 'இன்னாச்சொ னோற்பாரிற் பின்' என்றார். இவை யிரண்டொட்டானும் பிறர் மிகைக்கச்சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). உண்ணாது - (விரதங்களினால்) உணவைவிட்டு, நோற்பார் - (தம்மை யடைந்த நோயைப்) பொறுப்பவர், பெரியர் - (எல்லாரினும்) பெரியவராவார், (அவர்பெரியவராவது),பிறர் - அயலார், சொல்லும் - (தம்மைப்பற்றிச்) சொல்லும், இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ் சொற்களை, நோற்பாரின் - பொறுப்பவரின், பின் - பின்னும்,(எ - று).

பிறர் - அறிவில்லாதவர். தவஞ்செய்யாமைக்குக் காரணமாகிய யானெனதென்னும் இருவகைப்பற்றுக்களோ டிருந்தே பொறுத்தலால் 'இன்னாச்சொ னோற்பாரிற் பின்' என்றார். (பிறர்சொல்லும் வெறுக்கப் படுஞ் சொற்களைப் பொறுப்பவர் தவஞ் செய்வாரினும் பெரியாரென்பது சொல்லலாயிற்று). இவை இரண்டொட்டாலும் பிறர் வருத்தமுண்டாகச் சொல்லியவற்றைப் பொறுத்தல் சொல்லப்பட்டது.

(க - து). பிறர் கூறுங் கொடுஞ் சொற்களைப் பொறுப்பவருக்கு உணவைவிட்டுத் தம்மையடைந்த நோயைப் பொறுத்துக் கொள்ளுந் தபசிகள் பிற்பட்டவராவார் என்பது.

10. Those who endure abstinence from food are great, next to those who endure the uncourteous speech of others.

## பதின்மூன்றாவது அதிகாரம்.

## அழுக்காறாமை—Against Envy.

பரி.—இதனுள் § அழுக்காறென்பது ஒருசொல். * அதந்துப்

---

மில்லாத பொருளை யெனதெனக்கருதி அதனிடத்துவைக்கு மபிமானம் எனதென்னுஞ் செருக்கு. இது மமகார மெனப்படும்). இதனால்பொறுத்துக்கொள்ளுதற்குக் காரணம் யானென தென்னுஞ் செருக்கில்லாமையென் றாயிற்றென்க

† நோற்றலின் - அறிவில்லாதார் சொல்லுகின்ற வெறுக்கப்படுஞ் சொற்களைப் பொறுத்துக் கொள்ளுதலினால்.

§ அழுக்காறு என்பதை அழுக்கு ஆறு என இரண்டு சொல்லாகக் கொள்ளாது ஒரு சொல்லாகவே கொண்டு 'அழுக்காறென்பது ஒருசொல்' என்றார். அழுக்கறுத்தல் என்னுந் தொழிற்பெயர் விகுதிகெட்டு முதனிலை திரிந்து அழுக்காறு என வந்தது. இவ்வாறு வருவது முதனிலை திரிந்த தொழிற்பெயரெனப்படும். அழுக்காறு என்பது சொல்லால் உடன்பாடாயிருப்பினும் பொருளால் எதிர்மறையை யுணர்த்திற்று. இலக்கணக் கொத்தில் "விதிச்சொன் மறைப்பொரு ளாகி வருநவும்" என்பதற்கு இதுவே உதாரணமாகக் காட்டப்பட் டிருக்கின்றது.

பொருள் * மேலே யுரைத்தாம். † அச்சொற் பின் அழுக்காற்றைச்செய்யாமை யென்னும் பொருள்பட எதிர்மறை ஆகாரமும் மகாரஐகாரவிகுதியும் பெற்று § அழுக்காறாமையென நின்றது. இப்பொறாமையும் பொறைக்கு மறுதலையாகலின், இதனை விலக்குதற்கு இது பொறையுடைமையின்பின் வைக்கப்பட்டது.

தெ.—அஃதாவது பிறரிடத்துச் செல்வ முதலியனவற்றைக் கண்டவிடத்துப் பொறாமைப்படாமை. இப்பொறாமையும் பொறுமைக்கு எதிரியதாகலின், இப்பொறாமையை விலக்குதற்கு இவ்வழுக்காறாமை பொறையுடைமையின்பின் வைக்கப்பட்டது.

க. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

பரி.—(இ - ள்). ஒருவன் தன்னெஞ்சத்தின்கண் அழுக்காறென்னுங் குற்றமில்லாத இயல்பினைத் ¶ தனக்கோதிய ஒழுக்கநெறியாகக் கொள்க, (எ - று).

இயல்பு - அறிவோடுகூடிய தன்மை. ‖ அத்தன்மையும் நன்மை பயத்தலின், ஒழுக்கநெறிபோல உயிரினுமோம்புக என்பதாம்.

தெளி:—(இ - ள்). ஒருவன்—தன்னெஞ்சத்து - தனது மனதின் கண், அழுக்காறு - பொறாமையென்னுங் குற்றம், இலாத - இல்லாத, இயல்பு - இயல்பினை, ஒழுக்கு - (தனக்குச் சொல்லிய) ஒழுக்கத்தினது, ஆறாக - வழியாக, கொள்க - கொள்ளக்கடவன், (எ - று).

இயல்பு - அறிவோடுகூடிய தன்மை. அவ்வறிவோடு கூடிய தன்மையும் நன்மையைத் தருதலால், அழுக்காறிலாத வியல்பினை ஒழுக்கவழிபோல உயிரினும் சிறந்ததாகக் காப்பாற்றுக என்பதாம்.

---

* மேலே யுரைத்தாம்—அறன்வலியுறுத்தலின் 5 - வது குறளினுரையில் ‘ பிறராக்கம்பொறாமை ’ என்றுகூறினோம்.

† அச்சொல் - (அழுக்காறென்னுஞ் சொல்) அழுக்காற்றை (பொறாமைப்படுதலைச்) செய்யாமை யென்னும் பொருள் தோன்ற எதிர்மறை ஆகாரமும் மகாரவைகார (ஐ) விகுதியும் பெற்று அழுக்காறாமை (பொறாமைப் படுதலைச் செய்யாமை) யெனநின்றது.

§ அழுக்காறாமை யென்பது சொல்லால் எதிர்மறையா யிருப்பினும் பொருளால் உடன்பாட்டை யுணர்த்திற்று. இலக்கணக்கொத்தில் “மறைச்சொல் விதிப்பொரு ளாக வருநவும்” என்பதற்கு இஃதே யுதாரணமாகக் காட்டப்பட்டிருக்கிறது. அழுக்காறாமை யென்பதற்குப் பொறாமைப்படாமை அஃதாவது பொறுத்தலென்பது பொருள்.

¶ தனக்கோதிய-ஒழுக்கமுடைமையதிகாரத்தில் “ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க, முயிரினு மோம்பப் படும்” என்று தனக்குச் சொன்ன.

‖ அத்தன்மையும்-தன்னெஞ்சத் தழுக்காறிலாத வியல்பும்.

(க - து). ஒருவன் பொறாமை யில்லாதிருத்தலைத் தனக்கோதிய ஒழுக்க வழியாகக் கொள்ளக்கடவன் என்பது

1. Let a man esteem that disposition which is free from envy in the same manner as propriety of conduct.

உ. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்.

பரி.—(இ - ள்). யாவர்மாட்டும் அழுக்காற்றினின்று நீங்குதலை ஒருவன் பெறுமாயின், * மற்றவன் பெறுஞ் சீரிய † பேறுகளுள் அப்பேற்றினை யொப்பதில்லை, (எ - று).

*அழுக்காறு பகைவர் மாட்டும் ஒழிதற்பாற் றென்பார் 'யார்மாட்டும்' என்றார். அன்மை - வேறுதல். இவை யிரண்டு பாட்டானும் அழுக்காறின்மையது குணங் கூறப்பட்டது.*

தெளி.—(இ - ள்). *யார்மாட்டும் - யாவரிடத்தும், அழுக்காற்றின் - பொறாமையினின்றும், அன்மை - நீங்குதலை, பெறின் - (ஒருவன்) பெறுவானாயின், விழுப்பேற்றின் - (மற்றவன் பெறும்) மேலான பேறுகளுள், அஃது - அப்பேற்றினை, ஒப்பது - ஒத்திருப்பது, இல்லை—, (எ - று).*

*பொறாமைப்படுதல் பகைவரிடத்தும் ஒழிதல்வேண்டுமென்பார் 'யார் மாட்டும்' என்றார். அன்மை - வேறுகுதல், இவையிரண்டு பாட்டாலும் பொறாமை யில்லாமையினது குணம் சொல்லப்பட்டது.*

(க - து). *ஒருவன் யாவரிடத்தும் பொறாமை யில்லாதிருப்பானாயின், அவனுக்கு அதைவிடச் சிறந்த பேறு இல்லை என்பது.*

2. Amongst all attainable excellencies there is none equal to that of being free from envy towards every one.

ங. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

பரி.—(இ - ள்). மறுமைக்கும் இம்மைக்கும் அறமுஞ் ‡ செல்வமும் ஆகிய உறுப்புக்களைத் தனக்கு வேண்டாதானென்று சொல்லப்படுவான் பிறன் செல்வங் கண்டவழி அதற்கு உவவாது அழுக்காற்றைச் செய்வான், (எ - று).

*அழுக்கறுத்த லெனினும் அழுக்கா றெனினும் ஒக்கும். ‡ அழுக்காறு செய்யின் தனக்கே ஏதமாமென்பதாம்.*

---

* மற்று - பின்பு. † பேறு - பெறப்படுவது. அது புகழ் முதலியனவாம்.

‡ புகழும் என்றும் பாடமுண்டு. † அழுக்காற்றைச் செய்யின் என்றும் பாடமுண்டு.

தெளி.—(இ - ள்). அறன் - (மறுமைக்கு) அறமும், ஆக்கம் - (இம்மைக்குச்) செல்வமும் (ஆகிய வுறுப்புகளை), வேண்டாதானென்பான்-(தனக்கு) வேண்டாதவனென்று சொல்லப்படுவோன், பிறன் - பிறனது, ஆக்கம்-செல்வத்தை, பேணாது- (கண்டவிடத்து அதற்காக) மகிழாமல், அழுக்கறுப்பான் - பொறாமைப்படுதலைச் செய்வான், (எ - று).

பொறாமைப் படின் தனக்கே துன்பமாம் என்பதாம்.

(க - து). பொறாமை யுடையவனுக்கு மறுமைக்குரிய அறமும் இம்மைக்குரிய பொருளுமில்லை என்பது.

3. Of him who instead of rejoicing in the wealth of others envies it, it will be said "he neither desires virtue nor wealth."

ச. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

பரி —(இ - ள்). அழுக்காறு ஏதுவாக அறனல்லவற்றைச் செய்யார் அறிவுடையார்; அத்தீநெறியால் தமக்கு $ இருமையினுந் துன்பம் வருதலை யறிந்து, (எ - று).

அறனல்லவையாவன - செல்வம், கல்வி ‡ முதலியன உடையார்கட்டங்கு நினைத்தலும் சொல்லுதலும் செய்தலுமாம்.

தெளி.—(இ - ள்). (அறிவுடையோர்) அழுக்காற்றின் - பொறாமை காரணமாக, அல்லவை - அறமல்லாதவைகளை, செய்யார்—, இழுக்காற்றின்-(பொறாமைப் படுதலென்னும்) அத்தீயவழியால், ஏதம்-துன்பமானது, படுபாக்கு-(தமக்கு இருமையிலும்)உண்டாதலை, அறிந்து - தெரிந்து, (எ-று).

அறமல்லாதவையாவன-செல்வங் கல்வி முதலியன வற்றை யுடையாரிடத்துத் தீமையாயினவற்றை நினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம்.

(க-து.), அறிவுடையவர் பொறாமை காரணமாகப் பிறர்க்குத் திரிகரணத்தாலுந் தீமைசெய்யார் என்பது.

4. The wise knowing the misery that comes from transgression will not through envy commit unrighteous deeds.

ரு. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

---

$ இருமையிலுந் துன்பம் வருதலாவது இம்மையில் வறுமைத்துன்பமும் மறுமையில் நரகத்துன்பமு முண்டாதல். ‡ முதலியன என்றதனால் சொற்செலவு, நிலக்கிழமை, ஆண்மை, அதிகார முதலிய வற்றையுங்

பரி.—(இ-ள்.) அழுக்காறு பகைவரை ஒழிந்துங் கேடு பயப்பது ஒன் * றாகலின், அவ்வழுக்காறுடையார்க்குப் பகைவர் வேண்டா, கேடு பயத்தற்கு அதுதானே அமையும், (எ-று).

*அதுவே யென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது.*

தெளி.—(இ-ள்.) *அழுக்காறு - பொறாமையானது, ஒன்னார் - பகைவரை, வழுக்கியும்-ஒழிந்திருந்தும், கேடீன்பது-கேட்டைத் தருவதொன்று, (ஆதலால்), உடையார்க்கு-(அப்பொறாமையை)உடையவர்க்கு (கேட்டைத் தருதற்குப் பகைவர் வேண்டாம்), அது - அப்பொறாமையே, சாலும் - போதும், (எ-று).*

*அதுவே யென்னும் பிரிநிலையேகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது.*

(க - து.) *பொறாமையே ஒருவனுக்குக் கேட்டைத்தரும் பெரும் பகையாம் என்பது.*

5. To those who cherish envy that is enough. Though enemies fail in their attempts, that will bring destruction.

சு. † கோடேப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடேப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

பரி.—(இ - ள்) ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதன்கண் அழுக்காறு றைச் செய்வானது சுற்றம் உடுக்கப்படுவதும் உண்ணப்படுவது மின்றிக்கெடும், (எ-று).

*கொடுப்பதன்கண் அழுக்கறுத்தலாவது கொடுக்கப்படும் பொருள் களைப்பற்றிப்பொறாமைசெய்தல். சுற்றங்கெடுமெனவே, அவன்கேடு சொல் லாமையே பெறப்பட்டது. பிறர் பேறு பொறாமை தன் பேற்றையேயன் றித் தன்சுற்றத்தின் பேற்றினையும் இழப்பிக்கு மென்பதாம்.*

தெளி.—(இ-ள்.) *கொடுப்பது - (ஒருவனாற் பிறர்க்குக்) கொடுக்கப் படும் பொருள்களைப்பற்றி, அழுக்கறுப்பான் - பொறாமைப் படுபவனது, சுற்றம்-உறவினர், உடுப்பதூஉம் - உடுக்கப்படுவதும், உண்பதூஉம் - உண் ணப்படுவதும், இன்றி-இல்லாமல், கெடும்-அழிவர், (எ-று.)*

---

* *ஆகலின் என்பது ஏதுப் பொருளை யுணர்த்து மிடைச்சொல்.*

† *"எடுத்தொருவருக்கொருவ ரீவதனின் முன்னே, தடுப்பது நினக் கிதழ கோதகைவில் வெள்ளி, கொடுப்பது விலக்குகொடி யோய்நினது சுற்றம், உடுப்பதவு முண்பதவு மின்றிவிடு கின்றாய்" என்பது இராமா யணம்.*

சுற்றத்தார் கெடுவரெனவே, அவன் கெடுதல் சொல்லாமலே பெறப்பட்டது. பிறர் செல்வத்தைக் கண்டு பொறாமைப்படுதல் தன் செல்வத்தையே யல்லாமல் தன் சுற்றத்தாரது செல்வங்களையும் இழக்கச் செய்யுமென்பதாம்.

(க-து) ஒருவர் மற்றொருவருக் கொன்று கொடுப்பதைக்குறித்துப் பொறாமைப் படுவோனது சுற்றத்தாரும் உடுக்கவாடையுமுண்ணச்சோறு மில்லாமற் கெடுவர் என்பது.

6. He who is envious at a gift made to another will with his relations utterly perish destitute of clothing and food.

எ. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்.

பரி.—(இ - ள்). பிறராக்கங் கண்ட வழிப் பொறாமை உடையானைத் திருமக டானும் பொறாது தன்றவ்வைக்குக் காட்டி நீங்கும்,(எ-று).

* தவ்வை - மூத்தவள். தவ்வையைக் காட்டியென்பது † "அறிவுடையந்தண னவளைக்காட் டென்றானே" என்பதுபோல ‡ உருபுமயக்கம்.

---

* தேவாசுரர் திருப்பாற்கடலைக் கடைந்தபோது அக்கடலினின்று மூதேவி முன்னும் இலக்குமி பின்னும் பிறந்தமையாலே மூதேவிக்கு மூத்தவள் என்னும் பெயருண்டாயிற்று. "சீதேவி யாருடனே தூய்யதிருப் பாற்கடலின், மூதேவி யேன்பிறந்தாள் முன்" என்பது தனிப்பாடல்.

† கலித்தொகை, மருதம், எ. இதன்பொருள் அறிவினையுடைய பிராமணன் அவளுக்குக் காட்டென்று சொன்னானே என்பது. 'அறிவுடை' என்னுமிவ் வடிக்கு நச்சினார்க்கினியர் " அறிவில்லாத அந்தணன் அவளைக் காணப்பண்ணென்று சொன்னானே" என்றுரைகூறி "அறிவுடையந்தணன் இகழ்ச்சி. அவட்கு என உருபுமயக்கமுமாம்" என்று விசேடவுரை வகுத்திருக்கின்றனர்.

‡ தவ்வையை யென்பதன்கணுள்ள ஐயென்னு மிரண்டனுருபு தனக்குரிய செயப்படுபொருளை விட்டுக் கு வென்னும் நான்கனுருபிற் குரிய கோடற் பொருளில் (அவளை யென்பது அவளுக்கு என வந்தாற்போலத் தவ்வையை யென்பது தவ்வைக்கு என) வந்தமையின், உருபு மயக்கமாயிற்று. "உருபின் மயக்கமோ ருருபின் பொருளொடு, தன்பொருள் விடுத்துத் தலைமயங் குதலே" என்பது இலக்கண விளக்கம். இவ்வாறன்றி ஒரு வேற்றுமையின் பல வுருபுகளில் ஒருருபு குறிக்கவேண்டிய பொருளை அவ் வேற்றுமையின் மற்றோருருபு குறிப்பது உருபு மயக்கமென்பாரு முண்டு

§ மனத்தைக் கோடுவித்து அழுக்காறுடையனுயினுனை யென்றுரைப்பாருமுளர்.

தெளி;—(இ - ள்). அழுக்காறுடையானை - (பிறர்செல்வங் கண்டவிடத்துப்)பொறாமைப் படுகின்றவனை; செய்யவள்-திருமகள், அவ்வித்து-(தானும்) பொறாமைப்பட்டு, தவ்வையை-(தனது) தமக்கைக்கு, காட்டி - காண்பித்து, விடும் - நீங்குவாள், (எ - று)

தவ்வையை யென்பது தவ்வைக்கு என்னும் பொருளில்வந்தமையின், உருபு மயக்கமாம். தவ்வை - மூதேவி. திருமகள் - இலக்குமி.

(க - து). பொறாமை யுடையவனை மூதேவி யடைவாள் என்பது.

7. Lakshmi envying (the prosperity) of the envious man will depart and introduce her sister to him.

அ அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

பரி.—(இ - ள்). அழுக்காறென்று சொல்லப்பட்ட வொப்பில்லாத பாவி தன்னை யுடையானை இம்மைக்கட் செல்வத்தைக் கெடுத்து, மறுமைக்கண் நரகத்திற் செலுத்திவிடும், (எ - று).

× பண்பிற்குப் பண்பில்லையேனும், தன்னையாக்கினுனை இருமையுங் கெடுத்தற் கொடுமைபற்றி, அழுக்காற்றினைப் 'பாவி' என்றார்;

---

§ ஔவிய மென்பது மனக்கோட்டத்திற்கும் பெயராதலின், அவ்வித்தழுக்கா றுடையானை என்பதற்கு மனதைக் கோடுவித்து (கோணப்பண்ணி) அழுக்காறுடையனுயினுனை (பொறாமை யுடைத்தா யிருக்கின்றவனை) யென்றுரை கூறுவாருமுளர். இவ்வுரையினுல் பொறாமை யுடையவனது மனத்தைத் திருமகளே கோணப்பண்ணுகிறு ளென்பது பெறப்படும்.

× அழுக்காறு என்பது துர்க்குணங்களிலொன்று. குணமெனினும் பண்பெனினுமொக்கும். "பொருண்மைச்சாதி யுடைமையாதல் குணமுடைமையாதல் பொருட்கிலக்கணம்" "பண்பிற்குப் பண்பு கோடல் பொருந்தாமையின்" என்று தருக்கநூல் கூறுகின்றமையின், பண்பியில் (குணியில்) பண்பிருக்கு மெனவும், பண்பு மற்றொரு பண்பையேற்றுப் பண்பியாதலின்றெனவும் பெறப்படுகின்றன. படவே அழுக்காறென்பது குணமா யிருத்தலால் அது பண்பியாகா தென்றாயிற்று; ஆகவே, அதனைப் பாவமெனக் (குணமாகக்) கூறாது பாவி யெனக் (குணியாகக்) கூறுவது வழுவாம். வழுவாதல் பற்றிப் 'பண்பிற்குப் பண்பில்லையேனும், (அழுக்காறென்னுங் குணத்திற்கு மற்றொரு குணத்தை யேற்றுக்

|| கொடியானைப் பாவியென்னும் வழக்குண்மையின். இவை யாறுபாட்டானும் அழுக்காறுடைமையது குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). அழுக்கா றெனவொரு பாவி-பொறாமையென்று சொல்லப்பட்ட வொப்பில்லாத பாவியானவன் (தன்னையுடையவனை), திருச்செற்று - (இம்மையில்) செல்வத்தைக் கெடுத்து, தீயுழி யுய்த்துவிடும் - (மறுமையில்) நரகத்தினிடத்துச் செலுத்திவிடுவான், (எ - று).

அழுக்காறென்னுங் குணத்திற்குக் குணமின்றாயினும், தன்னை யுண்டாக்கினவனை இருமையிலும் கெடுக்கின்றகொடுமைபற்றி அதனைப் 'பாவி' என்றார்; கொடுந்தொழிலுடையானைப் பாவியென்னும் வழக்கமிருத்தலின். இவை யாறுபாட்டாலும் பொறாமை யுடைமையினது குற்றம் சொல்லப்பட்டது.

(க - து). பொறாமையானது தன்னை யுடையவனைக் கெடுத்து நரகத்திற்றள்ளும் என்பது.

8. The sinner's envy will destroy a man's wealth in this world and drive him into the pit of fire in the next world.

கூ. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்.

பரி.—(இ - ள்). கோட்டத்தினைப் பொருந்திய மனத்தையுடையவனது ஆக்கமும் ஏனைச் செம்மையுடையவனது கேடும் உளவாயின், அவை ஆராயப்படும், (எ - று).

கோட்டம் - ஈண்டு அழுக்காறு. உளவாயினென்பது எஞ்சிநின்றது. ¶ ஆக்கக் கேடுகள் கோட்டமுஞ் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின், அறிவுடையரால் $ இதற்கேதுவாகிய பழவினையாதென்று ஆரா

---

குணியாகுந்தன்மை யின்றாயினும்) தன்னையாக்கினோனை (அழுக்காறென்னுந் தன்னையுண்டு பண்ணினவனை) இருமையுங் கெடுத்தற் கொடுமை (இம்மை மறுமை யென்னு மிரண்டிலுங் கெடுக்குந் தீமை) பற்றி, அழுக்காற்றினை (பாவமெனக் குணமாகக் கூறாது) (குணியாகப்) பாவி யென்றார்' என்று கூறப்பட்டது. அழுக்காறாகிய குணத்தைப் பாவமெனக்கூறாது 'திருச்செற்றுத் தீயுழி யுய்த்து விடும்' என ஏது காட்டிப் பாவி யெனக்கூறியது ஏது வுருவகவணியாம்.

|| கொடியானைப் பாவி யென்னும் வழக்குண்மையின் - தீயகாரியங்களைச் செய்கின்றவனைப் பாவியென்று பேசும் வியவகாரமிருக்கிற படியினால். இது கொடியகாரியங்களைச் செய்த துரியோதனனைப் பாவித் துரியோதனன் என்று கூறுவதாலு மறிதற் பாற்றாம்.

¶ ஆக்கக்கேடுகள் கோட்டமுஞ் செம்மையும் ஏதுவாக - செல்வமுந் தரித்திரமும் பொறாமையும் நடுவுநிலைமையுங் காரணமாக.

$ இவற்றிற் (ஆக்கக்கேடுகட்) கேதுவாகிய என்றும் பாடமுண்டு.

யப்படுதலின் 'நினைக்கப்படும்' என்றார். § "இம்மைச் செய்தன யானறி நல்வினை, யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித், திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" என நினைக்கப்பட்ட வாறறிக.

தெளி.—(இ-ள்.) அவ்விய நெஞ்சத்தான் - கோட்டத்தினைப் பொருந்திய மனத்தையுடையவனது, ஆக்கமும் - செல்வமும், செவ்வியான்-மற்றைச்செம்மையை யுடையவனது, கேடும் - வறுமையும், (உண்டாயின்), நினைக்கப்படும் - (அவை) ஆராயப்படும், (எ-று).

கோட்டம் - இங்குப் பொறாமையென்னும் பொருளது. உண்டாயின் என்பது குறைந்து நின்றது. பொறாமையினாற் செல்வமும், நடுவுநிலைமையினாற் கேடும் உண்டாகுதல் கூடாமையால், அறிவுடையவரால் இச்செல்வமும் வறுமையும் உண்டாதற்குக் காரணமாகிய பழவினையாதென்று ஆராயப்படுதலால் 'நினைக்கப்படும்' என்றார். செம்மை - நடுவுநிலைமை.

(க - து). அறிவுடையோர் பொறாமையுள்ளவனது செல்வத்தையும் நடுவுநிலைமையுடையவனது வறுமையையும் பழவினையின் பயனென் றெண்ணுவர் என்பது.

9. The wealth of a man of envious mind and the poverty of an upright man will be pondered.

கo. ‡ அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

பரி.—(இ - ள்); அழுக்காற்றைச் செய்து பெரிய ராயினாரும் இல்லை; * அச்செயலிலாதார் பெருக்கத்தி னீங்கினாரும் இல்லை,(எ-று).

---

¶ சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை. கக, கஉ, கங, இதன்பொருள் யானறிய இப்பிறப்பிற் செய்தன வெல்லாம் நல்வினையாகவும் இம்முழு மாணிக்கக் கொழுந்து போன்ற மனைவியுடன் நீ வந்து ஒரு துணையுமின்றித் தனியே யலைந்தது முற்பிறப்பிற் செய்த தீவினையின் பயன் தானோ என்பது. பட்டினத்தடிகள் "என்செயலாவது" என்னுஞ் செய்யுளில் "இந்த வூனெடுத்த, பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பிறப்பதற்கு, முன்செய்த தீவினை யோயிங்ங னேவந்து மூண்டதுவே" என்று கூறியது மிங்கறியத் தக்கதாம்.

‡ அழுக்காறு என்னும் பண்புப்பெயர் தொழிற்பெய ராங்கால் அழுக்கறல் எனநிற்கும். இங்கு அழுக்கற்று என்பது செய்து என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம்.

* அச்செய லிலாதார்க்குள் என்றும் பாடமுண்டு.

இவை யிரண்டுபாட்டானும் ‡ கேடும் ஆக்கமும் வருதற் கேது ஒருங்கு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). அழுக்கற்று - பொறாமைப் படுதலைச்செய்து, அகன்றாரும் - பெரியவரானவரும், இல்லை—, அஃதில்லார் - அச்செயலில்லாதவருள், பெருக்கத்தின் - பெருக்கத்திலிருந்து, தீர்ந்தாரும் - நீங்கினவரும், இல்-இல்லை, (எ - று).

பெருக்கம் - செல்வம். இவை யிரண்டு பாட்டாலும் அழிவும் ஆக்கமும் வருதற்குக் காரணஞ் சேர்த்துச சொல்லப்பட்டது.

(க - து) பொறாமைப் பட்டோர் செல்வமுற்றாரும் அஃதின்றி வறுமையுற்றாரும் இல்லை என்பது.

10. Never have the envious become great; never have those who are free from envy been without greatness.

பதினைன்காவது அதிகாரம்.

## வெஃகாமை—Against Covetousness.

பரி.—அஃதாவது பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை. பிறருடைமை கண்டவழிப் பொறாமையே யன்றி யதனைத் தான் வௌவக்கருதுதலுந்தற்றமென்றற்கு, இஃது அழுக்காறாமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது பிறர்க்குரிமையா யுள்ள பொருளை யபகரித்தற்கு நினையாமையாம். பிறருடைமையைக் கண்டவிடத்துப் பொறாமை யடைதலே யல்லாமல் அதனைத் தான் அபகரித்தற்கு நினைத்தலும் குற்றமென்பதற்கு, இஃது (வெஃகாமை) அழுக்காறாமையின் பின்னே வைக்கப்பட்டது.

க. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

பரி.—(இ - ள்). பிறர்க்குரியன கோடல் நமக்கு அறன் அன்றென்னும் நடுவுநிலைமை இன்றி அவர் நன்பொருளை ஒருவன் வெஃகுமாயின், அவ்வெஃகுதல் அவன்குடியைக் கெடச்செய்து, பலகுற்றங்களையும் அப்பொழுதே அவனுக்குக் கொடுக்கும், (எ - று).

‡ கேடுவருதற்கேது அழுக்காற்றைச் செய்தலும், ஆக்கம் வருதற்கேது அழுக்காற்றைச் செய்யாமையு மாமெனக் கூறப்பட்டது.

அழுக்காற்றைச்செய்து பெரியராயினாருமில்லை என்றதனால் அதனைச் செய்யாதார் பெரியவராவா ரென்பதும், அச்செயலிலாதார் பெருக்கத்தினீங்கி னாருமில்லை என்றதனால், அச்செயலுடையார் பெருக்கத்தினீங்குவா ரென்பதும் பெறப்படுமாறறிக.

குடியை வளரச்செய்து பலநன்மையும்பயக்கும் இயல்புபற்றிப் பொருள் வெஃகினென்பார் 'நன்பொருள் வெஃகின்' என்றார். பொன்றவென்பது § பொன்றியெனத் திரிந்து நின்றது. செய்தென்பது சொல்லெச்சம்.

தெளி.—(இ - ள்). நடுவின்றி - (பிறர்க்குரிய பொருள்களைக் கொள்ளுதல் நமக்கு அறமல்ல வென்னும்) நடுவுநிலைமை யில்லாமல், நன்பொருள் - (அவரது) நல்லபொருளை, வெஃகின் - (ஒருவனபகரித்தற்கு) விரும்புவானாயின் (அவ்விருப்பு), குடிபொன்றி - (அவன்) குடியைக்கெடச் (செய்து), குற்றமும் - பல குற்றங்களையும், ஆங்கே - அப்போதே, தரும் - (அவனுக்குக்) கொடுக்கும், (எ-று).

குடியை வளரச்செய்து பல நன்மைகளையும் உண்டாக்குந் தன்மை பற்றிப் பொருள் வெஃகின் என்பார் 'நன்பொருள் வெஃகின்' என்றார். பொன்ற வென்பது பொன்றியெனத் திரிந்து நின்றது. செய்து என்பது குறைந்து நின்றமையின் சொல்லெச்சமாம்.

(க-து). ஒருவன் நடுவுநிலைமை யில்லாமல் பிறர்பொருளை யபகரிக்க விச்சித்தால் அஃதவனது குடியைக் கெடுத்து அவனுக்குப் பல குற்றத்தையுங் கொடுக்கும் என்பது.

1. If a man departing from equity covet the property of others at that very time will his family be destroyed and guilt be incurred.

---

௨. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

பரி.—(இ - ள்). பிறர்பொருளை வௌவினால் தமக்கு வரும்பயனை விரும்பி, அது வௌவுதற்குப் பழியின்கண்ணே படுஞ் செயல்களைச் செய்யார், நடுவுநிலைமையன்மையை அஞ்சுபவர், (எ - று).

நடுவு - ஒருவன் பொருட்குப் பிறன் உரியன் அல்லனென்னும் நடுவு.

தெளி.—(இ - ள்.) நடுவன்மை - (ஒருவன் பொருளுக்குப் பிறன் உரியனல்லனென்னும்) நடுவுநிலைமையல்லாமைக்கு, நாணுபவர் - அஞ்சுவோர், (பிறர்பொருளை யபகரித்தலினால்), படுபயன் - (தமக்கு) வரும் பயனை, வெஃகி - விரும்பி, பழிப்படுவ - (அப்பொருளை யபகரித்தற்கு) பழியினிடத்தே பொருந்துஞ் செயல்களை, செய்யார்—, (எ - று).

§ பொன்றியென்பது - பொன்றுவித்து என்பதன் விகாரமென்பாருமுண்டு.

நடுவு - நீதி

*(க - து) நடுவுநிலைமை யுடையோர் பிறர்பொருளை யபகரித்த லால தமக்கு வரும் பயனை விரும்பித் தீயசெயல்களைச்செய்யார்.*

2. Those who blush at the want of equity will not commit disgraceful acts through desire of the profit that may be gained.

௩. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

**பரி.**—(இ-ள்). பிறர்பால் வெளவிய பொருளால் தாம் எய்தும் † நிலையில்லாத இன்பத்தை விரும்பி அவர்மாட்டு அறனல்லாத செயல்களைச் செய்யார், அறத்தான் வரும் ‡ நிலையுடைய இன்பத்தைக் காதலிப்பவர், (எ-று).

*பாவத்தான் வருதலின் அப்பொழுதே அழியுமெனபார் 'சிற்றின்பம்' என்றார். $ மற்றையின்பமென்பது மற்றின்பமென நின்றது.*

*† நிலையில்லாத இன்பம் - விரைந்தழியும் இன்பம்.*

*‡ நிலையுடைய இன்பம் - பாவத்தால்வரும் பொருளா லுண்டாகும் இன்பம் விரைந்து அழிவதுபோலன்றித் தாமுள்ளவரைக்கு மனுபவிக்கும் (இம்மை) இன்பமும், " வையததுள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந், தெய்வத்துள் வைக்கப் படும் " என்று இல்வாழ்வானுக்குக் கூறியுள்ள மறுமைப் பயனாகிய சுவர்க்க இன்பமுமாமென்க. இதனுலிங்குக் கூறியுள்ள இன்பம் " ஆரா வியற்கையவா" நீங்குதலால் வெளிப்படும் எஞ்ஞான்றும் ஒரு நிலையாகவுள்ள (மோட்ச) வின்பமன்றென்றாயிற்று; என்னென்றால், இல்வாழ்வானுக்கு அவா (ஆசை) நீங்குத லில்லாமையினு லென்க. எனவே, துறவறவியல் அவாவறுத்த லதிகாரத்தில் "அவாவில்லார்க் கில்லாகுந் துன்பம்" "இன்ப மிடையரு தீண்டு மவாவென்னுந்,துன்பத்துட் டுன்பங் கெடின்" என்று கூறியிருத்தலினுல் துறவிகளுக்கே மோட்ச இன்பமுண்டாகு மென்பது தேற்றமாயிற்று.*

*தருமமார்க்கத்தால் வரும் பொருளைக் கொண்டனுபவிக்கு மின்பமும் சுவர்க்க வின்பமும் நிலையில்லாதனவா யிருக்க அவற்றை நிலையுடைய வின்பமென்று கூறுதல் எவ்வாறு பொருந்துமெனின், நீண்டநாளிருந்து மரணமடையுந் தேவர்களை அமரர்கள் (மரணமில்லாதவர்கள்) என்றும், பிறப்புடைய பிரமனை அஜன் (பிறப்பில்லாதவன்) என்றும் கூறுவதுபோல உபசாரமாக அவ்வின்பங்கள் நிலையுடையனவென்று கூறப்பட்டனவே யன்றிப் பிறிதன்றென்க.*

*$ மற்றென்னு மிடைச்சொல் சிற்றின்பமென்று குறிக்கப்பட்டதை யொழித்து அதற்கு (அச்சிற்றின்பத்திற்கு) இனமாகிய பேரின்பத்தைக் குறித்து நின்றமைபற்றி 'மற்றை யின்பமென்பது மற்றின்பமெனநின்றது' என்றுகூறப்பட்டது. படவே, மற்றையென்னு மிடைச்சொல் குறிக்கப்பட்*

தெளி.—(இ - ள்). மற்றின்பம் - (அறத்தின்பயனாக வரும்) நிலையுடையவின்பத்தை, வேண்டுபவர் - விரும்புவோர், சிற்றின்பம் - (பிறரிடத்து அபகரித்த பொருளினால்தாம் அடையும்) நிலையில்லாதவின்பத்தை, வெஃகி - விரும்பி, அறனல்ல - அறமல்லாத செயல்களை, செய்யார்-(அவரிடத்து) செய்யார், (எ - று).

பாவத்தின்பயனாகவருதலால் அப்பொழுதேஅழியுமென்பார் 'சிற்றின்பம்'என்றார். மற்றையின்பமென்பது மற்றின்பமெனக் குறைந்து நின்றது.

(க - து). பேரின்பத்தை யிச்சிப்பவர் சிற்றின்பத்தை யிச்சித்துத் தருமமல்லாதவற்றைச் செய்யார் என்பது.

3. Those who desire the higher pleasures of heaven will not act unjustly through desire of the trifling joy of this life.

ச. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

பரி.—(இ - ள்). யாம் வறிய மென்று கருதி அது தீர்தற் பொருட்டுப் பிறர் பொருளை விரும்புதல் செய்யார், ¶ ஐம்புலன்களையும் வென்ற குற்றமில்லாத காட்சியினை யுடையார், (எ - று)

டதையொழித்து அதற்கினமாயதைக்குறித்து நிற்கு மென்றுமியற்றென்க. தொல்காப்பியம்இடையியல்'மற்றைய தென்னுங் கிளவி தானே,சுட்டுநிலையொழிய வினங்குறித் தன்றே" என்னுஞ் சூத்திரத்தின் விசேடவுரையில் சேனாவரையர்"ஆடை கொணர்ந்தவழி யவ்வாடை வேண்டாதான் மற்றையது கொணு வென்னும்,அஃது அச்சுட்டிய ஆடை யொழித்து அதற்கினமாகிய பிறவாடை குறித்து நின்றவாறு கண்டு கொள்க"என்று கூறியதனாலும் இது நன்கு விளங்குமென்க. (இங்குச் சிற்றின்பம் பேரின்பம் என்று கூறப்பட்டனவற்றின்கணுள்ள சிறுமை பெருமை என்னும் விசேஷணங்கள் (அடைகள்) முறையே நிலையில்லாமையையும் நிலையுடைமையையுமுணர்த்தி நின்றன). இதனால் மற்று என்னு மிடைச்சொல்லும் மற்றையென்னு மிடைச்சொல்லும் வெவ்வேறென்பது பெற்றாம். நன்னூல் விருத்தியுரைகாரர் "மன் - மன்னை, கொன் - கொன்னை யென நின்றாற்போல மற்று மற்றையென இறுதிவிகாரமாய் நின்றதன்றி இதற்கென வேறுபொருளின்மையானும்" என்று கூறுவர்; இராமாநுஜ கவிராயர் தமது நன்னூல் விருத்தியுரையில் இதனை மறுத்திருக்கின்றனர்.

¶ ஐம்புலன்கள் - செவிமுதலிய வைந்திந்திரியங்கள். புலன்கள் இந்திரியங்களை யுணர்த்துதல் " ஆதலாற் புலன்களைந்து மடக்கரிது " என்றும் " வென்றவே புலன்களைந்தார்" என்றும், "கம்பித்து வந்த புலனைந்துங் கலக்க மாற" என்றும் வரும் பிரயோகங்களாலு முணரப்படுமென்க.

வெல்லுதல் ‡‡ பாவநெறிக்கட் செல்ல விடாமை. புலம்வென்றபுன் மையில் காட்சியவர்க்கு வறுமையின்மையின், வெஃகுதலும்இல்லையாயிற்று. புன்மையில் காட்சி - பொருள்களைத் $ திரிபின்றி யுணர்தல்.

தெளி.—(இ - ள்) புலம்வென்ற - ஐம்புலன்களையும் வென்ற, புன் மையில் - குற்றமில்லாத, காட்சியவர் - அறிவினையுடையவர், இலமென்று - (யாம்) வறியேமென்று (நினைத்து), வெஃகுதல்செய்யார் - (அவ்வறுமை நீங்குதற் பொருட்டுப் பிறர்பொருளை) விரும்புதல் செய்யார்,—(எ - று).

ஐம்புலன்களையும் வெல்லுதல்—அவற்றைப் பாவவழியிற் செல்ல விடாமை. புலம்வென்ற புன்மையில் காட்சியவர்க்குத் தரித்திரமில்லாமை யால், அவர் பிறர்பொருளை விரும்புதலும் இல்லையாயிற்று. புன்மையில் காட்சி - நித்திய வநித்தியப் பொருள்களை (இது நித்தியப்பொருள் இஃதநித் தியப் பொருளென) பிறழ்வில்லா தறிதல்.

(க - து). ஐம்புலன்களையும் வென்ற அறிவுடையவர் யாம் வறியோமென் றெண்ணிப் பிறர் பொருளை விரும்பார் என்பது.

4. The wise who have conquered their senses and are free from crime will not covet the things of others, saying "we are destitute."

ரு. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

பரி.—(இ - ள்). நுண்ணிதாய் எல்லா நூல்களினுஞ் சென்ற தம்ம றிவு என்ன பயத்ததாம், பொருளை விரும்பி யாவர் மாட்டும் அறிவோடு படாத செயல்களை அறிவுடையார் செய்வாராயின், (எ - று).

யார்மட்டும் * வெறிய செய்தலாவது தக்கார்மாட்டும் தகாதார்மாட் டும் இழிந்தனவும் கடியனவும் † முதலியன செய்தல். அறிவிற்குப் பயன் அவை செய்யாமையாகலின் 'அறிவென்னும்' என்றார்.

தெளி.—(இ - ள்). அஃகி - நுட்பமானதாகி, அகன்ற - (எல்லாநூல் களினும்) சென்ற, அறிவு-(தம்)அறிவானது, என்னும்-என்னபயனையுடை யதாம், வெஃகி - (பொருளை) விரும்பி, யார்மாட்டும் - யாவரிடத்தும், வெறிய - அறிவோடு பொருந்தாத செயல்களை, செயின் - (அறிவுடை யார்) செய்வாராயின், (எ - று).

‡‡ பாவநெறிக்கட் செல்லவிடாமை - அறமார்க்கத்திற்கு விரோதமா கச் சப்தாதி விஷயங்களில் செவியாதி யிந்திரியங்களைச் செலுத்தாமை.

$ திரிபின்றி யுணர்தல் - மாறுபாடின்றி யுள்ளவாறே யறிதல்.

* வெறிய - மயக்கத்தோடு கூடிய செயல்கள்.

† முதலியன என்றமையின், அரசதண்டனைக் குரிய செயல்கள் முதலியனவுங் கொள்க.

யாவரிடத்தும் அறிவோடு பொருந்தாத செயல்களைச் செய்தலாவது மேன்மக்களிடத்தும் கீழ்மக்களிடத்தும், இழிந்த செயல்களும் கொடிய செயல்களும் முதலாயினவற்றைச் செய்தல். அறிவிற்குப்பயன் அவ்விழிந்த செயல்கள் முதலாயின வற்றைச்செய்யாமையாகலின் 'அறிவென்னும்' என்றார்.

(க - து). நுண்ணிய கல்வி யறிவுடையவர் யாவரிடத்தும் பொருளை விரும்பி மயக்கத்தால் கொடுந் தொழில்களைச் செய்வாராயின் அவர் கல்வியறிவு பயனுடையதன்றாம் என்பது.

5. What is the advantage of extensive and accurate know-ledge if a man through covetousness act senselessly towards all.

---

கஎ. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

பரி.—(இ - ள்). ‡ அருளாகிய அறத்தைவிரும்பி அதற்கு வழியாகிய இல்லறத்தின்கண் நின்றவன் பிறர்பொருளை அவாவி அதனை வருவிக்குந் குற்றநெறிகளை எண்ணக்கெடும், (எ - று).

இல்லறநெறியால் அறிவு முதிர்ந்துழியல்லது துறக்கப்படாமையின், அதனைத் + துறவறத்திற்கு ஆறு என்றார். கெடுதல் § இரண்டறமுஞ் சேரவிழத்தல். சூழ்ந்த துணையானே கெடுமெனவே, செய்தாற் கெடுதல் சொல்லாமையே பெறப்பட்டது.

தெளி.—(இ - ள்). அருள் வெஃகி - அருளாகிய அறத்தைவிரும்பி, ஆற்றின்கண்-(அவ்வறத்திற்கு) வழியாகிய இல்லறத்தின்கண், நின்றான்-தங்கினவன், பொருள்வெஃகி - (பிறர்) பொருளை விரும்பி, பொல்லாத - (அப்பொருளை வருவிக்கும்) குற்றவழிகளை, சூழ - எண்ண, கெடும் - கெடுவான், (எ - று).

‡ இல்லறத்திற்கு அன்புடைமை சிறந்திருத்தல் போன்று துறவறத்திற்கு அருளுடைமை சிறந்திருத்தல்பற்றித் துறவறத்தை 'அருளாகிய அறத்தை' என்று கூறினர்.

+ துறவறத்தை யடைதற்கு இல்லறம் வழியாயுள்ள தென்பது சூதசங்கிதை பிரசாதக்கிரம முரைத்த வத்தியாயத்தில் "நித்தியமை மித்தியகன் மஙகணிட்கா மியமாகப், பத்தியுறச் செய்வதனாற் பாவமெலா நாசமுறு, மொத்தியன்மற் றதனானே யொழியாம லுறுசித்த,சுத்தியுள தாமென்று சொல்லுமான் மறையனைத்தும்." "பின்னருருத் திரதேவன் பிறங்குபிர சாதத்தா, லுன்னரிய சமுசார துள்ளதோ டங்தெரிந்து, மன்னவயிராக்கியமு மருவியுறு கருமங்க, டன்னமுமிலாதாய சன்னியா சங்கிடைக்கும்." என்றுகூறி யிருப்பதனாலும் நன்கு விளங்கும்.

§ இரண்டறமும் - இல்லறமும் துறவறமும்

இல்லறவழியால் அறிவு முதிர்ந்த விடத்தல்லது துறத்தல் கூடாதா கையால், அவ்வில்லறத்தினைத் துறவறத்திற்கு ஆறு என்றார். கெடுதல் - இரண்டறங்களையும் ஒருமிக்க விழத்தல். பொல்லாதவற்றை எண்ணியவளவாலே கெடுமெனவே, செய்தாற் கெடுதல் சொல்லாமலே பெறப்பட்டது.

(க - து). அருளை விரும்பி இல்லறத்தில் நின்றவன் பிறர் பொருளை விரும்பிக் குற்றவழியை நினைக்கக் கெடுவான் என்பது

6. He who through desire of the favour of God abides in the path in which it may be obtained, if he covet the property of others and think of evil methods to obtain it he will perish.

எ. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

பரி.—(இ - ள்). பிறர்பொருளை அவாவிக்கொண்டு அதனா லாகின்ற ஆக்கத்தை விரும்பாதொழிக, பின் அனுபவிக்குங்கால் அவ்வாக்கத்தின் பயன் நன்றாதலில்லை ஆகலான், (எ - று).

* விளையென்பது முதனிலைத் தொழிற் பெயர். இவை யேழுபாட்டானும் வெஃகுதலின் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). வெஃகி - (பிறர்பொருளை) விரும்பிக் கொண்டு, ஆம் - (அப்பொருளால்) உண்டாகின்ற, ஆக்கம் - பெருக்கத்தை, வேண்டற்க - வேண்டாதிருக்கக்கடவன், விளைவயின் - (பின்) அனுபவிக்கும் போது,பயன் - (அப்பெருக்கத்தின்) பயன், மாண்டற்கரிதாம் - நன்றாகுதலில்லை (ஆதலால்)—(எ - று).

விளை - முதனிலைத்தொழிற்பெயர். பெருக்கம் - மேன்மேலுயருதல். இவ்வேழு பாட்டாலும் பிறர்பொருளை விரும்புதலின் குற்றஞ் சொல்லப் பட்டது.

(க - து). பிறர்பொருளை யபகரித் தனுபவிக்கின்றவர்கட்கு மேன்மையுண்டாவ தில்லை என்பது.

* விளைப்பகுதியை முதனிலைத்தொழிற்பெயராகக்கொள்ளும் மரபுபற்றி 'விளையென்பது முதனிலை (பகுதி)த் தொழிற் பெயர்' என்று கூறப்பட்டது. விளைப்பகுதியை முதனிலைத் தொழிற்பெயரென்று கொள்ளுதல் பிரயோகவிவேகம் "முன்னிலையேவல்" என்னுஞ் செய்யுளினுரையில் "நடவாமடி, என்று நன்னூலிற்கூறிய முதனிலைத் தொழிற் பெயர்கள் தாதுவெனவும் பிரகிருதி எனவும் பெயர்பெறும்" என்று கூறியவாற்றானுமறிக. இலக்கணக் கொத்து நூலார் வினைப்பகுதியை முதனிலைத்தனிவினைப் பெயரென்பர். வினைப்பெயரெனினும் தொழிற் பெயரெனினு மொக்கும். விளைவயின் என்பது எதிர்கால வினைத்தொகைநிலைத் தொடர்மொழி.

Desire not the gain of covetousness. In the enjoyment of its fruits there is no glory.

அ. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

பரி.—(இ-ள்). சுருங்கன் மாலைத்தாகிய செல்வத்திற்குச் சுருங்காமைக் காரணம் யாதென்று ஒருவன் ஆராயின், அது பிறன் வேண்டுங் கைப்பொருளைத் தான்வேண்டாமையாம், (எ-று).

‡ அஃகாமை-ஆகுபெயர். $ வெஃகாதான் செல்வம் அஃகாதென்பதாயிற்று.

தெளி.— (இ-ள்). செல்வத்திற்கு - (குறைந்துபோந்தன்மையுடையதாகிய) செல்வத்திற்கு, அஃகாமை - குறையாதிருத்தற் காரணம், யாதெனின் - எதுவென்று (ஒருவன்) ஆராயின் (அக்காரணம்), பிறன் —, வேண்டும் - விரும்புகின்ற, கைப்பொருள் - கைப்பொருளை, வெஃகாமை - (தான்) வேண்டாமையாம், (எ-று).

அஃகாமை அஃகாமையின் காரணத்தை யுணர்த்துதலால் ஆகுபெயர். பிறன் பொருளை விரும்பாதவனது செல்வம் குறையாதென்பதாயிற்று.

(க - து). செல்வங் குறையாமைக்குக் காரணம் பிறன்பொருளை விரும்பா திருத்தலாம் என்பது.

8. Do you ask "what is the indestructibility of wealth?" It is to be free from coveting the possessions of others.

கூ. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

பரி —(இ-ள்). இஃது அறனென்றறிந்து பிறர்பொருளை விரும்பாத அறிவுடையாரைத் திருமகள் தான் அடைதற்காங் கூற்றினை அறிந்து அக்கூற்றனே சென்றடையும், (எ-று).

அடைதற்காங்கூறு - காலமும், இடனும், ‖ செவ்வியு முதலாயின. இவையிரண்டு பாட்டானும் வெஃகாமையின் குணங் கூறப்பட்டது.

தெளி —(இ-ள்). அறனறிந்து - (இஃது) அறமென்றறிந்து, வெஃகா (பிறர் பொருளை) விரும்பாத, அறிவுடையார் - அறிவுடையவரை,

‡ அஃகாமையென்னு மெதிர்மறைத் தொழிற்பெயர் அஃகாமை (சுருங்காமை)க்குக் காரணத்தை யுணர்த்துதலால் காரியவாகு பெயராம்.

$ வெஃகாதான் - வினையாலணையும்பெயர்.

‖ செவ்வி - அக (மன) மகிழ்ச்சியும் முகமலர்ச்சியும் இனிய சொல்லுமுடையவரா யிருக்குஞ் சமயம்.

திரு - திருமகள், திறனறிந்து - (தான்சேர்தற்காந்) திறத்தை யறிந்து, ஆங்கே - அத்திறத்தினாலே, சேரும்-சென்றடைவாள், (எ-று).

அடைதற்காந்திறம் - காலமும், இடனும், சமயமும் முதலாயின. திருமகளென்றதீண்டுப் பெருஞ்செல்வத்தை. இவையிரண்டு பாட்டாலும் பிறன் பொருளை விரும்பாமையின் குணஞ் சொல்லப்பட்டது.

(க-து). பிறன்பொருளை விருபபாத அறிவுடையாரை இலக்குமி தானே சென்றடைவாள் என்பது.

9. Lakshmi knowing the manner in which she may approach will immediately come to those wise men who knowing that it is virtue,covet not the property of others.

கo. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

பரி.—(இ-ள்). பின் விளைவதறியாது ஒருவன்பிறன்பொருளை வெளவக்கருதின், அக்கருத்து அவனுக்கு இறுதியைப்பயக்கும்: அப்பொருளை வேண்டாமையென்னுஞ் செல்வம் வெற்றியைப் பயக்கும், (எ - று).

பகையும் பாவமும் பெருக்கலின் 'இறலீனும்' என்றும்,அப்பொருளை வேண்டி யுழல்வோர் யாவரையுங் கீழ்ப்படுத்தலின் 'விறலீனும்' என்றுங் கூறினார். * செருக்கு - ஆகுபெயர் இதனால் ‡ அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன.

தெளி.—(இ-ள்). (ஒருவன்) எண்ணாது - (பின்விளைவதை) அறியாமல், வெஃகின் - (பிறன்பொருளை) அபகரிக்கக் கருதுவானாயின், (அக்கருத்து), இறல் - அழிவை, ஈனும் - (அவனுக்குத்)தரும், வேண்டாமை யென்னுஞ்செருக்கு - (அப்பொருளை) விரும்பாமையென்னுஞ் செல்வமானது, விறல் - வெற்றியை, ஈனும் - தரும், (எ-று).

(பிறன் பொருளைவிரும்புதல்) பகையையும் பாவத்தையும் பெருகச் செய்தலால் 'இறலீனும்' என்றும், (வேண்டாமை யென்னுஞ்செருக்கு) அப்பொருளை விரும்பி யலைவோர்கள் யாவரையுங் கீழாகச் செய்தலால் 'விறலீனும்' என்றுஞ்சொல்லினார். செருக்கு - செருக்கின் காரணமாய செல்வத்தை யுணர்த்துதலால் ஆகுபெயர். இதனால் அக் குற்றமுங் குணமுஞ்சேர்த்துச் சொல்லப்பட்டன.

(க-து). பிறன்பொருளை விரும்புகின்றவனுக் கழிவும் விரும்பாதவனுக்கு வெற்றியு முண்டாம் என்பது.

---

* செருக்கென்னுங் காரியப் பெயர் செருக்கை (கர்வத்தை) யுண்டாக்குவதற்குக் காரணமாய செல்வத்தையுணர்த்துதலால் காரியவாகு பெயராம்.

‡ அவ்விருமையும் ஒருங்குகூறப்பட்டன—வெஃகுதலின் குற்றமும் வெஃகாமையின் குணமும் ஒருமிக்கச் சொல்லப்பட்டன.

10. Without regard of consequences to covet the wealth of another will bring destruction. That greatness of mind which covets not will give victory.

பதினைந்தாவது அதிகாரம்.

## புறங்கூறாமை.—*Against Backbiting.*

பரி.—அஃதாவது காணாதவழிப் பிறரை யிகழ்ந்துரையாமை. மொழிக்குற்றம் மனக்குற்றம் அடியாகவருதலான், இஃது அழுக்காறாமை வெஃகாமைகளின்பின் வைக்கப்பட்டது.

*தெளி.—அஃதாவது காணாதவிடத்துப் பிறரை இகழ்ந்துபேசாமையாம். வாக்கின்குற்றம் மனக்குற்றத்தின் வழியாகவருதலால் இஃது (புறங்கூறாமை) அழுக்காறாமை வெஃகாமைகளின்பின் வைக்கப்பட்டது.*

க. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

பரி.—ஒருவன் அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங்களைச் செயயுமாயினும், பிறனைப் புறங்கூறனென் றுலகத்தாராற் சொல்லப்படுதல் நன்று, (எ-று).

*புறங்கூறாமை $ அக்குற்றங்களான் இழிக்கப்படாது ¶ மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். இதனால் அவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்). *ஒருவன்—அறங்கூறான் - அறமென்று சொல்லுவதுஞ் செயயாது, அல்ல-பாவஙகளை, செயினும் - செய்வானானாலும், புறஙகூறான - (பிறனைக) காணாவிடத்து இகழ்ந்துபேசான், என்றல் - என்று (உலகத்தாரால்) சொல்லப்படுதல், இனிது - நல்லது, (எ-று).*

*புறஙகூறாமை அக்குற்றங்களா லிழித்துக் கூறப்படாமல் மேற்பட்டு விளங்குமென்பதாம். இதனால் (புறங்கூறாமையென்னும்) அவ்வறத்தினது நன்மை சொல்லப்பட்டது.*

*(க-து). ஒருவன் தருமமல்லாதவற்றைச் செய்தாலும் புறங்கூறுதல் இலனாயின் அதனாலவன் மேம்பட்டு விளங்குவான் என்பது.*

---

*$ அக்குற்றங்கள் - அற (தரும) மென்பதை (வாயினாற்) சொல்லுவதுமின்றிச்செய்த தீவினைகளாலுண்டாகிய குற்றங்கள்.*

*¶ புறஙகூறாதவன் உலகத்தவரால் பிறகுற்றங்களா லிழித்துக்கூறப்படாது மேம்பட்டுவிளங்குவானென்பதாம.*

1. Though one do not even speak of virtue and live in sin, it will be well if it be said of him "he does not backbite."

உ. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

பரி.—(இ-ள்). அறமென்பதோன்றில்லையென அழித்துச்சொல்லி அதன்மேற் பாவங்களைச் செய்தலினும் தீமையுடைத்து; ஒருவனைக்காணாதவழி இகழ்ந்துரையால் அழித்துச்சொல்லிக் கண்டவழி அவனோடு † பொய்த்து நகுதல், (எ-று).

‡ உறழ்ச்சி நிரனிறைவகையாற் கொள்க. அழித்தல் $ ஒளியைக் கோறல்.

தெளி.—(இ-ள்). அறனழீஇ-அறமென்பது ஒன்றில்லையென் றழித்துச்சொல்லி, அல்லவை செய்தலின் - (அதன்மேற்) பாவங்களைச் செய்தலினும், தீதே - தீமையுடையதாம், புறனழீஇ - ஒருவனைக்காணாதவிடத்துப் பழிச்சொற்களால் குறைவாகப்பேசி, பொய்த்துநகை - (கண்டவிடத்து அவனோடு) பொய்யாகமுகமலர்ந்து பேசுதல், (எ-று).

அறத்தை யழித்தலினும் புறங்கூறுதலும், அல்லவற்றைச் செய்தலினும் பொய்த்து நகுதலும் தீயனவாமென் றறிக. புறனழித்தல்-புறங்கூறி ஒளியைக் கெடுத்தல்.

(க-து). ஒருவன் பிறனைக்காணாதவிடத்திகழ்ந்துபேசிக் கண்டவிடத்துப் புகழ்ந்து பேசுதல் தருமத்தையழித்து அதருமத்தைச் செய்தலினுந் தீயதாம் என்பது.

2. Deceitfully to smile in another's presence after having reviled him to his destruction behind his back is a greater evil than the commission of every other sin and the destruction of every virtue.

---

† பொய்த்துநகுதல் - பொய்யாக நகைத்து வெளியன்பு பாராட்டுதல்.

‡ அறனென்ப தொன்றில்லை யென்றழித்துச் சொல்லுதலினும் ஒருவனைக் காணாதவழி யிகழ்ந்துரையால் அழித்துச் சொல்லல் தீது எனவும் அதன்மேற் பாவங்களைச்செய்தலினும் கண்டவழி யவனோடு பொய்த்துநகுதல் தீதுஎனவும் கொள்க. செய்தலின் என்பதன்கணுள்ள இன்னுருபு காட்டிலும் என்னும் உறழ்ச்சிப்பொருளில் வந்தது. அறனழித்தலினும் புறனழித்தல் தீது அல்லவை செய்தலினும் பொய்த்து நகுதல் தீது என்று வந்தமையின் இச்செய்யுள் முறைநிரனிறைப் பொருள்கோள்.

$ ஒளியைக்கோறல் - மிக்குத்தோன்றும் மதிப்பைக் கெடுத்தல். ஒளியென்பதற்குப் பொருள் "ஒளியொருவற் குள்ள வெறுக்கை" என்னுங் குறளின் விசேடவுரையில் "ஒளி தானுளனாயகாலத்து மிக்குத்தோன்றுதலுடைமை" என்றெழுதப்பட்டிருக்கின்றமை காண்க.

௩. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

பரி.—(இ-ள்). பிறனைக் காணாதவழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற்கினியனாகப் பொய்த்து ஒருவன் உயிர்வாழ்தலின், அதுசெய்யாது சாதல் அவனுக்கு அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைக் கொடுக்கும், (எ-று).

†† பின் புறங்கூறிப் பொய்த்தலொழிதலின், 'சாதல்' 'ஆக்கந்தரும்' என்றார். ஆக்கம் ¶ அஃதொழிந்தார் மறுமைக்கண் எய்தும் பயன். 0 அறம் - ஆகுபெயர். () தருமென்பது இடவழுவமைதி.

தெளி.—(இ-ள்). புறங்கூறி - பிறனைக்காணாத விடத்து இகழ்ந்து பேசி, பொய்த்து - (கண்டவிடத்து அவனுக்கினியவனாகப்) பொய்யாகச் பேசி, உயிர்வாழ்தலின் - (ஒருவன்) உயிர் வாழ்தலினும், சாதல் - (அது செய்யாமல்) உயிர்விடுதல், (அவனுக்கு), அறங்கூறும்-தரும சாஸ்திரங்கள் சொல்லும், ஆக்கம்-பயனை, தரும்-கொடுக்கும், (எ-று).

உயிர்விட்டபின் புறங்கூறிப் பொய்த்தலாகிய பாவம் நீங்கலால், 'சாதல்' 'ஆக்கந்தரும்' என்றார். ஆக்கம்-புறங் கூறுதலாகிய அப்பாவஞ் செய்யாதொழிந்தவர் மறுமையில் அடையும் பயன். அறம்- அறத்தைக்கூறும் நூலையுணர்த்துதலால் ஆகுபெயர். தருமென்பது படர்க்கையோடியைந்து வந்தமையி னிடவழுவமைதியாம்.

(க-து). ஒருவன் பிறனைக் காணாதவிடத்திகழ்ந்தும் கண்டவிடத்திற் புகழ்ந்தும் பேசி யுயிர் வாழ்தலினும் இறத்தலே அவனுக்கு நன்மையைத்தருவதாம் என்பது.

3. Death rather than life will confer upon the deceitful back-biter the profit which the treatises on virtue point out.

௪. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

---

†† பின் புறங்கூறிப் பொய்த்த லொழிதலின்-மரணமடைந்த பின்னர்ப் புறங்கூறிக் கபடமா யொழுகுதல் நீங்குதலால்.

¶ அஃதொழிந்தார் - புறங்கூறுதலை விட்டவர்.

0 அறமென்னும் காரியப்பெயர் அதனை யுணர்த்துதற்குக் கருவியாகிய நூலிற்காதலின் காரியவாகுபெயராம்.

() தன்மை முன்னிலை யிடத்திற்குரிய தருமென்னுஞ் சொல் சாதல் என்னும் படர்க்கைச்சொல்லோ டியைந்துவந்தமையின் இடவழுவமைதியாயிற்று.

பரி.—(இ - ள்). ஒருவன் எதிரே நின்று கண்ணோட்டமறச் சொன்னாயினும், அவனெதிர் இன்றிப் பின்வருங் குற்றத்தை நோக்காத சொல்லைச் சொல்லாதொழிக, (எ-று).

*பின் - ஆகுபெயர். † சொல்வான் தொழில் சொன்மே லேற்றப் பட்டது. இவை மூன்றுபாட்டானும் புறங்கூற்றினது கொடுமை கூறப் பட்டது.*

தெளி.—(இ-ள்). (ஒருவன்) *கண்நின்று - எதிரே நின்று, கண்ணற - கண்ணோட்டமற, சொல்லினும் - சொன்னாயினும், முன் இன்று - (அவன்) எதிரில்லாமல், பின்னோக்காச் சொல் - பின்வருங் குற்றத்தை நோக்காத சொல்லை, சொல்லற்க - சொல்லாதிருக்கக் கடவன்,* (எ-று).

*பின் என்பது பின்வருங் குற்றத்தை யுணர்த்துதலால் ஆகுபெயர். சொல்வானது நோக்காத தொழிலைச் சொல்லின்மேலேற்றி 'நோக்காச் சொல்' என்று கூறப்பட்டது. கண்ணோட்டம்-தாட்சணியம். நோக்காமை சிந்தித்துணராமை. இவை மூன்றுபாட்டாலும் புறங்கூறுதலின்கொடுமை சொல்லப்பட்டது.*

*(க-து). ஒருவன் மற்றொருவனை முன்னிகழினும் பின்னிகழா திருக்கக்கடவன் என்பது.*

4. Though you speak without kindness before another's face, speak not behind his back words which regard not the subsequent guilt.

௫. † அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

பரி:—(இ-ள்). புறஞ்சொல்லுவானொருவன் அறனை நன்றென்று சொல்லினும், அது தன் மனத்தானாய்ச் சொல்லுகின்றனல்ல னென்

---

* *பின் என்னும் காலப்பெயர் பிற்காலத்தில் வரும் குற்றத்தை யுணர்த்துதலால் காலவாகு பெயராம்.*

† *பின்வருங் குற்றத்தை நோக்காது புறங்கூறுவானது நோக்காத தொழிலை அவனது புறங்கூற்றுச் சொல்லின்மே லேற்றி 'பின்னோக்காச் சொல்' என்றார். [பின்வருங் குற்றத்தை நோக்காதவனது சொல் பின்னோக்காச்சொல் என்றுரைக்கப்பட்ட தென்பது]. முன்னின்று பின்னோக் காச்சொல் என்பதனைப் பிரயோகவிவேகநூலார் "ஃதொரு பொருளின் வினை மற்றோர் பொருளின் வினையானது" என்று இலக்கணை கூறுமிடத்துக் கூறினர்.*

† *அறஞ்சொல்லு நெஞ்சத்தான் என்பதைப் பிரயோக விவேக நூலார் நெஞ்சோ டறஞ் சொல்லுவானென விகுதி பிரித்துக் கூட்டுவர்.*

பது அவன் புறஞ் சொல்லுதற்குக் காரணமான ‡ மனப்புன்மையானே அறியப்படும், (எ-று).

¶ மனந்தீதாகலின், அச்சொல் கொள்ளப்படா தென்பதாம்.

தெளி:—(இ-ள்). (புறங்கூறுவா னொருவன் அறத்தை நல்ல தென்று சொன்னாலும்) அறம் - (அந்த) அறத்தை, நெஞ்சத்தான் - (தன்) மனத்தின் வழியனாய், சொல்லும்-கூறுகிறான், அன்மை(யன்)-அல்லனென் பது, புறஞ்சொல்லும் - (அவன்) புறங்கூறுதற்குக் காரணமாகிய, புன்மையால் - (மனப்) புன்மையாலே, காணப்படும் - (அறிவுடையோரால்) அறியப்படும், (எ - று).

மனம் தீதாயிருக்கையால், (அறம் நன்றென்று சொல்லுகிற) அச்சொல் அங்கீகரிக்கப்படா தென்பதாம்.

(க - து). தருமத்தை நன்றென்று கூறுபவனது மனத்தினிடத்துத் தருமமில்லாமை அவன் புறங்கூறுதலா லறியப்படும்.

5. The emptiness of that man's mind who merely praises virtue will be seen from the meanness of reviling another behind his back.

---

சூ. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

பரி.—(இ-ள்). பிறனொருவன் பழியை அவன்புறத்துக் கூறுமவன் தன்பழி பலவற்றுள்ளும் உளையுந்திற முடையவற்றைத் தெரிந்து அவனாற் கூறப்படும், (எ-று).

$ புறத்தென்பது அதிகாரத்தாற் பெற்றாம். இது வருகின்றவற்றிற்கு மொக்கும். () திறன் - ஆகுபெயர். தன்னைப் புறங்கூறியவாறு கேட்

---

‡ மனப்புன்மை- மனக்குற்றம்.

¶ புறங்கூறுவான் அற (தரும)ங் கூறினாலும் அவன்மனம் புன்மையையுடையதாயிருத்தலின், அவன் கூறுஞ் சொல்லை அறிவுடையவர் ஏற்றுக் கொள்ளுதலில்லை யென்பது.

$ புறத்து என்பது புறங்கூறுமை யென்னு மதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை வடநூலார் அநுஷங்க மென்பர்.

() திறன் என்னும் பண்புப்பெயர் திறத்தை(வலியை)யுடைய பழிச்சொற்களை யுணர்த்துதலால் பண்பாகு பெயராம்.

டான் அக்கூறியாற்கு அவ்வளவன்றி ¶ அவனிறந்துபட்டுளையுந் திறத்தனவாகிய பழிகளை நாடி எதிரே கூறுமாகலின் ' திறன்றெரிந்து கூறப்படும்' என்றார்.

தெளி:—(இ - ள்). பிறன்பழி - பிற (னொருவ) னது பழியை, கூறுவான் - (அவனைக்காணாதவிடத்துச்) சொல்லுவோன், தன்பழியுள்ளும் - தனது பழி (பல) வற்றுள்ளும், திறன் - (வருந்தும்) விதமுடையவற்றை, தெரிந்து - ஆராய்ந்து, கூறப்படும் - (அவனால்) சொல்லப்படுவான்,(எ-று).

காணாதவிடத்தென்பது அதிகாரத்தாற் பெறப்பட்டது. இது பின் வருகின்றனவற்றிற்கும் பொருந்தும். திறன்-திறமுடையவற்றையுணர்த்துதலால் ஆகுபெயர். தன்னைக் காணாதவிடத்துப் பிறன்பழித்துச் சொன்ன விதத்தைக்கேட்டவன் அப்பழியைச் சொன்னவனுக்கு(அவன் கூறிய) அவ்வளவல்லாமல் அவன் மிகவுந்துக்கமடைந்து வருந்தும் வகையனவாகிய பழிகளை ஆராய்ந்து எதிரே சொல்லுவானாதலால் ' திறன்றெரிந்து கூறப்படும்' என்றார்.

(க - து). பிறனது பழியைக்காணாதவிடத்துச்சொல்லுவோனது பழி சொல்லப் பட்டவனால் சொன்னவன் வருந்துமாறு எதிரே நின்று விரித்துச்சொல்லப்படும் என்பது.

6. The character of the faults of that man who publishes abroad the faults of others will be sought out and published.

எ. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர்.

பரி.—(இ - ள்). தம்மை விட்டு நீங்குமாறறப் புறங்கூறித் தங்கேளிரையும் பிரியப்பண்ணுவர்; கூடி மகிழுமாறு இனியசொற்களைச் சொல்லி அயலாரோடு நட்பாடலை யறியாதார், (எ - று).

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. கேளிரையும் பிரிப்ப † ரென்ற கருத்தான், அயலாரோடு மென்பது வருவித்துரைக்கப்பட்டது. அறிதல் ‡ தமக்குறுதியென் றறிதல். § "கடியு மிடந்தேற்றாள் சோர்ந்த

---

¶ அவனிறந்துபட்டுளையுந்திறத்தனவாகிய பழிகளை என்பதற்கு,அவன் மிகுதியு மடைந்து வருந்தும் வகையனவான பழிச்சொற்களை என்று கொள்க. அவனிறந்துபட் டென்பதற்குப்பிரதியாக அவன் றிறத்துப்பட்டு எனவும் அவனிறத்துப்(மார்பில்)பட்டு எனவும் பாடபேத முண்டு.

† என்றகருத்தான் என்பதற்கு! என்னுங்கருத்தான் என்றும் பாடமுண்டு.

‡ தமக்குறுதியென் றறிதல் - தமக்கு நன்மையைத் தருவதென்றுணர்தல்.

§ கலித்தொகை மருதக்கலி, உஎ. இதன்பொருள் (ஒருத்தி வண்டுகளை) ஓட்டுமிட மறியாதவளாகிக் கைசோர்ந்தாள் என்பது.

னன்கை" என்புழிப்போலத் ¶ தேற்றுமை தன்வினையாய் நின்றது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவரென்பது கருத்து.

தெளி:—(இ - ள்). நகச்சொல்லி - (கூடி) மகிழும்படி (இனியசொற்களைச்) சொல்லி, நட்பாடல் - (அயலாரோடு) சிநேகஞ்செய்தலை, தேற்றாதவர் - (தமக்குறுதியென்று) அறியாதவர், பகச்சொல்லி - (தம்மை விட்டு) நீங்கும் வழியாகப் புறங்கூறி, கேளிர் - (தமது) சுற்றத்தாரையும், பிரிப்பர் - பிரியப்பண்ணுவர், (எ - று).

கேளிரும் என்ற உயர்வு சிறப்பும்மை செய்யுள்விகாரத்தால்தொக்கது. கேளிரையும் பிரிப்பரென்றகருத்தால் அயலாரோடுமென்பது வருவித்துச சொல்லப்பட்டது. தேற்றுமையென்பது தன்வினைப்பொருளில் வந்தது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவாரென்பது கருத்து.

(க-து). பிறர்தம்மோடுகூடிமகிழும்படி யின்சொற்களைச்சொல்லியவரோடு சிநேகஞ்செய்தலை யறியாதவர்கள் புறங்கூறியுறவினரையும் பிரிப்பர் என்பது.

7. Those who know not with laughter-producing speech to live in friendship will estrange even their relatvies, by backbiting.

அ. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு.

பரி:—(இ - ள்). தம்மொடு செறிந்தாரது குற்றத்தையும் அவர் புறத்துத் தூற்றும் இயல்பினையுடையார், அயலார்மாட்டுச் செய்வது யாது கொல்லோ, (எ - று).

தூற்றுதல் - பலரும் அறியப் பரப்புதல். அதனிற் கொடியது பிறிதொன்று காணாமையின் 'என்னைகொல்' என்றார். செய்வதென்பது சொல்லெச்சம். என்னர் கொலென்று பாடமோதி, எவ்வியல்பினராவரென்றுரைப்பாருமுளர்.

---

¶ தேற்றுதவர் என்பதன்கணுள்ள தன்வினை பிறவினை யிரண்டிற்கும்பொதுவான தேற்றுமை யென்னும் எதிர்மறை வினையானது இங்கே தன்வினையாய்நின்றது."தன்வினை பிறவினை யிவ்விரு வினைப்பொது" என்னுமடிக்கு உதாரணமாக இலக்கணக் கொத்துநூலார் "பிரிவர், ஆடுவர்; பிரிப்பர், ஆட்டுவர் இவை தன்வினை பிறவினை. 'தேற்றுவொழுக்க மொருவன் கணுண்டாயின்,' 'நட்பாடறேற்றுதவர்,' எ-ம், அவனைத்தேற்றிக் கெடுத்தான்; அவளைத்தேற்றிப் பிரிந்தான். எ-ம் இவை சொல்லொன்றே தன்வினையும் பிறவினையுமாயின. 'தொல்காப்பியனெனத் தன்பெயர்தோற்றி;' 'பொருண்முதலாறினுந்தோற்றி;''தொடர்ந்து தொழிலல காலந்தோற்று;' இவன் வெளுத்தான் இவை போல்வனவுமது" என்று கூறினர்.

தெளி:—(இ - ள்). துன்னியார் - (தம்மோடு) நெருங்கினவரது, குற்றமும் - குற்றத்தையும், தூற்றும் - (அவரைக்காணாதவிடத்துத்) தூற்றும், மரபினார் - இயல்பினை யுடையவர், ஏதிலார்மாட்டு - அயலாரிடத்துச் (செய்வது), என்னைகொல் - யாதோ, (எ - று).

தூற்றுதல் - பலரும் அறிய விரித்துச் சொல்லுதல். அத்தூற்றுதலினுங் கொடிய செயல் வேறொன்று காணாமையால் 'என்னைகொல்' என்றார். செய்வதென்பது குறைந்துநின்றமையின் சொல்லெச்சமாம். என்னைகொல் என்பதற்குப் பிரதியாக என்னர்கொல்எனப்பாடங்கூறி அதற்குப்பொருள் எத்தன்மையினை யுடையவராவர் என்று கூறுவாருமுண்டு.

(க - து). உறவினரது குற்றத்தையுந் தூற்று மியல்பினை யுடையார் அயலாரது குற்றத்தைத் தூற்றுதிரார் என்பது.

8. What will those not do to strangers whose nature leads them to publish abroad the faults of their intimate friends ?

கூ. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

பரி:—(இ - ள்). பிறர் நீங்கினவளவு பார்த்து அவர் பழிப்புரையை உரைப்பானது உடற்பாரத்தை, நிலம் † இக்கொடியது பொறுத்தலே எனக்கறமாவதெனக் கருதிப் பொறுக்கின்றதுபோலும், (எ-று).

எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற்கரிதென்னுங் கருத்தால் 'அறனோக்கியாற்றுங்கொல்' என்றார். இவையைந்து பாட்டானும் புறங்கூறுவார்க் கெய்துங் குற்றங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). புறன்நோக்கி - பிறர்நீங்கினவளவு பார்த்து, புன்சொல் - (அவரது) பழிப்புசொல்லை, உரைப்பான் - சொல்லுவோனது, பொறை - (உடற்) பாரத்தை, வையம் - பூமியானது, அறன்நோக்கி- (இக்கொடியதைச் சுமத்தலே எனக்கு) அறமாவதென்றுநினைத்து, ஆற்றுங்கொல் - சுமக்கின்றது போலும், (எ - று).

(பூமிக்கு மலை, கடல், ஆறு முதலிய) எல்லாவற்றையும் சுமத்தல் சுபாவமாயினும் இது (புறங்கூறுவானது உடற்பாரம்) சுமத்தற்கருமையானதென்னுங் கருத்தால்(வையம்) 'அறனோக்கி யாற்றுங்கொல்' என்றார். இவை யைந்துபாட்டாலும் புறங்கூறுவாருக் குண்டாகுங் குற்றம் சொல்லப் பட்டது.

(க.- து). பூமி புறங் கூறுவோனது உடற் பாரத்தைத் தருமத்திற் கஞ்சிச் சுமக்கின்றதுபோலும் என்பது.

9. The world through charity supports the weight of those who, observing that others are absent, speak reproachful words.

---

† மிகக் கொடியது என்றும் பாடமுண்டு.

௧௦. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

பரி:—(இ - ள்). ஏதிலாரைப் புறங்கூறுவார் அதற்கு அவர்குற்றங் காணுமாறுபோலப் புறங்கூறலாகிய தங்குற்றத்தையுங் காணவல்லாராயின், அவர் நிலைபேறுடைய வுயிர்க்கு வருவதோரு துன்பமுண்டோ.

நடுவுநின்று ஒப்பக்காண்ட லருமைநோக்கிக் 'காண்கிற்பின்' என்றும், கண்டவழி யொழிதலிற் பாவம் இன்றாம்; ஆகவே, வரும் பிறவிகளினுந் துன்பம் இல்லை யென்பது நோக்கி 'உயிர்க்குத் தீதுண்டோ' என்றுங் கூறினார். இதனாற் புறங்கூற்றொழிதற்குபாயங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). (அயலாரைப் புறங்கூறுவோர் அதுசெய்தற்கு) ஏதிலார்குற்றம்போல் - (அந்த) அயலாரது குற்றத்தைக்காணுமாறுபோல, தங்குற்றம் - (புறங்கூறுதலாகிய) தமது குற்றத்தையும், காண்கிற்பின்- காணவல்லவராயின், மன்னுமுயிர்க்கு - (அவரது) நிலைபெறுதலுடைய உயிர்க்கு, தீது - (வருவது ஒரு) துன்பம், உண்டோ - உண்டாகுமோ, (உண்டாகாதென்றபடி) (எ - று).

(ஏதிலார் குற்றம்போலத் தமது குற்றத்தையும்) நடுவுநிலைமையாக விருந்து ஒப்பக் காணுதலாகிய அருமைநோக்கி'காண்கிற்பின்' என்றும்,(அவ்வாறு) கண்டவிடத்துப் புறங்கூறுத லொழிதலின் பாவமில்லையாம்; இல்லையாகவே, வரும் பிறவிகளிலும் துன்பமில்லை என்பதுகுறித்து உயிர்க்குத் தீதுண்டோ என்றும் சொல்லினார். இதனால் புறங்கூறுதலை விடுவதற்கு உபாயம் சொல்லப்பட்டது.

(க - து). அயலார் குற்றத்தைப் பார்ப்பதுபோலத் தமது குற்றத்தையும் பார்ப்பவர்க்குக் கெடுதியுண்டாகாது என்பது.

10. If they observed their own faults as they observe the faults of others, would this evil of backbiting still exist among men ?

பதின்மூன்றாம் அதிகாரம்.

பயனில சொல்லாமை—

## Against Profitless Conversation.

அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம் பொரு ளின்பமாகிய பயன்களுள், ஒன்றும் பயவாதசொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் லென § வாக்கின்கணிகழும் பாவ நான்கனுள்

§ "கடுஞ்சொல், பொய், புறங்கூறல் பயனிலசொல் என்னுமிந்நான்கும் வாக்கின் அசுபகருமங்கள்". "வாக்கினால் பெரும்பான்மையும் அசுபகருமத்தைச்செய்தால் பறவை அல்லது மிருகமாகப்பிறக்கின்றான்" என்பது மனுதர்மசாஸ்திரம் பன்னிரண்டாவதத்தியாயம். "படிறும் பயனிலவும் பட்டி யுரையும், வசையும் புறனு முரையாரே யென்று, மசையாத வுள்ளத் தவர்" என்பது ஆசாரக்கோவை.

* பொய் துறந்தார்க் கல்லது ஒருதலையாகக் கடியலாகாமையின், † அஃதொழித்து இல்வாழ்வாராற் கடியப்படும் ‡ ஏனை மூன்றனுள், கடுஞ்சொல் § இனியவைகூறலானும், குறளை ¶ புறங்கூறாமையானும் விலக்கி நின்ற பயனில்சொல் இதனான் விலக்குகின்றா ராகலின், இது புறங்கூறாமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம் பொரு ளின்பங்களாகிய பிரயோஜனங்களுள், ஒன்றையும் தாராத சொற்களைச் சொல்லாமையாம். பொய்,குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்று வாக்கினிடத் துண்டாகும் பாவம் நான்கனுள், பொய் துறந்தவர்க் கல்லாமல் மற்றவர்க்கு நிச்சயமாக நீக்குதல் கூடாமையால், அதனை யொழித்து இல்வாழ்வாரால் நீக்கப்படுவனவாகிய மற்றைய மூன்றனுள், கடுஞ்சொல்லை இனியவை கூறலாலும், குறளையைப் புறங் கூறாமையாலும் விலக்கி, (விலக்காது) நின்ற பயனில் சொல்லை இதனால் (இவ்வதிகாரத்தால்) விலக்குகின்றா ராகலால் இது (பயனில சொல்லாமை) புறங்கூறாமையின்பின் வைக்கப் பட்டது.

க. || பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.

பரி.—(இ - ள்). அறிவுடையார் பலருங் கேட்டு வெறுப்பப் பயனில வாகிய சொற்களைச் சொல்லுவான் எல்லாரானும் இகழப்படும்.

அறிவுடையார் பலருங்கேட்டு வெறுப்பவே § ஒழிந்தாரானும் இகழப்படுதலின் 'எல்லாரு மெள்ளப்படும்' என்றார். மூன்றனுருபு விகாரத் தாற் றொக்கது.

தெளி.—(இ - ள்). பல்லார் - (அறிவுடையார்) பலரும், முனிய - (கேட்டு) வெறுக்க, பயனில - பயனிலவாகிய சொற்களை, சொல்லுவான், -

---

* பெரும்பான்மையும் காமமும் பொருளும்பற்றி யுண்டாவதாகிய பொய்யைத் துறவறத்தார்க் கல்லாது, இல்லறத்தார்க்கு முற்றும் பற்றற வொழித்தல் கூடாமையின், பொய் துறந்தார்க் கல்லது, ஒருதலையா (நிச்சயமா) கக் கடியலாகாமையின்' என்று கூறப்பட்டது.

† அஃதொழித்து - பொய் பேசுத லொழித்து.

‡ ஏனை மூன்றனுள் - மற்றைய குறளை (புறங்கூறல்), கடுஞ்சொல், பயனில்சொல் என்னு மூன்றனுள்.

§ இனியவைகூறலானும்-இனியவைகூறலென்னு மதிகாரத்தானும்.

¶ புறங்கூறாமையானும்-புறங்கூறாமை யென்னு மதிகாரத்தானும்.

|| பயனை யாராய்தற்குரியவர் அறிவுடையவ ராகலின், இங்கே பல்லார் என்பது அறிவுடையார்மேல் நின்றது.

§ ஒழிந்தாரென்றது அறிவிலிகளை.

சொல்லுகின்றவன், எல்லாரும் - எல்லாராலும், எள்ளப்படும் - இகழப்படு வான், (எ - று).

அறிவுடையார் பலருங்கேட்டு வெறுக்கவே ஒழிந்தவராலும் (பய னிலசொல்லுவான்) இகழப் படுதலால் 'எல்லாரு மெள்ளப்படும்' என் றார். எல்லாராலும் என்ற மூன்றும் வேற்றுமையுருபு செய்யுள் விகாரத் தால் தொக்கு நின்றது.

(க - து). பயனில்லாத சொற்களைச் சொல்பவன் யாவராலு மிகழப்படுவான் என்பது.

1. He who to the disgust of many speaks useless things will be despised by all.

உ. பயனில பல்லார்முற் ‡ சோல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

பரி.—(இ - ள்). பயனிலவாகிய சொற்களை அறிவுடையார் பலர் முன்பே ஒருவன் சொல்லுதல் விருப்பமிலவாகிய செயல்களைத் தன் னட்டார் மாட்டுச் செய்தலினும் தீது, (எ - று).

விருப்பமில - வெறுப்பன. †† இச்சொல் அச்செயலினும் மிக விக ழற் பாடு பயக்கு மென்பதாம்.

தெளி.—(இ - ள்). பல்லார்முன் - (அறிவுடையார்) பலர்முன்னே, பயனில - பயனில வாகிய சொற்களை, சொல்லல்-(ஒருவன்) சொல்லுதல், நட்டார்கண்-(தன்) சிநேகிதரிடத்து, நயனில - விருப்ப மிலவாகிய செயல் களை, செய்தலின் - செய்தலினும், தீது - தீயதாம், (எ - று).

விருப்பமிலவாகிய செயல்கள் - வெறுக்கப்படுஞ் செயல்கள். இச சொல் அசசெயலைக் காட்டிலும் மிகவும் இகழப்படுதலையுண்டாக்கு மென் பதாம்.

(க - து). பயன்படாத சொற்களைச் சொல்லுதல் சிநேகித ரிடத்து வெறுக்கப்படுஞ்செயல்களைச் செய்தலினுங்கொடியதாம்.

2. To speak useless things in the presence of many is a greater evil than to do unkind things towards friends.

---

‡ சொல்லல் என்பதனால் பயனிலவென்பது பயனிலவாகிய சொற்க ளென்றும், செய்தல் என்பதனால் நயனிலவென்பது விருப்பமிலவாகிய செயல்கள் என்றும் பெறப்பட்டன வென்க.

†† இச்சொல் அச்செயலினும் - பயனிலவாகிய சொல் விருப்பமில வாகிய செயலைப் பார்க்கிலும்.

ரு. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

பரி.—(இ - ள்). பயனிலவாகிய பொருள்களை ஒருவன் விரித்துரைத்த முறைதானே இவன் நீதியில னென்பதனை ¶ உரைக்கும்,(எ-று).

§ உரையால் இவன் நயனிலனென்ப தறியலாமென்பார், அதனை உரைமே லேற்றி உரைசொல்லும் என்றார்.

தெளி.—(இ - ள்). பயனில - பயனிலவாகிய பொருள்களை, (ஒருவன்), பாரித்து - விரித்து, உரைக்கு முரை - சொல்லுஞ் சொல்லே, நயனிலனென்பது - (இவன்) நீதியில்லாதவ னென்பதனை, சொல்லும் - அறிவிக்கும், (எ - று).

பயனிலவாகிய வுரையால் இவன் நீதியில்லாதவ னென்பதை அறியலா மென்பார் அவ்வறிதலை உரையின்மீதேற்றி உரைசொல்லும் என்றார்.

(க-து). ஒருவன் பயனில்லாத சொல்லை விரித்துக் கூறினால், அஃது இவன் நீதியில்லாதவ னென்பதை யறிவிக்கும்.

3. That conversation in which a man utters forth useless things will say of him "he is without virtue."

சு. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

பரி.—(இ - ள்). பயனோடுபடாத பண்பில் சொற்களை ஒருவன் பலரிடைச் சொல்லுமாயின், அவை அவர்மாட்டு நீதியோடு படாவாய், அவனை நற்குணங்களி னீக்கும், (எ - று).

பண்பு—இனிமையும் மெய்ம்மையும் * முதலாய ‡‡ சொற்குணங்கள். சொல்லுமாயி னென்பதும், அவர்மாட்டென்பதும் எச்சமாக வருவிக்கப் பட்டன.

தெளி.—(இ - ள்). பயன்சாரா - பயனோடு பொருந்தாத, பண்பில் சொல் - குணமில்லாத சொற்களை, (ஒருவன்),பல்லாரகத்து - பலரிடத்து,

---

¶ உணர்த்தும் என்றும் பாடமுண்டு.

§ அறிதலாகிய சேதனதருமத்தை யுரைமே லேற்றி உரைசொல்லும் என்றமையின், இஃதொரு பொருளின் தருமம் மற்றொரு பொருளின்மேலாய வுபசார வழக்காம்.

* முதலாய என்பதனால் கெடுதிவிளைவியாமை, கேட்டாரைத் தன் வசப்படுத்தல் முதலியவற்றையுங் கொள்க.

‡‡ சொல்லின் குணங்கள் கேட்டார்க்கினிமை யுடைமை, உண்மை யுடைமை, தீமை விளைவியாமை முதலியனவாம்.

(சொல்லுவானாயின் அவை அவரிடத்து), நயன்சாரா - நீதியோடு பொருந்தாதன வாகி, நன்மையின்-நற்குணங்களினின்றும்,நீக்கும் (அவனை) நீங்கச் செய்யும், (எ - று).

பண்பு - இனிமையும் மெய்ம்மையும் முதலாகிய சொற்குணங்கள். சொல்லுவானாயின், அவரிடத்து என்பன குறைந்து நின்றமையின், அவை வருவித் துரைக்கப்பட்டன. இவை வினையெச்சங்களாம்.

(க - து). குணமில்லாத சொற்களை யொருவன் சொல்லுவானாயின், அவை அவனை நற்குணங்களினின்றும் நீக்கும்.

4. The words devoid of profit or pleasure which a man speaks with many persons will, being inconsistent with virtue, remove him from goodness.

௫. சீர்மை சிறப்போடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

பரி.—(இ-ள்). பயனிலவாகியசொற்களை இனிய நீர்மையுடையார் சொல்லுவாராயின், அவரது † விழுப்பமும் அதனால் வரும் நன்கு மதிக்கற்பாடும் உடனே நீங்கும், (எ-று).

‡ நீர்மை - நீரின் றன்மை. சொலினென்பது சொல்லாமையை விளக்கிற்று.

தெளி.—(இ - ள்). பயனில-பயனிலவாகிய சொற்களை, நீர்மையுடையார் - நற்குணத்தை யுடையவர், சொலின் - சொல்லுவாராயின், சீர்மை-(அவரது) மேம்பாடும், சிறப்பொடு - (அம் மேம்பாட்டினால் வரும்) நன்கு மதிக்கப்படுதலும் (உடனே), நீங்கும்-(அவரிடத்திருந்து) நீங்கும், (எ-று).

நீர்மை - நற்குணத்தின் றன்மை. சொலினென்பது நீர்மை யுடையார் பயனிலவற்றைச் சொல்லாமையை விளக்கி நின்றது.

(க - து). நற்குணமுடையோர் பயனில்லாத சொற்களைச் சொல்லுவாராயின் அதனால் அவரது மேன்மையும் நன்கு மதிப்பும் ஒழியும் என்பது.

5. If the good speak vain words their eminence and excellence will leave them.

௬. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

† விழுப்பம் அதனால் வரும் நன்கு மதிக்கற்பாடுடனே நீங்கும் என்றும் பாடமுண்டு.

‡ நீர்மை - குணம், நீரின்றன்மை - (நற்) குணத்தின் தன்மை.

பரி.—(இ-ள்). பயனில்லாத சொற்களைப் பலகாலுஞ் சொல்லு வானை மகனென்று சொல்லற்க; மக்களுட் பதரென்று சொல்லுக.

* அல் விகுதி வியங்கோள்; முன் எதிர்மறையினும், பின் உடம்பாட் டினும் வந்தது. † அறிவென்னும் உள்ளீடின்மையின் 'மக்கட்பதடி' என் றார். இவை யாறுபட்டானும் பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). பயனில்சொல் - பயனில்லாத சொற்களை, பாராட் டுவானை-பலதரமுஞ்சொல்லுகின்றவனை,மகனெனல்-மனிதனென்று சொல் லற்க, மக்கட் பதடியெனல் - மக்களுள் பதரென்று சொல்லுக, (எ - று).

எனல், எனல் என்னும் அல் ஈற்று வியங்கோள் முற்றுக்களிரண்டனுள், முன்னது எதிர் மறையிலும் பின்னது உடன்பாட்டிலும் வந்தன. பதருக்கு அரிசியாகிய உள்ளீடில்லாமைபோலப் பயனில் சொற் பாராட்டு வானுக்கு அறிவாகிய உள்ளீடில்லாமையால் 'மக்கட்பதடி' என்றார். இவை யாறு பாட்டானும் பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றம் சொல்லப்பட்டது. உள்ளீடு-உள்ளிருப்பது. பதர்-அரிசியில்லாத நெல்.

(க - று). பயன்படாத சொற்களைச் சொல்லுகின்றவன் மக் களுள் பதராவான் என்பது.

6. Call not him a man who parades forth his empty words, call him the chaff of men.

* மகனெனல் என்பதன்கணுள்ள எனலும் மக்கட் பதடியெனல் என் பதன்கணுள்ள எனலும் அல்லீற்று வியங்கோள் வினை முற்றுக்கள். இவற் றுள் முன்னது (என்று சொல்லற்க என்று பொருள் படுதலால்) எதிர் மறையிலும், பின்னது (என்று சொல்லுக என்று பொருள் படுதலால்) உடன்பாட்டிலும் வந்தன. "கயவொடுரல்வொற்று" எனனுஞ் சூத்திரத்தி னுரையில் இலக்கண விளக்கநூலார் "பயனில்சொற் பாராட்டு வானை மக னெனல், மக்கட் பதடி யெனல், என அல்லீறு விதித்தற்கண் மறையும் உடம்பாடுமாய் வருதலு முணர்க" என்றனர்.

பொருளின் புடைபெயர்ச்சி யிருந்தால் வினை (தொழில்) நிகழுத லின் எங்கே பொருளின் புடைபெயர்ச்சி யிருக்கின்றதோ அங்கே வினை நிகழுமென்றும், எங்கே பொருளின் புடைபெயர்ச்சி யில்லையோ அங்கே வினை நிகழாதென்று மறிக. இலக்கணநூலார் வினை நிகழுதலை யுடன் பாடென்றும் அது நிகழாமையை யெதிர் மறையென்றும் கூறுவர். வட நூலார் உடன் பாட்டை அந்நுவயமென்றும் எதிர்மறையை வியதிரேகி யென்றும் கூறுவர்.

† அறிவிற் கிலக்கணம் கலித்தொகை நெய்தற்கலி மக-ல், "அறிவெ னப் படுவது பேதையார்சொல் நோன்றல்" என்று கூறப்பட்டிருக்கின்

எ. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

பரி.—(இ-ள்) ¶ நீதியோடு படாத சொற்களைச் சான்றோர் சொன்னாராயினும், சொல்லுக, அஃதமையும்; அவர் பயனிலவற்றைச் சொல்லாமை பெறின், $ அது நன்று, (எ-று).

|| சொல்லினு மெனவே, சொல்லாமை பெறப்பட்டது. நயனிலவற்றினும் பயனில தீயவென்பதாம்.

தெளி.—(இ-ள்). சான்றோர் - (பல குணங்களாலும் நிறைந்த) அறிவுடையவர், நயனில - நீதியோடு பொருந்தாத சொற்களை, சொல்லினும் - சொன்னாராயினும், சொல்லுக - சொல்லக்கடவர், (அது பொருந்தும்), பயனில - (அவர்) பயனில்லாத சொற்களை, சொல்லாமை - சொல்லாதிருத்தலை (பெற்றால்), நன்று-(அது) நல்லது, (எ-று).

சொல்லினும் எனவே, சான்றோர் நயனில சொல்லாமை பெறப்பட்டது. நயனில்லாத சொற்களிலும் பயனில்லாத சொற்கள் கொடியனவென்பதாம்.

(க - து). சான்றோர் நீதியோடு பொருந்தாத சொற்களைச் சொன்னாராயினும் பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருக்கக் கடவர் என்பது.

7. If you will speak things without excellence speak them; it will be well for the wise not to speek useless things.

அ. அரும்பய னாயு மறிவினர் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

பரி.—(இ-ள்). அறிதற்கரிய பயன்களை ஆராயவல்ல அறிவினையுடையார் மிக்க பயனுடைய வல்லாத சொற்களைச் சொல்லார்.

அறிதற்கரிய பயன்களாவன * வீடுபேறும், † மேற்கதிச்செலவும் ‡ முதலாயின. பெரும் பயனில்லாத வெனவே, பயன் சிறிதுடையனவும் ஒழிக்கப்பட்டன.

றது. அறிவினிலக்கணத்தை விரிவாக அறிவுடைமை யென்னு மதிகாரத்திற் காண்க.

¶ நீதி - உலகத்தோடு பொருந்துதல். $ அது-பயனிலசொல்லாமை.

|| சொல்லினும் என்பதன்கணுள்ள உம்மைஎதிர்மறைப் பொருளது.

* வீடு பேறு - முத்தி பெறுதல்.

† மேற்கதிச்செலவு - சுவர்க்க முதலாயின வற்றின்கட் செல்லுதல்.

‡ முதலாயினஎன்பதனால் நிஷ்காமியகருமம்,ஈசுவரத்தியானம், பிராணாயாமம், சாதன சதுஷ்டயம், சற்குரு சேவை, சிரவண மநந நிதித்தியாசனம், தத்துவஞான முதலியவற்றையுங் கொள்க.

தெளி.—(இ - ள்). அரும்பயன் - அறிதற்கரிய பயன்களை, ஆயும் - ஆராயவல்ல, அறிவினர் - அறிவினை யுடையார், பெரும்பய னில்லாத சொல் - மிகுந்த பயனில்லாத சொற்களை, சொல்லார் - சொல்லமாட்டார்.

அறிதற்கரிய பயன்களாவன முத்திப்பேறும், மேற்கதியடைதலும் முதலானவை. பெரும்பயனில்லாத சொற்களெனவே சிறிது பயனுடைய சொற்களும் தள்ளப்பட்டன. சிறிது பயனுடைய சொற்கள் - இம்மைப்பய னொன்றையே தரும் சொற்கள்.

(க-து). அறிதற்கரிய பயன்களை யாராயும் அறிவினையுடை யார் பயன்படாத சொற்களைச் சொல்லார் என்பது.

8. The wise who seek for great advantage will not speak words that have not much weight.

௯. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

பரி:—(இ - ள்). பயனினீங்கிய சொற்களை மறந்துஞ் சொல்லார், மயக்கத்தினீங்கிய தூய அறிவினையுடையார், (எ - று).

தூயவறிவு § மெய்யறிவு. ¶ மருடீர்ந்தவென்னும் பெயரெச்சம் காட் சியவரென்னுங் குறிப்புப்பெயர் கொண்டது. இவை மூன்றுபாட்டானும் பயனிலசொல்லாமையின் குணங்கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). மருடீர்ந்த - மயக்கத்தினின்றும் நீங்கிய, மாசறு - மாசற்ற [பரிசுத்தமாகிய], காட்சியவர் - அறிவினையுடையார், பொருடீர் ந்த - பயனினின்றும் நீங்கியசொற்களை, பொச்சாந்தும் - மறந்தும், சொல் லார் - சொல்லமாட்டார், (எ - று).

பரிசுத்தமாகிய வறிவு - யதார்த்தஞானம். மருடீர்ந்த என்னும் பெய ரெச்சம் காட்சியவரென்னுங்குறிப்பு வினையாலணையும் பெயரைக்கொண்டு முடிந்தது. இவை மூன்றுபாட்டானும் பயனிலவாகிய சொற்களைச் சொல் லாமையின் குணம் சொல்லப்பட்டது.

(க - து). குற்றமற்ற அறிவினை யுடையோர் பலனில்லாத சொற்களை மறந்தும் சொல்லார் என்பது.

9. Those wise men who are without faults and are freed from ignorance will not even forgetfully speak things that cannot profit.

§ மெய்யறிவாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் ஐயந்திரிபின்றி யுள்ளவாறறிவது. இது தத்துவஞான மெனப்படும்.

¶ மருள் - மெய்ப்பொருளல்லாதவற்றை மெய்ப்பொருளென் றறி யும் விபரீத (மாறுபாடான) ஞானம்.

கਂ. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

பரி.—(இ-ள்). சொற்களிற் பயனுடைய சொற்களைச் சொல்லுக; சொற்களிற் பயனில்லாத சொற்களைச் சொல்லா தொழிக.

|| சொல்லினென்பது இருவழியும் மிகையாயினும், () சொற்பொருட்பின் வருநிலை யென்னும் அணிநோக்கி வந்தது. * "வைகலும் வைகல் வரக்கண்டும்'' என்பது போல. இதனாற் சொல்லப்படுவனவும் படாதனவும் நியமிக்கப்பட்டன.

தெளி.—(இ-ள்). சொல்லில் - சொற்களில், பயனுடைய - பிரயோசன முடையசொற்களை, சொல்லுக - சொல்லக்கடவர், சொல்லில் - சொற்களில், பயனிலாச்சொல் - பிரயோசன மில்லாத சொற்களை, சொல்லற்க - சொல்லா திருக்கக்கடவர், (எ-று).

சொல்லி னென்பது இரண்டு வாக்கியத்திலும் (வந்தது) மிகையாயிருப்பினும். அது சொற் பொருட்பின் வருநிலை யென்னு மலங்கார நோக்கி வந்தது. இதனல் சொல்லத்தக்கசொறகள் பயனுடைய சொற்கள் எனவும் சொலலத்தகாத சொற்கள் பயனிலாதசொற்கள் எனவும் நியமிக்சப் (நிச்சயிககப்) பட்டன.

(க-து.) பயனில்லாத சொற்களைச் சொல்லாது பயனுடைய சொற்களைச் சொல்லககடவர் என்பது.

10. If you speak, speak what is useful, and speak not useless words.

## பதினேழாவது அதிகாரம்.

## தீவினையச்சம்.—On the fear of sin.

பரி.—அஃதாவது பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனுன் மெய்யின்கண் நிகழும் பாவங்களெல்லாந் தொகுத்து விலக்குகின்றாராகலின், இது பயனில சொல்லாமையின்பின் வைக்கப்பட்டது.

---

|| சொல்லினென்பது இருவழியும் மிகையாயினும் - பயனுடைய சொல்லுக பயனிலாச்சொல் சொல்லற்க என்னும் இரண்டு வாக்கியத்திலும் சொல்லின் எனபது அவசியமின்றி யதிகமாயிருப்பினும், ஒரு வாக்கியத்தில் மாத்திரம் சொல்லின் என்பதிருப்பினமையு மென்பதுகருத்து.

() சொற்பொருட்பின் வருநிலை யென்னும் அணியாவது முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னர்ப் பலவிடத்தும் வருவது.

* நாலடியார் அறன்வலியுறுத்தல், 9. இதன்பொருள் நாள்தோறும் நாட்செல்லுதல் வரப்பார்த்தும் என்பது. "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார், வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர், வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல், வைகலை வைத்துணரா தார்" என்னுமிந்நாலடிச்செய்யுளில் வைகல் என்னுஞ்சொல் பொருள் வேற்றுமையின்றிப் பலமுறை வந்திருத்தலைக்காண்க.

*தெளி.—அஃதாவது பாவத்தைத் தருவதற்கேதுவாயுள்ள தீவினைகளைச் செய்வதற்கு அஞ்சுதலாம். இதனால் காயத்தினிடத்து விளைகின்ற பாவச்செயல்களையெல்லாம் தொகுத்து விலக்குகின்றாராகலின், இது (தீவினையச்சம்) பயனிலசொல்லாமையின்பின் வைக்கப்பட்டது.*

௧. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

பரி.—(இ-ள்). தீவினையென்று சொல்லப்படும் மயக்கத்தை முன் செய்த தீவினையுடையார் அஞ்சார்; அஃதிலராகிய சீரியார் அஞ்சுவர்.

*தீவினையென்னுஞ் செருக்கெனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. † மேற்றொட்டுச் செய்து கைவந்தமையான் 'அஞ்சார்' என்றும், செய்தறியாமையான் 'அஞ்சுவர்' என்றுங் கூறினார்.*

தெளி.—(இ - ள்). *தீவினையென்னுஞ் செருக்கு - தீவினையென்று சொல்லப்படும் மயக்கத்தை, தீவினையார் - (முற்பிறப்பிற்செய்த) தீவினையுடையார், அஞ்சார் - பயப்படார், விழுமியார் (அஃதில்லாதவராகிய) மேலோர், அஞ்சுவர் - பயப்படுவர், (எ-று).*

*தீவினைக்கேதுவாகிய செருக்கு தீவினையென்னுஞ்செருக்கெனக்காரியம் காரணமாக வுபசரித்துக்கூறப்பட்டது. தீவினைகாரியம்; அதன்காரணம் செருக்கு. முன்னரேதொடங்கிசெய்து பழகிவந்தமையால் 'அஞ்சார்' என்றும், செய்தறியாமையால் 'அஞ்சுவர்' என்றும் சொல்லினர்.*

(௧-து). *தீயகாரியங்களைச் செய்தற்கு முற்பிறப்பில் செய்த தீவினையுடையார் பயப்படார்; மற்றவர் பயப்படுவார் என்பது.*

---

* *தீவினை செய்தற்குக் காரணமான செருக்கை (மயக்கத்தை - அவிச்சையை) 'தீவினையென்னுஞ்செருக்கு' என (தீவினையென்னுங்காரியத்தைச் செருக்கு என்னுங்காரணமாக)க்கூறியது பற்றித்'தீவினையென்னுஞ் செருக்கெனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது' என்று கூறப்பட்டது. இதனால் செருக்கினால் தீவினை நிகழுமென்றும் செருக்கில்லாவிட்டால் தீவினைநிகழாதென்றும் பெற்றாமென்க. பிரயோகவிவேகநூலார் "மறுளறுகாரணம்" என்னுஞ்செய்யுளினுரையில் "தீவினை என்னுஞ் செருக்கு, தீவினையால்வருஞ் செருக்கு. இது காரணம் காரியமானது" என்றார். பரிமேலழகர் தீவினையைக் காரியமாகவும் செருக்கைக் காரணமாகவும் கொண்டாற்போன்றுகொள்ளாது பிரயோக விவேக நூலார் தீவினையைக் காரணமாகவும் செருக்கைக் காரியமாகவுங் கொண்டாரென்பது கண்டறியத்தக்கதா மென்க.*

† *மேற்றொட்டுச்செய்து கைவந்தமையான்-தீவினைகளைக்கீழ்ப்போன பிறப்புக்களில் விடாதாரம்பித்துச் செய்து பழகிவந்தமையினால், (அத்தீவினையின்சம்ஸ்காரம் அந்தக்காணத்தில் அநுற்பூதமாகத் தங்கியிருக்கின்றது; அதனால்).*

1. Those who have experience of evil deeds will not fear but the excellent will fear the pride of sin.

உ. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

பரி.—(இ-ள்). தனக்கின்பம் பயத்தலைக் கருதிச் செய்யுந் தீவினைகள் பின் அஃதொழிந்துத் துன்பமே பயத்தலான், அத்தன்மையவாகிய தீவினைகள் ஒருவனாற் றீயினு மஞ்சப்படும், (எ-று).

* பிறிதொருகாலத்தும் பிறிதொருதேயத்தும் பிறிதோருடம்பினுஞ் சென்று சுடுதல் தீக்கின்மையின், † தீயினுமஞ்சப்படுவ தாயிற்று.

தெளி —(இ-ள்). தீயவை - (தனக்கு இன்பந்தருதலைக் குறித்துச் செய்யுந்) தீவினைகள், (பின்பு அவ்வினபத்தை யொழித்து), தீய-துன்பத்தையே, பயத்தலால் - தருதலால், தீயவை - (அவ்வியல்பினை யுடையனவாகிய) தீவினைகள், தீயினும் - நெருப்பினும் (அதிகமாக), அஞ்சப்படும்-(ஒருவனால்) அஞ்சப்படும், (எ - று).

வேறொரு காலத்திலும் வேறோரிடத்திலும் வேறோ ருடம்பிலும் போய்ச்சுடுதல் தீவினைக்கேயல்லாமல் நெருப்பிற்கில்லாமையால்(தீயவை) 'தீயினுமஞ்சப்படும்' என்றார்.

(க - து). தீவினைகள் விடாதுவந்து எங்கும் வருத்துவனவாயிருத்தலின், அவை நெருப்பைப்பார்க்கிலும் கொடியனவாம்.

2. Because evil produces evil, it should therefore be feared more than fire.

ந. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

பரி.—(இ - ள்). தமக்குறுதி நாடும் அறிவுக ளெல்லாவற்றுள்ளுந் தலையாய அறிவென்று சொல்லுவர் நல்லோர், தம்மைச் செறுவார் மாட்டுந் தீவினைகளைச் செய்யாது விடுதலை, (எ - று).

---

நெருப்பானது எக்காலத்தில் எத்தேசத்தில் எவ்வுடம்பிற்பட்டதோ அக்காலத்தில் அத்தேசத்தில் அவ்வுடம்பிற் சுடுவதன்றி வேறுகாலத்தில் வேறு தேசத்தில் வேறுடம்பிற் சென்று சுடுவதில்லையாம்; தீவினையோ வெனின், அங்ஙனமன்றி எந்தக்காலத்தில் எந்தத்தேசத்தில் எந்த உடம்பாற் செய்யப்பட்டதோ அந்த வுடம்பிலுள்ள வுயிரை வருத்துவதன்றி, அவ்வுயிரைவிடாது பற்றிச்சென்று மற்றொரு காலத்திலும் மற்றொரு தேசத்திலும் மற்றோருடம்பிலும் வருத்துவது பற்றி அது 'தீயினு மஞ்சப்படுவதாயிற்று' என்க.

† தீயினு மஞ்சப் படும் என்றார் என்றும் பாடமுண்டு.

‡ விடுதற்குக் காரணமாகிய அறிவை 'விடல்' என்றும் § செயத்தக் குழியுஞ் செய்யாதொழியவே தமக்குத் துன்பம் வாராதெனை ¶ உய்த் துணர்தலின், அதனை 'அறிவினு ளெல்லாந் தலை' என்றுங் கூறினர். () செய்யாது என்பது கடைக் குறைந்து நின்றது. இவை மூன்றுபாட் டானும் தீவினைக்கஞ்ச வேண்டுமென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). செறுவார்க்கும்-(தம்மை) வருத்துவோ ரிடத்தும், தீய - தீவினைகளை, செய்யா விடல் - செய்யாது விடுதலை, அறிவினுளெல் லாம் - (தமக்கு நன்மையை விரும்பும்) அறிவுக ளெல்லாவற்றிலும், தலை - தலைமையாய வறிவாகும், என்ப-என்று (நல்லோர்) சொல்லுவர், (எ-று).

தீவினைகளை விடுதற்குக் காரணமாகிய அறிவை 'விடல்' என்றும்' செய்யத்தக்கவிடத்தும் செய்யாதொழியவே தமக்குத் துன்பம் வாராதென் றாராய்ந் தறிதலால், அதனை 'அறிவினுளெல்லாந் தலை' என்றும், சொல் லினர். செய்யாஎன்பது செய்யாதென்பதன் விகாரம். இவைமூன்று பாட் டாலும் தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது சொல்லப்பட்டது.

(க - து). தம்மை வருத்துவோரிடத்துந் தீவினைகளைச் செய் யாமல் விடுமறிவு எல்லாவறிவினுள்ளுந் தலைமையாய வறிவாம்.

3. To do no evil even to enemies will be called the chief of all the virtues.

ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

பரி.—(இ-ள்). ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந் தும் எண்ணுதொழிக; எண்ணுவனாயின், * தனக்குக் கேடுபயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும், (எ-று).

---

‡ விடுதற்குக் காரணமாகிய அறிவை—தம்மை வருத்துவோரிடத் துந் தீவினைகளைச் செய்யாமல் விட்டுவிடுதற்கு ஏதுவாகிய அறிவை. விட லென்னுங் காரியத்தின்பெயர் அதனை யுணர்த்துதற்குக் காரணமான அறி விற்காதலின் காரியவாகுபெயராம்.

§ செயத்தக்குழியுஞ் செய்யாதொழியவே—தீவினைகளைச் செய்வதற் குத்தக்க காரணம் நேர்ந்த விடத்தும் அவற்றைச் செய்யாமலொழியவே.

¶ "சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா, லுறுபயனோ வில்லை யுயிர்க்கு" என்றறிதலின்.

() செய்யாது என்னும் எதிர்மறை வினையெச்சம் கடைக்குறைந்து (துவ்விகுதி செய்யுள் விகாரத்தாற் கெட்டுச்) செய்யா எனநின்றது.

* தனக்கு - பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை யெண்ணின வனுக்கு.

† கேடென்பன ஆகுபெயர். ‡ சூழ்கின்றபொழுதே தானும் உடன் சூழ்தலின், § இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது பெறப் பட்டது. () அறக்கடவுளெண்ணுதலாவது அவன் கெடத் தான் நீங்க நினைத்தல். தீவினை எண்ணலும் ஆகாதென்பதாம்.

தெளி.—(இ - ள்). (ஒருவன்) பிறன்-பிறனுக்கு, கேடு-கேட்டைத் தரும் வினையை, மறந்தும் - மறந்தாயினும், சூழற்க - எண்ணுதிருக்கக் கடவன், சூழின் - எண்ணுவானாயின், சூழ்ந்தவன் - அவ்வெண்ணினவனு க்கு, கேடு - கேட்டைத்தரும்வினையை, அறம்-அறக்கடவுள், சூழும் - எண் ணுவான், (எ-று).

கேடிரண்டும் கேட்டைத்தரும் வினைகளையுணர்த்துதலால் ஆகுபெயர் கள் எண்ணுகின்றபொழுதே தானும் உடனே எண்ணுதலால்,இவன் பிற் பட்டாலும் அறக்கடவுள் (பிற்படாது) முற்படுவானென்பது பெறப்பட்ட து. அறக்கடவுளெண்ணுதலாவது அவன் கெடத் தான் நீங்க நினைத்தல். தீவினையை (செய்தலேயன்றிச் செய்ய) எண்ணுதலு மாகாதென்பதாம்.

(க - து). பிறனுக்குக் கேட்டைத் தரும் வினையைச்செய்ய நினைப்பவனுக்குத் தருமக் கடவுள் தானுங்கேட்டைத்தரும் வினை யைச் செய்ய நினைக்கும் என்பது.

4. Even through forgetfulness meditate not the ruin of another. Virtue will meditate the ruin of him who thus meditates.

ரு இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து

பரி.—(இ - ள்). யான் வறியனென்று கருதி அது தீர்தற்பொருட் டுப் பிறர்க்குத் தீவினைகளை ஒருவன் செய்யாதொழிக; செய்வனாயின் பெயர்த்தும் வறியனாம், (எ - று).

---

† கேடு என்பவை யிரண்டும் கேட்டைத்தரும் தீவினைகளை யுணர்த்து தலால் காரியவாகு பெயர்களாம்.

‡ சூழ்கின்றபொழுதே தானும் உடன் சூழ்தலின் - ஒருவன் மற் றொருவனுக்குக் கேட்டைத்தரும் வினையைச்செய்ய வெண்ணுகின்ற கால த்தே தானும் (அறக்கடவுளும் - தருமதேவதையும்) உடனே அவனுக்குக் கேட்டைத் தரும் வினையைச்செய்ய வெண்ணுதலால்.

§ இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது—பிறனுக்குக் கேட்டைத் தரும் வினையைச செயய எண்ணின இவன் பிறனுக்குத் தீவினையைச் செய்வது இடையூற்றின் மிகுதிப்பாட்டால் நிறைவேறாது போயினும் அல்லது நிறைவேறக் காலஞ் செல்லுமாயினும் தரும தேவ தை யவனுக்குக் கேட்டைத்தரும் வினையைச் செய்வது தவறாது உட னே நிறைவேற்று மென்பதாம்.

() பிறனுக்குத் தீமைசெய்ய நினைப்பவனிடத்து மறம் வளர அறம் பையப் பையக் குறைபுமென்பதாம்.

§ அத்தீவினையாற் பிறவிதோறும் இலனுமென்பதாம். () அன் விகுதி முன் தனித்தன்மையினும், பின் படர்க்கை யொருமையினும் வந்தது. தனித்தன்மை 1 "உளனுவென் னுயிரை யுண்டு" என்பதனுனுமறிக. 2 மற்று - அசை நிலை. 3 இலமென்று பாட போதவாரு முளர். 4 பொரு

§ அத்தீவினையாற் பிறவிதோறும் இலனும் - ஒருவன் தனக்குள்ள வறுமை நீங்குநிமித்தம் அன்னியருக்குச் செய்யுந் தீவினையினுல்ஒவ்வொரு பிறப்பிலும் தரித்திரனுவான்.

() முதலடியிலுள்ள இலன் என்பதன் அன்விகுதி தனித்தன்மை (தன்மை யொருமை) யிலும், இரண்டாமடியிலுள்ள இலன் என்பதன் அன்விகுதி படர்க்கை யொருமையிலும் வந்ததெனவெனக. அன் விகுதி தன்மை யொருமைக்கு வருதலைப்பற்றி நன்னூல் விருத்தியுரைகாரர் "அன் ஆன்" என்னுஞ் சூத்திரத்தினுரையில் "அன்னென்னுந் தன்மை யொருமை விகுதி தொன்று தொட்டதன்றி யிலக்கியங் கண்டமையின் எதிரது போற்றலென்னு முத்தியால் தழீஇக் கொண்டதாதலின் அதனை வலியுறுத்திப் பின்னும் அன்னெனவிதந்தும்" என்று கூறினுரெனக,

1 கலித்தொகை, குறிஞ்சி உஉ. இதன் பொருள் (யான்சிறிது)உயிருடனே யிருக்கும்படி என்னுயிரை வாங்கிக்கொண்டு என்பது. 'உளனு வென்னுயிரையுண்டு' என்பதன்கணுள்ள உளன் என்பதன் அன்விகுதி தன்மை யொருமையில் வந்தது. யாப்பருங்கலக் காரிகையில் "பந்த மடி தொடை பாவினங் கூறுவன்" என்று அன் விகுதி தன்மை யொருமையில் வந்திருத்தலையுங் காண்க.

2 மற்றும் என்பதன்கணுள்ளஉம்மை பெயர்த்து என்பதனோடுபிரித்துக் கூட்டப்பட்டது; அப்பெயர்த்தும் என்பது பின்னும் என்னும் பொருளை யுணர்த்தலின், மற்று என்பது அசை நிலையாயிற்று. பெயர்சசொல்லையும் வினைச்சொல்லையுஞ் சார்ந்து ஒரு பொருளையு முணர்த்தாது வருவது அசைநிலை யெனப்படும்.

3 முதலடியிலும் இரண்டாமடியிலுமுள்ள இலன் இலன் என்பனவற்றை இலம் இலம் என்றுபாடங்கூறுவாரு முண்டு. இப்பாடத்தின்படி முன்னுள்ள இலம் என்பதற்கு யாம் பொருளில்லோம் என்றும் பின்னுள்ள இலம் என்பதற்கு வறுமை என்றும் பொருள் கொள்க. (இலமாகும் என்பதற்கு - வறுமையுண்டாகு மென்பது பொருள்.) வறுமை யென்னும் பொருளையுணர்த்தும் இலம் என்னுஞ்சொல் உரிச்சொல்லாம். இஃது "இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை" என்னும் (தொல்காப்பியச்)சூத்திரத்தின் விசேடவுரையில் சேனுவரையர் "இலமென்னு முரிச்சொல், பெரும்பான்மையும் பாடென்னுந் தொழில்பற்றியல்லது வாராமையின் இலம் பாடென்றூர்" என்று கூறியதனுலு முணரப்படு மெனக.

4 இலனென்று - (யான் பொருளினுல்) தரித்திரனென் றெண்ணி, தீயவை செய்யற்க - தீவினைகளைச் செய்யாதொழிக, செய்யின் - செய்தால், இலனுகும் - (அப்பொருளாலே யல்லாமல் நற்குண நற்செய்கைகளாலும்,) தரித்திரனுவான், பெயர்த்தும் - பின்னும், என்று 'இலன்' என்னு மிக் குறளுக்கு வேறு பொருள் கூறுவாரு முண்டு.

ளான் வறியனெனக் கருதித் தீயவை செய்யற்க; செய்யின், அப்பொரு ளானே யன்றி நற்குண நற்செய்கைகளானும் வறியனுமென் றுரைப்பாரு முளர்.

தெளி.—(இ - ள்). இலனென்று - (யான்) வறுமை யுடையேனெ ன்று நினைத்து, (அவ்வறுமை நீங்கு நிமித்தம்), தீயவை - தீவினைகளை, செய்யற்க - (ஒருவன் பிறர்க்குச்) செய்யாதிருக்கக்கடவன், செய்யின்-செய் வானுனால், பெயர்த்தும் - பின்னும், இலனாகும் - வறுமையை யுடையவனு வான், (எ - று).

மற்று - அசைநிலை. அத்தீவினையினாற் பிறவிதோறும் வறியவனுவ னென்பதாம். இலனிலனென்னுமிரண்டனுள், முன்னது தன்மை யொரு மை யெதிர்மறைக் குறிப்பு வினைமுற்றும் பின்னது உயர்திணையாண்பால் படர்க்கை யெதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுமாம்.

(க-து). வறுமை நீங்குதற் பொருட்டுப் பிறர்க்குத் தீமைசெய் கின்றவன் மீண்டும் வறுமையை யுடையவனுவான் என்பது.

5. Commit not evil, saying, "I am poor". if you do you will become poorer still.

சு. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்.

பரி.—(இ - ள்). துன்பஞ்செய்யும் * கூற்றவாகிய பாவங்கள் தன் னைப் பின் வந்து வருத்துதலை வேண்டாதவன், † தீமைக் கூற்றவாகிய வினைகளைத் தான் பிறர்மாட்டுச் செய்யாதொழிக, (எ-று).

‡ செயயின், அப்பாவங்கள் அடுதல் ஒருதலை யென்பதாம்.

தெளி.—(இ - ள்), நோயப்பால-துன்பஞ்செய்யுங் கூறுபாடுடையன வாகிய பாவங்கள், தன்னை—, அடல் வேண்டாதான் - (பின் வந்து) வருத்துதலை வேண்டாதவன், தீப்பால - தீமைக் கூறுபாடுடையன வாகிய வினைகளை, தான்—, பிறர் கண் - பிறரிடத்து, செய்யற்க - செய்யா திருக் கக் கடவன், (எ - று).

செய்வானுயின், அப்பாவங்கள் அவனை வருத்துதல் நிச்சயமென்பதாம்.

(க - து). பாவங்கள் தன்னைப் பின்பற்றிவந்து வருத்து தலை விரும்பாதவன் தீவினைகளைப் பிறரிடத்துச் செய்யாதிருக்கக் கடவன் என்பது.

6. Let him not do evil to others who desires not that sorrows should pursue him.

* கூற்ற - பகுதியுடையன. † தீமைக் கூற்ற - தீமையென்னும் பகுதியிற் பட்டவை. ‡ செய்யின் - பிறரிடத்துத் தீவினைகளைச் செய் தால்.

ஏ. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

பரி.—(இ - ள்). எத்துணைப் பெரிய பகையுடையாரும் அதனை ஒரு வாற்றாற் றப்புவர் : அவ்வா றன்றித் தீவினையாகிய பகை நீங்காது 1 புக்குழிப் புக்குக் கொல்லும், (எ-று).

2 "வீயா-துடம்பொடு நின்ற வுயிரு மில்லை" 3 என்புழியும் 4. வீயாமை நீங்காமைக்கண் வந்தது.

தெளி.—(இ-ள்). எனைப்பகையுற்றாரும்-எவ்வளவு பெரிய பகையை யுடையவரும், உய்வர் (அப்பெரிய பகையை ஒருவழியால்) தப்பிப்போவர். (அப்படியல்லாமல்), வினைப்பகை - தீவினையாகிய பகையானது, வீயாது - நீங்காமல், பின்சென்று - சென்றவிடத்திற்சென்று, அடும் - கொல்லும்.

வீயாது என்பதிங்கு நீங்காது என்னும் பொருளில் வந்தது.

(க - து). மிகப்பெரிய பகைக்குத் தப்பினும் தீவினையாகிய பகைக்குத் தப்புதல் முடியாது என்பது.

7. However great be the enmity men have incurred they may still live. The enmity of sin will incessantly pursue and kill.

அ தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

பரி.—(இ - ள்). பிறர்க்குத் தீவினைகளைச் செய்தார் தாங்கெடுதல் எத்தன்மைத்தெனின், ஒருவன் நிழல் நெடிதாகப் போயும் அவன் றன்னை விடாது வந்து அடியின்கண் தங்கிய தன்மைத்து, (எ - று).

5 இவ்வுவமையைத் தன்காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப் பற்றி நின்று, அது வந்துழி உருப்பதாய தீவினையைச் செய்தார் பின் அதனாற் கெடுதற்கு உவமையாக்கி உரைப்பாருமுளர். அஃதுரை யன்றென்

1. புக்குழிப் புக்குக்கொல்லும - (தாம்வேறுசரீரத்தில்) புக்க (பிரவேசித்த) விடத்து (தானும் உடனே) வந்து (பிறவிதோறும்) வருத்தும்.

2. புறநானூறு, 363. இதன்பொருள் நீங்காமலுடலோடு கூடி நின்ற வுயிர்களுமில்லை யென்பது. 3. என்புழியும் - என்றவிடத்தும்.

4. வீயாமை யென்பது நீங்காமையெனனும் பொருளில் வந்தது.

5. நிழறன்னை, வீயா தடியுறைந் தற்று' என்னும் இவ்வுவமானத்தை (பயனைக் கொடுத்தற்குரிய) தன்னுடைய காலம்வருமளவும் வெளிப்படாது. [தீவினையாகிய தன்னைச்செய்த] உயிரைப்பற்றி (உயிரினது அந்தக் கரணத்தில் சம்ஸ்காரவடிவாய்) நின்று அது (தன்னுடைய பயனைக்

பதற்கு அடியுறைந்த நிழல் தன்னை வீந்தற் றென்னது 'வீயாதடியுறைந் தற்று' என்றபாடமே கரியாயிற்று. மேல் 'வீயாது பின்சென்றடும்' என்றார், ஈண்டு அதனை உவமையான் விளக்கினர்.

தெளி:—(இ - ள்). தீயவை - தீவினைகளை, செய்தார் - (பிறர்க்குச்) செய்தவர், கெடுதல் - (தாம்) கெடுதல், (எத்தன்மையதென்றால்), நிழல் - (ஒருவனது) நிழலானது, (நெடுந்தூரம்போயினும்), தன்னை - அவன்றன்னை, வீயாது - விடாதுவந்து, அடி - (அவனது) அடியினிடத்து, உறைந்தற்று - தங்கிய தன்மையதாம், (எ - று).

முற்செய்யுளில் 'வினைப்பகை, வீயாது பின்சென் றடும்' என்று கூறிய வர், இங்கு அதனை 'நிழறன்னை, வீயா தடியுறைந் தற்று' என்னும் உவமானத் தினல் விளக்கினர். (அடி-பாதம்).

(க - து). தீவினையானது நிழல்போலத் தன்னைச் செய்த வனையே பற்றி நின்று வருத்தும் என்பது.

8. Destruction will dwell at the heels of those who commit evil even as their shadow that leaves them not.

கொடுத்தற்குரிய காலம்) வந்தபோது வெளிப்படுவதாகிய தீவினையைச் செய்தவர் பின்னர் அத்தீவினையால் கெடுதற்கு உவமானமாக்கிச் சொல்லு வாருமுண்டு. இதன் கருத்தாவது ஒருபொருளின் நிழலானது (விளக் கொளி முதலியன வின்றிய இருளில்) ஒளிவருமளவும் வெளிப்படாது அப்பொருளைப்பற்றி யிருந்து, ஒளிவந்தபோது வெளிப்பட்டுத் தோன்று தல்போன்று, ஒருவன் செய்த தீவினையானது தனதுபயனை அவன் அனு பவித்தற்குரிய காலம் வருமளவும் வெளிப்படாது அவனது அந்தக்கர ணத்தில் சம்ஸ்கார வடிவாய் நின்று தனது பயனை யனுபவித்தற்குரிய காலம் வந்தபோது வெளிப்பட்டு அவனை வருத்தும் என்பது. இவ்வுரை ஒருவனது நிழலானது நெடுந்தூரம் போனலும் அவனை விடாது வந்து அவனடியில் தங்கும் தன்மையைப் போன்று ஒருவன்செய்த தீவினையா னது (பயனைக்கொடுக்குங் காலம் வாராமை காரணமாக) விலகியதுபோலக் காணப்பட்டாலும் அவனைவிடாது வந்து வருத்தும் என்னும் பரிமேலழக ரது அபிப்பிராயத்திற்கு மாறுபட்டதா மென்க. [இவ்வுரை 'அடியுறைந்த நிழல்தன்னை வீந்தற்று' என்று பாடமிருந்தால் ஒக்கும், அவ்வாறின்றி 'வீயா தடியுறைந்தற்று' என்று பாடமிருப்பதால் ஒவ்வாது என்று பரிமே லழகர் அதனை மறுத்தனர்]. அஃதுரையாகா தென்பதற்கு அடியுறைந்த நிழல் தன்னை வீந்தற்று (தன்னைவீந்தற்று—தான் மறைந்திருந்ததை வெளிப்படுத்திய தன்மைத்து.) என்று கூருது வீயா தடியுறைந்தற்று என்ற பாடமே கரி (சாட்சி) யாயிற்றென்பது. மேல் (எனைப்பகையுற்ருரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும். என்னுங்குறளில்)'வீயாது பின்சென்றடும்' என்றவர், ஈண்டு (தீயவை செய்தார் என்னுமிக்குறளில்) அதனை (வீயாது பின்சென் றடும் என்பதனை) உவமானத்தினல் விளங் கச் சொன்னரென்பது.

௯. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

பரி.—(இ-ள்). ஒருவன், தன்னைத்தான் காதல் செய்தல் உடைய னாயின், தீவினையாகிய பகுதி * எத்துணையுஞ் சிறிதொன்றாயினும் பிறர் மாட்டுச் செய்யா தொழிக, (எ - று)

§ நல்வினை, தீவினையென வினைப்பகுதி இரண்டாகலின் 'தீவினைப் பால்' என்றார். பிறர்மாட்டுச்செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம் பயத் தலை விளக்கினாராகலின் 'தன்னைத்தான் காதலனாயின்' என்றார். இவை யாறுபாட்டானும் பிறர்க்குத் தீவினைசெய்யிற் றாங்கெடுவரென்பது கூறப் பட்டது.

தெளி.—(இ-ள்). (ஒருவன்) தன்னை—, தான்—, காதலனாயின்-விரு ம்புதல் செய்தலுடையவனாயிருந்தால், தீவினைப்பால் - தீவினையாகிய பகுதி, எனைத்தொன்றும்—எவ்வளவுஞ்சிறிய தொன்றானாலும், துன்னற்க- (பிறரிடத்து) செய்யாதிருக்கக் கடவன், (எ - று).

நல்வினை தீவினை என்று வினையின்பகுதி இரண்டாகலின் 'தீவினைப் பால்' என்றார். பிறரிடத்துச்செய்த தீவினை தன்னிடத்துத் துன்பந் தரு தலை விளக்கினாராதலால் 'தன்னைத்தான் காதலனாயின்' என்றார். இவை ஆறுபாட்டாலும் பிறர்க்குத் தீவினைசெய்தால் தாம் கெடுவரென்பது சொல்லப்பட்டது. (பகுதி-பாகம்).

(க - து). ஒருவன் தன்னைப்பாதுகாக்க விரும்பினால் பிறர்க் குத் தீமைசெய்யாதிருக்கக் கடவன் என்பது.

9. If a man love himself let him not commit any sin how-ever small.

௧०. ‡ அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

* எத்துணைச் சிறிதொன்றாயினும் என்றும் பாடமுண்டு.

§ இலக்கணக்கொத்து "அவைதா - மனமொழி" என்னுஞ் சூத்தி ரத்தினுரையில் 'பட்டணத்துப் பிள்ளையார் வினைகளை வரம்பு (எல்லை) செய்யுமிடத்து 'செய்தன சிலவே செய்வன சிலவே, செய்யா நிற்பன சில வே யவற்றிடை, நன்றென்ப சிலவே தீதென்ப சிலவே, யொன்றினும் படாதன சிலவே' என மூவினை கொண்டார்" என்று கூறுகின்றது.

‡ பிரயோக விவேகநூலார் "ஆக்கிய சொற்க டகுதி" என்னுஞ் செய் யுளினுரையில் அருங்கேடன் என்பதனைக் கேடரியன் என விகுதி பிரித் துக் கூட்டுவர்.

பரி.—(இ - ள்). ஒருவன் செந்நெறிக்கட் செல்லாது கொடுநெறிக் கட் சென்று பிறர்மாட்டுத் தீவினைகளைச்செய்யானாயின், அவனை, அரி தாகிய கேட்டையுடையனென்பதறிக (எ - று).

* அருமை - இன்மை. அருங்கேடனென்பதனை † "சென்றுசேர் கல் லாப் புள்ள புள்ளி லென்றாழ் வியன்குளம்" என்பது போலக்கொள்க. ஒடி என்னும் வினையெச்சம் செய்யானென்னும் எதிர்மறைவினையுட் ‡ செய்தலோடு முடிந்தது. இதனாற் றீவினைசெய்யாதவன் கேடிலனென் பது கூறப்பட்டது.

---

* அருமை - அருங்கேடன் என்பதன் அருமையென்னும்பகுதி. இஃது இல்லாமை யென்னும் பொருளை யிங்கேயுணர்த்திற்று "தனக்கு வமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான், மனக்கவலை மாற்ற லரிது" என்னுங் குறளின் விசேடவுரையில் "உறற்பால நீண்டா விடுதலரிது" என்றாற்போல ஈண்டு அருமை யின்மைமே னின்றது" என் றுகூறியிருத் தலுநீங் கறியத்தக்கதாம்.

சேடரியன் என்பது அருங்கேடன்என்றாயது வடமொழிப்புணர்ச்சி. ' இந்நான் கியல்பு மியம்புவர் மொழிக்கும்" என்னுஞ்சூத்திரத்திலுரையில், "இனிச் சொற்கள் இங்ஙனந் தமிழ்மொழி விதியால் நிலைமாறுதலுமன்றி, வடமொழி விதியால் நிலைமாறுதலுமுள. உ-ம் செய்தவேள்வியர்;எய்திய செல்வத்தர்; கழிந்தவுண்டியர்; வேண்டாவுயிரார்; அருங்கேடன்; கொண்ட கூழ்த்தாகி; கூப்பியகையினர்; வெறுத்தவாசையர்; பொறுத்த சடையினர்; கெட்டவறுமையர்; விட்டவாவினர்; வேர்த்து வெகுளார்; கொழுநற் றொழுதெழுவாள்; வாயபிளந்துறங்கினான்; குறட்டைவிட் டுறங்கினான், எனவரும்.

இனித் தமிழ்மொழிவிதியால் நிலைமாறுதற்கும், வடமொழிவிதியால் நிலைமாறுதற்கும் வேறுபாடென்னெனின், நிலைமொழியும் வருமொழியுந் திரியாது தம்முள் நிலைமாறுதல்; திரிந்து தம்முள் நிலைமாறுதலென்க. உ-ம்; வைக்குந் தன்னாளையெடுத்து; பருகுவன்னையதனோ யெல்லாங்கெட, எ-ம், வாய்பிளந்துறங்கினான்;குறட்டைவிட்டுறங்கினான்; எ-ம்,முறையேகாண்க" என்று இலக்கணக் கொத்துக் கூறிற்று.

† அகநானூறு 42. இதன்பொருள் சென்று சேருதலையறியாத பற வைகளையும் அப்பறவைகளைப்போல (சென்று சேருதலையறியாத) வெயி லையுமுடைய பெரியகுளம் என்பது;பறவைகளும்சூரியகிரணமுஞ் சேராத குளமெனபதாம். சென்று சேர்கல்லாப்புள்ளவியன் குளம் என்பது வட மொழிப் புணர்ச்சி. என்றாழ் என்பதற்கு மிங்ஙனமே கொள்க.

‡ பகுதியைத்தொழிற்பெயராகக் கொள்ளுதலை(செய்யென்னும் பகு தியைச் செய்தலென்னும் தொழிற்பெயராகக்கொள்ளுதலை) 'ஏரினுழாஅர்' என்னுங் குறளில் உழார் என்பதற்கு 'உழுதலைச்செய்யார்'என்றுரை கூறி யிருப்பதாலு மறிக.

**தெளி.**—(இ - ள்). (ஒருவன் செவ்வையான வழியிற் செல்லாது) **மருங்கோடி** - கொடியவழியிற்சென்று, **தீவினை** - தீவினைகளை, **செய்யானெனின்** - (பிறரிடத்து) செய்யானாயின், **அருங்கேடனென்பது**-(அவன்) கேடில்லாதவனென்பதை, **அறிக** - அறியக்கடவர், (எ-று).

**அருங்கேடன்** - கேடரியன். அருமை - இன்மைப்பொருளது. ஒடியென்னும் வினையெச்சம் செய்யானென்னுமெதிர்மறை வினையின் செய் (செய்தல்) என்னும் பகுதிகொண்டு முடிந்தது. இதனால் தீவினை செய்யாதவன் கேடில்லாதவனாவனென்பது சொல்லப்பட்டது. (மருங்கு-பக்கம்).

(க - து). தீவினை செய்யாதவனுக்குக் கேடுண்டாகாது.

10. Know ye that he is freed from destruction who commits no evil, going to neither side of the right path.

பதினெட்டாவது அத்தியாயம்.

## § ஒப்புரவறிதல்:—On Benevolence.

பரி.—அஃதாவது உலகநடையினை யறிந்துசெய்தல். 1 உலகநடை 2 வேதநடைபோல 3 அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து

"இனியொரு பொருளின் புடைபெயர்ச்சியே வினையென்பது எல்லார்க்கு மொப்பமுடிந்தது; அவ்வினையைக் கொள்ளுதலால் வினையெச்சமென்பதும் அங்ஙனமுடிந்தது. அவ்வினையெச்சம் வினையைக்கொள்ளுதலன்றி வினையின்மையைக் கொள்ளாது என்பதும் அங்ஙன முடிந்தது. ஆகவே, உண்டுகிடந்தான என்பது பொருந்தும். உண்டுகிடவான் என்பது பொருந்தாது. இலக்கணவழுவேயாம். ஆகையால் அம்மறைச்சொல்லினுள் முதனிலையைப்பிரித்து ஒருபொருளின் புடைபெயர்ச்சியாகிய புடைபெயர்ந்த நடத்தலென்னுந் தொழிற்பெயராக்கி, வினையெச்சத்தை வினைகொண்டுமுடித்துப் பின்புசெய்யானென்னு மறையைவருவித்து உண்டு நடத்தலைச் செய்யானென்று முடிப்பர். இக்கருத்துப் பரிமேலழகர்க்கும் உரையாசிரியர்க்கும் நியமம். இது மறைச்சொல்லின் முதனிலை விதிப்பொருள் பெற்றது" என்று இலக்கணக்கொத்து நூலாசிரியர் "விதிச்சொன் மறைப்பொருளாகி வருநவும்" என்னுஞ் சூத்திரத்தினுரையிலெழுதியிருப்பது மிகவறியத்தக்கதாம்.

§ ஒப்புரவறிதற்குப்பயன் இம்மையிற்புகழ். இஃது ஈகை யதிகாரத்தின் அவதாரிகையில் "இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின் வைக்கப்பட்டது" என்றும், இவ்வதிகாரத்தின் பத்தாஞ்செய்யுளின் விசேடவுரையில் "புகழ்பயத்தல்நோக்கி" என்றும், கூறியிருத்தலினாலும் விளங்கும்.

1 உலகநடை - லௌகிகப் பிரக்கிரியை. 2 வேதநடை - வைதிகப் பிரக்கிரியை. (நடை - ஒழுக்கம்). 3 அறநூல்கள் - மனுமுதலிய தருமசாஸ்திரங்கள்.

**செய்யுந் தன்மைத்தாகலின் 'ஒப்புரவறிதல்' என்றார். † மேல் மன மொழி மெய்களால் 5 தவிரத்தகுவன கூறினார். இனிச்செய்யத் தகுவன வற்றுள் 6 எஞ்சிநின்றன கூறுகின்றாராகலின், இது தீவினை யச்சத்தின் பின் வைக்கப்பட்டது.**

*தெளி.—அஃதாவது உலகநடையையறிந்து(உபகாரஞ்)செய்தலாம். லௌகிகவொழுக்கமானது வைதிக வொழுக்கம்போலத் தருமசாஸ்திரங்களுள் சொல்லப்படுவதல்லாமல் தாமே அறிந்துசெய்யுந் தன்மையதாதலால் 'ஒப்புரவறிதல்' என்றார். முன்னர் மனோவாக்குக் காயங்களாற் செய்யத்தகாதனவற்றைச் சொல்லினார். இனிச் செய்யத்தகுவனவற்றுள் (முன் சொல்லப்பட்டனவற்றுள்) அடங்காதனவற்றைச் சொல்லுகின்றாராகையால், இது (ஒப்புரவறிதல்)தீவினையச்சத்தின்பின் வைக்கப்பட்டது.*

க. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

**பரி.—(இ - ள்). தமக்கு நீர் உதவுகின்ற மேகங்களினிடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்யாநின்றன, ஆகலான், அம்மேகங்கள் போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்குவனவல்ல.**

*என்னாற்றும் என்ற வினா யாதும் ஆற்றா என்பது தோன்ற நிற்றலின் $ அது வருவித்துரைக்கப்படும். || தவிருந்தன்மையவல்ல வென்பது கடப்பாடென்னும் பெயரானே பெறப்பட்டது. ¶ செய்வாரது வேண்டாமையைச் செயப் படுவனமேலேற்றினார்.*

*தெளி.—(இ - ள்). உலகு - உயிர்கள், மாரிமாட்டு—(தமக்குநீருதவுகின்ற)மேகங்களினிடத்து, என்-என்னபிரதியுபகாரத்தை, ஆற்றும்-செய்கின்றன, [ஒன்றும் செய்கின்றனவில்லை.] (ஆதலால்), கடப்பாடு - (அம்மேகங்கள் போல்வார் செய்யும்) உபகாரங்களும், கைம்மாறு-பிரதியுபகாரங்களை, வேண்டா - வேண்டுவனவல்ல, (எ - று).*

*கொல், ஓ, அசை. (உலகு) 'என்னாற்றும்' என்னுங்கேள்வி (உலகு) யாதும் ஆற்றா (செயயா) என்பது தோன்றநிற்றலால், அது வருவித்துச் சொல்லப்படும். கடப்பாடென்னும் பெயரினாலேயே(உபகாரங்கள்) அவசியஞ் செய்யத்தக்கனவென்பது பெறப்பட்டது. கடப்பாடு-முறையறிந்து*

---

*† மேல் - முன்னே. அஃதாவது பிறனில் விழையாமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம் என்னும் அதிகாரங்களில். 5 தவிரத்தகுவன-ஒழிக்கத்தக்கவை. 6 எஞ்சிநின்றன - மிகுந்துநின்றவை.*

*$ அது - யாதும் ஆற்றா என்பது.*

*|| தவிருந்தன்மையவல்ல - ஒழிக்குந்தன்மையன அல்ல.*

*¶ இது வினைமுதலினது பண்பு செயப்படுபொருள்மேலாய வுபசார வழக்கு.*

செய்யுமுபகாரம். உபகாரஞ்செய்வாரது வேண்டாமையை அவரால் செய்யப்படும் உபகாரத்தின்மேலேற்றிக் கடப்பாடு கைம்மாறுவேண்டாஎன்று கூறினார்.

(க - து). அறிவுடையார் பிறர்க்குக் கைம்மாறு கருதாது உபகாரங்கள் செய்வர் என்பது.

1. Benevolence seeks not a retrun. What does the world give back to the clouds?

உ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

பரி.—(இ - ள்). * தகுதி யுடையார்க் † காயின் முயறலைச் செய்து ஈட்டிய பொருள் முழுதும் ஒப்புரவு ‡ செய்தற் பயத்தவாம்.

§ பிறர்க்குதவாதார் பொருள் போலத் தாமே உண்டற்பொருட்டும் வைத்திழத்தற் பொருட்டும் அன்றென்ப தாயிற்று.

தெளி.—(இ - ள்). தக்கார்க்கு - தகுதியுடையவர்க்கு (ஆயின்), தாளாற்றி - முயற்சிசெய்து, தந்த - சம்பாதித்த, பொருளெல்லாம் - பொருளனைத்தும், வேளாண்மை - உபகாரத்தை, செய்தற்பொருட்டு - செய்தற் பயனுடையனவாம், (எ - று).

(தக்கார் முயற்சிசெய்து சம்பாதித்தபொருள்) பிறர்க்கு உதவி செய்யாதவரது பொருள்போலத் தாமே அனுபவித்தற் பொருட்டும், (சேர்த்து) வைத்து இழத்தற்பொருட்டும் அன்றுமென்பதாயிற்று.

(க - து). தக்கார் முயற்சிசெய்து பொருளைச்சம்பாதிப்பது பிறர்க்கு உபகாரஞ்செய்தற் பொருட்டாம் என்பது.

2. To exercise benevolence towards the worthy is the whole design of labouring and acquiring property.

ங. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

---

* தகுதி-கல்வி கேள்வியறிவு ஒழுக்கங்களா லுண்டாகிய யோக்கியம்.

† ஆயின் (ஆனால்) என்பது செய்யுளில் குறைந்து நின்றது.

‡ செய்தற் பயத்தவாம் - செய்தலாகிய பிரயோஜனமுடையனவாம்.

§ இதனால் சம்பாதித்த பொருளைத் தக்கார்க் குதவித் தாமுமனுபவித்து வரவேண்டு மென்பது பெறப்படுமாறறிக.

**பரி:—(இ-ள்). தேவருலகத்தும் இவ்வுலகத்தும் ஒப்புரவுபோல நல்லன பிறசெயல்களைப் பெறுதலரிது, (எ-று).**

$ ஈவாரும் ஏற்பாருமின்றியே யெல்லாரும் ஒருதன்மையராதலின், புத்தேளுலகத்து அரிதாயிற்று ; யாவர்க்கும் + ஒப்பது இதுபோற் பிறிதொன்றின்மையின், இவ்வுலகத்து அரிதாயிற்று. † பெறற்கரிதென்று பாடமோதிப் பெறுதற்குக் காரண மரிதென் றுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் ஒப்புரவினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). புத்தேளுலகத்தும்-தேவருலகத்திலும், ஈண்டும் - இவ்வுலகத்திலும், ஒப்புரவின் - உபகாரம்போல, நல்ல - நல்லனவாகிய, பிற-வேறுசெயல்களை, பெறல் - பெறுதல், அரிது - அரிதாம், (எ-று).

கொடுப்பாரும் கொள்வாரும் இல்லாமலே எல்லாரும் ஒருதன்மையராயிருத்தலால், தேவருலகத்தில் ஒப்புரவுசெய்தல் அரிதாயிற்று; யாவருக்கும் ஒப்பது இவ்வொப்புரவு போல் வேறொன்றில்லாமையால், இவ்வுலகத்தில் அரிதாயிற்று. இவை மூன்று பாட்டாலும் ஒப்புரவினது சிறப்புசொல்லப்பட்டது.

(க-து). விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும் உபகாரத்திற்கு மேற்பட்டது வேறொன்றில்லை என்பது.

3. It is difficult to obtain another good equal to benevolence either in the world of the gods or in this world.

ச. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் ‖ மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

பரி.—(இ-ள்). உயிரோடுகூடி வாழ்வானாவான் உலக நடையினை யறிந்து செய்வான், அஃதறிந்து செய்யாதவன் உயிருடையவனே யாயினும் செத்தாருள் ஒருவனாகக் கருதப்படும், (எ-று).

---

$ பொருளைக் கொடுப்பாரும் அதனைப் பெறுவாரும் இல்லாமல் தேவர்களெல்லாரும் ஒருதன்மையரா யிருக்கின்றன ரென்பது "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" என்றுவரும் பிரயோகத்தா னு மறிதற்பாற்றும்.

+ ஒப்பது-ஒப்பத்தக்கதா யிருப்பது.

† பெறலரிதென்பதற்குப் பிரதியாகப் பெறற்கரிதென்று பாடங்கூறி (ஒப்புரவு) பெறுதற்குக்காரணமரிதாமென் றுபொருள் கூறுவாருமுண்டு.

‖ மற்றை யென்பது சுட்டியதற்கினமாய் நின்றது.

உயிரின் அறிவுஞ் செயலுங் காணாமையின் 'செத்தாருள் வைக்கபடும்,' என்றார். இதனால் † உலகநடைவழு வேதநடைவழுப்போலத் தீர்திறன் உடைத்தன் றென்பது கூறப்பட்டது.

தேளி:—(இ-ள்). ஒத்ததறிவான் - உலகநடையினை யறிந்துசெய்பவன், உயிர்வாழ்வான் - உயிரோடுகூடிவாழ்பவனாவான், மற்றையான் - அவ்வுலக நடையினை யறிந்து செய்யாதவன், (உயிருடையவனே யாயினும்), செத்தாருள் - இறந்தவர்களுள், வைக்கப்படும் - (ஒருவனாக) வைக்கப்படுவான் (நினைக்கப்படுவான), (எ - று).

உயிருக்குரிய அறிவையும் செயலையும் மற்றையானிடத்துக் காணாமையால், அவன் 'செத்தாருள் வைக்கப்படும்' என்றார். இதனால் உலகநடையிற் றவறுதல் வேதநடையிற் றவறுதல்போலத் தீரும் வழியை யுடையதன்றென்பது சொல்லப்பட்டது.

(க - து). உலக நடையை யறிந தொழுகாதவன் பிணத்திற்கொப்பாக நினைக்கப்படுவான் என்பது.

4. He truly lives who knows and discharges the proper duties of benevolence He who knows them not will be reckoned among the dead.

ரு. * ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

பரி.—(இ-ள்). உலகநடையை விரும்பிச் செய்யும் பெரிய வறிவினை யுடையவனது செல்வம், ஊரின் வாழ்வார் தண்ணீருண்ணுங் குளம் நீர் நிறைந்தாற் போலும், (எ-று).

---

† உலகநடையை யறிந்து செய்தலி னின்றுந் தவறுதல் வேதநடையான வைதிக வொழுக்கத்தி னின்றுந் தவறினார்க்குக் கழுவாய் (பிராயச்சித்தம்) இருப்பதுபோலத் தீர்திறன் (தீரும்வகை-பிராயச்சித்தம்) உடையதன் றென்பது சொல்லப்பட்ட தென்பது. இதனால் வேத நடையினின்றுந் தவறினார்க்கு அத்தவறுதலி னின்று முய்யும்வகை யுண்டென்றும், உலகநடையினின்றுந் தவறினார்க்குஅத்தவறுதலினின்று முய்யும்வகையின்றென்றும் பெற்றும்; பெறவே, உலகநடையி னின்றுந தவறியதாலுண்டாகிய பழி (துரியோதனன் துச்சாதனன் முதலியவர்களது பழிகளைப் போல) உலகமுள்ளளவும் (பழியைச் செய்தவன் சன்மார்க்க விசேடத்தால் மோட்சமடைந்தாலும் தான் ஒழியாமல்) நிற்குமென்பது திண்ணமாயிற் றென்க.

* ஊரரா லுண்ணப்படுவது என்னும் பொருளதாகிய ஊருணியென்னும் செயப்படுபொருள் இங்கு வினைமுதலாக நின்றது.

† நிறைதலென்னும் இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின் மே லேற்றப்பட்டது. ‡ பாழ்போகாது நெடிதுநின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாது உதவு மென்பதாம்.

தெளி:—(இ - ள்). உலகு - உலகநடையை, அவாம் - விரும்பிச்செய்யும், பேரறிவாளன் - பெரியவறிவினை யுடையவனது, திரு - செல்வம், ஊருணி - ஊரில்வாழ்வார் நீருண்ணுங் குளமானது, நீர்நிறைந்தற்று - நீர் நிறைந்தாற்போலும், (எ - று).

நிறைதலென்னும் நீரின் தொழிலை நீருக்கிடமாகிய குளத்தின்மே லேற்றி 'ஊருணி நீர்நிறைந் தற்றே' என்று கூறப்பட்டது. அச்செல்வம் பாழ்படாமல் நெடுங்காலமிருந்து எல்லாருக்கும் வேண்டுவனவற்றைத் தவறாது உதவுமென்பதாம்.

(க - து). பேரறிவாளனது செல்வம் ஊரருண்ணுங் குளத்திலே நீர் நிறைந்தாற் போன்று யாவருக்கும் பயன்படுவதாம்.

5. The wealth of that man of eminent knowledge who desires (to exercise the benevolence approved of in) the world is like the full waters of a city tank.

---

௬. பயன்மரம் § முள்ளூர்ப்பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்.

பரி:—(இ - ள்). செல்வம் ¶ ஒப்புரவுசெய்வான் கண்ணே படுமாயின், அது பயன்படுமரம் ஊர்நடுவே பழுத்தாற்போலும், (எ - று).

0 உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின், அதனையே 'நயன்' என்றார். எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுக்கு மென்பதாம்.

---

† நிறைதலென்னும் இடத்து (குளத்து) நிகழ்பொருளாகிய நீரின் (ஜலத்தின்) தொழிலை அதற்கு இடமாகிய குளத்தின்மேலேற்றி 'ஊருணி நீர்நிறைந் தற்றே' என்று சொல்லப்பட்டது. இஃதிடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேலாய வுபசாரவழக்கு.

‡ உலகநடையை விரும்பிசசெய்யும் பேரறிவாளனது செல்வமானது ஊருணி நீர்போல் பாழ்போகாது நெடுங்காலம் நின்று யாவர்க்கும் அவர் விரும்புவனவற்றைத் தப்பாது உதவுமென்பதாம்.

§ உள்ளூர் என்பது ஊருள் என்பதன் இலக்கணப்போலி; முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகையுமாம்.

¶ ஒப்புரவு செய்வான் செல்வம் ஊர்நடுவே பயன்படுமரம் பழுத்தாற் போன்றதென்பது "நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க, படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்" என்று நாலடியார் கூறியவதைத் தழுவுகின்ற வாறறிக.

0 உலகநீதி பலவாவன - ஒருவரையும் பொல்லாங்கு சொல்லாமை, வஞ்சனைகள் செய்வாரோ டிணங்காமை, மனம்போன போக்கெல்லாம் போகாமை முதலியனவாம்.

தெளி:—(இ - ள்). செல்வம் - செல்வமானது, நயனுடையான்க உபகாரஞ் செய்பவனிடத்தே, படின் - உண்டாகுமாயின், (அவ்வுண்டா தல்), உள்ளூர் - ஊர்நடுவே, பயன்மரம் - (யாவர்க்கும்) பிரயோஜனப்படு கின்ற மரமானது, பழுத்தற்று - (பழம்) பழுத்தாற்போலும், (எ - று).

ஆல் - அசை. உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையால், அவ் வொப்புரவையே 'நயன்' என்றார். அவ்வொப்புரவுடையான் அம்மரம்போல யாவர்க்கும் எளிதிலே பயன்தருபவனாவா னென்பதாம்.

(க - து). உபகாரஞ் செய்பவனிடத்திற் செல்வமுண்டாதல் நடுவூரிலே பயன்படுமரம் பழுத்தாற்போன்று பயனுடையதாம்.

6. The wealth of a man (possessed of the virtue) of benevolence is like the ripening of a fruitful tree in the midst of a town.

எ. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

பரி:—(இ - ள்). செல்வம் ஒப்புரவுசெய்யும் பெரியதகைமையை யுடையான்கண்ணே படுமாயின், அஃது எல்லாவுறுப்பும் பிணிகட்கு மருந்தாய்த் $ தப்பாத மரத்தை யொக்கும், (எ - று).

தப்புதலாவது 1 கோடற்கரிய விடங்களி னின்றுதல், 2 மறைந்து நின்றுதல், 3 காலத்தான் வேறுபட்டாதல் பயன்படாமை. 4 தன்குறை

$ தப்பாத - பயன்படுதலிற் றவறாத.

1 ஒருவன் சென்று கொள்ளுவதற் கருமையான செங்குத்தானமலை முதலிய விடத்திலிருத்தல்.

2 ஒருவன் சென்று கொள்ளுவதற்கு அருமை யில்லாத புழைக்கடை முதலிய விடத்திலிருந்தும் வேறு பொருள்கள் மறைக்க மறைந்து நிற்றல்.

3. ஒருகாலத்திலிருந்து மற்றொரு காலத்திராமை.

4. மருந்தாகித் தப்பாத (வேம்பு முதலிய) மரம் யாதொரு மாறுபாடு மில்லாமல் வெளிப்பட்டு நின்று தன்னுடைய கிளை தளிர் முதலியவற்றை முறித்தும் பறித்தும் செதுக்கியும் பிறர் செய்யும் தன்னுடைய குறைவை நோக்காது (தன்னுறுப்புக்களை யுபயோகப்படுத்திக் கொள்ளும்) எல்லாரது வருத்தத்தையும் ஒழிப்பது போன்று, பெருந்தகையானானது செல்வமும் யாதொரு மாறுபாடு மில்லாமல் வெளிப்பட்டு நின்று தன்னை யுடையவன் பிறர்க்குக் கொடுத்தலினாற் குறையும் தன்னுடைய குறைவை நோக்காது எல்லாரது வருத்தத்தையுந் தப்பாம லொழிக்குமென்பதாம். "தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம், வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர், திங்கள், கறையிருளை நீக்கக் கருதா துலகி, னிறையிருளை நீக்குமே யின்று" என்பது நன்னெறி.

நோக்காது எல்லார் வருத்தமுந் தீர்க்குமென்பதாம். இவை மூன்று பாட்டானும கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). செல்வம்-செல்வமானது, பெருந்தகையான்கண்-(உபகாரஞ்செய்யும்) பெரிய தகைமையை யுடையவனிடத்தே, படின்-உண்டாகுமானல், (அச்செல்வமானது), மருந்தாகி - (எல்லாவுறுப்புக்களும் பிணிகளுக்கு) மருந்தாய, தப்பா - தப்பாத, மரத்தற்று - மரத்தை ஒக்கும்.

ஆல் - அசை. எல்லாவுறுப்புக்களுமென்றது மரத்திற்கு-இலே. பூ, காய், கனி முதலியவற்றை; செல்வத்திற்கு - அனுபவித்தற்குரிய பலபொருள்களே. தப்புதலாவது கொள்ளுதற்கரிய விடங்களிலே நின்றுவது, மறைந்து நின்றுவது, காலத்தால் வேறுபட்டாவது பயன்படாமை. மருந்தாகித் தப்பாத மரமானது தன் குறைவை நோக்காது எல்லார்வருத்தமுந் தீர்க்குமாறுபோலப் பெருந்தகையானது செல்வமும் தன்குறைவை நோக்காது எல்லார் வருத்தமுந தீர்க்குமென்பதாம். இவை மூன்று பாட்டாலும உபகாரஞ் செய்பவனது பொருள் பயன்படுமாறு சொல்லப்பட்டது.

(க - து). பெருந்தகைமையை யுடையவனிடத் துண்டாகுஞ் செல்வம் மருந்தாகித் தபபாத மரம் போன்று பயனுடையதாம்.

7. Wealth is like a tree which as a medicine is an infallible cure for disease, if it be in the possesion of a man who has the great excellence (of benevolence)

அ. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

பரி:—(இ - ள்). செல்வஞ் சுருங்கிய காலத்தும் ஒப்புரவுசெய்தற் குந்தளரார், தாம்செய்யத் தகுவனவற்றை யறிந்த வியற்கை யறிவுடையார், (எ - று).

† பிறவெல்லாம் ஒழியினும், இஃதொழியாரென்பதாம்.

தெளி:—(இ - ள்). கடனறி - (தாம்) செய்யத்தகுந காரியங்களை யறிந்த, காட்சியவர் - இயற்கையறிவுடையவர், இடனில் பருவத்தும்-செல்வஞ் சுருங்கிய காலத்திலும், ஒப்புரவிற்கு - உபகாரஞ்செய்வதற்கு, ஒல்கார் - தளரார், (எ - று).

(கடனறி காட்சியவர் இடம்பொருளேவல் முதலிய) மற்றைய வெல்லா மொழிந்தாலும், இவ் வொப்புரவு செய்தலே யொழியா ரென்பதாம்.

(க - து). அறிவுடையோர் வறுமை நேர்ந்த காலத்திலும் பிறர்க்குதவி செய்வதிற் குறையார் என்பது.

---

† "வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி, பண்பிற் றலைப்பிரித லின்று" என்னுங் குறள் ஈண்டுக் கவனிக்கத் தக்கதாம்.

8. The wise who know what is *duty* will not diminish their benevolence even when they are without wealth.

கூ. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

பரி.—(இ - ள்). ஒப்புரவு செய்தலையுடையான் நல்கூர்ந்தானாதலாவது, தவிராது செய்யும் நீர்மையையுடைய அவ்வொப்புரவுகளைச் செய்யப்பெறாது வருந்துகின்ற வியல்பாம், (எ - று).

*தான் நுகர்வன நுகரப்பெறாமை அன்றென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் வறுமையான் ஒப்புர வொழிதற்பாற் றன்றென்பது கூறப் பட்டது.*

தெளி.—(இ-ள்). *நயனுடையான் - உபகாரஞ்செய்தலையுடையவன், நல்கூர்ந்தானாதல் - வறுமையுடையவ னாதலாவது, செயும் - (ஒழியாமற்) செய்யும், நீர - குணத்தையுடைய அவ்வுபகாரங்களை, செய்யாது-செய்யப் பெறாமல், அமைகலாவாறு - வருந்துகின்றவியல்பாம், (எ-று).*

*தான் அனுபவிக்கும் பொருள்களை யனுபவிக்கப்பெறாமை நயனுடையானுக்கு வறுமையன்றென்பதாம. இவை யிரண்டு பாட்டாலும் வறுமையால் உபகாரம் செய்யாது விடத்தக்கதன்றென்பது சொல்லப்பட்டது.*

(க - து). *உபகாரி தரித்திரனாவது தான் பிறர்க்குச் செய்யுமுதவியைச செய்ய முடியாமையால் வருந்துதலேயாம் என்பது.*

9. To be in sorrow through inability to perform the benefits which should be performed is the poverty of a benevolent man.

க0. ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக் * கோட் டக்க துடைத்து.

பரி:—(இ-ள்). ஒப்புரவுசெய்தலான் ஒருவனுக்குப் பொருட்கேடு வருமென்பாருளராயின், அக்கேடு (ஒருவன்) தன்னை விற்றயினுங் கோள்ளுந் தகுதியை யுடைத்து, (எ-று).

*† தன்னை விற்றுக்கொள்ளப் படுவதொருபொருள் இல்லையன்றே? இஃதாயின், அதுவுஞ் செய்யப்படுமென்றது; புகழ் பயத்தல் நோக்கி. இத னால் ஒப்புரவினாற் கெடுவது கேடன்றென்பது கூறப்பட்டது.*

---

* *கொள்ளத் தக்க துடைத்து என்பது செய்யுள் விகாரத்தால் கோட் டக்க துடைத்து என்றாயிற்று.*

† *ஒருவன் தன்னைப் (பிறர்க்கு) விற்று (விக்கிரயஞ் செய்து) கொள்ளப்படுவதொரு பொருள் (வாங்கப்படும் வஸ்து) இல்லை யன்றே? (இன்றாயினும்) இஃதாயின் (ஒப்புரவு செய்தலால் பொருட் கேடுவருமானால்)*

தெளி.—(இ-ள்). ஒப்புரவினால் - உபகாரஞ் செய்தலால், வருங்கேடெனின் - (ஒருவனுக்குப்பொருட்) கேடு வருமென்பாரிருப்பாராயின், அஃது - அக்கேடானது, ஒருவன்—, விற்று - (தன்னை) விற்றாயினும், கோட்டக்கதுடைத்து - வாங்குந் தகுதியை யுடையதாகும், (எ-று).

ஒருவன் தன்னைப்பிறரிடத்து விற்றுத் தான் வாங்கிக்கொள்ளப்படுவதொரு பொருள் இல்லையல்லவா? ஒப்புரவினால் கேடுவருவதுண்டாயின், அது புகழுண்டாக்குதலைக் கருதி அக்கேட்டின் பொருட்டு அதுவும் (தன்னைவிற்றலும்) செய்யப்படுமென்பதாம். இதனால் ஒப்புரவினால் கெடுவது கேடன்றென்பது சொல்லப்பட்டது.

(க - து). உதவிசெய்தலாற் பொருட்கேடு வருமென்றாலும், அக்கேட்டினை யொருவன் தன்னை விற்றாயினுங்கொள்ளக்கடவன்.

10. If it be said that loss will result from benevolence such loss is worth being procured by the sale of one's self.

## பத்தோன்பதாவது அதிகாரம்.

## † ஈகை.—On Alms-deeds.

பரி.—அஃதாவது $ வறியார் யேற்றார்க்கு * மாற்றது கொடுத்தல். ¶ இது மறுமை நோக்கியதாகலின், () இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது வறியராய் இரந்தவர்க்கு இல்லையென்னாது கொடுத்தலாம். இது (ஈகை) மறுமையைக் குறித்ததாகலின், இம்மையைக் குறித்த ஒப்புரவறிதலின்பின் வைக்கப்பட்டது.

---

(அக்கேட்டின்பொருட்டு) அதுவுஞ் செய்யப்படுமென்றது (தன்னை விற்றலும் செய்யப்படும என்று கூறியது); புகழ்பயத்தலை (கீர்த்தியுண்டாக்கலை) நோக்கி (என்க). "கெடுவாக வையா துலக நடுவாக, நன்றிக்கட் டங்கியான் றாழ்வு" என்னுங்குறள் ஈண்டுக் கவனிக்கத் தக்கதாம்.

‡ ஈகை - ஈதல். அஃதாவது உயர்ந்தோன் இழிந்தோனுக்கு அவன் வேண்டியதொன்றைக் கொடுத்தல். ஈதலைப் பெறுவோன் இழிந்தோனென்பது "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" என்னும் (தொல்காப்பியச்) சூத்திரத்தானு மினிது விளங்கும்.

$ வறியார் யேற்றார்க்கு - தரித்திரராய் வந்து யாசித்தவர்களுக்கு.

* மாற்றாமை - ஒன்றைக்கொடுத்துப் பிறிதொன்றை வாங்காமை. பிரதியுபகாரங் கருதாமை யென்றபடி.

¶ இது மறுமை நோக்கியதாகலின் - ஈகையானது மறுமை (மரணத்தின்பின் வரும் பயனைக்) குறித்ததாகலின்.

() இம்மை நோக்கிய - இம்மைப் (இப்பிறப்பின்) பயனாகிய புகழைக் குறித்த.

க. || வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

பரி.—(இ - ள்). ஒரு பொருளு மில்லாதார்க்கு அவர் வேண்டிய தொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது; அஃதொழிந்த எல்லாக்கொடையும் †† குறியெதிர்ப்பை கொடுக்கும் நீர்மையை யுடைத்து, (எ-று).

† ஒழிந்த கொடைகளாவன ‡ வறிய ரல்லாதார்க்கு ஒரு பயனோக் கிக் கொடுப்பன. குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங் கிய வாறே எதிர் கொடுப்பது. ¶ நீரது என்புழி அதுவென்பது பகுதிப் பொருள் விகுதி. § பின்னுந் தன்பால் வருதலின், 'குறியெதிர்ப்பை நீரதுடைத்து' என்றார். இதனான் * ஈகைய திலக்கணங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) வறியார்க்கு - ஒரு பொருளு மில்லாதவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றை, ஈவதே - கொடுப்பதே, ஈகை - (பிறர்க்குக்) கொடுத்தலாம், மற்றெல்லாம் - அவ்வறியார்க்குக் கொடுப்ப தொழிநத எல்லாக் கொடையும், குறியெதிர்ப்பை - குறிக்கப்பட்ட பின் வரும் பயனை (க் கொடுக்கும்), நீரது - குணத்தை, உடைத்து-உடையதாம்.

ஒழிந்த கொடைகளாவன வறியவரல்லாதவர்க்கு ஒரு பயனை நோக் கிக் கொடுப்பனவாம். குறி யெதிர்ப்பையாவது பிறரிடத்து ஓரளவு குறித் துப் பொருளை வாங்கி அவ்வாங்கியபடியே அவர்க்கு மீண்டும் எதிராய்க்

|| இக்குறளின் கருத்தை "ஏற்றகை மாற்றாமை யென்னுந் தாம் வரையா, தாற்றா தார்க் கீவதா மாண்கட-னாற்றின், மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல், பொலிகட னென்னும் பெயர்த்து" என்னும் நாலடிச் செய்யுளானு மறிக.

†† குறியெதிர்ப்பை என்பதில் ஐகாரம் சாரியை. குறியெதிர்ப்பு என் பது இறந்தகால வினைத்தொகை; அஃது (எதிர்காலத்திற் பெறும்படி யாகக்) குறித்த எதிர்ப்பு எனவிரியும். இதனது திரண்டபொருள் எதிர் காலத்திற் பெறும்படியாக வெண்ணி நிகழ்காலத்தில் ஒன்றை யொத்தார்க் கும் மிக்கார்க்குங் கொடுப்பதென்பது.

† ஒழிந்த - வறியவர்களுக்குக் கொடுத்த லொழிந்த.

‡ வறிய ரல்லாதார்க்கு - தரித்திர ரல்லாதவர்களுக்கு; அஃதாவது ஒத்தார்க்கும் உயர்ந்தார்க்கும்.

¶ நீரது என்பதன் அது என்பது நீர்மை யென்னும் பண்பின் விகாரமாகிய நீர்என்னும் பகுதியின் பொருளை யுணர்த்தித் தனக்கெனப் பொருளின்றி யிருத்தல்பற்றிப் பகுதிப்பொருள் விகுதியாயிற் றெனக.

§ பின்னுந் தன்பால் வருதலின்—ஒத்தாக்கும் மிக்கார்க்குங் கொடு த்தவை மறுபடியுந் தம்மிடத்தில் வருதலினால்,

* ஈதற்குரியவர் ஒன்பதின்மரென்றும், ஈதற்குரிய ரல்லாதார் ஒன் பதின்மரென்றும் காசிகாண்டம் கூறுகின்றது. அதுவருமாறு:—

கொடுப்பது. நீரது என்னுமிடத்து அது பகுதிப்பொருள் விகுதி. (அவ்வாறு கொடுத்த பொருள்) பின்னுந் தன்னிடத்து வருதலால் 'குறியெதிர்ப்பை நீரதுடைத்து' என்றார். இதனால் ஈகையினது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க - து). தரித்திரருக் கீதலே யீகையாவதன்றி யேனையோர்க் கீதல் ஈகையாகா தென்பது.

1. To give to the destitute is true charity. All other gifts have the nature of (what is done for) a measured return.

உ. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

பரி —(இ - ள்). ஏற்றல் வீட்டுலகிற்கு நல்லநெறி யென்பார் உளராயினும் * அது தீது; ஈந்தார்க்கு அவ்வுல கெய்துத லில்லை யென்பாருளராயினும் ஈதலே நன்று, (எ - று).

† எனினுமென்பது இருவழியும் அங்ஙனங் கூறுவார் இன்மை விளக்கி நின்றது. ‡ பிரிநிலை ஏகாரத்தால் பிறவறங்களின் ஈதல் சிறந்த தென்பது பெற்றாம். $ நல்லது கூறுவார் தீயதும் உடன் கூறினார்.

"மாண்புடை யாளர் சேண்மையர் தத்தம் வழிமுறை யொழுக்கினிலமர்ந்தோர், சேண்படு நிரப்பி னெய்தினோர் புரப்போர் தீர்ந்தவர் தந்தை தாய் குரவர், காண்டகு முதவி புரிந்துளோ ரினையோ ரொன்பதின் மருமுளங் களிப்ப, வேண்டுறு நிதிய மளிப்பின்மற் றொன்றே கோடியா மெனமறை விளமபும்."

"மூகனெ றி ரொன்றும் பிரியின்மற் றொன்று மொழிபவர் விழைவுறு தூத, ரகன்றகேள் வியிலா ரருமருத் துவர்க ளரும்பொருள் கவருநர் தூர்த்தர், புகலருந் தீமை புரிபவர் மல்லர் செருக்கினா புன்றொழிற் றீயோ, ரிகழ்தரு மினையோ ரொன்பது பெயர்க்கு மீந்திடல் பழுதெனவிசைப்பார்."

* அது - ஏற்றல் (யாசித்துப் பிறர்தலைப்பெறுதல்). யாசித்தல் தீதாதலை இரவச்சமென்னு மதிகாரத்திற் காண்க.

† நல்லாறெனினுங் கொளறீது,மேலுலக மில்லெனினு மீதலே நன்று' என்னு மிரண்டு வாக்கியத்திலு முள்ள எனினும் என்பது கொளல் நல்லாறு, ஈதலுக்குப் பயனாக மேலுலக மில்லை என்று அப்படி சொல்லுவா ரில்லாமையை விளக்கி நின்றது.

‡ பிரிநிலையாவது பலவற்றினின்று மொன்றைப் பிரித்துக் காட்டி நிற்றல்.

$ தீயதை விளக்கினாலல்லது நல்லது விளங்காமையினாலே 'ஈதலே நன்று' என நல்லது சொல்லவந்தவர் 'கொளறீது' எனத் தீயது முடன் கூறினார். இது ஒன்றின முடித்தல் தன்னின முடித்தலென்னு முத்தி. 'மறவற்க மாசற்றார் கேண்மை' என்னுங் குறளின் விசேடவுரையில் "இம்மைக்குறுதி கூறுவார் மறுமைக்குதவியு முடன்கூறினார்" என்று கூறியிருத்தலும் ஈண்டுக் கவனிக்கத்தக்கதாம்.

தேவி.—(இ-ள்). கொளல் - (பிறர் கொடுத்தலை வாங்கிக்) கொள்ளுதல், நல்லாறெனினும்-(முத்தியுலகத்தை யடைதற்கு) நல்லவழியென்பவர் இருப்பாராயினும், (அது), தீது-குற்றமாம்,(கொடுத்தவர்க்கு), மேலுலகம்-(அந்த) முத்தி யுலகத்தையடைதல், இல்லெனினும் - இல்லை யென்பவர் இருப்பாராயினும், ஈதலே - கொடுத்தலே, நன்று - நல்லது, (எ - று).

எனினுமென்பது இரண்டிடத்தும் அவ்வாறு சொல்லுவாரில்லாமையைக் காட்டிநின்றது. ஈதலே யென்னும் பிரிநிலை ஏகாரத்தால் பிறவறங்களில் ஈதல் சிறந்ததென்பது பெறப்பட்டது. நல்லது சொல்லவந்தவர் தீயதும் உடன்சொல்லினர்.

(க - து). யாசித்தல் முத்தியடைதற்கு நல்லவழி யென்றாலும் அது செய்தலாகாது. ஈதலால் முத்தியடைதலில்லை யென்றாலும் அது செய்தல் நல்லது என்பது.

2. To beg is evil, even though it were said that it is a good path (to heaven). To give is good, even though it were said that those who do so cannot obtain heaven.

ரு. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

பரி:—(இ - ள்). யான் வறியனென்று இரப்பான் சொல்லும் இளிவரவைத் தான் பிறர்கட் சொல்லாமையும், † அதனைத் தன்கட் சொன்னார்க்கு மாற்றது ஈதலும் இவை யிரண்டும் உளவாவன குடிப்பிறந்தான் கண்ணே, (எ - று).

மேற்றீதென்றது ஒழிதற்கும், நன்றென்றது செய்தற்கும் உரியவனை யுணர்த்தியவாறு. $ இனி 'இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்' என்பதற்கு 1 அவ்விளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தலெனவும், 2 அதனைப்பின்னும் பிறனொருவன்பாற்சென்று அவனுரையா வகையாற் கொடுத்த லெனவும், 3 யான்

† அதனை - அவ்விளிவரவை (துன்பந்தருமொழியை).

$ 'இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்' என்பதற்கு (பரிமேலழகர் பிறர் கூறிய மூன்றுரையை யெடுத்தெழுதிக் காட்டினார். அவை வருமாறு:—)

1. இலனென்னுமெவ்வம் - அத்துன்பந்தருமொழியை, (யாசிப்பானொருவன் றனக்கு), உரையாமை - சொல்லுவதற்கு (முன்னே அவன் குறிப்பை யறிந்து), ஈதல் - (பொருளைக்) கொடுத்த லென்றும், 2. இலனென்னு மெவ்வம் - அத்துன்பந்தரு மொழியை, உரையாமை - (மறுபடியும் பிறனொருவ னிடத்திற் போயவன்) சொல்லாத வண்ணம், ஈதல் - (பொருளைக்) கொடுத்தலென்றும், 3 இலனென்னு மெவ்வம் - (யானிப்போது பொருளுடையேன்) அல்லே னென்று (உலோப குணத்தினாலே

இதுபொழுது பொருளுடையே னல்லே னெனக்* கரப்பார் சொல்லும் இனியவரவைச் சொல்லாது கொடுத்தலெனவும் உரைப்பாருமுளர். அவர் ஈதலென்பதனைப் பொருட்பன்மைபற்றி வந்த பன்மையாக வுரைப்பர்.

தெளி.—(இ - ள்). இலனென்னும்-(யான்) இலனென்று (இரப்பவன்) சொல்லும், எவ்வம் - துன்பந்தருமொழியை, உரையாமை - (தான் பிறரிடத்துச்)சொல்லாமையும், (அதனைத்தன்னிடத்துச்சொன்னவர்க்கு), ஈதல் - (இல்லையென்னாது) கொடுத்தலும், (ஆகிய விவ்விரண்டும்), குலனுடையான் கண்ணே - நற்குடியிற் பிறந்தவனிடத்தே, உள - உண்டாயிருக்கும், (எ - று).

முற்செய்யுளில் கொளல்தீது என்றதைச செயயாது நீங்குவதற்கும், ஈதலே நன்றென்றதைச செய்தற்கும் உரியவனே அறிவித்த வாறும்.எவ்வ(துன்ப)மென்பது எவ்வந்தருமொழிக காதலின் காரியவாகுபெயராம்.

(க - து). யாசகர் கூறியதைப் பிறரிடத்துச் சொல்லாமையும் அவர்க்கில்லை யென்னாமல் பொருளைக் கொடுப்பதும் நற்குடியிற் பிறந்தவரிடத்துண்டாம் என்பது.

3. (Even in a low state) not to adopt the mean expedient of saying "I have nothing," but to give is the characteristic of the man of noble birth

---

ச இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

பரி.—(இ - ள்). இரந்தலேயன்றி இரக்கப்படுதலும் இனிதன்று, ஒருபொருளை யிரந்தவர் அது பெற்றதனால் இனிதாகிய அவர் முகங் காணுமளவும், (எ - று).

* எச்சவும்மையும் முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. இரக்கப்

தம்மிடத்திலுள்ள பொருளை யாசகர்க்கு) (மறைப்பவர்)சொல்லுந்துன்பந் தருமொழியை, உரையாமை - சொல்லாது, ஈதல் - (பொருளைக்) கொடுத்தலென்றும் பொருள் கூறுவாருமுண்டு. அவர் (அம்மூவகை யுரைகாரரும்) ஈதலென்பதனை ஈயப்படுமபொருள் பன்மை (பலவா யிருத்தல்) பற்றி வந்த பன்மையாக (ஈதல்கள் எனச்) சொல்லுவாரென்க [ஈயப்படும் பொருள் பலவாதலை முப்பத்திரண்டறங் கூறுமிடத்துக்காண்க]. "அருத்தியி னிலனென் றுமு னளித்தலு மிலனென் றப்பா, லுரைத்தில ரைச் சால வுதவலு மேற்கின் றூனும். வருத்துற விலனென் றுமை வழங்கிட வரைவில் செல்வம், பொருத்தலு மொன்றி றென்று புகழ்மிக விளங்கி நிற்கும்" என்று விநாயகபுராணம் இம்மூன்றுரையையுமடக்கிக் கூறிற்று

* இறந்தது தழீஇய வெச்சவும்மை. இரக்கப் படுதலும் என்பது இரத்தலே யன்றி யென்பதனைத் தழுவி யிருப்பதறிக.

படுதல் - இரப்பார்க்கு ஈவலென்றிருத்தல். † அதனை 'இன்னாது' என்றது ‡"எல்லா மிரப்பார்க்கொன் றீயாமை" கூடுங்கொல்லோ வென்னும் ¶ அச்ச நோக்கி. எனவே, எல்லாப்பொருளும் ஈதல் வேண்டுமென்பது பெறப் பட்டது.

**தெளி**—(இ - ள்) (யாசித்தலே யல்லாமல்) இரக்கப்படுதல் - யாசிக் கப்படுதலும், இன்னாது - இன்பஞ்செய்வதன்று, இரந்தவர்-(ஒருபொருளை) யாசித்தவர், (அப்பொருளைப் பெற்றதனால்), இன்முகம் - இனிதாகிய (அவர்) முகத்தை, காணுமளவு - பார்க்குமளவும், (எ - று).

இரக்கப்படுதலு மென்னும் எச்சவும்மையும் அளவும் என்னு முற் றும்மையும் செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றன. இரக்கப்படுதல்-யாசிப் பவர்க்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பேனென விருத்தல். யாசிப் பவர்க்கு அவர் வேண்டியன வெல்லாங் கொடுக்கக் கூடாமை நேரிடுமோ வென்னும் அச்சத்தைக்குறித்து அதனை 'இன்னாது' என்றார். எனவே, யாசிப்பவர்க்கு எல்லாப் பொருளும் கொடுத்தல் வேண்டு மென்பது பெ றப்பட்டது.

(க - து). ஈதலுடையார் இரப்பவரது இனிய முகத்தைக் காணுமளவும் வருந்துவர்.

4. To see men begging from us is disagreeable, until we see the pleasant countenance of those who beg.

ரு. § ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

† அதனை - இரக்கப்படுதலை.

‡ நாலடியார் குடிப்பிறப்பு. 5. இதன்பொருள் பொருந்திய எல்லாப் பொருளையும் யாசிப்பவர்க்குக் கொடுக்கக்கூடாமை என்பது. ¶ "எல்லாம், இரப்பார்க்கொன் றீயாமை யச்சம்" என்பது நாலடியார்.

§ "துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத், திறந்தாரை யெண் ணிக்கொண் டற்று" என்றும், "செயற்கரிய செய்வார் பெரியர்" என்றும், "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்" என்றும், துறவறத்தாரையுயர்த்திக் கூறி "துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தாரகொல், மற்றை யவர்க டவம்" என்று இல்லறத்தாரை யிழித்துக்கூறிய நாயனார் இக்குறளில் இல் லறத்தாரை யுயர்த்திக் கூறியதென்னெனின். 'எறடர்ந்து வின்முருக்கி யெவ்வுலகுங் கைக்கொண்டு, மாறடர்த்த வாழி வலவனைக்-காறூழதற், கெஞ்சினு றில்லெனினு மாய னிகனெடுமால்,வஞ்சியா னீர்நாட்டார் மன்" என்னுஞ்செய்யுளில் ஒருவகைக்குணம்பற்றிச சோழனைத் திருமாலுக்கு மேம்பட்டவனென்று சொன்னாலும், அச்சோழன் எங்ஙனம் காவற்கடவு ளாய திருமாலுக்குஉயர்ந்தவனாகானோ அங்ஙனமே பிறரது பசியைப்போக் கு நிமித்தம் பற்றி இல்லறத்தாரைத் துறவறத்தார்க்கு மேம்பட்டவரென்று

பரி.—(இ-ள்). தவத்தான் வலியார்க்கு வலியாவது, தம்மை யுற்ற பசியைப் பொறுத்தல்; அவ்வலிதான் அங்ஙனம் பொறுத்தற்கரிய பசியை ஈகையான் ஒழிப்பாரது வலிக்குப்பின், (எ-று).

*தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதார் ஆற்றலின் தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பார் ஆற்றல் நன்றென்பதாம்.*

தெளி.—(இ-ள்). *ஆற்றுவார் - (தவத்தால்) வல்லமையுடையவருக்கு, ஆற்றல்-வல்லமையாவது, பசியாற்றல்-(தம்மை யடைந்த) பசியைப் பொறுத்தலாம், (அவ்வல்லமைதான்), அப்பசியை - அப்படி பொறுத்தற்கரிய பசியை, மாற்றுவார் - (ஈதலினால்) நீக்குவோரது, ஆற்றலிற்பின் - வல்லமைக்குப் பிற்பட்டதாம், (எ-று).*

*தாமும் பசித்துப் பிறரையும் அப்பசி தீர்க்கமாட்டாத தவத்தினரது வல்லமையினும் தாமும் பசியாது பிறரையும் அப்பசி தீர்ப்பவராகிய இல்லறத்தாரது வல்லமை நல்லதென்பதாம்.*

(க - து). *தம்மையடைந்த பசியைப் பொறுக்குந் தவத்தினரது வல்லமையினும் அப்பசியை யொழிக்கும் இல்லறத்தாரது வல்லமை மேம்பாடுடையதாம் என்பது.*

5. The power of those who perform penance is the power of enduring hunger. It is inferior to the power of those who remove the hunger (of others).

சு. அற்றா ரழிபசி ‡ தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

பரி.—(இ-ள்). வறியாரது மிக்க பசியை அறனோக்கித் தீர்க்க, பொருள்பெற்ற னொருவன் அதனைத் தனக்குதவ வைக்குமிடம் அவ்வறுமைகலான், (எ-று).

§ *எல்லா நன்மைகளும் அழிய வருதலின் 'அழிபசி' என்றார். அறனோக்கியென்பது எஞ்சிநின்றது. அற்றாரழிபசி தீர்த்த பொருள் பின்ற*

---

*சொன்னாலும், அவர் ஒன்னார்த்தெறலும் உவந்தாரையாக்கலும், வேண்டிய வேண்டியாங் கெய்தலும், தன்னுயிர் தானறப்பெறலும், கூற்றங்குதித்தலு முடைய துறவறத்தார்க்கு மேம்பட்டவராகாரென்க.*

‡ *தீர்த்தல் - தல்ஈற்று வியங்கோள்வினைமுற்று.*

§ *பசியால் எல்லா நன்மைகளு மழியுமென்பது "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயர்ச்சி தாளாண்மை - தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப்பறந்து போம்" என்னும் வெண்பாவினாலு மறிக.*

னக்கே வந்து † உதவு மென்பதாம்.

தெளி.—(இ-ள்). அற்றார் - வறியவரது, அழிபசி - மிகுந்தபசியை, தீர்த்தல் - (அறனோக்கித்) தீர்க்கக்கடவன், அஃது - அவ்வறம், பொருள் பெற்றா னொருவன் - பொருளைப்பெற்றவனொருவன், வைப்புழி - (அப்பொருளைத் தனக்குதவ) வைக்குமிடம் (ஆதலால்), (எ-று).

எல்லா நன்மைகளுங்கெட வருதலால் 'அழிபசி' என்றார். அறனோக்கி யென்பது குறைந்து நின்றது; இஃதிசையெச்சமாம். அற்றாரழி பசி தீர்த்த பொருள் பின் பயன்வடிவாகத் தனக்கே வந்து உதவுமென்பதாம்.

(க - து). பொருளைப் பெற்றவன் அதனைத் தனக்குதவ வைக்குமிடம் வறியவர் பசியைத் தீர்க்கும் அறமாம் என்பது.

6. The removal of the killing hunger of the poor is the place for one to lay up his wealth.

எ. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

பரி.—(இ-ள்). எந்நான்றும் * பகுத்துண்டல் பயின்றவனைப் பசியென்று சொல்லப்படுந் தீயநோய் தீண்டுதல் இல்லை, (எ-று).

¶ இவ்வுடம்பினின்று ஞானவொழுக்கங்களை யழித்து,அதனால்வரும் உடம்புகட்குந் துன்பஞ்செய்தலின் 'தீப்பிணி' எனப்பட்டது. ‡ தனக்கு மருத்துவன் றானாகலின், பசிப்பிணி நணுகாதென்பதாம். இவையாறு பாட்டானும் ஈதலின் சிறப்புக் கூறப்பட்டது.

† உதவுதலாவது தோட் கோட்பாய் (தோளில்கோக்கப்படும் கட்டமுதுபோன்றதாய்)ப் பயன்வடிவாக வந்து இம்மை மறுமைகளில் சுகபோகத்தைத் தருதல். நாலடியார் " ஆட்பார்த் துழலு மருளில்கூற் றுண்மையால், தோட்கோட்புக் காலத்தாற் கொண்டுய்மின்' என்று கூறுவதையுமறிக.

* பகுத்துண்டல் - வறியவர் முதலியோர்க்குப் பங்கிட்டுண்ணுதல்.

¶ பசியானது இவ்வுடம்பிலிருந்து, (தத்துவ) ஞானத்தையும் அதனையடைதற்குச் சாதனமான அருளுடைமை புலால் மறுத்தல் முதலிய வொழுக்கங்களையு மழித்து, அவ்வாறழித்த தேதுவாக இனிவரும் உடம்புகளுக்குந் துன்பத்தைச் செய்தலினால் அது (பசி)'தீப்பிணி'என்று கூறப்பட்டதென்க. இதனால் பசிப்பிணி எப்பிணியிலுங் கொடியதென்பதுபெற்றாம்.

‡ தனக்கு மருத்துவன் (மருந்தின் தன்மையை யறிந்து கொடுப்பவன்) தான் என்பது 'எமக்குத் துணையாவார் வேண்டுமென் றெண்ணித், தமக்குத் துணையாவார் தாந்தெரிதல் வேண்டா, பிறர்க்குப் பிறர்செய்வதுண்டோமற் றில்லை, தமக்கு மருத்துவர் தாம்' என்று பழமொழி கூறுவதாலு மறிதற்பாற்றும்.

தெளி.—(இ-ள்). பாத்து - (எந்நாளும்) பகுத்து, ஊண் - உண்ணுதல், மரீஇயவனை - பழகியவனை, பசியென்னும் - பசியென்று கூறப்படும், தீப்பிணி - தீயநோய், தீண்டலரிது - தீண்டுதலில்லை, (எ-று).

பசி இவ்வுடம்பின்கணின்று ஞானத்தையும் ஆசாரத்தையுங் கெடுத்து, அவ்வாறு கெடுத்தலால் பின்வரும் உடம்புகளுக்குந் துன்பஞ்செய்தலால் 'தீப்பிணி' என்று கூறப்பட்டது. தனக்கு வைத்தியன் தானேயாகையால், பசிப்பிணி சேராதென்பதாம். இவை ஆறுபாட்டாலும் ஈதலின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து). பிறர்க்கிட்டுண்போனுக்குப பசிநோயில்லையாம்.

7. The fiery disease of hunger shall never touch him who habitually distributes his food to others.

அ. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றுமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

பரி.—(இ-ள்). தாமுடைய பொருளை யீயாதுவைத்துப் பின்னிழந்துபோம் அருளிலாதார், வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர் உவத்தலான் அருளுடையாரெய்தும் இன்பத்தினைக் கண்டறியார் கொல்லோ, (எ-று).

¶ உவக்கு மென்பது காரணத்தின்கண்வந்த பெயரெச்சம்; அஃது இன்பமென்னுங் காரியப்பெயர் கொண்டது. § அறிந்தாராயின், தாமும் அவ்வின்பத்தை யெய்துவதல்லது வைத்திழவாரென்பது கருத்து.

தெளி.—(இ - ள்). தாமுடைமை-தாமுடையபொருளை, வைத்து - (கொடாது) வைத்து, (பின்னே), இழக்கும் - இழந்துவிடும், வன்கணவர்-அருளிலாதவர், ஈத்து (வறியவர்க்கு அவர் வேண்டியபொருள்களைக்) கொடுத்து, உவக்கும் - (அவ்வறியவர்) மகிழுதலால் (அருளுடையார்)அடையும், இன்பம்-மகிழ்ச்சிநிலைய, அறியார்கொல்-கண்டறியாரோ, (எ-று).

காரணப்பொருளில் வந்த உவக்குமென்னும் பெயரெசசம் இன்பமென்னுங் காரியப்பெயர் கொணடது. வன்கணவா அறிந்தாராயின, தாமும்

¶ புல்லினவின்பம் என்பது போல யாசகர் உவத்தல் (மகிழ்தல்) காரணமாகவும் (அதனால்) அருளுடையா ரடையும் இன்பம் காரியமாகவும இருத்தலினால், காரணப் பொருளில் வந்த உவக்கும் என்னும் பெயரெச்சம் இன்ப மென்னுங் காரியப்பெயர்கொண்டு முடிந்ததாயிற்று.

§ தம்முடைய பொருளைப் பிறருக்குக்கொடாது சேர்த்து வைத்துப் பின்னர் (கள்வர்முதலியோர் கொள்ளுதலால்) இழந்துபோகும் வன்கண்ணர் (கொடியோர்) அருளுடையார் ஏழைகளுக்கு அவர்வேண்டிய பொருளைக் கொடுத்து அவ்வேழைகள் மகிழுதலால் அவ்வருளுடையாரடையும் இன்பத்தை யறிந்தால், அவ்வன்கண்ணரும் அவ்வின்பத்தை யடையவதல்லாமல் பொருளைச சேர்த்துவைத் திழவாரென்பது கருத்தாமென்க.

*அவ்வின்பத்தை யடைவதல்லாமல் பொருளைச் சேர்த்துவைத் திழவாரென் பது கருத்து. (தாமுடைய - தம்முடைய).*

(க - து). *வறியவர்க்கீயாது பொருளைச் சேர்த்துவைத் திழப் பவர் வறியவருக்குப் பொருளைக் கொடுத்து அது காரணமாக அருளுடையாரடையு மின்பத்தை யறியார் என்பது.*

8. Do the hard-eyed who lay up and lose their possessions not know the happiness which springs from the pleasure of giving?

கூ. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

பரி:—(இ - ள்). பொருட்குறை நிரப்பவேண்டி வறியார்க்கீயாது தாமே தனித்துண்டல், ஒருவர்க்குப் பிறர்பாற்சென்று இரத்தலினும் இன்னாது ஒருதலையாக. (எ - று).

*பொருட்குறை நிரப்பலாவது ஒரோ ரெண்களைக்குறித்து அத்துணை ஈட்டுதுமெனா ஈட்டத்தையே மேற்கொண்டு * இவறிக்கூட்டுதல். தனித் தல் - பிறரையொழித்தல். இரத்தற்குள்ளது அப்பொழுதை யிளிவரவே, பின் நல்குரவில்லை; தமியருண்டற்கு அவை † யிரண்டு முளவாமாகலின் 'இரத்தலி னின்னாது' என்றார். ‡ நிரப்பிய வெனபதற்குத் தேடிய வுணவு களை யென்றுரைப்பாரு முளர்.*

*தெளி:—(இ - ள்). நிரப்பிய - (பொருளின்குறைவை) நிறைக்க வேண்டி, (வறியவர்க்குக் கொடாமல்), தாமே தமியர் - தாமே தனித்தவ ராகி, உணல் - உண்ணுதல், (ஒருவர்க்கு), மன்ற - நிச்சயமாக, இரத்த லின் - (பிறரிடத்திற் சென்று) யாசித்தலினும், இன்னாது - துன்பஞ் செய்வதாம், (எ - று).*

*பொருளின் குறைவை நிறைத்தலாவது ஒவ்வொரு தொகையைக் குறித்து அவ்வளவு சம்பாதிப்போமென்று சம்பாதித்தலையே மேற் கொண்டு உலோபஞ் செய்து சேர்த்தல். தனித்தல் - பிறரைச் சேரா வண்ண மொழித்தல். யாசித்தலுக்கு உள்ளது அப்போதை யிழிவே, பின்னே வறுமையில்லை; தனித்தவரா யுண்ணுதலுக்கு அவ்விரண்டு முண் டாமாதலால் 'இரத்தலினின்னாது' என்றார்.*

---

** இவறுதல்-உலோபஞ்செய்தல். உலோபமாவது தர்மவிரோதமாகப் பிறரது பொருளை விரும்புதல். மெய்ஞ்ஞானவிளக்கம் உலோபத்திற்குவடி வம்''உற்றபொருள் பற்றி யுதவாமை'' என்று கூறுகின்றது.*

*† இரண்டும் - இளிவரவும் (இழிவும்) நல்குரவும் (தரித்திரமும்).*

*‡ நிரப்பிய என்பதனைச் செய்யிய என்னும் வினையெச்சமாகக் கொள் ளாது அஞ்சாரியை குறைந்த வினையாலணையும் பெயராக்கி அதற்குத் தே டிய வுணவுகளை யென்றுரை கூறுவாரு முண்டு.*

(க - து). மேன்மேலுஞ் சேர்க்க வேண்டித் தம்முடைய பொருளை வறியவர்கட்குக் கொடாது தாமே யனுபவிப்பவர்க்குப் பிறரிடஞ் சென்றொன்றை யாசித்தலினும் பெருந்துன்பமாம் என்பது. (௯)

9. Solitary and unshared eating for the sake of filling up ones own riches is certainly much more unpleasant than begging.

௧௦. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
ஈத லியையாக் கடை.

பரி.—(இ-ள்). ஒருவர்க்குச் சாதல்போல இன்னாததோன் றில்லை; அத்தன்மைத் தாகிய சாதலும், வறியார்க்கு ஒன்றீதல் முடியாதவழி இனிது, (எ - று).

§ பிறர்க்குப் பயன்படாத உடற்பொறை நீங்குதலான் 'இனிது' என்றார். இவை மூன்று பாட்டானும் ஈயாமையின் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). (ஒருவனுக்கு) சாதலின் - இறத்தல் போல, இன்னாதது - துன்பஞ்செய்வதொன்று, இல்லை—, அதூஉம் - அத்தன்மைய தாகிய இறத்தலும், ஈதல் - (வறியார்க்கு ஒன்றைக்,) கொடுத்தல், இயையாக் கடை - முடியாத விடத்து, இனிது - இன்பஞ் செய்வதாம், (எ - று).

பிறர்க்குப் பயன் படுவதில்லாத உடற்சுமை நீங்குதலால் 'இனிது' என்றார். இவை மூன்று பட்டானும் ஈயாமையின் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க - து). வறியவர்க்கொன்றைக் கொடுக்க முடியாத காலத்து இறத்தலே ஒருவற் கின்பந்தருவதாம் என்பது

10. Nothing is more joyless than death; yet even that is joyful where charity cannot be exercised.

§ பிறர்க்குப் பயன்படுதலில்லாத வுடற்சுமையினால் உயிர்க்கு யாதும் பிரயோசன மில்லாமையின், அஃதொழிதலே(பூமிக்குப்பார மொழிதலோடு) அதற்கு இனிதா மென்பது. இதனால் தரித்திரர்களுக்கு அவர் வேண்டிய வற்றைக்கொடாமை மரணவேதனையினும் மிகக்கொடியதாமென்பது பெற்றாம். "வைத்துப் பொருளைத் தானுகரான் வழங்கா னிருந்துஞ் செத்தானே, செத்த பின்ன ரென்செய்வான் றீயார் கொள்வ ரீட்டுதலான், மெத்தும் வருத்த மேயன்றி வேறொன் றில்லை" என்று விநாயகபுராணங் கூறுவதும் இங்குக் கவனிக்கத்தக்கதா மென்க.

## இருபதாவது அதிகாரம்.

## புகழ்.—*Praise.*

**பரி.—அஃதாவது ¶ இல்வாழ்க்கைமுதல் ஈகையீறகச் சொல்லப் பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின் கண் நிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி. இது பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன்பின் வைக்கப்பட்டது.**

*தெளி.—அஃதாவது இல்வாழ்க்கை முதல் ஈகை ஈருகச சொல்லப் பட்ட இல்லறத்தில் தவருதொழுகுபவர்க்கு இம்மைப்பயனாகி இவ்வுல கத்தில் விளங்கி யழியாது நிற்குங் கீர்த்தியாம். இது (புகழ்) பெரும்பான் மையும் ஈகைபற்றி வருதலால், அவ்வீகையின் பின் வைககப்பட்டது.*

க. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
ஊதிய மில்லை யுயிர்க்கு.

**பரி.—(இ-ள்). வறியார்க்கீக; அதனாற் புகழுண்டாக வாழ்க; அப்பு கழல்லது மக்களுயிர்க்குப் பயன் பிறிதொன்றில்லை ஆகலான், (எ-று).**

*இசைபட வாழ்தற்குக் கல்வி, ஆண்மை முதலிய பிற காரணங்களு முளவேனும், ‡ "உணவின் பிண்ட முண்டி முதற்று" ஆகலின், ஈதல்*

*¶ இல்வாழ்க்கை யென்னும் அதிகாரமுதல் ஈகையென்னும் அதி காரம் ஈருக - (கடையாக) (உள்ளவிப் பதனொன்பது அதிகாரங்களில்) சொல்லப்பட்ட (பிரமசாரி முதலிய பதினமருக்கும் பங்கிட் டுண்டல், மைந்தரைச் சபையில் முந்தியிருக்கச செய்தல், சுற்றத்தாரிடத்து அன்பா யிருத்தல், விருந்தோம்பல், செய்ந்நன்றியறிதல் முதலிய) இல்வாழ்க்கைக் குரிய தருமங்களில் தப்பாது நடந்தவர்களுக்கு இப்பிறப்பின் பிரயோஜன மாகி யிவ்வுலகின்கண் (கர்ணன் முதலியோர்களது கீர்த்தியைப்போன்று) விளங்கிக் கெடாது நிற்கும் புகழாமென்க.*

*‡ புறநானூறு 18.இதன்பொருள் உணவாலுளதாகிய வுடம்புஉணவை முதலாகவுடையது என்பது. புறநானூற்றின் மூலத்தில் "உண்டி முதற் றே யுணவின் பிண்டம்" என்றும், அதன் விசேடவுரையில் "உணவின்பிண் டம் உண்டிமுதற்றுதலான் " என்று மிருககின்றன. பரிமேலழகர் மூலத் தின்படி "உண்டி முதற்றே யுணவின் பிண்டம்" என்று கூறுது அன்வயத் தின்படி 'உணவின் பிண்ட முண்டி முதற்று' என்று கூறினரென்க. உடல் நிலைத்திருப்பதற்குக் காரணங்கள் பலவிருப்பினும் அவற்றுள் (காற்றுமுத லியவற்றுள்),சோறும் நீரும் சிறப்பாயிருத்தல்("உண்டிகொடுத்தோ ருயிர் கொடுத் தோரே" "உணவெனப்படுவது நிலத்தொடுநீரே" என்று புறநானூ று 18 வது செய்யுளில்கூறுவது மிங்கறியத தக்கதாம்) போன்று, புகழுண் டாக வாழ்வதற்குக் கல்வி முதலிய பலகாரணங்களிருப்பினும் அவற்றுள், வறியார்க்கொன்று கொடுத்தலே சிறப்பாயிருக்கின்றதென் றுணர்க. கலித் தொகை "ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்" என்றுகூறுதலும்,*

சிறந்த தென்பதற்கு ‡ ஞாபகமாக 'ஈதல்' என்றார். ¶ உயிர்க்கென்பது, பொதுப்படக் கூறினரேனும், விலங்குயிர்கட் கேலாமையின், மக்களுயிர் மேனின்றது.

தெளி:—(இ-ள்,) ஈதல்- (வறியவர்குக்) கொடுக்கக்கடவர், இசைபட (அவ்வாறு கொடுத்தலால்) புகழுண்டாக, வாழ்தல் - வாழக்கடவர், அதுவல்லது - அப்புகழல்லாமல், உயிர்க்கு - (மக்கள்) உயிர்க்கு, ஊதியம் - பயன், இல்லை - (வேறொன்று) இல்லை, (ஆதலால்), (எ-று).

புகழுண்டாக வாழ்வதற்குக் கல்வி, ஆண்மை, நற்குடிப்பிறப்பு, நல்லொழுக்கம், செல்வம், தீவினைக்கஞ்சுதல், நடுவுநிலைமைமுதலிய வேறுகாரணங்களும் இருப்பனவாயினும், அவற்றுள், ஈகை சிறந்ததென்பதற்கு ஞாபகமாக 'ஈதல்' என்றார். உயிர்க்கெனப் பொதுப்படச் சொல்லினராயினும், ஈதலா லிசைபட வாழ்தல் பசுபட்சி முதலிய அஃறிணையுயிர்கட்குப் பொருந்தாமையின், அஃதீதலா லிசைப்பட வாழும் மக்களுயிரை யுணர்த்தி நின்றது.

(க-து.) வறியவர்க் கொன்றைக் கொடுத்தலாலுண்டாகும் புகழைப்பார்க்கிலும் மக்களுயிர்க்கு வேறுபயனில்லை என்பது.

1. By giving (to the poor) live with praise. There is no greater profit to man than that.

உ. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.

---

புறநானூறு "செல்வத்துப் பயனே யீதல்" என்று கூறுதலு மிங்கே யறியத் தக்கனவாம்.

‡ (உணவாலுளவாகிய வுடம்பிற்கு உண்டிமுதலா யிருக்கின்றது) ஆதலால், ஈகை சிறப்புடைய தென்பதற்கு ஞாபகமாக (அறிவிப்பதாக) 'ஈதல்' என்று கூறினரென்பது.

இம்மலை தீயுடைத்து, புகையுடைமையால், அடுக்களைப்போல என்புழித்தீயுடைமையைப் புகையுடைமை யறிவிப்பதுபோல, இசைபடவாழ்தலை ஈதலுடைமை யறிவிக்கின்ற தென்பது. ஈண்டனுமான மாமாறு:— இவன் இசைபடவாழ்பவன்; ஈதலுடைமையால்; கர்ணனைப்போல என்பது. இசைபடவாழ்வதற்கு ஈதல் ஞாபகமாக விருத்தலின், இது "காதலன் மே லூடல் கரையிறத்தல் காட்டுமால், மாதர் நுதல்வியர்ப்ப வாய்துடிப்ப-மீது, மருங்குவளை வின்முரிய வாளிடுக நீண்ட, கருங்குவளை சேந்த கருத்து" என்பதுபோன்று ஞாபகவேது வணியாம்.

¶ உயிர்க்கு ஈதலிசைபட வாழ்தல் என்புழி உயிரென்னும் பொதுப்பெயரும் வாழ்தலென்னும் பொதுவினையும் ஈதலிசைபட வென்னுங் குறிப்பால் அஃறிணையுயிரை யொழித்து உயர்திணையுயிரையுணர்த்தி நின்றன.

பரி:—(இ-ள்.) உலகத்து ஒன்றுரைப்பார் உரைப்பனவெல்லாம் வறுமையான் இரப்பார்க்கு அவர் வேண்டியதொன்றை ஈவார்கண் நிற்கும் புகழாம், (எ-று).

† புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும். அவற்றுள், 'உரைப்பாருரைப்பவை' என எல்லார்க்கும் உரிய வழக்கினையே எடுத்தாராயினும், ‡ இனம்பற்றிப் புலவர்க்கே யுரிய செய்யுளுங் கொள்ளப்படும்; படவே, பாடுவார் பாடுவனவெல்லாம் புகழாமென்பதூஉம் பெற்றாம். $ ஈதற் காரணஞ் சிறந்தமை இதனுள்ளுங்காண்க. ¶ இதனைப் பிறர்மேலும் நிற்கு மென்பார் தாமெல்லாஞ் சொல்லுக; புகழ் ஈவார்மே னிற்குமென் றுரைப் பாருமுளர். அது புகழது சிறப்பு நோக்காமை யறிக.

தெளி:—(இ-ள்.) உரைப்பார் - (உலகத்தி லொன்றைக்) கூறுபவர், உரைப்பவை யெல்லாம் - கூறுவன வெல்லாம், இரப்பார்க்கு - (வறுமையால்) யாசிப்பவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றை, ஈவார்மேல்- கொடுப்பவரிடத்து, நிற்கும - நிற்கின்ற, புகழ் - கீர்த்தியாம், (எ-று).

புகழ்தான் உரையும் பாட்டும் என்றிருவகைப்படும். அவற்றுள், 'உரைப்பாருரைப்பவை' என்று எல்லார்க்கும் உரிய (உலக) வழக்கையே எடுத்துக் கூறினாராயினும், இனம்பற்றிப் புலவர்க்கே உரியபாட்டும் கொள்ளப்படும்; படவே, பாடுவார் பாடுவனவெல்லாம் இரப்பார்க்கொன் றீவார்மேனிற்கும் புகழாம் என்பதும் பெற்றாம். புகழின் காரணங்களுள், ஈதலாகிய காரணம் சிறந்தமை இக்குறளுள்ளுங் காண்க. புலவர்-வித்துவான்கள்.

---

† புகழ் உரையும்பாட்டுமென விருவகைப்படுதல் "வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து, வீற்றிருந் தோரை யெண்ணுங் காலை, யுரையும் பாட்டு முடையோர் சிலரே, மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே" என்று புறநானூறு கூறுவதாலு முணரப்படும்.

‡ இனம்பற்றி- சம்பந்தம்பற்றி. (இனமென்பதிங் குபலட்சணமாம்).

$ ஈதற் காரணஞ் சிறந்தமை யிதனுள்ளுங்காண்க - புகழுண்டாக வாழுவதாகிய காரியத்திற்கு வறியவர்க்கு அவர்வேண்டிய தொன்றை யீதலாகிய காரணம் ஏனைய காரணங்களிலுஞ் சிறந்திருத்தலை யிப்பாட்டினிடத்துங் காண்க.

¶ இத்திருக்குறளை உரைப்பாருரைப்பவையெல்லாம்(உரைக்க), புகழ் இரப்பார்க்கொன்றீவார்மேல் நிற்கும் என இரண்டு முடிபாக்கி,இதனை(புகழை) கல்வியாண்மை முதலியவற்றையுடையபிறரிடத்தும் (புகழ்) நிற்குமென்பார் தாமெல்லாஞ் சொல்லட்டும்; புகழ்(வறியவர்க் கொன்று) கொடுப்பாரிடத்து நிற்குமென் றுரை கூறுவாருமுண்டு. அவ்வாறு கூறுதல் பேசுவார் பேசுவனவும் பாடுவார் பாடுவனவும் வறியார்க்குக் கொடுப்பாரது கீர்த்தியாமென்பது போலப் புகழின்சிறப்பைக் குறிக்காமை காண்க. பிறர் கூறியவுரை அதிகாரத்திற் கேற்ப ஈவார்மேல் நிற்கும்புகழின் சிறப்பையே குறிக்காது பிறரது புகழின் சிறப்பையுங் குறித்தல் பற்றி மறுக்கப்பட்டதென்க.

(க-து.) கீர்த்திக்குரியார் ஈகையாளரே என்பது.

Whatsoever is spoken in the world will abide as praise upon that man who gives one alms to the poor.

ரு. ¶ ஒன்ரு வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்ருது நிற்பதொன் றில்.

பரி:— (இ-ள்.) தனக்கு இணையின்றாக வோங்கிய புகழல்லது உலகத்து இறவாதுநிற்பது பிறிதொன்றில்லை, (எ-று).

இணையின்றாக வோங்குதலாவது கொடுத்தற் கரிய ‡ உயிர் உறுப்புப் பொருள்களைக் கொடுத்தமைபற்றிவருதலால் தன்னோடொப்பதின்றித் தானே உயர்தல். * அத்தன்மைத்தாகிய புகழே செய்யப்படுவ தென்பதாம் இனி ஒன்ருவென்பதற்கு ஒரு வார்த்தையாகச் சொல்லினெனவும், † ஒரு தலையாகப் பொன்ருது நிற்பதெனவும் உரைப்பாருமுளர். இவை மூன்று பாட்டானும் புகழது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). ஒன்ரு - (தனக்கு) ஒப்பில்லையாக, உயர்ந்த - ஓங்கிய, புகழல்லால் - கீர்த்தியல்லாமல், உலகத்து - உலகத்தில், பொன்ருது - அழியாமல், நிற்பது - நிலைபெறுவது, ஒன்று - வேறொன்று, இல் - இல்லை.

(புகழ்) தனக்கு ஒப்பில்லையாக வோங்குதலாவது கொடுத்தற்கரிய உயிரையும், உறுப்பையும், பொருளையும் கொடுத்தமைபற்றி வருதலால் தன்னோடு ஒப்பது இல்லாமல் தானே உயர்தல். அத்தன்மையதாகிய புகழையே மக்கள் சம்பாதிக்க வேண்டுமென்பதாம. இவை மூன்று பட்டானும் புகழது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து). உலகத்திலழியாது நிற்பது புகழேயாம் என்பது.()

¶ "இந்நிலத்து, மன்னுதல் வேண்டி னிசைநடுக":—நான்மணிக்கடிகை.

‡ பிறர்க்குதவியாமாறு உயிரைக் கொடுத்தவர் ததீசி முனிவர்; உறுப்பை (சதை முதலிய அவயவங்களை)க் கொடுத்தவர் சிபிச் சக்கரவர்த்தி;கவச குண்டல முதலிய பொருளைக் கொடுத்தவன் கர்ணனென்க.

* அத்தன்மைத்தாகிய புகழ் - தனக்கு ஒப்பில்லையாக வோங்கிய கீர்த்தி; அஃதாவது தனக்காதாரமாகிய வுலகமுள்ளளவளவும் உயிரும் உறுப்பும் பொருளும் கொடுத்தலா லுண்டாகி யழியாது ஆதேயமாய் நிற்பதாகிய கீர்த்தியாம்.

இதனால் ஆதாரமாகிய உலகமுள்ளவளவும் ஆதேயமாகிய புகழ்நிற்குமென்பதாயிற் றென்க. இது "சாதல்வந் தடுத்த காலுந் தனக்கொரு சாதலின்றிப், பூதல மிறக்குங் காலும் புகழுடம் பிருக்கும்"என்று விநாயகபுராணம் கூறுவதாலு மறியப்படும்.

† ஒன்ருப் பொன்ருது நிற்பது-நிச்சயமாகவழியாது நிலைபெறுவது.

3. There is nothing that stands forth in the world imperishable, except fame, exalted in solitary greatness.

ச. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

பரி.—(இ - ள). ஒருவன் நிலவெல்லைக்கண்ணே பொன்றாது நிற்கும் புகழைச் செய்யுமாயின், புத்தேளுலகம் அவனையல்லது தன்னை செய்தி நின்ற ‡ ஞானிகளைப் பேணாது, (எ - று).

§ புகழுடம்பான் இவ்வுலகும் புத்தேளுடம்பான் அவ்வுலகும் ஒருங்கே யெய்தாமையின் 'புலவரைப்போற்றாது' என்றார். ¶ அவன் இரண்டுலகும் ஒருங்கெய்துதல் † "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவ னேவா வான வூர்தி யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்து" எனப் பிறராலுஞ் சொல்லப்பட்டது.

தெளி.—(இ - ள). (ஒருவன்) நிலவரை - பூமியினெல்லையிலே, நீள் புகழ் - அழியாது நிற்கும்புகழை, ஆற்றின் - செய்வானாயின், புத்தேளுலகு - சுவர்க்கலோகமானது, (அவனை யல்லாமல்), புலவரை - (தன்னை யடைந்திருக்கிற) ஞானிகளை, போற்றாது - விரும்பாது, (எ - று).

(புகழைச்செய்பவன் புகழுடம்பால் இவ்வுலகத்தையும் தேவவுடம்பால் அவ்வுலகத்தையும் ஒரு மிக்க அடைதல் போல) ஞானிகள் புகழுடம்பால்

‡ ஞானிகளென்றது ஞானயோகங் கைவரப்பெறாது அப்பியாசநிலையிலிருந்து மறுமையில் (சுவர்க்கத்தில்) (கரும) தேவரானவர்களை. "(யோகஞ் செய்தும் பூரணமாய்ச் செய்யாதுவிட்டவனாகிய) யோகப்பிரஷ்டன் புண்ணியஞ் செய்தவர்களது உலகங்களையடைந்து வெகுகாலஞ் சுகமாயிருந்து, சதாசாரமுள்ள ஐசுவரியவான்களுடைய வீட்டிற் பிறக்கிறான்" என்பது பகவத்கீதை ஆறாவதத்தியாயம்.

§ துறவறத்திற்சென்று தத்துவஞானம் பெறாது இறந்தவர்கள் மறுமையில் தேவவுடம்பையன்றியிம்மையில்புகழுடம்பைப்பெறாமையால்(இயற்கைத்) தேவர்கள் அவர்களைப் புகழுடம்பில்லாமை பற்றி விரும்பாது, பூதவுடம்பைக்கொண்டு இம்மையில் ஈகையால் புகழுடம்பையும் மறுமையில் தேவவுடம்பையும் பெற்றவனையே விரும்பிப் போற்றுவாரென்றறிக.

¶ அவன் இரண்டுலகும் ஒருங்கெய்துதல் - புகழுடையான் புகழுடம்பால் இவ்வுலகத்தையும் தேவவுடம்பால் விண்ணுலகத்தையும் ஒரு சேர அடைதல்.

† புறநானூறு, உ௭. இதன்பொருள்:—புலவரால் பாடப்படும் புகழையுடையோர் ஆகாயத்தின்கண் பாகனாற் செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவாரென்று சொல்லுவா ரறிவுடையோர் தாஞ்செய்யும் நல்வினையை முடித்து என்பது. புலவர்பாடும் என்னுஞ் செய்யுளைப் புலவர் பாடும் புகழுடையோர் தஞ்செய்வினை முடித்து விசும்பின் வலவ னேவா வான வூர்தி யெய்துப வென்ப என்றந்வயித்துக் கொள்க.

இவ்வுலகத்தையும், தேவவுடம்பால் அவ்வுலகத்தையும் ஒருமிக்க அடையா மையால், புத்தேளுலகு 'புலவரைப் போற்றாது' என்றார்.

(க - து). தேவர்கள் தம்மையடைந்துள்ள புலவரை விரும்பாது புகழுடையாரையே விரும்புவார்கள் என்பது.

4. If one has acquired extensive fame within the limits of the earth, the world of the Gods will no longer praise the yogis who have attained that world.

௫. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

பரி.—(இ - ள்). புகழுடம்பிற்கு ஆக்கமாகுங் கேடும் புகழுடம்பு உளதாகுஞ் சாக்காடும் சதுரப்பாடுடையார்க் கல்லது இல்லை, (எ - று).

‡ நந்தென்னுந் தொழிற்பெயர் விகாரத்தான் நத்தென்றாய், பின் அம் என்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்று, நத்தமென்றாயிற்று. † போலென்பதீண் டுரையசை. $ ஆகு மென்பதனை முன்னுங்கூட்டி, அரிதென்பதனைத் தனிதனி கூட்டியுரைக்க. ஆக்கமாகுங் கேடாவது ¶ புக

‡ பொருந்தல் என்னுந் தொழிற்பெயர் பொருத்தம என்றானது போன்று நந்தலென்னுந் தொழிற்பெயர் நத்தம் என்றாயிற்று என்று கொள்ளினுங் குற்றமாகாது.

† போல் என்பது இங்கு உவம வுருபாகாது உரையசையாய் நின்றது. சிறிது பொருளுணர்த்தி வாக்கியத்தை யலங்கரித்து நிற்பது உரையசை யெனப்படும். உவம வுருபு உவமவுரு பாகாது வருமிடத்து அஃது ஒப்பில் போலியென்று சொல்லப்படுகின்றது. ஒப்பில்போலி - ஒப்புமை யுணர்த்தாத போலி. ஒப்பில்போலியாய வரும் உரையசைச் சொலலைப்பற்றிப் பிரயோகவிவேக நூலார் "ஆக்கும் பிரதி பதத்துடன்" என்னுஞ் செயயுளினு ரையில் விரித்துக் கூறியிருக்கின்றனர். அங்கு ஒப்பில் போலி வாக்கியாலங்காரத்தில் வரும என்று சொல்லப்பட் டிருக்கிறது.

$ உளதாகு மென்பதன்கணுள்ள ஆகும் என்பதனை நத்தமென்பதனோடுகூட்டி நத்தமாகுங் கேடு என்றும், அரிது என்பதனைக் கேடு என்பதனோடும் சாக்காடு என்பதனோடும் கூட்டி நத்தமாகுங் கேடரிது உளதாகுஞ் சாக்காடரிது என்றுங்கொள்க. இங்குக்காட்டிய அன்னுவயத்தின்படி வித்தகர்க்கு (அறிவுடையவர்க்கு) அல்லாமல் மற்றவர்க்கு (மூடர்களுக்கு) நத்தமாகுங் கேடும் உளதாகுஞ் சாக்காடுமில்லை யென்றாயிற்று; ஆகவே, வித்தகர்க்கு நத்தமாகுங்கேடும் உளதாகுஞ்சாக்காடு மூண்டாமென்பது பெற்றாம்.

¶ புகழுடம்பு (கீர்த்தியாகியவுடல்) விருத்தியடைய அதற்குக் காரணமாகிய பூதவுடம்பு (பிருதிவிமுதலிய பூதங்களாலாயவுடல்) தரித்திரத்தையடைதல். அஃதாவது புகழுடம்பு விருத்தி யடையவடையப் பூதவுடம்பிற்குக் குறித்த நாட்கள் குறைந்து கொண்டே வருதலென்பது.

ழுடம்பு செல்வமெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல். உளதாகுஞ் சாக்காடாவது § புகழுடம்புநிற்கப் பூதவுடம்பு இறத்தல். ‡ நிலையாதனவற்றால் நிலையின வெய்துவார் வித்தகராகலின் 'வித்தகர்க்கல்லாலரிது' என்றார். இவையிரண்டு பாட்டானும் புகழுடையாரெய்து மேன்மை கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). வித்தகர்க்கல்லால் - அறிவுடையவர்க் கல்லாமல், (மற்றவர்க்கு), நத்தம் (ஆகும)-(புகழுடம்பிற்குப்) பெருக்கமாகும், கேடும்-வறுமையும், அரிது - இல்லை, உளதாகும் - (புகழுடம்பு)நிலைபெறுவதாகும், சாக்காடும் - மரணமும், (அரிது - இல்லை), (எ - று).

நந்து என்னு முதனிலைத் தொழிற்பெயர் புணர்ச்சிவிகாரத்தால் நத்து என்றாய்ப்பின் அம்மெனனும் பகுதிப்பொருள் விகுதிபெற்று நத்தம் என்றாயிற்று. போல் என்பதிங்குஉரையசை. ஆகும் எனபதனை முன்னுங் கூட்டி அரிது என்பதனைத் தனித்தனி கூட்டியுரைத்துக் கொள்க. பெருக்கமாகுவ கேடாவது புகழுடம்பு செல்வத்தை யடையப் பூதவுடம்பு வறுமையடைதல். நிலைபெறுவதாகு மரணமாவது புகழுடம்பு நிலைபெறப் பூதவுடம்பு இறத்தல். நிலையில்லாத உயிருடல் முதலியவற்றால் நிலைபெற்றகீர்த்திகளை யடைபவர் வித்தகராதலின் 'வித்தகர்க் கல்லாலரிது' என்றார். இவ்விரண்டு பாட்டாலும் புகழுடையாரடையும் மேன்மை சொல்லப்பட்டது.

(க - து). அறிவுடையார் பூதவுடம் பிறந்தாலும் புகழுடம்போ டுலகமுள்ள வளவு மிருப்பர் என்பது.

5. Prosperous desruction and living death will abide with none but the illustrious.

௬௱. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

பரி.—(இ - ள). மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கேதுவாகிய குணத்தோடு பிறக்க; அக்குணம் இல்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று, (எ - று)

* புகழ்—ஈண்டு ஆகுபெயர். † 'அஃதிலார்' என்றமையின் மக்களாயென்பதூஉம், மக்களாய்ப் ¶ பிறவாமையென்ற அருத்தாபத்தியான்

§ புகழுடம்பு இனிவளருதலில்லாமல் ஒரு வரையறைப்பட்டு நிற்கப் பூதவுடம் பழிதல். கர்ணன்முதலியோர்க் குண்டாயபுகழ் அவர்களிறந்த பிறகு வளர்ச்சியின்றி யோரளவாவிருப்பது மீண்டறியத் தக்கதாமென்க.

‡ நிலைபெறாத வுயிர் முதலியவற்றைக் கொடுத்தலால் நிலைபெற்ற கீர்த்திகளை யடைந்தவர் ததீசி முனிவர் முதலியோர்.

* புகழென்னும் காரியப் பெயர் அதனை (புகழை) யுண்டாக்குவதற்குக் காரணமாய நற்குணத்தை யுணர்த்துதலால் காரியவாகு பெயராம்.

† அஃதிலார் - புகழிற்குக் காரணமான குணமில்லாதவர்.

¶ தோன்றாமை யென்ற அருத்தா பத்தியான் என்றும் பாடமுண்டு.

‡ விலங்காய்ப் பிறத்தலென்பதூஉம் பெற்றும். $ இகழ்வார் இன்மையின் 'நன்று' என்றார்.

தெளி.—(இ - ள்). தோன்றின் - (மனிதராய்ப்) பிறந்தால், புகழொடு - புகழிற்குக் காரணமாகிய குணத்தோடு, தோன்றுக - பிறக்கக்கடவர், அஃதிலார் - அக்குணமில்லாதவர், தோன்றலின் - (மனிதராய்ப்) பிறத்தலினும், தோன்றாமை-பிறவாமையானது, [மிருகமாய்ப் பிறத்தல்], நன்று - நல்லது, (எ - று).

புகழிற்குக் காரணமாய குணத்தைப் புகழென்றமையின், அஃதிங்காகு பெயராம். 'அஃதிலார்'என்றதனால் மனிதராயென்பதும், மனிதராயப் பிறவாமையென்ற அருத்தாபத்தியினால் மிருகமாய்ப் பிறத்தலென்பதும் பெறப்பட்டன. இகழ்வாரில்லாமையால், தோன்றாமை 'நன்று' என்றார்.

(க - து). புகழிற்குக் காரணமாகிய குணமில்லாதவர் பிறப் பின்பயனை யடைவதில்லை என்பது.

6. If you are born (in this world) be born with qualities conducive to fame. For those who are destitute of them it will be better not to be born.

எ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

பரி.—(இ-ள்). தமக்குப் புகழுண்டாக வாழமாட்டாதார் ¶ அது

‡ (கீர்த்திக் கேதுவான குணமில்லாதவர் மக்களாய்ப் பிறத்தலைக் காட்டிலும் மக்களாய்ப் பிறவாமை நல்லது என்று கூறியதில்) மக்களாய்ப் பிறவாமை என்ற அருத்தாபத்தியினால் மிருகமாயப்பிறத்தல் என்பது பெறப்படுகின்றது. இங்ஙனமன்றாயின் இது கூடாது என்றுணருவது அருத்தாபத்தி யெனப்படும். அஃதாமாறு:— மக்களாய்ப்பிறவாமை கூடாதாயின்விலங்காய்ப்பிறத்தல் கூடாதுஎன்பது. விலங்காய்ப் பிறத்தல் கூடுமாயின் மக்களாய்ப் பிறத்தல் கூடாது என்பது கருத்து. விலஙகாய்ப் பிறத்தலென்பது பறவை முதலியனவாகப் பிறத்தற்கு முபலட்சணமாம். தொல்காப்பியனார் அருத்தாபத்திக் கிலக்கணம் சொல்லதிகாரம் கிளவியாக்கத்தில்"எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே" என்று கூறினார். அதன் பொருள் இனமாகிய பலபொருட்கண் ஒன்றனை வாங்கிக் கூறியவழி அச்சொல் தன் பொருட்கினமாகிய பிறபொருளைக் குறிப்பான் உணர்த்தலு முரித்து என்பது.

$ புகழிற் கேதுவான குணமில்லாதவரைப் பிறர் அருளில்லாதவரென்றும், அன்பில்லாதவரென்றும, தாட்சண்ணிய மில்லாதவரென்று மிகழுதல் போன்று மிருகங்களை யிகழுவா ரில்லாமையினால் புகழிற் கேதுவான குணமில்லாதவர் மக்களாய்ப் பிறத்தலினும் மிருகமாயப் பிறத்தல் நல்லது என்று கூறப்பட்டதென்க. ¶ அதுபற்றி - புகழுண்டாக வாழாமைபற்றி.

**பற்றிப் பிறர் இகழ்ந்தவழி இவ்விகழ்ச்சி * நம் மாட்டாமையான் வந்த தென்று தம்மை நோவாதே தம்மை யிகழ்வாரை நோவது என் கருதி.**

*புகழ்பட வாழலாயிருக்க, அது மாட்டாத குற்றம்பற்றிப் பிறரிகழ்தல் ஒருதலையாகலின் 'இகழ்வாரை' என்றார்.*

தெளி.—(இ - ள்). *புகழ்பட - (தமக்குப்) புகழுண்டாக, வாழாதார் - வாழமாட்டாதவர், (அதுபற்றிப் பிறரிகழ்ந்தவிடத்து), தந்நோவார் - (இவ் விகழ்ச்சி நமது மாட்டமையால் வந்ததென்று) தம்மை நோவாதவராகியே, தம்மை யிகழ்வாரை - தம்மையிகழ்ந்து பேசுபவரை, நோவது-வெறுப்பது, எவன் - என்னநினைத்து,* (எ - று)

*புகழுண்டாக வாழுதலாயிருக்க, அவ்வாறு வாழமாட்டாத குற்றம்பற்றிப் பிறர் இகழ்வது நிச்சயமாகலால் 'இகழ்வாரை நோவதெவன்' என்றார்.*

(க-து). *புகழுண்டாக வாழவறியாதவர் அதுபற்றித் தம்மைப் பிறரிகழ்வது நோக்கி வெறுப்பதிற் பயனில்லை என்பது.*

7. Why do those who live without praise grieve those who despise them, though they do not grieve themselves.

அ. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

பரி.—(இ - ள்). **புகழென்னும் எச்சம் பெறலாயிருக்க அது பெற தொழிவாராயின், வையகத்தோர்க் கெல்லாம் † அதுதானே வசை யென்று சொல்லுவர் நல்லோர்,** (எ - று).

$ *'எச்சம்' என்றார்; செயதவரிறந்துபோகத் தான் இறவாது நிற்ற லின். ¶ இகழப்படுதற்குப் பிறிதொரு குற்றம் வேண்டாவென்பது கருத்து.*

* *நம் மாட்டாமையான் - (புகழுண்டாக வாழாத)நமது மடமையால்.*

† *அதுதானே - புகழென்னு மெச்சத்தைப் பெறுதொழிதலே.*

$ *புகழானது தன்னை யுண்டாக்கினவர் இறந்து போகத் தான் இற வாமல் உலகமுள்ளவளவும் எஞ்சி (மிகுந்து)நிற்றல்பற்றிப் புகழ் எச்சமாயிற்று. புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தலென்பதாம்.*

¶ *புகழில்லாதவ னிகழப்படுதற்குப் புகழில்லாமையே காரணமாயிருத் தலின் அவனுக்கு நிந்தையுண்டாவதற் கேதுவான வேறொரு குற்றம் வேண்டாமென்பது கருத்தாமெனக. ஒருவன் புகழைப் பெறுவிட்டாலும் இகழைப் பெறாமலிருக்கக் கூடாதோ வெனின், திண்மையின் அபாவமே எண்மையாய் முடிவது போன்று புகழில்லாமையே இகழாய் முடிதலின் அது கூடாதெனக.*

தெளி.—(இ - ள்). இசையென்னுமெச்சம் - புகழென்னும் எச்சத்தை, (பெறுவதாயிருக்க), பெறாஅ விடின் - (அப்புகழென்னு மெச்சத்தைப்) பெறாது விடுவாராயின், வையத்தார்க்கெல்லாம் - பூமியிலுள்ளார்க் கெல்லாம், வசை - (அதுதானே) வசையாகும், எனப - என்று சொல்லுவர், (நல்லோர்).

செய்தவர் இறந்துபோகத் தான் இறவாமல் நிற்றலால் புகழை 'எச்சம்' என்றார். பிறரால் இகழப்படுதற்கு மற்றொரு குற்றம் வேண்டாமென்பது கருத்து. வசை - இகழ்ச்சி.

(க - து) கீர்த்திபெறாதவருக்கு அது பெறாமையே வசையாம் என்பது.

8. Not to beget fame will be esteemed a disgrace by all who are in this world.

---

கூ. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
§ யாக்கை பொறுத்த நிலம்.

பரி.—(இ - ள்). புகழில்லாத வுடம்பைச் சுமந்த நிலம் பழிப்பில்லாத வளப்பத்தையுடைய விளையுள் குன்றும், (எ - று).

† உயிருண்டாயினும் அதனாற் பயன் கொள்ளாமையின் 'யாக்கை' எனவும், அது நிலத்திற்குப் பொறையாகலின் 'பொறுத்த' எனவுங் கூறினார். ‡ விளையுள் குன்றுதற்கேது பாவயாக்கையைப் பொறுக்கின்ற வெறுப்பு. 0 குன்றுமென இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேனின்றது. இவை நான்கு பாட்டானும் புகழில்லாதாரது தாழ்வு கூறப்பட்டது.

---

§ யாக்கை - கைவிகுதிபெற்ற தொழிற்பெயர். அதன்பொருள் கட்டலென்பது. அஃதிங்குத் தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீரென்னும் எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்ட வுடம்பினை யுணர்த்துதலால் தொழிலாகு பெயராம்.

† புகழில்லாது வாழும் இல்வாழ்வோன் உயிருடையவனாயிருந்தாலும் அவன அந்த வுயிரினால் இம்மைப்பயனாகிய புகழை யுண்டாக்கிக் கொள்ளாமையின் அவனை யென்னாது 'யாக்கை' எனவும், 'சோற்றிற்குக்கேடு பூமிக்குப்பாரம்' என்னும் பழமொழிப்படி புகழில்லாதவன் பூமிக்குப் பாரமாயிருத்தல் பற்றிப் 'பொறுத்த' எனவும் கூறினாரென்பது.

‡ விளையுள் - நெல் முதலியவற்றின் விளைவு. விளையுள் என்பது உள்ளீற்றுத் தொழிற் பெயர்.

0 புகழில்லாத வுடம்பைச் சுமக்கின்ற விடத்தில் நிகழுகின்ற நெல் முதலியவற்றின் விளைவு குறைதலை யந்த விடத்தின்மேலேற்றி நிலம் வண்பயன் குன்றும் என்று கூறப்பட்டதென்பது. இவ்வாறு வருவது இடவாகு பெயராம்; உபசார வழக்குமாம்.

தெளி.— (இ - ள்). இசையிலா - புகழில்லாத, யாக்கை - உடம்பை, பொறுத்த - சுமந்த, நிலம் - விளைநிலமானது, வசையிலா - பழிப்பில்லாத, வண்பயன் - வளப்பத்தையுடைய விளைவு, குன்றும் - குறையும். (எ - று).

(இசையிலாத வுடம்பிற்கு) உயிருண்டாயினும் அவ்வுயிரால் (அது) பயன்கொள்ளாமையால் 'யாக்கை' என்றும், அந்த யாக்கை நிலத்திற்குப் பாரமாதலின் 'பொறுத்த' என்றும்,சொல்லினார். விளைவு குறைதற்குக்காரணம் பாவசரீரத்தைச் சுமக்கின்ற வெறுப்பு. இடத்து நிகழ் பொருளாகிய நெல்முதலிய பொருளின் தொழில் குன்றுமென இடத்தின் மேல் நின்றது. இவை நான்குபாட்டாலும் புகழில்லாதவரது தாழ்வு சொல்லப்பட்டது.

(க - து) கீர்த்தியில்லாத வுடம்பைச் சுமக்கின்ற விளைநிலம் பயன்படும் விளைவைத் தருவதில்லை என்பது.

9. The ground which supports a body without fame will diminish the reproachless riches of its produce

ய. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

பரி.—(இ - ள்). தம்மாட்டு வசையுண்டாகாமல் வாழ்வாரே உயிர் வாழ்வா ராவார், புகழுண்டாகாமல் வாழ்வாரே இறந்தாராவார், (எ-று).

† வசை யொழிதலாவது 'இசையென்னு மெச்சம்' பெறுதலாயினமையின், இசை யொழிதலாவது வசைபெறுதலாயிற்று; ‡ மேல் 'இசையிலா யாக்கை' என்றதனை விளக்கியவாறு. இதனால் ¶ இவ்விரண்டும் உடன் கூறப்பட்டன. மறுமைப்பயன் $ 'வானுறையுந் தெய்வத்துள் வைக்கப் படும்' என மேலேகூறப் பட்டது; படவே, இல்லறத்திற்கு இவ்வுலகிற் புகழும் தேவருலகிற் போகமும் பயனென்பது பெற்றாம்.

---

† வசை (நிந்தை) நீங்குதல் இசை (புகழ்) யென்னு மெச்சத்தைப் பெறுவதா யிருத்தலால் வசை நீங்குதல் இசை யடைவதாயிற்றென்க. இதனால் இசை யிருந்தால் வசை வாராதென்றும் வசை யிருந்தால் இசை வாராதென்றும் பெற்றாம். இசைதோன்ற, வசைதோன்ற என்று சொல்லவந்தவர் அவ்வாறு கூறாது அருத்தாபத்தியால் வசை யொழிய இசை யொழிய என்று கூறினாரென்க.

‡ மேல் ('வசையிலா வண்பயன்' என்று மேலே யுள்ள குறளில்) இசையிலா யாக்கை என்றதனை யிங்குவிளக்கிய விதமாமென்க. இதனால் இசை (புகழ்) இல்லாதவர் உற்றறிபுல னொன்று மில்லாத சடப்பொருளோடொப்ப ரென்ப தாயிற்று.

¶ இவ்விரண்டும் - வசையொழிய வாழ்வாருயர்வும், இசையொழிய வாழ்வா ரிழிவும்.

$ திருக்குறள், இல்வாழ்க்கை, ௫0.

இனி † மனுமுதலிய அறநூல்களாற் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இவற்றுள்ளே யடங்கும். அஃதறிந்தடக்கிக் கொள்க; யாமுரைப்பிற் பெருகும்.

இல்லறவியல் மூற்றுப் பெற்றது.

தேளி:—(இ - ள்.) வசையொழிய - (தம்மிடத்து) வசையுண்டாகாமல், (புகழுண்டாக),வாழ்வாரே - வாழுகின்றவர்களே, வாழ்வார் - (உயிர்), வாழுவாராவர், இசையொழிய - புகழுண்டாகாமல், (வசையுண்டாக). வாழ்வாரே - வாழுகின்றவர்களே, வாழாதவர் - இறந்தோராவார், (எ - று).

வசை யொழிதல் (இசையென்னு மெசசமாகிய) புகழ் பெறுதலாதலால், இசையொழிதல் வசை பெறுதலாயிற்று. முற்செய்யுளில் 'இசையிலா யாக்கை' என்று கூறியதனை விளக்கியவாறும். இதனுல் உயர்வுந் தாழ்வுமாகிய விவ்விரண்டும் உடன் சொல்லப்பட்டன. மறுமைப் பயன் " வானுறையுந்,தெய்வத்துள் வைக்கப் படும்' என்று முன்னே சொல்லப் பட்டமையால், இல்லறத்துக்கு இவ்வுலகததிற் புகழும் தேவருலகத்திற் போகமும் பயனென்பது பெறப்பட்டது.

இனி மனுமுதலிய தரும சாஸ்திரஙகளால் பொதுவாகையாகக் கூறப் பட்ட இல்லறங்க ளெல்லாம் இவர் தொகுத்துக் கூறிய இவ்விருப ததிகாரத்துள்ளே அடங்கும், அஃதறிந்து அடக்கிக் கொள்க; யாம் உரைப் பிற் பெருகும்.

(க - து.) கீர்த்தியோடு வாழ்பவரே உயிர் வாழ்வா ராவார்; மற்றையவ ரிறந்தோரா வர் என்பது.

10. Those live who live without disgrace. Those who live without fame live not.

பாயிரத்தின் குறள்-சய. இல்லறத்தின் குறள்-உ௱.

ஆகக் குறள் - உ௱சய.

இல்லறவியல் முற்றுப் பெற்றது.

---

† மனுதரும சாஸ்திரத்தின் 3, 4, 5, அத்தியாயங்களில் நாயனுர் இல்லறத்திற் குரியதாகக் கூறிய பொதுத்தருமங்கள் சிதறிக் கிடத்தலை யுய்த்துணர்ந்து கொள்க.

## 3. துறவறவியல்

## On Ascetic Virtue.

பரி.—இனி முறையானே துறவறங்கூறிய தொடங்கினர். துறவற மாவது மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி யறிவுடையராய்ப் பிறப்பினை யஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத் துறந்தார்க் குரித்தாய அறம். அதுதான்: வினைமாசுதீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டு அவராற் காக்கப்படும் விரதங்களும், அவற்றன் அவை தூய வாயவழி யுதிப்பதாய ஞானமுமென இருவகைப்படும்.

### விரதம்.

† *அவற்றுள், விரதங்களாவன: இன்ன வறஞ் செய்வலெனவும், இன்னபாவ மொழிவலெனவும் தம்மாற்றலுக் கேற்ப வரைந்து கொள்வன. ‡ அவை தாம் வரம்பிலவாகலிற் பெருகுமென்றஞ்சி, அவை தம்முள்ளே பலவற்றையும் அகப்படுத்து நிற்குஞ் சிறப்புடையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான் றொடங்கி, முதற்கண் அருளுடைமை கூறுகின்றார்.*

*தெளி.—இனி முறையாகத் துறவறத்தைச்சொல்லத் தொடங்கினர். துறவறமாவது முற்கூறிய இல்லறத்திற்றவறாது நடந்து அறிவுடையவராய்ப் பிறப்பிற்குப் பயந்து முத்தி பெறுதற் பொருட்டுத் துறந்தவர்கட்கு உரியதாகிய அறமாம். அத்துறவறந்தான்: இருவினைகளா லுண்டாகுங் குற்றம் நீங்கி (மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும்) அந்தக்கரணங்கள் பரிசுத்தமாகு நிமித்தம் அத்துறந்தவரால் பாதுகாக்கப்படும் விரதங்களும், அவ்விரதங்களால் அவ்வந்தக்கரணங்கள் பரிசுத்தமானவிடத் துண்டாவதாகிய ஞானமுமென் றிருவகைப்படும்.*

*அவற்றுள், விரதங்களாவன: இன்ன அறங்களைச் செய்வேனென்றும், இன்னபாவங்களைச் செய்யாது விடுவேனென்றும் தமது வல்லமைக்கேற்றவாறு மேற்கொள்வனவாம். அவ்விரதங்கள் அளவில்லாதனவா யிருத்தலால் விரியுமென்றஞ்சி, அவ்விரதங்களுள்ளே பலவற்றையும் தம்முள்ளடக்கி நிற்குஞ் சிறப்புடையனவாகிய சிலவற்றை இங்குச் சொல்லத் தொடங்கி, முதலில் அருளுடைமையை யருளிச்செய்கின்றார்.*

---

† *அவற்றுள் - விரதம், ஞானமென்னு மிரண்டனுள்.*

‡ *விரதங்கள் பலவாதலை மனுதரும சாஸ்திரத்திலும், சூதசங்கிதை ஞானயோக காண்டம் கழுவாயுரைத்த வத்தியாயத்திலும், பிறவற்றிலுங் காண்க.*

## முதலாவது அதிகாரம்.

## அருளுடைமை.—Kindness.

பரி.—அஃதாவது * தொடர்பு பற்றது இயல்பாக எல்லாவுயிர் கண்மேலுஞ் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமை போல இது துறவத்திற்குச் சிறந்தமையின் முற்கூறப்பட்டது.

*தெளி.—அஃதாவது சம்பந்தங்கருதாது இயல்பாக எல்லா வுயிர்களின் மீதுஞ் செல்வதாகிய கருணையாம். இல்லறத்திற்கு அன்புடைமை சிறந்திருத்தல் போல, இவ்வருளுடைமை துறவறத்திற்குச் சிறந்திருத்தலால் முற்படச் சொல்லப்பட்டது.*

க. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

பரி.—(இ - ள்). செல்வங்கள பலவற்றுள்ளும் ஆராய்ந்தெடுக்கப் பட்ட செல்வமாவது அருளான் வருஞ்செல்வம், அஃதொழிந்த ‡ பொருளான் வருஞ் செல்வங்கள் இழிந்தார் கண்ணும் உளவாம் ஆகலான்.

*அருளான் வருஞ் செல்வமாவது உயிர்களையோம்பி அவ்வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார் கண்ணே யல்லதில்லாத அருட்செல்வமே சிறப்புடைய செல்வம், ஏனை நீசர்கண்ணு முளவாம் பொருட்செல்வங்கள் சிறப்பில வென்பதாம்.*

*தெளி.—(இ - ள்). பொருட்செல்வம்-பொருளால்வருஞ் செல்வங்கள், பூரியார்கண்ணும் - இழிந்தவரிடத்தும், உள - இருக்கின்றன, (ஆதலால்), செல்வத்துட் செல்வம் - செல்வங்கள பலவற்றுளளும் (ஆராய்ந்து எடுக்கப் பட்ட) செல்வமாவது, அருட்செல்வம் - அருளால் வருஞ்செல்வமாம்.*

*அருளால் வருஞ்செல்வமாவது உயிர்களைப் பாதுகாத்து (பாதுகாக்கும்) அவ்வறத்தால் மேம்படுதலாம். உயர்ந்தோரிடத் திருப்பதேயல்லாமல் (இழிந்தோரிடத்து) இல்லாத அருட்செல்வமே சிறப்புடைய செல்வம், (உயர்ந்தோரிடத் திருப்பதே யல்லாமல்) மற்றைய இழிந்தோரிடத்தும் உளவாகும் பொருட் செல்வங்கள் சிறப்புடையன வல்ல வென்பதாம்.*

(க - து). *பொருளால்வருஞ் செல்வத்தினும் அருளால்வருஞ் செல்வமே சிறப்புடைய தென்பதாம்.*

1. The wealth of kindness is twe of wealth, in as much as the wealth of property is possessed even by the basest of men.

---

** தொடர்பு - மனைவி, மக்கள், பந்து, மித்திரர் முதலியவரைப் பற்றி வருஞ் சம்பந்தம்.*

*‡ பொருளான் வரும் செல்வம்—உண்டி, உடை, உறையுள், விளைநிலம், ஏவல் முதலியன.*

உ. நல்லாற்ற ணாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை.

பரி.—(இ - ள்). அளவைகளானும் பொருந்து மாற்றனும் நன்றன நெறியிலே நின்று, நமக்குத் துணையாம் அறம் யாதென்றாராய்ந்து, அருளுடையராக; † ஒன்றையொன் றெவ்வாத சமயநெறிகள் எல்லாவற்றனும் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளே, பிறிதில்லை, (எ - று).

* அளவைகளாவன ‡ பொறிகளாற் காணுங்காட்சியும், ¶ குறிகளான் உய்த்துணரும் அனுமானமும், $ கருத்தா மொழியாகிய ஆகம

---

† ஒன்றையொன் றெவ்வாத சமயநெறிகள் என்பது மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில் "உவலைச் சமயங்க ளொவ்வாதச ரத்திரமாஞ், சவலைக் கடலுள ளாய்க்கிடந்து தடுமாறும், கவலைக் கெடுத்துக் கழலிணை கடந்தருளுஞ், செயலைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" என்று கூறுவதனானு மறியப்படும்.

* அளவை - பிரமாணம்; உண்மை யனுபவ வறிவிற்குக் கருவியாயுள்ளது பிரமாண மெனப்படும்.

‡ பொறிகளாற் காணுங்காட்சி - செவிமுதலிய விந்திரியங்களால் சப்தமுதலிய விஷயங்களை யறியும் அறிவு. "பிரத்தியட்சப் பிரமைக்குக் கரணம் பிரத்தியட்சப் பிரமாணமாம்; எங்ஙனம் இது கடமென் றற்றொடக்கத்துப் பிரத்தியட்சப் பிரமைக்குக் கரணம் கண் முதலிய விந்திரியங்களா யிருத்தலின், கண் முதலிய விந்திரியங்களே பிரத்தியட்சப் பிரமாணமாம். (பிரமை - உண்மை யனுபவ வறிவு):—நியாயப் பிரகாசம்.

¶ குறிகளான் உய்த்துணரும் அனுமானம் - புகை முதலிய குறிகளால் மலை முதலிய விடங்களில் நெருப்பு முதலியன வுண்டென்றாராய்ந்தறிகின்ற அனுமானம். (குறி, இலிங்கம், சாதனம், ஏது என்பன ஒரு பொருட் சொற்கள்). அனுமான மெனினும் கருதலெனினு மொக்கும். "அனுமிதிப் பிரமையின் கரணம் அனுமானப் பிரமாணமாம்; எங்ஙனம் இம்மலை வன்னி (தீ)யுடைத்து என்னும் அனுமிதி ஞானத்திற்குப் புகை வன்னியின் வியாப்தி யுடையதா மென்னும் வியாப்தி ஞானம் கரணமாயிருத்தலின், அவ் வியாப்தி ஞானம் அனுமானப் பிரமாணமாம். (வியாப்தி-யாண்டுப் புகை ஆண்டுத்தீயென நியதமான வுடனிகழ்ச்சி):—நியாயப் பிரகாசம்.

$ கருத்தா மொழியாகிய ஆகமம் - பரமேசுவரன் சிருஷ்டியினாரம்பத்தில் சீவர்களுய்யுமாறு எடுத்துச் சொல்லியவேதம். ஒன்றைச் செய்கிறவன் கர்த்தா வெனப்படுவன். செய்யத்தக்கது கர்த்தவ்விய மெனப்படும். ஆகம மெனினும் உரையெனினு மொக்கும். காண்டம், (பிரத்தியட்சம்), கருதல், உரையென்னு மூன்றும் முறையே அனுபவம், யுக்தி, சுருதி யென்றும் சொல்லப்படும். "சத்தப்பிரமாணம் ஆத்தன் வாக்கியம்...... ஆத்தனாவான் உண்மைப் பொருளைக் கூறுவான்":— தருக்க சங்கிரகம்.

மும் என மூன்று. † ஒப்புப்பற்றி யுணரும் உவமையும், ‡ இங்ஙன மன்றாயின் இது கூடாதென் றுணரும் அருத்தாபத்தியும், ¶ உண்மைக்கு மாறாய இன்மையும் என இவற்றையுங் கூட்டி ஆறென்பாரு முளர். $ இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே யடங்குதலின், மூன்றெ ன்றலே கருத்து. பொருந்துமாறுவது இது கூடும்; இது கூடா தெனத் தன்கண்ணே தோன்றுவது. இதனை வடநூலார் யுத்தி என்ப.

---

† ஒப்புப்பற்றி யுணரும் உவமை - ஒன்றற் கொன்றுள்ள சாதாரண தருமம் (பொதுமை) பற்றி யறிகின்ற வுவமானம். உவமான மெனினும் உவம மெனினும் ஒப்பெனினு மொக்கும். "உவமானம் உவமிதியறிவிற் குக் கரணம், உவமிதி பெயர்க்கும் பெயர்ப்பொருட்கு முள்ள சம்பந்த மறி யு மறிவு; அதற்குக் கரணம் ஒப்புமையறிவு":—தருக்க சங்கிரகம்.

‡ இங்ஙனமன்றாயின் இது கூடாதென்றுணரும் அருத்தாபத்தி - பகலும்இரவும்புசித்தலின்றாயின உடம்புபருத்திருத்தல்கூடாதென்றெதிர் மறை முகத்தாலறிகின்ற அருததாபத்தி. அருத்தாபத்தி யெனினும் பொ ருட்பே றெனினுமொக்கும. "உபபாதககற்பனைக் கேதுவான உபபாத்திய ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமாம்; உபபாதகஞானம் அர்த்தாபத்திப் பிரமையாம்"—விருத்தி ரத்நாவலி.

¶ உண்மைக்கு மாறாய இன்மை-விளங்குதலுண்மைக்கு மாறுபட்ட விளங்குதலில்லாமை; இஃது அனுபலததிப் பிரமாணமெனப்படும். அபா வப்பிரமாணமெனினும் அனுபலதிப் பிரமாணமெனினுமொக்கும். இது சிவஞானசித்தியின்"அளவை காண்டல் கருதலுரையபாவம பொருளொப் பாறென்பர்" என்னும் பாட்டினுரையில் ஞானப்பிரகாசர் அபாவம் என்ப தற்கு அனுபலத்தி யென்று பொருள்கூறி யிருத்தலு மிங்கு அறியததக்க தாம். "அபாவப் பிரமையின் அசாதாரணகாரணம அனுபலத்திப் பிர மாணமாம்":— விருத்திரத்நாவலி. காணடல், கருதல், உரை, ஒப்பு, பொருட்பேறு, அனுபலததியென்னு மளவைகளே யன்றிப் பரிசேடம், சம்பவம், ஐதிகம், இயல்பு என்னும வேறளவைகளுங் கூறுவாரு முண்டு. அவையெல்லாம மேற்கூறிய ஆறனுளடங்குவது பற்றி விதந்து கூறாது விட்டார்.

$ இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே யடங்குதலின் மூன்றெ ன்றலே கருத்து - உவமை, அருததாபத்தி, அநுபலத்தியென்னு மிம்மூன் று பிரமாணங்களும் ஒருவாற்றான் (ஒருவகையினால்) காண்டல் கருதல் உரையென்னும் மூன்றனுள்ளே அடங்குதலால், பிரமாணம் (காண்டல் கருதல் உரை யென்னும்) மூன்றென்று கூறுதலே கருத்தாமென்க. பிரத் தியட்ச முதல் அனுபலத்தி யீறாயுள்ளவற்றைப் பிரமாணமாகக்கொண்ட வர்கள் உவமையும் அருத்தாபத்தியும் அனுபலத்தியும் காண்டல்முதலிய அளவைகளுள் அடங்காவென்று பிரபலகாரணங்காட்டியிருத்தல்பற்றிக், காண்டல் கருதல் உரையென்னு மூன்றையும் பிரமாணமாகக்கொண்ட சாங்கியர் முதலியோர் கூறியபடி யொருவகையால் உவமைமுதலியன காண்டல் முதலியவற்றான் அடங்குதலை மேற்கொண்டு பரிமேலழகர்

† ஆற்றுனென்பது வேற்றுமை மயக்கம். ஒன்றையொன் றொவ்வாமை யாவது மதவேறுபாட்டான் ‡ அளவைகளும் பொருள்களும் தம்முள் மாறுகோடல்; அன்னவ[illegible]னும் அருள் துணை யென்றற்கண் ஒக்குமென் பதாம். உயிரை விட்[illegible]கா திருமையினும் உதவலின் 'துணை' என் றார். இவையிரண்டு பாட்டானும் அருளினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்). நல்லாற்றான் - (பிரமாணங்களாலும் யுத்தியாலும்) நன்றானவழியிலே,(நின்று), நாடி-(நமக்குத் துணையாகும்அறம்யாதென்று)

'இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே யடங்குதலின்' என்று கூறிஞெ ரென்க. சாங்கியர்முதலியோர் உவமையும் அருத்தாபத்தியும் அநுமானப் பிரமாணத்திலும்,அநுபலத்தி பிரத்தியட்சப்பிரமாணத்திலும் அந்தர்க்கத (அடக்க)மா மென்பர். (பிரத்தியட்சப் பிரமாணத்தால் அபாவத்தை யறி யும்போததற்குச சககாரியாக அநுபலத்தியைக் கொண்டனர் தார்க்கீகர் முதலியோர்).

† ஆற்றான் என்பதன் மூன்றனுருபு தனக்குரிய பொருளைவிட்டு ஆற்றினை (நெறியிலெனை) ஏழாம் வேற்றுமைக்குரிய இடப்பொருளில் வந்தமையின் வேற்றுமை மயக்கமாயிற்று.

‡ அளவைகள் தம்முள் மாறுகொள்ளுதலை மேலே கூறினும்; ஆண் டுக் காணக. அளவையா லளக்கப்படும் பொருள்கள் தம்முள் மாறுகொள் ளுதலாவது லோகாயதன் உலகமேயுள்ளதென்றும், வேதாந்தி பிரமமே பாரமார்த்திகமாக வுள்ளதென்றும், சைவர்முதலியோர் கடவுள் சீவர்கள் மாயை என்னுமூன்றும் என்றும் உள்ளனவென்றும், தார்க்கீகர் பிருதிவி முதலியவற்றின் பரமாணுக்களும், ஆகாயம் காலம் திக்கு ஆத்மா மனமென் னுமைந்தும், சமவாயமும், சாமாநியமும், பிறவும் என்றும் உள்ளனவென் றும், சமணர்கள் காலம், சீவன், தன்மாத்திகாயம், அதன்மாத்திகாயம், புண்ணியம், பாவம், ஆகாயம், புற்கலம், பந்தம், வீடு என்னும் பத்தும் அநாதியென்றும் பிறவும் (அவ்வம் மதவாதிகள்) கூறித் தம்முள் மாறு கொள்ளுதலாமென்க.

## பிரமாண நிரூபணம்.

பிரமையின் கரணம்-பிரமாணமாம். பிரமையென்பது யதார்த்தாநுப வமாம். வியாபாரமுடைய அசாதாரண காரணம் கரணமாம். வியாபாரத் தின் வேறாய அசாதாரண காரணமே கரணமென்பதும் பிரமாணத்திற் கிலக்கணமாம். காரணத்திற் றோன்றிக் காரியத்தைத் தோற்றுவிப்பது வியாபாரமாம்.

பிரமாணமெனினும் அளவையெனினு மொக்கும். இதனை மதவாதி கள் தத்தங் கொள்கைக்குச் சாதனமாகப் பலவாறாக வங்கீகரித்திருக்கின்ற னர். அவற்றுள்:—

(1) சார்வாக மதத்தர் பிரத்தியக்ஷப்பிரமாண மொன்றனையே யங்கீ கரித் திருக்கின்றனர்.

ஆராய்ந்து, அருளாள்க-அருளுடைய ராகக்கடவர், பல்லாற்ருன்-(ஒன்றை யொன் ருெத்திராத) சமயவழிகளெல்லாவற்ருலும், தேரினும்-ஆராய்ந்தாலும், துணை - துணையாவது, அஃதே - அவ்வ[illegible]ள, (வேருென்றில்லை).

(2) கணுத, பௌத்த மதத்தர் அனுமானமென்னு மிரண்டாவது பிரமாணத்தையு மங்கீகரித திருக்கின்றனர். அவர்கள் பிரத்தியக்ஷப் பிரமாண மொன்றையே யங்கீகரிக்கு மிடத்துத் திருப்தியை விரும்புகின்ற புருஷனுக்குப்போஜனத்திற் பிரவிர்த்தியுண்டாதல் கூடாது. சாப்பிடாத பதார்த்தத்தில் திருப்தியுண்டாகு மென்பதற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினுல் யாதொரு பிரத்தியக்ஷஞான முமில்லை. சாப்பிட்ட போஜனத்திலுண்டான திருப்தியி னனுபவம் சாப்பிடாத போஜனத்திலும் அனுமானத்தினு லுண்டாகுமெனவறிந்து, திருப்தியின்பொருட்டுப் போஜனத்திற் பிரவிர்த்தி யுண்டாகின்ற தென்பர்.

(3) சாங்கியர்முதலியோர் சத்தமென்னு மூன்ருவது பிரமாணத்தையு மங்கீகரித்திருக்கின்றனர். அவர்கள் பிரத்தியக்ஷம், அனுமானமென்னு மிரண்டு பிராணங்களைமாத்திரமங்கீகரிக்குமிடத்துத்,தேசாந்தரத்திலஉன் தகப்பனிறந்துபோனுனென்று பிறர் சொல்லக் கேட்டவனுக்குத் தன் தகப்பனிறந்து விட்டானென்னும் நிச்சயமுண்டாதல் கூடாது. தேசாந்தரத்தில் தன்தகப்பனிறந்துவிட்டானென்னும் ஞானம், அவனுக்குப் பிரத்தியக்ஷம், அனுமானம் என்னுமிவவிரண்டு பிரமாணங்களாலு முண்டாகவில்லை; ஆகையால், மூன்ருவதான சத்தப் பிரமாணமும் வேண்டுமென்பர்.

(4) நியாயமதத்தர் உவமானமென்னும் நான்காவது பிரமாணத்தையு மங்கீகரித்திருக்கின்[illegible]னர். அவர்கள் பிரத்தியட்சமுதலிய மூன்று பிரமாணஙகளை மாத்திர மங்கீகரிக்குமிடத்து ஒருவன் கவயமென்னு மிருகத்தைக் கண்டதில்லை; ஆனல் கவயம் அலைதாடியினறிய ஆ(பசு) போன்றதென்று காட்டுமனிதன் சொல்லக்கேட் டிருக்கிருன். அவன் காட்டிற்குப் போன காலத்து அலைதாடியின்றிய ஆவையொத்த பிண்டத்தைப் பார்த்தபோது காட்டுமனிதன் சொன்னதை ஸ்மரித்து இது கவயத்தின் சொற்பொருளென் றறிகிருன். உவமானப் பிரமாணத்தை யஙகீகரியாதொழியின், இந்த ஞான முண்டாதல் கூடாதென்பர்.

(5) பட்டர் சிஷியரான பிரபாகர மதானுசாரிகள் அருத்தாபத்தியென்னு மைந்தாவது பிரமாணத்தையு மங்கீகரித திருக்கின்றனர். அவர்கள் பகலுண்ணுதவன் பருத்திருத்தலைக் கண்டவனுக்கு இவனிரவில்மறைந்துண்பா னென்னும் ஞானமுண்டாகின்றது; அது பிரத்தியக்ஷ முதலிய நான்கு பிரமாணங்களாலு முண்டாவதில்லை; ஆகையால். பருத்திருத்தலுக்குக் காரண மிராப்போஜனமென்பது அருத்தாபத்திப் பிரமாணத்தால் பெறப்படுகின்றதென்பர்.

(6) பட்டர் மதத்தர் அனுபலப்தியென்னும் ஆருவது பிரமாணத்தையு மங்கீகரித்திருக்கின்றனர். அவர்கள் வீடுமுதலிய விடத்துக் கடமுதலியன வில்லை யென்னும் ஞானமுண்டாகிறது. அப்போது எது தகுதியாக

பிரமாணங்களாவன இந்திரியங்களாற் காணுங் காட்சியும், புகைமுதலிய குறிகளால் ஆராய்ந்தறியும் அனுமானமும், கருத்தா (ஈசனது) மொழியாகிய ஆகமமும் என மூன்றுவகைப்படும். ஒப்புமைபற்றி யறியும்

விளங்கவில்லையோ அதன் அபாவஞானமுண்டாகின்றது. இந்த அபாவத்தின் நிச்சயம் பிரத்தியக்ஷமுதலிய ஐந்து பிரமாணங்களாலு முண்டாவதில்லை; அனுபலத்திப் பிரமாணத்தா லுண்டாகின்றது; ஆதலால் ஆறாவதான அனுபலப்திப் பிரமாணமும் அத்தியாவசியகமா மென்பர்.

இவ்வாறு பிரமாணங்களுள், நையாயிகர் அருத்தாபத்திப் பிரமாணத்தை வியதிரேகியனுமானத்திலும், அனுபலப்திப் பிரமாணத்தைப் பிரத்தியக்ஷப் பிரமாணத்திலு மடக்கிப் பிரமாணங்கள் நான்கே யென்பர்.

கணாத மதானுசாரிகளான வைசேடிகரும்,பௌத்தரும், பிரத்தியக்ஷம், அனுமானம்,உவமானம், சத்தம் என நையாயிகரங்கீகரித்துள்ள நான்கனுள் சத்தத்தையும்,உவமானத்தையும் அனுமானப் பிரமாணத்திலுளடக்கிப்,பிரமாணங்களிரண்டேயென்பர். சாங்கியர்முதலியோர் உவமானத்தை யனுமானத்தி லடக்கியும் வேறுபிறவாகவும் கூறுவர்.

மேற்குறித்த ஆறுபிரமாணங்களன்றி ஐதிகம், சம்பவம் முதலிய வேறு பிரமாணங்களு முண்டு; அவையனைத்தும் அவ்வாறனுளடங்கும்.

## சட்பிரமாண நிரூபண சங்கிரகம்.

### 1. பிரத்தியக்ஷப் பிரமாணம்.

பிரத்தியக்ஷம் - காண்டல். பிரமாணம் - அளவை.

பிரத்தியட்சப்பிரமாணமெனினும் காண்டலளவையெனினுமொக்கும்.

காண்டலளவையும் கரணபேதத்தா லறுவகைப்படும். (கரணம்-கருவி). அக்கரணமாவன:—

1. சுரோத்திரம், 2. துவக்கு, 3. சட்சு, 4. சிங்குவை, 5. கிராணம், 6. மனம் என்பனவாம், இவற்றுள்:—

(1) சுரோத்திரம் என்பது செவி(செவியினுளிருக்கு மிந்திரியம்);இதன்தொழில் சப்தத்தை யறிதல். சுரோத்திரத்திற்கும் சப்தத்திற்கும் சம்பந்தமுண்டாகும்போது சுரோத்திரத்தினுற் சப்தப்பிரத்தியட்ச முண்டாகிறது. சப்தமென்பது சப்தத் தன்மை முதலியன வற்றிற்கு முபலட்சணமாம்.

(2) துவக்கு என்பது சரீரம் (சரீர முற்றும் வியாபித்திருக்கு மிந்திரியம்); இதன் தொழில் பரிசத்தையறிதல்.தொக்கிற்கும் பரிசத்திற்கும் சம்பந்த முண்டாகும்போது துவக்கினுற் பரிசத்தின் பிரத்தியட்ச முண்டாகிறது. பரிசமென்பது திரவியம் திரவியத்தன்மை முதலியவற்றிற்கு முபலட்சணமாம்.

(3) சட்சு என்பது கண்(கண்ணுறை கருமணியிலிருக்குமிந்திரியம்); இதன் தொழில் ரூபத்தையறிதல். சட்சுவிற்கும் உருவத்திற்கும் சம்பந்த

உவமானமும், இங்ஙனமன்றாயின் இது கூடாதென் றறியும் அருத்தாபத்தியும், உண்மைக்கு எதிராகிய இல்லாமையும் எனவிவற்றையுங்கூட்டிப் பிரமாணம் ஆறென்பாரும் உண்டு. இவையும் ஒருவகையால் பிரத்தி

மூண்டாகும்போது சட்சுவினால உருவத்தின் பிரத்தியட்ச முண்டாகிறது. உருவமென்பது உருவமுடைய திரவிய முதலியவற்றிற்கு முபலட்சணமாம்.

(4) சிங்குவை என்பது நாக்கு. (நாக்கினுனியி லிருக்கு மிந்திரியம்); இதன் தொழில் இரசத்தை யறிதல். சிங்குவைக்கும் இரசத்திற்கும் சம்பந்த முண்டாகும்போது சிங்குவையால் இரசத்தின் பிரத்தியட்ச முண்டாகிறது. இரசமென்பது இரசத்தன்மை முதலியவற்றிற்கு முபலட்சணமாம்.

(5) கிராணம் என்பது மூக்கு. (மூக்குநுனியிலிருக்குமிந்திரியம்); இதன் தொழில் கந்தத்தை யறிதல். கிராணத்திற்கும் கந்தத்திற்கும் சம்பந்தமுண்டாகும்போது கிராணத்தாற் கந்தப்பிரத்தியக்ஷ முண்டாகிறது. கந்தமென்பது கந்தத்தன்மை முதலிய வற்றிற்கு முபலட்சணமாம்.

(6) மனமென்பதுநெஞ்சு (நெஞ்சினுளிருக்கு மிந்திரியம்); இதன் தொழில் சுகமுதலியவற்றை யறிதல், மனதிற்குக் கண் முதலிய இந்திரியங்களின் வாயிலாகவாவது வேறுவகையாலாவது பதார்த்தங்களின் சம்பந்த முண்டாகும்போது மனத்தாற் சுகதுக்க முதலியவற்றின் பிரத்தியக்ஷ முண்டாகிறது. மனம் இந்திரிய மனறென்பாரு முண்டு.

மீண்டும் பிரத்யக்ஷம், சவிகற்பம், நிருவிகற்பம் என்னும் பேதத்தாலிருவகைத்தாம். விகற்பத்துடன் கூடியது சவிகற்பமாம். விகற்பமாவது பொருள், ஜாதி, குணம், கிரியை முதலியனவாம்; இவற்றோடு கூடிய ஞானம் சவிகற்ப ஞானமாம்.

ஜாதி, குணம், கிரியை, பொருள் முதலியவற்றின் றோற்றமின்றி, இஃதொன் றென்று வஸ்துவின் சத்துவமாத்திரத்தாலுண்டாகும் ஞானம் நிருவிகற்ப ஞானமாம்.

## 2. அனுமானப் பிரமாணம்.

அனுமிதிப் பிரமையின் காரணம் அனுமானப் பிரமாணமாம். அனுமிதிப்பிரமைபட்சத்திற்சாத்திய முண்டென் றுணரும் ஞானமாம். அனுமானம் வியாத்தியினனுபவம். வியாத்தி எது (புகை) சாத்தியங் (தீக்) களின் நியதமான வுடனிகழ்ச்சி.

அடுக்களை முதலியவிடங்களில் தினந்தோறும் புகையிருக்கக் காணும் புருஷனுக்குப், புகையுள்ள விடங்களிலெல்லாம் அக்கினி யிருக்குமென்னுமோ ரனுபவ முண்டாகிறது. இது வியாத்தியனுபவ மெனப்படும்.

இவ்வனுபவ முடையவன் பர்வதமுதலிய இடங்களுக்குப் போகுங்கால், புகையின் பிரத்தியக்ஷ முண்டாகு மிடத்து, அவனுக்குப் புகைக்கும் வன்னிக்குமுள்ள உடனிகழ்ச்சியின் ஞாபக முண்டாகின்றது, இதனால்

யட்சம் அனுமானம் ஆகமமென்னும் அம்மூன்றனுள்ளே அடங்குதலால், பிரமாணம் மூன்றென்றலே கருத்தாம். யுத்தியாவது இதுகூடும் இது கூடாது எனத் தன்னிடத்தே தோன்றுவது. ஆற்றுன் என்பது ஆற்றில் மலை முதலிய விடங்களில் வன்னியுண்டென்னும் ஞான முண்டாகிறது. இதுவே அனுமிதி யெனப்படும்.

ஈண்டுப் புகை எது அல்லது இலிங்கமெனப்படும்.

எது அல்லது இலிங்கத்தாலறியப்பட்ட வன்னி (தீ) சாத்தியமெனப்படும்.

எது, சாத்திய மிரண்டிற்கும் ஆசிரயமாயிருக்கும் பர்வதம் முதலியன பக்ஷமாம். எவ்வதிகரண (இட) த்திற் சாத்தியத்தை யறியும் விருப்பமுண்டாய்ச், சாத்தியத்தின் அனுமிதிவடிவ நிச்சய முண்டாகின்றதோ அது புட்சமெனப்படும்.

தூமமுள்ள விடத்து மில்லாவிடத்தும் வன்னியிருப்பதால் தூமத்தினும் வன்னி யதிகவிடத்திருப்பதாம்; ஆகையால் வன்னி வியாபகமாம்.

வன்னியுள்ள விடத்தெல்லாம் தூமமில்லாமையால் தூமம் வியாப்பியமாம். (சொற்பவிடத் திருப்பதாம்).

அனுமிதிஞானத்தில் எது சாத்தியங்களின் வியாப்தியனுபவம் கரணமாம். இந்த வியாப்தி ஞானத்தின் ஸ்மிருதி (ஞாபகம்) வியாபாரமாம். அனுமிதியறிவு பயனும். உடனிகழ்ச்சி ஞானமெனினும் வியாப்திஞான மெனினு மொக்கும். சிலர் வியாப்தி ஞானத்தையும் சிலர், வியாப்திஸ்மிருதியினையும், சிலர் எது ஞானத்தையும், சிலர் ஞானஎதுவினையும் காணமென்பர்.

அவ்வனுமானம் † கேவலாந்நுவயி ‡ கேவலவியதிரேகி § அந்நுவயவியதிரேகியென மூவகைத்தாம். அநநுவயம் - உடன்பாடு, வியதிரேகம், எதிர்மறை.

அவற்றுள்:—(1) கேவலாந்நுவயியாவது அந்நுவயத்தில் மாத்திரம் வியாத்தி யுடையது. அது குடம் அபிதேயம் (பெயரிட்டு வழங்கற்பாலது); பிரமேயத் தன்மையால் என்பது போலவாம். ஈண்டுக்குடம் பட்சம்; அதன் அபிதேயத்தன்மை சாத்தியம்; பிரமேயத்தன்மையால் என்பது எது. ஈண்டு, யாண்டு யாண்டுப் பிரமேயத்துவம் ஆண்டு ஆண்டு அபிதேயத்துவம் படம்போல என அந்நுவயவியாப்தி மாத்திரமுளது; யாண்டுச்சாத்தியமில்லை, ஆண்டு எதுவில்லை என வியதிரேக வியாத்தியின்மையா (அபிதேயத்துவமும், பிரமேயத்துவமு மெங்குமிருத்தலா) லென்க.

(2) கேவல வியதிரேகியாவது வியதிரேகத்தில் மாத்திரம் வியாத்தியுடையது. அது பிருதிவி எனையவற்றின் வேறு; கந்தமுடைமையால்; யாது எனையவற்றின் வேறன்று அது கந்தமுடையதன்று அப்புப்போல என்பது போலவாம். இங்கு யாதுகந்தமுடைத்து அஃது எனையவற்றின் வேறு

எனப் பொருள்பட்டமையின் வேற்றுமை மயக்கமாம். ஒன்றை யொன்றொத்திராமையாவது மதவேறு பாட்டால் பிராமாணங்களும் (அவற்றாலறியப்படும்) பொருள்களும் தம்முள்ளே மாறுகொள்ளுதலாம்; அப்படி யிருந்தாலும் அருள் துணையென்று சொல்லுமிடத்து (அது தம்முள் வேறுபட்டுள்ள சமயிகட்கெல்லாஞ்) சம்மதமா மென்பதாம் உயிரைவிட்டு நீங்காமல்

இதுபோல என அந்நுவயத்தில் திருட்டாந்தமில்லை; பிருதிவிமுழுதும் பட்சமே யாகலினென்க.

(3) அந்நுவயவியதிரேகியாவது அந்நுவயத்திலும், வியதிரேகத்திலும் வியாப்தியுடையது. வன்னியைச சாதிக்குங்கால் புகையுடைமை அந்நுவயவியதிரேகியாம்; யாண்டுப்புகை ஆண்டுத்தீ அடுக்களைப்போல என அந்நுவயத்திலும், யாண்டுத்தீயில்லை ஆண்டுப் புகையில்லை மடுப்போல என வியதிரேகத்திலும் வியாப்தி யுடைமையினென்க.

மீண்டும் அவ்வனுமானம் சுவார்த்தானுமானம் (தன் பொருட்டனுமானம்) பரார்த்தானுமானம் (பிறர்பொருட்டனுமானம்) எனவும் வேறுபாட்டா லிருவகைத்து.

(1) தன்பொருட்டனுமானமாவது தனக்கனுமிதி ஞானம் விளங்குதற்குக் காரணமாம்; வாக்கியப் பிரயோகமின்றி வியாத்திஞானமுதலியவற்றால் எவ்வனுமிதி யுண்டாகின்றதோ அது சுவார்த்தானுமிதியாம்.

(2) பிறர்பொருட்டனுமானமாவது தானேபுகையால்வன்னியையனுமித்துப் பிறருணர்தற்பொருட்டு ஐவகை யுறுப்புடன் கூடிய வாக்கியத்தைக் கூறுவது.

ஐவகையுறுப்பாவன:—1. பிரதிஞ்ஞை (மலைவன்னியுடைத்து) 2-ஏது (புகையுடைமையால்), 3. திருஷ்டாந்தம் - (யாது யாது புகையுடையது அது அது வன்னியுடையது அடுக்களைப்போல), 4. உபநயம் - (இதுவு மங்ஙனம்), 5. நிகமனம் - (ஆதலினிங்ஙனம்), (ஆதலால் மலைவன்னியுடைத்து) என்பனவாம்.

பிரதிஞ்ஞையாவது பட்சத்தைத் துணிபொருளுடையதாகக் கூறல்.

ஏதுவாவது இன ஆன் உருபீறாக இலிங்கத்தை யெடுத்துக் காட்டுவது.

திருட்டாந்தமாவது ஏதுசாத்தியங்களின் உடனிகழ்ச்சியை யெடுத்துக்காட்டுவது. வாதிப் பிரதிவாதிகளுக்கு யாண்டுவிவாதமில்லையோ யாண்டு இருவராலும் நிச்சயிக்கப்பட்ட அருத்தமுளதோ அது திருஷ்டாந்த மெனப்படும்.

உபநயமாவது பட்சதருமத்தன்மை யுணர்தற்பொருட்டுத் திருட்டாந்தத்தைச் சார்த்திக் கூறுவது.

நிகமனமாவது முடிந்தது முடித்தல்; மறுதலையின்மைகாட்டல் முதலியன நிகமனத்திற்குப்பயனும்.

இம்மை மறுமை யென்னும் இருமையிலும் உதவுதலால் அருளை 'துணை' என்றார். இவையிரண்டு பாட்டாலும் அருளினது சிறப்புச் சொல்லப் பட்டது.

(௯-து). சமயங்கள் பலவும் அருளுடைமையைக் கொண்டா டுதலின், அதனையொருவன் நன்னெறிக்கண்நின்றுபெறக்கடவன்.

2. (Stand) in the goodpath, consider and be kind; although you may perfectly study the rules of many different (sects), kindness will be your best aid in the acquisiton of heavenly bliss.

## 3. சத்தப்பிரமாணம்.

மீமாம்சமதத்தில் சத்தம் திரவியமாம்; மற்றவர் மதத்தில் சத்தம் குண மாம்; நியாயமதத்திலோ ஆகாயத்தின் குணமே சத்தமாம். இந்தச சத்தம் 1. தொனிவடிவம், (2) வர்ண (எழுத்து) வடிவம் என்னும் பேதத்தால் இருவகைத்து.

பொருளுடைய வர்ணம் (எழுத்து) அல்லது வர்ணசமுதாயம்பதமாம்; பதசமுதாயம் வாக்கியமாம். ஒன்றற்கொன்று சம்பந்தத்தோடு கூடிய சகல பதார்த்தங்களின் ஞானம், அல்லது சகலபதார்த்தங்களின் சம்பந்தவடிவ ஞானம் வாக்கியார்த்த ஞானமாம்.

வாக்கியார்த்த கோசர யதார்த்தஞானம் சாப்திப் பிரமையாம், சாப்தி ப்பிரமையின் கரணம் சத்தப்பிரமாணமாம்.

பதத்திற்கும் (அதனாலறியப்படும்) பொருளுக்குமுள்ள சம்பந்தம்விரு த்தி யெனப்படும். இந்த விருத்தி சக்தி விருத்தி, இலட்சணா விருத்தி யென்னும் பேதத்தா லிருவகைத்து.

சக்தியாவது பதத்தைக்கேட்பதனால் பதப்பொருளுணர்ச்சியுண்டாகு மாறு செய்யும் பதத்திலுள்ள சாமர்த்தியமே பதசக்தியாம். கடபதத்தைக் கேட்தபனால் கடவடிவப்பொருளின் ஞான முண்டாகிறது; இதுவே கட பதத்தின் சத்தியாம். பதத்திறகும் அர்த்தததிற்குமுள்ள சாட்சாத் (நேர்) சம்பந்தம் சக்திவிருத்தியாம.

பதத்தின் சக்திவிருத்தியாலறியப்படும்பொருள் சக்கியமெனப்படும். சக்கியசம்பந்தம் இலக்ஷணையாம்; அல்லது பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள பரம்பரைச் சம்பந்தம லட்சணையாம்; அதனாலறியப்படும் பொருள் இலட்சி யமாம்.

கங்கையென்னும்பதத்தின் சக்கியமாகிய பிரவாகத்திற்குக் கரையோ டுள்ள சம்பந்தம் கங்கையென்னும் பதத்தின் இலட்சணையாம்; அதனாலறி யப்படுங் கஙகையின்கரை இலட்சியமாம்.

"அந்த்தவாசகம் பதம். அது முக்கியம் கௌணமென்னும் வேறு பாட்டாலிருவகைத்து. (1) எது சக்திவிருத்தியா லெப்பொருளை யறிவிக் கின்றதோ அதைப் பொருளில் முக்கியமாம்; அது குதிரை குட முதலிய

பொருள்களை யறிவிப்பது குதிரை குடை முதலிய பதமாதல் போல்வதாம். (2) எது இலட்சணா விருத்தியா லெப்பொருளை யறிவிக்கின்றதோ அஃதப்பொருளில் கௌணமாகிய இலாக்ஷணிகமாம். அது கங்கையி லிடைசேரி யென்புழிக் கங்கை யென்னும் பதம் கரையை யறிவிப்பதாதல்போல்வதாம்.'' என்பது தருக்க கௌமுதி.

இச்சாப்த போதத்திற்கு அவாய்நிலை, தகுதி, தாற்பரியம், அண்மை என்னும் நான்கும் சககாரிகளாம். அவற்றுள்:—

அவாய்நிலையாவது ஒரு பதார்த்தத்திற்கு வேறுபதார்த்தத்தோடு கொண்டுகூட்டுணர் வின்மையாம்.

தகுதியாவது ஒரு பதார்த்தத்திற்கு வேறு பதார்த்தத்தோடுள்ள சம்பந்தமாம்.

தாற்பரியமாவது கேட்பவனுக்கு இப்பதத்தால் இப்பொருளின் ஞானமுண்டாகவேண்டுமென் றப்பதத்தைக் கூறுவோனது இச்சையாம்.

அண்மையாவது யோக்கிய பதங்களின் விருததிரூப சம்பந்தத்தாலுண்டாகும் மறைப்பின்றிய பதார்த்தஙகளின் ஸ்மிருதியாம்.

இச்சத்தம் விதி, நிஷேதம், அர்த்தவாதம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து.

அவற்றுள், விதிவாக்கியமாவது இதனைச்செய்க என்றுபுருஷனைப்பிரவிர்த்திக்குமாறு செய்யும் வாக்கியமாம். ஜோதிஷ்டோமத்தால் ஸ்வர்க்ககாமன் யஜிக்க என்பது விதிவாக்கியமாம். ஜோதிஷ்டோம மென்னும் யாகம் ஸ்வர்க்கரூப இஷ்டசாதனமாமென்பது பொருள். யஜிக்க என்னும் விதியால் இஷ்டசாதனத் தன்மை யடையப் படுதலாம்.

நிஷேதவாக்கியமாவது நிவிர்த்திபரமான வாக்கியமாம். அது மதுபானம் செய்யற்க என்பதாம். மதுபானம் இஷ்டவிசேஷசாதன மன்மையாலென்க. இஷ்டவிசேஷமும் பாபத்தை யுண்டுபண்ணுமையேயாம்.

விதிநிஷேதங்களுக்கு வேறாய வாக்கியம் அர்த்தவாதவாக்கியமெனப்படும். அதுவும் பூதார்த்தவாதம் (வச்சிரஹஸ்தன் புரந்தரன்), குணார்த்தவாதம் (யக்கியகம்பம் ஆதித்தன்), அனுவாதார்த்தவாதம் (அக்கினி பனிக்கு மருந்து) என மூவகைத்தாம்.

இச்சத்தம் இலௌகிகம் வைதிகமென்னும் வேறுபாட்டா லிருவகைத்து. இலௌகிகவாக்கியங்களுள், ஆப்தனாற் சொல்லப்பட்ட சிலவே பிரமாணமாம்; வைதிகவாக்கியமோ பரமாப்தனாகிய பகவானாற் சொல்லப்பட்டமையின் முற்றும் பிரமாணமேயாம்.

## 4. உவமானப் பிரமாணம்.

உவமிதியறிவிற்குக் கரணம் உவமானப்பிரமாணமாம்.

உவமானமாவது சாதிருசிய (ஒப்புமை) ஞானவடிவினதாம்.

சாதிருசியமாவது பேதத்தோடுகூடிய சமான தர்மமாம். மூற்றுஞ் சமான தர்மமுள்ளவிடத்து உவமானம் சித்திப்பதின்று.

எங்ஙனம்:—கவயத்தையறியாத ஒரு நகரவாசி காட்டு வாசியினிடத்துக் கவயம்(காட்டுப்பசு) அலேதாடியின்றிய ஆ (பசு) போன்றிருக்குமென்னும் வாக்கியத்தைக்கேட்டு, அவ்வாக்கியார்த்தத்தை யனுபவித்து, காட்டிற்குச் சென்றபோது, அலேதாடியின்றிய ஆவையொத்த பிண்டத்தைக் கண்டு, அக்காட்டுவாசியினுடையவாக்கியார்த்தத்தைஸ்மரித்து அப்பிண்டத்தில் கவயபதத்தின் வாச்சியத்தன்மையை யறிகிறுன். ஈண்டுக் கவயபதத்தின் வாச்சியத்தன்மையின் ஞானம் உவமிதியாம்; காட்டுவாசியினது வாக்கியார்த்தானுபவம் கரணமாம்; வாக்கியார்த்தத்தின் ஸ்மிருதி வியாபாரமாம்.

சாதிருசிய ஞானத்தால் உவமிதியறிவுண்டாதல்போன்று விதர்ம ஞானத்தாலும்உவமிதியறிவுண்டாம்எங்ஙனம்:—காண்டாமிருகத்தையறியாத ஒருவன் காட்டுவாசியினிடத்து ஒட்டையின விலக்ஷண (வேறுபாடான) தர்மமுடைய கொம்போடுகூடிய மூக்கினையுடையது காண்டாமிருகமென்னும் வாக்கியத்தைக் கேட்டு, அவ்வாக்கியார்த்தத்தை யனுபவித்துக் காட்டிற்குச் சென்ற காலத்து ஒட்டையின் விலக்ஷண தர்மமுடைய கொம்போடுகூடிய மூக்கினையுடைய பிண்டத்தைக் கண்டு, அக்காட்டுவாசியினுடைய வாக்கியார்த்தத்தை ஸ்மரித்து (நினைத்து), அப்பிண்டத்தில் காண்டாமிருக பதத்தின் வாச்சியத் தன்மையையறிகிறுன். ஈண்டுக் காட்டுவாசியினுடைய வாக்கியார்த்தானுபவம் கரணம்; வாக்கியார்த்தத்தின் ஸ்மரணம் வியாபாரம்; காண்டாமிருகபதத்தின் வாச்சியத்தன்மையின் ஞானம் உவமிதியாகிய பயனும்.

## 5. அருத்தாபத்திப்பிரமாணம்.

அருத்தாபத்திப் பிரமையின் கரணம் அருத்தாபத்திப் பிரமாணமாம். உபபாதக (இராப்போஜனத்தின்) கற்பனைக் கேதுவாகிய உபபாத்திய(பருமைத்தன்மையின்)ஞானம் அருத்தாபத்திப் பிரமாணமாம்; உபபாதக(இராப்போஜனத்தின்) ஞானம் அருத்தாபத்திப் பிரமையாம்.

அருத்தமாவது - (உபபாதக) வஸ்து. ஆபத்தியாவது - கற்பனையாம். ஆகவே, அருத்தாபத்தி யென்பத னவயவப்பொருள் வஸ்து கற்பனையென்பதாம்.

எங்ஙனம்:—பருத்திருக்குந் தேவதத்தன் பகலுண்ணுனென்று காணுமிடத்தாவது, கேட்குமிடத்தாவது, எவன்பகலி லுண்ணவில்லையோ அவனிரவிலு முண்ணுவிடத்துப் பருமை சம்பவியாதென் றுணர்ந்த பின்னர்ப் பருமைக்குக் காரணம் இராப்போஜனமென்று கற்பிக்கப்படுகிறது. இந்த இராப் போஜ னத்தின் கற்பனை அருத்தாபத்திப் பிரமையாம்; இந்த இராப்போஜனத்தின் ஞானத்துக்கு ஏதுவாகிய பருமையின் ஞானம் அருத்தாபத்திப் பிரமாணமாம்.

இது திருஷ்ட (காண்டல்) அருத்தாபத்தி, சுருத (கேட்டல்) அருத்தாபத்தியென் றிருவகைத்தாம்.

(1) பகலுண்ணாதவனது பருமையைக் காண்டலாலுண்டாகும் இராப் போஜனத்தின் ஞானம் திருஷ்டாருத்தாபத்தியாம்.

(2) வீட்டிலில்லாத தேவதத்தன் ஜீவித்திருக்கிறானென்று கேட்குமிடத்து, வீட்டிற்குவெளியே தேவதத்தனது இருப்பின்றி வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம் பொருந்தாதாகலின், வீட்டிற்கு வெளியே தேவதத்தனது இருப்புக் கற்பிக்கப்படுகிறது. வீட்டிலில்லாத தேவதத்தனது ஜீவனம் திருஷ்டமன்று; ஆனால் சுருதமாம். ஆகலின், இது சுருதாருத்தாபத்தியாம்.

## 6. அனுபலப்திப்பிரமாணம்.

உபலப்தி அல்லது உபலம்பம் என்பதற்கு ஞானம், அல்லது விளக்கம் என்பது பொருளாம்; ஆகவே, அனுபலப்திக்கு ஞானமின்மை, அல்லது விளக்கமின்மை யென்பது பொருளாம்.

அபாவப் பிரமையின் கரணம் அநுபலத்திப் பிரமாணமாம். அனுபலத்திப் பிரமாணத்தா லுண்டாகும் ஞானம் அபாவப்பிரமையாம். எங்ஙனம்:—வீடுமுதலியவிடத்துக் கடமுதலியன இல்லை யென்னும் ஞான முண்டாகிறது. கடமில்லாதவிடத்துக் கடத்தின் தகுதியான விளக்கமின்மையால் அதன் அபாவஞானமுண்டாகின்றது. அதுவே, அபாவப் பிரமையாம். கடத்தின் ஞானமில்லாத புருஷனுக்குக் கடத்தினபாவ ஞானமுண்டாகாதாகலின், பிரதியோகி யுணர்ச்சியின்றி யபாவ வுணர்ச்சி யுண்டாகாதென்பது நியமமாம். பிரதியோகியென்பது எதிர்மறையாம். கடத்தினபாவத்திற்கெதிர்மறை கடமாம். அக்கடமே பிரதியோகியாம். இவ்வாற்றால் நிஷேத (விலக்கு) முகஞானத்திற்கு விஷயமாவது, அல்லது சம்பந்த சாதிருசியங்கட்கு வேறாய பிரதியோகியினபேட்சை யோடுகூடிய ஞானத்திற்கு விஷயமாவது அபாவத்தி னிலக்கணமாம். வீடு முதலியவிடத்துக் கடாபாவத்தை (கடத்தினில்லாமையை) யறியுமிடத்து, ஆண்டுக் கடத்தின் யோக்கியானுபலப்தி (தகுதியாயவிளக்கமின்மை) அனுபலத்திப் பிரமாணமெனவும், அதனாலுண்டாகுங் கடாபாவஞானம் அபாவப்பிரமையெனவுமறிக.

இந்த அபாவம் சம்சர்க்காபாவம், அந்நியோந்நியாபாவமென இருவகைத்தாம். அந்நியோந்நியாபாவம் ஒன்றேயாம். சம்சர்க்காபாவம்: பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், சாமயிகாபாவம், அத்தியந்தாபாவமென நால்வகைத்தாம்.

(1) பிராகபாவம்-உற்பத்தியின்றி, நாசமுடையஅபாவமாம். எங்ஙனம்:- கடத்தின் பிராகபாவம், கடவுற்பத்திக்குமுன் கடத்தி னுபாதான காரணமாய கபாலத்திலிருக்கின்றது; கபாலத்தினுற்பத்திக்கு முன்னும் கபாலத்தினுபாதான (முதல்) காரணத்திலிருக்கிறது. இவ்வாற்றால், கடத்தினுற்பத்திக்குமுன் கடத்திற்குக் காரணமாய பரமாணுசமுதாயத்தில் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. பரமாணு கடங்களுக்கு இடையிலுள்ள துவி

யணுகமுதல் கபாலமீறுயுள்ள சகல அவயவிகளின் பிராகபாவமும் அவற்றினுற்பத்திக்குமுன் பரமாணுவின்கணிருக்கின்றது. இவ்வாற்றல் அஃதுற்பத்தி யில்லாததாம். அது நாசமுடையதுமாம்; ஏனெனின், கடம் உற்பத்தியானதும் அதன் பிராகபாவ மிருப்பதின்று;கடவுற்பத்தியே பிராகபாவத்தி னாசமாம்.

(2) பிரத்துவம்சாபாவம் - உற்பத்தியுடையதாய், நாச மில்லாததான அபாவமாம். தண்டத்தால் கடநாசமுண்டாகும்போது அதன் பிரத்துவம்சாபாவ முற்பத்தியாகிறது. அஃது அநந்தமா(நாசமில்லாததா)ம். ஏனெனின், ஒன்றன் துவம்சத்தின் துவம்சம் உண்டாதலில்லை. கடத்தின் துவம்சம் யாவருக்கும் அனுபவசித்தமாம். கடத்தின் துவம்சத்தின் துவம்சம் (அஃதாவது அழிந்த கடத்தின் புனருற்பத்தி) ஒருவரனுபவதமுமில்லை. ஆதலால் பிரத்துவம்சாபாவம் உற்பத்தியுடையதாய், நாசமில்லாததாம்.

(3) சாமயிகாபாவம்-உற்பத்தியுடையதும் நாசமுடையதுமாயுள்ள அபாவமாம். எங்ஙனம்:—ஓரிடத்துள்ள கடம், மற்றோரிடத்திற்குக் கொண்டுபோன போது அவ்விடத்தில் அக்கடத்தின் அபாவ முண்டாகின்றது. மீண்டுமவ்விடத்தி லக்கடத்தைக்கொண்டு வந்து வைத்தபோது அது நாசமாய் விடுகின்றது. இத்தன்மைய வபாவமே சாமயிகாபாவமாம்.

(4) அத்தியந்தாபாவம்—அநாதியநந்தவபாவமாம். வாயுவி லுருவ மின்றென்பது அத்தியந்தாபாவத்திற் குதாரணமாம். ஒருகாலத்திருந்து ஒருகாலத்திராத பதார்த்தத்திற்குற்பத்தி நாசங்கள் அமையும். என்று மில்லாத பதார்த்தத்திற்கு உற்பத்திநாசம் சொல்வது கூடாது. அத்தன்மையதே அத்தியந்தாபாவமாம். அநாதி - உற்பத்தியின்மை; அநந்தம்-நாசமின்மை.

அத்தியந்தாபாவத்திற்கு வேறாய் உற்பத்தி நாசமில்லாத அபாவம் அந்நியோந்நியா பாவமாம். இது பேதமென்றும், பின்னத்தன்மை யென்றும், அதிரிக்தத்தன்மை யென்றும் சொல்லப்படும். எஙஙனம்:-கடம்படமன்று என்னு மிடத்துக் கடத்தில் படத்தினது அபேதம் நிஷேதிக்கப்படுகின்றது. கடத்தின் வேறாயதுபடமென்பது வாக்கியத்தின் பொருளாம். இவ்வாற்றல், அபேதத்தை நிஷேதிக்கும் அபாவம் அந்நியோந்நியாபாவமாம்.

அபாவங்களின் இலக்கணம் நியாயசித்தாந்தப்படி கூறப்பட்டது. இதற்கு மறுப்பு முண்டு.

பரிமேலழகர் காட்சி முதலிய அளவைகளைச சுருக்கமாகக் கூறினமையின், அவ்வளவைகளை விளங்குமாறு ஒருவகையாக விரித்துக்கூறினும்.

௩. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

பரி.—(இ - ள்). இருள் செறிந்த துன்பவுலகத்துட் சென்று புகுதல் அருள்செறிந்த நெஞ்சினை யுடையார்க்கில்லை, (எ - று).

இருள்செறிந்த துன்பவுலக மென்றது திணிந்த விருளை யுடைத்தாய்த் தன்கட்புக்கார்க்குத் துன்பஞ் செய்வதோர் நரகத்தை. அது கீழுலகத்துள் ஓரிடமாகலின் 'உலகம்' எனப்பட்டது.

தெளி.—(இ - ள்). இருள்சேர்ந்த—இருள் மிகுந்த, இன்னாவுலகம் - துன்பவுலகத்தில், புகல் - (போய்) புகுதல், அருள்சேர்ந்த — அருள் மிகுந்த, நெஞ்சினார்க்கு - மனத்தினையுடையவர்க்கு, இல்லை—, (எ - று).

இருள்சேர்ந்த வின்னா வுலகமென்றது நெருங்கிய விருளையுடையதாய்த் தன்னிடத்தடைந்தவர்க்குத் துன்பஞ் செய்வதொரு தமப்பிரபையென்னும் நரகத்தை. அதுகீழுலகத்துள் ஓரிடமாகலின் 'உலகம்' என்று கூறப்பட்டது.

(க - து) அருளுடையார் நரகமடையா ரென்பது. (௩)

3. They will never enter the world of darkness and wretchedness, whose minds are the abode of kindness.

௪. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

பரி.—(இ - ள்). நிலைபேறுடைய உயிர்களைப்பேணி அவற்றின்கண் அருளுடைய னவானுக்குத் தன்னுயிர் அஞ்சுதற்கேதுவாகிய தீவினைகள் உளவாகா வென்று சொல்லுவர் அறிந்தோர், (எ - று).

* உயிர்களெல்லாம் † நித்தமாகலின் 'மன்னுயிர்' என்றார். அஞ்சுதல்-

* உயிர்களெல்லாம் சித்தாயிருத்தல் பற்றி 'நித்தமாகலின்' என்று கூறினார். இது கந்தபுராணம் சூதசங்கிதை நித்தியவத்து விசாரமுரைத்த வத்தியாயத்தில் "ஒத்தசட மநித்தியமல் லாதுசித்துக் கனித்தியம்வந்துறுதலின்றே" என்றும், பாகவத புராணம் 11-வதுஸ்கந்தத்தில் "அறிவினிலாக்கை மூன்று மசத்திய மென்று நீக்கி, நிறைவுறு மறிவு தானே நித்திய மென்று தேர்வோர், பிறவிவெங் கடலை யொன்றார்" என்றும், கூறுவதனாலும் நன்குணரப்படும்

உயிர்களெல்லாம் நித்தியம், சித்தாயிருத்தலின், யாது சித்து அது நித்தியம் ஈசுவரன்போல; யாது நித்தியமன்று அது சித்தன்று கடம்போல என்பதிங் கனுமானமாம். இஃது தன்வய வியதிரேகி யனுமானமாம்.

† நித்தியம்-துவசம்சாபாவ அப்பிரதியோகி (முன்னின்மைக் கெதிர்மறையாகாமை); அஃதாவது நாசமின்றி யிருப்பது.

¶ துன்பநோக்கியஞ்சுதல் - * அன்னவறத்தினோன் கொலைமுதலிய பாவங்கள் செய்யானெனவே, மறுமைக்கண் நரகம் புகாமைக் கேதுகூறியவாறாயிற்று.

தெளி:—(இ - ள்). மன்னுயிர் - நிலைபேறுடைய உயிர்களை, ஓம்பி - பாதுகாத்து, அருளாள்வாற்கு (அவ்வுயிர்களிடத்து) அருளுடையவனாயிருப்பவனுக்கு, தன்னுயிர்—தனது உயிர், அஞ்சும்-அஞ்சுதற்குக் காரணமாகிய, வினை - தீவினைகள், இல் - உண்டாகா, என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர், (எ - று).

உயிர்களெல்லாம் (சித்தாயிருப்பதுபற்றி) நித்தியமாதலின் 'மன்னுயிர்' என்றார். அஞ்சுதல்-துன்பநோக்கிப் பயப்படுதல். அப்படிப்பட்ட அறமுடையவன் கொலைமுதலிய பாவங்களைச செய்யானெனவே, மறுமையிலவன் நரகமடையாமைக்குக் காரணம் சொல்லியவாறாயிற்று.

(க - து). உயிர்களிடத்துக் கருணையுடையவன் தீவினைகளைச் செய்வதில்லை என்பது.

4. The wise say that the evils, which his soul would dread, will never come upon the man who exercises kindness and protects the life of other creatures.

௫. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

பரி:—(இ - ள்). அருளுடையார்க்கு இம்மையினும் ஒரு துன்பம் உண்டாகாது; ‡. அதற்குக் காற்றியங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று, (எ - று).

† சான்றுவார் - தாங்கண்டு தேறிய பொருளைக் காணாதார்க்குத் தேற்றுதற்குரியவர். அருளாள்வார்க் கல்லலுண்டாக ஒருகாலத்தும் ஓரிடத்தும் ஒருவருங் கண்டறிவா ரின்மையின், ‡ இன்மை முகத்தான்

¶ தீவினையாலுண்டாகுந் துன்பத்தைக் கருதி அது செய்யப் பயப்படுதல்.

* அன்னவறத்தினோன் - மன்னுயிரோம்பி யருளாளுமவ்வறத்தினையுடையவன்.

‡ அதற்கு - இம்மையிலும் ஒருதுன்பம் உண்டாகாதென்பதற்கு.

† "பரஸ்பரம் வழக்கிடு மிருவரினும் வேறாய், அவ்விருவரது வழக்கைச் சாட்சாத்தாக (நேராக) வறிந் துதாசீன (பட்சபாத மற்றவ)னா யிருப்பவன் சாட்சியெனப் படுவான்" என்பது தத்வாநுசந்தானம்.

‡ அருளுடையவர்களுக்குத் துன்பமுண்டாக ஒருகாலத்திலு மோரிடத்திலுங் கண்டறிந்தாரொருவருமில்லை யென்பதனை யேதுவாகக்கொண்டு உலகத்தாரியாவரையுஞ் சாட்சியாகக் கொண்டாரென்க.

ஞாலத்தார் யாவரும் சான்றென்பார் $ 'வளிவழங்கு மல்லன்மா ஞாலங்கரி' என்றார். ¶ எனவே, இம்மைக்கணென்பது பெற்றாம். ஞாலம் - ஆகு பெயர். இவை மூன்று பாட்டானும் || அத்துணையுடையார்க்கு இருமையினுந் துன்பமில்லாமை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). அருளாள்வார்க்கு - அருளுடையவருக்கு, (மறுமையிலேயன்றி இம்மையிலும்), அல்லல் - ஒருதுன்பம், இல்லை - உண்டாகாது, (அதற்கு), வளிவழங்கும் - காற்றுலாவுகின்ற, மல்லல் - வளப்பத்தையுடைய, மா - பெரிய, ஞாலம் - பூமியில் வாழ்வோர், கரி - சாட்சியாவார்.

சாட்சியாவார் - தாம்கண்டு தெளிந்தபொருளைக்காணாதவர்க்குத் தெளிவித்தற்கு உரியவர். அருளாள்வார்க்குத் துன்பமுண்டாக ஒருகாலத்திலும் ஓரிடத்திலும் ஒருவரும் கண்டறிவா ரில்லாமையால், இல்லாமை காரணமாக உலகத்தாரனைவரும் சாட்சியாவாரென்பார் 'வளிவழங்கு மல்லன்மா ஞாலங்கரி' என்றார். எனவே, (சாட்சியாதல்) இம்மையிலென்பது பெறப்பட்டது. ஞாலத்தாரை ஞாலமெனலால் அஃதிட வாகுபெயராம் இவை மூன்று பாட்டாலும் அவ்வருளாகிய துணையை யுடையவர்க்கு இம்மை மறுமை யென்னும் இருமையிலுந் துன்பமில்லாமை சொல்லப்பட்டது.

(க - து). அருளுடையார்க்கு இம்மையிலும் மறுமையிலும் துன்ப முண்டாவதில்லை என்பது.

5. This great rich earth, over which the wind blows, is a witness that sorrow never comes upon the kind-hearted.

சு. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

பரி;—(இ-ள்). உயிர்கண்மாட்டுச் செய்யப்படும் அருளைத்தவிர்ந்து, தவிரப்படுங்கொடுமைகளைச் செய்தொழுதுவாரை முன்னும் உறுதிப்

---

$ வளி (காற்று) வழங்காத விடத்து மக்கள் வாழுத லின்மையின், 'வளிவழங்கு மல்லன்மாஞாலம்' என்று கூறப்பட்டது. காற்றில்லாத விடத்து ஒருவரும் ஜீவித்திருத்தல் முடியாதென்பது "ஆதிநா யகனே கேட்டி யமரர்கோன் குலிசத் தாலே, காதலனுய மைந்தன் காலன்வாய் வீழக் கண்டு, வாதரா யன்கோ பிக்க வயிறுகள் பெருஞ்சா லென்னப், பூதம தென்ன வீங்கிப் புரண்டனர் புவனத் துள்ளோர்" என்று இராமாயணம் உத்தரகாண்டத்துள் கூறுவதாலு மறியப்படும். வளிவழங்கு ஞாலத்தை இவ்வுலகமென்றது பிரசித்தமாயிருப்பது நோக்கியாம்.

¶ எனவே - வளிவழங்கு ஞாலமெனவே.

|| நாரத பரிவிராஜகோப நிஷத்து ஐந்தாம் உபதேசத்தில் "சர்வ பூதங்களும் பயப்படுதற் கேதுவாகாது சஞ்சரிக்கின்ற முனிக்குச் சர்வபூதங்களாலும் ஒருபோதும் பயமுண்டாவ தில்லை" என்று கூறுகின்றது.

பொருளைச்செய்யாது தாம் துன்புறுகின்றமையை மறந்தவரென்று சொல்லுவர் நல்லோர், (எ - று).

*உறுதிப்பொருள் - அறம். துன்புறுதல் - பிறவித்துன்ப மூன்றனை யும் அனுபவித்தல் † மறந்திலராயின், அவ்வாறொழுகா ரென்பது கருத்து.*

தெளி:—(இ - ள்) *அருணீங்கி - (உயிர்களிடத்துச் செய்யப்படும்) அருளை யொழித்து, அல்லவை - ஒழிக்கப்படுங் கொடுமைகளை, செய் தொழுகுவார் - செய்து நடப்பவரை, பொருணீங்கி - (முற்பிறப்பிலேயும்) உறுதிப்பொருளாகிய அறத்தைச்செய்யாது, பொச்சாந்தார் - (தாம் துன்ப மடைகின்றமையை) மறந்தவர், என்பர் - என்று (நல்லோர்) சொல்லுவர்.*

*துன்பமடைதல் - தன்னைப் பற்றிவருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாகிய பிறவித்துன்ப மூன் றையும் அனுபவித்தலாம். மறவாதிருந்தாராயின், அப்படி நடவாரென்பது கருத்து.*

(க - து). *உயிர்களிடத்தருளின்றித் தீங்கிழைப்பவர் தீவினை யின்பயனை மறந்தவராவர் என்பது.*

6. The wise say that, those, who neglect kindness and practice cruelties, neglected virtue in their former birth, and forgot the sorrows which they must suffer.

---

எ. அருளில்லார்க் கவ்வுலக மில்லைப் பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

பரி:—(இ - ள்) உயிர்கண்மேல் அருளில்லாதார்க்கு வீட்டுலகத் தின்பம் இல்லை, பொருளில்லாதார்க்கு இவ்வுலகத்தின்பம் இல்லையா யினாற்போல, (எ - று).

*அவ்வுலகம் இவ்வுலகம் என்பன ஆகுபெயர். இவ்வுலகத் தின்பங்கட் குப் பொருள் காரணமானாற்போல, அவ்வுலகத்தின்பங்கட்கு அருள் காரண மென்பதாயிற்று.*

தெளி:—(இ - ள்). *பொருளில்லார்க்கு - பொருளில்லாதவர்க்கு, இவ்வுலகம்-இவ்வுலகத்தின்பம், இல்லாகியாங்கு - இல்லையாயினாற்போல, அருளில்லார்க்கு - (உயிர்களின்மேல்) அருளில்லாதவர்க்கு, அவ்வுலகம் - முத்தியுலகத்தின்பம், இல்லை-இல்லையாம், (எ - று).*

*அவ்வுலகம் இவ்வுலகமென்பன ஆண்டுள்ள இன்பங்களுக் காதலின், இடவாகுபெயர்களாம். இவ்வுலக வின்பத்தை யடைதற்குப் பொருள் காரண*

---

*† தாம் பிறவித்துன்பங்களால் வருந்துகின்றதை மறவாதவராயின், உயிர்களிடத்துச் செய்யப்படும் அருளை யொழித்து, பற்றற வொழிக்கப் படுவனவாகிய கொடுமைகளைச்செய்து நடக்காரென்பது கருத்தாமென்க.*

மாறுற்போன்று அந்த வுலக வின்பத்தை யடைதற்கு அருள் காரணமா மென்பதாயிற்று.

(கு - து). பொருளில்லாதவர்க்கு இவ்வுலகத்தின்பமும் அருளில்லாதவர்க்கு முத்தி யுலகத்தின்பமுமில்லை என்பது.

7. As this world is not for those who are without wealth, so, that world is not for those who are without kindness.

அ. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

பரி:—(இ - ள்). † ஊழான் வறியராயினார் அது நீங்கிப் பின் னொருகாலத்துச் செல்வத்தாற் பொலிவர்; ‡ அவ்வாறன்றி, அருளி லாதார் பாவம் அறுமையின் அழிந்தாரே, பின்னொருகாலத்தும் ¶ ஆத லில்லை, (எ - று).

$ மற்று - வினைமாற்றின்கண் வந்தது. * மேற் பொருளின்மை யோடு ஒருவாற்றான் ஒப்புமை கூறினாராகலின், அது மறுத்துப் பிறவாற் றான் அதனினும் கொடிதென்பது கூறியவாறு.

தெளி:—(இ - ள்). பொருளற்றார் - (போகூழினால்) வறுமை யடைந்தவர், (அவ்வறுமைநீங்கி), ஒருகால் - (பின்) ஒருகாலத்தில், (ஆகூழி னால்), பூப்பர்-(செல்வத்தினால்) விளங்குவார், (அப்படியல்லாமல்), அருளற்

† ஊழ் - நல்வினையின்பயனாகிய இன்பமும் தீவினையின் பயனாகிய துன்பமும் அவ்வினைகளைச் செய்தவனையே சென்று அடைவதற்குக்காரண மாகிய நியதி.

‡ அவ்வாறன்றி - ஊழினாலே தரித்திரராயினோர் அத்தரித்திரம் நீங்கிப் பின்பொருகாலத்தில் செல்வமுடையவராவதுபோ லல்லாமல்.

¶ பாவம்நீங்கி யருட்செல்வ முடையவ ராகுத லில்லை.

$ அற்றார் என்னும் வினையை மாற்றி அறுமையின் என்னும் பொரு ளைத் தக்கமையின் மற்று வினைமாற்றாயிற்று.

* மேல்(அருளில்லார்க் கவ்வுலக மில்லைப் பொருளில்லார்க், கிவ்வுலக மில்லாகியாங்கு என்னும் குறளில்) பொருளில்லாமையோடு அருளில்லா மையை யொருவகையால் உவமை கூறினாதலால் (இக்குறளில்) அது மறுத்து (பொருளில்லாமையோடு அருளில்லாமையை யொப்புக் கூறி யதைமறுத்து) பிறவாற்றான் (வேறொருவழியினால் அஃதாவது ஊழினால் தரித்திரராயினோர் அத்தரித்திரம் நீங்கிப் பின்பொரு காலத்தில் செல்வ முடையவராவர்; அருளில்லாதவர் பாவம் ஒழியாமையின் அழிந்தவரே; பின்னொருகாலத்தும் விருத்தி யடைவதில்லை யென்பதனால்) பொருளில் லாமையினும் அருளில்லாமை கொடியதுஎன்றுகூறியவிதமாமென்க.

ளூர் - அருளில்லாதவர், (பாவம்நீங்காமையால்), அற்றூர் - அழிந்தவரே, மற்று - பின்னொரு காலத்திலும், ஆதலரிது - (அருட்செல்வ முடையவர்) ஆதலில்லை, (எ - று).

மற்று - வினைமாற்றுப் பொருளது. முன்னுள்ள குறளில் பொருளில்லாமையோடு அருளில்லாமையை ஒருவிதத்தால் ஒப்பாக்கிச் சொன்னாராதலால், அதனை மறுத்து இக்குறளில் மற்றொரு விதத்தினால் அப்பொருளில்லாமையினும் அருளில்லாமை கொடியதென்பது சொல்லிய வாறாம்.

(௫ - து). அருளில்லாதவர் எக்காலத்தும் மேம்பாடுறுவ தில்லை என்பது.

8. Those who are without wealth may, at some future time, become prosperous; those who are destitute of kindness are utterly destitute; for them there is no change.

௯. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

பரி.—(இ - ள்). உயிர்கண்மாட்டு அருள் செய்யாதவன் செய்யும் அறத்தை ஆராயின், ஞானமில்லாதவன் ஒருகால் மெய்ப்பொருளை யுணர்ந்தாற் போலும், (எ - று).

மெய்ப்பொருள் - மெய்ந்நூலிற் சொல்லும் பொருள். † நிலைபெற்ற ஞானமில்லாதவன் இடையே மெய்ப்பொருளை உணர்ந்தால், அதனைத் தன் ஞானம் இன்மையாற் றானே அழித்துவிடும். அதுபோல, அருளாதான் இடையே அறஞ்செய்தால் அதனைத் தனனருளாமையாற் றானே அழித்து விடுமென்பதாயிற்று; ஆகவே, பிறவறங்கட் கெல்லாம் அருளுடைமை மூலமென்பது பெற்றாம். இவை நான்குபாட்டானும் அத்துணையில்லாதார்க்கு வருங்குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). அருளாதான் - (உயிர்களிடத்து) அருள்செய்யாதவன், செய்யும் - செய்கின்ற, அறம்- அறத்தை, தேரின் - ஆராயின், தெருளாதான் - ஞானமில்லாதவன், மெய்ப்பொருள் - மெய்ந்நூலிற் சொல்லும் பொருளை, கண்டற்று - (ஒருகால்) அறிந்தாற்போலும், (எ - று).

ஆல் - அசை. நிலைபெற்ற ஞானமில்லாதவன் நடுவே மெய்ப்பொருளையறிந்தால், அதனைத் தன்னிடத்து ஞானமில்லாமையால் தானே அழித்து விடுவான்; அதுபோல அருளில்லாதவன் நடுவே அறஞ்செய்தால் அதனைத் தன்னிடத் தருளில்லாமையால் தானே அழித்துவிடுவானென்பதாயிற்று; ஆகவே, மற்றெல்லா வறங்களுக்கும் அருளுடைமை காரணமென்பது பெறப்பட்டது. இவை நான்குபாட்டாலும் அவ்வருளாகிய துணையில்லாதவர்க்கு வரும் குற்றஞ் சொல்லப்பட்டது.

† நிலைபெற்ற ஞானம் - சற்குரு மூர்த்தியினிடத்துப் பலமுறை தத்துவ விசாரஞ் செய்ததனா லுண்டாகிய ஐயந் திரிபின்றிய ஞானம்.

(க - து). அருளில்லாதவன் செய்யும் அறம் அறமாவதில்லை.

9. If you consider the virtue of him who is without kindness it is like the perception of the true being by him who is without wisdom.

௰. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

பரி:—(இ - ள்). தன்னின்வலியார் தன்னை நலிய வரும்பொழுது அவர்முன் தானஞ்சிநிற்கும் நிலையினை நினைக்க; அருளில்லாதவன் தன்னின் எளியார்மேல் தான் நலியச் செல்லும் பொழுது, (எ - று).

மெலியா ரெனச் சிறப்புடைய உயர்திணைமேற் கூறினாராயினும், * ஏனை யஃறிணையுங் () கொள்ளப்படும். † அதனை நினைக்கவே, ‡ இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சமாமென்றறிந்து, அதன்மேல் அருளுடையனா மென்பது கருத்து. இதனால் அருள் பிறத்தற் குபாயங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). (அருளில்லாதவன்) தன்னின் மெலியார்மேல் - தன்னிலுமெளியாரிடத்து, தான் —, செல்லுமிடத்து - (வருத்துவதற்குச்) செல்லும்பொழுது, வலியார் - (தன்னிலும) வலியவர், (தன்னைவருத்துவதற்கு வரும்போது), முன் - (அவர்) முன், தன்னை - (அஞ்சிநிற்கும்) தனதுநிலையை, நினைக்க - நினைக்கக்கடவன் (எ - று).

மெலியாரென்று சிறப்புடைய உயர்திணைமேல் வைத்துக் கூறினாராலும், ஏனைய அஃறிணையுயிர்களுங் கொள்ளப்படும். அதனை நினைக்கவே, இந்தவுயிருக்கும் அப்படியே அச்சமுண்டாகு மென்றறிந்து, அவ்வுயிரின்மீது அருளுடையவனாவா னென்பது கருத்து. இதனால் அருள்பிறப்பதற்கு உபாயஞ் சொல்லப்பட்டது

(க - து). தன்னினும் வலியவர் தன்னைவருத்த வரும்போது தானிருக்கும் நிலைமையை யெண்ணுகின்றவன் தன்னினும் மெலியவரை வருத்துதல் செய்யான் என்பது.

---

* ஏனை யஃறிணை யென்பன, இப்பி, சங்கு, கறையான், எறும்பு, தும்பி, வண்டு, பறவை, ஆடு, மாடு முதலியனவாம்.

() இவ்வாறு கொள்ளுதல் உபலட்சணமாம்.

† அதனை நினைக்கவே - தன்னைப் பார்க்கிலும் வலியவர் தன்னை வருத்த வரும்போது அவ்வலியவர் முன்பு தான்பயந்து நிற்கும் நிலைமையை நினைக்கவே.

‡ இவ்வுயிர்க்கும் அவ்வாறே யச்சமாமென் றறிந்து - நாம் வருத்தப்புகு மிப்பிராணிக்கும் நம்மிலும் வலியவர் முன்னர் நாம் பயந்ததுபோலப் பயமுண்டாகு மென்று தெரிந்து.

10. When a man is about to rush upon those who are weaker than himself, let him remember how he has stood (trembling) before those who are stronger than himself.

இரண்டாவது அதிகாரம்.

## புலான்மறுத்தல்:—*Abstinence from flesh.*

பரி:—அஃதாவது ஊனுண்டலை யொழிதல். ¶ கொலைப்பாவத்தைப்பின்னும் உளதாக்கலின் அதற்குக் காரணமாதலையும், முன்னும் அதனான் வருதலின் அதன்காரியமாதலையும் ஒருங்குடைத்தாய ஊனுண்டல் அருளுடையார்க் கியைவதன்றாகலின்: அதனை விலக்குதற்கு, இஃதருளுடைமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி:—*அஃதாவது ஊனுண்ணுதலை யொழித்தலாம். கொலைப் பாவத்தைப் பின்னும் உண்டாக்கலால் அக்கொலைப் பாவத்திற்குக் காரணமாதலையும், முன்னும் அக்கொலைப்பாவத்தால் வருவதால் அக்கொலைப் பாவத்தின் காரியமாதலையும் ஒரு சேர வுடையதாகிய ஊனுண்ணுதல் அருளுடையார்க்குப் பொருந்துவது அன்றாகலின், அதனை விலக்குவதற்கு, இப்புலான்மறுத்தல் அருளுடைமையின் பின் வைக்கப்பட்டது.*

க. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

பரி:—(இ - ள்). தன்னுடம்பை வீக்குதற் பொருட்டுத் தான் பிறிதோருயிரின் உடம்பைத் தின்பவன் எவ்வகையான் நடத்தும் அருளினை.

‡ *பயனிலாத ஊண் பெருக்கலைப் பயனெனக்கருதி இக்கொடுமை*

¶ *பிராணிகளைக் கொல்லுவதா லுண்டாகும் பாவத்தை (மாமிசமுண்டல்) பின்னும் உண்டாக்குவதனால் அக்கொலைப் பாவத்திற்குக் காரணமாயிருத்தலையும், முன்னும் (மாமிசமுண்டல்) பிராணிளைக் கொல்லுவதாலுண்டாதலால் அக்கொலையின் காரியமாயிருத்தலையும் ஒருமித்துடையதாயிருக்கின்ற மாமிசம் புசித்தல் அருளுடையவர்களுக்குப் பொருந்துவதல்லாமையாஞல், அம்மாமிசம் புசித்தலை நீக்குவதற்கு இப்புலான் மறுத்தலென்னு மதிகாரம் அருளுடைமையென்னு மதிகாரத்தின் பின் வைக்கப்பட்டதென்க. இவ்வவதாரிகையால் ஒருவன் மாமிசம் புசித்தல் பல பிராணிகளைக் கொல்லுவதற்குக் காரணமாயும், பலபிராணிகளைக் கொன்ற தன் காரியமாயு மிருக்கின்றதென்பது நன்கு விளக்கமாயிற்று.*

‡ *பயன்படுதலில்லாத உடலைப் பெருகச்செய்தலைப் பயன் (பிரயோஜனம்) என்றெண்ணி மாமிசம் புசித்தலாகிய இக்கொடிய காரியத்தைச் செய்வோனே அறிவில்லாத துஷ்டனென்றாயிற்று. இதனால் துறவறத்தான் மோட்சமடைதற்கு நேர்சாதனமான ஞானத்தைப் பெறுவதற்கேது*

செய்வானை அறிவிலாத கொடியோ னென்றவா றாயிற்று. † 'எங்ஙன மாளுமருள்' என்பது ஆளானென்பது பயப்பநின்ற இகழ்ச்சிக் குறிப்பு.

தெளி:—(இ - ள்). தன்னூன் - தன்னுடம்பை, பெருக்கற்கு - வளர்த்தற்பொருட்டு, தான்—, பிறிதூன் - மற்றொரு பிராணியினுடம்பை, உண்பான் - தின்பவன், எங்ஙனம் - எவ்வகையால், அருள் - அருளை, ஆளும் - ஆளுவான் (எ - று).

பயனில்லாத உடலை வளர்த்தலைப் பயனென்று நினைத்து (பிறிதூனுண்ணும்) இக்கொடுமையைச் செய்வோனை அறிவில்லாத கொடியோனென்றவாறாயிற்று. 'எங்ஙனமாளுமருள்' என்பது அதனை ஆளானென்பது தரநின்ற இகழ்ச்சிக்குறிப்புச் சொல்.

(க - து). புலாலுண்பவன் அருளுடையவனாகான் என்பது.

1. How can he be possessed of kindness, who to increase his own flesh, eats the flesh of other (creatures).

உ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

பரி.—(இ-ள்). பொருளாற்பயன் கோடல் அதனைப் பாதுகாவாதார்க்கில்லை, அதுபோல, அருளாற்பயன்கோடல் ஊன்றின்பவர்க்கில்லை, (எ-று).

---

வா யுள்ள விரதங்களை யனுஷ்டித்தலை விட்டு உடல்பெருகுமாறு மாமிசம் புசித்தல் பயனில்லாத காரியமாமென்பது பெற்றாம். துறவறத்தான் உடல் பெருகச் செய்யலாகாதென்பது மநுதர்மசாஸ்திரம் 6 ம் அத்தியாயத்தில் " (வானப்பிரஸ்தன்) காயகிழங்கு முதலியன வகப்படாவிட்டால் வானப்பிரஸ்த பிராமணர்களிடத்திலும் அவர்களில்லாவிட்டால் வனவாசஞ் செய்கின்ற கிருகஸ்தர்களிடத்திலும் தன்பிராணதாரத்திற்கு உபயோகமான வளவு பிட்சையெடுத்துக் கொள்ளல் வேண்டும்" என்று கூறுவதாலுமுணரப்படும். மேலும், ஷை தருமசாஸ்திரம் ஐந்தாவது அத்தியாயத்தில் "எவன் * * * மற்றொருன்றன் மாமிசத்தினாலே தன்மாமிசத்தைவிர்த்திசெய்ய நினைக்கின்றானோ அவனிலும் பாவி யிந்த வுலகத்திலொருவருமில்லை" என்று கூறுவதும், "ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே" என்றானொருவர் கூறுவது மிங்கறியத்தக்கனவாம்.

† 'எங்ஙனமாளுமருள்' என்பதில் எங்ஙன மென்னும்வினா எதிர்மறைக்கண் நின்றமையின், ஆளும் என்பது ஆளான் என்னும் பொருளுணர்த்திற்று. உணர்த்தவே, ஊன் உண்பான் அருள் ஆளும் என்பது "பல்சான் றீரே பல்சான் றீரே, கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட், பயனின் மூப்பிற் பல்சான் றீரே" என்று புறநானூறு கூறுவது போல இகழ்சசிக் குறிப்பாமென்க.

பொருட்பயன் இழத்தற்குக் காரணம் காவாமை போல, அருட்பயன் இழத்தற்கு ஊன் தினல் காரணமென்ப தாயிற்று. ‡ ஊன் தின்றாராயினும் உயிர்கட்கு ஒரு தீங்கு நினையாதார்க்கு அருளாடற் கிழுக்கில்லை யென்பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவை யிரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). பொருளாட்சி - பொருளினாற் பயன் கொள்ளுதல், போற்றாதார்க்கு - (அப்பொருளைக்) காப்பாற்றாதவருக்கு, இல்லை—, ஆங்கு—அதுபோல, அருளாட்சி - அருளினாற் பயன் கொள்ளுதல், ஊன் தின்பவர்க்கு - மாமிசம் புசிப்பவருக்கு, இல்லை—,(எ - று).

பொருட்பயனை இழத்தற்குக்காரணம் அப்பொருளைக் காப்பாற்றாமை போல அருட்பயனை இழத்தற்கு மாமிசம் புசித்தல் காரணமாமென்பதாயிற்று. மாமிசம் புசித்தாராயினும் உயிர்களுக்கு ஒரு தீங்கு நினையாதவர்க்கு அருளை யாளுதற்குக்குறைவில்லை யென்பாரைமறுத்து, அக்குறை யுண்டென்பது இவை இரண்டு பாட்டாலும் சொல்லப்பட்டது

(க - து). அருளாலாம் பயனை ஊனுண்பவரடையாரென்பது.

2. As those possess no property who do not take care of it, so those possess no kindness who feed on flesh.

---

௩. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்.

பரி.—(இ - ள்). கொலைக்கருவியைத் தங்கையில் கொண்டவர் மனம் அதனாற்செய்யுங் கொலையையே நோக்குவதல்லது அருளை நோக்காதவாறுபோல, † பிறிதோருயிரின் உடலைச் சுவைபட வுண்டவர் மனம் அவ்வூனையே நோக்குவதல்லது அருளை நோக்காது, (எ - று.)

சுவைபடவுண்டல் - ¶ காயங்களான் இனியசுவைத்தாக்கி யுண்டல்.

---

‡ மாமிசம் புசித்தாராலும் பிராணிகளுக்கு ஒருகெடுதி யெண்ணாதவர்களுக்குஅருளையாளுதற்குக் குறைவில்லையென்று கூறும் புத்தர் முதலியோரை மறுத்து மாமிசம் புசிப்போர்க்கு (பிராணிகளைக் காப்பதாகிய அருளான தில்லாமையினால்) பிராணிகளுக்குத் தீங்கெண்ணுவதாகிய குற்றமுண்டென்பதாம். "அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி, யிம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றார், மம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும், பொய்ம்மா நிரயமென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே" என்பது சிவஞானவள்ளலார்.

† (ஆடு முதலிய) பிராணிகளின் மாமிசத்தை யுண்டவரது மனத்தின்கண் தாமதகுணவிருத்தி யதிகரித்தலின், அம்மனதானது சத்துவ குண விருத்தியின்பகுதியதான அருளை நோக்குதல் கூடாதாயிற்று.

¶ மாமிசத்தை மிளகு, உப்பு, வெங்காய முதலிய பொருள்களால் நல்ல உருசி யுண்டாகச் சமைத்துண்ணுதல்.

இதனான் ஊன் தின்றார் மனம் தீங்கு நினைத்தல் உவம வளவையாற் சாதித்து மேலது வலியுறுத்தப்பட்டது.

தெளி.—(இ - ள்.) ஒன்றன் - பிறிதோருயிரினது, உடல் - உடலை, சுவையுண்டார் - சுவைபடவுண்டவரது, மனம் - மனமானது, படைகொண்டார் - கொலைக்கருவியைப (தங்கையில்) கொண்டவரது, நெஞ்சம் போல் - மனம் (அக்கருவியாற் செய்யுங் கொலைத்தொழிலையே நோக்குவதல்லாமல் அருளை நோக்காதவாறு) போல, நன்றூக்காது - (அவ்வூணையே நோக்குவதல்லாமல்) அருளைநோக்காது, (எ - று).

சுவைபடவுண்டல் - பிறிதோருயிரினுடலைக் காயங்களால் இனியசுவையுடையதாகச் சமைத்து உண்டல். படை - வாள்முதலானவை. இதனால் ஊன்தின்றவரது மனம் தீயகுநினைத்தலை 'படைகொண்டார் நெஞ்சம் போல்' என்னும் உவமானப் பிரமாணத்தினால் சாதித்து முற்செய்யுளிற் சொல்லியது உறுதி செய்யப்பட்டது.

(க-து). புலால் புசிப்பவரது மனம் அருளை நாடுவதில்லை.

3. Like the (murderous) mind of him who carries a weapon in his hand, the mind of him who feasts with pleasure on the body of another creature, has no regard for goodness.

ச. † அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

பரி.—(இ - ள்). அருள் யாதெனிற் கொல்லாமை; அருளல்ல தியாதெனிற் கோறல்; ஆகலான், அக்கோறலான் வந்த ஊனைத்தின் கைபாவம், (எ - று).

‡ உபசாரவழக்காற் கொல்லாமை, கோறலாகிய காரியங்களை அருள் அல்லதெனக் காரணங்களாக்கியும், ஊன் தின்கையாகிய காரணத்தைப்

† 'அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்' என்பது முறைநிரனிறைப் பொருள்கோளாய் அருள் கொல்லாமை அல்லது கோறல் என்றியைந்து நின்றது. யாதெனின் என்னும்வினா கடைநிலைத்தீவகமாய் நின்று அருளென்பதனோடுஞ் சென்றியைந்துநின்றது.

‡ ஒன்றன் றன்மையை மற்றொன்மே லேற்றிக் கூறுவதாகிய உபசாரவழக்கால் அருள்காரணமாக உண்டாகும் கொல்லாமையாகிய காரியத்தையும் அருளில்லாமை காரணமாக உண்டாகும் கொல்லுதலாகிய காரியத்தையும் கொல்லாமை அருள் கோறல் அருளல்லது (அருளில்லாமை) என்று காரணங்களாக்கியும், (பாவமாகிய காரியமுண்டாவதற்கு உரியதாயுள்ள) மாமிசம் புசித்தலாகிய காரணத்தை ஊன்றினல் பொருளல்லது என்று காரியமாக்கியும் சொன்னாரெனக. இங்குக் கூறிய விரண்டனுள், முன்னது காரியங் காரணமாக வந்த வுபசாரவழக்கு ; பின்னது காரணங் காரியமாகவந்த வுபசாரவழக்கு

† பொருளல்லதெனக் காரியமாக்கியுங் கூறினர். அருளல்லது கொடுமை, சிறப்புப்பற்றி $ அறமும் பொருளெனப்படுதலின், பாவம் பொருளல்லதெனப்பட்டது. ¶ கோறலென முன்னின்றமையின் 'அவ்வூன்' என்றார். § இனி யிதனை யிவ்வாறன்றி 'அருளல்லது' என்பதனை ஒன்றாக்கி, கொல்லாமை கோறலென்பதற்குக் கொல்லாமை யென்னும் விரதத்தை யழித்தலென் றுரைப்பாருமுளர்.

தெளி:—(இ - ள்.) அருள்-அருளென்பது, யாதெனின்-எதுவென்றால், கொல்லாமை - கொலைசெய்யாமையாம், (அருள்) அல்லது - அருளல்லாத தென்பது, யாதெனின் - எதுவென்றால், கோறல் - கொல்லுதலாம், (ஆதலால்), அவ்வூன் - அக்கொல்லுதலால்வந்த மாமிசத்தை, தினல் - தின்னுதல், பொருளல்லது - அறனல்லாததாம் [பாவமாம்], (எ - று).

உபசாரவழக்குப்பற்றிக் கொல்லாமையாகிய காரியத்தை அருளென்றும், கொல்லுதலாகிய காரியத்தை அல்லதென்றும் காரணங்களாக்கியும், ஊன் தின்னுதலாகிய காரணத்தைப் பொருளல்லதெனக் காரியமாக்கியும், கூறினர். அருளல்லது—கொடுஞ்செயல், சிறப்புப்பற்றி அறமும் பொருளெனப் படுதலால், பாவம் பொருளல்லது என்று கூறப்பட்டது. கோறலென முன்னிருக்கின்றமையின் (கொல்லுதலால் வந்த)'அவ்வூன்'என்றார்.

(க-து). மாமிச முண்ணுதல் பாவ வேதுவா யிருத்தலின், அதனை யருளுடைமையா லொழித்தல் வேண்டும் என்பது.

4. Is it asked what is kindness and its opposite ? It is the preservation of life, and its destruction. Therefore it is not right to eat that flesh, from which life has been taken away.

---

† பாவமெனா என்றும் பாடமுண்டு.

$ அறம் (தருமம்) என்பது குணமாயிருக்க, அதனைப் பொருளென்று கூறுதல் அஃது இம்மைப்பயன் மறுமைப்பயன் வீடு என்னும் மூன்றையுந் தரும் சிறப்புப்பற்றியாம். வைசேடிகர் குணமுதலிய வற்றையும் பொருளென்பர். அருளுடைமையின ஆறாவது குறளில் அறத்தைப் பொருளென்று கூறியது மிங்கறியத் தக்கதாம்.

¶ கோறல் என்று முன்னடியில் நின்றமையின், அதனை அகாச் சுட்டால் குறிப்பித்து 'அவ்வூன்' என்று கூறினரென்க.

§ இனி இக்குறளை யிப்படியல்லாமல் 'அருளல்லது' என்பதனை யொன்றாகக் கொண்டு கொல்லாமை கோறல் எனபதற்குக் கொல்லாமை யென்னும்விரதத்தை யழித்தலென்று பொருள் கூறுவாருமுளரென்பது. (அஃதாவது அருளில்லாமையாவது கொல்லாமை யெனனும் விரதத்தை யழித்தலென்பதாம்). இலக்கணக்கொத்தின் "செய்யா விருவினை செய்வினை யாகி" என்பதனுரையில் "விலக்கின வற்றைச் செய்யாமையே நல்வினைசெய்தல்" என்பதற்கு "அறவினை யாதெனிற் கொல்லாமை" என்று கூறியது மிங்கறியத்தக்கதாம். (அருளல்லது என்பதன் பொருள் கருணைப் பண்பில்லாதது என்பது)

௫. * உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

பரி.—(இ - ள்). † ஒருசாருயிர் உடம்பின்கண்ணே நிற்றல் ஊனு ணாமையென்கின்ற அறத்தின்கண்ணது; ஆகலான், $ அந்நிலை குலைய ஒருவன் அதனையுண்ணுமாயின், அவனை விழுங்கிய நிரயம் பின் உமிழ் தற்கு அங்காவாது, (எ - று).

உண்ணப்படும் விலங்குகள் அதனாற் றேய்ந்து சிலவாக ஏனைய பல வாய் வருதலின 'உண்ணாமை யுள்ள துயிர் நிலை' என்றார், உண்ணினென் பது உண்ணவெனத் திரிந்துநின்றது. ஊனுண்டவன் அப்பாவத்தான் நெடுங்காலம் நிரயத்துள் அழுந்து மெனபதாம. ¶ கொலைப்பாவம் கொன் றார் மேல் நிற்றலின், பின் ஊனுண்பார்க்குப்பாவமில்லை யென்பாரை மறு த்து, அஃதுண்டென்பது இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). உயிர் - (சிலவகை) உயிர்கள், நிலை - (உடம்பினி டத்தே) நிற்றல், ஊன் - மாமிசத்தை, உண்ணாமையுள்ளது-உண்ணாமை யென்கின்ற அறத்தினிடத்தது, (ஆதலால்), உண்ண- (அந்நிலைகுலைய ஒரு வன் அம்மாமிசத்தை) உண்பானாயின், அளறு - (அவனைவிழுங்கிய) நரக மானது, அண்ணாத்தல் செய்யாது - (பின் உமிழ்தற்கு) வாய்திறவாது. ()

* இக்குறள் நன்னூல் விருத்தி யுரையில் தாப்பிசைப் பொருள் கோளிற்கு உதாரணமாக எடுக்கப்பட்டிருக்கிறது. தாப்பிசைப்பொருள் கோளாவது இடைநின்ற மொழி இயைபாய முன்னும் பின்னும்நின்ற மொழிகளோடு கூடுதலாம். 'உண்ணாமை' என்னு மிக்குறளில் இடை நின்றமொழி ஊன் என்பது அஃது உண்ணாமை யென்பதனோடும் உண் ண என்பதனோடுங் கூடி வருவதுணர்க.

† ஒருசாருயிர் - தின்பதற் குரியவாகாத பிராணிகள்.

$ அந்நிலைகுலைய - உயிர் உடம்பினிடத்து நிற்கும் நிலையானதுகெட.

¶ "தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா தின்னையெனக் கொன் றுணக்குத நீற்றினார்க்குப் பாவ, மன்னுவதுன் காரணத்தாற் றின் னுதார்க்கு வதைத்தொன்றை யிடாமையினால் வதைத் தவர்க்கே பாவ, மெ ன்னிலுனை யூட்டினர்க்குப் பாவஞ்சேர வென்னதவம் புரிகின்றாய புலால் கடவுட் கிடாயோ, வுன்னுடல மசுசியெனா நாணி வேறே றுடலுன்னி யசுசி யெனவுணர்ந்திலைகா ணீயே" என்று சிவஞானசித்தி கூறுவதும், மனுதரும சாஸ்திரம் ஐந்தாவது அத்தியாயத்தில் "பிராணிகளை வதை செய்யக் கட்டளை யிடுகிறவன், அதைச்செய்கிறவன், மாமிசத்தை யறுத் தெடுக்கிறவன், அதைவிற்கிறவன், அதை வாங்குகிறவன், அதைச சமைக் கிறவன், பரிமாறுகிறவன், புசிக்கிறவன், ஆகிய இவர்களனைவரும் காதகர் களென்று சொல்லப்படுகிறார்கள்" என்று கூறுவதும், நான்மணிக்கடிகை "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம், விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்" என்று கூறுவது மிங்கே அறியத் தக்கனவாம்.

*உண்ணப்படுகிற விலங்குகள் உண்ணும் அதனாற் குறைந்து சிலவாக மற்றையவிலங்குகள் பலவாக விருத்தியடைந்துவருதலால் 'உண்ணாமையுள்ள துயிர்நிலை' என்றார் உண்ண என்பது உண்ணியென்பதன் விகாரம். மாமிசமுண்டவன் மாமிசமுண்ணும் அப்பாவத்தினால் நெடுங்காலம் நரகத்துள் அழுந்துவானென்பதாம். கொலைப்பாவம் கொன்றவர்மேல் நிற்றலால், பின் மாமிசமுண்பவர்க்குப் பாவமில்லை யென்பாரைமறுத்து, அப்பாவம் உண்டென்பது இவையிரண்டு பாட்டாலும் சொல்லப்பட்டது.*

(க-து). *மாமிசம் புசிப்பவன் மீளாதநரகத்தை யடைவான்,*

5. Not to eat flesh contributes to the continuance of life; therefore if a man eat flesh, hell will not open its mouth to let him escape out, after he has once fallen in.

---

சூ. ‡ தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

பரி.—(இ-ள்). பேதைமை காரணமாக அல்லது ஊன் தின்கை காரணமாக உலகங் கொல்லாதாயின், பொருள்காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை, (எ-று).

*உலகென்பது ஈண்டு உயிர்ப்பன்மை மேனின்றது. † பின்னிகழுங்*

‡ *தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் என்றும் பாடமுண்டு.*

† *பின்னே யுண்டாகும் மாமிசம் புசித்தல் முன்னேயுண்டாகும் கொலைக்குக் காரணமாகாமையின், மாமிசம் புசிப்பார்க்குக் கொல்லுதலாகியகாரணத்தினால் வரும்பாவமில்லை யென்ற வாதியைப் பார்த்து இங்ஙனமன்றாயின் இது கூடாது என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தினால் புலாலுண்ணல் கொலைக்குக் காரணமாதல் சாதிக்கப்பட்டதென்க.*

*இங்கு அருத்தாபத்தியாவது:— (அறியாமை காரணமாக, அல்லது) மாமிசம் புசித்தல் காரணமாக உலகத்தார் பிராணிகளைக் கொல்லாராயின் [இஃது இங்ஙனமன்றாயின் என்னும் அருத்தாபத்தியின் முதலவயவத்தின் பொருள்.] விலைப்பொருட்டாக மாமிசம்விற்பார் யாவருமில்லை (இஃது இது கூடாதென்னும் அருத்தாபத்தியின் இரண்டா மவயவத்தின் பொருள்.) என்பதாம்.*

*தின்னும் பொருட்டுப் பிராணிகளைக் கொல்லுவாரில்லை யாயின், மாமிசத்தை விற்பவர் யாவருமில்லை யென்பது இதன் திரண்டபொருளாம்.*

*இங்கு மாமிசம் உண்ணுதற் பொருட்டுப் பிராணிகளைக் கொல்லுவாருண்டாயின் அம்மாமிசத்தை விலையின் நிமித்தம் விற்பாருமுண்டு என்பது அன்வயம் (உடன்பாடு).*

*மாமிசம் உண்ணுதற் பொருட்டுப் பிராணிகளைக் கொல்லுவாரில்லையாயின், அம்மாமிசத்தை விலையின் நிமித்தம் விற்பாரொருவருமில்லை யென்பது வியதிரேகம் (எதிர்மறை).*

தின்கை முன்னிகழும் கொலைக்குக் காரண மாகாமையின், தின்பார்க்குக் காரணத்தான் வரும் பாவமில்லை யென்ற வாதியை நோக்கி,அருத்தாபத்தி யளவையாற் காரணமாதல் சாதித்தலின், இதனான் § மேலது வலியுறுத்தப்பட்டது.

தெளி.—(இ - ள்). தினற்பொருட்டால் - (அறியாமை காரணமாக, அல்லது) மாமிசம் புசித்தல் காரணமாக, உலகு - உலகத்தார், கொல்லாதெனின் - (பிராணிகளைக்) கொல்லாராயின், விலைப்பொருட்டால் - விலைப்பொருள் காரணமாக, ஊன் தருவார்-மாமிசத்தை விற்பவர், யாரும் - எவரும், இல் - இல்லை, (எ - று).

உலகென்பதிங்கு உயிர்ப்பன்மை (எண்ணிறந்த வுயிர்கள்) மேல் நின்றது. பின் புண்டாகும் மாமிசம்புசித்தல் அதற்கு முன்னே உண்டாகும் கொலைக்குக் காரணமாகாமையால், மாமிசம்புசிப்பவர்க்குக் கொலை செய்யுங் காரணத்தால் வரும் பாவம் இல்லை யென்ற வாதியை நோக்கி, அருத்தாபத்திப் பிரமாணத்தினுல் மாமிசம்புசித்தல் கொலை செய்தற்குக் காரணமாதலைச் சாதித்தலின், இதனுல் முற்கூறியது உறுதி செய்யப்பட்டது.

(க - து). ஆடுமுதலிய பிராணிகளைக் கொன்று, அவற்றின் மாமிசத்தையுண்பாரிலராயின்,அதனை விற்பாருமிலராவரென்பது.

6. If you say that the world does not destroy life for the purpose of eating, then no one would sell flesh for the sake of money.

எ. உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

பரி.—(இ - ள்). புலாலாவது பிறிதோருடம்பின் புண், அதுதூய்து அன்மை அறிவாரைப் பெறின், அதனை உண்ணுதொழியல் வேண்டும்.

*அஃதென்னல் வேண்டும் ஆய்தம் விகாரத்தாற் றொக்கதது.

§ மேலது என்பது இவ்வதிகாரத்தின் 4 வது குறளும் 5 வது குறளுமாம்.

* சுட்டடியாகப் பிறந்த ஆய்தத்தொடர் குற்றியலுகரமொழி நிலைமொழியாக நின்று வருமொழியோடு புணருமிடத்து வருமொழி முதலில் உயிரிருந்தால் ஆய்தங்கெடா தென்றும், வருமொழி முதலில் மெய்யிருந்தால் ஆய்தங் கெட்டு முற்றியலுகரமாமென்று முள்ளவிதி [தொல்காப்பியம் குற்றியலுகரப் புணரியலில் "முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி, மன்னல் வேண்டு மல்வழி யான" (முன்னென றதனுல் வேற்றுமைக் கண்ணுமிவ்விதிகொள்க என்று விசேடவுரையிலெழுதப்பட்டிருக்கின்றது) என்றும், "ஏனைமுன் வரினே தானிலை யின்றே" என்று முள்ளவிதி] யின்படி புண்ணதுணர்வார் என்பதன்கணுள்ள அதுணர்வார்என்பது அஃதுணர்வார் என்றிருத்தல் வேண்டும். இங்கு அவ்வாறின்றிச் செய்யுள் விகாரத்தால்

† அம்மெய்ம்மை யுணராமையின், அதனை உண்கின்றா ரென்பதாம்.
‡ பொருந்துமாற்றானும் புலாலுண்டல் இழிந்ததென்பது இதனாற் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). புலாஅல் - புலாலாவது, பிறிதொன்றன் - வேறோருடம்பினது, புண் - புண்ணாம், அஃது - அப்புலால், (அசுத்தமாயிருத்தலே), உணர்வார் - அறிபவரை, பெறின் - பெற்றால், உண்ணாமை வேண்டும் - (அப்புலாலை) உண்ணாதொழியல் வேண்டும், (எ - று).

அஃது என்பது செய்யுள் விகாரத்தால் ஆய்தங்கெடாக்கு அதுஎன்று வந்தது. புலால் வேறோருடம்பினது புண்ணாமென்னும் அந்த மெய்ம்மையையறியாமையால், அந்தப்புலாலை உண்கின்றாரென்பதாம். இதனால் யுத்தியினாலும் மாமிசம் புசித்தல் இழிந்ததென்பது சொல்லப்பட்டது.

(க - து). மாமிசம் வேறோருடம்பினது புண்ணாமென்றறிந்தவர் அதனை யுண்ணார் என்பது.

7. Since the wise consider flesh as the unclean ulcer of a body, let it not be eaten.

அ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

ஆய்தங்கெட்டு அதுணர்வார் என்றிருத்தல்பற்றி 'அஃதென்னைல் வேண்டும் ஆய்தம் விகாரத்தாற் றொக்கது' என்று கூறப்பட்டது.

† மாமிசமானது மற்றோருடம்பின் புண்ணாமென்னு முண்மையையறியாமையினால் அம்மாமிசத்தை யுண்ணுகின்றார் அறிவிலாரென்பதாம். புலாலுண்டலி னிழிவைப் பற்றிச சான்றோர்கள் ''புலையென்னும் புலைநீரப் புனலென்னும் புனன்மூழ்கி, யலைகின்ற முழுமூட ரறிவென்ன வறிவென்ன, புலையன்றன மலமுண்ணு மெமையுண்ணும் புலையர்க்குக், குலமென்ன நலமென்ன கூகூவென் றனகோழி'' என்றும், ''தகருனதெதிரே சிந்தத் தாநதெரித் திட்ட கோழை, புகலுமுன் மீதிற் றாகப் பொறாதுளங் குலைந்துற் றாயால், பகர்தரு மவற்றி னூனைப் பற்றிய மூளையோடு, மகமகிழ்ந் தயின்ற வாறென் னறைகுதி யறிவி லாதோய்'' என்றும், பிறவுங் கூறியிருத்தலிங்கு நன்குணர்தற் பாலதாம் (தகர்-ஆடு, சிந்தல்-தும்மல்).

‡ பொருந்துமாறு - இதுகூடும் இதுகூடாதெனத் தன்னிடத்தே தோன்றும்யுக்தியாம்; இங்கு யுகதியாவது மாமிசம் சுத்தமா யிருந்தால் அதனை யுண்ணுதல் கூடும்; (அஙஙனமனறி) அது புண் வடிவ அசுத்தமாயிருத்தலால் அதனை யுண்ணுதல் கூடாதென்பது. புண்ணானது அருவருக்கத்தக்கதா யிருக்கின்றது; மாமிசமும் புண்வடிவமா யிருத்தலால் அஃது மருவருக்கத் தக்கதாம்; அருவருக்கத் தக்கதாகவே, புண்வடிவமென்றறிந்தும் மாமிசத்தை யுண்ணுதல் அறியாமையிலு மறியாமையாமெனக.

பரி.--(இ - ள்). மயக்கமாகிய குற்றத்தினீங்கிய அறிவினையுடையார் ஓருயிரி னீங்கிவந்த ஊனை உண்ணார், (எ - று).

§ தலைப்பிரி வெனபது ஒரு சொல். ¶ பிணமென ஊனின் மெய்ம்மை தாமே உணர்தலின் 'உண்ணார்' என்றார்.

தெளி:—(இ - ள்) செயிரின் - (மயக்கமாகிய) குற்றத்தினின்றும், தலைப்பிரிந்த - நீங்கிய, காட்சியார் - அறிவினையுடையவர், உயிரின் - ஒருயிரினின்றும், தலைப்பிரிந்த - நீங்கிவந்த, ஊன் - ஊனை, உண்ணார்.

தலைப்பிரி வென்பது ஒருசொல். பிணமென்று மாமிசத்தின் மெய்ம்மையைத் தாமே யறிதலால் 'உண்ணார்' என்றார்.

(க - து). அறிவுடையார் மாமிசமுண்ணார் என்பது

8. The wise, who have freed themselves from mental delusion, will not eat the flesh which has been severed from an animal.

கூ. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

பரி.—(இ - ள்). தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் வேள்வி வேட்டலினும், ஒரு விலங்கின் உயிரைப்போக்கி அது நின்ற ஊனை உண்ணாமை நன்று, (எ - று).

* அவ்வேள்விகளான் வரும் பயனினும், இவ்விரதத்தான் வரும் பயனே பெரிதென்பதாம்.

§ தலைப்பிரிந்த என்பதில் தலையென்பது பொருளுணர்த்தாத உபசர்க்கமாய் வந்தமைபற்றி, 'தலைப்பிரிவென்பது ஒருசொல்' என்று கூறப்பட்டது.

¶ ஒருயிரினின்றும் நீங்கிவந்த மாமிசத்தை (உயிர்நீங்கிய உடலை)ப் பிணமென்று தாமே உள்ளவாறு அறிதலால் பிணவடிவ மாமிசத்தை மயக்கம் நீங்கிய அறிவினையுடையவர் உண்ணார் என்பதாம். எனவே, மாமிசம் புசிப்பவர் மாமிசத்தைப் பிணவடிவமென் றறியாமையினாலதனை யுண்ணுகின்றாரென்பதாயிற்று; ஆகவே, பிணத்தைத் தொட்டதனால் தீட்டுண்டாயிற்றென் றதற்காகப் பரிகாரந் தேடுவோர் பிணவடிவ மாமிசத்தைப் புசித்தல் அறியாமையிலும் அறியாமையாம். இதனால் மாமிசம் புசிப்போர் பிணம் புசிப்போரென்றாயிற்றென்க. "பிணங்கிடக்க நானுகரே னென்றுநீ பேசுங், குணங்கிடக்க வேண்டியதென் கூறாய் - பிணத்தைக், கலத்திலே யிட்டுக் கலந்துநா வாரப், புலத்தினாற் றின்றால் புகல்' என்னுமிச் செய்யுளும் ஈண்டறியத்தக்கதாம்.

* மனுதரும சாஸ்திரம் ஐந்தாமத்தியாயத்தில் "எவன் நூறு வருஷ பரியந்தம் வருஷந்தோறும் அஸ்வமேதயாகஞ் செய்கின்றானோ, எவன் மாமிசத்தைச சாமளவும் நீக்குகிறானோ இவரிருவருக்கும் புண்ணிய பலன்

தெளி:—(இ - ள்). அவி - (நெய்முதலிய) அவிகளை, சொரிந்து- (தீயினிடத்து) பெய்து, ஆயிரம்வேட்டலின் - ஆயிரமயாகஞ் செய்தலி னும், ஒன்றன் - ஒருவிலங்கினது, உயிர் - உயிரை, செகுத்து - போக்கி, உண்ணாமை - (அவ்வுயிர் நின்ற மாமிசத்தை) உண்ணாதிருத்தல், நன்று-நல்லது, (எ - று).

அந்த யாகங்களால் வரும் பயனிலும், புலால்மறுத்தலென்னும் இந்த விரதத்தால் வரும் பயனே பெரிதென்பதாம் அவி - தேவர்க்கிடுமுணவு.

(க - து). அளவிறந்த வேள்வி புரிதலா லுண்டாகும் பயனி லும், புலாலுண்ணாது மறுத்தலா லுண்டாகும் பயன் சிறப் புடையதென்பதாம்.

9. Not to kill and eat the flesh of an animal, is better than the pouring forth of ghee in a thousand sacrifices.

கo. கொல்லான் புலாலை மறுத்தானைக் † கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

சரிதான்" "மாமிசத்தை நீக்குகிறவன் எந்தப்பலனை யடைகிறானோ அந்தப் பலனைப் பழம் கிழங்கு சாலியன்ன மென்னுமிவற்றால் ஜீவிக்கின்றமுனியு மடையமாட்டான்" என்று கூறுவது மிங்கறியத்தக்கதாம். தீயின்கண் தேவருணவாகிய நெய்முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம் (ஆயிரமென் றது இங்குக் கணக்கிறந்தன வற்றை யுணர்த்தி நின்றது) யாகங் (ஈற்று குதி யாகம் எனப்படும்)களைச செய்வதால் மறுமையிலுண்டாகும் சுவர்க்க முதலியவற்றின்பயனிலும், மாமிசத்தை யுண்ணுகின்றவொருவன் அதனி ழிவையறிந்து மாமிசமுண்ணாமையாகிய விரதத்தை மேற்கொள்ளுவானா யின் அவனுக்குப் பெரும்பயனுண்டாகு மென்பதாம். எனவே, வேள்வி யிங்கு இழித்துக் கூறப்பட்ட தன்றென்றாயிற்றென்க. இஃதறியாது ("வேத வேள்வியை நிந்தனை செய்துழ லாதமில்லி யமணொடுதேரரை" என்று திருஞானசம்பந்த சுவாமிகள்கூறியவாறு)வேதவேள்வியை நிந்தனை செய்பவராகிய சமணருக்கு 'அவிசொரிந்து' என்னுமிக்குறள் சாதகமா மென்று கூறுவாருமுளர். அவர்"அவிசொரிந் தாயிரம் வேட்டலின்" என னும் பிரயோகத்தை நன்குகவனித்திலர் போலும். இராமனைப்பார்க்கிலும் இலக்குமணன் நல்லவன் என்புழி இராமன் தீயவனாகாவாறு போன்று வேள்வி செய்வதினும்புலால்புசியாமை நன்றென்புழியும்வேள்வி தீயதாகா தென்க. வேட்டலின் என்பதன் இன் ஐந்தனுருபுஉறழ்பொருவின்கண் வந்தது. மேலும்,நாயனார் புலாலுண்ணாமையைச்சிறப்பிக்கவேண்டி வேள்விசெய் தலினும் புலால் புசியாமை நன்றென்று கூறினாரெனினு மொக்கும்;யாகஞ் செய்கிறவனுக்கும் புலால் மறுத்தவனுக்கும் பலன் சமமாகத் தருமசாஸ்தி ரங்கூறுதலாலென்க.

†கைகூப்பித் தொழுதல் உயர்திணைக்கன்றி, அஃறிணைக்கின்மையின், 'எல்லாவுயிரும்' என்பதிங் குயர்திணையுயிராம்.

பரி:—(இ - ள்). ஒருயிரையுங் கொல்லாதவனுமாய்ப் புலாலையும் உண்ணாதவனை † எல்லாவுயிருங் கைகுவித்துத் தொழும், (எ - று).

இவ்விரண்டறமும் ஒருங்குடையார்க்கல்லது $ ஒன்றே யுடையார்க்கு அதனாற் பயனில்லையாகலின், கொல்லாமையும் உடன்கூறினார். ¶ இப்பொருள் உடையான் மறுமைக்கண் தேவரின் மிக்கானுமென 0அப் பயனது பெருமை கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் ஊனுண்ணாமையது உயர்ச்சி கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). கொல்லான் - (ஒருயிரையுங்) கொல்லாதவனுமாய், புலாலை மறுத்தானை - புலாலையுமுண்ணாதவனை, எல்லாவுயிரும் - சர்வப்பிராணிகளும், கைகூப்பி-கைகுவித்து, தொழும்-வணங்கும், (எ-று),

கொல்லாமையும புலாலை மறுத்தலுமாகிய இவ் விரண்டறங்களையும் ஒருமிக்க வுடையவர்க்கல்லாமல் (அவற்றுள்,) ஒன்றுமாத்திரம் உடையவர்க்கு அதனாற் பயனில்லையாகலின் புலால் மறுத்தலுடன் கொல்லாமையையும சொல்லினார். இப்பொருளுடையவன் மறுமையில் தேவரினும் உயர்ந்தவனாவனென்று அப்பயனது பெருமை சொல்லியவாறாம். இவை மூன்று பாட்டாலும் மாமிசமுண்ணாமையினது உயர்சசி சொல்லப்பட்டது.

(க - து). ஒருயிரையுங் கொல்லாது புலாலுண்ணாதிருப்பவனை யெல்லாவுயிரும் வணங்கும். என்பது.

10. All creatures will join their hands together, and worship him who has never taken away life, nor eaten flesh.

† ஒருயிரையுங் கொல்லாமலும் புலாலுண்ணாமலு மிருக்கும் பொருளுடையான இம்மையில் மனிதவர்க்கங்களும் மறுமையில் தேவவர்க்கங்களும் கைகூப்பித் தொழுமியல்புடையவனாய், அவர்களுள் மேம்பட்டு விளங்குவா னென்பதாம். மனுதர்மசாஸ்திரம் ஐந்தாவ தத்தியாயத்தில் "எவன் ஜந்துக்களைக் கட்டாமலும் கொல்லாமலும் வருதத்தப்படுத்தாமலு மிருக்கிறானோ அவன் சர்வ ஜனமித்திரனாகச் சகல சுகத்தையுமனுபவிக்கிறான்" என்றும், ஆறாவதத்தியாயத்தில் ''எந்தத்துவிஜனிடத்திலிருந்து ஒருபிராணிக்குஞ் சிறிதும் பயமுண்டாகவில்லையோ, அவனுக்கு இறந்த பின் ஒருவரிடத்திலும் பயமுண்டாவதில்லை" என்றும் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

$ தானே யொன்றைக்கொன்று புசித்தல், பிறர்கொன்ற வொன்றைத் தான் புசித்தல், ஒன்றைக்கொன்று தானுண்ணாது பிறர்க்கு உண்ணக் கொடுத்தல் என்னுமூன்றும் கூடாவென்பது இதனால் நன்கு விளங்குமென்க.

¶ இப் பொருளுடையான்-கொல்லான் புலாலை மறுத்தானாகிய இப் பெருங் கருணையாளன்.

0 அப்பயனது - மறுமைக்கண் தேவரின் மிக்கானு மென்னும் அப் பயனது.

## மூன்றுவது அதிகாரம்

## || தவம்—On Austerities.

பரி:—அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் † உண்டிசுருக்கலும் ¶ கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், 0 மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும், ‖ முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றுற் றம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களை யோம்புதல். புலான் மறுத்து உயிர்கண்மேல் அருண் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின், இது புலான்மறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

*தெளி:—அஃதாவது மனம் இந்திரியங்களின் வழியிற் போகாது நிற்றற் பொருட்டு விரதங்களினால் உணவைச்சுருக்குதலும் வெயிற் காலத்தில் வெயிலில் நிற்றலும் மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் நீரில் நிற்றலும், முதலான செயல்களை மேற்கொண்டு, அவ்வுணவைச் சுருக்குதல் முதலியவற்றால் தம்முயிர்க்குவரும் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களைப் பாதுகாப்பதாம். புலாலுண்டலை மறுத்து உயிர்களின்மேல் அருள் முதிர்ந்தவிடத்துத் தவம் செய்யப்படுவ தாகலின், இது (தவம்) புலான் மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.*

க உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

பரி—(இ-ள்). தவத்தின்வடிவு உண்டிசுருக்கல் முதலியவற்றால் தம்முயிர்க்கு வருந்துன்பங்களைப் பொறுத்தலும் தாம் பிறவுயிர்கட்குத் துன்பஞ் செய்யாமையுமாகிய வவ்வளவிற்றே, (எ-று)-

---

*‖ மன விந்திரியங்களின் ஏகாக்கிரமே (ஒருமையே) தபசு என்று விவேக சிந்தா மணி கூறுகின்றது.*

*† உண்டிசுருக்கல் - உணவைக் குறைத்தல். ¶ கோடைக்கண்வெயில் நிலை நிற்றல்-சித்திரைமாத முதல் ஆடிமாத மீருயுள்ள வெயிற்காலத்தில் வெயில் படுமிடத்தில் நின்றுகொண் டிருத்தல். வெயில் நிலைநிற்றல் என்பதனால் (நாற்புறமும் தீசூழ மேலே சூரியகிரணம் படுவதான) பஞ்சாக்கினி மத்தியில் நிற்றலுங்கொள்க.*

*0 ஆவணிமாத முதல் கார்த்திகைமாத மீருயுள்ள மழைக்காலத்திலும் மார்கழிமாதமுதல் பங்குனிமாத மீருயுள்ள பனிக்காலத்திலும் நீர் நிலையில் (ஏரி ஆறு மடுமுதலியவற்றில்) நின்றுகொண் டிருத்தல்.*

*‖ முதலிய என்றதனால் ஈரத்துணியைப் போர்த்துக்கொள்ளலும், பட்சோபவாசம் மாசோபவாச மிருத்தலும், மரத்தின்கீழ் வசித்தலும், பிறவுங்கொள்க.*

* மற்றுள்ளன வெல்லா மிவற்றுள்ளே யடங்குதலின், அற்றேஎனத் தேற்றேகாரங் கொடுத்தார். † தவத்திற்குரு அற்றே என்பது யானை யது கோடு கூரிதென்பதனை யானைக்குக்கோடு கூரிது என்றாற்போல ஆறுவதன் பொருட்கண் நான்காவது வந்த மயக்கம். இதனால் தவத்தது இலக்கணங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). தவத்திற்கு - தவத்தினது, உரு - வடிவம், உற்றநோய் - (உணவைச் சுருக்குதல் முதலியவற்றால் தம்முயிர்க்கு) வருந் துன்பங்களை, நோன்றல் - பொறுத்தலும், (தாம்), உயிர்க்கு - (பிற) உயிர்களுக்கு, உறுகண் செய்யாமை - துன்பஞ் செய்யாமையும் (ஆகிய), அற்றே - அவ்வளவினதேயாம். (எ - று).

மற்றைய விரதங்களெல்லாம் உற்றநோய் நோன்றல், உயிர்க்குறுகண் செய்யாமை யென்னும் இவ்விரண்டிலே அடங்குதலான், அற்றே எனத் தேற்றேகாரங் கொடுத்தார். தவத்திற்கு என்னும் நான்கனுருபு தவத்தின து என ஆறாம் வேற்றுமைப்பொருளில் வந்தது. இதனால் தவத்தினது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க - து). தவத்தின் வடிவம் விரதங்களால் வருந்துன்பத்தைப் பொறுத்தலும் பிறவுயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமையுமாம் என்பது.

1. The nature of religious discipline consists, in the endurance by the ascetic of the sufferings which it brings on himself, and in abstaining from giving pain to others.

* திரிகாலஸ்நானம், தேவரிஷிபிதிர்களுக்குத் தர்ப்பணஞ் செய்தல், சுவப்பிரயோசனத்தில் விருப்பமில்லாமை, புணர்ச்சியில்லாமை முதலியன வெல்லாம் உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை யென்னு மிவ்விரண்டனுள்ளே அடங்குதலால், (தவத்தினது வடிவம் உற்றநோய் நோன்றலும் உயிர்க் குறுகண் செய்யாமையுமாகிய) அற்றே (அவ்வளவினதே) யெனத்தேற்றேகாரங் கொடுத்தாரென்க. அற்றே என்பதன் ஏகார விடைச்சொல் துணிவுப்பொருளை யுணர்த்தியதுபற்றித் தேற்றேகாரமாயிற்று.

† தவத்தினது உரு அற்றே என்பது தவத்திற்கு உரு அற்றே யென்று வந்தது யானையது கோடுகூரிது (தந்தம் கூர்மையுடையது) என்பதனையானைக்குக்கோடுகூரிது என்று கூறுவதுபோல ஆறனுருபின் கிழமைப் பொருட்கண் நான்கனுருபு வந்தவேற்றுமை மயக்கமாம (தவத்திற்கு என்பதன் நான்கனுருபு தனக்குரிய பொருளை விட்டு ஆறனுருபின் உறுப்புத் தற்கிழமைப்பொருளில் வந்தது இங்கு மயக்கமாம்).

உ. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

பரி.—(இ-ள்). † பயனேயன்றித் தவந்தானும் உண்டாவது † முற்றவ முடையார்க்கே; ஆகலான், அத்தவத்தை அம்முற்றவமில்லாதார் முயல்வது பயனின் முயற்சியாம், (எ - று).

*பரிசயத்தால் அறிவும் ஆற்றலும் உடையராய் முடிவு போக்கலின் 'தவமுடையார்க் காகும்' என்றும், ‡ அஃதிலார்க்கு அவையின்மையின் முடிவு போகாமையின் அவமாம் என்றுங் கூறினர்.*

தெளி:—(இ - ள்). *தவமும்* - (பயனேயல்லாமல்) *தவமும்* (உண்டாவது), *தவமுடையார்க்கு* - (முன்னைத்) *தவத்தை யுடையார்க்கே,* (ஆதலால்), *அதனை - அத்தவத்தை, அஃதிலார்-அம்முன்னைத் தவமில்லாதவர், மேற்கொள்வது - செய்யத்தொடங்குவது, அவம் ஆகும்-வீண்முயற்சியாம்.*

*(தவத்தை முற்பிறப்பிற் செய்துள்ள) பழக்கத்தால் (இப்பிறப்பில்) அறிவும் வல்லமையும் உடையராய்த் தவத்தைச செய்து முடித்தலால் 'தவமுடையார்க் காகும்' என்றும், அப்பழக்கமில்லாதவர்க்கு அவ்வறிவும் வல்லமையு மில்லாமையினால் தவம் முடிவு பெறாமையால் அவம் ஆகும என்றும் கூறினர்.*

(க - து). *முற்பிறப்பிற் றவஞ்செய்து பழகினவருக் கன்றி மற்றையோர்க்குந் தவத்தைச்செய்து முடித்தல்கூடாது என்பது.*

2. Austerities can only be borne, and their benefits enjoyed, by those who have practised them in a former birth; it will be useless for those who have not done so, to attempt to practise them now

ரு. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

பரி.—(இ - ள்). இல்லறத்தையே பற்றி நிற்பார் துறந்தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவலை விரும்பித் தாந் தவஞ்செய்தலை மறந்தார் போலும், (எ - று).

---

*† பயனேயன்றி - முற்பிறப்பிற் செய்த தவத்தினால் இப்பிறப்பினுண்டாகும் செல்வம் நுண்ணறிவுமுதலிய பிரயோஜனங்களே யல்லாமல். "மேலைத் தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வம்" என்பது மிங்கறியத் தக்கதாம்.*

*‡ அஃதிலார்க்கு அவையின்மையின் முடிவுபோகாமையின்—முற்பிறப்பில் தவஞ்செய்த பழக்கமில்லாதவர்களுக்குத் தவத்தைச்செய்து முடித்தற்குரிய அறிவும் ஆற்றலுமில்லாமையினால் தவம் இடையூறின்றி நிறைவேறாமையினால்.*

துப்புரவு - * அனுபவிக்கப்படுவன. † 'வேண்டிய வேண்டியாங் கெய் தற்' பயத்ததாகலின், ‡ யாவராலுஞ் செய்யப்படுவதாய தவத்தைத் தாஞ் செய்யுந் தானத்தின்மேல் விருப்பமிகுதியான் மறந்தார்போலு மெனவே, தானத்திற் றவம் மிக்கதென்பது பெற்றாம்.

---

* அனுபவிக்கப்படுவன - செவிமுதலிய இந்திரியங்களால் அனுப விக்கப்படும் சப்தமுதலிய விஷயங்கள்.

† வேண்டிய வேண்டியாங் கெய்தல் என்பது இவ்வதிகாரத்தின் ஐந் தாங் குறளிலுள்ளது.

‡ பொதுவகையாக 12 வருஷம் பிரஹ்மசரிய விரதத்தையும், 25 வருஷம் கிருகஸ்தா சிரமத்தையும் அததற்குள்ள நியமப்படி நிறைவேற்றி, அறிவுடையராய்ப் பிறப்பிற்குப்பயந்து, மோட்சமடைதற் பொருட்டு யானெனதென்னும் இருவகைப்பற்றையும் துறந்தவரியாவராலும் (மனம் இந்திரியங்களின் வழியே போகாமல் நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் கோடைக்கண் வெயில்நிலை நிற்றல் முதலியனவாகச்) செய்யப்படுவதாகிய தவத்தை இல்லறத்தார் "குடும்பபா ரந்தலைக் கொண் டவர்க் கல்லல் விடும்பரிசு" இன்மையைத் தமதனுபவத்தாலறிந்து சம்சாரத் தில் வைராக்கியமடைந்து அதைவிட்டு "சிறந்தது பயிற்ற லிறந்ததன் பய னே"(இதன்பொருள் அறம் பொரு ளின்பத்திற்சிறந்த வீட்டின்பம் பெறு தற்கு ஏமஞ்சானறவற்றை (வானப்பிரத்தத்தையும் சந்நியாசத்தையும்) அடிப்படுதல் யான் முற்கூறிய இல்லறத்தின் பயன் என்பது)என்று தொ ல்காப்பியம் "காமஞ்சான்ற" என்னுஞ் சூத்திரத்திற் கூறியவாறு துறவற த்தை மேற்கொண்டு செயயாது, தாம் செய்யும் (தருமவழியால் வந்த பொருளைத் தக்கோர்க்குச சந்தோஷத்தோடு கொடுத்தலாகிய) தானத்தின் மேலுள்ளவிருப்ப மிகுதியால் மறந்தார்போலு மென்பது. இவ்வாறு கூறிய தனால் இல்லறத்தார்க்கு தவத்தாலடையப் படுவதாகிய வீடு கிட்டாதென் பது திண்ணமாயிற்று. இது "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா, ரவஞ்செய்வா ராசையுட் பட்டு" என்னுங் குறளானும் நன்கு விள ங்கும். இங்கு "ஒழுக்கத்து நீததார்" என்னுங் குறளின் விசேட வுரையும் கவனிக்கத் தக்கதாம். மேலும், 'தவத்தை (இல்லறத்தார்) தாஞ் செய்யும் தானத்தின்மேல் விருப்பமிகுதியால் மறநதாற் போலும்' என்று கூறி யதனால் இல்லறத்தார் தவத்தை மறந்ததனால் பிறப்பிறப்பிற் காளா யினரென்பது நன்கு விளங்கிற்று. இல்லறத்தார் மோட்சம் பெற்றா ரென நூல்கள் கூறுகின்றனவே யெனின், அவர்கள் (ஜனகன் முத லாயினோர்) "அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந், துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்" என்றுள்ளவாறு மனத் துறவு பூண்டிருந்தா ராகலின், அது கூடுமென்க. மனுதரும சாஸ்திரம் ஆறாவதத்தியாயத்தில், பிரமசாரி, கிருகஸ்தன்,வானப்பிரஸ்தன், சந்நியாசி யென்னும் நால்வருக்கும் சந்தோஷம், தமக்கொருவ னபகாரஞ்செய்தா லும் தாம் பிரதி யபகாரஞ் செய்யாமை, மனோநிக்கிரகம், அநியாயமாய்ப் பொருள் தேடாமை, நல்லொழுக்கம், இந்திரிய நிக்கிரகம், சாஸ்திரஞானம்,

தெளி:—(இ - ள்). மற்றையவர்கள் - இல்லறத்தையே பற்றி நிற்ப வர்கள், துறந்தார்க்கு - துறவறத்தை மேற்கொண்டவர்க்கு, துப்புரவு - உண்டியும் மருந்தும் இருப்பிடமும், வேண்டி - (உதவுதலை) விரும்பி, தவம் - (தாம்) தவஞ்செய்தலை, மறந்தார்கொல் - மறந்தார்போலும்,(எ-று).

துப்புரவு - அனுபவிக்கப்படும் பொருள்கள். தவமானது வேண்டிய வற்றை வேண்டியபடியே யடைதலாகிய பயனையுடையதாதலால், யாவரா லும் செய்யத்தகுவதாகிய அத்தவத்தைத் தாம் செய்யுந் தானத்தின் மேலு ள்ள விருப்பமிகுதியால் மறந்தார்போலு மெனவே, தானத்திலும் தவம் உயர்ந்தது என்பது பெற்றாம்.

(க - து). இல்வாழ்வோர் துறவிகளுக்கு உதவி செய்தலை விரும்பித் தாங் தவஞ்செய்தலை மறந்தார் போலும் என்பது.

3. Is it to provide food for the ascetics who have abandoned the desire of earthly possessions that other persons have forgotten to practise austerity ?

ச. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

பரி.—(இ - ள்). தம்மறத்திற்குப் பகையாய் அழிவுசெய்தாரைக் கெடுத்தலும் அதனை உவந்தாரை உயர்த்தலும் ஆகிய இவ்விரண்டை யும் தவஞ்செய்வார் நினைப்பாராயின், அவர் தவவலியான் அவை அவர்க் குளவாம், (எ - று).

|| முற்றத்துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமை யின், 0 தவத்திற்கேற்றி யுரைக்கப்பட்டது. 'எண்ணின்' என்றதனன், அவர்க்கு அவையெண்ணுமை இயல்பென்பது பெற்றாம். () ஒன்னார்

பிரஹ்மஞானம், உண்மை, கோபமில்லாமை யென்னு மிப்பத்தும் பொது வான தருமங்களாமென்று கூறிப் பின்பு "இப்பதுவகையான தருமங் களை யு மெவர்களறிந்து அந்தப்படி நடக்கிறார்களோ அவர்கள் மேலான மோட்சத்தை யடைகிறார்கள்" என்று கூறியது மிங்கறியத்தக்கதாம்.

|| முற்றத் துறந்தார் - யானெனதென்னு மபிமானத்தை வாசனை மாத்திரமாயு மில்லாவாறொழித்தவர்.

0 ஒன்னாரைத் தெறலும் உவந்தாரை யாக்கலுமாகிய சாபாநுக்கிர கம் தவத்திற் குண்டென்பது வசிட்டரும் விசுவாமித்திரரும் திரிசங்குவை முறையே நீசனாகவும் விண்ணுலகிலொருவனாகவும் செய்திருக்கும் கதையா லும் பிறவாற்றானு முணரப்படும்.

() ஒன்னார் (பகைவர்) தவத்தாலன்றி வேறுவகையால் கௌசிகராச னைப்போல் பெரியவராயினும், உவந்தார் இரிசிகமுனிவரின் இரண்டாவது புத்திரனைப்போல மிகவற்பராயினும், அவர்களுக்குக் கௌசிகராஜனுக்கு வசிட்டராலும் இரிசிக புத்திரனுக்கு விசுவாமித்திரராலும் முறையே கேடு ம் பெருக்கமு முண்டாயினமை போல, தாழ்வும் உயர்வும் தவமுடையார் நினைத்த வளவாலே வந்து நிற்குமென்பதாம்.

பெரியாராயினும், உவந்தார் சிறியாராயினும் கேடும் ஆக்கமும் நினைத்ததனை யானே வந்து நிற்குமெனத் தவஞ் செய்வார்மே லிட்டுத் தவத்தினது ஆற்றல் கூறியவாறு.

தெளி:—(இ - ள்). ஒன்னார்-(தமது துறவறவொழுக்கத்திற்குப்பகையாய் நின்று) செடுதி செய்தவரை, தெறலும் - கெடச்செய்தலும், உவந்தாரை - (அவ்வறவொழுக்கத்தினை) விரும்பினவரை, ஆக்கலும் - உயரச்செய்தலும், (ஆகிய இரண்டையும்), எண்ணின் - (தவஞ்செய்வார்) நினைப்பாராயின், தவத்தான் - (அவரது) தவவலிமையினால், வரும் - (அவ்விரண்டும் அவருக்கு) உண்டாகும் (எ - று).

முழுதுந் துறந்தவருக்கு ஒன்னாரும் உவந்தாரும் இருப்பது கூடாமையால், ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்குதலுமாகிய சாபாநுக்கிரகம் தவத்தின்மீதேற்றிச் சொல்லப்பட்டது 'எண்ணின்' என்றதனால் அவர்க்கு அவற்றை எண்ணுமை இயல்பென்பது பெற்றும். ஒன்னார் பெரியாராயினும் அவருக்குக்கேடும், உவந்தார் சிறியராயினும் அவருக்கு உயர்வும் நினைத்தவளவாலேவந்து நிற்குமெனத் தவஞ் செய்வார்மேல் வைத்துத் தவத்தினது வல்லமை சொல்லியவாறும்.

(க - து). சத்துருக்களைக் கெடுத்தலும் மித்துருக்களைக் காத்தலுந் தவவலிமையால் வரும் என்பது.

4. If the ascetic desire the destruction of his enemies, or the aggrandizement of his friends, it will be effected by the power of his austerities.

௫. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

பரி.—(இ - ள்.) * முயன்றல் மறுமைக்கண் தாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம்; ஆதலால், செய்யப் படுவதாகிய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும், (எ-று.)

| 'ஈண்டு' என்பதனான் மறுமைக்கணென்பது பெற்றும். || மேற்கதி ¶ வீடுபேறுகள் ‡ தவத்தானன்றி எய்தப்படா வென்பதாம். இவை நான்குபாட்டானும் தவத்தது சிறப்புக் கூறப்பட்டது.

---

* முயன்றால் - தவத்தை யாரம்பித்துச் செய்தால்.

| தவஞ்செய்தல் ஈண்டு (இம்மைக்கண்) என்று கூறினமையின், வேண்டிய வேண்டியாங் கெய்தல் மறுமைக்கண் என்பது. பெற்றும்

|| மேற்கதி - இந்திரன் முதலிய இறையவர் பதங்கள்.

¶ வீடு - உயிர் காமம் வெகுளி மயக்கங்களினின்றும் நீங்குதல்.

‡ மேற்கதியும் வீடும்பேறும், தவத்தாலன்றி யடையப்படாவென்பது மனுதரும சாஸ்திரம் 11-வது அத்தியாயத்தில் "ஔஷதம், நோயில்லாமை, பிரஹ்மவித்தை, கருமானுஷ்டானம், சுவர்க்கமுதலிய பற்பல புண

தெளி:—(இ-ள்.) வேண்டிய (முயன்றால் மறுமையில் தாம்) விரும்பிய பயன்களை, வேண்டியாங்கு - விரும்பியபடியே, எய்தலால் - பெறலாம் ஆதலால், செய்தவம்-செய்யத்தகுவதாகிய தவமானது,ஈண்டு-இம்மையில், முயலப்படும் - (அறிவுடையோரால்) முயன்றுசெய்யப்படும் (எ-று).

'ஈண்டு' என்பதனால் மறுமையில் என்பது பெறப்பட்டது.மேற்கதியும் மோக்ஷமும், தவத்தாலல்லாமல் பிறிதொன்றால் அடைதல் கூடாதென்பதாம். இவை நான்கு பாட்டாலும் தவத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து). மறுமையில் தாம் விரும்பிய பயன்களை யடைதற் பொருட்டு இம்மையில் தவமானது அறிவுடையோரால் செய்யப்படும் என்பது.

5. Religious discipline is practised in this world, because it secures the attainment of whaever one may wish to enjoy in the next world.

---

௬ * தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

பரி.—(இ-ள்) தங்கருமஞ் செய்வாராவார் துறந்து தவத்தைச்செய்வார்; † அவரையொழிந்த பொருளின்பங்களைச் செய்வார் அவற்றின் கண் ஆசையாகிய வலையுட்பட்டுத் ‡ தமக்குக் கேடுசெய்வார்,(எ - று).

அநித்தமாய் | மூவகைத் துன்பத்ததாய் உயிரின்வேறாய உடற்கு

ணியலோக வாசமென்னு மிவை யெல்லாம தவத்தினாலேயே சித்திக்கின்றன; ஏனெனின், அவற்றிற்குத் தவமே காரணமல்லவா'' என்று கூறுவதாலும் விளங்குமென்க.

தவம் காமியத்தவம், நிஷ்காமியத்தவமென்றிருவகைத்தாம்; காமியத்தவம் சாபாநுக்கிரகத்திற் கேதுவும், நிஷ்காமியத் தவம் தத்துவ ஞானத்திற் கேதுவுமாம். நிஷ்காமியத்தவம் தத்துவ ஞானவாயிலாக மோக்ஷ வேதுவாமென்பதிங் குணரத்தக்கது.

* "நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித், தலையாயார் தங்கருமஞ் செய்வார்" என்பது நாலடி.

† அவரை - தவஞ்செய்வாரை.

‡ தமக்குக் கேடுசெய்வார் - தமக்கு மருத்துவர் (வைத்தியர்) தாமென்றறியாது தங்களுக்குத் தாங்களே கெடுதிசெய்துகொள்ளு மவிவேகிகள்.

| மூவகைத் துன்பத்ததாய் - அத்தியாத்மதுக்கம், அதிபூததுக்கம், அதிதைவ துக்கமென்னு மூவகைப் பிறவித்துன்பங்களை யுடையதாய்.

(1) ரோகம் தாகம் பசிமுதலியவற்றா லுண்டாகுந் துக்கம் அத்தியாத்ம துக்கமாம். ஆத்மாவை யாசிரயித்திருக்கும் ஸ்தூல சூட்சுமசரீரம் அத்யாத்ம மெனப்படும்; அதனா லுண்டாகும் துக்கம் அத்தியாத்ம

வருத்தம் வருமென் றொழியாது தவத்தினைச்செய்ய, பிறப்புப் † பிணி () மூப்பிறப்புக்களான் ‡ அநாதியாகத் துன்பமெய்திவருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடுபெறு மாகலின், தவஞ்செய்வாரைத் 'தங்கருமஞ் செய்வார்' என்றும், கணத்துள் அழிவதாய சிற்றின்பத்தின் பொருட்டுப் பல பிறவியுந் துன்புறத்தக்க பாவஞ்செய்து கோடலின், $ அல்லாதாரை 'அவஞ்செய்வார்' என்றும் கூறினார். * மற்று - வினைமாற்றின்கண் வந்தது.

தெளி.—(இ-ள்.) தங்கருமஞ் செய்வார் - தமதுகருமத்தைச் செய்பவராவார், தவஞ்செய்வார் - (துறந்து) தவத்தைச் செய்வார், மற்றல்லார் - அவரை யொழிந்த பொருளின்பங்களைச் செய்வார், ஆசையுட்பட்டு - (அப்பொரு ளின்பங்களிடத்து) ஆசையாகிய வலையிலகப்பட்டு, அவஞ்செய்வார், (தமக்குக்) கேடுசெய்பவராவார், (எ-று).

அநித்தியமாய்த் தன்னைப்பற்றி வருவன முதலிய மூவகைத் துன்பத்தை யுடையதாய் உயிரின் வேறாயுள்ள உடம்பிற்கு வருத்தம் வருமென்று விடாமல் தவத்தைச்செய்யப், பிறப்பு, பிணி, மூப்பு, இறப்புக்களால் அநாதியாகத் துன்பமடைந்து வருகிறஉயிரானது ஞானம உண்டாகப்பெற்று மோக்ஷமடையும் ஆதலால், தவஞ்செய்வாரைத் 'தங்கருமஞ்செய்வார்' என்றும், கணப்போதில் அழிவதாகிய சிற்றின்பத்தின் பொருட்டுப் பல பிறவிகளிலும் துன்பமடையத்தக்க பாவஞ் செய்து கொளளுதலால், அல்லாதாரை 'அவஞ்செய்வார்' என்றும் சொல்லினார். மற்று-வினைமாற்றுப் பொருளது.

(க - து). துறவறத்தை மேற்கொண்டு தவஞ்செய்பவர் தங் கருமஞ்செய்பவரும் ஏனையோர் அவஞ்செய்பவரு மாவர்.

6. Those discharge their duty who perform austerities; all others accomplish their own destruction, through the entanglement of the desire of riches and sensual pleasure.

---

துக்கமெனப்படும் (2) திருடர் புலி சர்ப்பம் முதலியவற்றா லுண்டாகுந் துக்கம் அதிபூத துக்கமாம். சரீரத்திற்கு வேறாயும் கண்ணிந்திரியத்திற்கு விஷயமாயு மிருப்பது அதிபூதமெனப்படும்; அதனாலுண்டாகும் துக்கம் அதிபூததுக்க மெனப்படும். (3) யட்ச ராட்சதப் பிரேதக் கிரகாதிகளாலும் சீதவாத (காற்று) ஆதபங் (வெயில்) களாலு முண்டாகும் துக்கம் அதிதைவதுக்கமாம். சரீரத்திற்கு வேறாயும் கண்ணிந்திரியத்திற்கு விஷயமாகாமலு மிருப்பது அதிதைவமெனப்படும்; அதனாலுண்டாகுந் துக்கம் அதிதைவ துக்க மெனப்படும்.

† தன்னை யுடையவனைத் தனது வல்லமைக்கேற்ப வேறுகாரியத்தில் பிரவேசிக்காவாறு பிணிததலின் (கட்டலின்) நோய் பிணியென்று சொல்லப்பட்டது.

() மூப்பு - முதுமை (கிழத்தனம்) ‡ அநாதி - தொடக்கமில்லாதது.

$ அல்லாதாரை - தவஞ்செய்யாதவரை.

* தவஞ்செய்தலென்னும் வினையை மாற்றித் தவஞ்செய்யாமை யென்னும் வினையைத் தந்தமையின், மற்று வினைமாற்றாயிற்று.

எ. 0 சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

**பரி.—(இ - ள்). தீயின்க || ணோடும் பொன்னுக்கு ‡ அது சுடச் சுடத் தன்னோடுகலந்த குற்ற நீங்கி ஒளிமிகுமாறுபோல, தவஞ்செய்ய வல்லார்க்கு அதனான் வருந்துன்பம் வருத்த வருத்தத் தம்மோடு கலந்த பாவநீங்கி ஞானமிகும், (எ - று).**

0 '*சுடச்சுடரும் பொன்போல்*'*என்றா ராயினும்,கருத்துநோக்கி, இவ் வா றுரைக்கப்பட்டது. ஒளிபோலப் பொருள்களை விளக்கலின் ' ஒளி ' எனப்பட்டது.*

தெளி:—(இ - ள்). சுட-(புடத்தீயானது) சுடச்சுட, பொன் சுடரும் போல் - (அப்புடத்தீயில் உருகியோடும்) பொன்னுக்கு (தன்னோடுகலந்த மாசுநீங்கி) ஒளிமிகுகின்ற (விதம்) போல, நோற்கிற்பவர்க்கு-தவஞ்செய்ய வல்லவர்க்கு, துன்பம் - (அத்தவத்தால் வருகிற) துன்பம்,சுடச்சுட-வருத்த வருத்த, ஒளிவிடும் - (தம்மோடுகலந்த பாவமொழிந்து) ஞானமிகும்,(எ-று).

ஒளி - பொன்னுக்குக் காந்தியும், தவஞ்செய்வோர்க்கு ஞானமுமாம். காந்தி மிகுந்தோறும் பொன்னுக்கு மாசு நீங்குதல்போல ஞானமிகுந்தோ றும் தவத்தினர்க்குப் பாவம் நீங்குமென்க. விளக்கு முதலிய ஒளிபோலப் பொருள்களை விளக்கலால், ஞானம் ' ஒளி ' என்று கூறப்பட்டது.

(க - து). தவத்தை மிகுதியாகச் செய்கின்றவருக்குப் பாவம் நீங்கித் தத்துவ ஞானமுண்டாம் என்பது.

---

0 இக்குறள் மனுதரும சாஸ்திரம் ஆறாவதத்தியாயத்தில். " எப்படி சுவர்ன முதலியனவற்றி னழுக்கு நெருப்பிற் காய்ச்சினால் போய்விடுமோ, அப்படியே தேகத்தைக் சார்ந்த இந்திரிய தோஷங்களெல்லாம் பிரா ணாயாமத்தால் (இரேசக பூரக கும்பகஞ் செய்தலால்) போய்விடுகின்றன" என்று கூறுவதற் கொத்திருத்த லறிக.

|| ஓடும் - உருகியோடுகின்ற. ‡ அது - புடத்தீ.

0 'சுடச்சுடரும் பொன்போல்' என்று கூறினா ராயினும் புடத்தீ தபிக்கத் தபிக்கப் பொன்னானது மாசுநீங்கி (மாற்றுயர்ந்து) ஒளிமிகுவது போல, தவம் அதிகப்பட அதிகப்படத் தபோதனர்கள் மனமாசொழிந்து (சாபாநுக்கிரகமாகிய பெருமைமிக்கு) ஞானம்விளங்கப் பெறுவரென்னும கருத்து நோக்கி, சுடச்சுட நோற்கிற்பவர்க்கு என்று உவமேயத்திலுள்ள சுடச்சுட என்னும் அடுக்கிற் கியையச் சுடச்சுடரும் பொன்போல் என் னும் உவமானத்திலும் சுடச்சுடச் சுடருமெனச் சுடவென்ப தொன் றைக் கூட்டி யிவ்வாறு (தீயின்கணோடும் பொன்னுக்கு அது சுடச்சுடத் தன்னொடு கலந்த குற்றநீங்கி ஒளிமிகுமாறுபோலஎன்று) சொல்லப்பட் டது. அடுக்குகள் - தொழிற் பயில்வுப் பொருளில் வந்தன.

7. Bright as gold which has been purified in the fire will those shine, who have endured the burning of pain in freque-nt austerities.

அ. † தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

**பரி.**—(இ - ள்). தன்னுயிரைத் தான் தனக்குரித்தாகப் பெற்றவனை அது பெறாதனவாகிய மன்னுயிர்களெல்லாந் தொழும், (எ - று).

*தனக்குரித்தாதல் - தவமாகிய தன்கருமஞ் செய்தல். ‡ அதனினூங்குப் பெறுதற்கரியது இன்மையின் 'பெற்றானை' என்றார். ¶ அது பெறாதனவென்றது $ ஆசையுட்பட்டு o அவஞ்செய்யு முயிர்களை. * சாபமும் அருளுமாகிய விரண்டாற்றலு முடைமையின் 'தொழும்' என்றார்.*

**தெளி.**—(இ - ள்). *தன்னுயிர் - தனது உயிரை, தானற - (தான்) தனக்கு உரியதாக. பெற்றானை - பெற்றவனை, ஏனைய - அது பெறாதனவாகிய, மன்னுயிரெல்லாம்-நிலைபேறுடைய உயிர்களெல்லாம், தொழும் - வணங்கும்,* (எ - று).

*தனக்குரியதாதல் - தவமாகிய தன்கருமஞ் செய்தல். அத்தவஞ்செய்தலைக்காட்டிலும் பெறுதற் கருமையானது பிறிதொன் றில்லாமையால் 'பெற்றானை' என்றார். அது பெறாதனவென்றது ஆசையாகியவலையிலகப்பட்டுத்தமக்குக் கேடுசெய்யு முயிர்களை. சாபானுக்கிரகமென்னு மிரண்டு வல்லமையும் பெற்றிருத்தலின் 'தொழும்' என்றார்.*

---

*† இளமை கழியாநின்றது; மூப்புப்பிணியோடு வாராநின்றது என்று கருதிப் பேரறிவுடையராய்த் தங்கருமமாகிய தவத்தைச செய்பவர்கள் இந்திரியங்களின் வயமாகாது இந்திரியங்களைத் தம்வயப்படுத்தி யிருத்தலின், அவர்கள் " இம்மைக்கு மும்மைக்குந் தம்மையுடைமை தலை " என்று பழமொழி கூறியவாறு தம்மைத் தமக்கேயுரிமையாகப் பெற்றிருக்கின்றார்க ளென்பதைத் ' தன்னுயிர் தானறப் பெற்றானை ' என்பது குறிப்பிக்கின்ற வாறுகாண்க. அறப்பெறுதல் - முற்றுந் தனக்கே உரியதாகப் பெறுதல்.*

*‡ அதனினூங்கு - தவமாகிய தன்கருமஞ் செய்தலைக்காட்டிலும்.*

*¶ அது - தவமாகிய தன்கருமஞ் செய்தல். $ ஆசை - பொருளின் பங்களின் மேலுள்ள விருப்பம். o அவம்—கேடு.*

** தவஞ்செய்வான் (ஒன்னார்த் தெறலுமாகிய) சாபமும் (உவந்தாரை யாக்கலுமாகிய) அருளு (அனுக்கிரகமு) மாகிய இரண்டு வல்லமையுமுடைத்தா யிருத்தல்பற்றி, அவனைத் தவஞ்செய்யு முரிமைபெறாது தமக்குக் கேடுண்டாக்கும் வினையைச் செய்யும் மாக்கள் (தம்முயிரைத் தமக்கு உரிமையாகப் பெறாமை காரணமாக) வணங்குகின்றனரென்க.*

(க-து). தன்னுயிரைத் தனக்குரியதாகப் பெற்றவனை யெல்லா வுயிரும் வணங்கும் என்பது.

8. All other creatures will worship him who has attained the control of his own soul.

கூ. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

**பரி.—(இ - ள்). * கூற்றத்தைக் கடத்தலும் உண்டாவதாம், தவத்தான் வரும் ஆற்றலைத் தலைப்பட்டார்க்கு, (எ - று).**

*சிறப்பும்மை: —† அது கூடாமை விளக்கிற்று; மன்னுயிரெல்லாந் தொழுதலேயன்றி இதுவுங் கைகூடுமென || எசசவும்மையாக வுரைப்பினும் அமையும். ஆற்றல் - சாபவருள்கள். இவை நான்குபாட்டானும் தவஞ்செய்வாரது உயர்ச்சி கூறப்பட்டது.*

**தேளி. —(இ-ள்).** *கூற்றம் - யமனை, குதித்தலும் - கடத்தலும், கைகூடும்-உண்டாவதாம், நோற்றலின் - தவஞ்செய்வதால் (வரும்), ஆற்றல்-வல்லமையை, தலைப்பட்டவர்க்கு-உடையவர்க்கு, (எ-று).*

*குதித்தலுமென்னும உயர்வு சிறப்பும்மை அது கூடாமையை விளக்கியது; மன்னுயிரெல்லாந் தொழுதலே யல்லாமல் யமனைக்கடத்தலாகிய இதுவும் சித்திக்குமென்றிறந்ததுதழீ இய எச்சவும்மையாகக் கூறினும் பொருந்தும். ஆற்றல் - சாபாநுக்கிரகம். இவை நானகு பாட்டாலும் தவஞ் செய்வாரது உயர்சசி சொல்லப்பட்டது.*

(க — து). *தவவலிமையுடையோார் யமனையும் வெல்லுவர்.*

9. Those who have attained the power which religious discipline confers, will be able also to pass the limit of Yaman, the God of death.

க0. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

* *தவத்திற் சிறந்தவர் யமனை வெல்லுதலும் கூடு மென்பது "உலையா முயற்சி களைகணு வூழின், வலிசிந்தும் வன்மையு முண்டே-யுலகறியப், பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த, கான்முளையே (மார்க்கண்டனே) சாலுங் கரி" என்று நீதிநெறிவிளக்கங் கூறுவதாலும், கூர்ம புராணத்தி லுள்ள சுவேதன் சரித்திரத்தாலு மறிதற் பாற்றும்.*

† *அது கூடாமை - யமனினின்றுந் தப்புதல் முடியாமையை.*

|| *எச்சவும்மையாவது சொல்லப்படாது குறைந்து நின்றபொருளை யுணர்த்தும் உம் என்னும் இடைச்சொல்லாம்.*

**பரி.—(இ-ள்.) உலகத்துச் செல்வர்கள் சிலராக நல்கூர்வார் பல ராதற்குக் காரணம் யாதெனின், அது தவஞ்செய்வார் சிலராக அது செய்யாதார் பலராதல், (எ-று).**

*செல்வம் நல்குரவென்பன ஈண்டு † அறிவினது உண்மை யின்மை களையுங் குறித்து நின்றன; என்னை? ‡ "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" என்றாராகலின். நோற் பார் சிலரெனக் காரணங் கூறினமையான், காரியம் வருவித்துரைக்கப் பட்டது. ¶ தவஞ்செய்யாதவர்க்கு இம்மையின்பமும் இல்லையென இத னால் அவரது தாழ்வு கூறப்பட்டது.*

தெளி.—(இ-ள்.) *(உலகத்திற் செல்வர்கள் சிலராக) இலர்-தரித்திரர், பலராகிய காரணம்- பலராதற்குக் காரணம், (யாதென்றால், அக்காரணம்), நோற்பார் - தவஞ்செய்வார், சிலர் - சிலராக, நோலாதவர் - அத்தவஞ்செய் யாதவர், பலர்- பலராதல், (எ-று).*

*இங்குச் செல்வம் நுண்ணறிவையும், தரித்திரம் அந்நுண்ணறிவில் லாமையையுங் குறித்து நின்றன. நோற்பார் சிலரெனக் காரணத்தைக் கூறினமையின் அதன் காரியமாகிய செல்வர்கள் சிலராகவென்பதுவருவித் துச்சொல்லப்பட்டது. இதனால் தவஞ்செய்யாதவர்க்கு இம்மை யின்பமும் இல்லையென்று அவரது தாழ்வு சொல்லப்பட்டது.*

(க-து). *செல்வர் சிலரும் தரித்திரர் பலருமாக இருத்தற்குக் காரணம் தவஞ்செய்வார சிலரும் அது செய்யாதார் பலருமாக இருத்தலேயாம் என்பது.*

10. Because there are few who practise austerity and many who do not, there are many destitute and few rich men in the world

† *அறிவினது உண்மையின்மைகளையும்-அறிவுடைமையறிவில்லாமை களையும்.*

‡ *நாலடியார் அறிவின்மை. க இதன் பொருள். நுட்பமாகியவறிவில் லாமை தரித்திரமாம்; அவ்வறிவுடைமை மிகவும் வளர்ந்த பெரியசெல்வ மாம் என்பது.*

¶ *தவஞ்செய்யாதவர்க்கு மறுமை யின்பமேயன்றி இம்மையின்பமு மில்லை யென்று கூறியதனால் தவஞ்செய்தவர்களுக்கே இம்மையின்பமும் மறுமையின்பமும் உண்டாமென்பது பெற்றாம். பெறவே, தவத்திற்கு மறுமையின்பமேயன்றி யிம்மையின்பமுந் தருந் தன்மை யுண்டென்பது தேற்றமாயிற்று. 'இலர்பலர்' என்னுமிக் குறளினால் தவஞ்செய்யாதார் பல ராயிருத்தலால் தரித்திரர் பலராயிருக்கிறாரென்றும், தவஞ்செய்வார் சிலரா யிருத்தலால் செல்வர் சிலராயிருக்கிறாரென்றும் பெறப்படுதலினால், செல்வ முடைமைக்கும் அஃதில்லாமைக்கும் காரணம் முறையேதவமும் அஃதின்*

## நான்காம் அதிகாரம்

## கூடாவொழுக்கம்.—On Inconsistent Conduct.

பரி.—அஃதாவது தாம் விட்ட † காமவின்பத்தை உரனின்மையிற் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்றுதவத்தோடு பொருந்தாத்தாய தீயவொழுக்கம். ‡ அது விலக்குதற்கு, இது தவத்தின் பின் வைக்கப்பட்டது.

தெளி.—*அஃதாவது தாம் வெறுத்து விட்ட காமவின்பத்தை ஸ்திர புத்தி யில்லாமையினால் பின்னும் விரும்பும்வழி தோன்ற அவ்வழியே கைக்கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாகிய தீயவொழுக்கம். அதனை விலக்குதற்கு இக்கூடாவொழுக்கம் தவத்தின்பின் வைக்கப்பட்டது.*

க. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் $ பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

பரி.—(இ-ள்). வஞ்சம் பொருந்திய மனத்தை யுடையவனது மறைந்த வொழுக்கத்தை, உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற பூதங்களைந்துங் கண்டு, தம்முள்ளே நகும், (எ-று).

*காமம் தன் கண்ணே தோன்றி நலியாநிற்கவும் அதனது இன்மைகூறிப் புறத்தாரை வஞ்சித்தலின் 'வஞ்சமனம்' என்றும், அந்நலிவு பொறுக்க மாட்டாதொழுகுங் களவொழுக்கத்தைப் 'படிற்றொழுக்கம்' என்றும். * உலகத்துக் களவுடையார் பிறரறியாமற் செய்வனவற்றிற்கு*

*மையுமாமெனபது பெற்றாம். "செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால், எய்த வருமோ விருநிதியம்" என்பது நல்வழி.*

† *காமவின்பம்-ஒருகாலத் தொருபொருளால் ஐம்புலன்களும் அனுபவித்தற் சிறப்புடையதாய (மகளிரது புணர்ச்சியால் வரும்) சிற்றின்பம்.*

‡ *அது விலக்குதற்கு-தவத்தோடு பொருந்தாததாகிய தீயவொழுக்கத்தை நீக்கும் பொருட்டு.*

$ *நாலடியார் "துய்த்துக்கழியான்" என்னுஞ் செய்யுளில் "வைத்த, பொருளு மவனை நகுமே யுலகத், தருளு மவனை நகும்" என்று கூறுகின்றது. இது செய்யாதது செய்ததுபோற் கூறும் இலக்கணையாம்.*

* *உலகத்துக்களவுடையார் பிறரறியாமற் செய்வனவற்றிற்கு ஐம்பெரும் பூதங்கள் சான்றாகலின் எனபது "வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும், வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த, வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி, யங்கங் குலைவ தறிவு" என்று நீதிநெறிவிளக்கங் கூறுவதாலு மறிதற்பாற்றாம்.*

† ஐம்பெரும் பூதங்கள் சான்றாகலின், அவ்வொழுக்கத்தையும் அவன் மறைக்கின்ற வாற்றையுமறிந்து, அவனறியாமற் றம்முள்ளே நகுதலின் 'அகத்தேநகும்' என்றுங் கூறினார். ‡ செய்தகுற்றம் மறையாதாகலின், அவ்வொழுக்கம் ஆகாதென்பது கருத்து.

**தெளி.**—(இ-ள்). வஞ்சமனத்தான் - வஞ்சனைபொருந்திய மனத்தை யுடையவனது, படிற்றொழுக்கம் - மறைந்த ஒழுக்கததை, பூதங்களைந்தும்- (உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற) பஞ்சபூதங்களும் (கண்டு), அகத்தே—(தம்) உள்ளே, நகும்- சிரிக்கும், (எ - று).

காமம் தன் மனத்தினிடத்தே தோன்றி வருத்திக் கொண்டிருக்கவும் அக்காமத்தினில்லாமையைச் சொல்லிப் புறத்தாரை வஞ்சித்தலால் 'வஞ்சமனம்' என்றும், அவ்வருத்தம் பொறுக்கமாட்டாது செய்யுங் கள்ளச்செயலைப் 'படிற்றொழுக்கம்' என்றும், உலகத்திற்களவுடையவர் பிறர் அறியாமற்செய்யுங் காரியங்களுக்கு ஐம்பெரும் பூதஙகள் சாட்சியாமாகலின், அச்செயலையும் அவன் மறைக்கின்ற விதத்தையும் அறிந்து, அவன் அறியாமல் தம்முள்ளே சிரித்தலால் 'அகத்தேநகும்'என்றும் சொல்லினார். செய்தகுற்றம் மறையாதாகலின், தவஞ்செய்வானுக்கு அவ்வொழுக்கம் ஆகாதென்பது கருத்து.

(க - து). வஞ்சனைபொருந்திய மனமுடைய துறவியின் களவொழுக்கத்தைக் கண்டு அவனது உடல் மயமாயுள்ள ஐம்பெரும் பூதங்கள் தம்முள்ளே சிரிக்கும் என்பது.

1. The five elements of his body will laugh within him, at the feigned conduct of the deceitful-minded man.

உ வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

† ஐம்பெரும் பூதங்கள் (பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம்) சடமா (தம்மையும் பிறவற்றையும் அறியாமலிருப்பதா) கலின், அவைசான்றா (சாட்சியா)தல் கூடாது; கூடாமையின், அவற்றின் அதிதேவதைகளைக் கொள்க "ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்க ளாயிறு, தம்பூத மெண்ணா திகழ்வானேற் றன்மெய்க்க, ணைம்பூத மன்றே கெடும்" என்றுள்ள ஆசாரக் கோவையின்செய்யுளினுரையில் 'ஐம்பூத மன்றே கெடும்'என்பதற்கு "ஐந்து பூதத்தையுமுடைய தெய்வங்கள் அன்றே கெட்டகன்று போம்" என்று பொருள்கூறப்பட்டிருப்பதுமிங் கறியத்தக்கதாம். பிருதிவிக்குப் பிரமனும், அப்புவிற்கு அரியும், தேயுவிற்கு அரனும், வாயுவிற்கு மகேசனும், ஆகாயத்திற்குச் சதாசிவனும் அதி தேவதைகளாமென்க.

‡ செய்த குற்றம்மறையாது என்பது"மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்,பறையறைந்தாங் கோடிப் பரக்குங் கழிமுடைப்,புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினுஞ், சென்றுதைக்குஞ் சேயார் முகத்து" என்று நீதிநெறிவிளக்கம் கூறுவதாலு மறிதற்பாற்றும்.

பரி.—(இ-ள்). ஒருவனுக்கு வான்போ லுயர்ந்த தவவேடம் என்ன பயனைச் செய்யும், தான் குற்றமென் றறிந்த அதன் கண்ணே தன் னெஞ்சு தாழுமாயின், (எ - று).

† வானுயர் தோற்றமென்பது ‡ "வான்றோய்குடி" என்றாற்போல இலக்கணைவழக்கு. ¶ அறியாது செய்தகுற்றமல்லது அறிந்து வைத்துச் செய்தகுற்றங் கழுவப்படாமையின், நெஞ்சுகுற்றத்த தாயேவிடும்; விடவே, நின்றவேட மாத்திரத்திற்குப் புறத்தாரை வெருட்டுதலே யல்லது வேறு பயனில்லை யென்பதாம்.

தெளி:—(இ - ள்). தான் அறி-தான் (குற்றமென்று) அறிந்த, குற்றம் - (அக்) குற்றத்திலே, தன் னெஞ்சம் - தனது மனம், படின் - தங்குமாயின், (ஒருவனுக்கு), வானுயர் - வானபோலுயர்ந்த, தோற்றம் - தவவேடமானது, எவன் - என்னபயனை, செயயும்—, (எ - று).

கம்பீரமாய் விளங்குந் தவவேடத்தை வானுயர் தோற்றமென்பது இலக்கணை வழக்காம். அறியாது செய்த குற்றத்திற் கல்லாமல் அறிந்து செய்த குற்றத்திற்குப் பிராயச்சித்தம் இல்லாமையால்,நெஞ்சு குற்றமுடையதாயே விடும்; விடவே, நின்ற தவவேடமாத்திரத்திற்குப் புறத்தாரை அஞ்சச்செய்தலே யல்லாமல் வேறு பிரயோஜனம் இல்லை யென்பதாம்.

(க—து). தான்குற்ற மென்றறிந்த விஷயத்திற் செல்லும் மனமுடையவனது தவவேடமானது அவனுக்கு யாதுபயனைச் செய்யும் என்பது.

2. What avails an appearance of sanctity high as heaven, if the mind suffer the indulgence of conscious sin?

௩. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

† வானுயர் தோற்றமென்றது - மிகப்பொலிவுள்ள தவவேடத்தை. ‡ புகழ்நிரம்பிய குடியை வான்றோய்குடி (உயர்ச்சியால் வானிற்றோய்ந்தகுடி) என்றாற்போல இலக்கணை வழக்காமெனக. இலக்கணையாவது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொருபொருட்குத்தந்துரைப்பது. இங்குவானின் உயர்வைத் தவவேடத்திற்குத்தந்து, வான்போலுயர்ந்த தவவேடம் என்று கூறப்பட்டது. வழக்கு - சொல் நடை, அஃதாவது வியவகாரத்தில் வழங்கப்படுவது. (நாலடி-குடிப்பிறப்பு-2.)

¶ அறியாது செய்த குற்றமல்லது அறிந்து வைத்துச்செய்த குற்றங் கழுவப்படாமையின் - அறியாமற் செய்த குற்றம் பிராயச்சித்தத்தால் நீக்கப்படுவதல்லாமல் அறிந்து செய்தகுற்றம் பிராயசசித்தத்தால் நீக்கப்படாமையால். மனுதர்மசாஸ்திரம் பதினொன்றாவ தத்தியாயத்தில் "அறியாமையினால் பிராமணவதை செய்ததற்குப் பிராயச்சித்தம் சொல்லப்பட்டது

**பரி.—(இ - ள்). மனத்தைத் தன்வழிப்படுத்தும் வலியில்லாத இயல்பினை யுடையான் வலியுடையார் வேடத்தைக்கொண்டு தான் அதன்வழிப்படுதல் பசு காவலர் கடியாமல் புலியின் தோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற் போலும் (எ - று).**

‡ *இல்பொருபொருளுவமை.* ¶ *வலியினிலைமையானென்ற அடையானும், மேய்ந்தற்றென்னுந் தொழிலுவமையானும், வல்லுருவத்தோடு மனவழிப் படுதலென்பது பெற்றாம். காவலர் கடியாமை - புலி புல்தின்னா தென்பதனானும், அசசததானுமாம்; ஆகவே, வல்லுருவங்கோடற்குப் பயன் † அன்னகாரணஙகளான் உலகத்தார் அயிராமையாயிற்று. இவ்வாறு தனக்குரிய இல்லாளையுந் துறந்து வலியுமின்றிப் பிறரயிராத வல்லுருவமுங் கொண்டு நின்றவன் மனவழிப்படுதலாவது தன மனமோடிய வழியே ஓடிமறைந்து பிறர்க்குரிய மகளிரை விழைதலாம். அவ்வாறுதல், பெற்*

---

*அடத்தினால் வேண்டுமென்று செயத பிரமஹத்திக்குப் பிராயச சிததமே விதிக்கப்படவில்லை" என்று கூறுவது மிஙகறியத்தக்கதாம்.*

‡ *இல்பொருளுவமையாவது எக்காலத்து மில்லாத பொருளை யுவமானமாக வெடுத்துரைப்பது. இல்பொருளுவமை யெனினும் அபூதவுவமை யெனினு மொக்கும். இலக்கணவிளக்கம் "அவணியி ல்லா வன்னதோர் பொருளை,யுவமைசெய்துரைக்கு மபூத வுவமையும்"என்று கூறிற்று. இங்குப் பசு புலியின் தோலைப்போர்த்துப் பயிரை மேய்த லெக்காலத்து மில்லாமையின் 'பெற்றம், புலியின்றோல் போர்த்துமேயந் தற்று' என்பது (வன்பாற்கண், வற்றன் மரந்தளிர்த் தற்று' என்பதுபோல) இல்பொருளுவமை யாயிற்று*

¶ *வலியினிலைமையானென்ற அடையானும் (இங்கு வலியில் என்பது அடை. அடையெனினும் விசேடண மெனினும் ஒக்கும்), மேய்ந்தற்றென்னுந்தொழிலுவமையானும் (இதில்மேயதல் என்னுந் தொழில் உவமானமாகவந்தது தொழிலுவமானமாக வருவது தொழிலுவமையாம்.) வல்லுருவததோடு (மனத்தைத் தம்வழிப்படுததும் வல்லமை யுடையவரது தவவேடத்தோடு) மனவழிப்படுத (மனஞ்சென்றவழியே மனோநிக்கிரக முடையவரதுதவவேடத்தைக்கொண்டிருப்பவன்செல்லுத)லென்பதுபெற்றாம். அஃதாவது மனோநிக்கிரக மில்லாமை யென்னும் விசேடணத்தாலும் பசு புலியின் தோலைப்போர்த்து மேய்ந்தாற் போலும என்னுந தொழிலுவமையாலும் மனோநிக்கிரக மில்லாதவன் தவவேடத்தோடு நின்று மனஞ்சென்றவழியே செல்லுகிறானென்பது. "வேட நெறிநில்லார் வேடம்பூண்டென்பயன்" என்றுள்ள பிரயோகமு மிங்குக் கவனிக்கத்தக்கதாம்.*

† *அன்னகாரணங்களான் உலகத்தார் அயிராமை யாயிற்று - புலி புல்தின்னாதென்பதனாலும் நெருங்கிச் சென்றால் கொல்லுமே யென்னும் அச்சத்தாலும் பசுவைக் காவற்காரர் துரத்தாமை போன்று தவத்தினர் காமவின்ப மனுபவியாரென்பதனாலும் நெருங்கிசசென்று விசாரித்தால் சாபம் நேருமே யென்னும் பயத்தாலும் உலகததார் சந்தேகியாமை யாயிற்று.*

றம் தனக்குரிய புல்லை விட்டுப் பிறர்க்குரிய பைங்கூழை மேய்ந்தாற் போலுமென்ற உவமையானறிக.

தெளி.—(இ-ள்). வலி - (மனத்தைத் தன்வயப்படுத்தியடக்கும்)வல்லமை, இல் - இல்லாத, நிலைமையான் - இயல்பினையுடையவன், வல்லுருவம் - (மனத்தைத் தம் வயப்படுத்தி யடக்கிய) வல்லமையை யுடையவரது தவவேடத்தை, (கொண்டு தான் அம்மனம்போன வழியே போதல்), பெற்றம் - பசுவானது. (காவற்காரர் தூரத்திருக்கும்படி),புலியின்றோல் - புலியினது தோலை, போர்த்து - போர்த்துக்கொண்டு, மேய்ந்தற்று - (பயிரை) மேய்ந்தாற் போலும், (எ - று).

புலியின் தோலைப் போர்த்துப் பயிரை மேயும் பசு என்று மின்மையின், 'பெற்றம் தற்று' என்பது இல்பொருளுவமையணி. 'வலியில்' என்னு மடையாலும், 'மேய்ந்தற்று' என்னுந் தொழிலுவமையாலும் (வலியில் நிலைமையான்) வல்லுருவத்தோடு மனம் போன வழியே போதலென்பது பெறப்பட்டது. காவலர் தூரத்தாமை - புலி பசித்தாற் புல்லைத் தின்னுமென்பதனாலும், (நெருங்கிச் சென்றாற் கொல்லுமே யெனனும்) பயத்தாலுமாம்; ஆகவே, வல்லுருவங் கொள்ளுவதற்குப் பயன் அத்தன்மைய வாயகாரணங்களால் உலகத்தார் சந்தேகங் கொள்ளாமை யாயிற்று. இப்படி தனக்குரிமையாயுள்ள மனைவியையுந் துறந்து (மனத்தைத் தன்வயப்படுத்தும) வல்லமையுமில்லாது பிறர் சந்தேகங் கொள்ளாத வல்லுருவமுங் கொண்டு நின்றவன் (கூடா வொழுக்கத்தான் (மனவழிப்படுதலாவது தன் மனஞ்சென்றவழியே சென்று (தவவேடத்தில்) மறைந்து நின்று பிறர்க்குரிமையாயுள்ள பெண்களை விரும்புதலாம். அத்தன்மையதாதலைப் பசு தனக்குரிமையாயுள்ள புல்லை (மேயதலை) விட்டுப் பிறர்க் குரிமையாயுள்ள பயிரை மேய்ந்தாற் போலு மென்ற வுவமானதினாலறிக.

(௩-து). மனோநிக்கிரகஞ்செய்யும் வலிமை யில்லாதவன் தவவேடம் பூண்டு தீவினை புரிதல் பசு புலியின்தோலைப் போர்த்துப் பயிரை மேய்ந்தாற்போலும் என்பது.

3. The assumed appearance of power, by a man who has no power to restrain his senses and perform austerity, is like a cow feeding on grass covered with a tiger's skin.

4. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

பரி.—(இ - ள்.) * அவ்வலியினிலைமையான் தவவேடத்தின்கண்ணே மறைந்து நின்று தவமல்லவற்றைச் செய்தல் வேட்டுவன்புதலின் கண்ணே மறைந்து நின்று புட்களைப் பிணித்தாற்போலும், (எ-று.)

* அவ்வலியினிலைமையான் என்றது மேற்குறளிற் கூறிய வலியினிலைமையானை.

† தவம் - ஆகுபெயர். தவமல்லவற்றைச் செய்தலாவது பிறர்க்குரிய மகளிரைத்தன்வயத்தாக்குதல். ‡ இதுவும் இதசொழிலுவமையானறிக.

தெளி.—(இ-ள்.) (அவ்வல்லமையில்லாத நிலைமையான்) தவம் - தவவேடத்திலே, மறைந்து - மறைந்துநின்று, அல்லவை-தவமல்லாதவற்றை, செய்தல்—,வேட்டுவன் - வேடன், புதல்-புதலிலே, மறைந்து - மறைந்து நின்று, புள்-பறவைகளை, சிமிழ்த்தற்று - பிடித்தாற்போலும், (எ-று).

தவமென்பது தவவேடத்திற்காதலின் ஆகுபெயராம். தவமல்லவற்றைச்செய்தலாவது பிறர்க்கு உரிய மகளிரைத் தனக்கு வசமாகும்படிசெய்தல். இப்படி செய்தலெனபதும் இத்தொழி லுவமையினு லறிக.

(க—து). ஒருவன் தவவேடத்தில் மறைந்து நின்று பாவகாரியங்களைச செய்தல் வேடன் புதலில் மறைந்து நின்று பறவைகளைப் பிடிப்பதுபோலுமாம் என்பது.

4. He who hides himself under the mask of an ascetic and commits sins, is like a sportsman who conceals himself in the thicket to catch birds.

---

ரு. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

பரி:—(இ - ள்) தம்மைப் பிறர் நன்கு மதித்தற்பொருட்டு யாம் பற்றற்றே மென்று சொல்வாரது மறைந்தவொழுக்கம் அப்பொழுது இனிதுபோலத் தோன்றுமாயினும், பின் என்செய்தேம் என்செய்தேமென்று தாமேயிரங்குமவகை, அவர்க்குப் பலதுன்பங்களையுங்கொடுக்கும்,(எ - று.)

சொல்லளவல்லது பற்றறுமையின் 'பற்றற்றே மென்பார்' என்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாய இன்பத்தின்பொருட்டுப் பெரிதாய் நெடுங்காலம் நிற்பதாய பாவத்தைச செய்வார் $ அதன்விளைவின்கண் அந்தோவினையேயென்றழுங்குவராகலின்'எற்றெற்று' என்றுங் கூறினர். இவையைந்து பாட்டானும் கூடாவொழுக்கத்தின் இழுக்கங் கூறப்பட்டது.

---

† தவமென்னும் முதலின்பெயர் அதனுறுப்பாகிய வேடத்திற்காதலால் முதலாகுபெயராம்.

‡ இதுவும் (தவமறைந்தல்லவை செய்தலும்) இத்தொழிலுவமையான் (புதன்மறைந்து வேட்டுவன்புட்சிமிழ்த் தற்று என்னும் தொழிலுவமையால்) அறிக. இங்குப் புட்சிமிழ்த்த லென்னுந்தொழில் உவமானமும், அல்லவை செய்தல் உவமேயமுமாம்.

$ அதன்விளைவின்கண்-அப்பாவத்தின்பயனுகிய துன்பத்தை யனுபவிக்கும்போது.

தெளி.—(இ-ள்). (பிறர் தம்மை நன்குமதித்தற் பொருட்டு) பற்றற் றேமென்பார்-(யாம்) பற்றற்றேமென்றுசொல்லுவாரது, படிற்றொழுக்கம்-மறைந்தவொழுக்கமானது, (அப்பொழுது இனிதுபோலத்தோன்றுமாயி னும்), எற்றெற்றென்று - (பின்) என்செய்தோம் என்செய்தோமென்று, (தாமே இரங்கும்படி), ஏதம்பலவும் - (அவர்க்குப்) பல துன்பங்களையும், தரும் - கொடுக்கும், (எ-று).

சொல்லள விலல்லாமல் பற்றுநீங்காமையால் ' பற்றற்றேமென்பார் ' என்றும், சிறியதாய்க் கணப்பொழுதுள்ளே அழிவதாகிய (காம) இன்பத் தின் பொருட்டுப் பெரியதாய் நெடுங்காலம் நிற்பதாகிய பாவத்தைச்செய் வோர் அப்பாவத்தின் பயனாகிய துன்பத்தை யனுபவிக்கும்போதுஐயோ தீவினையே யென்றழுவா ராதலின் ' எற்றெற்று ' என்றும் சொல்லினார். இவைஐந்துபாட்டாலும் கூடாவொழுக்கத்தினது குற்றம்சொல்லப்பட்டது.

(க-து). இருவகைப்பற்றையும் விட்டோமென்று கூறித் தீச் செயல்களைச் செய்பவருக்கு அவரிரங்கும்வகை அவற்றால் பல தீங்குண்டாமென்பது.

5. The false conduct of those who say they have renounced all desire, will one day bring them sorrows that will make them cry out, "oh, what have we done, what have we done."

சு. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

பரி.—(இ-ள்). நெஞ்சாற் † பற்றறுதுவைத்துப்பற்றற்றர்போன்று தானஞ்செய்வாரை வஞ்சித்து வாழுமவர்போல வன்கண்மையை யுடை யார் உலகத்தில்லை, (எ-று).

தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது யாம் மறுமைக்கண் தேவராதற் பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்னது ஈதுமென்றறியாது ஈந்தாரை அதுகொண்டு இழிபிறப்பினராக்குதல். அவர் இழிபிறப்பினராதல் *" அடங்

† பற்றறுது வைத்து - இருவகைப்பற்று மொழியாதிருந்தும்.

* சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம் 244. இதன்பொருள் சிங்கத்தின் கோபம் போன்ற கோபத்தையும் வல்லமையையும் பெருமை பொருந்திய வேற்படையையுமுடைய அரசர்களுக்கு ஆண்சிங்கம்போன்ற சீவகனே! ஒலிக்கின்ற ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் என்னு மூன்று நீரினையுமுடை ய விசாலமான சமுத்திரத்தின் நடுவிலே பல தீவுகளிருக்கின்றன, அத்தீ வுகளிலே இந்திரிய நிக்கிரகஞ் செய்யாதவர்களுக்குக் கொடுத்த தானத் தின் பயனாலே (தானங்கொடுத்தவர்கள்) உடம்பு மக்களுடம்பும் முகம் விலங்கின் முகமுமாய் வேறுபாடுடையவர்களாகத் தோன்றி யுதிர்கின்ற கனியை யுண்டுவாழ்வார்களென்பது. இதனால் கொடியவர்க்குக் கொடுத்த தானந் தீமையை யுண்டாக்குமென்பது பெறப்பட்டதென்க.

கலர்க் கீந்த தானப் பயத்தினு லவறு மூங்நீர்த், தடங்கட ணவெட் டீவு பல வுள வவற்றுட் டோன்றி, யுடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர், மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்ன ரேறே." என்ப தனு லறிக. தமக்கு () ஆவன செய்தார்க்கு ஆகாதன விளைத்தலின் 'வன் கணுரில்' என்முர்.

தெளி.—(இ-ள்). நெஞ்சின்-மனத்தினுல், துறவார் - (பற்றுக்களைத்) துறவாதிருந்தும், துறந்தார்போல்-பற்றற்முர்போன்று,வஞ்சித்து-(தானஞ் செய்வாரை) வஞ்சனைசெய்து, வாழ்வாரின்-வாழுமவர்போல, வன்கணுர் - இரக்கமில்லாமையையுடையவர், இல்-(உலகத்திலொருவரும்) இல்லை, ()

தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது யாம் மறுபிறப்பில் தேவராகும் நிமித்தம் இந்த அரிய தவத்தோர்க்கு இன்னபொருளைக் கொடுப்போமென் று அறியாமற் கொடுத்தவரை அப்பொருளைப் பெற்றுக்கொண்டு தாழ்ந்த பிறப்பினராக்குதலாம். தமக்கு ஆவனவற்றைச் செய்தவர்க்கு ஆகாதனவற் றை யுண்டாக்குதலால் 'வன்கணுரில்' என்முர்.

(க-து). அகத்துறவின்றிப் புறத்துறவுபூண்டு பிறரைவஞ்சிப் பவர் மிகவும் கொடியவராவர் என்பது.

6. Amongst living men there are none so hard - hearted as those, who without forsaking desire in their heart, falsely take the appearance of those who have forsaken it.

எ. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

பரி.—(இ-ள்). † குன்றிமணியின் புறத்தைக் கண்டாற் போல வேடத்தாற் செம்மையுடையராயினும் அதன்மூக்குப்போல மனம் இரு ண்டிருப்பாரை உடைத்து உலகம், (எ-று).

‡ குன்றி-ஆகுபெயர். $ செம்மை கருமையென்பன பொருளின்கண் நிறத்தைவிட்டுச் செப்பத்தினும் அறியாமையினுஞ் சென்றனவாயினும்,

()· ஆவன - உண்டி மருந்து உறையுள் முதலிய வுபகாரங்கள்.

† குன்றியின் புறம்போல என்றும் பாடமுண்டு.

‡ குன்றிமணியின் சிவப்பு நிறத்தைக் குன்றி யென்றது பொருளாகு பெயராம்.

$ உவமான மான குன்றிமணிக்கணுள்ள செம்மை கருமை (சிவப்பு நிறம் கறுப்புநிறம்) என்பன பொருளின்கண் (உவமேயத்தில் - அஃதாவது கூடாவொழுக்கமுடைய தவவேடமுடையாரிடத்து)செம்மை,கருமை என் னும் நிறத்தைவிட்டுச் செப்பத்திலும் (வேடப்பொலிவிலும்) அறியாமை யிலும் சென்றவாயினும், பண்பால் ஒத்தலின் (செப்பம் அறியாமையென் பன குன்றிமணியின் சிவப்புக் கறுப்பென்னுங் குணத்தினு லொத்திருத்

பண்பால் ஒத்தலின், இவைபண்புவமை. *"கூழின் மலிமனம் போன்றிருளாநின்ற கோகிலமே" என்பதுமது.

தெளி.—(இ-ள்). குன்றிப்புறம்-குன்றிமணியின் மேற்பாகத்தை. கண்டனையரேனும்-கண்டாற்போல வேடத்தால் செம்மை யுடையவராயினும், அகம்-மனம், குன்றிமூக்கின் - அக்குன்றிமணியின் மூக்குப்போல, காரியார்-இருண்டிருப்பவரை, உடைத்து-(உலகமானது) உடையதாயிருக்கின்றது, (எ-று).

குன்றியென்பது அதன் நிறத்திற்காதலின் ஆகுபெயராம். உவமானத்திலுள்ள சிகப்பு கறுப்பென்பன உவமேயத்தில் நிறத்தைவிட்டுச்செம்மையான வேடத்திலும் அறியாமையிலும் சென்றனவாறேலும், (செம்மையானவேடம் அறியாமை யென்பன) பண்பால் சிகப்பு கறுப்பு என்பவற்றோடு ஒத்திருத்தலால், செம்மைகறுமையென்பன பண்புவமையாம். அஃதாவது உவமானத்திலேயுள்ள செம்மை கருமைகள் முறையே உபமேயத்திலேயுள்ள செம்மையான வேடத்தையும் அறிவில்லாமையையு முணர்த்தி நின்றனவென்பது. கண்டெனபது கண்டாலென்பதன் திரிபு.

(க-து). உலகமானது அகத்தே அறியாமையையும் புறத்தே தவவேடத்தையும் உடையாரையும் உடையதாயிருக்கின்றது.

7. The world contains persons whose outside appears as fair as the red berry of the Abrus, but whose inside is as black as the nose of that berry.

அ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

பரி.—(இ-ள்). மாசு தம்மனத்தின் கண்ணதாகப் பிறர்க்குத் தவத்தான்மாட்சிமையுடையராய் நீரின்மூழ்கிக்காட்டி, தாம் அதன்கண்ணே மறைந்துசெல்லும் மாந்தர் உலகத்துப்பலர், (எ-று).

மாசு - காம வெகுளி மயக்கங்கள். அவை போகற்கன்றி மாண்டாரென்று பிறர் கருதுதற்கு நீராடுதலான், † அதனொழிலை அவர் மறை

தலால்) இவை (செம்மை கருமை யென்பன) பண்புவமையாமென்க. பண்புவமையாவது பண்பை யுவமானமாகக் கூறுவது. இங்குக் குன்றிமணியின் செம்மைகருமைகள் உவமானமாயும் கூடாவொழுக்கத்தினரது வேடப்பொலிவும் மனக்களங்கமும் உபமேயமாயும் நின்றனவென்க.

* திருக்கோவையார் ௩௨௨, இதன்பொருள் (சிவபெருமானது சிற்றம்பலத்தை விரும்பாத)உணவாற்செருக்கு மனம்போல ஒருகாலைக்கொருகால் (கரு) நிறம்பெற் றிருளாநின்ற குயில்கள் எனபது. இங்கு உணவாற்செருக்குமனம் கருமை (அறியாமை)யுடையதாதலைக் கூறியவாறுணர்க.

† உள்ளத்தி னுள்ளே யுணர்வெனுந் தீர்த்தநீர், மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப், பள்ளமு மேடும் பறந்து திரிவரிக், கள்ள மனமுடைக் காசினி யோரே என்பது திருமந்திரம்.

தற் கிடனாக்கினர். இனி ‡ மாண்டார் நீராடி யென்பதற்கு மாட்சிமைப் பட்டாராது நீர்மையையுடையராயென வுரைப்பாருமுளர். இவை மூன்று பாட்டானும் அவ்வொழுக்க முடையாரது குற்றமும் அவரையறிந்து நீக்கல் வேண்டு மென்பதுங் கூறப்பட்டன.

தெளி.—(இ-ள்) மாசு - அழுக்கானது, மனத்ததாக - (தம்) மனத்தி னுள்ளதாக, மாண்டார் - (பிறர்க்குத் தவத்தால்) மாட்சிமையுடையவராய், நீராடி - நீரில்முழுகி, (காட்டி), மறைந்து - (தாம் அம்மூழ்குதலினிடத்தே) மறைந்து, ஒழுகும் - நடக்கும், மாந்தர் - மனிதர், பலர் - (உலகத்திற்) பலர், (எ - று).

மாசு-காம வெகுளி மயக்கங்கள். அக்காம வெகுளி மயக்கங்கள்போகுதற்காக வல்லாமல் மாட்சிமையுடையவரென்று பிறர் நினைத்தற்காக நீராடுதலால், அந்நீராடுந்தொழிலை அவர் மறைதற்கு இடமாக்கினர். இவை மூன்றுபாட்டாலும் அக்கூடாவொழுக்கமுடையவரது குற்றமும், அவரை அறிந்து நீக்குதல்வேண்டுமென்பதும் சொல்லப்பட்டன.

(க-து). துறவறத்தாருட்பலர் உள்ளத்தைச் சுத்தமாக்க முயலாது உடலைச் சுத்திசெய் தொழுகுகின்றனர் என்பது.

8. There are many men of masked conduct, who perform their ablutions, and make a show of greatness, while their mind is defiled with guilt

கூ. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

பரி.—(இ-ள்.) அம்பு வடிவாற் செவ்விதாயினும், செயலாற் கொடியது; யாழ் § கோட்டால் வளைந்ததாயினும், செயலாற் செவ்விது; அவ்வகையே தவஞ்செய்வாரையுங் கொடியர் செவ்வியரென்பது வடிவாற் கொள்ளாது அவர் செயல்பட்ட கூற்றானே அறிந்து கொள்க, (எ-று).

கணைக்குச்செயல் - கொலை. யாழுக்குச்செயல் - இசையாலின்பம்பயத்தல். அவ்வகையே செயல் † பாவமாயிற் கொடியரெனவும், அறமாயிற் செவ்வியரெனவுங் கொள்க வென்பதாம். இதனான் அவரை யறியுமாறு கூறப்பட்டது.

‡ மாண்டார் நீராடியென்பதற்கு மாட்சிமைப்பட்டவருடைய குணமுடையராயென்று பொருள் கூறுவாருமுண்டு.

§ கோடு - யாழின் (வீணையின்) தண்டு, கோட்டால் - தண்டால்.

† பாவத்திற் கேதுவாயிருப்பின் தகாரென்றும் அறத்திற்கேதுவாயிருப்பின் தக்கவரென்றும் அவரைக் கொள்ளவேண்டு மென்பதாம்.

தெளி.—(இ-ள்). கணை -அம்பானது, (வடிவினாற் செவ்வியதாயிருப்பினும்), கொடிது - (செயலினால்) கொடியதாயிருக்கின்றது, யாழ்-வீணையானது, கோடு-கோட்டினால், (வளைந்ததாயிருப்பினும்), செவ்விது- (செயலினால்) செவ்வியதா யிருக்கின்றது, ஆங்கன்ன - அவ்வகையே, (தவஞ் செய்வாரையும் கொடியர் செவ்வியரெனபது வடிவினாற் கொள்ளாமல்), வினைபடுபாலால் - (அவரது) செயல்பட்ட பகுப்பினாலே, கொளல் - அறிந்துகொள்ளக் கடவர், (எ - று).

அம்புக்குச்செயல் - கொல்லுதல். வீணைக்குச் செயல்—இசையினால் இன்பத்தைத்தருதல். அவ்வகையே தவத்தினரது செயல் பாவமாயின் கொடியரென்றும், அறமாயின் செவ்வியரென்றும் அவரையறிந்து கொள்ளல்வேண்டுமெனபதாம். இதனால் அவரை அறியும்வழி சொல்லப்பட்டது.

(க—து). இவர் கூடாவொழுககமுடையார், இவர் நல்லொழுக்கமுடையார் என்பது அவரவரது செய்கையா லறிப்படும்.

9. As, in its use, the arrow is crooked and the curved lute straight, so by their deeds, and not by their appearance let the uprightness or crookedness of men be estimated.

கo. * மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

பரி.—(இ - ள்). தவஞ்செய்வார்க்குத் தலைமயிரை மழித்தலுஞ் சடையாக்கலுமாகிய வேடமும் வேண்டா, உயர்ந்தோர் தவத்திற் காகாதென்று குற்றங் கூறிய ஒழுக்கத்தைக் கடிந்துவிடின், (எ - று).

† பறித்தலும் ‡ மழித்தலுள் அடங்கும். மழித்தலென்பதே தலைமயி

* நாரத பரிவிராஜகோபநிஷதது ஐந்தாவது உபதேசத்தில் "தண்டத்தைப் பிடித்திருத்தலினாலாவது மொட்டையடித திருத்தலினாலாவது வேஷத்தினாலாவது இடம்பாசாரத்தினாலாவது முத்தி சித்திப்பதில்லை. எவனாலே ஞான தண்டம் பிடிக்கப்பட்டிருக்கின்றதோ அவன்தான் ஏகதண்டி" என்றும், மனுதருமசாஸ்திரம் ஆறுவதத்தியாயத்தில் "ஒருவன் ஒராசிரமத்திலிருந்து அநத ஆசிரமத்திற்குத்தக்க தண்ட கமண்டலமுதலிய அடையாளங்க ளில்லாமலிருந்தாலும், எல்லாப் பிராணிகளிடத்திலும் சமபுத்தியுடையவனாய்த்தருமஞ் செய்யவேண்டுமே யன்றிக் காஷாயந்தரித்தல் முதலிய வேடமாத்திரம் தருமத்திற்குக் காரணமாக மாட்டாது" என்றும், கூறுவதற்கு இக்குற ளிணங்கியிருததலைக் காண்க.

† பறித்தல் - தலைமயிரை யொவ்வொன்றாகப் பிடுங்கல். இவ்வாறு செய்வது சமணமதசம்பிரதாயம். இது சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம் விஜயமாதேவியார் துறவில் "மணியியல் சீப்பிடச் சிவக்கும் வாணுத, லணியிருங் கூந்தலை யெளவை மார்கடாம், பணிவிலர் பறித்தனர் பரமன் சொன்னநூற், றுணிபொருள் சிந்தியாத் துறத்தன் மேயினார்" என்றுகூறுவதனாலு மறிதற் பாற்றும். ‡ மழித்தல் - மொட்டையடித்தல்.

ரை யுணர்த்தலின், அது கூறாராயினர். இதனாற் கூடாவொழுக்க மில்லா தார்க்கு வேடமும் வேண்டாவென அவரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). (தவஞ்செய்வார்க்கு) மழித்தலும்-(தலைமயிரை) சிரைத்தலும், நீட்டலும் - (அதனைச்) சடையாக்கலும், (ஆகியவேஷமும்), வேண்டா - வேண்டுவனவல்ல, உலகம் - உயர்ந்தோர், பழித்தது - (தவத் திற்கு ஆகாதென்று) குற்றங்கூறிய ஒழுக்கத்தை, ஒழித்து விடின் - நீக்கி விடுவாராயின், (எ - று).

தலைமயிரைப் பறித்தலும் மழித்தலில் அடங்கும். மழித்தலென்பதே தலைமயிரைத் தெரிவித்தலால், அதைக்கூறாதுவிட்டார். இதனால் கூடா வொழுக்கமின்றித் தவஞ்செயவார்க்கு வேஷமும் வேண்டாமென்று அவ ரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து). உயர்ந்தோர் குற்றமென்று கூறுவனவற்றைவிட் டொழுகுதலே தவத்தோர்க்குச் சிறப்பாவதன்றி வேடஞ்சிறப்பா காதென்பது.

10. There is no need of a shaven crown, nor of tangled hair, if a man abstain from those deeds which the wise have condemned.

ஐந்தாம் அதிகாரம்.

## கள்ளாமை:—*Against Fraud.*

பரி.—அஃதாவது பிறநுடைமையா யிருப்ப தியாதொருபொருளை யும் அவரை வஞ்சித்துக்கொள்ளக் கருதாமை. கருதுதலும் செய்தலோ டொத்தலின் 'கள்ளாமை' என்றார். இல்வாழ்வார்க்காயின் தமரோடு விளையாட்டு வகையால் அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த் பொருள்களை அங்ஙனங் கொள்ளினும் அமையும்; துறந்தார்க்காயின், அதனைக் கருதியவழியும் பெரியதோ ரிழுக்காம் ஆகலின், $ இது துற

$ இது-கள்ளாமை. கள்ளுதல்(திருடுதல்) ஒரோவிடத்து நன்றுமென் பது இறையனாரகப்பொருள் "அன்பினைந்திணை" என்னுஞ் சூத்திரவுரை யில் நக்கீரனார் "களவெனுஞ்சொற்கேட்டுக் களவு தீதென்பதூஉம் காமமெ னுஞ்சொற்கேட்டுக் காமந் தீதென்பதூஉமன்று; மற்றவை நல்லவாமாறு முண்டு; என்னை? ஒரு பெண்டாட்டி தமரொடுகலாய்த்து (பகைத்து) நஞ் சுண்டு சாவலென்னு முன்னத்தாளாய் நஞ்சுகூட்டிவைத்து விலக்குவா ரில் லாதபோழ்து உண்பலென்று நின்றவிடத்து, அருளுடையானொருவன் அதனைக்கண்டு இவள் இதனை யுண்டுசாவாமைக் கொண்டுபோய் உகுப்ப லென்று அவளைக்காணுமே கொண்டுபோய் உகுத்திட்டான்; அவளுஞ்சன நீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவாள் சென்றாள்; அதுகாணாளாய்ச்சாக்காடு (மரணம்) நீங்கினாள். அவன் அக்களவினான் அவளையுயக்கொண்டமையான்

வறமாயிற்று. 0 புறத்துப் போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர்மனம் அஃதொழிந்து புறத்தேபோந்து பல்தலைப்பட்டு உடம்பின் பொருட்டுப்பொருளை நோக்குதலேயன்றி, அது தன்னையும் வஞ்சித்துக்கொள்ளக் கருதுதல் அவர்க்குப் பெரியதோர் இழுக்காதலறிக. இவ்வாறு வாய்மை முதற்கொல்லாமையீறாய நான்கதிகாரத்திற்கு மொக்கும். பொருள்பற்றி நிகழுங் குற்றத்தை விலக்குகின்றதாகலின், இது காமம்பற்றி நிகழ்வதாய கூடாவொழுக்கத்தின்பின் வைக்கப்பட்டது.

*தெளி.—அஃதாவது பிறருடைமையாயுள்ளபொருள்களுள், யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ள நினையாமையாம். நினைத்தலும் செய்ததற்குச் சமானமாதலால் 'கள்ளாமை' என்றார். இல்வாழ்வார்க்கானால் சுற்றத்தார் முதலியோரிடத்து விளையாட்டு வகையாலாவது அவரை வஞ்சனைசெய்து கொள்ளுதற்குத் தக்க பொருள்களை அவ்வாறு கொண்டாலும் பொருந்தும்; துறந்தவர்க்கானால் அப்பொருளை யபகரிக்க நினைத்தவிடத்தும் பெரியதொரு குற்றமாகலின், இது துறவறத்திற்குரியதாயிற்று. புறத்திற் போகாமல் மடங்கி ஒருமுகப்பட்டு உயிரையே நோக்கவேண்டியதாகிய அவரது மனம் அவ்வுயிரையே நோக்குவதொழிந்து புறத்திலே போய்ப் பலவகையாக விரிந்து, அநுகூலமான விஷயங்களி லழுந்தி உடம்பின்பொருட்டுப் பொருளை நோக்குதலேயல்லாமல், அப்பொருளையும் வஞ்சித்துக்கொள்ள நினைத்தல்அத்துறவறத்தார்க்குப் பெரியதொரு குற்றமாதல் அறிக. இவ்விதம் வாய்மைமுதற் கொல்லாமை முடிவாயுள்ள நான்கதிகாரத்திற்கும் ஒக்கும். பொருளைப்பற்றி யுண்டாகுங் குற்றத்தை விலக்குகின்றதாகலின், இக்கள்ளாமை காமம் பற்றி யுண்டாவதாகிய கூடாவொழுக்கத்தின்பின் வைக்கப்பட்டது.*

க. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

---

*நல்லூழிச்செல்லுமென்பது. மற்றும் இதுபோல்வன களவாகா; நன்மை பயக்குமென்பது" என்று கூறியதனால் காண்க. நாயனாரெடுத்துக்கொண்ட களவு இத்தகைய தன்றென்பது இவ்வதிகாரத்தால் நன்கு விளங்கும்,*

*0 பிறப்பையொழிக்கத் துறவறம் பூண்டார்க்குப் பிறப்பையொழித்தற்குரிய செயல் மனத்தை விஷயங்களிற் செல்லாவா றடக்கி யொருமுகப்படுத்தி யுயிரையேநோக்க வைத்தலாயிருத்தல்பற்றிப் "புறத்துப்போகாது மடங்கி யொருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர்மனம்" என்று கூறப்பட்டது. (மனம் விஷயங்களிற் செல்லா தடங்கி யொருமுகப்பட்டு உயிரையே நோக்கி யிருத்தல் சொரூபத்தியானமென்றுகூறப்படும்.) இது திருமந்திரம் "சாத்திர மோதுஞ் சதுர்களை விட்டுநீர், மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின், மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்கினால், ஆர்த்த பிறவி யகலவிட் டோடுமே" என்று கூறுவதாலு மறிதற் பாற்றும்.*

**பரி.—(இ-ள்). வீட்டினையிகழாது விரும்புவான் இவனென்று தவத்தோரான் நன்கு மதிக்கப்படுவான் யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக்கொள்ளக் கருதாவகை தன்னெஞ்சினைக்காக்க, (எ-று).**

எள்ளாதென்னும் எதிர்மறை வினையெச்சம் எள்ளாமையெனத் திரிந்துநின்றது. வீட்டினை யிகழ்தலாவது காட்சியே அளவையாவதென்றும், நிலம், நீர், தீ, வளியெனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தாற் றோன்றிப் பிரிவான் மாய்வதாய () உடம்பின்கண்ணே அறிவு மதுவின் கட் ‡ களிப்புப்போல வெளிப்பட் டழியுமென்றும், இறந்தவுயிர் பின்பிறவாதென்றும், ¶ இன்பமும் பொருளும் ஒருவனாற் செய்யப் படுவதென்றுஞ் சொல்லும் உலோகாயத ‡ முதலிய மயக்கநூல்களைத் தெளிந்து, அவற்றிற்கேற்ப ஒழுகுதல். ஞானத்திற்கேதுவாயமெய்ந்நூற் பொருளையேனும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனை வஞ்சித்துக் கொள்ளின், அதுவுங் களவா மாகலின் 'எனைத்தொன்றும்' என்றார். நெஞ்சு கள்ளாமை காக்க எனவே, துறந்தார்க்கு விலக்கப்பட்ட களவு தல் கள்ளக்கருதுதலென்பது பெற்றாம்.

---

() அந்தமி லுருக்கள்பல வாமுறு புணர்ப்பின்
மைந்துறு கடாதிபல மண்ணில்வரு மாபோற்
புந்திகுணம் வண்பொறி புலன்களு மவற்றி
னுந்தியெழும் வாரியி னுறுங்குமிழி யொத்தே:—என்பது பிரபோத சந்திரோதயம்.

‡ களிப்பு - மயக்கம்.

¶ உலோகாயதர்கள் புருஷார்த்தங்கள் நான்கெனக் கொள்ளாது (அறம் பொரு ளின்பம் வீடு என்னும் நான்கையும் புருஷார்த்தமாகக் கொள்ளாது வீடு என்பதொன்றின்மையின் அதுகுறித்து அறஞ்செயல் பயனற்றசெயல் என்றுகொண்டு அவ்விரண்டையு மொழித்து) இன்பமும் பொருளுமே புருஷார்த்த (புருஷர்களின் இச்சைக்கு விஷயமாவது புருஷார்த்தமெனப்படும்) மெனக்கொண்டு, அவ்விரண்டும் முற்பிறப்பிற் செய்த வினைகளுக்கியையவருகின்றன வென்று கொள்ளாது அவனவனது முயற்சிக் கியைய வருகின்றனவென்று கூறுவர். அவர்களின் சித்தாந்தச் சுருக்கம் "பூதமொரு நான்கேதத் துவங்கள் இன்பம் பொருளிரண்டே புருடார்த்தம் புலன்க ளாறே, ஏதமிலார் கண்டபிர மாணந்தோற்று மிவ்வுடலே யான்மாவாம் இறப்பே முத்தி" என்பதனாலறிக.

‡ முதலிய என்றமையின், (சேதன சகித) தேகமே ஆத்மா என்று கூறும் உலோகாயத மதமேயன்றி இந்திரியாத்மவாதி முதலிய மதங்களையுங்கொள்க. அம்மதங்களின் தன்மையை யொருவாறாகச் சுருக்கி யுரைக்கின்றாம். வருமாறு:—

(1) தேகாத்மவாதி:—நான் என்னும் புத்திக்கு விஷயமாயிருப்பது ஆத்மா. நான் மனிதன், பார்ப்பான், பருத்தேன், இளைத்தேன் என்றற் றொடக்கத்தனவாய அனுபவத்தினால் தேகத்திலேயே நான்

**தெளி.**—(இ - ள்). எள்ளாமை - (தவத்தோரால் முத்தியை) இகழாமல், வேண்டுவா னென்பான் - விரும்புவான் இவனென்றுநன்கு மதிக்கப்படுவான்; எனைத்தொன்றும் - யாதொரு பொருளையும், கள்ளாமை - (பிறரை) வஞ்சித்துக்கொள்ள நினையாதபடி, தன்னெஞ்சு - தனது மனத்தை, காக்க-காக்கக்கடவன், (எ - று).

எள்ளாது என்னு மெதிர்மறைத் தெரிநிலைவினையெச்சம் எள்ளாமையெனத்திரிந்து நின்றது. முத்தியையிகழ்தலாவது பிரத்தியட்சப் பிரமாணமே பிரமாண மாவதென்றும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு எனப்பூதங்கள் நான்கேயென்றும்,அப்பூதங்களின் கூடுதற் சிறப்பினால் தோன்றிப்பிரிவினால் அழிவதாகிய உடம்பினிடத்தே அறிவு மதுவினிடத்துக் களிப்புப்போல

என்னும் புத்தியுண்டாவதால் தேகமே ஆத்மா. ஆபத்து நேர்ந்தபோது தேகத்திலேயே பிரியமுண்டாவதால் தேகத்திலும் பிரியமான பொருள் வேறொன்றுமில்லை. தேகத்திலுள்ள விருப்பத்தின் பொருட்டே பிறரிடத்து விருப்ப முண்டாகின்றது; ஆகவே, இதனைக்காப்பாற்றல் அலங்கரித்தல் முதலியனவே புருஷார்த்தங்களாம். ஆகாயம், கடவுள், ஊழ், ஜன்மாந்தரம் முதலியனவில்லை.பூதங்களின் சையோக விசேடத்தாலுடம்பாம்; இதன் மரணமே மோட்சமாம்; பிரத்தியட்சமே பிரமாணமாம் என்பன்.

(2) இந்திரியாத்மவாதி:—காணப்படு மித்தேகம் இந்திரிய மிருந்தால் ஜீவித்திருக்கின்றது; இல்லாவிட்டால் மரித்துப்போகின்றது. இவ்விந்திரியம் தேகத்திற்கு வேறாயிருக்கின்றது உடல் பிழைத்திருப்பதும் மரிப்பதும் இந்திரியத்தின் வசமா யிருப்பதாலும், கேட்டேன் கண்டேன் பரிசித்தேன் என்றற்றொடக்கத்தனவற்றுள் நான் என்னும் புத்தி இந்திரியத்தி லிருப்பதாலும் இந்திரியமே ஆத்மா என்பன்.

(3) பிராணாத்மவாதி:—பிராணவாயு இருந்தால் இத்தேகம் ஜீவித்திருக்கின்றது; அது நீங்கிப்போனால் அழிந்துபோகின்றது. தேகம் நிலைத்திருப்பதற் கேது பிராணனாயிருத்தலால் பிராணனே ஆத்மா என்பன்.

(4) மனவாத்மவாதி:—பிராணன் உணர்ச்சிவடிவமன்றாதலாலும், இந்திரியங்கள் மனதின் சையோகத்தினால் விஷயங்களை யறிவதாயிருப்பதாலும்,யாதொருவியவகாரமும் மனமின்றி நிகழாமையாலும் மனமே ஆத்மா என்பன்.

(5) புத்தியாத்மவாதி:—மனம் புத்தியின் வசமாயிருக்கின்றது; புத்தியின் ஆகாரமேமனமாம். புத்தியோ அடிக்கடி மாறிக்கொண்டிருக்கின்றது. எவ்வியவகாரமும் அடிக்கடி மாறு மியல்புடைய இப்புத்தியின் வசத்தால் பிரகாசிக்கின்றது. ஆதலால்புத்தியே ஆத்மா வென்பன்.

(6) பட்டர்மதத்தினர் ஆத்மா சிற்சடவடிவமென்றும்,மாத்யமிகர் ஆத்மா அசத்து (முற்று மில்லாதது) என்றும், பிரபாகரநையாயிகர்கள் ஆத்மா சுபாவத்தில் சடமென்றும், சமணர்கள் ஆத்மாதேகத்திற்கேற்ப வளர்தல் குறைதலை யுடையதென்றும், பிறவும் கூறுவர். இவற்றின் விரிவுகளைச் சர்வதரிசன சங்கிரகம், பெருந்திரட்டு முதலிய நூற்களிற்காண்க.

வெளிப்பட்டு அழியுமென்றும், இறந்தவுயிர் பின்னே பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவனது முயற்சியால் வருவதென்றும் சொல்லும் உலோகாயத முதலிய மயக்க நூல்களைத் தெளிந்து தெளிந்தவற்றிற்குப் பொருந்த நடத்தலாம். தத்துவஞான முண்டாவதற்குக் காரணமான உண்மை நூற்பொருளையாயினும் ஆசாரியனை ¶ ஆப்தம், அங்கம், ஸ்தானம், சற்பாவ மென்னுஞ் சதுர்விதச் சேவைசெய்யாமல் அவனை வஞ்சித்துக் கொள்ளின், அதுவும் களவாமாகலின் 'எனைத்தொன்றும்' என்றார். நெஞ்சு கள்ளாமை காக்க என்று கூறவே, துறந்தார்க்கு விலக்கப்பட்ட கள்ளுதலாவது களவுசெய்ய நினைத்தலென்பது பெறப்பட்டது.

(க - து). முத்தியை விரும்புகின்றவன் பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ள நினையா திருக்கக்கடவன் என்பது.

1. Let him, who desires not to be despised, keep his mind from the desire of defrauding another of the smallest thing.

உ. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

பரி.—(இ - ள்). குற்றங்களைத் தந்நெஞ்சாற் கருதுதலும் துறந்தார்க்குப் பாவம்; ஆதலால், பிறனொருவன் பொருளை அவன் அறியா வகையால் வஞ்சித்துக்கொள்வேமென்று கருதற்க, (எ - று).

'உள்ளத்தால்' என வேண்டாது கூறினார்; அவருள்ளம் ஏனையாருள்ளம் போலாது சிறப்புடைத்தெனபது முடித்தற்கு. உள்ளுமென்பது இழிவு சிறப்பும்மை. † அல் விகுதி வியங்கோளொடிர்மறைக்கண் வந்தது. இவையிரண்டுபாட்டானும் ‡ இந்நடைக்குக் களவாவது $ இஃதென்பதூஉம் () அது கடியப்படுவ தென்பதூஉங் கூறப்பட்டன.

தெளி—(இ - ள்.) உள்ளத்தால் (குற்றங்களைத் தமது) மனதினால், உள்ளலும் - நினைத்தலும், தீதே - (துறந்தார்க்குப்) பாவமேயாம், (ஆதலால்), பிறன் பொருளை-பிறனொருவனது பொருளை, கள்ளத்தால்(அவன்) அறியாத வகையினால், கள்வேம் - வஞ்சித்துக் கொள்ளுவோம், எனல்-என்று நினையாதிருக்கக்கடவர், (எ - று).

அத்துறந்தாரது மனம் மற்றவரது மனம்போல் குற்றமுடைய தாகாமல் மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களால் சிறப்புடையதாயிருக்கின்ற தென்பதை முடித்தற்கு 'உள்ளத்தால்' என்று வேண்டாது

¶ "ஆத்தமுடனங்கமே" என்னும் வேதாந்த சூளாமணிச் செய்யுளிற் குணரத்தக்கதாம்.

† 'பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்' என்னுங் குறளிலுள்ள எனல் என்பதற்குக் குறிப்புரையி லெழுதியுள்ளதை யிங்கமைத்துக்கொள்க. ‡ இந்நடைக்கு-இத் துறவற வொழுக்கத்திற்கு.

$ இஃதென்பதூஉம் - பிறன்பொருளைக் களவுசெய்ய நினைத்தலென்பதும். () அது-பிறன்பொருளைக் களவுசெய்ய நினைத்தல்.

சொல்லினர். உள்ளலு மென்றவும்மை இழிவு சிறப்பும்மை. எனல் என்பது அல்லீற்றுஎதிர்மறை வியங்கோள்வினை முற்று. இவை யிரண்டொட்டாலும்(துறந்தவரது) இவ்வொழுக்கத்திற்குக் களவாவது இஃதென்பதும், அது நீக்கப்படுவ தென்பதுஞ் சொல்லப்பட்டன.

(க - து). தீயன வற்றைச் செய்ய வெண்ணுதலும் தீமை தருவதா யிருத்தலின், அதனை யொழித்தல் வேண்டும் என்பது.

2. Even the thought of sin is sin; think not then of craftily stealing the property of another.

---

ந. களவினு லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

பரி:—(இ - ள்). களவினாலுளதாகிய பொருள் வளர்வதுபோலத் தோன்றித் தன்னெல்லையைக் கடந்துகெடும், (எ - று).

† ஆக்கத்திற் கேதுவாகலின், ஆக்கமெனப்பட்டது. எல்லையைக்கடந்து கெடுதலாவது ‡ தான் போமகாற் பாவத்தையும் பழியையும் நிறுத்திச், செய்த அறத்தையும் உடன்கொண்டு போதல். ¶ அளவறிந்தென்று பாடமோதி, அவர்பயன்கொள்ளு மளவறிந்து அவ்வளவிற்கு உதவாது கெடுமென் றுரைப்பாரு முளர்.

தெளி —(இ - ள்). களவினால் - களவுசெய்தலினால், ஆகிய - உண்டாகிய, ஆக்கம - பொருளானது, ஆவதுபோல - வளர்வதுபோல,(தோன்றி), அளவிறந்து - (தனது) எல்லையைக கடந்து, கெடும் - அழியும், (எ - று).

பொருள் ஆக்கத்திற்கு எதுவாகலால், அஃது ஆக்கமென்றுகூறப்பட்டது (பொருள் தனது) எல்லையைக் கடந்து கெடுதலாவது (தன்னையுடையவனுக்குத்)தான் போகுங்காலத்தில் பாவத்தையும் பழியையும் நிலைபெறச்செயது, (அவன்)செய்த தருமத்தையும உடன்கொண்டு போகுதல்.

(க - து). களவு செய்தலா லுண்டாகிய செல்வம் விருத்தியடைவதுபோற் றோன்றிப் பாவத்தையும் பழியையும் நிறுத்தி விரைந்துகெடும் என்பது.

3. The property, which is acquired by fraud, will pass all bounds and perish, even while it seems to increase.

---

† ஆக்கம் - மேல் மேலுயர்தல்; ஆக்கத்திற்குக் காரணமான பொருளை யாக்கமென்றது காரியவாகுபெயராம்.

‡ தான் போங்காற் பாவத்தையும் பழியையும் நிறுத்தி - பொருளழியும்போது மறுமைக்குப் பாவத்தையும் இம்மைக்குப் பழியையும் வைத்து.

¶ அளவிறந்து என்பதை அளவறிந்து என்று பாடமோதி, அதற்குப் பொருளானது தன்னைக் களவாற்கொண்டவர் தன்பயனை யனுபவிக்குங் கால வளவினையறிந்து, (கெடும் - )அவ்வனுபவ காலத்திற்கு உதவாமல் அழியுமென்று பொருள் கூறுவாருமுண்டு.

௪. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

பரி.—(இ-ள்). பிறர்பொருளை வஞ்சித்துக் கோடற்கண்ணே மிக்க வேட்கை அப்பொழுது இனிதுபோலத் தோன்றித் தான் பயன் கொடுக்கும்பொழுது தொலையாத இடும்பையைக் கொடுக்கும்,(எ-று).

† *கன்றுதலான் எஞ்ஞான்றும் அக்களவையே பயில்வித்து ‡ அதனாற் பாவமும் பழியும் பயந்தே விடுதலின் 'வீயாவிழுமந்தரும்' என்றார். இவையிரண்டு பாட்டானும் § அது கடியப்படுதற்குக் காரணங் கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்). *களவின்கண் - (பிறர்பொருளை) வஞ்சித்துக் கொள்ளுதலிலே, கன்றிய - மிகுந்த, காதல் - ஆசையானது, (அப்போது இனிதுபோலத் தோன்றி), விளைவின்கண் - (தான்) பயனைக் கொடுக்கும் போது, வீயாவிழுமம் - தொலையாத துன்பத்தை, தரும் - கொடுக்கும்.*

*கன்றியகாதல் (மிகுந்த வாசை) எந்நாளும் அக்களவையே பழகச் செய்து அதனால் பாவமும் பழியும் கொடுத்தே விடுதலால் 'வீயா விழுமந் தரும்' என்றார். இவையிரண்டு பாட்டாலும் அது நீக்கப்படுவதற்குக் காரணஞ் சொல்லப்பட்டது.*

(க-து). *களவுசெய்தலில் மிகுந்த ஆசையானது முன்னரினிதுபோலத் தோன்றினும் பின்னர்ப் பெருந்துன்பத்தைத் தரும்.*

4. The eager desire of defrauding others, when it has brought forth its fruit, will produce undying sorrow.

௫. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

பரி.—(இ-ள்). அருளினது உயர்ச்சியையறிந்து அதன்மேல் அன்புடையாராய் ஒழுகுதல் பிறர்பொருளை வஞ்சித்துக்கொள்ளக் கருதி அவரது சோர்வு பார்ப்பார்மாட் டுண்டாகாது (எ-று).

*தமக்குரிய பொருளையும் அதனது ¶ குற்றம் நோக்கித் துறந்து போந்தவர் பின் பிறர்க்குரிய பொருளை நன்குமதித்து, அதனை வஞ்சித்*

---

† *கன்றுதலான்-காதல் மிகுதலால். கன்றுதலான் என்பதற்குப் பிரதியாகக் கன்றியகாதல் என்றும் பாடமுண்டு. இதுவேநேர்; உய்த்துணர்க.*

‡ *அதனால் (மிக்கவேட்கை திருடுதலையே) பழகச்செய்தலினால்.*

§ *அது - பிறன்பொருளைக் களவுசெய்ய நினைத்தல்.*

¶ *குற்றம் நோக்கலாவது "நிறைசெல்வம், நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்" போல்வது என்றும், பொருளைச சம்பாதிப்பதும், அதனைக்கள்வர் முதலியோர் அபகரியாவாறு காப்பதும், செலவழிப்பது முதலியன பெருந்துன்பத்திற் கேதுவாமென்று முணர்தலாம்.*

துக் கோடற்கு அவரது சோர்வுபார்க்கும் மருட்சியரானல், அவர்மாட்டு, உயிர்கண்மே லருள்செயதல் நமக்குறுதியென் றறிந்து, அவ்வருளின் வழு வாதொழுகுந் தெருட்சி கூடாதென்பதாம்.

தெளி:—(இ-ள்). அருள்-அருளினது (உயர்ச்சியை), கருதி-அறிந்து, அன்புடைய ராதல் - (அவ்வருளின்மேல்) அன்புடையராய் நடத்தல், பொருள் - (பிறரது) பொருளை, கருதி - (வஞ்சித்துக்கொள்ள) நினைத்து, பொச்சாப்பு - (அவரது) சோர்வை, பார்ப்பார்கண் - பார்ப்போரிடத்து, இல் - உண்டாகாது, (எ - று).

தமக்குரிய பொருளையும் அதனது குற்றத்தைப் பார்த்து (இது தீ தென்று வெறுத்துத்) துறந்துவந்தவர் பின்னர்ப் பிறர்க்குரிய பொருளை நன்மை தருவதென்றுகருதி, அப்பொருளை வஞ்சித்துக்கொள்ளுதற்கு அவ ரது சோர்வைப் பார்க்கும் மயக்க முடையவரானல், அவரிடத்து, உயிர்களி ன் மீது அருள் செய்தல் நமக்கு உறுதி தருவதாகுமென்றறிந்து, அவ்வரு ளில் தவறாது நடக்குந் தெளிவு கூடாதென்பதாம்.

(க-து). பிறர்பொருளை விரும்புவோர் அருளுடைய ராகார்.

5. The study of kindness, and the attainment of love to it, is not with those who, watch for another's forgetfulness, through desire of his property.

சு. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

பரி:—(இ - ள்). உயிர் முதலியவற்றை அளத்தலாகிய நெறியின்க ணின்று அதற்கேற்ப ஒழுகமாட்டார் களவின்கண்ணே மிக்கவேட்கை யை யுடையார் (எ - று).

உயிர்முதலியவற்றை ¶ அளத்தலாவது காட்சி முதலாகச் சொல் லப்பட்ட அளவைகளான் உயிர்ப்பொருளையும், அதற்கு அநாதியாய் வரு

¶ அளத்தல் - பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களால் உயிர்முதலிய வற்றை வரையறைசெய்துள்ளவாறறிதல். அளவை-பிரமாணம்; (அதனல்) அளக்கப்படு (அறியப்படு) வது பிரமேயம்; அளத்தல் - பிரமை (உள்ளவா றறிதல்).

(1) I. மனத்திற்கு உயிரோடு சையோக முண்டாம்போது யானுள னென்னும் ஞானமுண்டாதலின், ஆண்டு உயிர் அகவிந்திரிய மென்னும் மனவடிவப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அறியப்படுகின்றமை காண்க.

பிறவிக்கஞ்சித் தன்னையடுத்த சுத்தாந்தக்கரணமுடைய சீடனை நோக் கிச் சற்குரு சுருதி யுத்தி யனுபவ வாயிலாக நீ உடம்பு முதலியவற்றினும் வேறாய அறிவுருவென்றுகூற, அதனல் அவனுக்கு நான் உடம்பு முதலிய வற்றினும் வேறாய அறிவுரு வென்னும் பிரத்தியட்ச ஞானமுண்டாதலுங் கொள்க. ஈண்டுச் சற்குருவாக்கியம் பிரத்தியட்சப் பிரமாணமும், (அத

ஞல்) உயிர்க்கும் மனத்திற்குமுண்டாய சம்பந்தம் சககாரிகாரணமும், நான் அறிவுருவென்னும் ஞானம் பயனுமாம்.

II. ஜீவித்துள்ள வுடல் உயிரோடு கூடியது; பிராணவாயுமுதலியவற்றை யுடைமையான்; யாது உயிரோடு கூடியதன்று, அது பிராணவாயு முதலியவற்றை யுடையதன்று கடம்போல என்னும் அனுமானப் பிரமாணத்தாலும் உயிர் உடம்பினும் வேறென்றறியப் படுகின்றமை காண்க.

III. "ஒருபெரிய மீஞனது இருகரைக்குள் அங்குமிங்குஞ் சஞ்சரிப்பதுபோல,இந்தப் புருஷனும் நனவு கனவு உறக்கமென்னு மவத்தைகளில் மாறிமாறிச் செல்லுகின்முன்". "எவன் விஞ்ஞான மயனே அவன் பிராணன் முதலிய வற்றினும் வேருனவன்" எனறற் ெருடக்கத்துச் சப்த (சுருதி)ப் பிரமாணத்தாலும் உயிர் உடம்பினும் வேறென் றறியப் படுகின்றமை காண்க.

(2) I. தருமபுத்திரன் தருமம் (நல்வினை) உடையான்; சிஷ்டாசார (ஆன்றேரொழுக்க)முடையவஞயிருத்தலின்;யாவன் தருமமுடையானல்லன் அவன் சிஷ்டாசாரமுடையானல்லன் துரியோதனன்போல.துரியோதனன் அதர்மம்(தீவினை)உடையான்; சிஷ்டாசார மின்றியவஞயிருத்தலின்;யாவன் அதர்ம முடையானல்லன் அவன் சிஷ்டாசாரமினறியவனல்லன். தரும புத்திரன்போல என்னு மநுமானப் பிரமாணங்களால் நல்வினை தீவினைக ளுண்டென்பது பெறப்படுகின்றமை காண்க.

II. "மூவகை யெனுந்தனை மூழ்கி யுற்றிடு, மாவிக ளுலப்பில வநாதியுள்ளன,தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையா, லேவற முறைமுறை யுதித்து மாயுமே" என்னுஞ் சப்தப் பிரமாணத்தால் (என்றுகந்த புராணம் கூறுவதால்) உயிர்கள் இருவினையால் நால்வகைக் கதியுட் பிறந்திறந்து வருத லறியப்படுகின்றமை காண்க.

(3) I. பிறந்திறந்து வருதற் கேதுவாய இருவினைகளைக் கெடுத்தற்குபாய (சாதன)மா யிருப்பன யோகஞானங்களென்பதும், அவற்றுல் உயிர்கள் முத்தியடையு மென்பதும் கீழ்வரும் பிரமாணங்களால் செவ்விதின் விளங்கும். வருமாறு:—

"காழ்த்தவைம் புலனுஞ் செற்றுக் கரணங்க ளடக்கி நாளு, மூழ்த்தமென் சருகு மாந்தி யோகினி லுறங்கு கின்ருேர், ............வாழ்த்துதற் கரிய முத்தி வீட்டின்ப மருவி வாழ்வார்:—கூர்மபுராணம்.

" தரதிசோக மாத்மவித் - ஆத்மஞானி சோகத்தைக் கடக்கின்ருன்":—சுருதி.

" மட்டு வார்வன மார்ப சருமம்போற், ெருட்டு வாவினைச் சுருட்டுவருண்டெனிற், பெட்டு ஞானம் பெருதுபே ரின்பமே, யொட்டு முத்தி யுறுநரு முண்டரோ":—சூதசங்கிதை.

II. யோகஞான மென்புழி யோகமும், அதனுல் வரும் ஞானமுமென்றுகொள்க. "யோகியர்க்கே ஞான மொழுங்காம்"என்று பெரியார் பணித் திருத்தலு மறிக.

ின்ற † நல்வினை தீவினைக்குற்ற விளைவுகளையும், அவற்றான் அது ‡ நாற்கதியுட் பிறந்திறந்து வருதலையும், அதுசெய்யாமல் அவற்றைக் கெடுத்தற் குபாயமாகிய யோக ஞானங்களையும், அவற்றான் அஃதெய்தும் வீட்டினையும் அளந்து, உள்ளவாறறிதல். இதனை ஆருகதர் தருமத்தியா னமென்ப. அதற்கேற்ப ஒழுகுதலாவது அவ் வளக்கப்பட் டனவற்றுள், ¶ தீயனவற்றினீங்கி $ நல்லனவற்றின்வழி நிற்றல்.

தெளி. (இ - ள்). களவின்கண் - களவுசெய்தலிலே, கன்றிய - மிகுந்த, காதலவர் - ஆசையையுடையவர், அளவின்கண் - (உயிர்முதலியவற்றை) அளவு செய்தலாகியவழியில், நின்று - நிலைத்து, ஒழுகலாற்றார் - (அவ்வழி யில் நிலைத்திருப்பதற்கு ஏற்ப) நடக்கமாட்டார், (எ - று).

உயிர்முதலியவற்றை யளவு செய்தலாவது பிரத்தியட்ச முதலாகச் சொல்லப்பட்ட பிரமாணங்களால் உயிர்ப்பொருளையும், அவ்வுயிர்ப் பொரு ட்கு அநாதியாய்வருகின்ற நல்வினை தீவினைகளுக்கேற்பவுண்டாம்சுகதுக்க முதலிய விளைவுகளையும், அந்நல்வினை தீவினைகளால் அவ்வுயிர் நால்வகைக் கதிகளில் பிறந்திறந்து வருதலையும், அவ்வாறு பிறநதிறந்து வருவது செய் யாமல் அந் நல்வினை தீவினைகளை யொழித்தற்கு உபாயமான யோக ஞான ங்களையும், அந்த யோக ஞானங்களால் அவ்வுயிர் அடையும் முத்தியையும் அளவுசெய்து, உள்ளவாறறிதல். இவ்வாறறிவதைச் சமணர் தருமத் தியான மென்பர். அவ்வா றறிந்ததற்குப் பொருந்த நடத்தலாவது அவ் வளக்கப் பட்டனவற்றுள், தீயவைகளி னின்றும் நீங்கி நல்லவைகளின் வழியில் நிற்றலாம்.

(க - து). களவுசெய்தலில் மிகுந்த ஆசையையுடையவர் உண் மை யறிந்தொழுகார் என்பது.

6. They cannot walk steadfastly, according to rule, who eagerly desire to defraud others.

எ. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

பரி.—(இ - ள்). களவென்று சொல்லப்படுகின்ற இருண்ட அறி வினையுடையாதல் உயிர் முதலியவற்றை அளத்தலென்னும் பெருமை யை விரும்பினார்கண் இல்லை, (எ - று).

---

† நல்வினை தீவினைக் குற்ற விளைவுகளையும் - நல்வினை தீவினைகளின் குற்றத்தைத் தரும் விளைவுகளையும் (என்று பொருள்கூறினுமமையும்).

‡ நாற்கதி - மக்கள், தேவர், நரகர், விலங்கு என்னும் நால்வகைப் பிறப்பு.

¶ தீயனவற்றி னீங்குதல் - பிறப்பிற் கேதுவான வினைகளைச்செய் வதி னின்று மொழிதல்.

$ நல்லன வற்றின்வழி நிற்றல் - பிறப்பைக்கெடுத்தற் கேதுவான யோகஞானங்களின் வழியி லொழுகுதல்.

இருள் - மயக்கம். † காரியத்தைக் காரணமாக வுபசரித்துக் 'களவென்னுங் காரறி வாண்மை' என்றும், காரணத்தைக் ¶ காரியமாக வுபசரித்து 'அளவென்னு மாற்றல்' என்றுங் கூறினர். களவுந்துறவும் இருளு மொளியும் போலத் தம்முண் மாறாகலின், ஒருங்கு நில்லா வென்பது இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). களவென்னும்-களவென்று சொல்லப்படுகின்ற, கார் - மயங்கிய, அறிவாண்மை - அறிவினையுடையாதல், அளவென்னும்-(உயிர் முதலியவற்றை) அளத்தலெனனும், ஆற்றல் - பெருமையை, புரிந்தார்கண் - விரும்பினவரிடத்து, இல் - இல்லை, (எ - று).

'களவென்னுங் காரறிவாண்மை'எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தும், 'அளவெனனுமாற்றல்' எனக் காரணத்தைக்காரியமாக உபசரித்துங் கூறினர். களவுந்துறவறமும் இருளும்ஒளியும்போன்றுதம்முள் (ஒன்றற்கொன்று) பகையா யிருப்பதாகலின், (அவை ஓரிடத்து) ஒருமித்துக் கூடிநிற்பனவல்லவென்பது இவை மூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது.

(க - து). களவை விரும்பு மறிவு உண்மையை யறிய விரும்பினு ரிடத்துண்டாகா தென்பது.

7. That black knowledge which is called fraud, is not in those who desire that greatness which is called rectitude.

அ. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

பரி:—(இ - ள்). அவ்வளத்தலேயே பயின்றவர் நெஞ்சத்து அறம் நிலைபெற்றாற்போல நிலைபெறும்; களவையே பயின்றவர் நெஞ்சத்து வஞ்சனை, (எ - று).

உயிர் முதலியவற்றை அளந்தறிந்தார்க்குத் துறவறஞ்சலியாது நிற்கு மென்பது இவ்வுவமையாற் பெற்றாம். களவொடு மாறின்றி நிற்பது இதனாற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்). களவறிந்தார்-களவையே பழகியறிந்தவரது, நெஞ்சில்-மனத்தில், கரவு - வஞ்சனையானது, அளவறிந்தார்-அவ்வளத்தலேயே

† 'களவென்னுங் கார்றிவு' என்பதில் காரறிவு காரணம் களவு காரியம் என்றும், 'அளவென்னுமாற்றல்' என்பதில் அளவு காரணம் ஆற்றல் காரியமென்று மறிக; என்னை? காரறிவினல் களவும், அளத்தலால் ஆற்றலுமுண்டாகின்றமையினென்க. களவிற்குக்காரணமான காரறிவைக் 'களவென்னுங்காரறிவு' என்றும், அளவின் காரியமான ஆற்றலை 'அளவென்னு மாற்றல்' என்றுங கூறியது உபசார வழக்கமாம். ஈண்டுக் கூறிய உபசார வழக்கிரண்டனுள், முன்னது காரியம் காரணமாய வுபசாரவழக்காம்; பின்னது காரணம் காரியமாய வுபசாரவழக்காம்.

¶ காரியமாக்கி என்றும் பாடமுண்டு.

பழகி யறிந்தவரது, நெஞ்சத்து - மனத்தில், அறம்போல - அறம் (நிலை பெற்றுத்) போல, நிற்கும் - நிலைபெறும், (எ - று).

உயிர் முதலியவற்றை அளவைகளால் அளந் தறிந்தவர்களுக்குத் துறவறம் அசையாது நிற்குமென்பது (அளவறிந்தார் நெஞ்சத் தறம் போல என்னும்) இவ் வுவமானத்தினால் பெறப்பட்டது. களவோடு மாறுபாடின்றி நிற்பது வஞ்சனை யென்பதிதனாற் சொல்லப்பட்டது.

(க - து). உண்மையறிந்தார் நெஞ்சத்து அறம் நிலைபெற் றிருப்பதுபோலக் களவறிந்தார்நெஞ்சத்து வஞ்சனை நிலைபெறும்.

8. Deceit dwells in the mind of those who are conversant with fraud, even as virtue in the minds of those who are conversant with rectitude.

கூ. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

பரி:—(இ - ள்). அவ்வளவல்லாத தீய நினைவுகளை † நினைத்து அப்பொழுதே கேடுவர், களவல்லாத பிறவற்றை யறியாதவர். (எ-று).

தீய நினைவுகளாவன-பொருளுடையாரை வஞ்சிக்குமாறும், அவ்வஞ் சனையால் அது கொள்ளுமாறும், கொண்டவதனால் தாம் புலன்களை நுகருமாறும் முதலாயின. ¶ நினைததலுஞ் செய்தலோ டொக்குமாகலின் 'செய்து' என்றும், அஃது உள்ள வறங்களைப் போக்கிக் கரந்த சொற் செயல்களைப் புகுவித்து அப்பொழுதே கெடுக்குமாகலின் 'ஆங்கே வீவர்' என்றுங்கூறினார். மற்றையவாவன—துறந்தார்க்கு உணவாக வோதப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலாயினவும், இல் வாழ்வார் செய்யுந் தானங் களுமாம். தேற்றாமை ‡ அவற்றையே நுகர்ந்து அவ்வளவால் நிறைந் திருத்தலை யறியாமை. இதனாற் கள்வார் கெடுமாறு கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). களவல்ல - களவுசெய்த லல்லாத, மற்றைய - பிறவற்றை, தேற்றாதவர் - அறியாதவர்(களவுசெய்த லொன்றையே அறிந் தவர்), அளவல்ல - அவ்வளவல்லாத தீய நினைவுகளை, செய்து-நினைத்து, ஆங்கே-அப்போதே, வீவர் - கெடுவார், (எ - று).

தீய நினைவுகளாவன - பொருளுடையவரை வஞ்சிக்கும் விதமும், அவ்வஞ்சனையால் அப்பொருளைக் கொள்ளும் விதமும், கொண்ட அப்

† நினைத்தபொழுதே என்றும் பாடமுண்டு.

¶ "நினைத்தலுஞ் செய்தலோ டொக்குமாகலின், 'செயின்'என்றார்". என்பது "கெடுவல்யா னென்ப தறிக" என்னுங் குறளின் விசேடவுரை.

‡ அவற்றையே - காய் கனி கிழங்கு சருகு முதலாயினவற்றையே.

பொருளால் தாம் சப்தாதிவிஷயங்களை யனுபவிக்கும் விதமும் முதலா யினவாம். (பிறர்பொருளை யபகரிக்க) நினைத்தலும் செய்தற்குச் சமானமா மாகலின் 'செய்து' என்றும், அந்நினைப்பு உள்ள அறங்களைப்போக்கி மறைப் பான சொல்லையும் செயலையும் புதுமாறுசெய்து அப்போதே கெடுக்குமாத லால் 'ஆங்கே வீவர்' என்றும் சொல்லினர். மற்றையவாவன-துறந் தார்க்கு உணவாகச சொல்லப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலான வையும், இல்லறத்தில் வாழ்வார் செய்யும் தானங்களுமாம். தேற்றாமை யாவது அவற்றையே உண்டு அவ்வுண்டவளவால் போதுமென் றிருத்தலை யறியாமையாம். இதனால் களவுசெய்வார கெடும்வகை சொல்லப்பட்டது.

(க - து). களவொன்றையே யறிந்தவர் விரைந்து கெடுவர்.

9. Those, who are acquainted with nothing but fraud, will perish in the very commission of transgression.

---

கO. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

பரி.—(இ-ள்). * களவினைப் பயில்வார்க்குத் தம்மின் வேறல்லாத உடம்பும் தவறும்; அது செய்யாதார்க்கு நெடுஞ் சேணதாகிய புத்தே ளுலகந் தவறாது, (எ-று).

உயிர் நிற்றற்கிடனாகலின் 'உயிர்நிலை' எனப்பட்டது. சிறப்புமை கள் † இரண்டும் விகாரத்தாற்றொக்கன. இம்மையினும் அரசனால் ஒறுக் கப்படுதலின் உயிர்நிலையுந் தள்ளும் என்றும், மறுமையினுந் தேவராதல் கூடுதலின் புத்தே ளுலகுந் தள்ளாது என்றுங் கூறினார். ‡ "மற்றது, தள் ளினுந் தள்ளாமை நீர்த்து" ¶ என்புழியும் தள்ளுதல் இப்பொருட்டாதல றிக. இதற்குப் பிறவாறுரைப்பாருமுளர். இதனால் இருவர்பயனும் ஒரு ங்கு கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). கள்வார்க்கு - களவினைப் பழகுவார்க்கு, உயிர் நிலை - (தம்மின்வேறல்லாத) உடம்பும், தள்ளும - தவறும், கள்ளார்க்கு -

---

* களவினைப்பயிலுந் தூறவிகளுக்கு யோகஞானங்க ளில்லாமையின், உயிர் உடலுக்கு வேறென்னு முணர்வின்றென் றுணர்த்துவார் 'களவினை ப்பயில் வார்க்குத் தம்மின் வேறல்லாத உடம்பும்' என்று கூறினார்.

† இவ்விரண்டனுள் முன்னது இழிவுசிறப்பு; பின்னது உயர்வு சிறப்பு.

‡ திருக்குறள் ஊக்கமுடைமை, 6. இதன்பொருள் அவ்வுயர்ச்சியா னது (ஊழ்வகையினால்) தவறினும் (உயர்ச்சியையடைய வேண்டுமென் னுமெண்ணம்) தவறாமைத் தன்மையுடையது என்பது.

¶ என்புழியும் தள்ளுதல் இப்பொருட்டாதலறிக—என்ற விடத்தும் தள்ளுதலென்பது தவறுதலென்னு மிப்பொருளுடைய தாதலையறிக.

அக்களவினைச் செய்யாதவர்க்கு, புத்தேளுலகு - (நெடுந்தூரத்ததாகிய) தேவருலகமும், தள்ளாது - தவறாது, (எ-று).

உயிர் தங்குவதற்கிடமாயிருத்தலால் உடம்பு 'உயிர்நிலை' என்று சொல்லப்பட்டது. உயிர்நிலையும் புத்தேளுலகும் என்னும் சிறப்பும்மை யிரண்டும் செய்யுள் விகாரத்தாற் றொக்கு நின்றன. (கள்வார் மறுமையிலே யமனால் தண்டிக்கப் படுதலன்றி) இம்மையிலும் அரசனால் தண்டிக்கப்படுதலால் உயிர்நிலையும் தள்ளும் என்றும், (களவாரார் இம்மையிலே புகழும் புண்ணியமு முடையவராதலன்றி) மறுமையிலும் தேவராதல் கூடுமாதலால் புத்தேளுலகும் தள்ளாது என்றும் கூறினார். இதனால் கள்வார் (திருடுவார்) கள்ளார் (திருடாதவர்) என்னும இருவர் பயனும் சேர்த்துச் சொல்லப்பட்டது.

(க-து). களவு செய்பவ ரிருமையிலுந் துன்புறுவர்; களவு செய்யாதவ ரிருமையிலு மின்புறுவர் என்பது.

10. Even their body will fail the fraudulent; but even the world of the gods will not fail those who are free from fraud.

ஆறுவது அதிகாரம்.

## வாய்மை—On Truthfulness.

பரி.—அஃதாவது மெய்யினது தன்மை. † பெரும்பான்மையுங் காமமும் பொருளும் பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கலின், இது கூடாவொழுக்கங் கள்ளாமைகளின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது மெய்யினது தன்மையாம். பெரும்பான்மையும் காமமும் பொருளும் பற்றியுண்டாவதாகிய பொய்ம்மையை விலக்குதலால், இது (வாய்மையென்னு மதிகாரம்) கூடாவொழுக்கம் கள்ளாமைகளின் பின் வைக்கப்பட்டது.

க. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

பரி.—(இ-ள்). மெய்ம்மையென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின், அது பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல், (எ-று).

† கூடாவொழுக்கம் காமத்தாலும் களவு பொருளாசையாலு முண்டாம்; பொய்பேசுதல் பெரும்பான்மையாகக் காமத்தாலாவது பொருளாசையாலாவது உண்டாமென்க.

* தீமை யாதொன்றும் இலாதசொலல் இயையும் † எனப்படுவதென்பது † "ஊரெனப்படுவதுறையூர்" என்றாற்போல நின்றது. இதனான் நிகழ்ந்தது கூறலென்பது நீக்கப்பட்டது. அதுதானும், தீங்கு பயவாதாயின் மெய்ம்மையாம், பயப்பிற் பொய்ம்மையாமென்பது கருத்து.

தெளி.—(இ-ள்). வாய்மையெனப்படுவது - மெய்ம்மையென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, யாதெனின் - யாதென்று வினவினால், (அது பிறிதோருயிர்க்கு), தீமை-தீங்கு, யாதொன்றும்-சிறிதாயினும், இலாத - தாராத சொற்களை, சொலல்-சொல்லுதலாம், (எ-று)

தீமை யாதொன்று மிலாத என்றன்வயமாம். எனப் படுவதென்பது செயப்பாட்டு வினைப்பெயர். இதனால் நடந்ததைச சொல்லுதல் என்பது நீக்கப்பட்டது. அந்நடந்ததைச சொல்லுதலும், தீங்கைத்தாரா திருக்குமாயின் மெய்ம்மையாம; தீங்கைத் தருமாயின் பொய்ம்மையாமென்பது கருத்து.

(க-து). பிறிதோருயிர்க் கொருசிறிதுந் துன்பத்தைப் புண்டு பண்ணுதசொல்லே மெய்ம்மைச்சொல்லாம் என்பது.

1. Is it asked what is truth? It is the speaking of such words as are without the least degree of evil to others.

உ. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

பரி.—(இ-ள்). பிறர்க்குக் குற்றந் தீர்ந்த நன்மையைப் பயக்குமாயின், பொய்ம்மைச் சொற்களும் மெய்ம்மைச் சொற்களின் பாலவாம்.

குற்றந்தீர்ந்த நன்மை-அறம்; அதனைப்பயத்தலாவது கேடாதல் சாக்காடாதல் எய்த நின்றதோருயிர் * அசசொற்களின் பொய்ம்மையானே † அதனினீங்கி யின்புறுதல். நிகழாதது கூறலும், நன்மை பயவாதாயின்

* தீமையெனபதனை யாதொன்றும என்பதற்கு முன்னர்க்கூட்டித் தீமையாதொன்றும் இலாத என்றந்வயிக்கப்பட்டது.

† மூன்றாம் வேற்றுமைக் கருத்தாவின் செயப்படு பொருளான வாய்மையெனப்படுவது என்பது ஊரெனப்படுவதுறையூர் என்றாற்போலப படுசொல்லணைந்து வந்தது.

‡ இதன்பொருள் ஊரென்று சொல்லப்படுவது உறையூர் என்பது.

* அச்சொற்களின்—(ஒன்றை மற்றொன்றாக மறைத்துச்சொல்லும்) பொய்ம்மைச் சொற்களது.

† அதனினீங்கி - கேட்டினின்றாவது மரணத்தினின்றாவது நீங்கி.

பொய்ம்மையாம்; ‡ பயப்பின் மெய்ம்மையாமென்பது கருத்து. இவை யிரண்டு பாட்டானுந் தீங்குபயவாதநிகழ்ந்தது கூறலும் நன்மைபயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மையெனவும், நன்மைபயவாத நிகழாதது கூறலும் தீங்கு பயக்கும் நிகழ்ந்ததுகூறலும் பொய்ம்மையெனவும், அவற்றது இலக்கணங்கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). பொய்ம்மையும் - பொய்ம்மைச்சொற்களும், புரை தீர்ந்த-குற்றத்தினின்று நீங்கிய, நன்மை-நன்மையை, பயக்குமெனின் - (பிறர்க்குத்) தருமாயின், வாய்மையிடத்த - மெய்ம்மைச்சொற்களினிடத் தனவாம, (எ-று).

குற்றத்தினின்று நீங்கிய நன்மை - அறம்; அவ்வறத்தினைத்தருதலாவது கேட்டையாவது மரணத்தையாவது அடைய நின்றதோருயிர் அச் சொற்களின் பொய்ம்மையினாலே அதனின் நீங்கி இன்பமடைதல். நடவாததைச் சொல்லுதலும் நன்மையைததாராதாயின் பொய்ம்மையாம்; நன்மையைத் தருமாயின் மெய்ம்மையாமெனபது கருத்து. இவையிர ண்டு பாட்டாலும் தீமையைத்தாராத நடநததைச் சொல்லுதலும் நன்மை யைத்தரும் நடவாததைச் சொல்லுதலும மெய்ம்மையாம் எனவும், நன் மையைத் தாராத நடவாததைச சொல்லுதலும தீமையைததரும் நடந்த தைச் சொல்லுதலும் பொய்ம்மையாம எனவும், அவற்றது (மெய், பொய்ச் சொற்களது) இலக்கணம் சொல்லப்பட்டது. குற்றம் - பழிபாவம்

(க-து). பொய்பேசுதலும் நன்மையைத் தருமாயின், அதுவும் மெய்ம்மைச்சொலலாம் மென்பது.

2. Even falsehood has the nature of truth, if it confer a benefit that is free from fault.

ந. * தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

‡ நடவாததைக் கூறுதலும் நன்மையைத் தருமாயின் மெய்ம்மையா மென்பது "உம்மையின் மறுமை தன்னி லுறுபய னிரண்டும் பார்க் கின், இம்மையில் விளங்கும் யார்க்கு மவரவ ரியற்கை யாலே, மெய்ம்மை யே யொருவர்க் குற்ற விபத்தினை மீட்கு மாயிற், பொய்ம்மையு மெய்மமை போலப் புண்ணியம் பயக்கு மாதோ" என்று பாரதங்கூறுவதனாலுமறிதற் பாற்றும்." பொய்யுரை புகலிற் றீமையா மென்னப் புகன்றனர் புலமைந ன் குணர்ந்தோர், ஐயநுண் மருங்குற் செயயவாய மகளிர் புலவியி லநதண ராவி, உய்யுமென புழியி லாவினை யளிககு மிடத்தினி லோடரி நெடுங் கண், தையலார் மணத்திற் பொய்ம்மையு மெய்ம்மை தன்னினும் விழுமி தா மன்றே" என்று காசிகாண்டங் கூறுவது மிங்கறியத் தககதாம்.

* "நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்" என்பது உலகநீதி.

**பரி.—(இ-ள்). ஒருவன் தன்னெஞ்சறிவ தொன்றனைப் பிறர் அறிந்திலரென்று † பொய்யாதொழிக, ‡ பொய்த்தானாயின், ¶ அதனை அறிந்த தன்னெஞ்சே அப்பாவத்திற்குக் கரியாய நின்று, தன்னை அதன் பயனாய துன்பத்தையெய்துவிக்கும், (எ-று).**

*நெஞ்சு § கரியாதல் * "கண்டவ ரில்லென வுலகத்து ளுணராதார், தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள், நெஞ்சறிந்த கொடியவை மறைப்பவு மறையாவா, நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின்" என்பதனானு மறிக. பொய் மறையாமையின், அது கூறலாகாதென்பது இதனாற் கூறப்பட்டது.*

**தெளி.—(இ-ள்).** *(ஒருவன்) தன்னெஞ்சு-தனது மனமானது, அறிவது-அறிவதாகிய வொன்றை, பொய்யற்க-(பிறர் அறிந்திலரென்று) பொய்யாதொழியக்கடவன், பொய்த்தபின - பொய்த்தானாயின், தன்னெஞ்சே-(அப்பொய்த்தலை அறிந்த) தனது மனமே, (அப்பாவத்துக்குச் சாட்சியாய் நின்று) தன்னை -, சுடும், சுடாநிற்கும், (அப்பாவத்தின் பயனாகிய துன்பத்தையடைவிக்கும்), (எ-று).*

*பொய் மறையாதாதலால், அப்பொய்யினைச் சொல்லலாகாதென்பது இதனால் சொல்லப்பட்டது.*

(க-து). *ஒருவன் தன் மனமறியப் பொய்பேசினால், அம்மனமே அவனை வருத்தும என்பது.*

---

*† பொய்யா தொழிக - மறைத்துப்பேசா தொழியக்கடவன்.*

*‡ பொய்த்தானாயின - மறைத்துப் பேசுவானானால்.*

*¶ அதனை - அம்மறைத்துப் பேசுதலை.*

*§ நெஞ்சு கரியாதல் - ஒவ்வொருவருக்குந் தந்தம் மனமே சாட்சியாதல்.*

** கலித்தொகை, நெய்தற்கலி, அ. இதனபொருள் - அறியாதவர்கள் (தம்மனம் இது செயலாகாதென்று) மீளாதே (வேறு) விலக்குவாருமின்றி உலகத்திற் கண்டவர்களு மில்லையென்று (கருதித்) தாஞ்செய்யுந்தீவினைகளுள் தாம் நெஞ்சறியவே செய்த கொடிய தீவினைகளைப் (பின்பு பிறரறியாமல்) மறைத்தார்களாயினும் (அவை) மறையமாட்டாவாம்; நெஞ்சைக் காட்டிலும் அணுகியசாட்சி (வேறு) இல்லை யாகையால் என்பது. உணராதார் தங்காது தகைவின்றி யுலகத்துக் கண்டவரில்லெனத் தாஞ்செய்யும் வினைகளுள் நெஞ்சறிந்த கொடியவை மறைப்பவும் மறையாவாம் நெஞ்சத்திற் குறுகிய கரியில்லையாகலின் என்பது அந்வயமாம், இங்குள்ள மறைப்பவு மறையாவா மென்பதற்கு நச்சினார்க்கினியர் 'மறைப்பினு மறிபவா' என்று பாடங்கொண்டு 'பிறரறியாமல் மறைத்தார்களாயினும் தாஞ்செய்த தைமையை அறிந்திருக்கின்றவர்கள்' என்றுரை கூறியிருக்கின்றனர். 'தன்னைத்தா னெஞ்சங் கரியாகத் தானடங்கின், பின்னைத்தா னெய்தாப் பயனில்லை' என்று அறநெறிச்சாரம் கூறுவது மிங்கறியத் தக்கதாம்.*

3. Let not a man knowingly tell a lie; for after he has told the lie, his mind will burn him with the memory of his guilt.

ச. † உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

பரி.—(இ - ள்). ஒருவன் தன்னுள்ளத்திற்கேற்பப் பொய்கூறாது ஒழுகுவனாயின், அவன் உயர்ந்தோருள்ளத்தின்க ணெல்லாம் உளனும்,()

‡ உள்ளத்தாலென்பது வேற்றுமை மயக்கம். பொய்கூறா தொழுகுதலாவது மெய் கூறியொழுகுதல். ‡ அவனது அறத்தின தருமைநோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்பரென்பதாம். இதனான் 6 இம்மைப்பயன் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (ஒருவன்) உள்ளத்தால்-(தன்) மனத்திற்கு(ஏற்ப), பொய்யாது-பொய்பேசாமல், ஒழுகின் - நடப்பானாயின், (அவன்), உலகத்தார் - உயர்ந்தோரது, உள்ளத்துளெல்லாம் - மனங்களிலெல்லாம், உளன்-இருப்பவனாவன், (ஒ-று).

உள்ளத்தாலென்பது உள்ளத்திற்கு என்னும் பொருளில் வந்தமையின் வேற்றுமை மயக்கமாம் பொயபேசாமல் நடத்தலாவது மெய்பேசி நடத்தல். மெய்பேசி நடக்கும் அவனது அறத்தினது அருமையை நோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்பாரென்பதாம். இதனால் பொய்பேசாதொழுபவனுக்கு வரும ¶ இம்மைப்பயன் சொல்லப்பட்டது.

(க-து). தன் மனமறியப் பொய்பேசா தொழுகுகின்றவனை யறிவுடையாரியாவரும் போற்றுவர் என்பது.

4. He, who in his conduct preserves a mind free from deceit will dwell in the minds of all men.

ரு. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

---

† 'உள்ளத்தாற் பொய்யா தொழுகின்' என்றமையின், துறவறத்தார்க்கு வாய்மை பொய்சொல்லக் சருதாமையென்பது பெறப்பட்டவாறறிக.

‡ உள்ளத்தால் என்பதன் மூன்றனுருபு தனக்குரிய பொருளை விட்டு நான்கனுருபிற் குரிய பொருளில் வந்தமையின், வேற்றுமை மயக்கமாயிற்று.

‡ அவன் றவத்தின தருமை நோக்கி என்றும் பாடமுண்டு.

¶ இம்மைப்பயன் - இம்மையில் (இப்பிறப்பில்) அடையும் பயன், அஃதிங்கு உலகத்தா ருள்ளத்து ளெல்லா முளனாதல்.

**பரி.**—(இ-ள்). ஒருவன் தன்மனத்தோடு பொருந்த வாய்மையைச் சொல்வானாயின், அவன் † தவமுந் தானமும் ஒருங்கு செய்வாரினுஞ் சிறப்புடையன், (எ-று).

*மனத்தொடு பொருந்துதல்-மனத்திற் கேறுதல். புறமாகிய மெய்யாற் செய்யு மவற்றினும் அகமாகிய மனமொழிகளாற் செய்யு மது ‡ பயனு டைத் தென்பதாம்.*

**தெளி.**—(இ-ள்). (ஒருவன்) *மனத்தொடு-(தன்) மனத்தோடு,* (பொருந்த), *வாய்மை-உண்மையை, மொழியின் -சொல்லுவானாயின்,* (அவன்), *தவத்தொடு-தவமும், தானம-தானமும், செய்வாரின-(ஒருமிதகுச்) செய் வாரினும், தலை-சிறப்புடையவனுவான்,* (எ-று).

*மனத்தோடு பொருந்துதல் - மனத்திற் கொத்திருத்தல். (துறவறத் தாற்கு)புறமாகிய உடம்பாற் செய்யும் அத்தவத்தினுந் தானத்தினும் அகமா கிய மனம் வாக்குகளாற் செய்யும் அது(மெய்பேசுதல்)பயனுடைய தென்ப தாம். புறம் - வெளி. அகம் - உள்.*

(க-து). *மனமும் வாக்கும் ஒத்திருக்க மெய்பேசுகின்றவன் தவத்தையுந் தானத்தையுமொருமித்துச் செய்கின்றவர்களினும் சிறப்புடையவனுவான் என்பது.*

5. He, who speaks truth with all his heart, is superior to those who make gifts and practise austerities.

கூ. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

**பரி.**—(இ-ள்). ஒருவனுக்கு இம்மைக்குப் பொய்யாமையை ஒத்த புகழ்க்காரணமில்லை, மறுமைக்கு மெய் வருந்தாமல் அவனுக்கு எல்லா அறங்களையுந் தானே கொடுக்கும், (எ-று).

---

† *தவமுத்தொடு தானமும் என்றும் பாடமுண்டு.*

*தவமாவது மனம் இந்திரியங்களின் வழியே செல்லாது நிற்கும் பொ ருட்டு விரதங்களால் உணவைச் சுருக்குதல் முதலாயினவாம். 'மனம் பொ றிகட் கொருமையே தவமாம்' என்பது வேதாந்த சூளாமணி. இது துற வறத்திற்குச் சிறப்பாக வுரியதாம்.*

*தானமாவது தருமவழியால் வந்தபொருளை யோக்கியர்களுக்குச் சந்தோஷத்தோடு கொடுத்தல். இஃதில்லறத் திற்குச் சிறப்பாகவுரியதாம்.*

‡ *மனத்தொடு வாய்மை மொழிபவன் துறவறத்திற் சிறந்து விளங் குந் தவத்தின் பயனிலும் இல்லறததிற் சிறந்துவிளங்குந் தானத்தின் பய னிலும் மேலான பயனையடைவா னென்பதாம்.*

† புகழ்-சண்டு ஆகுபெயர். இல்லறத்திற்குப் பொருள்கூட்டல் முதலியவற்றானும், துறவறத்திற்கு உண்ணுமை முதலியவற்றானும் வருந்தல் வேண்டுமென்றே, அவ்வருத்தங்கள் புகுதாமல் ‡ அவ்விருவகைப் பயனையுந் தானே தருமென்பார் "எய்யாமை யெல்லா வறமுந் தரும்' என்றார்.

தெளி:—(இ - ள்). பொய்யாமையன்ன - (ஒருவனுக்கு) பொய்பேசாமையை யொத்த, புகழ் - புகழ்க்காரணம், இல்லை - (இம்மைக்கு) இன்றாம், (அப்பொய்பேசாமை) (அவனுக்கு), எய்யாமை-(உடம்பு)வருந்தாமல், எல்லாவறமும் - எல்லாவறங்களையும், தரும் - (மறுமைக்குத்தானே) கொடுக்கும், (எ - று).

புகழென்பதிங்குஅதன் காரணத்தையுணாத்துதலின், ஆகுபெயராம். இல்லறத்திற்குப் பொருள் சம்பாதித்தல் முதலியவற்றானும் துறவறத்திற்கு உண்டி சுருக்குதல் முதலிய வற்றானும்உடம்பு வருந்துதல் வேண்டுமெல்லவா,அவ்வருத்தங்கள் அடையாமல் அவ்விருவகை அறங்களும் கொடுக்கும் பயன்களையும் பொய்யாமைதானே கொடுக்கு மென்பார் 'எய்யாமை யெல்லாவறமுந் தரும்' என்றார்.

(க - து). பொய்பேசாமையானது எளிதாக இம்மைக்குரிய புகழையும் மறுமைக்குரிய அறத்தையும் தரும் என்பது.

6. There is no praise like the praise of never uttering a falsehood; without giving any suffering, it will lead to every virtue.

எ. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

பரி.—(இ - ள்). ஒருவன் பொய்யாமையையே பொய்யாமையையே செய்யவல்லனாயின், அவன் பிறவறங்களைச் செய்யாமையே செய்யாமையே நன்று, (எ - று).

அடுக்கிரண்டனுள் முதலது இடைவிடாமை மேற்று; ஏனையது துணிவின் * மேற்று. ‡ பலவறங்களையும் மேற்கொண்டு செய்தற் கருமை

† புகழ் என்னும் காரியப்பெயர் தன் காரணமாகிய பொய் பேசாமையை யுணர்த்துதலின் காரியவாகு பெயராம்.

‡ அவ்விருவகைப் பயனையும் தானே தரும்-இல்லறந் துறவறமென்னும் இருவகையறங்கள் கொடுக்கும் பயனையும் மெய்பேசுதலே கொடுக்கும்.

* மேற்று - மேலது.

‡ பலவறங்கள் - சாந்திராயணம், கிருச்சிர முதலிய விரதங்கள்.

யால் ‡ சிலதவறிற் குற்றப்படுதலின், அவையெல்லாவற்றின் பயனையுந் தானே தரவற்றாய இதனையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நன்றென் பார் 'செய்யாமை செய்யாமை நன்று' என்றார். $ இதனை இவ்வாறன்றிப் பொய்யாமையைப் பொயயாமற் செய்யிற் பிறவறஞ்செய்கை நன்றெனப் பொழிப்பாக்கிப், பொய்கூறிற் பிறவறஞ்செய்கை நன்றாகாதென் பது அதனாற்போந்த பொருளாக்கி உரைப்பாருமுளர். பிறவறங்களெல் லாந் தரும் பயனைத் ¶ தானே தரும் ஆற்றலுடைத்தென மறுமைப்பய னது மிகுதி இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்). பொய்யாமை பொய்யாமை-(ஒருவன்) பொய்பேசா மையையே பொய்பேசாமையையே, ஆற்றின் - செய்ய வல்லவனாயின், (அவன்), அறம்பிற - பிறவறங்களை, செய்யாமை செய்யாமை - செய்யா மையே செய்யாமையே, நன்று - நல்லது, (எ-று).

பொய்யாமை பொய்யாமை, செய்யாமை செய்யாமையென்னும் அடுக்கிரண்டனுள், பொய்யாமை பொய்யாமை என்னும் முதலாவதடுக்கு இடைவிடாமைப் பொருளது; செயாயமை செய்யாமை எனனும் மற்றவ ருக்குத் துணிவுப்பொருளது. பல வறங்களையும் மேற்கொண்டு செய்தற்கு அருமை யாகலால் சிலதவறினால் குற்றப்படுதலின், அவ்வெல்லா வறங்க ளின் பயன்களையும் தானே தரவல்லதாகிய இப்பொய் பேசாமை யொன்றையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நல்லதென்பார் 'செய் யாமை செய்யாமை நன்று' என்றார். பிறவறங்களெல்லாம் மறுமையில் தரும் பயனைத் தானே கொடுக்கும் வல்லமை யுடையதென மறுமைப் பய னது மிகுதி இவை மூன்று பாட்டாலும் சொல்லப்பட்டது.

(க - து). பொய் பேசாதவன் வேறு அறங்களைச் செய்தல் வேண்டுவதில்லை ; அஃதவனுக்குப் பிறவறங்களின் பயனை யெல் லாந் தரும் என்பது.

---

‡ சிலதவறிற் குற்றப் படுதலின் - சாந்திராயண முதலிய விரதங்களை யனுட்டிக்கும்போது, அவற்றிற்கு விதித்துள்ள விதிகளில் சில கால தேச நிமித்தங்களால் தவறிப்போனால் அவ்விரதங்கள் முடிவின்மை யடைத லின்.

$ இக்குறளை இவ்வாறல்லாமல், பொய்யாமை பொய்யாமை யாற் றின்-பொய்யாமையை (பொய் பேசாமையை) பொய்யாமல் (தப்பாது) செய்யின் (அனுஷ்டித்தால்), அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று- பிறவறஞ் செய்கை (வேறு தர்மங்களைச் செய்தல்) நன்று என்று பொழிப் பாக்கி (பொழிப்புரையாக்கி), பொய் கூறிற் பிறவறஞ் செய்கை நன்றாகா தென்பது அதனாற் போந்த (கிடைத்த) பொருளாக்கி யுரைப்பாரு முளர். ஈண்டுச் செய்யாமை செய்யாமை யென்னுமிரண்டெதிர்மறைத் தொழிற் பெயரும் செய்தலென்னும் ஒரு பொருளனவாம்.

¶ தானே - பொய் பேசாமையே.

7. If a man has the power to abstain from falsehood, though he practise no other virtue, it will be well with him.

௮. * புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

பரி:—(இ - ள்). ஒருவனுக்கு உடம்பு தூய்தாந்தன்மை நீராலே யுண்டாம்; அதுபோல மனந்தூய்தாந்தன்மை வாய்மையாலுண்டாம். ()

† காணப்படுவது உள்ளதாகலின், உண்டாமென் றுரைக்கப்பட்டது. உடம்பு தூய்தாதல் - வாலாமை நீங்குதல். மனந்தூய்தாதல் - மெய்யுணர்தல். புறந்தூய்மைக்கு நீரல்லது காரணமில்லாதாற்போல, அகந்தூய்மைக்கு வாய்மையல்லது காரணமில்லை யென்றவாறாயிற்று. இதனானே துறந்தார்க்கு ‡ இரண்டு தூய்மையும் வேண்டுமென்பதூஉம் பெற்றாம்.

தெளி:—(இ - ள்). புறம் (ஒருவனுக்கு) - உடம்பு, தூய்மை - பரிசுத்தமாந்தன்மை- நீரான் - நீரினாலே, அமையும் - உண்டாகும், (அது போல்), அகம் - மனம், தூயமை - பரிசுத்தமாந்தன்மை, வாய்மையான் - மெய்பேசுதலால், காணப்படும் - உண்டாகும், (எ - று).

காணப்படும் பதார்த்தம் உள்ளதாமாகலின், காணப்படு மென்பதற்கு உண்டாமென்று பொருள் கூறப்பட்டது. உடம்பு பரிசுத்தமாதல்-அழுக்கு நீங்குதல். மனம் பரிசுத்தமாதல்-மெய்யுணர்தல். உடம்பு பரிசுத்தமாதற்கு நீரையன்றிவேறு காரணம் இல்லாமையாற்போன்று,மனம் பரிசுத்தமாதற்கு மெய்பேசுதலன்றி வேறு காரணமில்லை என்றவாறாயிற்று. இதனாலே துறவிகளுக்கு இரண்டு தூய்மையும் வேண்டுமென்பதும் பெறப்பட்டது.

(க - து) உடற் சுத்தி நீரால்போல் மனச்சுத்தி மெய்பேசுதலாலாம் என்பது.

* அரிச்சந்திரபுராணம் "சேயமை யணைமையி லுயிர்க்கொரு துணையெனச் சிறந்த, வாயமை யாலகந் தூய்மையா மறறிலைப் புறத்தைத், தூய்மை செய்வது நீரலாற் சொல்லின்வே றுளதோ" என்று கூறுகின்றது.

† பாவபதார்த்தம் அபாவபதார்த்தமென்னு மிரண்டனுள், ஒவ்வொன்றும் அததற்குரிய பிரமாணங்களால் ஈண்டுக் கடமுண்டு, ஆண்டுப் படமுண்டு; ஈண்டுக்கடாபாவமுண்டு, ஆண்டுப் படாபாவ முண்டென் றறியப்படுகின்றமைபற்றி, 'காண (அறிய) ப் படுவது உள்ளதாகலின், (காணப்படுமென்பதற்கு) உண்டாமென் றுரைக்கப்பட்டது' என்று கூறப்பட்டது. அவ்விருவகைப் பதார்த்தங்களுள், யாதேனுமொன்று உள்ளதாகாவிடத்து அது காணப்படுவதாகாதெண்பது ஈண்டுணர்தற்பாற்றும். "உலகினுள், இல்லதற் கில்லை பெயர்" என்று பழமொழி கூறுவது மறிக.

‡ இரண்டு தூய்மையும் - புறந்தூய்மையும் அகந்தூய்மையும்.

8. Purity of body is produced by water; purity of mind comes from truthfulness.

கூ. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

பரி.—(இ - ள்). புறத்திருள்கடியும் உலகத்தார் விளக்குகள் எல்லாம் விளக்காகா; துறவான் அமைந்தார்க்கு விளக்காவது மனத்திருள் கடியும் பொய்யாமையாகிய விளக்கே (எ - று).

உலகத்தார் விளக்காவன:—ஞாயிறு, திங்கள், தீயென்பன. இவற்றிற்குப் போகாத இருள் போகலின் 'பொய்யா விளக்கே விளக்கு' என்றார். அவ்விருளாவது அறியாமை. † பொய்யாத விளக்கென்பது குறைந்து நின்றது; பொய்கூறாமையாகிய விளக்கென்றவாறு. ‡ இனி இதற்குக் கல்வி முதலியவற்றான் வரும் விளக்கமெல்லாம் விளக்கமல்ல; அமைந்தார்க்கு விளக்கமாவது பொய்யாமையான் வரும விளக்கமே யென் றுரைப்பாரு முளர்.

தெளி:—(இ - ள்). சான்றோர்க்கு - (துறவினால்) நிறைந்தோர்க்கு, எல்லாவிளக்கும் - (புறத்திருளை நீக்குகின்ற உலகத்தாரது) விளக்குகளெல்லாம், விளக்கல்ல - விளக்குக்களாவன வல்ல, பொய்யாவிளக்கே - (மனத்திருளை நீக்குகின்ற) பொய்பேசாமையாகிய விளக்கே, விளக்கு - விளக்காவதாம். (எ - று).

உலகத்தாரது விளக்குகளாவன:—சூரியன், சந்திரன், அக்கினி யென்பனவாம். இவ்விளக்குகளுக்கு நீங்காத அகத்திருள் (பொய்பேசாமையால்) நீங்குதலின் 'பொய்யா விளக்கே விளக்கு' என்றார். அவ்வகத்

† பொய்யாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் செய்யுள் விகாரத்தால் ஈறு குறைந்து பொய்யா என (ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாய்) நின்றது.

பெயரெச்சத்தைப் பண்புத் தொகையாகக் கோடல் வடநூல் வழக்கு. அவ்வழக்குப் பற்றிப் பொய்யா விளக்கெனபது 'பொய் கூறாமையாகிய விளக்கு' என விரிக்கப்பட்டது.

"சிலபெய ரெச்சமுஞ் சிலவினைத் தொகையும், இருவகை யுவமையும் வண்ணச் சினைச்சொலும், பண்புத் தொகையெனப் பகரும் வடநூல்" என்பது இலக்கணக்கொத்து.

‡ இனி இக்குறளுக்கு, எல்லா விளக்கும் - கல்வியறிவு ஒழுக்கங்களால் வரும் விளக்க மெல்லாம், விளக்கல்ல - விளக்கம் அல்ல; சான்றோர்க்கு - அமைந்தார்க்கு, விளக்கு-விளக்கமாவது, பொய்யா விளக்கே - பொய்பேசாமையா லுண்டாகும் விளக்கமே யென் றுரை கூறுவாரு முண்டென்பது.

திருனாவது 0 (தன்னை) அறியாமை. பொய்யாத என்பது ஈறு குறைந்து 'பொய்யா' என நின்றது. புறம் - வெளி.

(க - து). சான்றோர்க்கு விளக்குப் பொய்பேசாமையேயாம்.

9. All lamps are not lamps; the lamp of truth is the lamp of the wise.

கo யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

பரி:—(இ - ள்). யாம் மெய்ந்நூல்களாகக் கண்ட நூல்களுள் யாதொரு தன்மையானும் வாய்மையின் மிக்கனவாகச் சொல்லப்பட்ட பிறவறங்களில்லை (எ - று).

¶ மெய்யுணர்த்துவனவற்றை 'மெய்' என்றார். அவையாவன:—தங்கண் மயக்கம் இன்மையின் பொருள்களை யுள்ளவா றுணர வல்லராய்க் காம வெகுளிக ளின்மையின் $ அவற்றை யுணர்ந்தவாறே உரைக்கவும் வல்லராய † இறைவர் அருளான் உலகத்தார் உறுதி யெய்துதற்பொருட்டுக் கூறிய ‡ ஆகமங்கள். அவை யெல்லாவற்றினும் ¶ இஃதொப்ப முடிந்த தென்பதாம். இவை மூன்றுபாட்டானும் இவ்வறத்தினது தலைமை கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). யாம் - நாம், மெய்யா - மெய்ந்நூல்களாக, கண்டவற்றுள் - அறிந்த நூல்களுள், எனைத்தொன்றும்-யாதொரு தன்மையாலும், வாய்மையின் - மெய்பேசுதலினும், நல்ல-சிறந்தனவாகச் சொல்லப்பட்ட, பிற-பிறவறங்கள், இல்லை - (எ-று).

---

0 "தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்" என்பது திருமந்திரம்.

¶ மெய்யையுணர்த்துவதற்குக் காரணமாய் நின்ற நூல்களை மெய்யென்றது காரியவாகு பெயராம்.

$ நீத்தார்பெருமை யவதாரிகையில் "அவ்வறமுதற் பொருள்களை யுலகிற்கு உள்ளவா றுணர்த்துவா ரவாராகலின் (நீத்தாராதலால்)" என்று கூறியிருப்பது மிங்கறியத் தக்கதாம்.

† இறைவர் - தத்துவஞானிகள்.

‡ ஆகமங்கள் - வினையினீங்கி விளங்கிய வறிவினையுடைய முனைவன் (கடவுள்) சிருட்டியி ஞாரம்பத்தில் மக்களுய்யுமாறு எடுத்துச்சொல்லிய முதனூலை அடியொற்றிச் செய்த மனு முதலிய நூல்கள்.

¶ இஃது - எல்லாத்தருமங்களிலும் பொய்பேசாமை யென்னுந்தருமமே உயர்ந்தது என்னும் அபிப்பிராயம்.

மெய்யை யறிவிக்கின்ற நூல்களை ஆகுபெயரால் 'மெய்'என்றார். அம் மெய்ந்நூல்களாவன:—தம்மிடத்து மயக்கம்இல்லாமையினால்பொருள்களை யுள்ளபடி யறியவல்லவராய்க் காமக்குரோதங்க ளில்லாமையினால்அப்பொருள்களை யறிந்தபடியே சொல்லவும் வல்லவராய மேலோர் கிருபையினால் உலகத்தார் நன்மையையடையும் நிமித்தஞ் சொல்லிய ஆகமங்கள்.அவ்வாகமங்களெல்லா வற்றினும் இஃது ஒப்புமுடிந்த தென்பதாம். இவை மூன்று பாட்டாலும் பொய் பேசாமையென்னும் இவ்வறத்தினது உயர்வு சொல்லப்பட்டது.

(க-து). மெய்பேசுவதற்கு மேம்பட்ட அறமொன்றுமில்லை.

10. Amidst all that we have seen described as real excellence, there is nothing so good as truthfulness.

ஏழாவது அதிகாரம்.

## வெகுளாமை—Against Anger.

பரி.—அஃதாவது சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன்மாட் டுளதாயவிடத்தும் அதனைச் செய்யாமை. இது பொய்ம்மைபற்றி நிகழ் வதாய வெகுளியை விலக்கலின், வாய்மையின்பின் வைக்கப்பட்டது.

தெளி. — அஃதாவது கோபஞ்செய்வதற்குக் காரணம் ஒருவனிடத்துண்டாகிய விடத்தும் அக்கோபத்தைச்செய்யாமையாம். இது (வெகுளாமை) பொய் பேசுவதுபற்றி யுண்டாவதாய கோபத்தைவிலக்கலால், வாய்மையின்பின் வைக்கப்பட்டது.

க. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்.

பரி.—(இ-ள்). தன் சினம் பலிக்குமிடத்து அதனை யெழாமற் றடுப்பானே அருளாற் றடுப்பானாவான்; ஏனைப்பலியாதவிடத்து அதனைத் தடுத்தாலென்?தடாதொழிந்தாலென்? (எ-று).

செல்லிடம் அல்லிடமென்றது தவத்தாற் றன்னின் மெலியாரையும் வலியாரையும்.வலியார்மேற் * காவாவழியும் † அதனன் ‡ அவர்க்கு வருவ

* காவாவழியும் - (சினத்தைக்) காவா (தடுக்கா) த விடத்தும்.

† அதனால் - காவாமையினால்.

‡ "வலியவ னிடத்து மொத்தான் மாட்டினும் வெகுளி காத்தல், பொலிவுசெ யறம தென்னப் பொருந்துறா தனையர் தம்பால்;நலிவுறு வெகுளி செல்லா தாதலா னலிய லாற்றா, மெலியவ னிடத்திற் காக்கும் வெகுளியே யறம தென்பர்'' என்பது பிரபுலிங்கலீலை.

தோர் தீங்கின்மையிற் காத்தவழியும் அறனில்லை யென்பார் 'காக்கினெ ன் காவாக்கா லென்' என்றார். இதனான் வெகுளாமைக் கிடங் கூறப்பட் டது.

தெளி.— (இ-ள்). சினம்- (தன்) கோபம், செல்லிடத்து - பலிக்கு மிடத்து, காப்பான் - (அக்கோபத்தை எழாவாறு) தடுப்பவனே,காப்பான் - (அருளினால்) தடுப்பவனாவான், அல்லிடத்து - மற்றைப்பலியாதவிடத்து, காக்கினென்- (அக்கோபத்தினைத்) தடுத்தால் என்ன? காவாக்காலென்- தடுக்காவிட்டால் என்ன? (எ-று)

செல்லிட மென்றது தவத்தால் தன்னின் மெலியவரையும், அல் லிடமென்றது தவத்தால் தன்னின் வலியவரையுமாம். வலியவர்மேல் கோபஞ்செய்தலைத் தடுக்காதவிடத்தும் அதனால் அவர்க்கு வருவதோர் தீங்கு இல்லாமையால் தடுத்த விடத்தும் அறம் இல்லை யென்பார் 'காக்கி னென் காவாக்கா லென்' என்றார். இதனால் கோபஞ்செய்யாமைக்கு இடம் சொல்லப்பட்டது.

(க - து). தன்னினும் மெலியாரைக் கோபியாதவனே சினத் தை வென்றவனாவன் என்பது.

1. He restrains his anger who restrains it when it can injure; when it cannot injure, what does it matter whether he restrain it, or not ?

உ. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

பரி.—(இ-ள்). ஒருவன் வெகுளி தன்னின் வலியார்மே லெழின் $ தனக்கே தீதாம்;மற்றை யெளியார்மே லெழினும் அதனிற் றீயன பிற இல்லை. (எ-று).

¶ செல்லாவிடத்துச் சினம்பயப்பது இம்மைக்கண் அவரான் வரும் ஏதமே; ○ ஏனையது இம்மைக்கட்பழியும் மறுமைக்கட்பாவமும்பயத்தலின் ‖ 'இல்லதனிற் றீய பிற' என்றார். () ஒரிடத்தும் ஆகாதென்பதாம்.

$ அது தனக்கே என்றும் பாடமுண்டு.

¶ செல்லாவிடம் - தன்னுடையகோபம் செல்லுவதற்கு உரியதாகாத விடம்.

○ ஏனையது - தன்னுடையகோபம் செல்லுவதற்கு உரியதானவிடம்.

‖ அதனிற் றீய்ன பிறவில்லை என்றும் பாடமுண்டு.

() ஒரிடத்தும் - செல்லிடம், அல்லிடமென்னு மிரண்டனுள், ஒரி டத்திலும். "பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல் லியகோ ளொப் பான், புரிவன புரியப் பட்டுப் புலம்புவ னேதார்க் காய்ந்தான், எரிகா கத

தெளி:—(இ - ள்). சினம் - (ஒருவன்) கோபமானது, செல்லா விடத்து - தன்னின் வலியவர்மேல், (உண்டாயின்), தீது-(தனக்கே) தீதாம், செல்லிடத்தும்-தன்னினெளியவர்மேல், (உண்டாயினும்), அதனின் - அக்கோபத்தினும், தீயபிற - தீமையுடையவை வேறு, இல் - இல்லை, (எ - று).

வலியவர்மேற் செய்யுங் கோபத்தால் உண்டாவது இம்மையில் அவரால் வருந்துன்பமொன்றே; எளியவர்மேற் செய்யுங் கோபம் இம்மையிற் பழியையும் மறுமையிற் பாவத்தையும் தருதலால் 'இல்லதனிற்றீயபிற' என்றார். வலியவர், எளியவர் என்னும் யாரிடத்தும் கோபஞ்செய்தல் ஆகாதென்பதாம்.

(க - து). வலியவர்மீது செய்யுங் கோபம் இம்மையிற் றீமையையும், மெலியவர்மீது செய்யுங் கோபம் இருமையினுந் தீமையையுந் தரும் என்பது.

2. Anger is bad, even when it cannot injure; when it can injure, there is no greater evil.

---

௩. மறத்தல் வெகுளியை யாாமாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.

பரி:—(இ - ள்). யாவர்மாட்டும் வெகுளியை ஒழிக, ஒருவர்க்குத் தீயனவெல்லா முளவாதல் அதனான் வரும் ஆகலான், (எ - று).

வலியார், ஒப்பார், எளியாரென்னும் மூவர் மாட்டும் ஆகாமையின் 'யார்மாட்டும்' என்றும், § மனத்தாற் றுறந்தார்க்கு ஆகாதன வாகிய தீச்சிந்தைகளெல்லாவற்றையும் பிறப்பித்தலின் 'தீய பிறத்த லதனான் வரும்' என்றுங்கூறினார்.

---

னில் வீழ்வ னிழிந்தவர்க் காய்ந்தா னென்றால், ஒருவர்தம் மிடத்துஞ் சீற்றமுறுமையே நன்று மாதோ" என்பது பிரபுலிங்கலீலை.

§ மனத்தினால் யானெனதென்னும் இருவகைப்பற்றையும் விட்டவர்க்கு ஆகாதனவாய கொடிய வெண்ணங்க ளெல்லாவற்றையும் கோபம் உண்டாக்குதலின், தீயபிறத்தலதனான்வரும்' என்று கூறப்பட்டது. தீய வெண்ணங்களாவன பழிபாவங்களுக் கஞ்சாமை, கருணையில்லாமை, கலைஞானமில்லா தொழிதல், மேற்கொண்டுள்ள விரதத்தைவிட்டுவிடல் முதலியனவாம். வசிட்டர்மக்களை விசுவாமித்திரர் வேடர்களாகும்படி சபித்தமையும், கபிலர் சகரரைச் சபித்தமையும், இந்திரன் விசுவரூபனென்னுங்குருவின் தலையை வெட்டினமையும், பிறவும் இங்கு அறியத்தக்கனவாம். "கோபமெய்க் கொடியன்யா னெய்திலார் குலைவுறார், தீபமொத் தொளிர்தபோ தனர்களுஞ் சினமெனும், பாவமுற் றயலுளோர் பதைபதைத் துயிரிறச், சாபமிட் டனையர்தந் தவமும்விட் டிடுவரே" என்பது பிரபோத சந்திரோதயம்.

தெளி:—(இ - ள்). யார்மாட்டும் - யாவரிடத்திலும், வெகுளியை - கோபஞ்செய்தலை, மறத்தல் - மறந்தொழியக்கடவர், (ஒருவருக்கு), தீய - தீமையென்பனவெல்லாம், பிறத்தல்-உண்டாகுதல், அதனன் - அக்கோபத்தினால்,வரும்-வாராநிற்கும், (ஆதலால்), (எ - று).

வலியவர், ஒப்பார், எளியவர் என்னு மூவரிடத்தும், (கோபஞ்செய்தல்) ஆகாமையால் 'யார்மாட்டும்' என்றும், மனத்தினால் துறந்தவர்க்கு ஆகாதனவாகிய தீயசிந்தைகளெல்லாவற்றையும் உண்டாக்கலால் 'தீயபிறத்த லதனன் வரும்'என்றும் சொல்லினர்.

(க-து). கோபத்தால்வருங் கெடுதிகள் பலவாதலின், அதனை யாவரிடத்தும் ஒழித்தல் வேண்டும் என்பது.

3. Forget anger, towards every one, as fountains of evil come from it.

ச. 0 நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

பரி:—(இ - ள்). துறந்தார்க்கு அருளானுளவாய முகத்தின்கணகையையும் மனத்தின்கணுவகையையுங்கொன்று கொண்டெழுகின்ற † சினமே அல்லது அதனிற் பிறவாய பகைகளும் உளவோ இல்லை, (எ - று).

துறவாற் * புறப்பகை யிலவாயினும் உட்பகையாய் நின்று அருண் முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித்துன்பமும் எய்துவித்தலான், அவர்க்குச் சினத்தின்மிக்க பகையில்லையாயிற்று. இவை மூன்றுபாட்டானும் வெகுளியது தீங்கு கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). (துறந்தார்க்கு அருளினாலுண்டாகிய) நகையும் - (முகத்தினிடத்து) மலர்ச்சியையும், உவகையும் - (மனத்தினிடத்து) மகிழ்ச்சியையும், கொல்லும் - அழித்துக்கொண் டெழுகின்ற, சினத்தின் - கோபத்தைப் பார்க்கிலும், பிற - வேறாகிய, பகையும் - பகைகளும், உளவோ - உண்டோ, (இல்லை), (எ- று).

0 "மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கின் முதலற முடிக்குமா போலத், தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து தன்னுறு கிளையெலாந் தகிக்கும், ஆங்கதன் வெம்மை யறிந்தவர் கமையா லதனையுள் ளடக்கவு மடங்கா, தோங்கிய கோபத் தீயினை யொக்கு முட்பகை யுலகில்வே றுண்டோ" என்பது இராமாயணம்.

† சினமே யல்லது அதனில் - கோபமேயல்லாமல், அக்கோபத்தைப் பார்க்கிலும்.

* புறப்பகை - புறத்தி (வெளியி)ற் பகைவராக விருப்பவர்.

(துறந்தவர்) துறவால் (தவவேடத்தினால்) புறப்பகை இல்லாராயினும் உட்பகையாய் நின்று (அவர்க்குரிய) அருள்முதலாகிய நட்பினையும் நீக்கிப் பிறவித்துன்பத்தையும் அடைவித்தலால், அவர்க்குக் கோபத்தின் மிகுந்த பகை இல்லையாயிற்று. இவை மூன்றுபாட்டாலும் கோபத்தினது தீங்கு சொல்லப்பட்டது.

(க-து) முகமலர்ச்சியையும் அகமகிழ்ச்சியையுங் கெடுக்க வல்ல கோபத்திற்கு மேற்பட்ட பகை வேறில்லை என்பது.

4. Is there a geater enemy than anger, which kills both laughter and joy ?

---

ரு. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்.

பரி.—(இ-ள்) * தன்னைத்தான் துன்பமெய்தாமற் காக்க நினைத்தானாயின், தன் மனத்துச் சினம் வாராமற் காக்க; காவானாயின், அச்சினந் தன்னையே கெடுந்துங் கடுந்துன்பங்களை யெய்துவிக்கும், (எ-று).

† 'வேண்டிய வேண்டியாங் கெய்தற்' பயத்ததாய தவத்தைப்பிறர் மேற் சாபம் விடுதற்காக ‡ இழந்து ¶ அத்தவத் துன்பத்தோடு பழைய $ பிறவித் துன்பங்களும் ஒருங்கெய்துதலின் 'தன்னையே கொல்லும்' என்றார். () "கொல்லச் சுரப்பதாங் கீழ்" * என்புழிப்போலக் கொலைச்சொல் ஈண்டுத் துன்பமிகுதி யுணர்த்தி நின்றது.

தெளி.—(இ-ள்). தன்னை (ஒருவன்) தன்னை, தான்காக்கின் - தான் (துன்பம் அடையாமல்) காக்க நினைத்தானாயின், சினம் (தன் மனதில்) கோபம், (வாராமல்), காக்க - காக்கக்கடவன், காவாக்கால் - காவானாயின், சினம் - அக்கோபமானது. தன்னையே—, கொல்லும்—கெடுக்குங் கடுந் துன்பங்களை யடைவிக்கும், (எ - று.)

---

* "உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக், கொள்ளுங் குணமே குணமென்க" என்பது நன்னெறி.

† திருக்குறள் தவம் 5. இதன்பொருள் வேண்டிய பயன்களை வேண்டியபடியே யடைதல் என்பது.

‡ இழந்தவத்துன்பத்தோடு என்றும் பாடமுண்டு.

¶ உண்டிசுருக்கல், கோடைக்கண்வெயினிலை நிற்றல் முதலியவற்றால் வருந்துன்பம்.

$ தன்னைப்பற்றியும் பிறவுயிர்களைப்பற்றியும் தெய்வத்தைப்பற்றியும் வரும் பிறவித்துன்பங்கள்.

() நாலடியார் ஈயாமை-9. இதன்பொருள் மிகவும் வருத்தக் கீழ்மகன் (பிறர்க்குப் பொருளைக்) கொடுப்பான் என்பது. * என்னுமிடத்திற்போல.

வேண்டிய பயன்களை வேண்டியபடியே யடையத்தருவதாகிய தவத்தைப் பிறர்மீது சாப மிடுதற்காக இழந்து அத்தவத் துன்பத்தோடு பழைய பிறவித் துன்பங்களும் ஒருமிக்க அடைதலால்(சினம்) 'தன்னையே கொல்லும்'என்றார். கொல்லும் என்னுஞ்சொல் இங்குத் துன்பத்தின் மிகுதியை யறிவித்து நின்றது.

(க - து). தன்னைத்தான் காக்க விரும்புகின்றவன் கோபத்திற் கிடந்தரா திருக்கக் கடவன்; தந்தாறுயின், அஃதவனுக்குப் பெருந்துன்பத்தைத்தரும் என்பது.

5. If a man would guard himself, let him guard against anger; if he does not guard it, anger will kill him.

சு. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்.

பரி.—(இ - ள்). சினமென்னும் நெருப்புத் தனக்கு * இடமானவரையே யன்றி அவர்க்கு இனமாகிய ஏமப்புணையையுஞ் சுடும், (எ-று).

'சேர்ந்தாரைக் கொல்லி' என்பது † ஏதுப்பெயர்; தான் சேர்ந்தவிடத்தைக் கொல்லுந் தொழிலது என்றவாறு. 'சேர்ந்தாரை' என உயர்திணைப்பன்மைமேல் வைத்தது ஏனைநான்கு பாலும் தங்கருத்தோடுகூடிய ‡ பொருளாற்றலாற் கொண்டார். ஈண்டு உருவகஞ்செய்கின்றது துறந்

---

* இடமானவர் - (கோபமிருத்தற்கு) இடமானவர்.

† ஏது (காரண)ப் பெயர் - உறுப்பாற்றலால் பொருளை யுணர்த்திவரும்பெயர். சேர்ந்தாரைக்கொல்லி யென்பதன்கண் சேர்ந்தாரையென்னும் உறுப்பும் கொல்லி யென்னும் உறுப்பும் இருத்தலையும் அவை ஆற்றலால் சேர்ந்தவிடத்தைக் கொல்லுந் தொழிலது என்னும் பொருளை யுணர்த்துதலையும் அறிக பிரயோக விவேகநூலார் "ஆற்றலாவது விரலென்னுஞ் சொல் உகிரை யுணர்த்தாது விரலையே யுணாத்தி நிற்றலாம். அதுபோலச்சொல்லியற்கையாய் நிற்றலென்பது" என்றனர்.

‡ பொருளாற்றல் - பொருளின்கணுள்ள சாமர்த்தியம். இங்குச் சேர்ந்தாரை யென்னும் பலர்பால் மற்றை நான்கு பால்களுக்கும் உபலட்சணமாம். ஒருமொழி ஒழிந்தஇன்ற தன்னினத்தைக் கொள்ளுதற்குரியதாய் வருவது உபலட்சணமெனப்படும். "செய்பவன் கருவி" என்னும் நன்னூற் சூத்திரவுரையில் சங்கரநமச்சிவாயப் புலவர் "செய்பவன் என ஒருபான்மேல் வைத்தோதினாரேனும் 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே' என்பதனால் ஐம்பாலுங் கொள்க." என்றுவரைந் திருத்தலிங்குக் கவனித்தற்பாலதாம். "சிலைவளைத்து வென்ருன், சிலையாலாலயஞ் செய்தான என்னுந் தொடரினுள் முறையே கல் வில் என்றுணர்த்தாது வில் கல்

தார் சினத்தையே யாகலின், சினமென்னு நெருப்பென்ற ¶ விதப்பு, உலகத்து நெருப்புச் சுடுவது தான் சேர்ந்த விடத்தையே; இந்நெருப்புச சேராத விடத்தையுஞ் சுடுமென்னும் வேற்றுமை தோன்ற நின்றது. ஈண்டு இனமென்றது முற்றத் துறந்து தவஞானங்களாற் பெரியராய்க் கேட்டார்க்கு உறுதி பயக்கு மொழிகளை இனியவாகச் சொல்லுவாரை. உருவகநோக்கிச் சுடுமென்னுந் தொழில் கொடுத்தாராயினும், * அகற்றுமென்பது பொருளாகக்கொள்க. ஏமப்புணை † ஏமத்தையுபதேசிக்கும்புணை. ‡ இனமென்னு மேமப்புணையென்ற ஏகதேசவுருவகத்தாற் பிறவிக்கடலுள் அழுந்தாமல் வீடென்னுங் கரையேற்றுகின்றவென வருவித்துரைக்க. எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. ¶ தன்னையும் வீழ்த்து எடுப்பாரையும் அகற்றுமென்பதாம்.

**தெளி:**—(இ - ள்) சினமென்னும் - கோபமென்னும், சேர்ந்தாரைக்கொல்லி-நெருப்பானது, (தனக்கு இடமானவரையே யல்லாமல்), இனமென்னும் - (அவருக்கு) இனமாகிய, ஏமம்-ஏமமாயுள்ள, புணையை - மரக்கலத்தையும், சுடும்—சுடாநிற்கும், (எ-று).

---

என்றுணர்த்தலே பொருளாற்றல்'' என்றனர் இலக்கணக்கொத்து நூலார். "சொல்லாற்றலாற்றோன்றுவதாகிய பொருளாற்றலாற்றோன்றுவதும் அநுமான முதலியவற்றான் வேறோராற்றாற் பெறப்படுவது'' என்று தருக்க சங்கிரகதீபிகையுரை கூறுகின்றது

¶ வேண்டியதொன்றை முடித்தற்கு வேண்டாததொன்றைக் கூறுதல் விதப்பு எனப்படும். சினமென்று கூறாது சினமெனலுஞ் சேர்ந்தாரைக்கொல்லியென (சேர்ந்தாரைக்கொல்லி யென்பதை) அதிகமாகக்கூறினமையின், சேர்ந்தவிடத்தைச் சுடும் நெருப்புப்போலாகாது கோபாக்கினி சேராத விடத்தையுஞ் சுடும் என்னும் வேண்டியது முடித்தல்பெறப்பட்டவாறறிக.

* அகற்றும்-தனக்கிடமானவரை விட்டு நீங்கச் செய்யும்.

† ஏமப்புணை - இரட்சகத்தோணி.

‡ இனத்தை யேமப்புணையென் றுருவகப்படுத்தினதற் கியையப் பிறவியைக் கடலாகவும் முத்தியைக் கரையாகவும் உருவகப்படுத்திக் கூறாதுவாளா 'இனமென்னுமேமப்புணை' என ஏகதேசமாயுருவகப்படுத்தினமையின், இஃது ஏகதேசவுருவகமாயிற்று. ஏகதேசவுருவகமாவது (இணையுள்ளவற்றுள்) ஒரு பாகத்தையுருவகப்படுத்தி மற்றொரு பாகத்தை யுருவகப்படுத்தாது விடுவது.

¶ கோபமானது தன்னையுடையவனையும் பிறவிக்கடலில் வீழச்செய்து, (தத்துவ உபதேசத்தால்) அவனை எடுக்கவரும் தத்துவஞானியனையு நீக்குமென்பதாம்.

'சேர்ந்தாரைக்கொல்லி' என்பது காரணப்பெயர்; தான் (நெருப்பு) சேர்ந்தவிடத்தைக் கொல்லும் (அழிக்கும்) தொழிலையுடையதென்பது அதன்பொருள். 'சேர்ந்தாரை' என்று உயர்திணைப் பன்பால்மேல் வைத்து மற்றைய ஆண் பெண் ஒன்று பல என்னும் நான்கு பாலையும் தமது கருத்தோடு கூடிய பொருளாற்றலாற்கொண்டார். இங்ஙனச் சினமென்னுஞ் சேர்ந்தாரைக்கொல்லி என்று உருவகஞ் செய்கின்றது நீத்தாரது கோபத்தையே யாதலால், சினமென்னும் நெருப்பென்ற விதப்பு, உலகத்து நெருப்புச் சுடுவது தான் சேர்ந்தவிடத்தை மாத்திரம்; இக்கோபமாகிய நெருப்புத் தான்(சேர்ந்த விடத்தையேயன்றி)சேராதவிடத்தையும் சுடுமென்னும் வேறுபாடுதோன்றநின்றது. இனமென்றது யானெனதென்னும்இருவகைப்பற்றுக்களையும்பற்றறவிட்டுத்தவத்தினாலும தத்துவஞானத்தினாலும் பெரியவராய்ப்(பிறப்பிற்கஞ்சித் தம்மை யடைந்துவீட்டையும் வழியைக்) கேட்டவர்களுக்கு உறுதிதரும் மொழிகளை இனிமையாகச்சொல்லுகின்றவரை. 'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி' என்று கூறிய உருவகத்தை நோக்கிச் சுடும் என்னுந்தொழிலை அச்சினமென்னுஞ் சேர்ந்தாரைக்கொல்லிக்குக் கொடுத்தாராலும், அச்சுடும் என்பதற்கு அகற்றும் (நீக்கும் அல்லது விலக்கும்) என்பது பொருளாகக் கொள்க. ஏமப்புணை-இனிமையாகிய மொழிகளை யுபதேசிக்குந்தோணி. 'இனமென்னுமேமப்புணை' என்று கூறிய ஏகதேச உருவகத்தால்பிறவிக்கடலிலழுந்தாவாறு முத்தியென்னுங் கரையிலேறச் செய்கின்றவென வருவித்து அப்புணைக்கு முன்கூட்டுக. புணையையுமென்னும் இறந்தது தழீஇய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. கோபம் தன்னையும் பிறவிக்கடலில் வீழ்வித்து எடுப்பாரையும் நீக்குமென்பதாம். நெருப்பிற்குச் சேராதவிடத்தையும் சுடுதலையும், மரக்கலத்திற்கு இதோபதேசஞ் செய்தலையும் அதிகமாகச் சொல்லுதலால் இது மிகையொற்றுமை யுருவகவணியாம்.

(க-து). கோபாக்கினியானது தன்னை யுடையவனைக்கெடுத்து அவனுக்குத் துணையாவாரையும் நீக்கும் என்பது.

6. The fire of anger will burn up even the pleasant raft of friendship.

---

எ. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

**பரி.—(இ-ள்). சினத்தைத் தன்னாற்றல் உணர்த்துவதோர் குணமென்று தன்கட்கொண்டவன் அவ்வாற்றலிழத்தல், நிலத்தின்கண்அறைந்தவன்கை அந்நிலத்தை யுறுதல் தப்பாதவாறு போலத் தப்பாது. ()**

வைசேடிகர் † பொருள், ‡ பண்பு, ¶ தொழில், $ சாதி, † விசேடம் ‡ இயைபு என்பனவற்றை அறுவகைப்பொருளென்றாற்போல, ஈண்டுக் குணம் பொருளெனப்பட்டது. பிழையாததற்றென்பது குறைந்து நின்றது. இவை மூன்றுபாட்டானும் வெகுண்டார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்). சினத்தை - கோபத்தை, பொருளென்று-(தனது வல்லமையைத் தெரிவிப்பதாகிய ஒரு) குணமென்று, கொண்டவன் - (தன்னிடத்து)கொண்டவன், கேடு - அவவல்லமையை யிழத்தல், நிலத்து-பூமியினிடத்து, அறைந்தான - அறைந்தவனது, கை - கையானது, பிழையாதற்று - (அந்நிலத்தை யடைதல்) தப்பாதவிதம்போலத் தப்பாது,(எ - று).

தார்க்கிகருள் ஒருபகுதியாராகிய வைசேடிகர் திரவியம், குணம், கருமம், சாமாநியம், விசேடம், சமவாய மென்பனவற்றை அறுவகைப்பொரு

---

* கௌதமரது நியாயமதத்தை யனுசரித்தவர்கள் நையாயிகரென்றும் கணாதரது நியாயமதத்தை யனுசரித்தவர்கள் வைசேடிகரென்றும் சொல்லப்படுவர். [விசேஷம் என்னும் பதார்த்தத்தை யங்கீகரித்தவர் வைசேடிகரெனப்படுவர்.] தருக்க சங்கிரகம் "விசேடம நித்தப் பொருள்களில் இருப்பனவாய், அவை வெவ்வேறாய் நிற்றலைத் தெரிப்பனவாம்" என்று கூறுகின்றது. வைசேடிகர் குணமுதலிய வற்றையும் பொருள் என்று கூறினாற்போல நாலடியாரும் பிறர் மனைநயவாமை 2-வது செய்யுளில் 'பகைபழிபாவமென், றச்சத்தோ டிந்நாற்பொருள்' (பகைபழிபாவ அச்சங்களைப் பொருள்) என்று கூறுவது மிகவறியத் தக்கதாம்.

† பொருண்மைச் சாமானியமுடைய தாதல், குணமுடையதாதல் பொருளெனப்படும். பிருதிவி, அப்பு முதலியன பொருளாம்.

‡ குணத்தன்மைச் சாமாநியமுடையதாதல், திரவியம் (பொருள்) கர்மம் என்னும் இரண்டிற்கும் வேறாயப்பொதுவியல் புடையதாதல பண்பு (குணம்) எனப்படும். உருவம், இரசம் முதலியன குணமாம்.

¶ கருமத்தன்மைப் பொதுவியல் புடையதாதல், அசைவு வடிவினதாதல் தொழில் (கர்மம்) எனப்படும். எழுதல், விழுதல் முதலியன தொழிலாம்.

$ நித்தியமாயொன்றாய்ப் பலவற்றிற் சமவேதித்து (ஒற்றிற்று) நிற்பது ஜாதி (சாமாநியம்) எனப்படும்.

† இஃது இதனினும் வேறு என்று வேறு பிரித்தறியும் புத்தி மாத்திரத்திற்கு ஏது விசேடம் (சிறப்பு) எனப்படும்.

‡ சினைமுதலுக்கும், குணகுணிக்கும், ஜாதிவியக்திக்கும், கிரியை கிரியாவானுக்கும், விசேடம் நித்தியப் பொருளுக்கு முள்ள சம்பந்தம் இயைபு எனப்படும். இயைபு எனினும், ஒற்றுமைச் சம்பந்தமெனினும், சமவாய மெனினும் ஒக்கும். (ஜாதியுடையது-வியக்தி)

ளென்று கூறினாற்போன்று இங்குச் (சினமென்னுங்) குணம் பொருளென்று கூறப்பட்டது. பிழையாததற்று என்பது செய்யுள் விகாரத்தால் பிழையாதற்றெனக் குறைந்துநின்றது. இவை மூன்று பாட்டாலும் கோபஞ்செய்தார்க்குவரும் தீங்கு சொல்லப்பட்டது.

(க - து). கோபத்தைப் பொருளாகக் கொண்டவன் தவறாது கெடுவான் என்பது.

7. Destruction will come upon him who regards anger as a good thing, as surely as the hand of him who strikes the ground will not fail.

அ. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

பரி.—(இ - ள்). பலசுடரை உடைத்தாய பேரெரிவந்து தோய்ந்தால் ஒத்த இன்னாதவற்றை ஒருவன் செய்தானாயினும், அவனை வெகுளாமை ஒருவற்குக் கூடுமாயின் அது நன்று, (எ - று).

இன்னாமையின் மிகுதிதோன்ற 'இணரெரி' என்றும், அதனை மேன்மேலுஞ் செய்தல் தோன்ற 'இன்னா' என்றும், அச்செயல் முனிவரையும் வெகுள்விக்குமென்பது தோன்றப் 'புணரின்' என்றுங் கூறினார். இதனான் வெகுளாமையது நன்மை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). இணர் - பலசுடர்களையுடையதாய, எரி - பெருநெருப்பானது, தோய்வன்ன - (வந்து) (தன்மீது) படிந்தாற்போன்ற, இன்னா - துன்பந் தருவனவற்றை, செயினும் - (ஒருவன்) செய்தானாயினும், வெகுளாமை - (அவனை) கோபியாமை, புணரின் - (ஒருவனுக்கு) கூடுமாயின், நன்று - (அது) நல்லது, (எ - று)

துன்பந்தருவனவற்றின் மிகுதிதோன்ற, 'இணரெரி' என்றும், அத்துன்பந்தருவனவற்றை மேலுமேலுஞ் செய்தல் தோன்ற 'இன்னா' என்றும், அச்செய்கை முனிவரையும் கோபிக்கச்செய்யுமென்பது தோன்றப் 'புணரின்' எனறும் சொல்லினார். இதனால் கோபஞ்செய்யாமையினது நன்மை சொல்லப்பட்டது.

(க-து). பொறுத்தற்கரிய துன்பஞ் செய்தவனையுங் கோபியாதிருக்கும்வல்லமையே துறவறத்தானுக்குச் சிறந்தவல்லமையாம்.

8. Though one commit things against you as painful to bear as if a bundle of fire had been thrust upon you, it will be well, to refrain, if possible, from anger.

கூ. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

பரி.—(இ - ள்). தவஞ்செய்யுமவன், தன் மனத்தால் வெகுளியை ஒருகாலும் நினையானாயின், தான் கருதியபேறெல்லாம் ஒருங்கே பெறும்.

† 'உள்ளத்தால்'என வேண்டாது கூறியவதனான், அருளுடை உள்ளமென்பது முடிந்தது. அதனான் உள்ளாமையாவது அவ்வருளாகிய பகையை வளர்த்து அதனான் முற்றக் கடிதல். இம்மை மறுமை வீடென்பன வேறு வேறு திறத்தனவாயினும், அவையெல்லாம் இவ்வொன்றனானே யெய்து மென்பார் 'உள்ளிய வெல்லா முடனெய்தும்' என்றார், இதனான் வெகுளாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்). உள்ளத்தால் - (தவஞ்செய்பவன் தன்) மனத்தால், வெகுளி - கோபத்தை, உள்ளானெனின் - (ஒருபோதும்) நினையானாயின், உள்ளிய வெல்லாம் - (தான்) நினைத்த பேறெல்லாம், உடன் - ஒருமிக்க, எய்தும் - பெறுவான், (எ - று).

அருளுடைய வுள்ள மென்பது தோன்றுமாறு 'உள்ளத்தால்' என்பது அதிகமாகச் சொல்லப்பட்டது. அவ்வருளுடைய வுள்ளத்தால் நினையாமையாவது அவ்வருளாகிய பகையை வளர்த்து அப்பகையினால் கோபமுழுதையும் நீக்கிவிடுதல். இம்மை மறுமை வீடு என்பன வெவ்வேறு வகைப்பட்டன வானாலும், அவை யெல்லாம் கோபத்தை நினையாமையாகிய இவ்வொன்றனாலேயே கிடைக்கும் என்பார் 'உள்ளிய வெல்லா முடனெய்தும்' என்றார். இதனால் கோபஞ்செய்யாதார்க்கு வரும் நன்மை சொல்லப்பட்டது.

(க - து). கோபஞ் செய்தலை மறந்தவன் எண்ணிய பயன்களனைத்தையுந் தவறாது பெறுவான் என்பது.

9. If a man never indulges anger in his heart, he will at once obtain what ever he has thought of.

---

கo. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் * துறந்தார் துணை.

பரி.—(இ-ள்). சினத்தின் கண்ணே மிக்கார், உயிருடையாராயினும்,

---

† உள்ளான் என்று கூறியதனாலேயே உள்ளத்தால் என்பது பெறப்பட்டிருத்தலின், உள்ளத்தால் என்றுகூறியது வேண்டாதுகூறியதாயிற்று. வேண்டாத தொன்றைக்கூறுதல் வேண்டியதொன்றை முடித்தற் காதலின், உள்ளத்தால் என்று மிகையாகக் கூறியது அருளுடைய உள்ளமென்பதைக்குறிப்பித்து நின்றதென்க. நீத்தாரது மனம் அருளுடைய தென்பது "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுக லான்" என்னுங் குறளாலுமறியப்படும்.

* துறந்தார்-வீடுபெற்றார். வீடுபெறுதலாவது இருவகைப் பற்றையும் பற்றற வொழித்தல்.

**செத்தாரோ டொப்பர்; சினத்தைத் * துறந்தார், சாதற்றன்மையராயி னும், † அதனை யொழிந்தா ரளவினர், (எ-று).**

மிக்க ‡ சினத்தை உடையார்க்கு ஞானமெய்துதற் குரிய உயிர் நின்ற தாயினும் கலக்கத்தான் அஃதெய்தாமை ஒருதலையாகலின், அவரை 'இறந்தாரனையா' என்றும், சினத்தை விட்டார்க்குச் சாக்காடெய்துதற்குரிய யாக்கை நின்றதாயினும், ஞானத்தான் வீடு பெறுதல் ஒருதலையாகலின் அவரை ¶ 'துறந்தார் துணை' என்றுங் கூறினர். $ துறந்தார் துணை பன்மை யொருமை மயக்கம். இதனான் () அவ்விருவர் பயனும் ஒருங்கு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) இறந்தார் - (கோபத்திலே) மிகுந்தவர், (உயிருடையவரா யிருப்பினும்), இறந்தாரனையர் - செத்தாரோ டொப்பாவார், சினத்தை—கோபத்தை, துறந்தார் - விட்டவர், (சாதற்றன்மையையுடையவரா யிருப்பினும்), துறந்தார் துணை - அச்சாதற்றன்மையை யொழிந்தாரோடு ஒப்பாவார், (எ-று).

* கடிந்தார் என்றும் பாடமுண்டு.

† அதனை யொழிந்தார் - சாதற்றன்மையை யொழிந்த சீவன் முத்தர். சீவன் முத்தர்களுக்குப் பிறப்பில்லாமையின் அவர்களுக்கு மரணமு மில்லாமையாயிற்று; ஆகவே, சீவன் முத்தர் பிறப்பிறப்பின்றி யொருதன்மையராய் விளங்குவரென்பது பெற்றாம். சினத்தைத்துறந்தார் முத்தராவரென்பது "(ஒருவன்) இந்திரிய நிக்கிரகத்தாலும், இராகத்துவேஷம் (காமம், வெகுளி) இல்லாமையாலும், ஜீவஹிம்சை செய்யாமையாலும் மோட்சமடைதற்கு யோக்கியனாவான்" என்று மனுதருமசாஸ்திரம் ஆறாமத்தியாயத்திற் கூறுவதாலுமறியற்பாற்றாம்.

‡ சினமானது மனத்தினிடத்தெழும்விருப்பத்திற்குத் தடையுண்டாயபோதுஉண்டாவதாம். சினம் தமோகுணவியாபாரமாமாதலின், அதுசத்துவ குணமுடையராகவிருக்கும் நீத்தார்க்குஆகாதாயிற்று; ஆகவே, மிக்கசினத்தையுடையார் கலக்கமின்றிய சத்துவ குணமுடையராயிருத்தல் கூடாதென்க. "சாற்றுமுள் ளுவவிருப் பந்தடைப் படிலெழுஞ், சீற்றமே யுருவமா மெனையுமென் சிந்தைநோய, மாற்றுமோர் கொலையெனு மாதையுங் கலகனே, மாற்றல்சேர் மகனையு மாகொல்வெல் வார்களே" என்று பிரபோதசந்திரோதயம் கூறுவதும் இங்குக் கவனிக்கத் தக்கதாம்.

¶ வீடுபெற்றாரோ டொப்பர் என்றும பாடமுண்டு.

$ துறந்தாரெனனும் பன்மை வினையாலணையும் பெயரோடு துணையென்னும் ஒருமைப்பெயர் மயங்கி வந்தமையின், அத்தொடர் இரண்டுகண்ணுஞ் சிவந்தது என்பதுபோலப் பன்மை யொருமைமயக்கமாயிற்றென்க.

() அவ்விருவர் - கோபித்தவர், கோபியாதவர்.

அதிககோபமுடையார்க்கு ஞானம் பெறுதற்கு உரிய உயிர் இருப்ப தாயினும் (அவர்) மனக்கலக்கத்தினால் அந்த ஞானத்தை யடையாமை நிச்சயமாதலால், அவரை 'இறந்தாரனையர்' என்றும், கோபத்தைவிட்டவர்க்கு மரணமடைதற்குரிய வுடம்பு இருந்ததாயினும்,(அவர்)ஞானத்தினால் முத்தியை யடைவது நிச்சயமாதலால், அவரை 'துறந்தார் துணை' என்றும்சொல்லினார். துறந்தார் துணை என்பது பன்மையிலொருமை வந்த வழுவமைதி. இதனால் அவ்விருவர் பயனும் ஒருமித்துச் சொல்லப்பட்டது. சாதற்றன்மையொழிதல்-இனிப்பிறந்து சாதல்நீங்குதல், அஃதாவது முத்திபெறுதல்.

(க - து). அளவிறந்த கோபத்தை யுடையவர் செத்தாரோடொப்பர்; அதனை யொழித்தவர் முத்திபெற்றாரோடொப்பர். ()

10. Those, who give way to excessive anger, are no better than dead men; but those, who are freed from it, are equal to those who are freed (from death).

எட்டாவது அதிகாரம்.

## இன்னாசெய்யாமை—*Against inflicting suffering.*

பரி.—அஃதாவது தனக்கு ஒருபய னோக்கியாதல், செற்றம்பற்றியாதல், * சோர்வானாதல் ஒருயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. இன்னாசெய்தல் † வெகுளியோழியவும் நிகழுமென்பது அறிவித்தற்கு, இது வெகுளாமையின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது தனக்கு ஒருபயனைக்குறித்தாவது வைரம்பற்றியாவது, சோர்வினாலாவது ஓருயிர்க்குத் துன்பந்தருவனவற்றைச் செய்யாமையாம். இன்னாசெய்தல் வெகுளி ஒழியவும் உண்டாமென்பதையறிவித்தற்கு, இது (இன்னாசெய்யாமை) வெகுளாமையின்பின் வைக்கப்பட்டது. வைரம் - தீராக்கோபம்.

க. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

பரி.—(இ-ள்). ‡ யோகமாகிய சிறப்புத் தரும் அணிமா முதலிய

* சோர்வு - மறதி. † வெகுளி - கோபம்.

‡ "வாயுவிரண் டிந்தடுத்துப் புலனொடுக்கி யிலக்கின்மனம் வைத்தாதார, தேயமுணர்ந் தசைவைகொடாத தெய்வதங்க ளபிமுகமாய்த் திரும்பச் செய்து, போயதன்பின் பிரமபெலத் திந்துவமுந் திடைததிளைத்துப் பொருவில் சோதி, யாயதைப் பாவித்தல்" யோகமெனப்படும். யோகத்தால் எப்பேறுமுண்டாமென்பது "எப்பிணியு மகன்றிடுமெவ் வினையுமறுஞ் சித்தியெல்லா மெய்து மோங்கு,முப்புவனத் தினும்பெறுதற் கரியபொருளொன்றுமில முடிக்க வேண்டி, லப்பிரமா தியர்செயலு மனைக்கணத்தின் முடித்திடலா மாத லாலே, யொப்பரிய யோகமத மிதுபோலப் பிறிதொர்மத முண்டோ வென்றான்" என்னுஞ் செய்யுளாலுமறியப்படும்.

செல்வங்களைப் பிறர்க்கு இன்னாசெய்து பெறலாமாயினும், அதனைச் செய்யாமை ஆகமங்கள் கூறியவாற்றான் † மனத்தூயாரது துணிவு, ()

‡ உம்மை பெருமைமேற்று. சிறப்புடையதனைச் ¶ 'சிறப்பு' என்றும், அதன் பயிற்சியான $ வாயுவை வென்றெய்தப்படுதலின் * எட்டுச சித்திகளையும் 'சிறப்பீனுஞ் செல்வம்' என்றும், காமம், வெகுளி, மயக்கமென்னும் குற்றங்கள் அற்றமையான் 'மாசற்றார்' என்றுங் கூறினார். இதனால் தமக்கொரு பயனோக்கிச் செய்தல் விலக்கப்பட்டது.

தெளி:—சிறப்பு - யோகமாகிய சிறப்பு, ஈனும் - தருவனவாகிய, செல்வம் - (அணிமா முதலிய) செல்வங்களை, பிறர்க்கின்னா - பிறர்க்குத் துன்பந் தருவனவற்றைச (செய்து), பெறினும் - பெறலாமாயினும், (அத் துன்பந் தருவனவற்றை), செய்யாமை - செயயாதிருத்தல், மாசற்றார்- (ஆகமங்கள் சொல்லிய வழியால்) மனந்தூய்மை யானவர்களது, கோள் - துணிவாம், (எ - று).

பெறினும் என்னும் உம்மை எதிர்மறைப்பொருளது. சிறப்புடைய யோகத்தைச் 'சிறப்பு' என்றும், அந்த யோகாப்பியாசத்தால் வாயுவையடக்கி யடையப்படுதலால் அணிமாமுதலிய எட்டுச்சித்திகளையும் 'சிறப்பீனுஞ் செல்வம்' என்றும், காமம் வெகுளி, மயக்கமென்னுமுக்குற்றங்களும் நீங்கினமையினால் 'மாசற்றார்' என்றுங் கூறினார். இதனால் தமக்கொரு பிரயோசனத்தைக் குறித்துப் பிறர்க்குத் துன்பந் தருவனவற்றைச் செயதல் விலக்கப்பட்டது.

(க - து). எவ்வகைததாய பயனைப் பெறுவதா யிருப்பினும், பிறாககுத்தீமை செய்யாமையே பெரியோாகளது கொளகையாம்.

1. It is the determination of the spotless not to cause sorrow to others, although they could (by so causing) obtain the wealth which confers greatness.

† மாசற்றார் யாவர்க்கும் என்றும் பாடமுண்டு.

‡ யோகாப்பியாசத்தால் பெறப்படும் அணிமாமுதலிய ஐசுவரியங்களைப் பிறாக்குத் தீமைசெய்து பெறுதல முடியாததுபற்றி (பெறினும் என்னும்)உம்மை பெருமை மேற்று (மேலது) என்று கூறப்பட்டது

¶ சிறபபென்னும்பெயர் அதனையுடைய யோகத்திற் காயது ஆகுபெயராம்; இது விடாத விலக்கணையாம்.

$ வாயுவை வெல்லுதல் - பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ் செய்தல். இது பிராணாயாம மெனப்படும். இரேசகம் - பிராணவாயுவை மூக்கின் வலது துவாரவாயிலா விடுதல்; பூரகம் - பிராணவாயுவை மூக்கின் இடது துவாரவாயிலாக வள்ளுக்கிழுத்தல. கும்பகம-பிராணவாயுவை யுள்ளேயடக்குதல்.

* அணிமாமுதலிய (எட்டுச்) சித்திகளினிலக்கணங்களைக் கடவுள் வாழ்த்து ஒன்பதாவது செய்யுளின் குறிப்பிற் காண்க.

உ. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

பரி:—(இ - ள்). தம்மேற் செற்றங்கொண்டு ஒருவன் இன்னாதவற்றைச் செய்தவிடத்தும், மீண்டு தாம் அவனுக்கின்னாதவற்றைச் செய்யாமையும் அவரது துணிவு, (எ - று).

† இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அவ்வின்னாதவற்றை உட்கொள்ளாது விடுதல் செயற்பாலதெனபதாம்.

தெளி:—(இ - ள்). கறுத்து - (ஒருவன் தன்மீது) வைரங்கொண்டு, இன்னா - துனபந்தருவனவற்றை, செயதவக்கண்ணும் - செய்தவிடத்தும், மறுத்து - மீண்டு, இன்னா - (தாம் அவனுக்குத்) துன்பந் தருவனவற்றை, செய்யாமை - செய்யாமையும், மாசற்றார் - அக்குற்றமற்றவரது, கோள் - துணிவு, (எ - று).

செய்யாமையு மென்னும் இறந்தது தழீஇயவெச்சவும்மை செய்யுள் விகாரத்தால தொககுநின்றது. அத்துன்பந் தருவனவற்றை மனதிற் கொள்ளாமல் விடுவது செயயத்தகக தென்பதாம்.

(க - து). பெரியோர் தமக்குத் துன்பஞ் செய்தவர்களுக்குந் துன்பஞ் செய்யார் என்பது.

2 It is the determination of the spotless not to do evil even in return to those who have cherished enmity and done them evil.

ரூ. செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

பரி:—(இ - ள்). தான் முன்போரின்னாமை செயயாதிருக்கத் † தன்மேற் செற்றங் கொண்டவர்க்கும் இன்னாதவற்றைத் துறந்தவன் செய்யுமாயின், அச்செயல் அவனுக்குக் கடக்கமுடியாத இடும்பையைக் கொடுக்கும், (எ - று).

அவ்விடும்பையாவது தவமிழந்து பழியும் பாவமும் எய்துதல்.

தெளி:—(இ - ள). செய்யாமல்-(தான் முனபு துன்பந் தருவதொன்றைச) செய்யாதிருக்க, செற்றார்க்கும் (தன்மீது) வைரங்கொண்டவர்க்கும், இன்னாத - துன்பந் தருவனவற்றை, செய்தபின் - (துறந்தவன்) செயவானாயின், (அச்செயலானது), உய்யா - கடககமுடியாத, விழுமம் - இடும்பையை, தரும் - (அவனுக்குக்) கொடுத்கும், (எ-று)

† செய்யாமையும் என்றவும்மை 'பிறக்கின்னா செய்யாமையேயன்றி என்பதைத் தழுவிநிற்றலின், இறந்தது தழீஇய வெச்சவும்மையாயிற்று.

† தன்னைச்செற்றார்க்கும் என்றும் பாடமுண்டு.

அவ்விடும்பையாவது தவத்தையிழந்து பழியையும் பாவத்தையும் அடைதல்.

(க - து). காரணமின்றித் துன்பஞ் செய்தார்க்குந் துன்பஞ் செய்தல்கூடாது; செய்தால், அது பெருந்துன்பத்தைத் தரும் என்பது.

3. If an ascetic inflict suffering even on those who hate him, when he has not done them any evil, it will afterwards give him irretrievable sorrow.

ச. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

பரி.—(இ-ள்). தமக்கின்னாதவற்றைச் செய்தாரைத் துறந்தோர் ஒறுத்தலாவது அவர்தாமே நாணுமாறு அவர்க்கு இனிய வுவகைகளைச் செய்து * அவ்விரண்டனையும் மறத்தல், (எ-று).

† மறவாவழிப் பின்னும்வந்து கிளைக்குமாகலின், மறக்கற்பாலவாயின. ‡ அவரை வெல்லுமுபாயங் கூறியவாறு. இவை மூன்றுபாட்டானுஞ் செற்றம் பற்றிச் செய்தல் விலக்கப்பட்டது.

* அவ்விரண்டனையும்- பிறர் தமக்குச் செய்ததீமைகள், தாம் அவர்க்குச் செய்த இனியவுவகைகள் (சந்தோஷத்திற் கேதுவான வுபசாரங்கள்)ஆகிய இரண்டையும்.

† பிறர் தமக்குச்செய்த தீமைகளையும் தாம் அவர்க்கு (அவர் வெட்கப் படும்படி) செய்த இனியவுவகைகளையும் துறந்தார் மறககாதவிடத்து அவை பின்னும் ஞாபகத்திற்கு வநதுதோன்றுமாகலின், மறக்கத் தக்க வையாயின வென்க. இங்கே மறத்தலென்றது அச்செய்கைகள் சம்ஸ்கார வாயிலாக ஞாபகததிறகுவாராதொழிதலை. அனுபவத்தின் காரியமாய் எண்ணத்திற் கேதுவாயிருப்பது சம்ஸ்கார மெனப்படும். கள்ளாமை யதி காரததின் அவதாரிகையில் "புறததுப் போகாதுமடங்கி ஒருதலைப்பட்டு உயிரையேநோக்கற்பாலதாய அவர் (துறவிகள்) மனம்" என்றுகூறியிருத் தலினால் நீத்தார்கரு ஆதமசிந்தனையன்றி வேறுசிந்தனை யிருத்தல்கூடாதெ ன்பது நன்குவிளஙகும்; விளஙகவே, நீத்தார்க்கு வேறுசிந்தனை ஆத்மசிந்த னைக்குத் தடையாகுமென்க. பிறா தமக்குச் செய்ததீமையை யெண்ணும போது சினமிருந்து உயிரையே நோக்கியமைதலாயிருக்கும் மனமானது அமைதிகெட்டுக் கலக்கத்தை யடைதலினாலும், தமக்குக்கெடுதிசெய்தவர் களுக்குத் தாம்செய்த இனியவுவகைகளை யெண்ணும்போது தமது மேன் மைகாணப்பட்டு அதனால் அகங்காரிப்புண்டாகிக் கலக்கத்தை யடைதலி னாலும்,கலக்கம் மனம் ஒருமுகப்படாமைக்குக் காரணமாயிருத்தலினாலும், மனம் ஒருமுகப்படாதபோது ஆத்மசிந்தனை யுண்டாகாதிருத்தலினாலும் அவ்விரண்டுமே மறக்கத் தக்கவையாயின வென்க.

‡ அவரை—தமக்குத் தீமை செய்தவரை,

**தெளி.**—(இ-ள்). (தமக்கு) இன்னா - துன்பந்தருவனவற்றை, செய்தாரை-செய்தவர்களை, ஒறுத்தல் (துறந்தோர்) தண்டித்தலாவது, அவர் நாண- அவர் (தாமே) நாணும்படி, (அவருக்கு), நன்னயம்- இனிமையான மகிழ்ச்சிகளை, செய்து—, விடல்-(அவ்விரண்டையும்)மறத்தலாம், (எ-று).

மறவாதவிடத்துப் பின்னும் வந்து தோன்றுமாதலின், அவை மறக்கத்தக்கனவாயின. அவரைவெல்லுமுபாயஞ்சொல்லியபடி. இவை மூன்று பாட்டாலும் வைரம்பற்றிச் செய்தல் விலக்கப்பட்டது.

(க-து). துன்பஞ் செய்தார்க்கு இன்பஞ் செய்தல் அதுவே அவர்க்குத் தண்டனையாம் என்பது. (ச)

4. The (proper) punishment to those who have done evil (to you), is to put them to shame by showing them kindness, in return and to forget both the evil and the good done on both sides.

ரு. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை

பரி.—(இ-ள்) துறந்தார்க்கு $ உயிர்முதலியவற்றை உள்ளவாறு அறிந்த அறிவினான் ஆவதொரு பயனுண்டோ? § பிறிதோருயிர்க்கு வரும் இன்னாதவற்றைத் தம்முயிர்க்கு வந்தனபோலக் குறிக்கொண்டு காவாவிடத்து, (எ-று).

|| குறிக்கொண்டு காத்தலாவது நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் ¶ முதலிய தந்தொழில்களானும், () பிறவாற்றானும், உயிர்

$ உயிர்முதலியவற்றை யுள்ளவா றறிதலைப்பற்றிக் கள்ளாமை யதிகாரத்தின் ஆறாவது செய்யுளின் விசேடவுரையிற் காண்க.

§ பிறிதோருயிர்க்கு வரும் இன்னாதவற்றைத் தம்முயிர்க்கு வந்தன போலக் குறிக்கொண்டு காக்கவேண்டுமென்பது "பிறர்க்கிடை யின்னாவியற்றிடிற் றமக்குப் பிழைப்பற வெய்துமென் பதனை, அறிகுந ரறிஞ ராதலாலுயிர்க ளனைத்தையுந் தம்முயிர் போல, நெறியினிற் கருத லினியவா மைந்து புலனையு நெறியலா வழியிற், பொறியினிற் செலுத்தா தடக்குநன் குணர்ந்த புலமையோ ரொழுகவெனப் புகல்வார்" என்று காசிகாண்டம் கூறுவதாலு மறியப்படும்.

|| குறிக்கொண்டு-கவனம்வைத்து.

¶ முதலிய என்றதனால் தண்ணீர் கவர்தல், காறியுமிழ்தல், நெருப்பு மூட்டல் முதலியவற்றையுங் கொள்க.

() பிறவாற்றானும் (வேறுவழிகளாலும்). அவையாவன. "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்று விதியிருப்பதனால் அசத்தியங் கூறி யுயிரைக்காத்தல், தமது ஆற்றற் கேற்றவாறாக ஒருபிராணியை மற்றொரு பிராணி கொல்லா வண்ணஞ்செய்தல் முதலியனவா மென்க.

களுறுவனவற்றை முன்னேயறிந்து உறாமற் காத்தல். இது பெரும்பான்மையும் அஃறிணைக்கண் நுண்ணிய வுடம்புடையவற்றைப்பற்றி வருதலின் பொதுப்படப் 'பிறிதினோய்' என்றும், மறப்பான் அது துன்புறினும் நமக்கின்னா செயதலாமென்றறிந்து காத்தல்வேண்டு மாகலின், () அது செய்யாவழி ‡† 'அறிவினா னாகுவ துண்டோ' என்றுங் கூறினார். இதனாற் சோர்வாற் செய்தல் விலக்கப்பட்டது.

தெளி.—(இ-ள்). பிறிதின்-வேறோருயிருக்கு (வரும்), நோய்-துன்பந் தருவனவற்றை, தந்நோய்போல் - நம்முயிர்க்குவந்த துன்பங்கள்போல, போற்றாக்கடை- (குறிக்கொண்டு) காப்பாற்றாத விடத்து, அறிவினான்- (துறந்தார்க்கு உயிர்முதலியவற்றை உள்ளவாறு அறிந்த) அறிவினால், ஆகுவது - ஆகுமொருபயன், உண்டோ-உளதோ, (இல்லை), (எ-று).

குறிக்கொண்டு காப்பாற்றலாவது நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் முதலாகிய தமது தொழில்களாலும், மற்றையவற்றாலும் உயிர்களுடையும் துன்பங்களை முன்னமே அறிந்து அவை வாராமற்காத்தல். இத்துன்பம் பெரும்பான்மையும் அஃறிணையில் எறும்புமுதலாய சிறியவுடம்புடைய பிராணிகளைப்பற்றி வருதலால் பொதுப்படப் 'பிறிதினோய்' என்றும், மறப்பினால் அப்பிராணிகள் துன்பத்தை யடையினும் நமக்குத் துன்பஞ்செயதலாமென்று அறிந்து காத்தல்வேண்டு மாகலின், அதுசெய்யாத விடத்து 'அறிவினா னாகுவ துண்டோ' என்றும் சொல்லினார். இதனால் சோர்வினால துன்பந் தருவனவற்றைச் செய்தல் விலக்கப்பட்டது.

(க - து). அறிவினது பயன் பிறிதோருயிர்க்கு வருந்துன்பத்தைத் தனக்கு வந்ததுபோலக் கொள்ளுதலாம் என்பது.

5. What benefit has he derived from his knowledge, who does not endeavour to keep off pain from another as much as for himself?

௬. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

பரி.—(இ-ள்). மக்கட்கு இன்னாதனவென அனுமானத்தால் தானறிந்தவற்றைப் பிறன்மாட்டுச் செய்தலை மேவாமை துறந்தவனுக்கு வேண்டும், (எ-று).

‡ இன்பத்துன்பங்கள உயிர்க்குணமாகலின், அவை காட்சியளவை

() அது - காத்தல். † அறிவாற்பயனில்லை என்றும் பாடமுண்டு.

‡ உயிர்க்குணமான இன்பத்துன்பங்கள் பிரத்தியட்சப் பிரமாணத்தினால் அறியப்படாவாகலின், அவை அனுமானப் பிரமாணத்தினா லறியப்படுவனவாம். மலை முதலிய விடத்துப் புகையைக்கண்டு இங்கு நெருப்புண்டென்று ஊகித்தறிவது போலப் பிறரது முகவிலாசத்தையும் அஃதில்லாமையையுங்கண்டு, அவரது உள்ளத்தில் சுகமும் துக்கமுமுண்டென்று ஊகித்தறிதல் வேண்டுமென்க. ஓருயிரின் சுகதுக்கம் பிறிதோருயிர்க்குப் பிரத்தியட்ச மாகாதென்பது கருத்து.

யான் அறியப்படாமை யறிக. $ அறமும் பாவமும் உளவாவது மன முள ளுயவழியாகலான் 'உணர்ந்தவை' என்றார்.

தெளி:—(இ - ள்). இன்னாவென - (மனிதருக் குத்) துன்பந்தருவன வென்று, தானுணர்ந்தவை - (அனுமானப் பிரமாணத்தினால்) தான் அறிந்தவற்றை, பிறன்கண் - பிறனிடத்து, செயல்-செய்தலை, தன்னைமை-பொருந்தாமை, வேண்டும்-(துறந்தவனுக்கு) வேண்டும், (எ - று).

இனபத்துன்பங்கள் உயிர்க்குணமாகலின், அவை பிரத்தியட்சப் பிர மாணத்தினால் அறியப்படாமையறிக. அறமும் பாவமும் உண்டாவது மனமுளளுயவிடத்தாகலின் 'உணர்ந்தவை' என்றார்.

(க - து). தான் துன்பமென் றறிந்தவற்றைப் பிறனிடத்துச் செய்யாதிருத்தல் வேண்டும் என்பது.

6. Let not a man consent to do those things to another which he knows will cause sorrow.

எ. எனைத்தானு மெஞ்ஞான்றும யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

பரி.—(இ - ள்). மனத்தோடு உளவாகின்ற இன்னாத செயல்களை எக்காலத்தும் யாவர்க்குஞ் சிறிதாயினுஞ் செயயாமை தலையாய அறம், (எ-று).

ஈண்டு மனத்தா னாகாதவழிப் பாவமில்லையென்பது பெறாரும். ஆற் றலுண்டாய காலத்தும் ஆகாமையின் 'எஞ்ஞான்றும்' என றும், எளியார்க ளும் ஆகாமையின் 'யார்க்கும்' என்றும், செயல் சிறிதாயினும, பாவம் பெரி தாகலின் 'எனைத்தானும்' என்றும் கூறினார்.

தெளி:—(இ - ள்). மனத்தானாம-மனத்தோடு உண்டாகின்ற, மாணா-துன்பந் தருஞ்செயல்களை, எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், யார்க்கும்-

ஈண்டனுமானமாமாறு:—1 இராமன் இன்பமுடையான்; முகக்களிர் ச்சியுடையவனாயிருத்தலின்; யாவன் இன்பமுடையானல்லன் அவன் முகக் களிர்ச்சியுடையானல்லன், (இந்திரஜித்தையிழந்து வருந்தும்) இராவணன் போல.

2 இராவணன் துன்பமுடையான்; அவன் முகக்களிர்ச்சியின்றிய வனாயிருத்தலின்; யாவன் துன்பமுடையானல்லன் அவன் முகக்களிர்ச்சி யின்றியவனல்லன்' இராமன்போல.

$ ஒருவனுக்கு அற(தரும)மும் பாவமும் உண்டாவது அவன் மன முள்ளவனை விடத்தேயாதலால் 'உணர்ந்தவை' என்றார். இதன் தாற் பரியமாவது பாவமும் புண்ணியமும் புத்தி பூர்வகமாய்த் தீச்செயலையும் நற்செயலையும் புரிவதாலுண்டாகுமேயன்றி அபுத்தி பூர்வகமாய் அவற்றைச் செய்வதனாலுண்டாகா என்பது.

யாவர்க்கும், எனைத்தானும் - சிறிதாயினும், செய்யாமை - செய்யாதிருத்தல், தலை - முதன்மையான அறம், [எ-று].

* இங்குத் துன்பந்தருஞ்செயலை மனமறியாது செய்தவிடத்து அதனால் பாவமுண்டாவதில்லை என்பதுபெற்றாம். வல்லமையுண்டான காலத்திலுந் துன்பந்தருஞ்செயலைச் செய்தல் நன்மை யாகாமையால் 'எஞ்ஞான்றும்' என்றும், எளியார்க்கும் அதனைச்செய்தல் நன்மையாகாமையால் 'யார்க்கும்' என்றும், செயல் சிறிதாஞலும் பாவம் பெரிதாகலால்'எனைத்தானும்' என்றும் சொல்லினர்.

(க - து). எந்தக் காலத்திலும் எத்தன்மையோர்க்கும் தீமை செய்யாதிருத்தலே முதன்மையான தருமமாகும் என்பது.

7. It is the chief of all virtues not knowingly to do any person evil, even in the lowest degree and at any time

அ † தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

பரி.—(இ - ள்). பிறர்செய்யும் இன்னாதன தன்னுயிர்க்கு இன்னாவாந் தன்மையை அனுபவித்தறிகின்றவன் நிலைபேறுடைய பிறவுயிர்கட்குத் தானவற்றைச் செய்தல் என்னகாரணத்தான், (எ - று).

*"(பிரஹ்ம ஹத்திமுதலிய) இந்த மஹாபாதகங்களைக் குணமுள்ள பிராமணன் (மனம்) அறியாது செய்தால், அவன் பிராயச்சித்தஞ் செய்துகொண்டபின் அவனுக்கு அரசன் 500 பணம் தண்டம்விதிக்க";"பிராமணனொழிந்த மற்றக்குணமுள்ள மூன்று வருணத்தாரும் மஹாபாதகங்களை (மனம்) அறியாது செய்தால் அவர்களின் பொருளெல்லாவற்றையுங் கவருதலைத் தண்டமாக விதிக்க" என்று மனுதாமசாஸ்திரம ஒன்பதாவ தத்தியாயத்திற் கூறுவதும்,

"செய்துயிர்கட் கினிமை" என்னுங் கொலை மறுத்தல் செய்யுளினுரையில் திருப்போரூர்—சிதம்பர சுவாமிகள் "கொல்லாவிரதியாய் நடந்து வருங்காலத்து உன்னையறியாமல் வந்த கொலைததோஷமானது வேறொரு விதத்தால் நாசத்தையடையும் ; அஃதெதனாலென்னில், சற்குருவினது திருப்பாதத்தை நியமமாக வழிபட்டுச் செய்யும் அவனது ஏவலின் வலியாலெனக்கொள்க" என்று கூறுவதும் இங்கு நன்கு கவனித்தற் பாலனவாம்.

† "இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ, வன்சொல் வழங்கு வது" என்னுங் குறளு மிங்கறியத் தக்கதாம்.

† இவ்வாறே இவை பிறவுயிர்க்கும் இன்னாவென்பது ‡ அனுமானத்தா னறிந்துவைத்துச் செய்கின்ற 0 பாவங் கழுவப்படாமையின், இன்னாதனையான்வருந்தப் பின்னே வந்து வருத்துமென்பது ஆகமத்தானு மறிந்து ஒழியற்பாலனென்பது தோன்றத் 'தான்' என்றும், அத்தன்மையான் ஒழியாமைக்குக் காரணம் மயக்கமென்பது தோன்ற 'என்கொலோ' என்றுங் கூறினார். ‡ இவை மூன்று பாட்டானும் பொதுவகையான் விலக்கப்பட்டது.

தெளி.—(இ-ள்). தன்னுயிர்க்கு-(பிறர்செய்யும் துன்பந்தருஞ்செயல்கள்) தனதுயிர்க்கு, இன்னாமை - துன்பந்தருவனவாந் தன்மையை, அறிவான் - (அனுபவித்து) அறிகின்றவன், மன்னுயிர்க்கு - நிலைபெறுதலையுடைய பிறவுயிர்களுக்கு, இன்னா - அத்துன்பந்தருஞ்செயல்களை, தான் செயல் - தான்செய்வது, என்கொலோ-என்னகாரணத்தால், (எ - று).

† பிறர் செய்யுந் தீமைகள் தன்னுயிர்க்குத் துன்பந்தருந்தன்மையையனுபவித்தறிகின்றவன் இவ்வாறே (பிறர் செய்த தீமையால் நான் வருந்துவதுபோல) இவை (நான்செய்யும் தீமைகள்) பிறவுயிர்க்கும் இன்னா (துன்பந் தருவனவாகும்) என்பது அனுமானத்தால் அறிந்து வைத்து (அறிந்திருந்தும்)செய்கின்ற பாவம் கழுவப்படாமையின் (பிராயச்சித்தத்தால் நீக்கப்படுதலில்லாமையால்) இன்னாதன (பிறவுயிர்களுக்குத் துன்பமுண்டாகுமாறு யான் செய்ததீமைகள்) யான் வருந்தப்பின்னே (மறுமையில்) வந்து வருத்துமென்பது ஆகமப் (நூல்) பிரமாணத்தாலும் (இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளாய்க்,கரும்பார் கழுணியுட் சேர்வர்-சுரும்பார்க்குங், காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும்பூழுங், கூட்டுளாய்க் கொண்டுவைப் பார். அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித், துக்கத் தொழுநோ யெழுபவே - அக்கால், அலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற, பழவினை வந்தடைந்தக் கால் என்று) அறிந்து (பிறவுயிர்களுக்குத் தீமைசெய்தலை) ஒழியற்பாலன் (ஒழியக்கடவன்) என்பதுதோன்ற (விளங்க) த் 'தான்' என்றும்; அத்தன்மையான்(இம்மையில் பிறவுயிர்களுக்குச் செய்த தீச்செயல்கள் மறுமையில் வந்து தம்மைச் செய்தவனை வருத்துமென்பதை நூற்பிரமாணத்தினு லறிந்தவன்) (பிறவுயிர்களுக்குத் தீங்கு செய்தலை) ஒழியாமைக்குக் காரணம் மயக்கம் (அஞ்ஞானம்) என்பது தோன்ற 'என்கொலோ' என்றும் கூறினாரென்க.

‡ ஈண்டனுமானமாமாறு:—இப்பிராணி துன்புற்று வருந்துகின்றது; நாம் அடித்தல் முதலியகொடுஞ்செயல்களைச் செய்தமையின்; பிறர் செய்த கொடுஞ்செயலால் நாம் துன்புற்றுவருந்தியதுபோல என்பது.

0 இப்பாவம் என்றும் பாடமுண்டு.

‡ "இன்னாவென" "எனைத்தானும்" "தன்னுயிர்க்கின்னாமை" என்னுமுதலினையுடைய இம்மூன்று குறளாலும் பயனோக்கிச் செய்தல், செற்றம் பற்றிச்செய்தல், சோர்வாற் செய்தல் என்னு மூன்றற்கும் பொதுவாமாறு இன்னாசெயல் விலக்கப்பட்டதென்க.

இப்படியே இச்செயல்கள் பிறவுயிர்க்கும் துன்பந்தருவனவென்பதை அநுமானத்தால் அறிந்திருந்தும் செய்கின்ற பாவம் பரிகரிக்கப் படாமையால், துன்பந்தருமவைகள் யான் வருத்தத்தையடைய பின்னே வந்து தன்னை வருத்து மென்பதை (அநுமானத்தாலே யன்றி) ஆகமத்தா லும் அறிந்து அவற்றை விடக்கடவனென்பது தோன்றத் 'தான்' என் றும், அத்தன்மையான் (துன்பந்தருஞ் செயல்களை) ஒழியாமைக்குக் கார ணம மயக்கமென்பதுதோன்ற 'என்கொலோ' என்றும் சொல்லினார், இவை மூன்று பாட்டாலும் பொதுவாகையால் இனாசெயல் விலக்கப் பட்டது.

(க - து). பிறர்செய்யுந் தீமை தனதுயிர்க்குத் துன்பந்தரு வதா யிருத்தலை யனுபவித்தறிகின்றவன் பிறவுயிர்க்குத் தீமை செய்தல் அறியாமையேயாம் என்பது.

8. Why does a man inflict upon other creatures those sufferings, which he has found by experience are sufferings to himself?

௩௯. $ பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

பரி.—(இ - ள்). துறந்தவர் பிறர்க்கின்னாதனவற்றை ஒருபகலது முற்கூற்றின்கட் செய்வாராயின், தமக்கின்னாதன அதன் பிற்கூற்றின்கண் அவர்செய்யாமற் றாமேவரும், (எ - று).

¶ முற்பகல் பிற்பக லென்பன முன் பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. ‡ தவமழிதலின், அங்ஙனங் கடிதினும் எளிதி

$ "நெடியது காண்கலாய் நீயளியை நெஞ்சே, கொடியது கூறினாய் மன்ற - அடியுளே - முற்பகற் கண்டான பிறன்கேடு தன்கேடு, பிற்பகற் கண்டு விடும்" என்பது பழமொழி.

¶ பகல்முன் பகல்பின் என்பன முறபகல் பிற்பகல எனமாறி நின்ற ஆறும் வேற்றுமைத்தொகைச்சொற்கள். இவை பகலினது முன், பகலினது பின் எனவிரியும். இங்ஙனம் மாறி நிற்பது இலக்கணப் போலியெனப் படும். "நிலைமொழி வருமொழிகள் முன்பின்னாக மாறி நிற்பன இலக் கணப்போலி" என்பது நன்னூல்விருத்தியுரை. "தற்புருடத்தொகை" என்னுஞ் செய்யுளி னுரையில் பிரயோக விவேக நூலார் "பரிமேலழகர் முற்பகல் பிற்பகல் என்பனவற்றை முன்பின்னாகத்தொக்க ஆறும் வேற்று மைத்தொகையென்பர். வடநூலார்.முன்னின்ற மொழிபிரதமையாகலின், பிரதமா தற்புருடனென்பர்" என்று கூறுவர்.

‡ துறந்தவர் பிறர்க்குத்துன்பந் தருவனவற்றைச் சினங்காரணமாகச்செ ய்தலால் அவரது தவமானதழிந்து விடுகின்றது; அஃதழிந்து விடுவதனுஞ்

னும் வரும்; அதனால் அவைசெய்யற்கவென்பதாம். † இனித் தானே வருமென்பது பாடமாயின், அச்செயல்தானே தமக்கின்னாதனவாய் வருமென உபசாரவழக்காக்கி, ஆக்கம் வருவித்துரைக்க.

தெளி.—(இ-ள்). (துறந்தவர்) பிறர்க்கு—அன்னியர்க்கு, இன்னா-துன்பந் தருவனவற்றை, மூற்பகல்-ஒரு முகூர்த்தத்தினது முற்பாகத்தில், செய்யின் - செய்வாராயின், தமக்கு—,இன்னா-துன்பந்தருமவைகள், பிற்பகல்-அம்முகூர்த்தத்தினது பிற்பாகத்தில்,(அவர்செய்யாமல்) தாமேவரும்-.

பகல்முன் பகல்பின் என்பன முன்பின்னாகமாறி (ஆறனுருபு தொக்கு) முற்பகல் பிற்பகல் எனவந்தன. (பிறர்க்குத்துறந்தவர் துன்பங்கள் தருவனவற்றைச செய்தலால் தமது) தவமழிந்து போதலின், அவ்வாறு (துன்பங்கள்) விரைவிலும எளிதிலும் வரும்; அதனால் துறவிகள் அத்துன்பங

---

அங்ஙனம்(அப்படி அஃதாவது மூற்பகலிற் பிறாக்குத் துன்பஞ் செய்தால் பிற்பகலில் அதுகாரணமாகத் துன்பஞ்செய்தவர்க்குத் துன்பம்)விரைவாகவும் எளிதாகவும வரும; அதனால் (முற்பகலிற பிறர்க்குத் தீமையைச் செய்தால் பிற்பகலில் அது வாயிலாகத் தீமை செய்தவர்க்குத் தீமை விரைவாகவும் எளிதாகவும் வருவதாக விருத்தலால்) அவை (பிறாக்கின்னாதன வற்றைச) செய்ய வேண்டாம் என்பதாம, "தபோதனர்களுஞ் சினமெனும், பாவமுற் றயலுளோர் பதைபதைத துபிரிறச,சாபமிட் டனையர்தந்தவமும் விட் டிடுவரே" என்று மெய்ஞ்ஞானவிளக்கங்கூறுவதும், "கோபத்தினாலுண்டானஎட்டுத்துக்கங்களாவன: புறங்கூறுதல், துணிவு, துரோகம்,பொறாமை,பிறர் குணத்தைச சகியாமை, பிறாபொருளை யபகரித்தல், காரணமின்றியடித்தல், திட்டுத லெனவெட்டாம்" என்று மனுதரும சஸ்திரம் 7-வது அத்தியாயத்திற்கூறுவதும், இங்கறியத் தக்கனவாம். இதனால்பிறாக்குத் தீமையை யளவுகடந்து செய்தவருக்கு இம்மையிலேயே விரைவாகவும் எளிதாகவும் துன்ப முண்டாகுமென்பது பெறப்படுகின்றதென்க.

† தாமேவரும் என்னாது தாமேவரும என்று பாடங் கூறுவாரு மிருத்தல் பற்றித் 'தானே வருமென்பது பாடமாயின்' எனறு பாடபேதங்கூறி அதற்குப்பொருள (துறந்தவர் பிறர்குத் துன்பந்தருஞ் செயலை யொரு பகலது முனபாகத்தின்கண் செய்வாராயின்) அசசெயல்தானே (அப்பகலது பின்பாகததின்கண்) தமக்குத் துன்பநதருவனவாய்வரும் என்று உபசாரவழககாக்கி யாக்கம் வருவித்துரைத்துக்கொளக என்றுகூறினரென்க. அசசெயலால் தமக்கு இன்னாதன வருமென்று (பிறர்க்குத்தீமைசெய்தலைக் காரணமாகவும் அதனால் தமக்கு இன்னாதன் வருதலைக்காரியமாகவும்) கூறாது, அச்செயல் தானே தமக்கு இன்னாதனவாய் வரும் என்று கூறியது உபசாரவழக்காமென்க. அசசெயலால் வரும் இன்னாதனவற்றை அச்செயலே இன்னா என்று கூறினமையின், இது காரணங் காரியமாய உபசாரவழக்காம். தமக்கு இன்னாதனவாய் என்பதன்கணுள்ள ஆய் என்பது ஆக்கச்சொல்லாம்.

தருஞ்செயல்களைப் பிறர்க்குச் செய்யாதிருக்கக் கடவரென்பதாம். முகூர்த்தம்-இரண்டுநாழிகை.

(௯ - து). பிறர்க்குத் தீமை செய்பவர்க்கு அத்தீமையின் பயனான துன்பம் விரைவாகவும் எளிதாகவும் வருமென்பது.

9 If a man inflict sorrow upon others in the morning,* it will come upon him unsought in the very evening.

---

௧௦. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

பரி.—(இ-ள்). இன்னாதனவெல்லாம் பிறிதோருயிர்க்கு இன்னாதன செய்தார் மேலவாம்; அதனால், தம்முயிர்க்கு இன்னாதன வேண்டாதார் பிறிதோருயிர்க்கு இன்னாதன செய்யார், (எ-று).

* உவர்நிலத்து விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவேயாகலின்

* உவர் (உப்பு) நிலதது விளைவித்திட்டார்க்கு (விளைவதற்குத் தகுதியான விதையை விதைத்தவர்களுக்கு) விளைவும் அதுவேயாகலின் (விளைதலும் அந்நிலத்தின் தன்மையாகவே யிருத்தலினால்).

உவர்நிலத்தில் விளைபயன் கொள்ளும்படி கீரைவிதை முதலியவற்றை விதைததவர்களுக்கு அவ்விதை காரணமாக வுண்டாகும் விளைவும் அவ்வுவர்நிலத்தின் தன்மையதாகவே யிருத்தல்போன்று, பிறிதோருயிர்க்குத் துன்பந்தருஞ் செயல்களைச் செய்சவர்க்கு அது காரணமாக வரும் பயனும் துன்பமேயாகும என்பது கருததாமென்க. (உவர்நிலம் என்பது பிறிதோருயிர்க்குத் தீமை செயயப்பழகிய வுள்ள மென்றும், விளைவித்திடுதல் என்பது பின தீமையை புண்டுபண்ணும் தீவினையை அவ்வுள்ளத்தில் சம்ஸ்கார மாக்குதலென்றும், விளையும் அதுவே யாதல் என்பது அச்சம்ஸ்கார வாயிலாகவரும் தீமையும் அவ்வுள்ளத்தின், தனமையதாகவேயிருக்குமென்றும்கொள்ளவேண்டுமென்க) திருக்கோவையாரின் "தினைவித்து" என்னுஞ் செய்யுளிலுள்ள "வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே" என்பதும், தினையைவிதைத்தவன் தினையை யறுப்பான, வினையை விதைத்தவன் வினையை யறுப்பான் என்னும் பழமொழியும், இங்குக் கவனிக்கத்தக்கனவாம்.

உவர்நிலத்து என்பதற்குப் பிரதியாக உயிர்நிலதது என்றும் பாடமுண்டு. அப்பாடத்திற்குப் பொருள் உயிராகிய நிலத்தில் விளைவித்திட்டார்க்கு - (சுகதுக்கங்களை யுண்டுபண்ணும் நல்வினை தீவினைகளின் சம்ஸ்காரத்தை யுண்டுபண்ணினவர்களுக்கு) விளைவும் அதுவே யாகலின் (பின் வரும் பயனாகிய சுகதுக்கங்களும் அச்சம்ஸ்காரத்திற்கேற்ற வண்ணமே யுண்டாகுமாதலால்) என்பதாம்.

'நோயெல்லா நோய்செய்தார் மேலவாம்' என்றார். இது * சொற்பொருட் பின்வருநிலை. இவை யிரண்டுபாட்டானும் † அது செய்தார்க்கு வரும் தீங்கு கூறப்பட்டது.

தெளி—(இ-ள). நோயெல்லாம் - துன்பந்தருவனவெல்லாம், நோய் செய்தார் மேலவாம்- (பிறிதோருயிர்க்குத்) துன்பந்தருவனவற்றைச் செய்தவர் மேலனவாம், (அதனால்), நோயின்மை வேண்டுபவர் - (தம்முயிர்க்குத்) துன்பந்தருவனவற்றை விரும்பாதவர், நோய் - (பிறிதோருயிர்க்குத்) துன்பந்தருவனவற்றை, செய்யார் - செய்யமாட்டார், (எ-று).

உவர்நிலத்தில் விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவேயாகலால் 'நோயெல்லா நோய்செய்தார் மேலவாம்' என்றார். இது சொற்பொருட் பின் வருநிலை யணி. இவை யிரண்டு பாட்டாலும் அது செய்தவர்க்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது.

(க - து). தாம் துன்பமடையாதிருத்தலை விரும்புவோர் பிற வுயிர்களுக்குத் துன்பஞ் செய்யார் என்பது.

10. Sorrow will come upon those who cause pain to others; therefore, those who desire to be free from sorrow, give no pain to others.

ஒன்பதாவது அதிகாரம்.

## கொல்லாமை—Against destroying Life.

பரி—அஃதாவது ‡ ஐயறிவுடையன முதல் ஓரறிவுடையன

சீவக சிந்தாமணி முத்தியிலம்பகம நரககதித்துன்பத்தில் "வெவ்வினை செய்யு மாந்த ருயிரொனு நிலத்து வித்தி, யவ்வினை விளையு ளுண்ணு மவ் விடத் தவர்க ளென்பம்" என்று கூறுகின்றது. அதற்குப்பொருள் நச்சினார்க் கினியர் "தீவினையைச செய்யுமாந்தர் தமது உயிரொனனு நிலத்தே யத தீவினையை விதைதது அத்தீவினையின் பயனை நுகரும்அந்நரகத்திடத்தே அந்நரகர் படுந்துன்பம்" என்று கூறியிருக்கின்றார்.

* நோய் என்னும்சொல் பலமுறைவந்தும் பொருள்வேற்றுமை யின்றி யிருததலால், இக்குறள் சொற்பொருட்பின் வருநிலையணி யாம். சொற்பொருட்பின் வருநிலையணியாவது முன்னர் வந்த சொல்லும்பொரு ளும் பின்னர்ப்பலவிடத்தும வருவதாம்.

† அது - பிறிதோருயிர்க்குத் தீமை.

‡ ஐயறிவுடையன முதல் ஓரறிவுடையன ஈறுய வுயிர்கள் - ஐயறி வும், நாலறிவும், மூவறிவும், ஈரறிவும் ஓரறிவுமுறையே யுடைய பிராணி

றுய உயிர்களைச் சோர்ந்துங் கொல்லுதலைச் செய்யாமை. † இது ‡ மேற்கூறிய அறங்களெல்லா வற்றினுஞ் சிறப்புடைத்தாய்க் ¶ கூறுத வறங்களையும் அகப்படுத்தி நிற்றலின், இறுதிக்கண் வைக்கப்பட்டது.

கள். சப்த பரிச ரூப ரச கந்தங்களையறிவது ஐயறிவுயிரென்றும், பரிச ரூப ரச கந்தங்களை யறிவது நாலறிவுயிரென்றும், ரூப ரச கந்தங்களை யறிவது மூவறி வுயிரென்றும், ரச கந்தங்களை யறிவது ஈரறிவுயிரென்றும், பரிசமாத்திரமறிவது ஓரறிவுயிரென்றும் அறிக. சப்தம் செவியாலும், பரிசம் துவக்காலும், ரூபம் கண்ணாலும், ரசம் நாக்காலும், கந்தம் மூக்காலும் அறியப்படுவனவாம்.

"புன் (புல்) மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்"
"முரணந் தாதிநா வறிவொடு ரறிவுயிர்" (முரண்-இப்பி; நந்து-சங்கு).
"சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்" (சிதல்-கறையான்).
"தும்பிவண் டாதிகண் ணறிவினு லறிவுயிர்".

"வானவர் (தேவர்) மக்கள் (மனிதர்) நாகர் (நரகத்திலிருப்போர்) விலங்கு (மிருகம்) புள் (பறவை), ஆதி செவியறிவோ டையறி வுயிரே" என்று நன்னூல் கூறுகின்றது.

நன்னூல் விருத்தியுரைகாரர், "ஆசிரியர் தொல்காப்பியர் 'மக்க டாமே யாறறி வுயிரே' எனக் கூறியிருக்க, மக்கள் முதலியோரை ஐயறிவுயிரெனக் கூறல் மாறுகொளக் கூறலாம் பிறவெனின், மக்கள் முதலியோர் மனவறிவோடு ஆறறி வுயிரென்பது நோக்கியன்றே முன்னர் 'மக்க டேவர் நரகருயர்திணை' எனக்கூறிப் போந்ததூஉ மாதலின், இங்ஙனம் ஐம்புலன் மாத்திரையே நுகரும் அறிவுடைய மக்கள் முதலியோரை விலங்கு முதலியவற்றோடு எண்ணி ஐயறிவுயிரெனக் கூறினரென உய்த்துணர்ந்து கொள்க." என்று கூறியிருக்கிறார் "மாவு மாக்களு மையறி வினவே" என்னும் (தொல்காப்பியச்) சூத்திரவுரையில் "மாக்களெனப்படுவார் மனவுணர்ச்சி யில்லாதார்" என்றும், 'மக்க டாமே யாறறி வுயிரே' என்னும் (தொல்காப்பியச்) சூத்திரவுரையில் "மக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வேயன்றி மனமென்பதோ ரறிவுமுடையர்" என்றும், மாக்களுக்கும் மக்களுக்கும் வேற்றுமை நச்சினார்க்கினியர் கூறியிருக்கின்றனர். மனவுணர்வு பரலோகபுத்தி. மிருக முதலியவற்றிற்கு இகலோக இச்சையேயன்றிப் பரலோக இச்சையில்லாமையினால், இகலோக இச்சையும் பரலோக இச்சையுமுடைய மனிதர் அவற்றினும் சிறந்தவராயினரென்க.

† இது - கொல்லாமையென்னு மிவ்வதிகாரம்.

‡ மேற்கூறிய அறங்கள்—முன்னர்க் கூறியுள்ள அருளுடைமை முதலியன.

¶ கூறுத அறங்கள்—சாந்திராயண விரத முதலானவை.

தெளி.—அஃதாவது ஐயறிவுடையவை முதல் ஓரறிவுடையவை யீறாகவுடைய உயிர்களை மறந்தும் கொல்லுதலைச் செய்யாமையாம். இது முற்கூறிய அறங்களெல்லாவற்றினும் சிறப்புடையதாய்ச் சொல்லாதொழிந்த அறங்களையும் தன்னுள் அடக்கி நிற்கையால், விரதங்களின் முடிவில் வைக்கப்பட்டது.

க. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

பரி.—(இ-ள்) அறங்களெல்லாமாகிய செய்கை யாதென்று வினவின், அஃது ஒருயிரையுங் கொல்லாமையாம், அவற்றைக் கொல்லுதல் பாவச்செய்கைகள் எல்லாவற்றையுந் தானே தரும் ஆதலான்.

$ அறம் - சாதியொருமை. § விலக்கியது ஒழிதலும் அறஞ்செய்தலா மாகலின், கொல்லாமையை 'அறவினை' என்றார், ஈண்டுப் பிறவினை யென்றது † அவற்றின் விளைவை. கொலைப்பாவம் விளைக்குந் துன்பம் ‡ ஏனைப்பாவங்களெல்லாங் கூடியும் விளைக்கமாட்டா என்றவாறு. $ கொல்லாமைதானே பிறவறங்களெல்லாவற்றின் பயனையுந் தருமென்று § மேற்கோள்கூறி, அதற்கேது எதிர்மறைமுகத்தாற் கூறியவாறாயிற்று.

$ அறம்-ஈறுதோன்றாத சாதியொருமை. ஒருமைப் பன்மையீறாக மேல் வந்து முடிக்குஞ் சொல்லின்றி தானே பன்மைப்பொருளை யுணாத்துஞ்சொல் சாதியொருமையெனப்படும்.

§ "அறவினை யாதெனிற்கொல்லாமை; நோன்பென் பதுவே கொன்றுதின் னாமை; அழுக்காறாமை, வெகுளாமை, பெரியாரைப் பிழையாமை முதலாக விலக்கினவற்றைச் செய்யாமையே நல்வினைசெய்தல்" என்பது இலக்கணக்கொத்து.

† அவற்றின் விளைவை—பாவச்செயல்களாலுண்டாகுந் துன்பங்களை.

‡ ஏனைப்பாவம்—பிறர்மனைவியை விரும்புதல், கட்குடித்தல், பிறர் பொருளைத் திருடுதல், சூதாடல் முதலிய செய்கைகளாலுண்டாகிய பாவங்கள்.

$ "ஆனை யடியு ளடங்கா வடியில்லை தானதுபோ னிற்கின்ற தன்மை தா-னூனுயிரைக், கொல்லா வறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கு, மெல்லா வறமு மிசைந்து" என்பது பெருந்தேவனார் பாரதம்.

§ மேற்கோளெனினும் பிரதிஞ்ஞையெனினுமொக்கும். மேற்கோளாவது பக்கத்தைத் துணிபொருளுடையதாகக் கூறுவது அறவினை யாதெனிற் கொல்லாமை என்பது மேற்கோள் இங்குக் கொல்லாமை (சொல்லாமை தானே) என்பது பட்சம். அறவினை (பிறவறங்க ளெல்லாவற்றின் பயனையுந்தரும்) என்பது துணிபொருள்.

தெளி.—(இ-ள்.) அறவினை-அறங்களெல்லா மாகியசெய்கை, யாதெனின் - யாதென்று வினவினால், (அது), கொல்லாமை-(ஒருயிரையும்)கொல்லாமையாம், கோறல்-(அவற்றைக்) கொல்லுதல், பிறவினையெல்லாம்-பாவச்செய்கைகளெல்லாவற்றையும், தரும்-(தானே) தரும், (ஆதலால்), (எ-று.)

அறம்- சாதியொருமைப் பெயர். விலக்கியதைச் செய்யாமையும் அறஞ்செய்தலாம்; ஆதலால், கொல்லாமையை 'அறவினை' என்றார். இங்குப் பிறவினையென்றது அவ்வினைகளின் விளைவை. கொலைப்பாவம் விளைக்குந் துன்பத்தை மற்றைப் பாவங்களெல்லாம் கூடியும் விளைக்கமாட்டாவென்பதாம். கொல்லாமை தானே ஏனையவறங்களெல்லாவற்றின் பயனையுந் தருமென்று மேற்கோள் சொல்லி, அதற்குக் காரணம் (கோறல் பிறவினையெல்லாந் தரும் என) எதிர்மறை முகத்தாற் சொல்லியவாறாயிற்று.

(க-து.) பிராணிகளைக் கொலைசெய்வதால் வரும் பாவம் மிகக் கொடியதாயிருத்தலால், அதனைச் செய்யாமையே சிறந்த அறச்செய்கையாம் என்பது.

1. Never to destroy life is the sum of all virtuous conduct. The destruction of life leads to every evil.

உ. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

பரி.—(இ-ள்). உண்பதனைப் பசித்தவுயிர்கட்குப் பகுத்துக்கொடுத்துண்டு * ஐவகை யுயிர்களையும் ஓம்புதல் அறநூலுடையார் தொகுத்தார்க்குத் தொகுத்த அறங்களெல்லாவற்றினுந் தலையாய அறம், (எ-று.)

பல்லுயிரும் என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. ஓம்புதல் † சோர்ந்துங் கொலை வாராமற் குறிக்கொண்டு காத்தல்.

'கொல்லாமை தானே பிறவறங்களெல்லாவற்றின் பயனையுந் தரும் என்பதற்கு ஏது (காரணம்) கோறல் பிறவினையெல்லாந் தரும் (தருதலால்)என்று எதிர்மறையாகக் கூறியவாறும். கொல்லாமைக்கு எதிர்மறை கோறலாகலின் இங்குக்கோறல் எதிர்மறையாயிற்று.

கொல்லாமை தானே பிறவறங்களெல்லா வற்றின் பயனையுந் தரும் என்பது பிரதிஞ்ஞை; கோறல் பிறவினையெல்லாந் தருதலால் என்பது எதிர்மறை ஏது.

* ஐவகையுயிர்—இவ்வதிகாரத்தி னவதாரிகையிற் கூறிய ஐவகைப் பிராணிகள்.

† மறந்தும் கொலைவாராதபடி கவனங்கொண்டு ஐவகைப்பிராணிகளையுங் காப்பாற்றுதல். துறவிகளுக்குக் கொல்லாவிரதம் அவசியமென்பது மனுதர்மசாஸ்திரம் ஆறுவதத்தியாயத்தில் "இரவிலும் பகலிலும் தனக்

† அதற்குப் 0 பகுத்துண்டல் இன்றியமையா வுறுப்பாகலின், அச்சிறப்புத் தோன்ற $ அதனை இறந்தகால வினையெச்சத்தாற்கூறினர். ¶ எல்லா நூல் களிலும்நல்லனவெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக்கூறுதல் இவர்க்கியல் பாகலின், ஈண்டும் பொதுப்பட 'நூலோர்' என்றும், அவரெல்லார்க்கும் ஒப்பமுடிதலான், இது || 'தலை' என்றுங் கூறினர்.

தெளி:—(இ-ள்). பகுத்து - (உண்பதனைப் பசித்த உயிர்களுக்குப்) பங்கிட்டுக்கொடுத்து, உண்டு-, பல்லுயிர் - ஐவகையுயிர்களையும், ஓம்புதல்—காப்பாற்றுதல், நூலோர்-அறநூலுடையார், தொகுத்தவற்றுளெல்லாம்—(துறந்தவர்க்குத்) தொகுத்துள்ள அறங்களெல்லாவற்றினும், தலை-முதன்மையான அறமாம், (எ-று).

பல்லுயிரும் என்னும் முற்றும்மை செய்யுள்விகாரத்தாற்றொக்குநின்றது. ஓம்புதல்-மறந்தும் கொலைவாராமற் குறிக்கொண்டு காத்தல். அதற்குப் பகுத்துண்ணுதல் அவசியம் இருக்கவேண்டிய அங்கமாதலால், அச்சிறப்புத தோன்ற அதனைப் 'பகுத்துண்டு' என்று இறந்தகால வினையெச்சத்தினாற் கூறினர். எல்லா நூல்களிலும் நல்லவைகளை யெல்லாமெடுத்து எல்லாருக்கும பொதுப்படச் சொல்லுதல் இந்நூலாசிரியருக்கு இயல்பாதலால், இங்கும் பொதுப்பட 'நூலோர்' என்றும், அவரெல்லாருக்கும் ஒப்ப முடிதலால், பகுத்துண்டு பல்லுயி ரோம்புதலென்னு மிதனைத் 'தலை' என்றும் சொல்லினர்.

(க - து). உண்பவற்றைப் பசித்த வுயிர்களுக்குப் பங்கிட்டுண்டு பலவகை யுயிர்களையுங் காப்பாற்றுதலே அறங்களெல்லாவற்றினும் மேலாய அறமாம்.

குத் தெரியாமையால் யாதாவதொரு பிராணி இறந்துபோவதனாலுண்டாகும் பாவம்போவதற்காக ஸ்நானஞ்செய்தவுடனே ஸந்நியாசி ஆறுபிராணாயாமஞ்செய்தல் வேண்டும்''என்று கூறுவதனாலும்நன்குவிளங்கும். "கொல்லாவிரதம் குவலயமெல்லாமோங்க, எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே'' என்று தாயுமானவர் கூறுவது மிங்கறியத்தக்கது.

† அதற்கு—சோர்ந்தும் கொலைவாராமற் குறிக்கொண்டு காத்தற்கு.

0 உண்ணுந் தொழிற்கு நீராடுந் தொழில் அங்கமாதல்போன்று பல்லுயிர் ஓம்புந்தொழிற்குப் பகுத்துண்ணுந் தொழில் அங்கமாமென்க.

$ அதனை யிறந்தகால வினையெச்சத்தாற் கூறினர்—பகுத்துண்டலைப் பகுத்துண்டு என்று இறந்தகால வினையெச்சத்தாற் கூறினர்.

¶ "ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின், அன்றென்ப வாறு சமயத்தார்- நன்றென, வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார், முப்பான் மொழிந்த மொழி'' :—திருவள்ளுவமாலை.

|| தலையாய வறம் என்றுங் கூறினர் என்றும் பாடமுண்டு.

2. The chief of all (the virtues) which authors have summed up, is the *partaking* of food that has heen shared with others, and the preservation of the manifold life of other creatures.

---

ரு. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

பரி.—(இ-ள்). நூலோர் தொகுத்த அறங்களுள் † தன்னோ டிணை ப்பதின்றித் தானேயாக நல்லது கொல்லாமை. அஃதொழிந்தால், பொய்யாமை அதன்பின்னே நிற்க நன்று, (எ-று).

*நூலோர் தொகுத்த அறங்களென்பது ‡ அதிகாரத்தான் வந்தது. அதி காரங் கொல்லாமையாயினும், §§ மேற் 'பொய்யாமை பொய்யாமை யாற் றின்' எனவும், 'யாமெய்யாக் கண்டவற்று ளில்லை' எனவுங் கூறினாராக லின், இரண்டறத்துள்ளும் யாது சிறந்ததென்று ஐய நிகழுமன்றே, அது நிகழாமைப்பொருட்டு, ஈண்டு 'அதன் பின்சாரப் பொய்யாமை நன்று' என்றார்; முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாகலின். †† அதனைப்*

*† தன்னோ டிணையொப்ப தின்றி என்றும பாடமுண்டு. இதற்குத் தன்னோடு ஒப்பதும் மிக்கதுமிலலாம லென்று பொருள் கொள்க. இணை என்பது ஒப்பது என்னும் பொருளை யுணர்த்தலால், ஒப்பது என்பதற்கு மிக்கது என்று பொருள் கொள்ளப்பட்டது.*

*‡ கொல்லாமையென்னு மிவ்வதிகாரத்திற் கியையவந்ததென்பது. இவ்வதிகாரத்தி னிரண்டாங்குறளில் 'நூலோர் தொகுத்தவற்று ளெல் லாந் தலை' என்றுள்ளதும் இங்குக் கவனிக்கத் தக்கதாம்,*

*§§ வாய்மை யதிகாரத்தில் 'பொய்யாமை பொயயாமை யாற்றி னறம் பிற, செய்யாமை செயயாமை நனறு' என்றும், 'யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும், வாய்மையி னல்ல பிற' என்றும் பொய்பேசா மையே எல்லாவறஙகளிலும் சிறந்ததாகக கூறினாரதலால், பொய்யாமை கொல்லாமையென்னும் இரண்டறஙகளுள்ளும் யாது சிறப்புடையதுஎன்று சந்தேகமுண்டாகுமல்லவா, அச்சந்தேக முண்டாகாதபடி யிஙகு 'ஒன்றாக நல்லது கொல்லாமை' என்று கொல்லாவிரதத்தை யெடுத்துக்கூறி, (அதற் கடுத்தது பொய்யாமையாகிய விரதம என்று விளக்க) 'அதன் பின்சாரப் பொய்யாமை நன்று' என்று கூறினார்; (முன்னுண்டாய காதினும் பின் னுண்டாய கொம்பு உறுதியுடைதா யிருத்தல் போன்று) முன்னர்க் கூறிய பொய்யாமையாகிய விரதத்தைப் பார்க்கினும் பின்னர்க்கூறிய கொல்லாமையாகிய விரதம் உறுதியுடைதா யிருததலெனன்க. இதனால் ஒன்றைப்பற்றி முற்கூறும் விதியிலும் பிற்கூறும்விதி யுறுதி யுடையதா மென்பது பெற்றாம். இவ்வாறு வருதலை மனுமுதலிய நூல்களிற் காண்க.*

*†† அதனை(பொய்யாமையைப்)பின்சார நன்று என்றது(யாது பற்றி யெனின்) நன்மையுண்டாக்கு மிடத்துப் பொய் பேசுதலும் மெய்பேசுத*

பின்சார நன்றென்றது, நன்மை பயக்கும் வழிப் பொய்யும் மெய்யாயும், தீமை பயக்கும் வழி மெய்யும் பொய்யாயும், † திரிந்துவருதலா னென வுணர்க. இவை மூன்று பாட்டானும் இவ்வறத்தினது சிறப்புக் கூறப் பட்டது.

தெளி.—(இ-ள்). (நூலோர் தொகுத்துள்ள அறங்களுள்) ஒன்றாக- (தன்னோ டொப்பதில்லாமல்) தானேயாக, கொல்லாமை—, நல்லது - நன் றாம், (அது நீங்கினால்), பொய்யாமை - பொய்பேசாமையானது, அதன் பின்சார - அதன் பின்னேநிற்க, நன்று-நல்லது (எ-று).

நூலோர் தொகுத்துள்ள அறங்கள் என்பது கொல்லாமை யென்னும் அதிகாரத்தால் வந்தது. அதிகாரங் கொல்லாமையாயினும் முன் 'பொய் யாமை பொய்யாமை யாற்றின்' என்றும், 'யாமெய்யாக் கண்டவற்று ளில்லை' என்றும், சொன்னாராதலால், பொய்யாமை கொல்லாமை யென்னு மிரண் டறங்களுள்ளும், எது சிறந்தது என்று சந்தேகம் உண்டாமன்றே, அச்சந் தேகம் உண்டாகாமற் பொருட்டு, இங்கு 'அதன் பின்சாரப் பொய்யாமை நன்று' என்றார்; முன்சொன்னதினும் பின்சொன்னது உறுதியுடையதாக லால். அதனைப் பின்சார நன்று என்றது நன்மையை யுண்டாக்குமிடத்துப் பொய்பேசுதலும் மெய்பேசுதலாயும், தீமையை யுண்டாக்குமிடத்து மெய் பேசுதலும் பொய் பேசுதலாயும் மாறுபட்டு வருதலா லென்றறிக. இவை மூன்று பாட்டாலும் இக்கொல்லாவறத்தினது சிறப்புச் சொல்லப்பட் டது. மற்று - அசைநிலை.

(க - து). பொய்பேசாமை கொல்லாமையென்னு மிரண்டறங் களுள் கொல்லாமையென்னும அறமே சிறப்புடையதாம்.

3. Not to destroy life is an incomparably (great good); next to it in goodness ranks freedom from falsehood.

ச. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

லாகவும் தீமையை யுண்டாக்குமிடத்து மெய்பேசுதலும் பொய்பேசுதலாக வும்மாறுபட்டு வருதலாலென்றறிக. பொய்பேசாமை கொலையையுண்டாக்கி னால் பொய்பேசுதலாகவும் பொய்பேசுதல்கொலையை யொழித்தால் மெய் பேசுதலாகவுமிருத்தலால், பொய்யாமை கொல்லாமைக்குப் பிற்பட்டதாயிற் றென்க. "கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை, சொல்லா நலத்தது சால்பு" என்று சான்றாண்மை யதிகாரத்திற்கூறுதலு மிங்கறியத்தக்கதாம்.

† இதனைப்பற்ற அது திரிந்து வருதலான் என்றும் பாடமுண்டு.

அதற்கு, இதனைப்பற்ற—கொல்லாமையாகியவிரதத்தை மேற்கொ ண்டொழுக, அது - பொய்பேசாமை, திரிந்துவருவதால் - மாறுபட்டுவருத லால் என்று பொருள்கொள்க.

பரி.—(இ-ள்). * மேற்கதி வீடு பேறுகட்கு நல்ல நெறியென்று சொல்லப்படுவது யாதென்று வினவின், † அஃது யாதோருயிரையுங் கொல்லாமையாகிய அறத்தினைக்காக்கக் கருதும் நெறி, (எ-று).

*'யாதொன்றும்' என்றது, ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு. காத்தல்-வழுவாமற்காத்தல். இதனால் இவ்வறத்தினை யுடையதே நன்னெறி யென்பது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்). *நல்லாறெனப்படுவது (மேற்கதியும் முத்தியும் பெறுதற்கு) நல்லவழியென்று சொல்லப்படுவது, யாதெனின்-யாதென்று வினவினால், (அது), யாதொன்றும் - யாதோருயிரையும், கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தினை, சூழும்-(காக்க) நினைக்கும், நெறி-வழியாம், (எ-று).*

*'யாதொன்றும்' என்று கூறியது, புல்மரமுதலாகிய ஓரறிவுயிரையும் உள்ளாக்குவதற்காம். காத்தல் - யாதோருயிரையுங் கொல்லாமையாகிய வறத்தினைத் தவறாமற் பாதுகாத்தல். இதனால் கொல்லாமையாகிய இவ்வறத்தினையுடையதே நல்லவழியென்பது சொல்லப்பட்டது.*

(க - து). *யாதோருயிரையுங் கொல்லாமையாகியவறத்தைக்காப்பதே சுவர்க்கமுதலியவற்றை யடைவதற்கு நல்லவழியாகும் என்பது.*

4. Good path is that which considers how it may avoid killing any creature.

---

ரு. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

பரி.—(இ-ள்). பிறப்புநின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப்பொருட்டு மனைவாழ்க்கையைத் துறந்தா ரெல்லாருள்ளும் கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன் உயர்ந்தவன், ()

*பிறப்பு நின்ற நிலையாவது ‡ இயங்குவ ¶ நிற்பவென்னும் $ இருவகைப்பிறப்பினும் இன்பமென்ப தொன்றின்றி உள்ளன வெல்லாந் துன்*

** மேற்கதி - இந்திரன் முதலிய தேவர்களின் பதவிகள். † அஃது-நல்லநெறி. ‡ இயங்குவ-நடப்பன (அசைவன). ¶ நிற்ப-நிற்பன (அசையாதன).*

*$ " ஒரி னுள்ளமே பாரின்மா னுடர்முத லனவறு பிறப்பூடுஞ், சேருமின்பமொன் றில்லையென் பதுபிரத் தியக்கமா நீவல்லாய், போர்க ளாதிதுன் பிமையவ ரடைவதும் புகலரு துணர்ந் தாயே, சேரி லாவரன் கழலலான் மிகுசுக நிலைபிறி திலையன்றே" என்பது வைராக்கியசதகம்.*

பமே யாய நிலைமை. * துறவு ஒன்றேயாயினும், சமய வேறுபாட்டாற் பல வாம் ஆகலின் 'நீத்தாருளெல்லாம்' என்றார். இதனான் இவ்வறம் மறவாத வன் உயர்ச்சி கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). நிலை-(பிறப்புநின்ற) நிலையை, அஞ்சி—,(பிறவாமைப் பொருட்டு), நீத்தாருளெல்லாம் - (மனைவாழ்க்கையைத்) துறந்தவரெல்லாருள்ளும், கொலையஞ்சி - கொலைப்பாவத்தையஞ்சி, கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தை, சூழ்வான் - மறவாதவன், தலை - உயர்ந்தவனாவன், (எ-று).

பிறப்பு நின்ற நிலையாவது மனிதர் முதலாகிய சரமும், மரமுதலாகிய அசரமும் ஆகிய இருவகைப் பிறப்பிலும் இன்பமென்பதொன்றில்லாமல் உள்ளனவெல்லாம் துன்பமே யாகிய நிலைமை. துறவு ஒன்றேயாயினும், சமயவேறுபட்டால் அது பலவாமாதலால் 'நீததாருளெல்லாம்' என்றார். இதனால் கொல்லாமையாகிய வில்வறத்தை மறவாதவனது உயர்ச்சி சொல்லப்பட்டது.

(க - து) பிறப்பிற்கஞ்சித் துறவறம் பூண்டவர்களுள், கொலைப் பாவத்திற்குப் பயந்தவனே சிறந்தவனாவான் என்பது.

5. Of all those who, fearing the permanence of earthly births, have abondoned desire, he is the chief who, fearing the guilt of murder, considers how he may avoid the destruction of life.

---

௬. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

பரி:—(இ-ள்). கொல்லாமையை விரதமாக மேற்கொண் டொழுகுவானது வாழ்நாளின்மேல் உயிருண்ணுங் கூற்றுச் செல்லாது,(எ-று).

† மிகப்பெரிய அறஞ்செய்தாரும் மிகப்பெரிய பாவஞ்செய்தாரும் முறையானன்றி இம்மைதன்னுள்ளே அவற்றின்பயன் அனுபவிப்பரென்

* நாரத பரிவிராஜகோபநிஷத்து 5-வது உபதேசத்தில் "வாஸ்தவமாகச சந்நியாசம் ஒன்றேயாம்; அஃது அஞ்ஞானத்தினாலேயும், அசத்தினாலேயும், கருமலோபத்தினாலேயும் மூன்றுவிதமாய் ( பிறகு ) வைராக்கியசந்நியாசம், ஞான சந்நியாசம், ஞானவைராக்கிய சந்நியாசம், கரும சந்நியாசம் என நான்குவித மாயிற்று" என்று கூறுவது மிங்கே யறியத்தக்கதாம்.

† "மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின்பயன் மேலொரு காலமுறா, திகமேவரு மெனபத னுனோ யெல்லாமிவ ணைச்செற வெய்தினவே" என்று சிவஞானபோதங் கூறுவதும்,

"மனதாற்செயத அறம் பாவங்களின் பயனை இப்பிறப்பிலாவது மறு பிறப்பிலாவது மனதாலேயே அனுபவிக்கின்றான்; இங்ஙனமே, வாயாற்

னும் அறநூற் றுணிபுபற்றி, () இப்பேரறஞ் செய்தான்ருனுங் கொல்லப் படான்; படானுகவே, அடியிற் கட்டிய வாழ்நாள் இடையூறின்றி யெய்து மென்பார் வாழ்நாண்மேற் கூற்றுசசெல்லாது என்ருர். செல்லாதாகவே, காலநீட்டிக்கும்; நீட்டித்தால் ஞானம் பிறந்து உயிர் வீடு பெறு மென்பது கருத்து. இதனுல் அவர்க்கு வரு நன்மை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்). உயிருண்ணுங் கூற்று - உயிரைக்கொண்டுபோம் யமனுனவன், கொல்லாமை-கொலேசெயயாமையை, மேற்கொண்டு-(விரத மாக) மேற்கொண்டு, ஒழுகுவான - நடப்பவனது, வாழ்நாண்மேல் - ஆயு ளின்மேல், செல்லாது - செல்லான் (எ-று).

மிகப்பெரிய அறஞ்செய்தவரும் மிகப்பெரிய பாவஞ் செய்தவரும் (அறம் பாவங்களேச செய்தவர் மறுமையிலே சுகதுக்கங்களே யனுபவிப்பா ரென்னும்) முறையினுலல்லாமல் இம்மையில்தானே அவ்வறம்பாவங்க ளின் பயன்களாகிய சுகதுக்கங்களே அனுபவிப்பாரென்னும் அறநூலின து துணிவுபற்றி, இப்பெரிய அறஞ்செய்சவனும் கொல்லப் படான்; கொல்லப் படாதவனுகவே,அவன் கருவுறும்போது நியமிக்கப்பட்ட ஆயுட் காலத்தை யாதொரு தடையுமின்றி யடைவானென்பார் வாழ்நாண்மேல் கூற்றுச்செல்லாது என்ருர் கூற்றுச் செல்லாதாகவே, (அவனுக்குக்)காலம் நீடித்திருக்கும்; காலம் நீடித்திருந்தால் தத்துவஞானமுண்டாகி (அவன்) உயிர் மோட்சத்தைப்பெறும் எனபது கருதது. இதனுல் கொல்லாவிரதத் தோர்க்குவரும் நன்மை சொல்லப்பட்டது.

(க - து). கொல்லா விரதமுடையவன் மிகுகாலமிருப்பான்.

6. Yama the destroyer of life, will not attack the life of him, who acts under the determination of never destroying of life.

எ. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

பரி:—(இ-ள்). * அது செய்யாவழித் தன்னுயிர் உடம்பினீங்கிப் போமாயினும், தான் பிறிதோ ரின்னுயிரை அதனுடம்பி னீக்குந் தொழி லேச் செய்யற்க, (எ-று).

தன்னை † அது கொல்லினுந் தான் அதனைக் கொல்லற்க வென்றது, பாவம் கொலேயுண்டவழித் தேய்தலும் கொன்றவழி வளர்தலும் நோக்கி.

செய்த அறம் பாவங்களின்பயனே வாயாலும்,காயத்தாற்செய்த அறம்பாவங் களின் பயனேக் காயத்தாலும் அனுபவிக்கின்ருன் என்று மனுதர்மசாஸ்தி ரம்12-வது அத்தியாயததிற் கூறுவதும் இங்கறியத்தக்கனவாம்.

() கொல்லாமை மேற்கொண் டொழுகுவானும்.

* அது செய்யாதவழி - பிறிதொரு பிராணியைக் கொல்லுதல் செய் யாவிடத்து, † அது-பிறிதொருபிராணி.

இனித் ‡ தன்னுயிர் நீப்பினுமென்பதற்குச் சாந்தியாகச் செய்யாதவழித் தன்னுயிர் போமாயினுமென் றுரைப்பாருமுளர்;பிறர் செய்தலு மாகாமையின், அஃதுரையன்மை யறிக.

தெளி.—(இ-ள்). தான்—,பிறிது- வேறொன்றனது;இன்னுயிர்-இனிதாகிய வுயிரை, நீக்கும்- (அதனுடம்பிலிருந்து) நீக்குதலாகிய, வினை-தொழிலை, (செய்யாவிடத்து), தன்னுயிர்-தனது உயிரானது,நீப்பினும்-(உடம்பிலிருந்து) நீங்கிப்போமாயினும், செய்யற்க-செய்யாதிருக்கக் கடவன், ()

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க (தனையொன்று கொன்றாலும் தானதனைக் கொல்லலகாது) என்றது பாவம் (தான் ஒன்றால்) கொலையுண்ட விடத்துக் குறைதலும்(தான் அதனைக்) கொன்றவிடத்து வளர்தலும் நோக்கியாம்.

(க-து.) தன்னை ஒன்று கொல்வதா யிருந்தாலும் தானதனைக் கொல்லலாகாதென்பது. எ

7. Let no one do that which would destroy the life of another, although he should by so doing, lose his own life.

---

‡ தன்னுயிர் நீப்பினுமென்பதற்குச் சாந்தியாக (தோஷநிவாரணமாக)ச் செய்யாதவழி (பிறிதொரு பிராணியைப் பிறரைக்கொண்டு கொலைசெய்வித்தல் முடியாதவிடத்து)த் தன்னுயிர் போகுமாறுலும் என்றுரை கூறுவாறு முண்டு. பிறர் (தன்னிமித்தம் பிறிதொன்றைக்கொலை) செய்தலும் (துறவிக்கு) ஆகாமையால் அஃது உரையல்லவெனவறிக.

மிருகமுதலியவற்றைத்தான் கொன்றால் பாவமேயன்றித் தன்னிமித்தம் பிறர்கொன்றால் தனக்குப் பாவமில்லை. ஆதலால் அவற்றைப் பிறரால் கொல்விக்கலாம். அவ்வாறு செய்தல் முடியாத விடத்துத் தன்னுயிர் போகுமாறுலும் பிறிதொரு பிராணியைக் கொல்லலாகாது என்பதுபிறருரையின் தாற்பரியம். அதனைப் பரிமேலழகர் தன் பொருட்டுப் பிறர்செய்யும் கொலைப்பாவம் தனக்கே வருவதாயிருத்தலால், அவ்வுரை பொருந்தாது என்று மறுத்தாரென்க.

உயிர்ச்சார்பு, உடற்சார்பு, பொருட்சார்புகளை விட்டிருக்கவேண்டிய துறவி உடலைக்காத்தல் ஈசனது கடமையெனத் திடவைராக்கியங் கொள்ளாது உடற்சார்புகொண்டு பிறிதொரு பிராணியைப் பிறரைக்கொண்டு கொல்வித்தல் அவனுக்குப் பெருங்குற்றமாமென்க.

"தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்,வானைக் காவல் கொண்டு நின்றா றறியா நெறியானே,யானைக் காவி லரனே பரனே யண்ணா மலையானே, ஊனைக் காவல் கைவிட் டுன்னை யுகப்பா ருணர்வாரே" என்றுதேவாரங் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

அ. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

பரி.—(இ-ள்). தேவர்பொருட்டு வேள்விக்கட் கொன்றல் இன்பமிகுஞ்செல்வம்பெரிதாமென்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும், துறவானமைந்தார்க்கு *ஒருயிரைக்கொல்லவருஞ்செல்வங்கடை, (எ-று).

இன்பமிகுஞ் செல்வமாவது † தாமுந்தேவராய்த் துறக்கத்துச் சென்றெய்துஞ் செல்வம். ‡ அது சிறிதாகலானும், பின்னும் பிறத்தற்கேதுவாகலானும், § வீடாகிய ஏறிலின்பம் எய்துவார்க்குக் 'கடை' எனப்பட்டது. துறக்கமெய்துவாரக் காமாயினும் வீடெய்துவார்க்காகா தென்றமையின், ¶ விதி விலக்குகள் தமமுள் மலையாமை விளக்கியவாறாயிற்று.

* ஒருயிரைக் கொல்லவரும்-என்பதற்குப்பிரதியாக ஒருயிரைக்கொல்ல அதனால் வரும் என்றும் பாடமுண்டு.

† தாமும் என்றது - வேள்வியிற் கொன்ற பசுவேயன்றி வேள்வி செய்த தாமும்.

‡ அது (சுவர்க்கவின்பம்) சிறிதாகலானும் பின்னும் பிறத்தற்கேதுவாகலானும் என்பதன் பொருள் சுவர்க்கவின்பம் மோட்சவின்பத்தை நோக்க அற்பமாயிருத்தலானும் சுவர்க்கவின்பத்தை யனுபவித்தற்குரிய புண்ணிய மொழிந்தவுடனே மீண்டும் பிறப்பதற்குக் காரணமாயிருப்பதாலும் என்பதாம். சூதசங்கிதை முத்திநிலை யுரைத்த அத்தியாயம் 26-வது செய்யுளில் "பாடுற வுரைத்த விதப் பதமுதலி முறையிற் சார்வோர், ஊடுறு போகந் துய்ப்ப வொன்றற்கொன் றதிகமாக" எனவும், 27-வது செய்யுளில் "புண்ணியந் தீர்ந்த பின்பு பூமியின் விரைந்து மேன்மை, நண்ணிய குலத்துத் தோற்ற நண்ணுவ ரதனு லென்றுங, கண்ணிய பிறப்பிறப்புக் கழிதலின்று" என்றும் கூறியிருப்பது மிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

§ யானெனதென்னும் இருவகைப்பற்றினையும் விடுதலாகிய (விடுதலால் விளங்குவதாகிய) முடிவில்லாத வின்பத்தை யடைவார்க்கு "தீய வசுரர் பகையுண்டு செற்ற மாரிய மிகவுண்டு, நோயுண் டனங்க ஞருண்டு நோய்கட் கெல்லாந் தாயான, காய முண்டு கைதொழுவேண் டினரு முண்டு கற்பதற்கே, மாயுந் தன்மை யுண்டாதல் வானோர்க் கென்னை வளனுண்டே" என்று கூறியுள்ளவாறு சுவர்க்க வின்பம் உண்மையாகப் பார்க்குமிடத்துத் துன்பமய மாகவே யிருத்தலின், அது (சுவர்க்கவின்பம்) கடையாயிற்றென்க.

¶ வேள்வியினிடத்தொன்றனைகொல்லுதல் இல்லறத்தார்க்கு விதியாயும் துறவறத்தார்க்கு விலக்காயுமிருத்தலின், விதிவிலக்குகள் தம்முண்மாறுபடவில்லையென்க. ஒரு காரியத்தில் பிரவிருத்தியை யுண்டுபண்ணும்வாக்கியம் விதியெனப்படும். அது சுவர்க்கத்தில் விருப்பமுடையான் சோதிஷ்டோமஞ் செய்யக்கடவன் என்றாற்போல்வது. ஒரு காரியத்தில் நிவிர்த்

† இஃது இல்லறம் அஃமைக்குக் காரணம் இவை யிரண்டுபாட்டானுங் கொலையதுகுற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்). (தேவர்பொருட்டு யாகத்தி லொன்றைக் கொன்றால்) நன்றாகும் - இன்பமிகும், ஆக்கம் - செல்வமானது, பெரிது-பெரிதாகும், எனினும்-என்று (இல்வாழ்பவர்க்குச) சொல்லப்பட்டதாயினும், சான்றோர்க்கு-(துறவினால்) நிறைந்தோர்க்கு, கொன்று - (ஒருயிரைக்) கொல்ல, ஆகும் - (அதனால்) வரும், ஆக்கம் - செல்வமானது, கடை-இழிவுடையதாம், (எ-று).

இன்பமிகுஞ் செல்வமாவது (யாகஞ்செய்த) தாமும் தேவராய்ச் சுவர்க்கத்திற்சென்று அடையுஞ் செல்வம். அச்செல்வம் சிறிதாகையாலும்,பின்னும்பிறத்தற்குக் காரணமாகலாலும், மோட்சமாகிய முடிவில்லாதசுகத்தை யடைபவர்க்குக் ' கடை ' எனப்பட்டது. (யாகத்தில் தேவர் பொருட்டு ஒன்றனைக் கொல்லுதல்) சுவர்க்க போகத்தையடைய விரும்பிய இல்லறத்தார்க்கு ஆகுமாயினும் மோட்சமடைய முயறசிக்குந் துறவறத்தார்க்கு ஆகாதென்றதனால், விதிவிலக்குகள் தம்முள மாறுபடாமை விளக்

கியை யுண்டுபண்ணும் வாக்கியம் விலக்கெனப்படும் அது கள்ளுண்டல் கூடாது என்றாற்போல்வது. இங்கு இல்லறத்தான் வேள்வி புரியக்கடவன் என்பது விதி; துறவறத்தான் வேள்வி புரியாதிருக்கக்கடவன் என்பது விலக்கு. இல்லறத்தார்க்கு வேளவிபுரிதல் சிறப்பாயும் துறவறத்தார்க்கு அது செய்யாதொழிதல் சிறப்பாயும் இருக்கின்றனவென்க. மனுதர்ம சாஸ்திரம் சந்நியாச தருமத்தைக் கூறுமிடத்து "தேவர், இருஷி, பிதிர்க்களிடத்தில் மூன்று கடனுடன மனிதன் பிறக்கிறான். அவற்றுள், யக்ஞியத்தால் தேவர்களுக்கும், பிள்ளைபெறுவதால் பிதிர்க்களுக்கும, வேதமோதுவதால் இருஷிகளுக்கும் கடனைதீர்த்துச், சோதிட்டோம முதலிய யாகங்களைச் சக்திக்குத் தக்கவாறு செய்து பின்பு மோட்சத்திற்குபயோகமான சந்நியாசத்தில் மனம்வைத்தல் வேண்டும்" எனறும், "ஹிம்சை செய்யாமையாலும், இந்திரியங்களுக்கு விஷயப்பற்றில்லாமையாலும், நித்திய கர்மானுஷ்டானஞ் செய்வதாலும், சாந்தராயணாதி தவஞ்செய்வதாலும் பெரியோர்க ளிவ்வுலகத்தில் மோட்சத்தைச சாதிக்கிறாகள்" என்றும் கூறுவதுமிங்கு நன்குசிந்திக்கத்தக்கதாம். இம்முறையறியாது'நன்றாகு மாக்கம்' என்னுமிக்குறள் சமணமதத திற்குச் சார்பாயுள்ளதென்று கூறுவாருமுளர்.

† இஃது(கொன்றாகு மாக்கங்கடையாதல்) இல்லறமல்லாமைக்குக்காரணமாமென்க. எனவே, அது துறவறததிற்குக் காரணமாயிற்று. எங்ஙனமெனின், வேள்வியாற் சித்திக்கும்சுவர்க்கவின்பத்தைக் கடையாகக்கொண்டவன தலையாயவின்பம் யாதென விசாரித்து, அதனால் தலையாயவின்பத்தைப் பெறுதற்பொருட்டு, அதற்குச் சாதனமான துறவறத்தை மேற்கொள்ளுதலினென்க. இம்மையின்பத்தையேயன்றிச் சுவர்க்க வின்பத்தையும் கடையாகக்கொள்ளுதலை இகபரபோகவிராக மென்பர் சான்றோர்.

கியவாறாயிற்று. இஃது இல்லறமல்லாமைக்குக் காரணம். இவை யிரண்டு பாட்டாலும் கொலையினது குற்றஞ்சொல்லப்பட்டது.

(க-து). சான்றோர் கொலைசெய்வதா லுண்டாகுஞ் செல்வத்தைக் கடையாகக்கொள்ளுவர் என்பது.

8. The advantage which might flow from destroying life in sacrifice, is dishonourable to the wise who renounced the world, even though it should be said to be productive of a great good.

கூ. கொலைவினைய ராகிய ‡ மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து

பரி.—(இ-ள்). கொலைத்தொழிலை யுடையராகிய மாந்தர், அத்தொழிலின் கீழ்மையை அறியுநெஞ்சத்த ரல்லராயினும், § அக்கீழ்மையை அறிவார் நெஞ்சத்துப் புலைத்தொழிலினர், (எ-று).

'கொலைவினையர்' என்றதனன், † வேள்விக்கட் கொலையன்மை

‡ 'மாக்களெனப்படுவார் மனவுணர்ச்சியில்லாதார்' எனபர்நச்சினார்க்கினியர்.

§ அக்கொலைத்தொழிலின் கீழ்மையை யறிவார்.

† வேள்வியிற்செய்யும் கொலை கொலையன் றென்பதுபற்றித் தருக்ககௌமுதி சாத்தியததில் வியாபிததுச சாதனத்தில் வியாபியாமையாகிய உபாதி கூறுமிடத்து "யாகத்திற்செயயும் பசுக்கொலை அதர்மசாதனமாம்; கொலைமையான்; யாகத்திற்குப் புறம்பான கொலையைப்போல என்புழி நிஷித்தத்தன்மை உபாதி. அவ்வதர்ம சாதனமாகிய சாத்தியத்தின் வியாபகமுண்டாகிறது; யாண்டு யாண்டு அதர்மசாதனத்துவம் ஆண்டாண்டு நிஷித்தத்துவமென்றிருத்தலான். சாதனத்தன்மையாகிய கொலைமையின் அவ்வியாபகமு முண்டாகின்றது; யாண்டு யாண்டுக் கொலைமை ஆண்டாண்டு நிஷித்தத்துவமென்பதின்மையின், பட்சமாக்கப்பட்டகொலையிற் கொலைமையிருக்கினும் நிஷேதிக்கப்படுந் தன்மையினமையான்." என்றும், மனுதருமசாஸ்திரம் ஐந்தாவதத்தியாயத்தில் "யக்கியத்திற்காகவேபசுக்கள் பிரமனால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. அந்தயக்கியஞ்செய்தால் உலகமெல்லாம் க்ஷேமத்தை யடைகின்றன; ஆகையால், யக்கியத்திற் செய்யும் பசுஹிம்சை ஹிம்சையன்று" என்றும், "கொடிகள், பசுக்கள், விருக்ஷங்கள், மிருகங்கள், பட்சிகள் என்னுமிவற்றை யக்கியத்திற்கு உபயோகப்படுத்தின் பின்பு அவை உயர்ந்தகதியை யடைகின்றன" என்றும், "சராசரவிஷயத்தில் வேதங்கூறிய ஹிம்சையை ஹிம்சையென்று நினைத்தல்கூடாது. வேதத்தினின்றே தருமம் விளங்குகிறதல்லவா. ஆதலால் அந்த வேதம் ஹிம்சையைச் சொன்னபோதிலும் புண்ணியமாகவே யிருக்கும்" என்றும் கூறுகின்றன.

யறிக. புலைவினையரென்றது ‡ தொழிலாற் புலையரென்றவாறு. இம்மைக் கட் கீழ்மை யெய்துவ ரென்பதாம்

தெளி.—(இ-ள்). கொலைவினையராகிய - கொலைத்தொழிலை யுடைய வராகிய, மாக்கள்-மனிதர், (அக்கொலைத்தொழிலினது இழிவை யறியும் மனத்தினரல்ல ராயினும்), புன்மைதெரிவாரகத்து-அவ்விழிவை யறிவா ரது மனத்தினிடத்து, புலைவினையர்-புலைத்தொழிலினராய்த் தோன்றுவர்.

'கொலைவினையர்' என்று கூறியதினால், வேள்விக்கண் செய்யுங் கொலை கொலையாகாமையறிக. புலைவினையரென்றது தொழிலினால்புலைய ரென்றவாறும். அப்புலைவினையர் இம்மையில்தாழ்வையடைவாரென்பதாம்.

(க - து). கொலைத்தொழிலி னிழிவையறிந்தவர் கொலைசெய் வாரைச் சண்டாளர்களாக மதிப்பார் என்பது.

9. Men who destroy life are base men, in the estimation of those who know the nature of such meanness.

க0. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

பரி.—(இ-ள்). ¶ நோக்கலாகா நோயுடம்புடனே வறுமைகூர்ந்த இழிதொழில் வாழ்க்கையினையுடையாரை இவர் முற்பிறப்பின்கண் உயி ர்களை அவை நின்றவுடம்பினின்று நீக்கினவரென்றுசொல்லுவர் வினை விளைவுகளை யறிந்தோர், (எ - று.)

† செல்லாவாழ்க்கை தீவாழ்க்கை யெனக்கூட்டுக.

‡ தொழிலாற் புலையர் - சாதியாலன்றிக் கருமத்தால் சண்டாள ரானவர்.

¶ காண்டற்கியலாத நோயோடு தரித்திரமுடையவராய் இழிதொழி ல் செய்திருப்பவரை நல்வினை தீவினைகளினது விளைவாகிய சுகதுக்கங் களை யறிந்தவர் இவர் முற்பிறப்பில் கொலைப்பாவஞ் செய்தவ ராவாரென்று கூறுவது உரை யனுமான மெனப்படும். "நீதியான்முற் கன்மபல நிகழ் வதிப்போ திச்செய்தி, யாதியாக வரும்பயனென் றறித லுரையா லனு மானம்" என்பது சிவஞானசித்தி.

† தீ என்பதனை விசேடணமாகவுடைய வாழ்க்கையென்னும் விசே ஷியத்தைச் செல்லா என்பதனோடுங்கூட்டிச் செல்லாவாழ்க்கை யென்றும் கொள்க. கொள்ளவே, செல்லாவாழ்க்கை யென்றும் தீ வாழ்க்கை யென் றும் கொள்ளவேண்டுமென்பதாயிற்று. செல்லாவாழ்க்கை—வறுமை மிகுந் த வாழ்க்கை; தீ வாழ்க்கை - இழிதொழிலையுடையவாழ்க்கை. செல்லாவெ ன்பது இங்கு வறுமையை யுணர்த்திற்று. செல்லாமை தரித்திரத்தையும் செல்லல் செல்வத்தையு முணர்த்துதலை நாலடியார் குடிப்பிறப்பில்

‡ செயிருடம்பினராதல் ¶ "அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித், துக்கத் தொழுநோ யெழுபவே' என்பதனானு மறிக. மறுமைக்கண் இவையு மெய்துவ ரென்பதாம். இவை இரண்டு பாட்டானுங் கொல்வார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

அருளுடைமை முதல் கொல்லாமையீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள்ளே சொல்லப்படாத விரதங்களும் அடங்கும்; அஃதறிந்தடக்கிக் கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

தெளி.—(இ - ள்). செயிருடம்பின் - பார்க்கக் கூடாத நோயுடம்புடனே, செல்லாத்தீவாழ்க்கையவர்-வறுமை மிகுந்த இழிதொழில் (செய்யும்) வாழ்க்கையினையுடையாரை, (இவர் முற்பிறப்பில்), உயிர் - உயிர்களை, உடம்பின - (அவை நின்ற) உடம்புகளிலிருந்து, நீக்கியார் - நீக்கினவர், என்ப - என்று (வினைவிளைவுகளை அறிந்தோர்) சொல்லுவார், (எ - று).

வாழ்க்கை என்பதனை செல்லா என்பதனோடுங் கூட்டிச் செல்லா வாழ்க்கை தீவாழ்க்கை. யெனக்கொள்க. செயி ருடம்பின ராதல்-பெருவியாதி கொண்ட வுடம்பினை யுடையராதல். மறுபிறப்பில் இவையும் (செயி ருடம்பினையும் செல்லாத் தீவாழ்க்கையையும்) அடைவரென்பதாம். இவை இரண்டுபாட்டாலும் கொலைசெய்வார்க்குவருந் தீமை சொல்லப்பட்டது.

அருளுடைமை முதல் கொல்லாமை இறுதியாகசசொல்லப்பட்ட இவற்றுள்ளே சொல்லப்படாத விரதங்களும் அடங்கும்; அஃது அறிந்து அடக்கிக்கொள்க. இங்குச சொன்னால் விரியும.

---

"செல்லா விடத்துங் குடிப்பிறந்தார செய்வன, செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்" என்று கூறுவதனாலுமறிக.

‡ செயி ருடம்பினராதல் - காணுதற்கியையாத பெருவியாதி பொருந்திய வுடம்பினை யுடையவராதல.

செயிர் என்பது இங்குக் கண்டு சகிததற்குக்கூடாத பெருவியாதியை யுணர்த்தி நின்றது.

¶ நாலடியார் தீவினையச்சம் 3, இதன் பொருள் [அலவனை (நண்டை)க் கால் முறித்துத்தின்ற பழவினை வந்தடைந்தக்கால்] (அத்தீவினை யுடையார்) சங்குமணிபோல உள்ளங்கையொழிய விரல்களழுகி (விழத்) துக்கமடைந்து தொழுநோ (பெருவியாதி) யோடு திரிவார்கள் என்பது.

"இந்நோய் நமக்குண்டென் றெண்ணாதே யெவ்வுயிரு, முன்னேவக் கொன்றுணணு மூர்க்கர்தா - மெந்நோவும், பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென், றெண்ணப் படுவா ரிசைந்து" என்றுபெருந்தேவனார்பாரதங்கூறுவது மிங்குணர்தற்பாற்றும்.

(க - து). கொலைத்தொழில் புரிவோர் மறுமையில் தரித்திரத்தையும் கொடிய பிணியையு மடைவார் என்பது.

10. The wise will say that men of diseased bodies who live in degradation and in poverty, are those who separated the life from the body of animals in a former birth.

## ஞானம்.

பரி.—இனி † அவற்றின் பயனாகிய ஞானங்கூறிய தொடங்கினார். ‡ ஞானமாவது ¶ வீடுபயக்கு முணர்வு; அது நிலையாமை முதல் அவாவறுத்தலிறுதியாக நான்கதிகாரத்து ளடக்கப்பட்டது.

தெளி.—இனி அவ்விரதங்களின் பிரயோசனமாகிய ஞானம் சொல்லத்தொடங்கினார். ஞானமாவது மோட்சத்தைத்தரும் அறிவு; அது நிலையாமைமுதல்அவாவறுத்தல்இறுதியாக நான்கதிகாரத்துள் அடக்கப்பட்டது.

### பத்தாவது அதிகாரம்.

### நிலையாமை—Instability.

பரி:—$ அவற்றுள், நிலையாமையாவது தோற்ற முடையனயாவும் நிலையுதலிலவாந்தன்மை. () மயங்கியவழிப்பேய்த்தேரிற்புனல்போலத்

† விரதங்களினால் அந்தக்கரணம் பரிசுத்தமாக அது வாயிலாக ஞானமுண்டாதல் பற்றி 'அவற்றின் (விரதங்களின்) பயனாகிய ஞானங் கூறிய தொடங்கினார்' என்று கூறப்பட்டது.

‡ பாலென்பது வேறுபாலை யுணர்த்தாது பசுவின்பாலையே யுணர்த்துவதுபோல இங்கு ஞானமென்பது கட ஞானம் பட ஞான முதலியவற்றை யுணர்த்தாது வீடு பயக்கு முணர்வையே யுணர்த்திற்றென்க

¶ வீட்டைத்தருவது ஞானமே யென்பது "ஞான மலது கதிகூடுமோ" என்று தாயுமானவரும், "ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை" என்று திருமூலரும், இவ்வாறு பிறரும் கூரியவாற்றானு மறிதற்பாற்றும்; எனவே, ஞானமின்றி வீடுண்டாகாதென்பது தேற்றமாயிற்றென்க.

$ அவற்றுள்- நிலையாமை முதலாகவுள்ள அந்நான்கனுள்.

() மயங்கியவிடத்துக் கானலில் நீர்தோன்றுவதுபோலச் சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தில் திரிபுடி (காண்பான் காட்சி காணப்படும்பொருள்) தோன்றி நிருவிகற்பசமாதி வாயிலாகத் தெளிந்தவிடத்துக் கயிற்றரவு போலக்கெடுமென்பவர்கள் அத்துவித சித்தாந்திகள். இவர்கள்; இம்மயக்கம் சீவர்களிடத்து அநாதியாயுள தென்றும், இச்சீவர்கள் சொப்பன

தோன்றி மெய்யுணர்ந்தவழிக் கயிற்றில் அரவுபோலக் கெடுதலிற் பொய்யென்பாரும், † நிலைவேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந்திறக்கு மென்பாரும், ‡ ஒருவாற்றன் வேறுபடுதலும் ஒருவாற்றன் வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கேயுடைய வென்பாருமெனப் பொருட் பெற்றி கூறுவார் பலதிறத்தராவர்; அவரெல்லார்க்கும் ¶ அவற்றது நிலையாமை உடம்பாடாகலின், ஈண்டு அதனையே கூறுகின்றர். இஃதுணர்ந்துழியல்லது பொருள்களிற் பற்று விடாதாகலின், இது முன் வைக்கப்பட்டது.

தெளி:—*அவற்றன், நிலையாமையாவது தோற்றமுடையன வெல்லாம் நிலைத்திருத்த லில்லாதனவாந் தன்மை. மயங்கியவிடத்துக் கானலிற்சலம் போலத்தோன்றி மெய்யுணர்ந்தவிடத்துப் பழுதையிற்பாம்பு போலக்கெடுதலாற் பொய்யென்பாரும், நிலைவேறுபட்டு வருவதாற் கணந்தோறும் பிறந்திருக்குமென்பாரும், ஒருவிதத்தால் வேறுபடுத*

*வுலக சீவர்கள்போலப் பிரஹமத்தில் கற்பிதராயுள்ளவர்களென்றும், கூறுவர்.*

† *நிலைவேறுபட்டு வருதலால் கணந்தோறும் பொருள்கள் பிறந்திறக்கு மென்பவர்கள் பௌத்தசித்தாந்திகள். இவர்கள க்ஷணிக விஞ்ஞான வாதிகளெனப்படுவர். தாமரையிதழைப்பலவாக அடுக்கி ஊசிவைத்தடித்தால் அவ்விதழ்களில் எட்டிதழ் அறுபடுங்காலவளவு கணமெனப்படும். இம்மதத்தர் க்ஷணிக விஞ்ஞான வடிவ புத்தியே ஆன்மா; இப்புத்தி பிரகாச வடிவினையுடையது; சகல பதார்த்தங்களும் இத ஞாகாரமாயிருக்கின்றன; ஒவ்வொரு க்ஷணததிலும் விஞ்ஞான முண்டாகி நாசமடைகின்றது; முந்திய விஞ்ஞானத்திற்குச் சமானமாக வேறு விஞ்ஞான முண்டாவதால் முந்திய விஞ்ஞானம் நாசமடைகின்றது; இவ்வாறு தோன்றித் தோன்றி யழிந்து அழிந்து நதியின் பிரவாகம்போல விஞ்ஞானதாரை (ஒழுங்கு) தொடர்ந்து கொண்டே இருக்கின்றது; இந்தவிஞ்ஞானதாரை ஆலய விஞ்ஞானதாரை பிரவிர்த்தி விஞ்ஞானதாரை யென்றிருவகையாம்; நான்நான் என்னும் விஞ்ஞானதாரை ஆலய விஞ்ஞானதாரையாம்; இது கடம் இது படம் என்னும் விஞ்ஞானதாரை பிரவிர்த்தி விஞ்ஞானதாரையாம்; ஆலய விஞ்ஞானதாரையினின்றும் பிரவிர்த்தி விஞ்ஞானதாரை யுண்டாகின்றது என்று கூறுவர்.*

‡ *ஒருவகையால் வேறுபடுதலும் ஒருவகையால் வேறுபடாமையுமாய்ப் பொருள்களிருக்கின்றமையின் பொருள்கள் நிலையுதலும் நிலையாமையுமாய் ஒருங்கேயுடையன வென்பவர்கள் உலகஞ்சத்திய மென்னும் மற்றைச் சமயவாதிகள். இவர்கள் வேறுபடுதலைக் காரியத்திலும் வேறுபடாமையைக் காரணத்திலும் கொள்வர். எம்மதவாதமும் இம்மூன்றனுளடங்கி நிற்றலை யுய்த்துணர்ந்துகொள்க.*

¶ *அவற்றது - தோற்றமுடையனவற்றின்.*

லும் ஒருவிதத்தால் வேறுபடாமையுமுடையனவாயிருத்தலின்நிலைத்தலும் நிலையாமையும் ஒருமித்துடையன வென்பாரும் என்றுபொருளின்றன்மை கூறுவார் பலவகைப்பட்டவராவர்; அவரெல்லார்க்கும் அவற்றினது நிலையாமையுடம்பாடாதலால், இங்கு அந்நிலையாமையையே கூறுகின்றார். இந்நிலையாமையை யறிந்த விடத்தல்லது, உலகப்பொருள்களிலேயுள்ள மனப்பற்று விடாதாகலின், இது (நிலையாமை) முன்வைக்கப்பட்டது.

க. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

பரி.—(இ-ள்). நிலையுதல் இலவாகிய பொருள்களை நிலையுதலுடையவென்று கருதுகின்ற புல்லிய வறிவினை யுடையராதல் துறந்தார்க்கிழிபு, (எ-று).

† தோற்றமுடையவற்றைக் கேடிலவென்று கருதும் புல்லறிவால் அவற்றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித் துன்பத்திற் கேதுவாகலின், அது வீடெய்துவார்க் கிழுக்கென்பது இதனாற் கூறப்பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச்செய்வது சிற்றின்பத்திற் கேதுவாகிய செல்வத்தின் கண்ணும் அதனை யனுபவிக்கும் யாக்கையின் கண்ணும் ஆகலின், வருகின்ற பாட்டுக்களான் ‡ அவற்றது நிலையாமையை விதந்து கூறுப.

தெளி.—(இ-ள்). நில்லாதவற்றை - நிலைத்திருத்தலில்லாதனவாகிய பொருள்களை, நிலையின வென்று - நிலைத்திருத்தலுடையன வென்றுஉணரும் - நினைக்கின்ற, புல்லறிவாண்மை - அற்பபுத்தியை யுடையவராதல், கடை - (துறந்தார்க்கு) இழிவாம், (எ-று).

தோற்றமுடைய பொருள்களை நாசமில்லாதன வென்று நினைக்கும் அற்பபுத்தியால் அப்பொருள்களின்மீது பற்றுச்செய்தல் பிறவித்துன்பத்திற்குக்காரணமாமாகலால், அப்பற்று மோட்சத்தை யடைவார்க்குத் தவறுமென்பது இதனாற் சொல்லப்பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச்செய்வது சிற்றின்பத்திற்குக் காரணமாகிய செல்வத்தினிடத்தும் அதனை அனுபவிக்கும் உடம்பினிடத்தும் ஆகலின், வருகிறபாட்டுக்களால் அவ்விரண்டன் நிலைமையை வேறெடுத்துச் சொல்லுவார்.

† தோற்றமுடையனவெல்லாம் நாசமுடையன வாயிருத்தலைக்காண்டல் கருதலுரை வாயிலாக வறியாது தோற்றமுடையன வற்றை அழிதலில்லாதவை யென்று எண்ணும் மந்தபுத்தி யுடையவரை நோக்கி மனத்தை முன்னிட்டுப் பட்டினத்தடிகள் "பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்கும், தோன்றின மறையு மறைந்தன தோன்றும், பெருத்தன சிறுக்கும் சிறுத்தன பெருக்கும், உணர்ந்தன மறக்கு மறந்தன வுணரும், புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்" என்று கூறியிருத்தலிங்கு நன்குணர்தற்பாற்றும்.

‡ அவற்றது - செல்வம் உடல்களது.

(க - து.) நிலையில்லாத பொருள்களை நிலையுள்ளன வென்று கருதுதல் மதியீனமாம் என்பது.

1. That ignorance which considers those things to be stable which are not so, is dishonourable to the wise.

௨. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

பரி.—(இ - ள்.) ஒருவன் மாட்டுப் பெரியசெல்வம் வருதல் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கட் காண்போர்குழாம் வந்தாற்போலும்; அதனது போகலும் அக்கூத்தாட்டு முடிந்தவழி அக்குழாம் போயிற்றுப் போலும், (எ - று).

'பெருஞ்செல்வம்' எனவே, துறக்கச்செல்வமும் அடங்கிற்று. போக்குமென்ற எச்சவும்மையான் வருதலென்பது பெற்றும். அக்குழாங்கூத்தாட்டுக்காரணமாக அரங்கின்கட் பலஇறத்தாற் றானேவந்து அக்காரணம் போயவழித் தானும் போமாறுபோலச் † செல்வமும் ஒருவனல்வினைகாரணமாக அவன்மாட்டுப் பலஇறத்தாற் றானேவந்து ‡ அக்காரணம் போயவழித் $ தானும் போமென்றதாயிற்று.

தெளி.—(இ - ள்.) (ஒருவனிடத்து) பெருஞ்செல்வம் - பெரியசெல்வம் (வருதல்), கூத்தாட்டு - கூத்தாடுதல்(செய்கின்ற), அவை - சபையினிடத்து, குழாத்தற்று - (காண்போர்) கூட்டம் வந்தாற்போலும், போக்கும் - (அச்செல்வம்) போகுதலும், அது - அக்கூட்டமானது, விளிந்தற்று - (அக்கூத்தாடுதல் முடிந்தவிடத்து) போயினாற் போலும், (எ - று).

'பெருஞ் செல்வம்' என்றுகூறவே, சுவர்க்கச் செல்வமும் அடங்கிற்று. போக்குமென்ற இறந்ததுதழுவியஎச்ச வும்மையால்வருதலென்பதுபெறப்பட்டது. அக்கூட்டமானது கூத்தாடுதல் காரணமாகச் சபையினிடத்துப் பலவிதத்தால் தானேவந்து அக்கூத்தாட்டுக் காரணம் போனவிடத்துத் தானும்போகும் வகைபோலச் செல்வமும் ஒருவனது நல்வினை காரணமாக அவனிடத்துப் பலவிதத்தால் தானேவந்து அந்நல்வினையாகிய காரணம் போனவிடத்துத் தானும் போமென்றதாயிற்று.

† "மருவினிய சுற்றமும் வான்பொருளு நல்ல, வுருவு முயர்குலமு மெல்லாந் - திருமடந்தை, ஆம்போ தவளோடு மாகு மவள்பிரிந்து,போம்போ தவளோடும் போம்" என்பதுமிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

‡ தாமரைமுகை மலர்தற்குச் சூரியனும்,அது குவிதற்குச் சந்திரனும் நிமித்த காரணமாயிருத்தல்போல, செல்வம் வருதற்குநல்வினையும் அது போதற்குத் தீவினையும் நிமித்த காரணமாயிருக்கின்றன வென்பதாம்.

$ தானும் - செல்வமும்.

(க-து.) செல்வம் நிலைபெறுதலுடையதன்று என்பது. (உ)

2. The acquisition of wealth is like the gathering together of an assembly for a theatre; its expenditure is like the breaking up of that assembly.

---

௩. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
* லற்குப வாங்கே செயல்.

பரி.—(இ - ள்.) நில்லாத வியல்பினை யுடைத்துச் செல்வம்; அதனைப்பெற்றால், அதனாற் செய்யப்படும் அறங்களை அப்பெற்றபொழுதே செய்க, (எ - று).

† அல்கா வென்பது திரிந்து நின்றது. ‡ ஊழுள்வழியல்லது துறந்தாராற் பெறப்படாமையின் 'அதுபெற்றால்' என்றும், § அஃதில்வழி நில்லாமையின் 'ஆங்கே' என்றுங் கூறினார். அதனாற் செய்யப்படும் அறங்களாவன: ¶ பயனோக்காது செய்யுங் கடவுட்பூசையும், தானமும் †† முதலாயின. () அவை ஞானவேதுவாய் வீடுபயத்தலின், அவற்றை 'அற்குப' என்றும், ‡‡ 'செயல்' என்றுங் கூறினார். இவையிரண்டு பாட்டானும் செல்வ நிலையாமை கூறப்பட்டது.

---

* அற்குப என்பது வினையாலணையும் பெயர். அதன் பொருள் நிலைப்பன என்பது.

† நிலைத்தலென்னும் பொருளதாகிய அல்குதல் என்னும் தொழிற்பெயரின் பகுதியாகிய அல்கு என்பது செய்யுள்விகாரத்தால் அற்கு எனத்திரிந்துநின்றது; அல்கா என்பதன் ஆகாரவிகுதி எதிர்மறைப் பொருளது.

‡ துறந்தவரிடத்துப் பொருள் சம்பாதித்தற்கியன்ற முயற்சியில்லாமைபற்றி 'ஊழுள்வலியல்லது துறந்தாராற் பெறப்படாமையின், அதுபெற்றாலென்றும்' என்றுகூறப்பட்டது. படவே, துறந்தவர் பொருளைப் பெறுதற்குக் காரணம் அவரது ஊழேயென்றும் அவரது முயற்சி யன்றென்றும் பெற்றாமெனக.

§ அஃதில்வழி நில்லாமையின் - அவ்வூழ் (நல்வினை) இல்லாதவிடத்துச் செல்வம் நிலைபெற்றிராமையின்.

¶ "ஆற்றும் பயன்வேண் டாக்கருமம் அந்தக்கரண சுத்திதரும்" என்றுமெய்ஞ்ஞான விளக்கங் கூறுகின்றது. பயனோக்காது செய்யுங்கருமம் நிஷ்காமிய கருமமெனப்படும்.

†† முதலாயின என்றமையின் தண்ணீர்ப்பந்தர் வைத்தல், பெரியோர் தங்க மடங்கட்டுதல், விலைகொடுத்துயிர் காத்தல், கல்விச்சாலை யேற்படுத்துதல், அன்ன சத்திர மேற்படுத்துதல் முதலியவற்றையுங் கொள்க.

() அவை-கடவுட் பூசை முதலியன. ‡‡ செய்க என்றும் பாடமுண்டு.

தேளி.—(இ - ள்.) செல்வம் - செல்வமானது, அற்கா - நிலைபெறுதலில்லாத, இயல்பிற்று - இயல்பினை யுடையதாம், அதுபெற்றால் - அச்செல்வத்தைப் பெற்றால், அற்குப - (அச்செல்வத்தினாற் செய்யப்படும்) அறங்களை, ஆங்கே - அப்பெற்றபொழுதே, செயல் - செய்யக்கடவன், (எ-று).

அல்காவென்பது அற்கா எனத்திரிந்துநின்றது. (செல்வம் நல்) ஊழ்உள்ளவிடத்தல்லது இறந்தவரால்பெறப்படாமையால் 'அதுபெற்றால்' என்றும், அவ்வூழ் இல்லாதவிடத்து நில்லாமையால் 'ஆங்கே' என்றும் சொல்லினார். அச்செல்வத்தினாற் செய்யப்படும் அறங்களாவன: பயனைக் குறியாது செய்யும் கடவுட்பூசையும், தானமும் முதலானவை. அவைஞானத்திற்குக் காரணமாய் மோட்சத்தைத் தருதலால், அவ்வறங்களை 'அற்குப' என்றும், 'செயல்' என்றும் சொல்லினார். இவை இரண்டு பாட்டாலும் செல்வத்தின் நிலையாமை சொல்லப்பட்டது.

(க - து.) செல்வம் நிலைபெறாததா யிருத்தலின், அச்செல்வத்தைப் பெற்றவன் அதுகொண்டு விரைந்து அறஞ்செய்ய வேண்டும் என்பது. (ங)

3. Wealth is perishable; let those who obtain it immediately practise those virtues which are imperishable.

ச. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

பரி.—(இ-ள்.) நாளென்று அறுக்கப்படுவதோரு காலவரையறைபோலத் தன்னைக்காட்டி ஈர்ந்து செல்கின்ற வாளினது வாயதுஉயிர், அஃதுணர்வாரைப்பெறின், (எ-று).

* காலமென்னும் அருவப்பொருள் உலகியல் நடத்தற் பொருட்டு ஆதித்தன் முதலிய அளவைகளாற் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக் கூறுபடாமையின் 'நாளென வொன்றுபோல்' என்றும், அது தன்னை வாளென்று உணரமாட்டாதார் நமக்குப்பொழுது போகாநின்றதென்று இன்புறுமாறு நாளாய் மயக்கலின் 'காட்டி' என்றும், இடைவிடாது ஈர்தலான் † 'வாளது' என்றும், அஃதீர்கின்றமையை உணர்வார் அரியராகலின் 'உணர்வார்ப்பெறின்' என்றுங்கூறினார். ‡ உயிரென்

* கழிந்தது கழிகின்றது கழிவது என்னும் வியவகாரத்திற்குக் காரணமாயிருப்பதுகாலமெனப்படும். அது பிருதிவி முதலிய வற்றைப்போல உருவமுடையதாக விராமையின் 'காலமென்னும அருவப்பொருள்' என்று கூறப்பட்டது. † வாளின்வாயது என்றும் பாடமுண்டு.

‡ உயிரானது சித்தாயிருத்தலால், அது வாளால் அறுக்கப்படுவதாகாதென்க. இது பகவத்கீதை சாங்கியயோகத்தில் "ஆயுதங்கள் இவனை (ஆத்மாவை) வெட்டுவதில்லை; நெருப்பானது இவனைச் சுடுவதில்லை; நீரான இவ

னுஞ் சாதியொருமைப்பெயர் ஈண்டு உடம்பின்மேனின்றது; ஈரப்படு வது அதுவேயாகலின். வாளென்பது ஆகுபெயர். * இனி இதனை

னை நனைப்பதில்லை; வாயுவான திவனை உலர்த்துவதில்லை.'' என்று கூறு வதாலு மறிதற் பாற்றும்.

உயிரானது தன்னையறுத்துச் செல்கின்ற காலமாகிய வாளினது வாயினிடத்தது என்று கூறப்படினும் அறுக்கப்படுவது உயிர்க்கு நிலைக்கள மாகிய உடம்பன்றி உயிரல்லாமையின் 'உயிரென்னும் சாதியொருமைப் பெயர் ஈண்டு(இங்கு)உடம்பின் மேனின்றது; ஈரப்படுவது (காலமென்னு ம் வாளினால் அறுக்கப்படுவது) அதுவே (உடம்பே)யாகலின்'என்று கூறப் பட்டதென்க. உயிருக் கிருப்பிடமான உடம்பை உயிரென்றது தானியாகு பெயராம்,

மைத்திராயண்ணியுபநிடதம் ஆறுவது பிரபாடகம் 15-ல் "சூரியனு குப்பிந்தி அதுகாலமாயிற்று; எனெனின், கலைமுதலியவற்றோடு கூடி யிருப்பதினாற்றான்......வருஷத்தினால் பிராணிகளுண்டாகிறார்கள்; அப் படி யுண்டானவர்கள் வருஷத்தினாலேயே விருத்தியடைகிறார்கள்; வருஷ த்திலேயே லயமடைகிறார்கள்'' என்று கூறுகின்றது. நாலடியார் செல்வ நிலையாமையில் "தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலும், கூற்ற மளந் துநுந் நாளுண்ணும்'' என்றும், அறன்வலி யுறுத்தலில் "வைகலும் வை கல் வரக்கண்டு மஃதுணரார், வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர், வைகலும் வைகற்றம் வாழ்நாள்மேல் வைகுதல், வைகலை வைத்துணரா தார்'' என்றும் கூறுவது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

இனி இதனை (இக்குறளுக்கு) நாளென வொன்றுபோற் காட்டி- நாளென்பது ஒருபொருள்போலத்தோன்றி, உயிரீரும்வாள்-உயிரை யீர்வ தொரு (அறுப்பதாகிய வொரு) வாளாமென் றுரைகூறுவாருமுளர். என வென்பது பெயர்ச்சொல்லாகாது இடைச்சொல்லா யிருத்தலாலும், ஒன்று போற்காட்டி யென்பதற்கு ஒருபொருட் சிறப்பு இல்லாமையாலும், அது என்பது குற்றியலுகர மல்லாமையாலும் அஃது உரையல்ல வென்றறிக.

இம்மறுப்பின் விபரம் வருமாறு:—என என்னும் இடைச்சொல் (என்று சொல்லப்படுவது என்னும் பொருளதாகிய) என்பது என்னும் (வினையாலணையும்)பெயராகாமையாலும், 'ஒன்றுபோற்காட்டி' என்பதற்கு (அறுக்கப்படுவதொரு காலவரையறை போலத்தன்னை (உலகினர்க்குக்) கா ட்டி யென்றுரை கூறாது)குணங்தொழில்முதலியனவாக விராது பொருளா யிருக்கும் நாளை யொருவிசேடமுங் கற்பிக்காது ஒருபொருள் போலத் தோன்றி என்றுரைகூறியதில் யாதொரு சிறப்புங் காணப்படாமையா லும், 'வாளதுணர்வார்' என்பதை வாளது உணர்வார் என்று பிரிக்காது வாள் அது உணர்வார் என்று பிரிக்குமிடத்து அஃது இஃது முதலிய ஆய் தத்தொடர் குற்றியலுகரமொழிகள் நிலைமொழியாக நிற்குமிடத்து "முன் னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி, மன்னல் வேண்டு மல்வழி யான'' என் னும் (தொல்காப்பிய) விதிப்படி அஃதுணர்வார் என்றிருத்தல்வேண்டும்;

நாளென்பதொரு பொருள் போலத்தோன்றி உயிரை யீர்வதொரு வாளா மென்றுரைப்பாருமுளர். என என்பது பெயரன்றி இடைச்சொல்லாகலானும், 'ஒன்றுபோற்காட்டி' என்பதற்கு ஓர் பொருட்சிறப் பின்மையானும், அது வென்பது குற்றிய லுகர மன்மையானும், அஃதுரையன்மையறிக.

தெளி.—(இ-ள்) உயிர் - உயிரானது, நாளென - நாளென்று அளவு செய்யப்படுவதாகிய, ஒன்றுபோல் - ஒருகாலவளவுபோல, காட்டி - (தன்னைக்) காட்டி, ஈரும் - அறுத்துச்செல்லுகின்ற, வாளது - வாளினது வாயினிடத்தது, உணர்வார்ப்பெறின் - (அதனை) அறிவாரைப்பெற்றால், (எ-று).

காலமென்னும் அருவப்பொருள் உலகியலை நடத்துதற்பொருட்டுச் சூரியன் முதலாகிய அளவுசெய்யுங் கருவிகளால் இறப்பு, எதிர்வு, நிகழ்வு எனக் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லாமல் தானாகக் கூறுபடாமையால் 'நாளெனவொன்றுபோல்' என்றும், அக்காலம் தன்னை வாளென்று அறியமாட்டாதவர் நமக்குப்பொழுது போகாநின்றதென்றுமகிழும்படி (அவரை) நாளாய்மயக்கலால் 'காட்டி' என்றும், இடைவிடாமல் அறுத்தலால், 'வாளது' என்றும், அக்காலம் அறுக்கின்றதை அறியவல்லவர் அரியவராயிருத்தலால் 'உணர்வார்ப்பெறின்' என்றுஞ்சொல்லினார். அறுக்கப்படுவது உடம்பேயாகலால் உயிரென்னுஞ் சாதிபொருமைப்பெயர் தானியாகு பெயராய் இங்கு உடம்பையுணர்த்தி நின்றது. வாளினதுவாயை வாளென்றமையின், இது பொருளாகுபெயராம். இதனால் உடம்புகளுக்கு அளவுசெய்யப்பட்ட நாள் கழிகிறவிதம் சொல்லப்பட்டது.

(கு-து.) உடம்பானது நாளாகத் தன்னைக் காட்டி மக்களைமயக்கி வருகின்ற காலதத்துவமென்னும் வாளினது வாயில் அறுபட்டு வருகின்றது என்பது.

4. Time, which shows itself to the ignorant as it were something real, is in the estimation of the wise only a saw which cuts down life.

ரு. நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

பரி.—(இ-ள்.) உரையாடாவண்ணம் நாவையடக்கி விக்குள் எழுவதற்கு முன்னே வீட்டிற்கேதுவாகிய அறம் விரைந்து செய்யப்படும்.

---

அவ்வாறின்றி அதுணர்வார் என்று (அது இது முதலிய முற்றியலுகர மொழி நிலைமொழியாக நிற்க உயிரை முதலாகவுடைய வருமொழிவந்து) புணருமென்பதற்கு விதியில்லாமையாலும் அவ்வுரை பொருந்தாதென்று பரிமேலழகர் மறுத்தாரென்க.

† மேனோக்கிவருதல் ஒருதலையாகலானும். வந்துழிச்செய்தலே யன்றிச் சொல்லலுமாகாமையானும் "வாராமுன்" என்றும், அதுதான் இன்னபொழுது வருமென்ப தின்மையின் 'மேற்சென்று' என்றுங் கூறினார். மேற்சேறல்-மண்டுதல். நல்வினை செய்யுமாற்றின்மேல்வைத்து நிலையாமைகூறியவாறு.

தெளி.—(இ-ள்.) நாச்செற்று - (பேசாதிருக்கும்படி) நாவை யடக்கி, விக்குள்-விக்கலானது, மேல்வாராமுன்-எழுவதற்கு முன்னே, நல்வினை - (மோட்சத்திற் கேதுவாகிய)அறமானது, மேற்சென்று-விரைந்து, செய்யப்படும்-செய்யத்தக்கதாம், (எ-று).

விக்கலானதுமேல்நோக்கி வருதல் நிச்சயமாதலானும், அவ்விக்கல் வந்தவிடத்து வீட்டிற்குக் காரணமான அறத்தைச் செய்தலே யல்லாமல் சொல்லுதலுங் கூடாமையாலும் "வாராமுன்" என்றும், அவ்விக்கல்தான் இன்னகாலத்தில் வருமென்பதில்லாமையால் 'மேற்சென்று'என்றுங்கூறினார். மேற்செல்லல்-துரிதப்படுதல். நல்வினைசெய்யும் வழியின்மேல் வைத்து நிலையாமை சொல்லியவாறாம். இதனால் அந்த நாள்கழிந்தாலுண்டாகும் நிலையாமை சொல்லப்பட்டது.

(க-து.) நாவை யடக்கி விக்குள் எழுவதற்கு முன்பே விரைந்து வீட்டிற் கேதுவாயவறத்தைச செய்யவேண்டும் என்பது.

5. Let virtuous deeds be done quickly, before the hiccup comes, making the tongue silent.

---

சு. ‡ நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

பரி.—(இ-ள்.) ஒருவன் நெருநலுளனாயினான் அவனே இன்றில்லையாயினா னென்றுசொல்லும் நிலையாமை மிகுதியுடைத்து இவ்வுலகம்.

ஈண்டு உண்மை பிறத்தலையும், இன்மை இறத்தலையும் உணர்த்தின்றன. அவை பெண்பாற்கும் உரியவாயினும் * சிறப்புப்பற்றி ஆண்பாற்கே கூறினார். இந்நிலையாமையே உலகின் மிக்கதென்பதாம்.

---

† "புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி, இன்னினியே செய்க வறவினை" என்று நாலடியாரும், "காலைச்செய் வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச், சாலச்செய் வாரே தலைப்படுவார்" என்று அறநெறிச்சாரமுங் கூறுவது மிங்குக் கவனிக்கத் தக்கதாம்.

‡ "மின்னி னிலையில மன்னுயி ராக்கைகள்" என்றனர் சடகோபர்.

* அறிவு ஆற்றல் முதலியவற்றில் பெரும்பான்மையாகப் பெண்பாலினும் ஆண்பால் சிறந்திருப்பதுபற்றி ஈண்டு 'உளன்' என்று ஆண்பாலாகக் கூறப்பட்டது. ஈண்டு ஆண்பால் மற்றைப்பாலுக்கு முபலட்சணமாம்.

தெளி.—(இ-ள்.) இவ்வுலகு - இவ்வுலகமானது, ஒருவன்-,நெருநல்-நேற்றைக்கு, உளன் - உளனாயினான் (பிறந்தவனாயினான்), (அவனே), இன்று - இன்றைக்கு, இல்லை - இலனாயினான் (இறந்தானாயினான்), என்னும் பெருமை- என்று சொல்லும் (நிலையாமையின்) மிகுதியை, உடைத்து-உடையதாயிருக்கின்றது, (எ-று).

இங்கு உளன் என்பதன் பகுதியாகிய உண்மை பிறத்தலையும், இல்லையென்பதன் முதலிலுள்ள இன்மை இறத்தலையும் அறிவித்து நின்றன. பிறத்தலும் இறத்தலும் பெண்பாலுக்கும் உரியனவாயினும், சிறப்புப்பற்றி ஆண்பாலுக்கே சொல்லினர், இந்த நிலையாமையே உலகத்தினிடத்து மிகுந்திருக்கின்றதென்பதாம். இதனால் அவ்வுடம்புகள் ஒரோவிடத்துப் பிறந்தவளவிலே இறத்தல் சொல்லப்பட்டது.

(க-து.) இவ்வுலகமானது நேற்றுப் பிறந்தவன் இன்றைக்கிறந்தானென்னும் நிலையாமையின் மிகுதியை யுடைத்தா யிருக்கின்றது என்பது.

6. This world possesses the greatness that one who yesterday was is not to-day.

எ. * ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

பரி.—(இ-ள்.) ஒருபொழுதளவும் தம்முடம்பும் உயிரும் இயைந்திருத்தலைத் தெளியமாட்டார், மாட்டாதுவைத்தும், கோடியளவுமன்றி அதனினும் பலவாய நினைவுகளை நினையாநிற்பர் அறிவிலாதார்,(எ-று).

இழிவுசிறப்பும்மையாற் பொழுதென்பது ஈண்டுக் கணத்தின்மேனின்றது. † காரணமாகிய வினையினளவே வாழ்தற்கும் அளவாகலின், அஃதறியப்படாத தாயிற்று. பலவாய நினைவுகளாவன: ‡ பொறிகளான் நுகரப்படும் இன்பங்கள் தமக்குரிய வாமாறும், $ அதற்குப் ¶ பொருள்

* "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம், எண்பது கோடிநினைந்தெண்ணுவன—கண்புதைந்த, மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச், சாந்துணையுஞ் சஞ்சலமே தான்" என்றனர் ஔவையார்.

† "வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால், தினைப்போ தளவுநில் லாதுகண்டாய்" என்றனர் பட்டினத்தடிகள்.

‡ செவிமுதலிய இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் சப்த முதலிய இன்ப விஷயங்கள்.

$ அதற்கு-பொறிகளால் அனுபவிக்கப்படும் இன்ப விஷயங்கள் தமக்குரியனவாதற்கு.

¶ இன்பங்களை யநுபவித்தற்குப்பொருள் துணைக்காரணமாதலை கால

துணைக்காரணமாமாறும், அது தம்முயற்சிகளான் வருமாறும், அவற்றை த்தா முயலுமாறும், † அவற்றிற்கு வரு மிடையூறுகளும், அவற்றை நீக்கு மாறும், நீக்கி அப்பொருள் கைகூட்டுமாறும், அதனைப் பிறர்கொள் ளாமற் காக்குமாறும், அதனுன் நட்டாரை யாக்குமாறும், நள்ளாரை யழிக்குமாறும், தாம் அவ்வின்பங்கள் நுகருமாறும் முதலாயின. அறிவிலா ரது இயல்பின்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு. இனிக் ¶ கருதுப வென்பதனை அஃறிணைப் பன்மைப் பெயராக்கி யுரைப்பாருமுளர்.

தெளி.—(இ-ள்.) ஒருபொழுதும் - (அறிவில்லாதவர்) ஒருபொழுதள வும், வாழ்வது—(தம்முடம்பும் உயிருங்கூடி) இருத்தலை, அறியார்-அறிய மாட்டார், (மாட்டாதிருந்தும்), கோடியுமல்ல-கோடியளவுமன்றி, பல-அக் கோடியிலும் பலவாகிய நினைவுகளை, கருதுப-நினையாநிற்பர், (எ - று).

ஒருபொழுதும் என்ற இழிவுசிறப்பு உம்மையால் இங்குப் பொழுதெ ன்பது கணப்பொழுதளவை யுணர்த்திநின்றது. நிமித்தகாரணமாகிய பிரா ரத்த வினையினளவே உடம்பும் உயிரும்கூடி வாழ்வதற்கும் அளவாகலால், அவ் வளவு அறியப்படாததாயிற்று. பலவாகிய நினைவுகளாவன:இந்திரியங்க ளால் அனுபவிக்கப்படும் இன்பங்கள் தமக்குரியவை யாகும்விதமும், அதற் குப் பொருள் துணைக்காரணமாகும் விதமும், அப்பொருள் தம்முயற்சிக ளால் வரும் விதமும், அம்முயற்சிகளைத் தாம் செய்யும் விதமும், அம் முயற்சிகளுக்கு வரு மிடையூறுகளும், அவ் விடையூறுகளை நீக்கும் வித மும், நீக்கி அப்பொருளைச் சேர்க்கும் விதமும், அப் பொருளைப் பிறர் கொண்டுபோகாமற் காப்பாற்றும் விதமும், அப்பொருளால் சிநேகிதரை ஆக்கும் விதமும், பகைவரை அழிக்கும் விதமும். தாம் அவ்வின்பங்களை

டியார் மெய்ம்மையில் "வடுவிலா வையத்து மன்னிய மூன்றில் (அறம் பொருளின்பங்களில்), நடுவண(பொருளான) தெய்த விருதலையு (அறமும் இன்பமு) மெய்தும்" என்று கூறுவதாலுமறிக.

முதற்கருவிக் (முதற்காரணத்திற்) குத் துணையாய் அது காரியப்படு மளவுமிருப்பது துணைக்காரண (கருவி) மெனப்படும். இந்த இன்பத்தை யனுபவிப்போனது மனத்திலுள்ள நல்வினையின் அதிர்ஷ்டம் இன்பத்திற கு நிமித்தகாரணமாம்; அம்மனத்தி னின்றும் அவ்வின்ப முண்டாவதற்குப் பொருள் துணைக்காரணமாம், மனம் முதற்காரணமாம்.

† "இன்னல் தரும்பொருளை ஈட்டுதலுந் துன்பமே, பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—யன்ன, தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா லிழத்தலுந் துன்பமே யாம்" என்பது நீதிவெண்பா.

¶ கருதுப என்பதனைப் பகரவீற்றுப் பலர்பால் வினைமுற்றாகக் கொள் ளாது அகரவீற்று அஃறிணைப் பன்மைப் பெயராக்கி (நினைக்கும் விஷயங் கள் என்று) சொல்லுவாரு முண்டென்பது. இங்குக் கருதுப என்பது வினையாலணையும் பெயர். இதற்குப் பயனிலை பல (எண்ணிறந் தனவாம்) என்பது.

யனுபவிக்கும் விதமும் முதலாயினவாம். அறிவில்லாதவாது இயல்பின் மேல் வைத்து நிலையாமைசொல்லியபடியாம். இதனால் அவ்வுடம்புகள் ஒரு கணமாயினும் நிற்குமென்பது நம்பப்படாமை சொல்லப்பட்டது.

(க-து.) ஒரு பொழுதளவும் தாம் வாழ்வதை யறியாதவர் கோடிக்கு மேலான வெண்ணங்களை யெண்ணுகின்றனர்.

7. Innumerable are the thoughts which occupy the mind of the unwise, who know not that they shall live another moment.

அ. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

பரி.—(இ - ள்.) முன் தனியாத முட்டை தனித்துக் கிடப்ப அதனு ளிருந்த புள்ளுப் பருவம் வந்துழிப்பறந்துபோய தன்மைத்து, உடம்பிற் கும் உயிர்க்கு முளதாய நட்பு, (எ-று).

'தனித்தொழிய' என்றதனான், முன் தனியாமை பெற்றாம். ‡ அஃதாவது கருவுந்தானும் ஒன்றாய்ப் பிறந்து வேறாந்துணையும் அதற்கு $ ஆதாரமாய் நிற்றல். அதனால் அஃது உடம்பிற் குவமையாயிற்று; அத னுள் வேற்றுமையின்றி நின்றே பின் புகாமற்போகலின், புள் உயிர்க் குவமையாயிற்று. முட்டையுட் பிறப்பன பிறவுமுளவேனும், புள்ளையே கூறினார்; ¶ பறந்துபோதற் றொழிலான் உயிரோ டொப்புமை யெய்து வது அதுவேயாகலின். 0 நட்பென்றது ஈண்டுக் குறிப்புமொழியாய் நட் பின்றிப்போத லுணர்த்திநின்றது. சேதனமாய் அருவாய் நித்தமாய உயி ரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முண் மாறாக

‡ அஃதாவது - தனியாமை (பிரியாமை) யாவது.

$ யாதாவதொன்று தன்னிடத்திருக்குமா றிடங் கொடுப்பது ஆதார மெனப்படும். கருவுந்தானும் (முட்டையும்) ஒன்றாய்ப் பிறந்தும், அக்கரு வுருப்பட்டு வேறாகுமளவும் அக்கருவுக்கு முட்டை ஆதாரமா யிருக்கின்ற தென்க.

¶ ஜீவன் பறக்கின்றது; துடிக்கின்றது என்னு முலகவழக்கமு மிங் குணரத்தக்கதாம்.

0 உயிருக்கும் உடலுக்கும் நட்பில்லா திருத்தலை நட்பு என்று கூறி யது அரக்கரைப் புண்ணியசனம் என்பது போன்ற எதிர்மறை யிலக்கணை யாம். குறிப்பு மொழியாவது கூறவேண்டியபொருளை வெளிப்படையாகக் கூறாது ஆராய்ச்சியால் விளங்கும்படி சொல்லுதலாம். இதன் தன்மையை "ஒன்றொழி பொதுச்சொல்" என்னும் நன்னூற் சூத்திரத்தின் விருத்தி யுரையில் விரிவாய்க் காணலாம்.

லின், வினைவயத்தாற் கூடியதல்லது நட்பிலவென்ப தறிக. † இனிக் குடம்பை யென்பதற்குக் கூடென்று உரைப்பாருமுளர். அது புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டு புகுதலுடைமையானும், உடம்பிற்கு உவமையாகாமை யறிக.

தெளி:—(இ-ள்.) உடம்போடு-உடம்பிற்கும், உயிரிடை - உயிர்க்கும், (உண்டாகிய), நட்பு-சிநேகமானது, குடம்பை -(முன்னே தனியாயிருந்த) முட்டையானது, தனிதொழிய-தனித்துக்கிடக்க, புள்-(அதனுளிருந்த) பறவை, பறந்தற்று-(பருவம்வந்தவிடத்து) பறந்துபோனதன்மை யதாம், (எ-று).

'குடம்பைதனிதொழிய' என்றதனால் முன்னர்த் தனியாமை (பிரிந்திராமை) பெற்றாம். அஃதாவது கருவுந்தானும் (மூட்டையும்) ஒன்றாய்ப் பிறந்து அக்கரு வேறாகுமளவும் அதற்கு ஆதாரமாக நிற்றலாம். அதனால் அம்முட்டை உடம்பிற்கு உவமானமாயிற்று; அம்முட்டையினிடத்து வேற்றுமையில்லாது நின்றே பின்பு நுழையாமற் போவதினால், புள் (பறவை) உயிருக்கு உவமானமாயிற்று. முட்டையினிடத்துப் பிறப்பனவாகிய பாம்புமுதலிய பிறவும் இருப்பினும்,பறந்துபோதலாகிய தொழிலால் உயிரோடொப்புமையாயிருப்பது புள்ளேயாதலால் அப்புள்ளையே உவமானமாகக்கூறினார். நட்பென்றது இங்குக் கற்கறித்து நன்கட்டாய் என்பது போலக்குறிப்புச்சொல்லாய் (உயிருடம்பினிடத்து) நட்பில்லாது போதலை யறிவித்து நின்றது. அறிவாயும் அருவாயும் நித்தமாயுமுள்ள உயிரும், அசேதன(ஜட)மாயும் உருவாயும் அநித்தமாயுமுள்ள உடம்பும் தம்முள்ளே மாறுபட்டிருத்தலால்,அவை வினைவசத்தால் கூடியதல்லாமல் அவற்றிற்கு நட்பில்லையென்பதறிக.இதனால் அவ்வுடம்புகள் உயிர்நீங்கியவிடத்துக் கிடக்குமாறு சொல்லப்பட்டது.

---

† இனிக் குடம்பை யென்பதற்குக் கூடு என்றுபொருள் கூறுவாருமுண்டு. அக்கூடு பறவையுடன் தோன்றா திருத்தலாலும், அக்கூட்டில் அப்பறவை மறுபடியும் வந்து நுழைவ துண்டாகையாலும், உடலுக்குக் கூடு உவமான மாகாதென்க. அஃதாவது ஓர் உடம்பினின்றும் நீங்கிய உயிர்மறுபடியும் (வேறு உடம்பிற் புகுவதன்றி) அவ்வுடம்பில் புகுவதில்லாமையால்,குடம்பை யென்பதற்குக் கூடு என்று பொருள் கூறுதல் பொருந்தாதென்று மறுக்கப்பட்டது. "கறந்தபால் முலைப்புகா கடைந்த வெண்ணெய் மோர்புகா, உடைந்த சங்கி னோசையு முயிர்களு முடற்புகா" என்றுசிவவாக்கியர்கூறுவதிங் குய்த்துணரத்தக்கதாம். நாலடியார் யாக்கை நிலையாமையில் "கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி, வாளாதே போவரான் மாந்தர்கள் - வாளாதே, சேக்கை (கூடு) மர னொழியச் சேணீங்கு புட்போல, யாக்கை தமர்க்கொழிய நீத்து" என்றுள்ள செய்யுள் குடம்பைக்குக் கூடு என்று பொருள்கூறுவதற்குச் சாதனமாய் நின்றதென்க.

(க-து.) உயிர்க்கும் உடம்பிற்கும் சிறிதுஞ் சிநேகமில்லை.

8. The love of the soul to the body is like the love of a bird to its egg which it flies away from and leaves empty.

கூ. † உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

பரி:—(இ-ள்.) ஒருவனுக்குச் சாக்காடு வருதல் உறக்கம் வருதலோ டொக்கும்; அதன்பின் பிறப்பு வருதல் உறங்கி விழித்தல் வருதலோ டொக்கும், (எ-று).

*உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருகின்றாற்போலச் சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருமென்பது கருத்து. நிலையாமையே நிலைபெற்றவாறு அறிவித்தற்குப் பிறப்பும் உடன்கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *சாக்காடு*-(ஒருவனுக்கு) *மரணம்*, (*வருதல்*), *உறங்குவதுபோலும்-தூக்கம்* (*வருதல்*) *போலும்*, *பிறப்பு* - (*அம்மரணத்தின் பின்னே*) *பிறப்பு*, (*வருதல்*), *உறங்கிவிழிப்பதுபோலும் - தூங்கிவிழித்தல்* (*வருதல்*) *போலும்*, (*எ-று*).

*உயிர்களுக்கு உறங்குதலும் விழித்தலும் இயல்பாய் விரைவாக மாறி மாறி வருதல்போல இறத்தலும் பிறத்தலும் இயல்பாய் விரைவாக மாறி மாறி வருமென்பது கருத்து. இறத்தலாகிய நிலையாமையே நிலைபெற்ற விதத்தை அறிவித்தற்குப் பிறப்பும் உடன் சொல்லப்பட்டது. இதனால் அவ்வுடம்புகளுக்கு இறப்பும் பிறப்பும் மாறி மாறி வருமாறு சொல்லப்பட்டது. உறக்கம்—சுழுத்தி.*

(க-து.) *சாதலும் பிறத்தலும் உறங்குவதும் விழிப்பதும் போன்றனவாம் என்பது.*

9. Death is like sleep; birth is like awaking from it.

க0. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

† *"பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலும், உறங்கலும் விழித்தலும் போன்ற தன்மையின்" என்பது மணிமேகலை.*

பரி:—(இ-ள்.) * வாதமுதலியவற்றின் இல்லாய உடம்புகளுள் ஒதுக்கிருந்தே போந்த உயிர்க்கு எஞ்ஞான்றும் இருப்பதோரில் இதுகாறும் அமைந்ததில்லைபோலும், (எ-று).

† அந்நோய்கள் இருக்க அமைந்த ஞான்று இருந்தும், வெகுண்டஞான்றுபோயும், ஒருடம்பினும் நிலைபெறாது வருதலால் 'துச்சிலிருந்த' என்றார். பின் புறப்படாது புக்கேவிடுமில் அமைந்ததாயின், ‡ பிறரிற்களுள் ஒதுக்கிராதென்பதாம்; ஆகவே, $ உயிரோடு கூடிநிற்பதோருடம்பும் இல்லையென்பது பெறப்பட்டது. இவை யேழு பாட்டானும், முறையே ¶ யாக்கைகட்கு வரைந்த நாள் கழிகின்றவாறும், கழிந்தால் 0 உளதாம்நிலை

* "இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே,இடும்பொய்யை மெய்யென் றிராதே", "எல்லாப் படியாலு மெண்ணினு லிவ்வுடம்பு,பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை" என்பது நல்வழி.

† வாத பித்த சிலேத்தும மென்னும் நோய்கள்(உயிராகிய தான் உடலில் தங்கி) இருக்க மேம்படாது அடங்கியிருக்கும் காலத்தில் (உடலில் தங்கி) இருந்தும், (அந்நோய்கள்) வெகுண்டஞான்று(கோபித்த காலத்தில் அஃதாவது மேம்பட்டு வருத்தியகாலத்தில்) (அவ்வுடலை விட்டுப்) போயும் ஒருடம்பிலும் நிலைத்திருத்தலை யடையாது உயிர் சுழன்றுகொண்டிருக்குமென்றறிக.

‡ பிறரென்றது வாதமுதலிய நோய்களை.

$ புறநானூறு "இருங்கடலுடுத்த"என்னுஞ் செய்யுளில்"உடம்பொடு நின்ற வுயிரு மில்லை" என்று கூறுகின்றது.

¶ (1) 'நாளென வொன்று போற்காட்டி' என்னுங் குறளால் உடல்களுக்கு ஏற்படுத்திய நாள்கழிகின்றவகையும், (2) "நாச்செற்று' என்னுங் குறளால் அந்நாள் கழிந்தால் உண்டாகும் நிலைமையும், (3) 'நெருநலுளனொருவன்' என்னுங் குறளால் அவ்வுடல்கள் ஒவ்வோரிடத்துப் பிறந்த போதேசாதலும், (4) 'ஒருபொழுதும்' என்னுங் குறளால் அவ்வுடல்கள் ஒருகணப்போதாவது நிலைத்திருக்குமென்பது தெளிந்தறியப்படாமையும், (5) 'குடம்பை தனித்தொழிய' என்னுங் குறளால் உயிர்நீங்கியவிடத்து உடல்கள் கிடக்கும்வகையும், (6) 'உறங்குவது போலும்' என்னுங் குறளால் உடல்களுக்கு இறத்தலும் பிறத்தலும் மாறிமாறி வரும் வகையும்,, (7) 'புக்கில மைந்தின்று' என்னு மிக்குறளால் மாறிமாறிப் பிறந்திறக்கும் உடல்கள் உயிருக்கு உரியனவல்ல வென்பதும் என்று இவ்வகையால் உடம்பு நிலைத்திராமையைப்பற்றிக் கூறியவகையைக் கண்டுகொள்க என்பதாம். "மூப்பு,துக்கம், நோய் என்னுமிவை வசிப்பதாயும், பசி,தாகம்,குளிர், கானலென்னு மிவற்றால் பயத்தை யுண்டு பண்ணுவதாயும், பெரும்பான்மையும் இரஜோகுண முள்ளதாயும் பஞ்சபூதங்களுக் கிருப்பிடமாயும்,நிலையற்றதாயுமிருக்கிற இந்தச்சரீரமாகியவீட்டை இவனாத்மா மறுபடியு மடையாவாறு செய்யவேண்டும்" என்று மனுதருமசாஸ்திரம் ஆறாவதத் தியாயத்திற் கூறுவதுமிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

0 'உளதாயநிலையாமையும்' என்றும் பாடமுண்டு.

மையும், அவை ஒரோவழிப் பிறந்த வளவிலே இறத்தலும், ஒருகணமாயி னும் நிற்குமென்பது தெளியப்படாமையும், உயிர்நிலையவழிக் கிடக்குமாறும், அவற்றிற்கு இறப்பும் பிறப்பும் மாறி மாறி வருமாறும், அவைதாம் உயிர்க்குரிய அன்மையுமென்று, இவ்வாற்றால் யாக்கை நிலையாமை கூறியவாறு கண்டுகொள்க.

தெளி:—(இ-ள்.) உடம்பினுள் - (வாதமுதலாகிய நோய்களின் வீடுகளாகிய) உடம்புகளுள், துச்சிலிருந்த-ஒதுக்குக்குடியிருந்தே வந்த, உயிர்க்கு-உயிருக்கு, புக்கில்-என்றைக்கும் இருப்பதாகிய ஒரு வீடானது,அமைந்தின்றுகொல்-(இதுவரையில்) அமைந்ததில்லைபோலும், (எ-று).

உயிரானது அவ்வாதமுதலாகிய நோய்களடங்கியிருக்க அமைந்தகாலத்தில் உடம்பில் இருந்தும், அவை, கோபித்த காலததில் அவ்வுடம்பை விட்டுப்போயும், ஒருடம்பிலும் நிலைபெறாமல் வருதலால் 'துச்சிலிருந்த' என்றார். பின்னே புறப்படாமல் புகுந்தேவிடுகிற வீடு அமைந்ததாயின், பிறர் வீடுகளில் ஒதுக்குக்குடி இராதென்பதாம். ஆகவே, உயிரோடுகூடி நிற்பதாகியவோருடம்பும் இல்லையென்பது பெறப்பட்டது. இதனால், அவ்வுடம்புகள் உயிருக்கு உரியவை அல்லவென்பது சொல்லப்பட்டது. 'காளை' என்பது முதலாகிய எழுகுறள்களாலும் யாக்கை நிலையாமை சொல்லப்பட்ட தென்றறிக. வீடு-உடம்பு.

(க-து.) உயிருக்கு நிலையாயிருப்பதோருடம்பு என்றுமில்லை.

10. It seems as if the soul, which takes a temporary shelter in a body, had not attained a home.

## பதின்மூன்றாவது அதிகாரம்.

## துறவு:—Renunciation.

பரி.—அஃதாவது † புறமாகிய செல்வத்தின்கண்ணும் ‡ அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாய $ பற்றினை, ¶ அவற்றது நிலையாமை நோக்கி விடுதல். அதிகார முறைமையும் இதனானேவிளங்கும்.

தெளி;—அஃதாவது புறமாகிய செல்வத்திலும் அகமாகிய உடம்பிலும் உண்டாகியபற்றை, அவற்றினது நிலையாமையைப் பார்த்து விடுதலாம். அதிகாரம் வைத்தமுறைமையும் இதனாலே விளங்கும்.

க. 0 யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

† புறம்-வெளி. ‡ அகம்-உள். $ பற்று-அபிமானம். ¶ அவற்றது-புறமாகியசெல்வம் அகமாகிய உடமபு என்னும் இரண்டனது.

0 யாதியா தொருவ னீங்கியா னேக லதனினு லதனிலா லிலனென்றேதலா லினைத்துத் துயர்தருமெனநீத் துயர்பரம் பொருளினைக் காட்டும்' நீதிலோர் குரவனெங்குள னெனவே தேடுமோல்'' என்பதுவைராக்கியதீபம்'

பரி:—(இ-ள்.) ஒருவன் யாதொருபொருளின் யாதொருபொருளின் நீங்கினான், அவன் அப்பொருளால் அப்பொருளால் துன்பமெய்துதல் இலன், (எ-று).

*அடுக்குகள் பன்மை குறித்து நின்றன. நீங்குதல்-துறத்தல். ஈண்டுத் துன்பமென்றது இம்மைக்கண் ‡ அவற்றைத்தேடுதலானும், காத்தலானும், இழத்தலானும் வருவனவும், மறுமைக்கண் பாவத்தான் வருவனவும் ஆய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப்பொருளையும் ஒருங்கே விடுதல் தலைமை; அஃதன்றி ஒரோவொன்றாகவிடினும் அவற்றான் வருந் துன்பம் இலனாமென்பது கருத்து.*

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) யாதனின் யாதனின்-யாதொருபொருளி னின்றும் யாதொருபொருளினின்றும், நீங்கியான்-நீங்கினான், (அவன்), அதனின் அதனின்-அப்பொருளினால் அப்பொருளினால், நோதல்-துன்பமடை தல், இலன்-உடையவனல்லன், (எ-று).

*யாதனின் யாதனின், அதனின் அதனின் என்னும் அடுக்குகள் பன்மை (மிகுதி)ப் பொருளில் வந்தன. நீங்குதல்-விட்டொழிதல் இங்குத் துன்பமென்றது இப்பிறப்பின்கண் அப்பொருள்களைத் தேடுதலாலும், காப்பாற்றுதலாலும், இழந்துவிடுதலாலும் வருவனவும், மறுபிறப்பின் கண் பாவத்தால் வருவனவும் ஆகிய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப் பொருள்களையும் ஒருமிக்கவிடுதல் தலைமையான துறவாகும்; அப் படியல்லாமல் அப்பொருள்களை ஒவ்வொன்றாக விட்டாலும் விட்ட அப் பொருள்களால் வருந்துன்பம் அவனுக்கு இல்லையாமென்பது கருத்து.*

(க-து). எவ்வெப்பொருள் ஒருவனால் விடப்படுகின்றதோ அவ்வப்பொருளால் அவன் துன்பத்தை யடைவதில்லை.

1. Whatever thing a man has renounced, by that thing he cannot suffer pain.

உ. † வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

‡ "ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக், காத்தலு மாங் கே கடுந்துன்பங்-காத்தல், குறைபடிற் றுன்பம் கெடிற்றுன்பந் துன்பக், குறைபதி மற்றைப் பொருள்" என்பது நாலடியார்.

† "வேண்டினுண் டாகத் துறக்கவென் றமையால் விருத்தனாய்க் கருத்தழிந்துருவம், காண்டல்செய் விழிபஞ் சடைந்துட னடுங்குங் காலம் வந் தடைவதன் முன்னர்,மாண்டகற் பதனாற் சாலியைப் போலு மனைவியா தியசமா தியினாற், றீண்டுமோ ரந்தம் பலவடைந் திடுதற் கெண்ணிநீத் திடு வர்புண் ணியரே" என்பது வைராக்கிய தீபம்.

பரி:—(இ-ள்.) எல்லாப்பொருள்களையுந் துறத்தலால் ஒருவர்க்கு இம்மைக்கண்ணே உளவாம் முறைமையையுடைய இன்பங்கள் பல; அவ்வின்பங்களை வேண்டின், ‡ அவற்றைக் காலம் பெறத் துறக்க.

*அவ்வின்பங்களாவன: அப்பொருள்கள் காரணமாக மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும், அவை நன்னெறிக்கட் சேறலானும் வருவன, ¶ இளமைக்கண் துறந்தான் அவற்றை நெடுங்காலம் எய்துமாகலின் 'உண்டாகத் துறக்க' என்றார். இன்பங்களென்பதும்காலமென்பதும் வருவிக்கப்பட்டன. இம்மைக்கண் துன்பங்கள் இலவாதலேயன்றி இன்பங்கள் உளவாதலும் உண்டென்பதாம்.*

தெளி:—(இ-ள்). துறந்தபின் - (எல்லாப்பொருள்களையும்) துறத்தலால், (ஒருவனுக்கு), ஈண்டு-இப்பிறப்பிலே, இயற்பால-உண்டாகுமுறைமையையுடைய இன்பங்கள், பல-பலவாம், வேண்டின்-(அவ்வின்பங்களை) விரும்பினால், உண்டாக-(காலம்) உண்டாக, துறக்க - (அப்பொருள்களைத்) துறக்கக்கடவன், (எ-று).

*அவ்வின்பங்களாவன: துறந்த அப்பொருள்கள் காரணமாக மனமும் வாக்கும் காயமும் அலையாது நிற்றலாலும், அம்மனம் வாக்குக்காயங்கள் நல்வழியிற் செல்லுதலாலும் வருவன. இளமைப்பருவத்திற் றுறந்தவன் அவ்வின்பங்களை நெடுங்கால மடைவானாதலால் 'உண்டாகத் துறக்க' என்றார். இன்பங்களென்பதும் காலமென்பதும் வருவிக்கப்பட்டன. இப்பிறப்பின்கண் துன்பங்கள் இல்லாமற் போதலே யல்லாமல் இன்பங்கள் உண்டாதலும் உண்டென்பதாம்.*

(க-து.) *இன்பங்களை விரும்பினவன் எல்லாப்பொருள்களையுந் துறக்கக்கடவன் என்பது.*

2. After a man has renounced all things, there will still be many things in this world which he may enjoy if he should desire them; let him, while it is time, abandon the world.

ரு. † அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

‡ *அவற்றைக் காலம் பெறத் துறக்க-எல்லாப்பொருளையும் (தேகத்தோடு கூடியிருக்கும்) காலம் (துறவறத்தில்நீடித்து) இருக்க விட்டுவிடக்கடவன்.*

¶ *"நரைவருமென் றெண்ணி நல்லறி வாளர், குழவி யிடத்தே துறந்தார்" என்பது நாலடியார்.*

† *"ஐம்புல னடக்கவேண் டும்விடல் வேண்டும் மொருங்குவேண் டியவனைத்தையுமென், றும்பரும் பரவு மொருதமிழ் வேத முரைத்தலா னேரிரு வகையா, நம்புறச் சார்பை வெறுத்தவா வறுத்தைம் புலனொழித் தொ*

பரி:—(இ-ள்.) வீடெய்துவார்க்குச் செவிமுதலிய ஐம்பொறிகட்கு முரியவாய ஓசைமுதலிய ஐம்புலன்களையுங் கெடுத்தல்வேண்டும்; கெடுக்குங்கால், ‡ அவற்றை நுகர்தற்பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும் ஒருங்கே விடுதல் வேண்டும், (எ-று).

¶ புலமென்றது அவற்றை நுகர்தலை. 0 அது மனத்தைத் துன்பத்தானும் பாவத்தானும் அன்றி வாராத பொருள்கண்மேல் அல்லது வீட்டுநெறியாகியயோகஞானங்களிற் செலுத்தாமையின்,()அதனை 'அடல்வேண்டும்' என்றும், * அஃது அப்பொருள்கண் மேற்செல்லின், அந்நுகர்ச்சி விறகுபெற்ற தழல்போல் முறுகுவதல்லது அடப்படாமையின் வேண்டிய வெல்லா மொருங்குவிடல்வேண்டும் என்றுங் கூறினார்.

தெளி:—(இ-ள்.) (முத்தியை யடைவோர்க்கு) ஐந்தன்-செவிமுதலாகிய ஐம்பொறிகளுக்கு (உரியவாய),புலத்தை-(ஓசைமுதலாகிய ஐம்) புலன்களையும் (அனுபவித்தலை), அடல்வேண்டும்-கெடுத்தல்வேண்டும், (கெடுக்கும்போது), வேண்டியவெல்லாம்-(ஓசைமுதலாகிய அப்புலன்களை யனுபவித்தற்பொருட்டுத்)தாம்படைத்த பொருள்களை யெல்லாம்,ஒருங்கு-ஒருமிக்க, விடல்வேண்டும் - விடுதல்வேண்டும், (எ-று).

'புலம்'என்றது சப்தமுதலிய விஷயங்களைச் செவிமுதலிய விந்திரியங்கள் அனுபவித்தலை. அவ்வனுபவிப்பு மனத்தைத் துன்பத்தினாலும் பாவத்தினாலும் தேடப்பட்டுவரும் பொருள்களின்மேல் அல்லாமல் முத்திவழியாகிய யோகஞானங்களிற் செலுத்தாமையால் அதனை 'அடல்வேண்டும்' என்றும், அம்மனம் அப்பொருள்மேல் சென்றால் அவ்வனுபவிப்பு விறகிட்ட நெருப்பைப்போல வளர்வதல்லது கெடுக்கப்படாமையால் வேண்டிய வெல்லா மொருங்குவிடல் வேண்டும் என்றும், சொல்லினார்.

முங்கினு டருமச், செம்பொருள் காண்ப தறிவறி யாமை சிதைத்தல்வீடெனத்திகழ் தருமால்'' என்பது வைராக்கிய தீபம்.

‡ அவற்றை-சத்த பரிச ரூப ரச கந்த மென்னும் ஐம்புலன் (விஷயங்)களை.

¶ புலமென்றது இங்கே அவற்றை (சப்தாதி விஷயங்களை) (செவியாதி யிந்திரியங்கள்) அனுபவித்தலை யுணர்த்தி நின்றது.

0 அது (நுகர்தல்) மனத்தினைப் பிறரைத் துன்பப்படுத்துவதனாலும் பாவச்செய்கையாலு மல்லாமல் வாராத (வரும்) பொருள்களின்மே லல்லாமல் முத்திபெறற்கு வழியான யோகத்திலும் ஞானத்திலும் செலுத்தாமையின் () அதனை (அந்நுகர்தலை) 'அடல்வேண்டும்' என்று கூறினார்; அன்றி வாராத என்னு மிரண் டெதிர்மறை வினைச்சொற்களும் வரும் என்னும் பொருளை யுணர்த்தி நின்றன.

* எரிகிறதைப் பிடுங்கினால் கொதிக்கிறது அடங்கும் என்பதுபோல ஒருவர் தமக்குள்ள பொருள்களனைத்தையுந் துறந்தால் அவர்க்கு விஷயானுபவம் குறையுமென்பது பெறப்படுகின்ற தென்க.

(க-து.) முத்தியடைய விரும்புவோர் இந்திரிய நிக்கிரகஞ் செய்வதோடு எல்லாப்பொருள்களையும் பற்றறத் துறக்கவேண்டும்.

3. Let the five senses be destroyed ; and at the same time, let every thing be abandoned that the ascetic has formerly desired.

---

சு. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து

பரி:—(இ-ள்.) பற்றப்படுவ தொரு பொருளும் இல்லாமை தவஞ் செய்வார்க்கு இயல்பாம்; அஃதன்றி, ஒன்றாயினும் உடைமை அத்தவத்தைப் போக்குதலான், மீண்டும் மயங்குதற் கேதுவாம், (எ-று).

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. † நோன்பென்பதூஉம் மயலென்பதூஉம் ஆகுபெயர். ‡ பெயர்த்தலான் என்பது திரிந்து நின்றது; நோன்பைப் பெயர்த்தலா னென வேற்றுமைப் படுத்துக் கூட்டுக. ¶எல்லாப்பொருள்களையும் விட்டு ஒரு பொருளை விடாத வழியும் அதுசார்பாக விட்டனவெல்லாம் மீண்டுவந்து தவத்திற் கிடையீடாய் மனக்கலக்கஞ் செய்யுமென்பது கருத்து. இவை நான்கு பாட்டானும் எனதென்னும் புறப்பற்று விடுதல் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்.) நோன்பிற்கு-தவஞ்செய்வார்க்கு, ஒன்று-(பற்றப்படுவது) ஒருபொருளும், இன்மை-இல்லாதிருக்கை, இயல்பாகும்-இயல்பாம், உடைமை-(பற்றப்படுவதான ஒருபொருளு மில்லாதிருத்தலன்றி ஒன்றாயினும்) உடைத்தா யிருக்கை, பெயர்த்து-(அத்தவத்தைப்)போக்குதலால்,மற்றும்-மீண்டும்,மயலாகும்-மயங்குதற்குக் காரணமாகும்,எ-று.

† நோன்பு எனனும் பண்புப்பெயர் அதனையுடையவர்க்காதலால் பண்பாகுபெயராம்; மயலென்னும் காரியப்பெயர் அதற்குக் காரணமான பொருளுடைமைக் காதலால் காரியவாகு பெயராம்.

‡ பெயர்த்தலான் என்பதனை நோன்பிற்கு என்பதனோடுகூட்டவேண்டியிருத்தலால்,'நோன்மைப் பெயர்த்தலானென வேற்றுமைப்படுத்துக்கூட்டுக' என்றார். இங்கு நோன் பென்பதனோடு இரண்டனுருபு புணர்த்தப்பட்டது. வேற்றுமைப் படுத்தல்-வேற்றுமை யுருபேற்றதாகச் செய்தல். நோன்பிற்கு என்பது பெயர்த்தலான் என்பதனோடு புணரும்போது குவ்வுருபுகெட்டு நோன்புஎன நின்ற தென்க.

¶ "பரமஹம்சனு யுள்ள யதி இரண்டு கௌபீனங்களையும், ஒரு கந்தல் துணியையும், ஒரு தண்டத்தையும் ஸ்வீகரிக்கலாம்; இவற்றைவிட அதிகம் விதிக்கப்படவில்லை; ஆகையினால் இவற்றைவிட அதிகமாய்ச் சுவீகரித்தால் ரௌரவநரகத்தை யடைந்து பசு பட்சிமுதலிய யோனியில் பிறக்கிறான்" என்று நாரதபரிவிராஜகோபநிஷத்து மூன்றாவது உபதேசத்தில் கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

ஒன்றும் என்னும் இழிவுசிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. நோற்பவரை நோன்பென்றும் மயலுக்கு ஏதுவை மயலென்றுங் கூறினமையின், அவைஆகுபெயர்களாம். பெயர்த்தலான் என்பதுபெயர்த்து எனத்திரிந்து நின்றது; நோன்பைப் பெயர்த்தலால் என்று வேற்றுமை விரித்துக் கூட்டிக்கொள்க. எல்லாப் பொருள்களையும் விட்டு ஒருபொருளை விடாத விடத்தும், அப்பொருள் சார்பாக விட்ட பொருள்களெல்லாம் திரும்பி வந்து தவத்திற்கு விரோதமாய் மனக்கலக்கம் செய்யு மென்பது கருத்து. இவை நான்கு பாட்டாலும் என தென்னும் புறப்பற்று விடுதல் சொல்லப்பட்டது.

(க - து.) தவஞ் செய்வார்க்கு யாதொருபற்றுங் கூடாது.

4. To be altogether destitute is the proper condition of those who perform austerities; if they possess anything, it will change their resolution and bring them back to their confused state.

ரு. * மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

பரி.—(இ - ள்.) பிறப்பறுத்தலை மேற் கொண்டார்க்கு † அதற்குக் ‡ கருவியாகிய உடம்பும் மிகையாம்; ஆனபின், அதற்கு மேலே இயை பில்லனவுஞ் சில தொடர்ப்பா டுளவாதல் என்னும், எ - று.

உடம்பென்ற பொதுமையான், ¶ உருவுடம்பும், அருவுடம்புங் கொள்ளப்படும். அவற்றுள், அருவுடம் பாவது $ பத்துவகை இந்திரிய வுணர்

* நாரதபரிவிராஜகோபநிஷத்து ௬-வது உபதேசத்தில் "சத்தியவாக்குள்ளவனும், ஞானவைராக்கியங்களோடு கூடினவனும், தேகமாத்திர மிச்சமாயுள்ளவனும் (சந்நியாசி) வசிக்கவேண்டும்" என்று கூறுவதும், மனுதரும சாஸ்திரம் ஆறுவதத்தியாயத்தில் "வேலைக்காரன் தனக்கு யஜமானன் சம்பளம் கொடுக்கும் நாளை யெதிர்பார்ப்பதுபோலத் தன்தேகநாச காலத்தை (சந்நியாசி) யெதிர்பார்த்திருக்கவேண்டும்" என்றுகூறுவது மிங்குக் கவனிக்கத்தக்கனவாம்.

† அதற்கு-பிறப்பறுத்தலுக்கு.

‡ உடம்பில்லாது மாயையில் லயப்பட்டிருக்கும் பிரளய காலத்தில் சீவர்கள் பிறப்பையொழித்துக் கொள்ளுதல்முடியாமையால், அவர்களுக்கு உடம்பு பிறப்பை யொழித்தற்குக் கருவியா (காரணமா) யிற்றென்க "உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே, அயிர்ப்பின்றி யாதியை நாடு" என்று ஔவை குறள் கூறுவது மிங்கறியத் தக்கதாம்.

¶ உருவுடம்பு - ஸ்தூலசரீரம். அருவுடம்பு-சூக்குமசரீரம்.

$ பத்து வகை இந்திரிய வுணர்வு-மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐவகை ஞானேந்திரியங்களாலும், வாக்குப் பாதம் பாணி பாயுரு

யோடும் * ஐவகை வாயுக்களோடும் † காம வினை விளைவுகளோடுங் கூடிய மனம்; இது ‡ நுண்ணுடம் பெனவும் படும். இதன்கட்பற்று நிலையாமை உணர்ந்ததுணையான் விடாமையின், விடுதற் குபாயம் ¶ முன்னர்க்கூறுப. இவ்வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை யுணர்ந்து, இவற்றான் ஆய § கட்டினை () இறைப்பொழுதும் பொறாது வீட்டின்கண்ணே விரைத

---

உபத்தமென்னும் ஐவகைக் கருமேந்திரியங்களாலும் உண்டாகும் ஞானம்.

* ஐவகைவாயு—பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னும் ஐந்துவகை வாயுக்கள். தருக்கசங்கிரகம் "சரீரத்தினகத்துச் சஞ்சரிக்கும் வாயுப் பிராண னெனப்படும்; அஃதொன்றாயினும் உபாதி வேறுபாட்டால், பிராணன் அபானன் முதலிய பெயர்பெறும்" என்று கூறுகின்றது.

† காமவினை விளைவு-பொருள்களை விரும்புவதாகிய ஆசையு (காமமு)ம், நல்வினை தீவினைகளின் சம்ஸ்கார வாயிலாக வரும் சுகதுக்கங்களுமாம். விசாரசாகரம் புத்தியின் தன்மையைச் சொல்லுமிடத்து "காமகருமங்களுடன் கூடியபுத்தி" என்று கூறியிருத்தலு மிங்கறியத் தக்கதாம்.

‡ சாரீரகோபநிஷத்து "ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள்(பத்து), பிராணன் ஐந்து, மனம் புத்தி இந்தப்பதினேழுடன் கூடினது சூட்சும தேகம் அல்லது லிங்கதேகம் என்று சொல்லப்படுகின்றது" என்று கூறுகின்றது. நுண்ணுடம் பெனினும் சூக்குமவுடம்பெனினும் ஒக்கும்.

"சூக்கும சரீரமே அவித்தை, காமம், கர்மமென்னு மிம்மூன்றுடன் கூடிப் புரியஷ்டக மென்று கூறப்படுகின்றது. அஷ்டபுரியின் கூட்டத்திற்குப் புரியஷ்டகமென்று பெயராம். அவ்வஷ்டபுரியாவன.-(1) ஞானேந்திரிய பஞ்சகம், (2) கர்மேந்திரிய பஞ்சகம், (3) அந்தக்கரண சதுஷ்டயம், (4) பிராண பஞ்சகம், (5) பூதபஞ்சகம், (6) அவித்தை, (7) காமம், (8) கர்மம் என்பனவாம். * * * * இஃதெனக்குக் கிடைக்க வேண்டுமென்னு மந்தக் கரணத்தின் விர்த்தி விசேஷம் ராகமாம் அதுவே காமமெனப்படும். கர்மமோ சஞ்சிதம், ஆகாமியம், பிராரப்தமென மூவகைத்தாம்" என்று தத்வாநுசந்தானங் கூறுகின்றது.

¶ முன்னர்க்கூறுப என்றது இவ்வதிகாரத்தின் பத்தாவதாகிய "பற்றுக பற்றற்றான்' என்னுங் குறளை; இக்குறளின் விசேடவுரையில் "அப்பற்றுவிடுதற்கு உபாயம் இதனால் கூறப்பட்டது" என்று கூறியிருத்தலு மிங்கறியத்தக்கதாம்.

§ கட்டாவது முத்திநெறியிற் புகவொட்டாது தடுத்து மனைவி முதலியவரிடத்து நேசமிகச்செய்து அது காரணமாகப் பராதீனமாக்குதல்.

() பிறப்பறுத்தலை மேற்கொண்டார் உடம்பினாலாயகட்டினை இறைப்பொழுதும் பொறாது வீட்டின்கண்ணே விரைதலின் என்பது "இவனதி

வின் 'உடம்புமிகை' என்றார். இன்பதுன்பங்களான் உயிரோடு * ஒற்றுமை யெய்துதலின், இவ்வுடம்புகளும் யானெனப்படும். இதனான் அகப்பற்று விடுதல் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பிறப்பறுக்கலுற்றார்க்கு - பிறவியை நீக்குமுயற்சியை மேற்கொண்டவருக்கு, உடம்பும்-(அப்பிறப்பை நீக்குதற்கு உதவியாகிய) உடம்பும், மிகை-அதிகமாம், (ஆனபின்), மற்றும்-அதற்குமேலே, தொடர்ப்பாடு-(சம்பந்தமில்லாத பொருள்களும் சில) சம்பந்த முடையனவாதல், எவன்-என்னாகும், (எ-று).

கொல்-அசை. பொதுப்பட உடம்புஎன்றதால் உருவுடம்பும், அருவுடம்பும் கொள்ளப்படும். அவ்விருவகை யுடம்புகளுள், அருவுடம்பாவது பத்துவகை இந்திரிய வுணர்வுகளோடும் ஐவகை வாயுக்களோடும் காம கர்ம விளைவுகளோடும் • கூடியமனம்; இது சூட்சுமசரீர மெனவும்படும். இவ்வுடம்பினிடத்தில் அபிமானம் நிலையாமையையறிந்த மாத்திரத்தால் விடாமையினால், விடுவதற்கு உபாயம் மேலே கூறுவார். உருவுடம்பு அருவுடம்பென்னு 'மிவ்விருவகை யுடம்புகளால் துன்பம் இடைவிடாமல் வருதலையறிந்து, இவ்வுடம்புகளா லாகிய பந்தத்தினைக் கணப்பொழுதும் பொறுக்காமல் முத்தியினிடத்து விரைந்து செல்வதனால் 'உடம்புமிகை' என்றார். (யான்சுகி, யான்துக்கிஎன்று) இன்பதுன்பங்களை யனுபவித்தலினால், உயிரோடு ஒற்றுமை யடைந்திருத்தலால் இவ்விருவகை யுடம்புகளும் யானென்று சொல்லப்படும். இதனால் யானென்னும் அகப்பற்று விடுதல் சொல்லப்பட்டது.

(க-து.) பிறப்பை யொழிக்க முயல்வார்க்குடம்பும் பாரமாம்.

5. What means the addition of other things to those who are attempting to cut off future births, when even their body is too much for them.

---

காரி யானோ னிந்திரி யங்க ளாலும், புவனதெய் வங்க ளாலும் பூதபௌதிகங்க ளாலும், தவஞ்சூழன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப், பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னேனே'' என்று கைவல்லிய நவநீதங் கூறுவதால் நன்கு விளங்கும்.

* இன்பதுன்பங்களை யனுபவித்தலினால், உயிரோடு உடம்புஒற்றுமை யடைந்திருத்தலாம். அஃதாவது இன்பதுன்பங்களை யனுபவிப்பது இன்னதுதானென்று அறியாமலிருத்தலாம். உயிர்க்கு உடம்பு வேறுபட்டதென்பது யோகஞானங்களாலன்றி வேறுவகையால் பிரத்தியட்சமாகக் காண்டல் முடியாமையின், யோகஞானமில்லாதவர்களுக்கு உயிரும்உடம்பும் ஒற்றுமை யுடையனவாகவே விளங்குமென்க. "ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும், வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர்'' என்பது நன்னூல்.

௬. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

பரி:—(இ.ள்.) தானல்லாத உடம்பை யானென்றும் தன்னோடியை பில்லாத பொருளை எனதென்றுங்கருதி, † அவற்றின்கட் பற்றுச்செய் தற் கேதுவாகிய மயக்கத்தைக் கெடுப்பான் வானோர்க்கும் எய்தற் கரிய வீட்டுலகத்தை யெய்தும், (எ-று).

*மயக்கம்-அறியாமை. அதனைக் கெடுத்தலாவது தேசிகர்பாற் பெற்ற ‡ உறுதிமொழிகளானும் யோகப்பயிற்சியானும் அவை யானெனது அன்மை தெளிந்து, ¶ அவற்றின்கட் பற்றைவிடுதல். சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. இதனான் இவ்விருவகைப்பற்றினையும் விட்டார்க்கே வீடுள தென்பது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *யானெனதென்னும் - (தானல்லாத உடம்பை) யானென்றும் (தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை)எனதென்றும் நினைத்து,(அவற்றினிடத்துப்)பற்றுச்செய்வதற்குக்காரணமாகிய,செருக்கு-மயக்கத்தை, அறுப்பான்-கெடுப்பவன், வானோர்க்கு-தேவர்க்கும்,உயர்ந்த-அடைதற்கரிதாகிய, உலகம்-முத்தியுலகத்தை, புகும்-அடைவான், (எ-று).*

*மயக்கம்-அஞ்ஞானம். அவ்வஞ்ஞானத்தைக் கெடுத்தலாவது ஞானாசாரியரிடத்துப் பெற்ற உபதேசங்களாலும் யோகாப்பியாசத்தாலும் (யானெனதென்னும்) அப்பொருள்கள் யான என்பதும் எனது என்பதும் அல்லவென்று தெளிந்து, அவற்றினிடத்துப் பற்றைவிடுதல். வானோர்க்கு மென்னுமுயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால்தொக்கு நின்றது. இதனால் யானெனதென்னும் இருவகைப்பற்றையும் விட்டவர்க்கே மோட்சமுண்டென்பது சொல்லப்பட்டது. பற்று-அபிமானம்.*

(க-து). *யானெனதென்னுமபிமானத்தினை யொழித்தவனே முத்தியடைவான் என்பது.*

6. He who destroys the pride which says "I," "mine," will enter a world which is difficult even to the Gods to attain

---

எ. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

* *திருவாய்மொழி "நீர்நுமதென்றிவை, வேர்முதல் மாய்த்திறை, சேர்மி னுயிர்க்கதன், நேர்நிறை யில்லே" என்றும்,பிரபுலிங்கலீலை "யானெனதெனப திருந்திடு காறு, ஞானமுறான்" என்றும் கூறுகின்றன.*

† *அவற்றின்கண்-யானெனதென்பதனிடத்து.*

‡ *உறுதிமொழி-உறுதி (நன்மை)யைத் தரத்தக்க வார்த்தை.*

¶ *அவற்றின்கண் - யானென தென்பதன்கண்.*

பரி:—(இ-ள்.) இருவகைப்பற்றினையும் இறுகப் பற்றி விடாதாரைப் பிறவித் துன்பங்கள் இறுகப்பற்றி விடா, (எ-று).

*இறுகப்பற்றுதல் - காதல்கூர்தல். † விடாதவர்க் கென்பது வேற்றுமை மயக்கம். இதனால் இவை விடாதார்க்கு வீடில்லையென்பது கூறப்பட்டது.*

தெளி:—(இ-ள்.) *பற்றினை-(யானெனதென்னும் இருவகைப்) பற்றுக்களையும், பற்றி-இறுகப்பற்றி, விடாதவர்க்கு - விடாதவரை, இடும்பைகள்-பிறவித்துன்பங்கள், பற்றி-இறுகப்பற்றி, விடா-விட்டு நீங்காவாம்.*

*இறுகப்பற்றுதல்-(யானெனதென்பவற்றில்) ஆசைமிகுதல். விடாதவர்க்கென்பது விடாதவரை யென்னும் பொருளில் வந்தமையின் வேற்றுமைமயக்கமாம். இதனால் இருவகைப் பற்றுக்களையும் விடாதவர்க்கு மோட்சம் இல்லையென்பது சொல்லப்பட்டது.*

(க-து.) *யானெனதென்னும் இருவகைப்பற்றுக்களையும் விடாதவர்க்குப் பிறவித்துன்பங்கள் நீங்கா என்பது.*

7. Sorrows will never let go their hold of those who give not up their hold of desire.

அ. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

பரி:—(இ-ள்.) முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார், அங்ஙனந் துறவாதார் மயங்கிப் ‡ பிறப்பாகிய வலையுட்பட்டார், (எ-று).

*முற்றத்துறத்தலாவது பொருள்களையும், * இருவகை யுடம்புகளையும் உவர்த்துப் $பற்றறவிடுதல். அங்ஙனந் துறவாமையாவது அவற்றுள் யாதானுமொன்றன்கட் சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றித் ¶ 'தலைப்*

† *விடாதவர்க்கு என்பதன் நான்கனுருபு தனக்குரிய பொருளைவிட்டு (விடாதவரையென) இரண்டனுருபின் பொருளில் வந்தமையால் வேற்றுமை மயக்கமாயிற்று.*

‡ *உயிரை வேறு (முத்தி) மார்க்கத்தில் செல்லாவண்ணம் பந்திப்பது பற்றிப் பிறப்பு என்று கூறுது 'பிறப்பாகிய வலை' என்று கூறப்பட்டது.*

*இருவகை உடம்பு-உருவுடம்பு, அருவுடம்பு.*

$ *பற்றறவிடுதல்-அபிமானமொழிய நீங்குதல்; பொருளைத்துறத்தல்-பொருளின்கண் அபிமான மின்மை;உடம்பைத் துறத்தல்-உடம்பின்கணபிமான மின்மை.*

¶ *(தீரத்துறந்தார்) தலைப்படுவாரென்று எதிர் காலத்தாற்கூறுது தலைப்பட்டாரென்று இறந்தகாலத்தாற் கூறியது துணிவு (தெளிவு) பற்றிவந்த காலவழுவமைதி.*

பட்டார்' என்றும், § பொய்ந்நெறிகண்டே பிறப்புவலையு ளகப்படுதலின் 'மயங்கி' என்றுங் கூறினார்.

தெளி:—(இ-ள்.) *தீரத்துறந்தார்*-முழுதுந்துறந்தவர், *தலைப்பட்டார்*-(முத்தியை) அடைந்தவராவார், *மற்றையவர்*-அப்படி துறவாதவர், *மயங்கி*-மருண்டு, *வலைப்பட்டார்*-(பிறப்பாகிய) வலையிலகப்பட்டவராவார், (எ-று).

முழுதுந்துறத்தலாவது பொருள்களையும், இருவகை யுடம்புகளையும் வெறுத்துப்பற்றறவிடுதல். அப்படி துறவாமையாவது அப்பொருள் முதலியவற்றில் யாதாவது ஒன்றனிடத்துச் சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றித் 'தலைப்பட்டார்' என்றும், பொய்வழிகண்டே பிறப்பாகிய வலையிலகப்படுதலால் "மயங்கி" என்றும் சொல்லினார்.

(க-து.) யானெனதென்னும் இருவகைப் பற்றையும் பற்றறத் துறந்தவர்க் கல்லாமல் மற்றவர்க்கு வீடுண்டாகா தென்பது.

8. Those who have entirely renounced all things and all desire have obtained absorption into God; all others wander in confusion entangled in the net of many births

---

 கூ. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

பரி:—(இ-ள்.) ஒருவன் இருவகைப்பற்றும் அற்றபொழுதே, அப்பற்றறுதி அவன் பிறப்பையறுக்கும்;அவையறாதபொழுது அவற்றற் பிறந்திறந்து வருகின்ற நிலையாமை காணப்படும், (எ-று).

காரணமற்ற பொழுதே காரியமும் அற்றதா முறைமை பற்றி

§ பொய்ந்நெறிகண்டிருந்தும் என்றும் பாடமுண்டு.

பொய்ந்நெறி காண்டலாவது அறிவுநூல் கூறும் வழியிற்செல்லாது உலகநூல் கூறும் வழியிற்செல்லுதல். அஃதாவது பிறவிக்குக் காரணமாயுள்ள பொய்ந்நெறி (வழி) யை மோட்சமடைதற்குக் காரணமான மெய்ந்நெறியென்றுகண்டுநடத்தலாம்.(பொய்ந்நெறி-தப்புவழி).தப்புவழியிற்சென்றோர் தாங்கருதிய விடத்திற்குப் போகமுடியாமைபோல, உலகநூலை அறிவுநூலென்று நம்பி அதிற் கூறியபடி யொழுகுவோர் தாமடைய வெண்ணிய வீட்டை யடையாரென்பது திரண்ட கருத்தாம்.

* காரணமாகிய மண்ணும் நெருப்பும் ஒழிந்தபோதே அவற்றின் காரியமாகிய கடமும் புகையும் ஒழிதல்போன்று, காரணமாகிய யானெனதென்னும் இருவகைப்பற்று மொழிந்தபோதே அவற்றின் காரியமாகிய பிறப்புமொழிந்து போமென்பதாம். இதனால் காரணமற்றபோது காரியமிரா தென்பது பெறப்பட்டது. இங்குக் காரணமென்றது முதற் காரணத்தை. எது காரியத்தின் சொரூபத்தில் பிரவேசிக்கின்றதோ, எது இல்லாமல் காரியஞ் சித்திப்பதில்லையோ அது முதற்காரணமாம்.

'பற்றற்ற கண்ணே' என்றார். † "அற்றது பற்றெனி லுற்றது வீடு" என்பதூஉம் ‡ அது பற்றி வந்தது. இவை யிரண்டு பாட்டானும் ¶ அவ் விருமையும் ஒருங்கு கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) (ஒருவன்) பற்றற்ற கண்ணே - (இருவகைப்) பற்றுக்களும் அற்றபொழுதே, (அப்பற் றறுதியானது), பிறப்பு - (அவனது) பிறவியை, அறுக்கும் - ஒழிக்கும், மற்று - அவ் விருவகைப்பற்று அறாத பொழுது, நிலையாமை காணப்படும்—(அவ்விருவகைப் பற்றால் பிறந்து இறந்து வருகிற) நிலையாமையானது அறியப்படும், (எ-று).

காரணம் அற்றபொழுதே காரியமும் அற்றதாகு முறைமைபற்றி 'பற்றற்ற கண்ணே' என்றார். இவை இரண்டு பாட்டாலும் அவ்விரண்டும் சேர்த்துச் சொல்லப்பட்டன அறுதல்-நீங்குதல்.

(க-து.) யானெனதென்னும் இருவகைப்பற்றும் நீங்காத விடத்துப் பிறப்பொழிதலின்மையால் நிலையாமையே அறியப்படும்.

9. At the moment in which desire has been abandoned, other births will be cut off ; when that has not been done, instability will be seen.

---

க0. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

பரி:—(இ-ள்.) * எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை இதுவே நன்னெறி யென்று மனத்துக் கொள்க ; கொண்டு, () அதன்கண் உபாயத்தை அம்மனத்தாற் செய்க, விடாது வந்த பற்று விடுதற்கு, (எ - று).

$ கடவுள் வாழ்த்திற்கேற்ப ஈண்டும் பொதுவகையாற 'பற்றற்றான்'

† திருவாய்மொழி 2-ம் பதிகம், 5. இதன் பொருள் (யானெனதெனனும் இருவகைப்) பற்று நீங்கியதாயின் (சீவன்) முத்தி யுண்டாயிற்று என்பது. பற்றற்றதெனின் வீடுற்றது என்றன்வயிக்கப்பட்டது.

‡ அது - காரணமற்ற பொழுதே காரியமு மற்றதாகு முறைமை.

¶ அவ்விருமையும்—தீரத் துறந்தார்க்கு வீடுண்டென்பதும், அவ்வாறு துறவாதவர்க்குப் பிறப்புண்டென்பதும்.

* "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற சுடரே" என்பது இராமாயணம். ஆகாயம் வாயு முதலிய பூதங்களையும் அவற்றின் காரியங்களையும் பற்றி நின்றே பற்றற்றிருத்தல் போன்று, இறைவன் எல்லாப் பொருள்களையும் பற்றிநின்றே பற்றற்றிருக்கின்றான் என்பதாம்.

() அதன்கண்-அந் நன்னெறியி னிடத்து.

$ கடவுள் வாழ்த்திற்கேற்ப—கடவுள்வாழ்த்தென்னும் முதலதிகாரத்திற்குப் பொருந்த.

என்றார். ¶ பற்றற்றான் பற்றென்புழி ஆறுவது செய்யுட் கிழமைக்கண் வந்தது. ஆண்டுப் பற்றென்றது 0 பற்றப்படுவதனை. அதன்கண் உபாய மென்றது $ தியான [] சமாதிகளை. விடாது வந்த பற்றென்றது அநாதி யாய் வரும் உடம்பிற் பற்றினை. அப்பற்று விடுதற்கு உபாயம் இதனாற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பற்றற்றான் - (எல்லாப் பொருள்களையும் பற்றி நின்றே) பற்றில்லாத கடவுள், (அருளிச் செய்த), பற்றினை - முத்தி வழியை, பற்றுக - (இதுவே நல்லவழியென்று) மனத்திற் கொள்ளக் கடவர், (கொண்டு), அப்பற்றை - அதனிடத்து உபாயத்தை,பற்றுக-(அம்மனத்தி னாற்) செய்யக் கடவர், பற்று-(விடாது வந்த) பற்று, விடற்கு-ஒழிதற்கு.

கடவுள் வாழ்த்துக்கேற்ப இங்கும் பொதுவகையினால் 'பற்றற்றான்' என்றார். பற்றற்றான் பற்று என்றவிடத்துப் பற்றற்றானது என்னும் ஆறாம்வேற்றுமையுருபு செய்யுட்கிழமைப்பொருளில் வந்தது. அங்குப்பற் றென்றது பற்றப்படும முத்திநெறியை. அம்முத்திநெறியினிடத்து உபா யமென்றது தியானசமாதிகளை. விடாதுவந்த பற்றென்றது அநாதியாகவ ருந் தேகாபிமானத்தினை. இதனால் அத்தேகாபிமானம் விடுதற்கு உபாயம் சொல்லப்பட்டது.

(க-து.) தியானசமாதிகளைச் செய்தால்யானெனென்னும் பற்றொ ழியும் என்பது.

10. Desire the desire of Him who is without desire; in order to renounce desire, desire *that* desire.

¶ பற்றற்றான்பற்று என்பது ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்.

0 பற்றப்படுவதனை-(மோட்சவிருப்பமுள்ளோன்) பற்றப்படுவதாகிய முத்திவழியை. முததிவழியென்றது முத்திவழியைக் கூறும் ஞானசாஸ்தி ரத்தினை. முத்திவழி, முத்திவழியை யுணர்த்தும் நூலுக்காதலின் காரிய வாகு பெயராம்.

$ கடவுளிடத்து விட்டுவிட்டுச் செல்லும் அந்தக்கரணத்தின் பிரவா கம் தியானமெனப்படும்.

[] உண்டாயிருக்கும் சம்ஸ்காரங்க (வாசனை) களின் ஒழிவும் அடங்கி யிருக்கும் சம்ஸ்காரங்களின் வெளிப்பாடு முண்டாய் அந்தக்கரண மொரு முகமாய்ப் பரிணமித்திருத்தல் சமாதியெனப்படும். "நீ மெய்ஞ்ஞான நன்னிட்டை சாருதல்" என்னும் வைராக்கிய சதகச்செய்யுளினுரையில் "மனமாதி மூக்கரணங்களும் அசையாது நின்றவிடம் மெய்ஞ்ஞான நிட்டை யென்பதும், அவையசைந்து செய்யுந் தியானசமாதிகள் அந்நிட் டை வருவதற்கு ஏது வென்பது மறிக" என்று சிதம்பர சுவாமிகள் கூறி யிருக்கின்றனர்.

## பன்னிரண்டாவது அதிகாரம்.

## மெய்யுணர்தல்—True Knowledge.

பரி:—அஃதாவது † பிறப்பு வீடுகளையும், ‡ அவற்றின் காரணங்களையும், §விபரீத ¶ ஐயங்களான் அன்றி உண்மையா னுணர்தல். இதனை வடநூலார் தத்துவஞானமேன்ப. () இதுவும் பற்றற்றான் பற்றினைப் பற்றியவழி உளதாவதாகலின், அக்காரணவொற்றுமைபற்றித் துறவின் பின் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும், விபரீத சந்தேகங்களால் அல்லாமல் உண்மையாக வறிதல். இம்மெய்யுணர்தலை வடநூலார் தத்துவஞான மென்பர். இம்மெய்யுணர்தலும் பற்றற்றான் பற்றினைப் பற்றிய விடத்து உண்டாவதாகையால், அக்காரண வொற்றுமைபற்றித் துறவின்பின் வைக்கப்பட்டது.

க. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணுப் பிறப்பு.

ப:—(இ-ள்.) மெய்ப்பொரு ளல்லவற்றை மெய்ப்பொருளென் றுணரும் விபரீத உணர்வானேஉளதாம் இன்பமில்லாத பிறப்பு, (எ-று).

† பிறப்பில் துன்பக் கூறுபாடும், வீட்டில் (முத்தியில்) இன்பக்கூறுபாடு முளவென்க.

‡ அவற்றின் காரணங்கள்—பிறப்பு வீடுகளின் காரணங்களாகிய அஞ்ஞானமும் ஞானமும்.

§ விபரீதம்-திரிவு. "திரிவு மித்தையினுலாகிய வுணர்வு. அது இப்பியை வெள்ளி யென்பது" என்று தருக்க சங்கிரகம் கூறுகின்றது. அஃதாவது ஒன்றை (கயிற்றை) மற்றொன்றாக (பாம்பாக) வறிதலாம்.

¶ ஒன்றை (கயிற்றை) அதுவோ இதுவோ (கயிறோ பாம்போ) என்றறிதல் ஐயம். ஐயம்-சந்தேகம். தருக்க சங்கிரகம் "ஐயமாவது ஒருதருமியின் மாறுபட்ட பல தருமங்களான் விசேடிக்கப்பட்ட வுணர்வு. தருமமெனினும் தன்மையெனினும் ஒக்கும். அது குற்றியோமகனோ என்பது" என்று கூறுகின்றது.

() இதுவும் (மெய்யுணர்தலும்) பற்றற்றான் பற்றாகிய முத்திவழியைப் பற்றியபோது உண்டாவதா யிருத்தலால், அக்காரண வொற்றுமை பற்றி (மெய்யுணர்தலுக்குப் பற்றற்றான் பற்றினைப்பற்றுதல் காரணமாயிருக்கும் ஒற்றுமைபற்றி)த் துறவின் பின் வைக்கப்பட்டது.

இங்குக் காரணமென்பது நிமித்தகாரணம். எது சொரூபத்தில் பிரவேசிக்கின்றதில்லையோ, ஆனால் காரியத்திற்கு வேறாக இருந்துகொண்டு காரியத்தைச் செய்கின்றதோ, எதன் நாசத்தினால் காரியம் நாசமடைகின்றதில்லையோ அது நிமித்த காரணமெனப்படும்.

அவ்விபரீத உணர்வாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இல்லையெனவும், மற்றும் † இத்தன்மையவுஞ் சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல். ‡ குற்றியைமகனென்றும், $ இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை யென்பன ஒரு பொருட்கிளவி. நரகர், விலங்கு, மக்கள் தேவரென்னும் நால்வகைப் பிறப்பினுமுள்ளது துன்பமேயாகலின் 'மாணாப்பிறப்பு' என்றார். இதனாற் பிறப்புத் துன்பமென்பதூஉம், அதற்கு முதற்காரணம் அவிச்சையென்பதூஉம் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) பொருளல்லவற்றை-மெய்ப்பொருள்க ளல்லாதனவற்றை, பொருளென்று-மெய்ப்பொருள்களென்று, உணரும்-அறிகின்ற, மருளான்-விபரீத ஞானத்தினாலே, மாணாப்பிறப்பு - மாட்சிமையில்லாத பிறப்பு (இன்பமில்லாத பிறப்பு), ஆம்-உண்டாகும், (எ-று).

பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் விபரீதஞானமாவது மறுபிறப்பும், இருவினைப் பயன்களும், கடவுளும் இல்லையென்றும், மற்றும் இப்படிப்பட்டவைகளையும் சொல்லுகிற மயக்கநூல் வழக்குகளைமெய்ந்நூல் வழக்கென்று நிச்சயித்தல். கட்டையைக் கள்ளனென்றும், கிளிஞ்சிலை வெளளியென்றும் இவ்வகையே ஒருபொருளை மற்றொருபொருளாக நிச்சயித்தலும் அது (விபரீதமாம்). மருள், மயக்கம், விபரீதஞானம், அஞ்ஞானம் என்பன ஒருபொருட் சொற்கள். நரகர், விலங்கு, மக்கள், தேவர் என்கிற நால்வகைப்பிறப்புக்களிலும் உள்ளது துன்பமேயாதலால் 'மாணாப்பிறப்பு' என்றார். இதனால் பிறப்புத் துன்பமென்பதும், அப்பிறப்பிற்கு முதற்காரணம் அஞ்ஞானமென்பதும் சொல்லப்பட்டன.

(க-து.) மெய்ப்பொருளல்லாதவற்றை மெய்ப்பொருளென்றறியும் விபரீத ஞானத்தினால் பிறப்புண்டாகின்றது என்பது.

1. Inglorious births are produced by the confusion of mind which considers those things to be real which are not real.

உ. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

---

† இத்தன்மையவும்என்றகூறினமையின், ஆகாயமென்பதொன்றில்லையெனவும், பூதங்களின் கூட்டுறவால் உயிரென்பதொன்று தோன்றி அவற்றின் பிரிவால் அழியுமெனவும், காண்டலளவை யன்றி வேறு அளவைகளில்லை யெனவும், பிறவும் கூறுதலுங் கொள்க.

‡ குற்றி-மரக்கட்டை. $ இப்பி-முத்துச்சிப்பி.

பரி:—(இ-ள்.) † அவிச்சையினீங்கி மெய்யுணர்வினை யுடையாரயினு ரிக்கு அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக்கொடுக்கும்,(எ-று).

‡ இருள்-நரகம்; அஃதாகுபெயராய்க் காரணத்தின் மேனின்றது. ¶ நீங்கியெனத் தொடைநோக்கி மெலிந்து நின்றது; நீங்கவென்பதன் றிரி பெனினும் அமையும். மருணீங்கியென்னும் வினையெச்சம் காட்சியவரென் னுங் குறிப்புவினைப்பெயர் கொண்டது. மாசறுகாட்சியென்றது 0 கேவல வுணர்வினை. இதனால் வீடாவது § நிரதிசய இன்பமென்பதூஉம், அதற்கு நிமித்தகாரணம் * கேவலப்பொருளுணர்வென்பதூஉம் கூறப்பட்டன.

---

† கடவுள்வாழ்த்து "இருள்சே ரிருவினையும்" என்னும் குறளின் விசேடவுரையில் "இன்ன தன்மைத்தென ஒருவராலுங்கூறப்படாமையின் அவிச்சையை இருள் என்றும்" என்று கூறியிருத்தலால், இன்னதன்மைத் தென்று ஒருவராலும் கூறப்படாமை அவிச்சைக்கு இலக்கணமாயிற் றென்க.

‡ இருள் நரகம் என்பதுஅடக்கமுடைமை யதிகாரம் முதற்குறளின் விசேட வுரையில் "இருள் என்பது ஓர் நரகவிசேடம்"என்று கூறுவதாலு மறிக. இருள் என்னுங் காரியப் பெயர் அவ்விருளை (நரகத்தை)யடைவதற் குக்காரணமான பிறப்பினை யுணர்த்தலால் காரியவாகு பெயராம். ஒருவன் நரகத்தையடைதல் பிறப்பினலாதலின் நரகத்தையடைதற்குக் காரணம்பி றப்பாயிற்றென்க.இதனால் ஞானத்தாலடைவது மோட்சமென்றும்,பிறப்பி னலடைவதுநரகமென்றும்கூறப்பட்டனவென்க,இருள்-அவிச்சை. அஃது ஆகுபெயராய்க் காரியத்தின் மேனின்றது என்றும் பாடமுண்டு. இப்பாட த்தின்படி அவிச்சை யென்னும் கருவியின் (முதற்காரணத்தின்) பெயர் அதன்காரியமாகிய பிறப்பிற்காதலால்(முதற்)கருவியாகு பெயராம். இருள் என்பது அவிச்சையை யுணர்த்துதல் "இருள்சே ரிருவினையுஞ் சேரா" என்னுங் குறளாலறிக.

¶ இருணீங்கி யென்பதற்கேற்ப மருணீங்கியென வந்தது எதுகைத் தொடையாம். இஃது ஓரடியுள் சீர்களினெழுத்தொன்றிவந்த எது கைத் தொடையாம். பல வடிகளிலேனும் பல சீர்களிலேனும் எழுத்துக்க ளொன்றிவருவது தொடையெனப்படும். தொடைக் கிலக்கணம் இலக்கண விளக்கம் "அடியிரண்டு, தொடுத்துமன் சேறலிற் றொடையே" என்று கூறுகின்றது.

0 கேவலவுணர்வு—பிரமஞானம் அல்லது சிவஞானம். "உரைசெ யிற் பிரம ஞான மொன்றுமே முத்திக் கேது" என்பது பிரபுலிங்கலீலை.

§ நிரதிசயவின்பம்—பேரின்பம். அஃதாவது அதிசயமற்ற வின்பம். அதிசயம்-பேதம், "பேதமில்லதோர் கற்பளித்தபெ ருந்துறைப்பெரு வெள் ளமே" என்பது திருவாசகம்.

* கேவலப் பொருளென்றும் பாடமுண்டு. பற்றற்றான் பற்றினைப் பற்றுதல் வாயிலாக வீடடைவதன்றி நேரே பற்றற்றான் (கடவுள்) வாயி லாக வீடடைதலின்று மென்ப தீண்டுணர்தற்பாற்றும்.

**தெளி:—(இ-ள்.) மருள் நீங்கி-அஞ்ஞானத்தினின்றும் நீங்கி, மாசறு-குற்றமற்ற, காட்சியவர்க்கு-(மெய்) அறிவினையுடையா ராயினார்க்கு, (அம்மெய்யறிவானது), இருள்-பிறப்பினை, நீங்கி-நீங்கச்செய்து, இன்பம்-முத்தியை, பயக்கும்-கொடுக்கும், (எ-று).**

*இருள்-நரகம்; அஃதாகு பெயராய்த் தன் காரணமாகிய பிறப்பின் மேல் நின்றது. இருணீக்கியென்பது மருணீங்கியென்னுந் தொடைநோக்கி இருணீங்கியென்று மெலித்தல் விகாரம் பெற்று நின்றது; நீங்கியென்பது நீங்கவென்பதன் திரிபென்றாலும் ஒக்கும். மருணீங்கி யென்னும் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் காட்சியவரென்னுங் குறிப்பு வினையாலணையும் பெயரைக்கொண்டு முடிந்தது. மாசறுகாட்சி - கேவல ஞானம். இதனால் வீடாவது அதிசயமற்ற இன்பமென்பதும், அவ்வின்பத்தினைப்பெறுதற்கு நிமித்த காரணம் கேவலப்பொருளாகிய பிரமஞான மென்பதும் சொல்லப்பட்டன.*

(க-து.) மெய்ஞ்ஞானம் பெற்றார்க்குமுத்தியுண்டாமென்பது.

2. A clear undimmed vision of things will deliver its possessors from the darkness of future births, and confer the felicity of Heaven.

௩. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

பரி:—(இ-ள்.) ஐயத்தினின்று நீங்கி மெய்யுணர்ந்தார்க்கு எய்தி நின்ற நிலவுலகத்தினும் எய்தக்கடவதாய வீட்டுலகம் நணித்தாத லுடைத்து, (எ-று).

*ஐயமாவது பல தலையாயவுணர்வு. அஃதாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும் கடவுளும், உளவோ இலவோவென ஒன்றிற்றுணிவு பிறவாது நிற்றல்; பேய்த்தேரோ புனலோ, கயிறோ அரவோவெனத் துணியாது நிற்பதும் அது. ஒருவாற்றாற் பிறர்மதங் களைந்து தம்மத ¶ நிறுத்தல எல்லாச் சமயநூல்கட்கும் இயல்பாகலின், அவை கூறுகின்ற பொருள்களுள் யாது மெய்யென நிகழும் ஐயத்தினை யோகமுதிர்ச்சியுடையார் தம்மனுபவத்தானீக்கி மெய்யுணர்வாராகலின், அவரை 'ஐயத்தினீங்கித்தெளிந்தார்' என்றும், அவர்க்கு அவ்வனுபவ வுணர்வு ◊ அடிப்பட்டு வரவரப் பண்டை உலகியலுணர்வு † தூர்ந்துவருமாகலின், ‡ அதனைப் பயன்மேலிட்டு 'வையத்தின் வான நணிய துடைத்து' எனறுங் கூறினார்; கூறவே, ஐயவுணர்வும் பிறப்பிற்குக் காரணமாதல் கூறப்பட்டது.*

---

¶ *நிறுத்தல்-ஸ்தாபித்தல்.* ◊ *அடிப்பட்டு-பழகி.* † *தூர்ந்து-குறைந்து.*

‡ **அதனைப் பயன்மேலிட்டு-(உலகியலுணர்வு) தூர்ந்து (குறைந்து) வருதலை மெய்யுணர்வின் பயனாய வீட்டுலகின்மேல் வைத்து. (மெய்யுணர்வால் உலகியலுணர்வு குறையக்குறைய வீட்டுலகம் சமீபித்துக்கொண்டே வருமென்பது கருத்தாம்).**

தெளி:—(இ-ள்.)ஐயத்தின் நீங்கி-சந்தேகத்தினின்றும் நீங்கி,தெளிந்தார்க்கு-மெய்யுணர்ந்தவர்க்கு, வையத்தின்-(அடைந்துநின்ற)இவ்வுலகத்தினும்,வானம்-(அடையக் கடவதாகிய) முத்தியுலகம், நணியது-சமீபித்திருத்தலை, உடைத்து-உடையதாம், (எ-று).

ஐயமாவது பலவகையாய அறிவு. அவ்வையமாவது மறுபிறப்பும், இருவினைப் பயன்களும், கடவுளும் உண்டோ இல்லையோ என்று ஒன்றில் நிச்சயம் பிறவாமல் நிற்றல்; கானலோ நீரோ, பழுதையோ பாம்போ என்று ஒன்றிலும் நிச்சயம் உண்டாகாது நிற்பதும் அது (ஐயமேயாம்). ஒருவிதத்தினால் பிறர் மதத்தை நிராகரித்துத் தமது மதத்தை நிறுத்துதல் எல்லாச் சமய நூல்களுக்கும் இயல்பாகலால், அந்நூல்கள் சொல்லுகின்ற பொருள்களில் எது உண்மையென்று உண்டாகுஞ் சந்தேகத்தை யோகாப்பியாசத்தில் முதிர்ச்சியுடையார் தமது அனுபவஞானத்தினால் நீக்கி உண்மையை அறிவாராகலால், அவரை 'ஐயத்தினீங்கித் தெளிந்தார்' என்றும், அவ்வியோகமுதிர்ச்சியுடையவர்க்கு அவ்வனுபவஞானம் தொடர்ந்துமேலிடுந்தோறும் மேலிடுந்தோறும் பழைய லோகாசாரஞானம் மறந்து வருமாதலால், அதனைப் பயனாகிய வீட்டுலகின்மேல் வைத்து'வையத்தின் வானநணிய துடைத்து' எனவும் சொல்லினார்; சொல்லவே சந்தேக ஞானமும் பிறவிக்குக் காரணமாதல் சொல்லப்பட்டது,

(க-து.) சந்தேகத்தினின்றும் நீங்கி மெய்யுணர்ந்தவர் தவறாது முத்தியடைவர் என்பது.

3. Heaven is nearer than earth to those men of purified minds who are freed from doubt.

ச. ¶ ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

பரி:—(இ-ள்.) $ செல்லப்படுகின்ற புலன்கள்வேறுபாட்டான் ஐந்தாகிய வுணர்வு அவற்றைவிட்டுத் தம்வயத்ததாய வழியும் †அதனாற் பயனில்லையேயாம்; மெய்யினை யுணர்தலில்லாதார்க்கு, (எ-று).

¶ "ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு, மெய்யறி விலாதவர்கள் வீடது பெறாரே" என்பது சிவர்ணபோதம்.

$ செல்லப்படுகின்ற புலன்கள்—மனம் செவி முதலிய விந்திரியங்கள் வாயிலாகச் சென்று அனுபவிக்கின்ற சப்த முதலிய விஷயங்கள். செல்லப்படுகின்ற என்பதற்குப் பிரதியாகச் சொல்லப்படுகின்ற என்றும் பாடமுண்டு.

† அதனால்-(ஐந்தாகிய வுணர்வு-மனம்) தம் வயத்ததாவதினால்.

‡ ஐந்தாகிய வுணர்வு-மனம். அஃதெய்துதலாவது மடங்கி ஒருதலைப் பட்டுத் ¶ தாரணைக்கண் நிற்றல். அங்ஙனம் நின்றவழியும் வீடு பயவாமையின் 'பயமின்று' என்றார். சிறப்பும்மை எய்துதற்கருமை விளக்கி நின்றது. இவை யிரண்டு பாட்டானும் 0 மெய்யுணர் வுடையார்க்கே வீடுளதென மெய்யு ணர்வின் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) ஐயுணர்வு-(ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் ஐந்துபுலன்களிலும் செல்லுதலின் வேறுபாட்டால்) ஐந்தாகிய உணர்வு, எய்தியக்கண்ணும்-(அப்புலன்களை விட்டுத்) தமக்கு வசப்பட்டதாய விடத்தும், (அதனால்), பயன்-பிரயோஜனம், இன்று - இல்லையேயாம், மெய்யுணர் வில்லாதவர்க்கு—மெய்யினை யறிதலில்லா தவர்களுக்கு, (எ-று).

ஐந்தாகிய உணர்வு-மனம். அம்மனம் வசப்படுதலாவது மடங்கியொரு முகப்பட்டுதாரணையில் நிற்றல். மனம் அப்படி நின்றவிடத்தும் அது முத் தியைத்தாராமையால் 'பயமின்று' என்றார். ஐயுணர் வெய்தியக்கண்ணும் எனறஉயர்வு சிறப்பும்மை மனம் தம்வயத்ததாதற்கு அருமையா மென் பதை விளக்கி நின்றது இவையிரண்டு பாட்டாலும் மெய்யை யுணர்ந்தவ ர்க்கே முத்தி உண்டென்று மெயயுணர்வின சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) மெய்யுணர் வில்லாதவர் மனவடக்கம் பெற்றாலும் அதனாலவர்கசூ முத்தியுண்டாவதில்லை என்பது.

4 Even those who have all the knowledge which can be attained by the five senses, will derive no benefit from it if they are without a knowledge of the true nature of things.

௫. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

பரி:—(இ-ள்.) யாதொரு பொருள் யாதோ ரியல்பிற்றய்த் தோன் றிலும், அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது அப்பொருளின்கணி ன்று மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது, (எ-று).

பொருடோறும் உலகத்தார் † கற்பித்துககொண்டு வழங்குகின்ற

‡ செவியாதி யிந்திரியங்களின் வாயிலாகச சப்தாதி (ஐந்து) விஷய ஞானங்களை யுடைத்தாயிருப்பது மனமாதலால் 'ஐந்தாகிய வுணர்வு மனம்' என்று கூறப்பட்டது.

¶ தைலதாரை போன்று இடைவிடாது அந்தக்கரணம் ஒருவகைப்பட் டிருத்தல் தாரணையெனப்படும். இது யோகாங்கங்களுள் ஒன்று.

0 மனமடக்கல் யோகமாயும் மயக்கறுத்தல் ஞானமாயு மிருத்தலால், மயக்கறுக்கும் ஞானமின்றி மனமடக்கும் யோகத்தால் முத்தியுண்டாகா தென்பதாம்.

† கற்பித்துக்கொண்டு-ஏற்படுத்திக்கொண்டு.

‡ கற்பனைகளைக் கழித்து, நின்றவுண்மையைக் காண்பதென்றவாறாயிற்று. ¶ அஃதாவது 0 கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சொலிரும் பொறை என்றவழி அரசனென்பதோர் சாதியும், சேரமானென்பதொரு குடியும், வேழநோக்கினை யுடையா னென்பதோர் வடிவும், சேஎயென்ப தோ ரியற்பெயரும், மாந்தரஞ்சொ லிரும்பொறை யென்பதோர் சிறப்புப் பெயரும் ஒரு பொருளின்கட் கற்பனையாகலின், † அவ்வாறுணராது § நிலமுதல்உயிரீறாகிய தத்துவங்களின் தொகுதியெனவுணர்ந்து, ¶ அவற்றை நிலமுதலாகத் தத்தங்காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டு சென்றாற்

---

‡ கற்பனை-உண்மையாகாதது.

¶ அஃதாவது-காண்பதாவது. 0 கோச்சேரமான் யானைக் கட்சேஎய் மாந்தரஞ்சொ லிரும்பொறை என்பவன் சேரர்குலத்தரசன். இவ்வரசன் புறநானூற்றில் புலவர்களால் பாடப்பட்டுள்ள அரசர்களிலொருவன். அப்பெயருள் கோ-(இராஜன்)என்பது க்ஷத்திரிய ஜாதியையும், சேரமான் என்பது குடிப்பெயரையும்[குடிப்பெயர் ஒருகுலத்திற்கு வழங்கும் பெயர்], யானைக்கண் என்பது (அவனுக்குள்ள) கண்ணின் வடிவத்தையும் (யானைக் கண்போல் அவன் கண்ணிருந்தமை பற்றி யானைக்கண் என்று சொல்லப் பட்டது), சேஎய் என்பது (அவனது) இயற்பெயரையும் (இயற்பெயர்தாய் தந்தைகளா லிடப்பட்ட பெயர்), மாந்த ரஞ்சொ லிரும்பொறை யென்பது (அவனுக்குள்ள) சிறப்புப் பெயரையும் (சிறப்புப்பெயர் ஒருகாரணம் பற்றிப் பின்வரும்பெயர்), உணர்த்தினவெண்க. மாந்தரஞ்சேரலிரும் பொறை என்றும்பாடமுண்டு. மாந்தரஞ்சொலிரும்பொறை என்பதற்கு மக்களெடுத்துக் கூறும் அழகிய புகழாகிய பெரியசுமையை யுடையவ்னென்பது பொருள். மாந்தரஞ் சேரலிரும்பொறை என்பதற்கு மனிதர்களுக்குள்ளே மிகுந்த பொறுமையுடைய அழகிய சேரன் என்பது பொருள்.

† அவ்வாறுணராது - (மெய்யென்று) அப்படியே யறியாமல்.

§ நிலமுதல் உயிரீறாகியதத்துவங்கள் - பிருதிவிமுதலிய பூதங்கள் 5, செவிமுதலிய ஞானேந்திரியங்கள் 5, வாக்குமுதலிய கர்மேந்திரியங்கள் 5, பிராணன் முதலிய வாயுக்கள் 5, மனமுதலிய அந்தக்கரணங்கள் 4, உயிர் 1 ஆக 25-ஆம்.

¶ அவற்றை (அத்தத்துவங்களை) நிலமுதலாகத் தத்தம் (தமது தமது) காரணங்களு ளொடுக்குதலாவது பிருதிவியை அப்புவிலும், அப்புவைத் தேயுவிலும், தேயு(தீ) வை வாயுவிலும், வாயுவை ஆகாயத்திலும், ஆகாயத்தை அவிச்சையிலு மொடுக்குதலாம். ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரியபஞ்சகம், பிராணாதி பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயமாகிய இப்பத்தொன்பது தத்துவங்களும் பிருதிவிமுதலிய பூதங்களின் காரியங்களாயிருத்தலால், பூதங்களின் ஒடுக்கஞ் சொன்னபோதே இவற்றி னொடுக்கமுஞ் சொல்லப்பட்டதாயிற்றெனக.

"எழுதரு முழுது மவனியி லழிய வெழுபுவி புனலிடை யழிய, முழுதுறு புனலு மனலிடை யழிய முரணெறி வளியினி லழிய, விழிவுறு

† *காரணகாரியங்கள் இரண்டுமின்றி ‡ முடிவாய்நிற்பதனை யுணர்தலாம்.* 'எப்பொருள்' என்ற பொதுமையான் இயங்குதிணையும்நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் இவ்வாறேயுணரப்படும். இதனான் மெய்யுணர்வினது இலக்கணங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) எப்பொருள் - யாதொருபொருள், எத்தன்மைத்தாயினும்-யாதோரியல்பினதாய்த் தோன்றினாலும், (அத்தோன்றியவிதத்தைக் கண்டுவிடாமல்), அப்பொருள் - (தோன்றிய) அப்பொருளிலிருந்து, மெய்ப்பொருள்-மெய்யாகிய பொருளை, காண்பது-காண்பதே, அறிவு-மெய்யுணர்வு, (எ-று).

மெய்யுணர்வாவது ஒவ்வொரு பொருளிலும் உலகத்தார் கற்பிதத்தைக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளை யொழித்து ஒழியாமல் நின்ற உண்மையைக் காணுதலென்றவாறாயிற்று. அஃதாவது கோச்சேரமான யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்றவிடத்து அரசனென்பதொருசாதியும், சேரமானென்பதொரு குடிப்பெயரும், வேழநோக்கினை (யானைக்கண்ணை) யுடையானென்பதொருவடிவும், சேஎய்யென்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறையென்பதொரு சிறப்புப்பெயரும் ஒரு பொருளினிடத்துக் கற்பனையாதலால், அவ்வாறறியாது மண் முதல் உயிர்முடிவாகிய தத்துவங்களின் கூட்டமென்றறிந்து, அத் தத்துவக்கூட்டங்களை மண்முதலாகத் தத்தங் காரணங்களி லொடுக்கிக்கொண்டுபோனால்

வலிய துடைவளி ககன மதிலிற விருளினி லதுவும், அழிதர விருளு மறிவினி லழிய வழிவறு நிலையறி வதுவாம்'' என்று பெருந்திரட்டுக் கூறுவது மிங்குணர்தற் பாலதாம்.

† மண்ணானது கடத்தை நோக்கக் காரணமாயும் அணுவை நோக்கக் காரியமாயு மிருத்தலால் காரியம் காரணமாயும் காரணம் காரியமாயும் வருமென்பது பெறப்படுகின்றது; படவே, காரியமும் காரணமு முற்பத்தி நாசமுடையனவாமென்பதாயிற்று. சடப்பொருளெல்லாம் ஒன்றை நோக்கக் காரணமாயும் மற்றொன்றை நோக்கக் காரியமாயும் இருத்தலால் அநித்தமாம். விசாரிக்குமிடத்து, உயிர் அஃதாவது ஆத்மா எவ்வகையாலும் ஒன்றற்குக் காரணமாகாமலும் மற்றொன்றற்குக் காரியமாகாமலும் நித்தமாயிருத்தலின், அதனை யுணர்தல் 'காரண காரியங்களிரண்டு மின்றி முடிவாய்நிற்பதனையுணர்தலாம்' என்று கூறப்பட்டது "தரதிசோகம் ஆத்மவித்-ஆத்மாவையறிந்தவன் சோகத்தைக் கடக்கின்றான்'' என்று சுருதிகூறுவதும், "அவனுக் (பிரஹ்மத்திற்)குக் காரியமுங் காரணமுமில்லை'' என்று சுவேதாசுவதரோப நிடதம் கூறுவதும், "அறிவிற் கழிவில்லை யாக்கமு மில்லை'', "காரிய காரணங் கற்பனை சொற்பதப், பாரறும் பாழில் பராபரத் தானே'', "காரிய காரண வாதனைப் பற்றறப், பாரண வும்உப சாந்தப்பரிசிதே'' என்று திருமந்திரங் கூறுவதும் இங்கூன்றி யுணர்தற் பாலனவாம்.

‡ முடிவாய் நிற்பது—ஆத்துமா.

காரணகாரியங்க ளிரண்டு மில்லாமல் முடிவாய் நிற்பதனை யறிதலாம். 'எப்பொருள்' என்ற பொதுமையினால் சாரமும் அசாரமுமாகிய பொருள்களெல்லாம் இப்படியே யறியப்படும். இதனால் மெய்யுணர்வினது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க-து.) விசாரவாயிலாக மெய்ப்பொருளை யுணர்வதே மெய்யுணர்வாம் என்பது.

5. True knowledge is the perception concerning every thing of whatever kind that *that* thing is the true thing.

௬. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

பரி:—(இ-ள்.) இம்மக்கட் பிறப்பின்கண்ணே உபதேச மொழிகளை அநுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனான் மெய்ப்பொருளை யுணர்ந்தவர் மீண்டு இப்பிறப்பின்கண் வாராதநெறியை யெய்துவர்.

'கற்று' என்றதனால் பலர்பக்கலினும் பலகாலும் பயிறலும், 'ஈண்டு' என்றதனால் வீடுபேற்றிற்குரிய * மக்கட்பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்றாம். ஈண்டுவாராநெறி-வீட்டுநெறி. † வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை யுணர்தற்கு உபாயம் மூன்று:—அவை ‡ கேள்வி, விமரிசம், பாவனையென்பன. அவற்றுள் கேள்வி இதனாற் கூறப்பட்டது.

---

* 'பெறவரிது மக்கட் பிறவிபெற் றாலும், மறிவுறா லாய்த லரிதே-யதினும், துறவுடைய ராத லரிதே யதின்மெய், யறிவுடைய ராத லரிது" என்பது அமிர்தசாரம்.

† முதற்பொருளை (தலைமைப்பொருளை அஃதாவது எப்பொருளுக்கும் முதற் பொருளாய்த் தனக்கொரு முதற்பொருளை யில்லாதிருக்கும் பரப்பிரமத்தை) ஐயந்திரிபின்றியறிதல் சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகி, என்ஞான்று மொருதன்மைத்தாயிருக்கும் வீடுகூடுவதற்கு நிமித்தகாரணமாயிருத்தலின், 'வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை' என்று கூறப்பட்டது.

‡ கேள்வி, விமரிசம், பாவனையென்பன முறையே, சிரவணம்(கேட்டல்), மனனம் (சிந்தித்தல்) நிதித்தியாசனம் (தெளிதல்)என்று சொல்லப்படும். சிரவணத்தினால் அஞ்ஞானமும், மனனத்தினால் சந்தேகமும், நிதித்தியாசனத்தினால் விபரீதமு மொழிதலால் முதற்பொருளை யுணர்தற்குச் சிரவண முதலியன உபாயமாயினவென்க.

[முத்தியடைதற்குரிய வழியை ஞானாசாரியனிடத்துக்கேட்டல் சிரவணம்; ஞானாசாரியனிடத்துக்கேட்டவிஷயத்தை யுக்தியினாற்சிந்தித்தறிதல் மனனம்; சிரவணத்தினாலும் மனனத்தினாலும் தெளிந்தபொருளில் மனம் அசைவறவிருத்தல் நிதித்தியாசனமாம்.]

தெளி:—(இ-ள்.) ஈண்டு-இம்மக்கட் பிறப்பினிடத்தே, கற்று-(உபதேசமொழிகளை அனுபவமுடைய ஞானாசாரியரிடத்துக்) கேட்டு, (அதனால்), மெய்ப்பொருள்-உண்மைப்பொருளை, கண்டார்-உணர்ந்தவர், மற்றீண்டு-திரும்பி இப்பிறப்பினிடத்து, வாராநெறி-வாராதவழியை, தலைப்படுவர்-அடைவார், (எ-று).

'கற்று' என்றதனால் (ஞானாசிரியர்) பலரிடத்தும் பலநாளும் பழகுதலும், "ஈண்டு' என்றதனால் முத்தி பெறுவதற்குரிய மனிதப்பிறப்பினது பெறுதற்கு அருமையும் பெறப்பட்டன. ஈண்டுவாராநெறி-முத்திவழி. முத்திக்கு நிமித்தகாரணமாகிய முதற்பொருளை யறிவதற்குச்சாதனம் மூன்று:- அவை கேட்டல்,சிந்தித்தல், தெளிதல் என்பன. அவற்றுள், கேட்டல் இதனால் சொல்லப்பட்டது.

(க-து.) ஞானாசாரியனிடத்து உபதேசங்கேட்டுண்மைப்பொருளையறிந்தவர்க்குப் பிறப்புண்டாவதில்லை யென்பது.

6. They, who in this birth have learned to know the True Being,enter the road which returns not into this world.

எ. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

பரி:—(இ-ள்.) அங்ஙனங்கேட்ட உபதேச மொழிப்பொருளை ஒருவனுள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றானுந் தெளிய ஆராய்ந்து அதனான் முதற்பொருளை யுணருமாயின்,அவனுக்கு மாறிப் பிறப்புளதாக நினைக்கவேண்டா, (எ-று).

† ஒருதலையாவோர்த்தென இயையும். அளவைகளும் பொருந்துமாறும் ‡ மேலே உரைத்தாம். இதனால் விமரிசங் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) (அப்படிக் கேட்ட உபதேசமொழிப்பொருளை)உள்ளம்-(ஒருவனது) உள்ளமானது, ஒருதலையாக - தெளிவுண்டாக, ஓர்த்து-(பிரமாணங்களாலும் யுத்தியினாலும்) ஆராய்ந்து,(அதனால்), உள்ளது-முதற்பொருளை,உணரின்-அறிவானாயின், பிறப்பு(அவனுக்குப்) பிறப்பு, (உள்ளதாக), பேர்த்து—மாறி, உள்ளவேண்டா-நினைக்கவேண்டுவதில்லை, (எ-று).

ஒருதலையா ஓர்த்தென்றன்னுவயமாம். பிரமாணங்களும் யுக்தியும் மேலே கூறினம். இதனால் சிந்தித்தல் சொல்லப்பட்டது.

---

† முதலடியினீற்றிலுள்ள ஒருதலையா என்பது அவ்வடியின் முதலிலுள்ள ஓர்த்து என்பதன்முன் கூட்டப்பட்டது.

‡ மேலே என்றது அருளுடைமை யதிகாரத்தின் இரண்டாங் குறளின் விசேடவுரையை.

(க-து.) குருவினிடத்துக் கேட்ட வுண்மைப்பொருளைச் சந்தேகமின்றி யறிந்தவனுக்குப் பிறப்புண்டாவதில்லை என்பது.

7. Let it not be thought that there is another birth for him whose mind having thoroughly considered all it has been taught has known the True Being (God).

அ. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

பரி:—(இ-ள்.) பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சை கெட வீட்டிற்கு நிமித்தகாரணமாய செவ்வியபொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது, (எ-று).

* பிறப்பென்னும் பேதைமையெனவும்,சிறப்பென்னுஞ் செம்பொருளெனவும் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். † ஐவகைக் குற்றங்களுள், அவிச்சை ஏனைய நான்கிற்குங் காரணமாத லுடைமையின், அச்சிறப்புப்பற்றி அதனையே பிறப்பிற்குக் காரணமாக்கிக் கூறினார். எல்லாப் பொருளினுஞ் சிறந்ததாகலான் வீடு சிறப்பு எனப்பட்டது. தோற்றக் கேடுகளின்மையின் நிதமாய், ‡ நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையின் தூய்தாய்த, தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்றமுதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல்பற்றி, அதனைச 'செமபொருள்'என்றார். $ மேல் 'மெய்ப்பொருள்' எனவும், 'உள்ளது'எனவும் கூறியதூஉம் இதுபற்றி யெனவுணர்க. அதனைக்காண்கையாவது உயிர்

* பிறப்பிற்கு மூதற்காரணமாகிய அவிச்சையைப் 'பிறப்பென்னும் பேதைமை' என்றும், சிறப்பிற்கு (முத்திக்கு) நிமித்தகாரணமாய செம்பொருளைச் 'சிறப்பென்னும் செம்பொருள்' என்றும் கூறினமையின், இவை காரியங்காரணமாயவுபசாரவழக்காம்.(காரியங்காரணமாவது காரியத்தைக் காரணமாகக்கூறுவது). பிரயோகவிவேக நூலார் " மருளறுகாரணம் " என்னுஞ்செய்யுளினுரையில் " பிறப்பென்னும் பேதைமை-பிறப்பிற்கேதுவாகிய பேதைமை; இதுகாரியங்காரணமானது" என்று கூறியிருக்கின்றனர்.

† ஐவகைக்குற்றங்கள்-அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, கோபம்.

‡ தன்னினும் பெருமையுடைய பொருள் தன்னில் கலத்தலில்லாதிருத்தல் பற்றி 'நோன்மையாற்றனை யொன்றும் கலத்த லின்மையின்' என்றுகூறப்பட்டது. நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலில்லாதது நிராபேட்சிக வியாபகமெனப்படும்.

$ மேல் என்றது இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளையும் ஏழாவது குறளையும்.

தன்னவிச்சைகெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல். இதனைச் † சமாதியெனவுஞ் ‡ சுக்கிலத்தியானமெனவுங்கூறுப. உயிர் உடம்பினீங்குங் காலத்து அதனால் ¶ யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அது வாய்த்தோன்றுமென்பது எல்லா வாகமங்கட்குந் துணிபாக லின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிறகேதுவாய பாவனை கெடு தற்பொருட்டுக் $ கேவலப்பொருளையே பாவித்தல் வேண்டுதலான், அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்கவுபாயமில்லை யென்பதறிக. இதனாற் பாவனை கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்.) பிறப்பென்னும் - பிறப்பிற்கு முதற்காரணமான, பேதைமை-அஞ்ஞானமானது, நீங்க-கெட்டொழிய, சிறப்பென்னும்-முத்திக்கு நிமித்தகாரணமான, செம்பொருள்-செவ்வியபொருளை, காண்பது - காண்பதே, அறிவு-(ஒருவனுக்கு) மெய்யுணர்வாம், (எ-று).

பிறப்பென்னும் பேதைமையென்றும், சிறப்பென்னுஞ் செம்பொருளென்றும் காரியங்களைக் காரணங்களாக உபசரித்துக் கூறினார். அஞ்ஞான முதலிய ஐவகைக்குற்றங்களுள் அஞ்ஞானம் மற்றைய நான்கனுக்கும் காரணமாதலுடைமையால், (காரணமாகும்) அச்சிறப்புப்பற்றி அவ்வஞ்ஞானத்தையே பிறப்பிற்குக் காரணமாக்கிச் சொல்லினார். எல்லாப்பொருளிலும் சிறந்ததாகலால் முத்தி சிறப்பு என்றுகூறப்பட்டது. உற்பத்தி நாசங்களில்லாமையினால் நித்தியமாய்ப், பெருமையால் தன்னை யொன்

† தியானிப்பவன் தியானமென்னு மிரண்டையும் விடுவதனால், தியானிக்கப்படும் வஸ்து வொன்றனையேவிஷயஞ்செய்யும் காற்றில்லாததீபம் போன்றுள்ள சித்தம் சமாதியாம். இது தர்மமேகமென்று சொல்லப்படும். தருமமாகிய மழையை(ஆத்மசாட்சாத்காரத்தை - பிரத்தியகாத்ம அபின்ன பிரஹ்மதரிசனத்தை)ப் பெய்யும் (உண்டாக்கும்) மேகம் (நிருவிகற்பசமாதி) தருமமேகமாம். (பிரத்தியக்-உள், அபின்னம்-வேற்றுமைப்படாதது). யோகசூத்திரம் 4-வது பாதம் 28-வது சூத்திர மிங்குணரத்தக்கதாம.

‡ "இணரெரி முழக்க மன்ன சுக்கிலத் தியான மென்னும், கணையெறிந் துகைப்ப வீழ்ந்து காற்படை சூழப்பட்டார்" என்பது சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம் 4823.

¶ "இந்தவுடலம் விடும்பொழுதில் யாவனியாதொன் றினைநினைந்தானந்தவளவே யந்தப்பா வனையா லதனை யடையுமால்" என்று பகவற்கீதை கூறுவதும், தாயுமானவர் எங்குநிறைகின்றபொருள் மூன்றுவது செய்யுளில் "யாதொன்று பாவிக்கநான், அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கின் அத்துவித மார்க்க முறலால், எதுபா வித்திடினு மதுவாகி வந்தருள் செயெந்தைநீ குறையுமுண்டோ" என்று கூறுவதும் இங்குக்கவனிக்கத்தக்கனவாம்.

$ கேவலப்பொருள்-தனிமைப்பொருள் [யாதொரு சம்பந்தமுமின்றி விளங்குதல் பற்றிப் பரப்பிரஹ்மம் கேவலப் பொருளெனப்பட்டது.]

றல் கலத்தலில்லாமையினல் பரிசுத்தமாய், எல்லாப்பொருளேயுந் தான் கலந்து நிற்கின்ற முதற்பொருளானது விகாரமில்லாமல் எக்காலத்தும் ஒரு தன்மையதாயிருத்தல்பற்றி, அம்முதற்பொருளேச் 'செம்பொருள்' என்றார். முன்னே 'மெய்ப்பொருள்' என்றும் 'உள்ளது' என்றும் சொல்லியதும் இதுபற்றி யென்றறிக. அச்செம்பொருளேக் காணுதலாவது உயிர் தனது அஞ்ஞானங்கெட்டு அச்செம்பொருளோடு ஒற்றுமையுண்டாக (சிவோஹம் அல்லது அஹம்பிரஹ்மாஸ்மி அல்லது பிரஹ்மைவாஹம் என்று) இடைவிடாது பாவித்தல். இப்பாவனையைச் சமாதியென்றுஞ் சுக்கிலத்தியானமென்றுங் கூறுவர். உயிர் உடம்பை விட்டு நீங்குங்காலத்தில் அவ்வுயிரால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அவ்வுயிர் அப்பாவிக்கப்பட்டதாய்ப் பிறக்குமென்பது எல்லாச்சாத்திரங்களுக்கும் நிச்சயமாதலால், முத்தியடைவார்க்கு உயிர் உடம்பை விட்டுப் போகுங்காலத்தில் பிறப்பிற்குக் காரணமானபாவனே கெடுதற்பொருட்டுக் கேவலப்பொருளேயே பாவித்தல் வேண்டுதலால், அக்கேவலப்பொருளே முன்னே பாவிதுப் பழகுதலாகிய இதனிலும் மேலாய சாதனமில்லை யென்பதுணர்க. இதனல் பாவனே சொல்லப்பட்டது.

(க-து.) பிறவிக்குக் காரணமான அஞ்ஞானங்கெடஉண்மைப் பொருளே யுணர்வதே மெய்யறிவாம் என்பது.

8. True knowledge consists in the removal of ignorance which is the cause of births, and the perception of the True Being (God) who is the bestower of heaven.

---

கூ. $ சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

பரி:—(இ-ள்) ஒருவன் எல்லாப்பொருட்குஞ் சார்பாய அச்செம்பொருளே யுணர்ந்து இருவகைப்பற்றும் அற ஒழுகவல்லனுயின், அவனே * முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் † அவ்வுணர் வொழுக்கங்களே அழித்துப் பின்சாரமாட்டா, (எ-று).

‡ ஆகுபெயராற் சாருமிடத்தையும் சார்வனவற்றையும் 'சார்பு' என்றார். ஈண்டொழுக்கமென்றது யோகநெறி யொழுகுதலை. அஃது

$ 'சார்புணர்ந்து சார்புகெடவொழுகி னென்றமையால், சார்புணர்வு தானேதியானமுமாம்-சார்பு, கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப், படவருவ தில்லைவினைப் பற்று'' என்பது திருக்களிற்றுப்படியார்.

* முன்-இனி, † அவ்வுணர்வொழுக்கம் - செம்பொருளேயுணர்தலும் இருவகைப்பற்று மறவொழுகுதலுமாம்.

‡ சார்பு என்னுமிரண்டனுள் முன்னது எல்லாப்பொருட்கும் சார்பாய செம்பொருளே (பரப்பிரஹ்மத்தை)யும், பின்னது உயிரைச்சார்தலே

* இயமம், நியமம், இருப்பு, உயிர்நிலை, மனவொடுக்கம், தாரணை, தியானம், சமாதியென எண்வகைப்படும். அவற்றின் பரப்பெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும்; யோகநூல்களுட்காண்க. மற்றுச்சார்தராவென இயையும். சார்க்கடவனவாய் நின்ற துன்பங்களாவன: பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி † யீட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அனுபவித்தனவும், பிறந்தவுடம்பான் நுகர்ந்து நின்றனவும் ஒழியப் பின்னுமனுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன. ‡ அவை விளக்கின்முன்னிருள்போல ஞானயோகங்களின் முன்னர்க்கெடுதலான் 'அழித்துச் சார்தரா' என்றார். இதனை ஆருகதர் உவர்ப்பென்ப. § பிறப்பிற்

---

யுடைய இருவகைப்பற்றையுமுணர்த்தினமையின், தொழிலாகுபெயராம். சார்பு - புவ்விகுதி பெற்றதொழிற்பெயர்.

* இயமம்—பொய்கொலை களவே காமம் பொருளாசை, யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்.

நியமம்.—பெற்றதற் குவத்தல் பிழம்புநனி யுலர்த்தல், கற்பன கற்றல் கழிகெழு தூய்மை, பூசனைப் பெரும்பய மாசாற் களித்தலொடு, நயனுடை மரபி னியம மைந்தே.

ஆசனம்.—நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென், றொத்த நான்கி னெல்கா நிலைமையோ, டின்பம் பயக்குஞ் சமய முதலிய,வந்தமில் சிறப்பி னாசன மாகும்.

பிராணாயாமம்.—உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந், தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை.

பிரத்தியாகாரம்.—பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமல், லொருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே.

தாரணை.—மனத்தினை யொருவழி நிறுப்பது பொறையே.

தியானம்.—நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற்,குறித்தபொருளொடு கொளுத்த னினைவே.

சமாதி.—ஆங்ஙனம் குறித்த வம்முதற் பொருளொடு,தான்பிறனாகாத் தகைபது சமாதி.

இவை தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியல் "அறுவகைப்பட்ட" என்னுஞ் சூத்திரத்தினுரையில் நச்சினார்க்கினியார் காட்டிய உரைச் சூத்திரங்கள்.

† சம்பாதிக்கப்பட்ட வினைப்பயனுக்குச் சஞ்சிதமென்றும், அனுபவிக்கும் வினைப்பயனுக்குப் பிராரத்தமென்றும், சம்பாதிக்கும் வினைப்பயனுக்கு ஆகாமியமென்றும் பெயராம்.

‡ அவை - அத்துன்பங்கள்.

§ கடவுள் வாழ்த்து ரு-வது குறளினுரையில் "நல்வினையும், பிறத்தற் கேதுவாகலான்" என்று கூறப்பட்டிருத்தலு மிங்கறியத்தக்கதாம்.

குக் காரணமாகலான், நல்வினைப் பயனும் 'நோய்' எனப்பட்டது. மேல் * மூன்றுபாயத்தானும் பரம்பொருளை யுணரப் பிறப்பறும் என்றார். அஃது அறும் வழிக்கிடந்த துன்பங்களெல்லாம் என்செய்யுமென்னுங் கடாவை யாசங்கித்து அவை ஞானயோகங்களின் முதிர்ச்சி யுடைய வுயிரைச் சாரமாட்டாமையானும் வேறு சார்பின்மையானுங் கெட்டுவிடுமென்பது இதனாற் கூறப்பட்டது.

தெளி:—(இ-ள்) (ஒருவன்) சார்பு-(எல்லாப் பொருள்களுக்கும்) சார்பாகிய அச்செம்பொருளை, உணர்ந்து - அறிந்து, சார்பு - (யானெனதென்னும்) இருவகைப் பற்றுக்களும், கெட-முற்றக்கெடும்படி, ஒழுகின்-நடக்கவல்லவனாயின், சார்தரும் - (முன் அவனை) அடைதற் குரியனவாய் நின்ற, நோய்-துன்பங்கள், அழித்து-(அவ்வுணர்வையும் ஒழுக்கத்தையும்) அழித்து, மற்றுச்சார்தரா - பின் அடையமாட்டாவாம், (எ-று).

சாருமிடத்தையும் சார்வனவற்றையும் ஆகுபெயரால் 'சார்பு' என்று கூறினார். இங்கு ஒழுக்கமென்றது யோகவழிநடத்தலை. அஃது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என வெண்வகைப்படும்; அவற்றின் விரிவெல்லாம் இங்குக்கூறின் பெருகும்; அவற்றை யோகநூல்களுள் கண்டு கொள்க. மற்று என்பது சார்தரா என்பதனோடு தொடர்ந்து நின்றது. அடையக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன:பிறவி அநாதியாய் வருதலால் உயிரினால் அளவில்லாமல் சம்பாதிக்கப் பட்டுள்ள இருவகை வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளால் அனுபவித்தனவும், பிறந்தவுடம்பால் மொண்டு நின்றனவும், நீங்கப் பின்னும் (இனிவரும் உடம்புகளால்) அனுபவிக்கக்கடவனவாய்க் கிடந்தனவாம். அவை விளக்கின்முன் இருள்கெடுதல்போல ஞானயோகங்களின் முன்னே கெடுதலால் 'அழித்துச்சார்தரா' என்றார். இச்சார்புகெடவொழுகுதலைச் சமணர் உவர்ப்பு என்பர். பிறவிக்குக்காரணமாதலால் நல்வினைப்பயனும் 'நோய்' எனப்பட்டது. முன் மூன்று சாதனங்களாலும் பரம்பொருளை அறியப் பிறப்பறும் என்றார். அப்பிறப்பு அறுமிடத்துப் பின்வரக்கிடந்த துன்பங்களெல்லாம் யாதுசெய்யு மென்னும் வினாவை எழுப்பிக்கொண்டு அத்துன்பங்களெல்லாம் ஞானயோகங்களின் முதிர்ச்சியையுடைய உயிரைச் சாரமாட்டாமையாலும் வேறுசாருமிடமில்லாமையாலும் கெட்டுவிடுமென்பது இதனால் சொல்லப்பட்டது.

(க-து)உண்மைப்பொருளை யறிந்து பற்றறவொழுகுபவனைத் துன்பங்கள் சாராவாம் என்பது.

9. He,who so lives as to know Him who is the support of all things and abandon all desire, will be freed from the evils which would otherwise cleave to him and destroy his efforts after absorption (by entangling him again in the net of desire).

* மூன்றுபாயம்-சிரவணம், மனனம், நிதித்தியாசனம்.

க0. காமம் வெகுளி மயக்க ‡ மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்

பரி:—(இ-ள்.) ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையார்க்கு விழைவு, வெறுப்பு, அவிச்சையென்னும் இக்குற்றங்கண் மூன்றனுடையபெய ருங் கூடக் கெடுதலான், அவற்றின் காரியமாய வினைப்பயன்கள் உளவாகா, (எ-று).

*அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப் பொருட்கட்செல்லும் ஆசையும், $ அதுபற்றி அதன் மறுதலைக்கட்செல் லுங் கோபமுமென வடநூலார் † குற்றமைந்தென்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணு மடங்குத லான் மூன்று என்றார். ¶ இடையறாத ஞானயோகங்களின் முன்னர் இக் குற்றங்கள் மூன்றுங் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போலு மாகலின், அம்மிகுதி தோன்ற 'இவை மூன்ற னாமங்கெட' என்றார். இழிவு சிறப் பும்மை விகாரத்தாற் றொக்கது. கெடவென்பது எச்சத்திரிபு. நோயெ*

‡ *காமம் வெகுளி மயக்கங்களேயன்றி, அவற்றின் பெயரும் நோய்க் கேதுவாதல்பற்றி, 'இவை மூன்ற னாம (மு) ங் கெடக்கெடு நோய்' என் றார். காமம் வெகுளி மயக்கமென்னு மெண்ணமும் நோய்க் கேதுவாமென் பது கருத்து. "நினைவே பந்த நினைவொழியி னிலைமை யான முத்தியு மாம்" என்று குமாரதேவர் கூறுவதீண்டு ணர்ந்துணர்தற் பாலதாம்.*

$ *அப்பொருளை யடைவதற்கு விரோதமாயிருப்பவர்மீ துண்டாகும் கோபமும்.*

† *இக்குற்றமைந்தும் பஞ்சக்கிலேசமெனப்படும். அவை அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசம் என்பனவாம். (1) அது வல்லாததன் கண் (ஆத்மாவல்லாத வுடம்பினிடத்து) அது (ஆத்மா) வென்னும் ஞானம் அவித்தை; (2) சத்துவகுணம் ஆத்மா என்னு மிவ்விரண்டிலும் நானென்னும் ஒருமையபிமானம் அஸ்மிதை; (3) சுகத் தை யறிந்தவனுக்குச் சுகஸ்மரண பூர்வகமாகச் சுகசாதனங்களிலுண்டாகும் இச்சை இராகம்; (4) துக்கத்தை யறிந்தவனுக்குத் துக்கஸ்மரண பூர்வக மாக அதன் சாதனங்களின நிந்தை துவேஷம்; (5) பூர்வஜன்மத்தில் அநு பவித்த மரண துக்கங்களின் வாசனையிடத்தினால் கிருமி முதல் வித் வான் வரையிலுமுள்ள சர்வப்பிராணிகட்கும் ஒவ்வொருநாளும் சரீராதிகட் கும் எனக்கும் வியோகம் (பிரிவு) வேண்டாமெனக்காரணமின்றி நான் இருப்பனோ, இல்லாமற் போவனோ என்றுண்டாகின்ற இருவகைத்தாய கிலேசம் அபினிவேசம் என்றைவகைக்கிலேசங்களுக் கிலக்கணம் சர்வதரி சனசங்கிரகத்தின் பதஞ்சலிதரிசனம் கூறுகின்றது.*

¶ *"எறியாவெரி வருகானிடை யெரியாதன வெவைதாம், அறியா வறி வுடையோர்களு மறிவாரது விதுபோல், குறியால்வரு குணஞானமெ*

ன்பது சாதியொருமை. காரணமாய ‡ குற்றங்களைக் கெடுத்தார் காரியமாய வினைகளைச் செய்யாமையின், ¶ அவர்க்கு வரக்கடவ துன்பங்களுமில்லையென்பது இதனாற் கூறப்பட்டது. § முன்கிடந்த † துன்பங்களும் மேல்வரக்கடவ துன்பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனாதலின், இவை யிரண்டுபாட்டும் இவ்வதிகாரத்த வாயின. இவ்வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்த வுடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களுமே யென்பது பெற்றாம்.

தெளி:—(இ-ள்.) (ஞான யோகங்களின் முதிர்ச்சி யுடையவர்க்கு) காமம் வெகுளி மயக்கம்-விருப்பு வெறுப்பு அஞ்ஞானம் என்னும், இவை மூன்றன்-இக்குற்றங்கள் மூன்றனது, நாமம்-பெயரும் (கூட), கெட - கெடுதலால், நோய்-(அக்காமவெகுளிமயக்கங்களின் காரியங்களாகிய) வினைப்பயன்கள், கெடும்-உண்டாதலில்லை, (எ-று).

அநாதியான அஞ்ஞானமும், அவ்வஞ்ஞானம்பற்றி உடம்பை யானெனமதிக்கும் அகங்காரமும், அவ்வகங்காரம்பற்றிஎனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும், அவ்வவாபற்றி அப்பொருளினிடத்துச் செல்லும் ஆசையும், அவ்வாசைபற்றி அதனைத் மறுதலையிடத்துச் செல்லும் கோபமும் என வடநூலார் குற்றம் ஐந்தென்றார். இவர்(நாயனார்)அவ்வைந்தனுள், அகங்காரம் அஞ்ஞானத்திலும் அவாவுதல் ஆசையிலும் அடங்குதலால்(காமம்வெகுளிமயக்கமென)மூன்றுஎன்றார். இடையறாதஞானயோகங்களின் முன்னே இக்குற்றங்கள் மூன்றும் காட்டுத்தீ முன்னே பஞ்சின் தொடர்நுனி கெடுவதுபோலக் கெடுவதாகலின், அம் மிகுதிதோன்ற' இவை மூன்றனுமங்கெட' என்றார். நாமமும் என்னு மிழிவுசிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது. கெடுதலால் என்னும்(செயினென்னும் வாய்பாட்டு)வினையெச்சம் கெட என்னும் (செயவென்னும் வாய்பாட்டு) வினையெச்சமாகத் திரிந்து நின்றது. (வருமொழி நோக்காது பன்மைப்பொருளுணர்த்தலின்) நோய் என்பது சாதியொருமைப் பெயர். காரணமாகிய (காமம் வெகுளி

யனலேகொள விடுமேல்,பொறியால்வரு வினைபானவை பொடியாயிதோர் பொருளே'' என்பது பகவத்கீதை.

‡ அக்குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய விருவினைகளை என்றும் பாடமுண்டு.

¶ "வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலா, மனைத்தாய நூலகத்துமில்லை - நினைப்பதெனக், கண்ணுறுவ தல்லாற் கவலைபடே னெஞ்சேமெய், விண்ணுறுவார்க் கில்லை விதி'' என்பது நல்வழி.

§ "பஞ்சினை யூழித் தீப்போல் பலசன்ம விவித வித்தாம், சஞ்சிதமெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீ றாக்கும், கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும், விஞ்சின பிராரத் தத்தின் வினையனு பவித்துத் தீரும்'' என்பது கைவல்லிய நவநீதம்.

† துன்பங்கள் - துன்பத்திற்குக் காரணமாய வினை.

மயக்கமென்னும்) குற்றங்களைக் கெடுத்தார் (அவற்றின்) காரியமாகிய (நல்வினை தீவினையென்னும்) வினைகளைச் செய்யாமையால் அவர்க்கு வரக்கடவனவாகிய துன்பங்களும் இல்லையென்பது இதனால் சொல்லப்பட்டது. முன்கிடந்த துன்பங்களும் மேல்வரக் கடவனவாகிய துன்பங்களும் இல்லாமற்போதல் மெய்யுணர்வின் பயனாதலால், இவ்விரண்டு குறளும் இவ்வதிகாரத்தில் சொல்லப்பட்டன. இவ்விதத்தாலே மெய்யுணர்ந்தார்க்கு (மிஞ்சி) நிற்பன எடுத்த உடம்பும் அவ்வுடம்பு கொண்ட வினைப்பயன்களுமே யென்பது பெற்றாம்.

(க - து.) மெய்யுணர்ந்தார்க்கு முக்குற்றங்களும் ஒழிதலின், அவற்றால் வரும் துன்பங்களில்லை என்பது.

10. If the very names of these three things, desire anger, and confusion of mind, be destroyed, then will also perish the evils which flow from them.

பதின்மூன்றாவது அதிகாரம்.

† அவாவறுத்தல்—*The destruction of desire.*

பரி:—அஃதாவது ‡ முன்னும் பின்னும் ¶ வினைத்தொடர் பறுத்தார்க்கு நடுவுநின்ற உடம்பும் அதுகொண்ட $ வினைப்பயன்களும் நின்றமையின், * வேதனைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்கள் மேற் பழையபயிற்சி வயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினைவும்

† எனக்கிது வேண்டுமென்னும் விருப்பம் அவா எனப்படும்.

‡ முன்னும் பின்னுமாகிய வினைத்தொடர்பு - சஞ்சித ஆகாமியம். சென்ற சரீரத்திற் செய்யப்பட்டுப் பயனுக்கு வாராதுள்ள வினை சஞ்சிதமாம்; எதிர்காலத்து(வர்த்தமான சரீரத்திற் செய்யப்படும்)வினை ஆகாமியமாம்.

¶ திடஞானியர் அதிடஞானியர் என்னும் இருவருள் இவர் அதிடஞானியராவர். பரதமகாராஜா தம தரசுரிமையைத் துறந்து காடுசென்று கடுந்தவஞ்செய்து, ஞானயோகமுடையவராக வொழுகி, இறக்குங் காலத்தில், தாம் வளர்த்துவந்த மானொன்றைப்பற்றி வருத்தமுற்று, இனி யிதனைக் காப்பாற்றுவார் யாரென்னுஞ் சிந்தனையோ டிருந்தமையால் மானாய்ப் பிறந்தாரென்று விஷ்ணுபுராண முதலியன கூறுவதும் பிறவு மிங்கு கண்குணர்தற் பாலனவாம்.

$ வினைப்பயன்கள்—பிராரத்த வினையின் பயனாகிய சுகதுக்கங்கள். சென்ற சரீரத்திற் செய்யப்பட்டு வர்த்தமான (நிகழ்கால) சரீரத்திற் கேதுவாயுள்ள வினை பிராரத்தமாம்.

* வேதனை பற்றி - உண்டி, உடை, உறையுள் முதலியன தக்கனவாகக் கிடைக்கப்பெறாமையா லுண்டாகுந் துனபத்தினால்.

அவிச்சையெனப் பிறவிக்கு வித்தாமாகலின், அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல். † அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி:—அவாவாவது முன்னும் பின்னும் வினைத்தொடர்பு அறத் தார்க்கு நடக்கின்ற உடம்பும் அவ்வுடம்புகொண்ட வினைப்பயன்களும் நின்ற மையால், வருத்தம் பற்றி ஓரோவிடத்துத் துறக்கப்பட்ட சப்த முதலிய விஷயங்களின் மீது பழைய பழக்க வசத்தினால் நினைவு செல்லுமல்லவா, அந்நினைவும் அஞ்ஞானம் போலப் பிறவிக்குக்காரணமாகலால், அந்நினைவை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வால் அறுத்தலாம். அதிகாரமுறைமை யும் இதனாலே விளங்கும்.

க. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

பரி:—(இ - ள்.) எல்லாவுயிர்கட்கும் எக்காலத்தும் கெடாது வருகின்ற பிறப்பினை விளைக்கும் வித்து அவாவென்று சொல்லுவர் நூலோர், (எ - று).

‡ உடம்பு நீங்கிப்போங்காலத்து அடுத்த வினையும், ¶ அது காட்டுங்

---

† மெய்யுணர்தல் அவாவறுத்தற்குக் காரணமாகலின் அக்காரணகாரிய வியைபு நோக்கி, மெய்யுணர்தற்குப் பின் அவாவறுத்தல் வைக்கப்பட்டது.

‡ உடம்பு நீங்கிப்போங் காலத்து (மரணமடையுந் தருணத்தில்) அடுத்த வினையும் (மேல்வரும் பிறவிக்கு அடுத்ததாயுள்ள வினையும்), அது காட்டுங் கதி நிமித்தங்களும் (அவ்வினையானது உயிர் சென்றடையும்படி அவ்வுயிர்க்குக் காண்பிக்கின்ற மக்கட்பிறப்பு முதலியனவும், அம்மக்கட்பிற ப்பு முதலியவற்றை யடைவதற்குரிய காரணமும்), அக்கதிக்கண் அவாவும் (அம்மக்கட் பிறப்பு முதலியவற்றில் விருப்பமும்) உயிரின் கண் முறை யே வந்துநிற்ப (உயிரினிடத்துக்கிரமமாக ஒன்றன்பின் ஒன்றாகவந்து தோன்ற அவாவாவது முன்னே அடுத்த வினையும் அதன்பின் அதுகாட்டுங் கதிநிமித்தங்களும், அப்பால் அக்கதிக்கண் அவாவும் வந்துண்டாக), அறி வை மோகம் மறைப்ப (தெளிவுண்டாகா வண்ணம் அறிவை மோக மென் னும் விபரீத புத்தி தடுக்க), அவ்வுயிரை (மோகத்தால் தடுக்கப்பட்ட வுயிரை) அவ்வவா அக்கதிக்கட்கொண்டு செல்லுமாகலான் (அவ்விருப்பமானது அப் பிறப்பிலிழுத்துக் கொண்டுபோகு மாதலினால்), அதனை (அவாவை) 'பிறப் பீனும்வித்து'என்று சொல்லினார். "ஆமு னிச்சையே மேலுமே லும்பிறப் பளிக்கும்வித் தெனநெஞ்சே" என்னும் வைராக்கிய சதகச் செய்யுளி னுரையில் சிதம்பரசுவாமிகள் "உடல்விட்டு உயிர் நீங்குங்கால் யாதோர் அவாத்தோன்றிற்று ; அவ்வவாவின் வழித்தாய்ச் சென்று உயிர் பிறத்த லின்,அவா பிறப்பிற்குவித்தெனப்பட்டது" என்று கூறியிருத்தலு மிங்கறி யத் தக்கதாம்.

¶ அது சாட்டுங்கதி நிமித்தங்களும் என்பதற்குப்பிரதியாக அது காட் டுங் கதியும் என்றும் பாடமுண்டு.

கதி நிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்து திப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டு செல்லுமாகலான், அதனைப் 'பிறப்பீனும் வித்து'என்றும், † கதி வயத்தானுளதாய அவ்வுயிர் வேறுபாட்டினும் ‡ அவை தன்மை திரியும் ¶ உற்சர்ப்பிணி $ அவசர்ப்பிணி யென்னுங் கால வேறுபாட்டினும், அது வித்தாதல் வேறுபடாமையின் 'எல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றும்' என்றும், § இஃதுஎல்லாச் சமயங்கட்கும் ஒத்தலான் 'என்ப'என்றுங் கூறினர். இதனாற் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) எல்லாவுயிர்க்கும் - உயிர்களெல்லாவற்றிற்கும், எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், தவாஅ -கெடாது வருகின்ற, பிறப்பு - பிறவியை, ஈனும், - உண்டாக்கும், வித்து—காரணம், அவா-அவாவாகும், என்ப-என்று (நூலோர்) சொல்லுவர், (எ - று).

உடம்பு நீங்கிப் போங்காலத்தில் அடுத்தவினையும், அவ்வினை காட்டுங் கதிநிமித்தங்களும், அக்கதியிலவாவும் உயிரினிடத்து முறையே வந்து தோன்ற, அறிவை மோகமானது மறைக்க, அவ்வுயிரை அவ்வவாவானது அக்கதியினிடத்துக்கொண்டு செல்லுமாதலால்,அவ்வவாவைப்'பிறப்பீனும் வித்து' என்றும், கதிவசத்தால் உளதாகிய அவ்வுயிரின் வேறுபாட்டினும், அக்கதிகளின் தன்மை மாறுபடும் உற்சர்ப்பிணி அவசர்ப்பிணி யென்னுங்கால வேறு பாட்டிலும்,அவ்வவா காரணமாதல் வேறுபடாமையால்'எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்' எனறும், இஃது எல்லாசசமயங்களுக்கும் ஒத்தலால் 'என்ப' என்றும் கூறினர். இதனால் பிறப்பிற்கு அவா காரணமாதல் சொல்லப்பட்டது.

(க - து.) பிறப்பிற்குக் காரணம் அவாவாம் என்பது.

1. The wise say that the seed, which produces unceasing births, at all times, to all creatures, is desire

உ. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

† ஒரு தன்மைத்தாயிருக்கும் உயிர் பிறப்பின் வேறுபாட்டினால் மக்கள் முதலியனவாகச் சொல்லப்படுதல் பற்றிக் 'கதி(பிறப்பு) வயத்தா (வசத்தா) னுளதாய அவ்வுயிர் வேறுபாட்டினும்' என்று கூறப்பட்டது,

‡ அவை தன்மை திரியும்-அக்கதி (பிறப்புக்)களி னியல்புவேறுபடும்.

¶ உலகம் வாழ்நாள் போக முதலியவற்றால் வளர் பிறைபோலப் பெருகுங்காலம் உற்சர்ப்பிணி எனப்படும்.

$ உலகம் வாழ்நாள் போக முதலியவற்றால் தேய்பிறைபோலச் சுருங்குங் காலம் அவசர்ப்பிணி எனப்படும்.

§ இஃது - அவா பிறப்பிற்கு வித்தாதல்.

பரி:—(இ-ள்.) பிறப்புத் துன்பமாதல் அறிந்தவன் ஒன்றைவேண்டின் பிறவாமையை வேண்டும்; அப்பிறவாமை தான் ஒருபொருளையும் அவாவாமையை வேண்ட அவனுக்குத் தானேயுண்டாம், (எ - று).

† அநாதியாகத் தான் பிறப்புப் பிணி ‡ மூப்பு இறப்புக்களாற்றுன்பமுற்று வருகின்றமையை உணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின் கண்ணேயாகலின் பிறவாமை வேண்டும் என்றும், ஈண்டைச் சிற்றின்பங்கருதி ஒருபொருளை அவாவின் அது பிறப்பினும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின், 'அது வேண்டாமை வேண்டவரும்' என்றுங் கூறினார். பிறவாமையின் சிறப்புக் கூறிப் பின் அது வரும்வழி கூறத் தொடங்குகின்றமையின் ¶ மற்று வினைமாற்றின் கண் வந்தது.

தெளி:—(இ - ள்.) (பிறப்புத் துன்பமயமாயிருத்தலை யறிந்தவன்) வேண்டுங்கால் - (ஒன்றை) வேண்டினால், பிறவாமை - பிறவாதிருத்தலை, வேண்டும்—விரும்புவான், அது - அப்பிறவாமையானது, வேண்டாமை- (தான் ஒருபொருளையும்) விரும்பாமையை, வேண்ட—விரும்ப, வரும் - (அவனுக்குத் தானே) உண்டாம், (எ - று).

அநாதியாகத் தான் பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்களால்துன்பமடைந்து வருகின்றமையை அறிந்தவனுக்கு ஆசை இன்பத்திலே யாதலால் பிறவாமை வேண்டும் என்றும், இவ்வுலகத்துச் சிற்றின்பத்தைக்குறித்து ஒருபொருளைவிரும்பினால் அவ்விருப்பம்பிறவியைத்தருங்காரணமாய்ப்பின்னும் முடிவில்லாத துன்பத்தையே உண்டாக்குதலால் 'அது வேண்டாமை வேண்டவரும்' என்றும் சொல்லினார். பிறவாமையின் சிறப்பினைச்சொல்லிப் பின்னர் அப்பிறவாமை வரும் வழியைச்சொல்ல வாரம்பித்தலால் மற்று வினைமாற்றுப்பொருளில் வந்தது.

(க - து.) பிறப்புத் துன்பந்தருவதென் றறிந்தவன், அதனைப் பெறாமைக்குரிய காரணத்தை விரும்பவேண்டும்.

2. If any thing be desired, freedom from births should be desired; that freedom from births will be attained by desiring to be without desire.

† "துன்பந் தோன்றி லெவருந் துறந்திங் கேக ராய்த்தனித்தே, யின்பந் தேட லியற்கை" என்பது மகாராஜாதுறவு.

‡ மூப்பு - கிழத்தனம்.

¶ மற்றென்னு மிடைச்சொல் பிறவாமையென்னும் வினையைப் பிறத்தல் (உண்டாதல்) என்னும் வினையாக மாற்றினமையின், வினைமாற்றுப் பொருளதாயிற்று. பிறவாமை பிறத்தல்- பிறவாதிருத்தல்.

௯. † வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

பரி:—(இ - ள்.) ஒருபொருளையும் அவாவாமையை ஒக்கும்விழுமிய செல்வம் காணப்படுகின்ற இவ்வுலகின் கண் இல்லை; இனி அவ்வளவே அன்று; கேட்கப்படுகின்ற துறக்கத்தின் கண்ணும் ‡ அதனை ஒப்ப தில்லை, (எ - று).

¶ மக்கள் செல்வமும், தேவர் செல்வமும் மேன்மேல் நோக்கக் கீழ்க் கீழாதலுடைமையின், தனக்கு மேலில்லாத வேண்டாமையை 'விழுச்செல் வம்' என்றும், அதற்கு $ இரண்டுலகினுமொப்பதின்மையின் 'அஃதொப்ப தில்'என்றுங்கூறினர். ஆகம வளவைபோலாதுகாட்சியளவையான் எல்லாரா னுந் தெளியப்படுதலின், மக்கள் செல்வம்வகுத்து முற்கூறப்பட்டது. பிற வாமைக்கு வழியாமெனவும், விழுச்செல்வமாமெனவும், வேண்டாமையின் சிறப்பு இவ்விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது.

தெளி:— (இ - ள்.) வேண்டாமையன்ன - (ஒரு பொருளையும்) விரும்பாமையையொத்திருக்கும்,விழுச்செல்வம்-மேலாகியசெல்வமானது, ஈண்டு-(காணப்படுகிற)இவ்வுலகத்தில்,இல்லை—,(இனி அவ்வளவேயல்ல), ஆண்டும் - (கேட்கப்படுகிற) சுவர்க்கத்திலும், அஃதொப்பது - அச்செல் வத்தையொத்திருப்பது, இல் - இல்லை, (எ - று).

மக்களது செல்வமும் தேவரது செல்வமும் மேல்மேல் நோக்கக் கீழ்க் கீழாதலுடைமையால், தனக்குமேலில்லாத வேண்டாமையை 'விழுச்செல் வம்' என்றும், அச்செல்வத்திற்கு இரண்டுலகங்களிலும்ஒப்பதில்லாமையின் 'அஃதொப்பதில்'என்றும் சொல்லினர். ஆகமப்பிரமாணத்தாலறியப்படு வதுபோலாகாமல் பிரத்தியட்சப்பிரமாணத்தால் எல்லாராலும் தெளிந்தறி யப்பட் டிருத்தலால், 'விழுச்செல்வ மீண்டில்லை' என மக்களது செல்வம் பிரித்து முன்னே சொல்லப்பட்டது. இவ்விரண்டு பாட்டாலும் வேண்டா மை பிறவாமைக்கு வழியாமெனவும், மேலாகிய செல்வமாமெனவும், அவ் வேண்டாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) அவாவறுத்தலுக் கொப்பாய செல்வம் எவ்வுலகத் தும் இல்லை என்பது.

---

† "ஆசை யறுமின்க ளாசை யறுமின்க, ளீசனோ டாயினு மாசை யறுமின்க, ளாசை படப்பட வாரும் பெருந்துய, ராசை விடவிட வானந்த மாமே" என்பது திருமந்திரம்.

‡ அதனை-வேண்டாமை யென்னுஞ்செல்வத்தை.

¶ மக்களுள்ளே அரசனது செல்வத்தை நோக்கக் குடிகளது செல்வம் கீழாதலும், தேவர்களுள்ளே பிரமனது செல்வத்தை நோக்க இந்திரனது செல்வம் கீழாதலும் பிறவு மிங்குய்த்துணர்க.

$ இரண்டுலகு - மண்ணுலகு விண்ணுலகு.

3. There is in this world no excellence equal to freedom from desire; and even in that world, there is nothing like it.

௪. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

பரி:—(இ-ள்.) ஒருவர்க்கு வீடென்று சொல்லப்படுவது அவாவில்லாமை; அவ்வவா வில்லாமைதான் மெய்ம்மையை வேண்டத் தானே உண்டாம், (எ-று).

† வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதலாகலின், அதனைத் 'தூஉய்மை' என்றும், ‡ காரியத்தைக் காரணமாக உபசரித்துத் 'தூஉய்மை யென்ப தவாவின்மை' என்றும், வாய்மையையுடைய பரத்தை ஆகுபெயரான் 'வாஅய்மை' என்றுங் கூறினார். ¶ மற்று மேலையது

† வீடாவது உயிரானது அவிசசை முதலிய குற்றங்களினின்றும் நீங்குதலாதலால், அவ்வீட்டைத் தூய்மையென்று கூறினார். தூய்மையுடைய முத்தியைத் தூய்மை யென்றது பண்பாகு பெயராம.

‡ வீடு காரியமாயும் அவாவறுத்தல் காரணமாயு மிருத்தலால் (வீடாகிய) காரியத்தை (அவாவறுத்தலாகிய) காரணமாக வுபசரித்துத் 'தூஉய்மை யென்ப தவாவின்மை' என்று கூறப்பட்டது.

பிறப்பிற் கேதுவாகிய பேதைமையைப் 'பிறப்பென்னும் பேதைமை' என்றாற்போலத் தூய்மைக்கு (வீட்டிற்கு) ஏதுவாகிய அவாவின்மையைத் 'தூஉய்மை யென்ப தவாவின்மை' என்று கூறினமையின், இது காரியங் காரணமாய வுபசார வழக்காம்.

'காரணத்தைக் காரியமாக வுபசரித்துத் தூஉய்மையென்ப தவாவின்மையென்றும்' என்றும், பாடமுண்டு. அப்பாடத்தின்படி தூய்மை(முத்தி) காரணமாயும் அவாவின்மை காரியமாயு மிருத்தல் வேண்டும். [அஃதாவது வீட்டினால் அவாவின்மை யுண்டாதல்வேண்டு மென்பது.] அவ்வாறில்லை யென்பது 'அவாவறுத்தல் வீட்டிற்குப் பரம்பரையானன்றி நேரே யேதுவென்பதூஉம்' என்று கீழே பரிமேலழகர் கூறியிருத்தலினாலும் நன்கு விளங்கும்; விளங்கவே, அது பாடமன்றெனக.

¶ மற்றென்னு மிடைச்சொல் அவாவின்மை யென்னும் வினையை (அவாவில்லாமை யென்னுங் குறிப்புத் தொழிற்பெயரை) (அவாவின்மை) உண்மை யென்னும் வினையாக மாற்றினமையின், வினைமாற்றுப்பொருளதாயிற்று. அவாவின்மை யுண்மை - அவாவின்மை யுண்டாதல்.

'தூஉய்மையென்ப தவாவின்மை (முத்திக்குக் காரணம் அவாவின்மை)' என்று அதன் சிறப்பை முன்னர்க்கூறிப் பின்னர் 'அது வாஅய்மை வேண்டவரும்(அவாவின்மை பரம்பொருளை இடைவிடாதுபாவிக்கவரும்)' என்று அவ்வவாவின்மை வரும் வழியைக் கூறத்தொடங்குகின்றமையின்,

போல வினைமாற்றின்கண் வந்தது. வேண்டுதல் —இடைவிடாது பாவி த்தல். அவாவறுத்தல் வீட்டிற்குப் † பரம்பரையானன்றி நேரே யேது வென்பதூஉம், ‡ அது வரும்வழியும் இதனாற் கூறப்பட்டன.

தெளி:—(இ-ள்.) தூஉய்மையென்பது - (ஒருவர்க்கு) முத்தியென்று சொல்லப்படுவது, அவாவின்மை - ஆசையில்லாமையாம், அது-அவ்வாசை யில்லாமை. (தான்), வாஅய்மை-மெய்ம்மையை, வேண்ட-விரும்ப, வரும்- (தானே) உண்டாம், (எ-று).

முத்தியாவது உயிர் அஞ்ஞானம் அகங்காரம் அவா ஆசை கோபம் என்னும் ஐவகை மாசுக்களி (குற்றங்களி) னின்றும் நீங்குவதாகலால், அம்முத்தியைத் 'தூஉய்மை' என்றும், முத்தியென்னுங் காரியத்தை அவா வின்மையென்னுங்காரணமாக உபசரித்துத் 'தூஉய்மை யென்பதவாவின் மை' என்றும், வாய்மையையுடைய பரம்பொருளைப் பண்பாகுபெயரால் 'வாஅய்மை'என்றும் சொல்லினர். மற்று மேற்கூறியதுபோல வினைமாற் றுப்பொருளில் வந்தது. வேண்டுதல்-பரம்பொருளையொற்றுமையுற இடை விடாது பாவித்தல். அவாவறுத்தல் முத்திக்கு ஒன்றன் வாயிலாக வல்லா மல் நேரே காரணமென்பதும், அவ்வவாவறுத்தல் வரும் வழியும் இதனால் சொல்லப்பட்டன. வாய்மை-மெய்ம்மை.

(க-து.) முத்தியைத்தரும் அவாவின்மையானது பரம்பொ ருளை யொற்றுமையுற இடைவிடாது பாவித்தலா லுண்டாகும்.

மற்றென்னு மிடைச்சொல் மேலையதுபோல (வேண்டுங்கால் வேண்டும் என்னும் இவ்வதிகாரத்தின் 2-வது குறளிலுள்ள மற்றென்னு மிடைச் சொல்போல) வினைமாற்றின்கண் வந்தது என்பதாம்.

† பரம்பரை - ஒன்றைப் பின்பற்றி யிருப்பது.

‡ அது வரும்வழியும் - (முத்தியுறுதற்கு நேர்சாதனமாய) அவாவின் மை யுண்டாகும்வழி பரம்பொருளை யொற்றுமையுற இடைவிடாது பாவி த்தலென்பதும்.

சிவோகம் அல்லது அகம்பிரஹ்மாஸ்மி அல்லது பிரமைவாகம்என்று பரம்பொருளை யபேதமாக நிரந்தராப்பியாசஞ் செய்தலால் மனம் பலமு கப்பட் டோடாதுபூரணமாக ஒருமுகமாம்; அஃதொருமுகமாய விடத்து, சத்துவகுணத்தால் வைராக்கிய மயமான சாந்தவிருத்தியுண்டாம்; அஃது உண்டாயபோது சிவாநந்தம் அல்லது பிரஹ்மாநந்தம் பூரணமாகவிளங்கும்; அது விளங்கியபோது சப்தாதி வாயிலாக வவ்வப்போதுண்டாகும் ஆநந்தம் மிகுவற்பமாகத் தோன்றும்; அது தோன்றச் சப்தாதி விஷயங்களிலுள்ள அவாவறும்; அஃதறவே, வீடு உள்ளங்கைநெல்லிக்கனிபோல் விளங்கும் என்பது ஈண்டுணர்தற்பாற்றும்.

"அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டும் நிச த்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால், வசத்தி லுன் மன நின்றுசின் மாத்திர வடிவமா யிடின்மைந்தா, கசத்த தேகத்தி லிருக் கினு மாநந்தக் கடல்வடி வாவாயே" என்பது கைவல்லிய நவநீதம்.

4. Purity of mind consists in freedom from desire; and that freedom from desire is the fruit of the love of truth.

ரு. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

பரி:—(இ-ள்.) பிறவி அற்றவரென்று சொல்லப்படுவார் அதற்கு நேரே யேதுவாகிய அவா அற்றவர்கள் † பிற வேதுக்களற்று அஃதொன்றும் அறாதவர்கள், ‡ அவற்றால் சிலதுன்பங்க ளற்றதல்லது, § அவர் போற் பிறவி அற்றிலர், (எ-று).

*இதனால் அவாவறுத்தாரது சிறப்பு ¶ விதிமுகத்தானும் எதிர்மறை முகத்தானுங் கூறப்பட்டது,*

தெளி:—(இ - ள்.) அற்றவரென்பார்-(பிறவி) அற்றவரென்று சொல்லப்படுவார், அவாவற்றார் - (அப்பிறவி யறுதற்குநேரே ஏதுவாகிய) அவா அற்றவர்கள், மற்றையார் - பிறவேதுக்கள் அற்று அவ்வவா வொன்றும்

† பிற ஏதுக்களற்று அஃதொன்றும் அறாதவர்கள்-பிறவியுண்டாவதற்குப் பரம்பரைக் காரணமாயுள்ள உயிர்களிடத்துக் கருணையில்லாமை, மாமிசம் புசித்தல், தவஞ்செய்யாமை, கூடாவொழுக்கம், நன்மையைத்தராத பொய்பேசுதல், திருடுதல், கோபங்கொள்ளுதல், பிறர்க்குத் தீமை புரிதல், பிராணிகளைக் கொல்லுதல் முதலிய வேறு காரணங்க ளொழியப்பெற்று அவ்வவாவொன்றும் ஒழியப் பெறாதவர்கள்.

‡ அவற்றாற் சிலதுன்பங்க ளற்றதல்லது - பிறவிக்குப் பரம்பரைக் காரணங்க ளொழியப்பெற்றமையால் சிலதுன்பங்க ளொழிந்த தல்லாமல்.

§ அவர்போல் - அவா அற்றவர்கள்போல்.

¶ அவா பிறவிக்கு நேரேயேதுவும், அவாவறுதல் பிறவியறுதற்கு நேரே யேதுவுமாமெனக.

'அற்றவரென்பா ரவாவற்றார்' எனவிதி முகத்தானும் (உடம்பாட்டாலும்)'மற்றையா ரற்றாக வற்றதிலர்'என எதிர்மறை முகத்தானும்ஆசையற்றவரது மகிமை சொல்லப்பட்டது. இதனால் ஆசையற்றவர்க்குப் பிறப்பில்லையென்றும் ஆசையறாதவர்க்குப் பிறப்புண்டென்றும்பெறப்பட்டன, (இங்கு அற்றார் என்னும் உடம்பாட்டுவினை விதிமுகமாம்; இலர் என்னும் எதிர்மறைவினை மறைமுகமாம்.) பிரபுலிங்கலீலை, "ஆசை யறுதல் வீட்டின்ப நேரே யடையக் காரணமாம், ஆசை யறுத லலதில்லைப் பலநூலனைத்து மாய்ந்திடினும், ஆசை யறுவோன் சிவனாத றிண்ண மெனநன் றறிந்திருந்தும், ஆசை யுறுத லென்கொண்டோ யந்தோ மனித ரறியோமே" என்று கூறுவதும், திருமந்திரம் "ஆசையு மன்பு மறுமி னறுத்த பின், ஈச னிருந்த விடமெளி தாமே" என்று கூறுவதுமிங்குக் கவனிக்கத்தக்கனவாம்.

அறுதவர்கள், (அவ்வேதுக்க ளற்றமையால் சிலதுன்பங்கள் அற்றதல்லா மல்), அற்றாகவற்றதிலர் - அவர்போற் பிறவியற்றிலர், (எ - று).

இதனால் அவாவறுத்தவரது சிறப்பு உடம்பாட்டினாலும் எதிர்மறையி னாலும் சொல்லப்பட்டது.

(க-து.) ஆசையற்றவர்க்குப் பிறவியறும்; மற்றவர்க்கஃதறாது.

5. They are said to be free who are freed from desire; all others who, whatever else they may be free from, are not freed from desire.

சா. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

பரி:—(இ - ள்.) † மெய்யுணர்தல் ஈறகிய காரணங்க ளெல்லாம் எய்தி ‡ அவற்றன் வீடெய்தற்பாலனாய ஒருவனை $ மறவிவழியாற் புகுந்து பின்னும் பிறப்பின்கண்ணே வீழ்த்துக் கெடுக்கவல்லது அவா; ஆகலான் அவ்வவாவை அஞ்சிக்காப்பதே துறவறமாவது, (எ - று).

ஒருமென்பன அசைநிலை. அநாதியாய்ப் போந்த அவா ஒரோவழி ¶ வாய்மை வேண்டலை யொழிந்து () பராக்காற்காவானாயின், †† அஃதிட மாக அவனறியாமற் புகுந்து, பழைய இயற்கையாய்நின்று பிறப்பினை யுண் டாக்குதலான். அதனை 'வஞ்சிப்பது' என்றார். * காத்தலாவது வாய் மை வேண்டலை இடைவிடாது பயின்று அது செய்யாமற் பரிகரித்தல். இதனால் அவாவின் குற்றமும் அதனைக்காப்பதே அறமென்பதூஉம் கூறப் பட்டன.

தெளி:—(இ - ள்.) ஒருவனை - (நிலையாமை முதல் மெய்யுணர்தல் முடிவாயுள்ள காரணங்களெல்லாம் பெற்று அக்காரணங்களால் முத்தியை

---

† நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தலென்பன வீட டை.தற்குக் காரணங்களாம்; இவற்றுள் அவாவறுத்தல் நேர்காரணமாம்; மற்றவை பரம்பரைக் காரணமாம்.

‡ அவற்றான் - நிலையாமை முதலிய காரணங்களால். $ மறவி - சோர்வு.

¶ வாய்மைவேண்டலை யொழிந்து - பரம்பொருளை யொற்றுமையுற விடைவிடாது பாவித்தலை விட்டு.

() பராக்காற் காவானாயின் - அஜாக்கிரதையினால் (ஆசையைப்) பாது காவானானால். (பாதுகாத்தல் - ஒழித்தல்).

†† அஃதிடமாக அவனறியாமற் புகுந்து-(அவ்வாசையானது) பாது காவாமை வாயிலாக அவன் தெரிந்துகொள்ளாதபடி பிரவேசித்து.

* காத்தலாவது பரம்பொருளையொற்றுமையுறப்பாவித்தலை யிடைவி டாது அப்பியசித்து வஞ்சித்தல் செய்யாதபடி அவாவை ஒழித்தலாம்.

யடைதற்குரியவனுகிய) ஒருவனை, வஞ்சிப்பது - (மறவிவழியினல்நுழைந்து பின்னும் பிறப்பிலேதள்ளிக்) கெடுக்கவல்லது, அவா - அவாவாம், (ஆதலால்), அஞ்சுவது - (அவ்வவாவை) அஞ்சிக்காப்பதே, அறன் - துறவறமாம், (எ - று).

ஒரு மிரண்டும் - ஆசைகள். அநாதியாய் வந்துள்ள அவா ஒரோவிடத்து வாய்மை வேண்டலை யொழிந்து பராமுகத்தால் காவாதவனுனல், அக்காவாமை இடமாக அவன் அறியாமல்புகுந்து பழைய வியற்கையாய் நின்று பிறப்பினை உண்டாக்குதலால், அவ்வவாவை 'வஞ்சிப்பது' என்றார். காத்தலாவது வாய்மை வேண்டலை இடைவிடாமற் பழகி அவ்வஞ்சித்தலைச் செய்யாதபடி யொழித்தல். இதனால் அவாவின் குற்றமும் அவ்வவாவைக் காப்பதே (ஒழிப்பதே)அறமெனபதும் சொல்லப்பட்டன.

(க - து.) வஞ்சித்துக் கெடுக்கவல்லது ஆசை யாதலின், அதனை அஞ்சி யொழிப்பதே அறமாம் என்பது.

6. It is the chief duty of an ascetic to watch against desire with jealous fear; for it has power to deceive and destroy him.

எ. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றன் வரும்.

பரி:—(இ-ள்.) ஒருவன் அவாவினை யஞ்சித் துவாக் கேடுக்க வல்லனுயின், அவனுக்குக் கேடாமைக்கேதுவாகிய வினை தான் விரும்புநெறியானே உண்டாம், (எ - று).

கெடாமை - பிறவித்துன்பங்களான் அழியாமை. † அதற்கேதுவாகிய வினையென்றது மேற்சொல்லிய ‡ துறவறங்களை. வினை- சாதியொருமை. தான்விரும்புநெறி - () மெய்வருந்தாநெறி. அவாவினை முற்ற வறுததானு

† அதற்கேதுவாகிய—கெடாமைக்குக் காரணமான. ‡ துறவறங்கள்—விரதமும் ஞானமும்.

() 'வருத்தமொன் றின்றிச் சாரலாம் பிரமமென்றயன் வகுத்தகீதையினா, டுரைத்த தெற்றினுக்கா யெனிற்பர ஞான முணர்பவர்க் குன்னுதலுரைத்த, னிரைத்திடு தொழில்க ளொன்றும்வேண் டாது நீத்துவா ளாவிருத் தலினு, லருத்தமற் றதனுக் கோர்ந்துநா றெளித லாகநீ துணிந்தனை போலும்'' என்பது வைராக்கிய தீபம். "ஆதலா லறிவு மறிவெலாங் கைவிட் டறிவினுக் கறிவதாய் நின்ற, பேதமில் பிரம மொன்றுமே யறிவான் பேறுபே ரின்பமாம் பிறத்தல், சாதலற் றிருக்கு மதனையோர் வருத்த மின்றியே சாரலா யிருக்க, வாதரித் தறியா ரற்பமே விரும்பி யனந்ததுக் கத்திலே யமைவார்'' என்பது பிரமகீதை.

க்கு வேறறஞ் செய்யவேண்டா,¶ செய்தனவெல்லாம் அறமாமென்பதுகருத்து. இதனால் அவாவறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) (ஒருவன்) அவாவினை - ஆசையை, ஆற்றவறுப்பின் - (அஞ்சி) முழுதும் ஒழித்தால் (வஞ்சித்தும் வாராமற் கெடுக்கவல்லவனானால்), (அவனுக்கு), தவாவினை - கெடாமைக்கு ஏதுவாகிய செயல், தான் வேண்டுமாற்றால் - தான் விரும்பும் வழியினாலே, வரும் - உண்டாகும், (எ - று).

கெடாமை - பிறவித் துன்பங்களால் அழியாமை. அதற்குக் காரணமாகிய வினையென்றது மேற்சொல்லிய துறவறங்களை. வினை - சாதியொருமைப்பெயர். தான் விரும்பும்வழி - உடல் வருந்தாதவழி. அவாவை முழுதும் ஒழித்தவனுக்கு வேறு அறஞ்செய்ய வேண்டுவதில்லை, அவன் செய்தகருமங்களெல்லாம் அறமாமென்பது கருத்து. இதனால் அவாவறுத்தலினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) ஆசையை யொழித்தவனுக்குக் கெடாமைக் கேதுவாகிய துறவறந் தானே யுண்டாகும் என்பது.

7. If a man thoroughly cut off all desire, the deeds which confer immortality, will come to him, in the path in which he seeks them.

அ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

பரி:—(இ - ள்.) அவாவில்லாதார்க்கு வரக்கடவதோரு துன்பமும் இல்லை; ஒருவற்குப் †பிறகாரணங்களெல்லாம் இன்றி அஃதொன்றும் உண்டாயின், அதனானே எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும், (எ - று).

உடம்பு ‡ நுகர்கின்ற துன்பம் முன்பே செய்துகொண்டதாகலின், ஈண்டுத்துன்பமென்றது இதுபொழுது அவாவாற் செய்து கொள்வனவற்றை. 'தவாஅது மேன்மேல் வரும்' என்றதனான் மூவகைத் துன்பங்களுமென்பது பெற்றாம். இதனால் அவாவே துன்பத்திற்குக் காரணமென்பது கூறப்பட்டது.

¶ "துட்டரா மார்க்கா நூலிற் றுவக்குணப் பெரிய ராகிச்,சிட்டராய்த் தீர ராகிச் சிவனரு ளுடைய ரானோர், கட்டமாம் பிறவி நீரக் காதலால் வேதஞ் சொல்லப், பட்டதே செய்யா நிற்பர் பரமமாம் பதத்தை யுன்னி" என்பது பிரமகீதை.

† பிறகாரணங்கள்—(துன்பத்திற் கேதுவாகிய) அவாவொழிந்த மற்றைக் காரணங்கள். அவை அருளாமை, பொய்பேசுதல் முதலியன.

‡ நுகர்கின்ற - (உயிர்) அனுபவிப்பதாகக் கொண்டுகின்ற.

தெளி:—(இ - ள்.) அவாவில்லார்க்கு - ஆசை யில்லாதவர்க்கு, துன்பம் - (வரக்கடவதாகிய) ஒருதுன்பமும், இல்லாகும் - இல்லையாம், (ஒருவனுக்குப் பிறகாரணங்க ளெல்லாம் இல்லாது), அஃதுண்டேல் - அவ்வாசை யொன்று மாத்திரம் உண்டாயின், (அவ்வாசையினாலே எல்லாத் துன்பங்களும்), தவாஅது - முடிவில்லாமல், மேன்மேல் - மேலுமேலும் (இடைவிடாமல்), வரும், உண்டாகும், (எ - று).

உடம்பு மொண்டு கொண்டுநின்ற துன்பம் முன்பே (கீழ்ப்போன பிறவிகளில் நல்லன தீயன) செய்து கொண்டதாகலின், இங்குத் துன்ப மென்றது, இப்போது ஆசையினால் செய்துகொள்ளுந் துன்பங்களை, 'தவாஅது மேன்மேல் வரும்' என்றதனால் தன்னைப்பற்றி வருவதும், பிறவுயிரைப்பற்றி வருவதும், தெய்வத்தைப்பற்றி வருவதும் ஆகிய மூவகைத் துன்பங்களு மென்பது பெற்றும். இதனால் ஆசையே துன்பத்திற்குக் காரணமாமென்பது சொல்லப்பட்டது.

(க - து.) ஆசையின்மையினால்இன்பமும்அஃதுண்மையினால் துன்பமும் உண்டாகின்றன என்பது.

8. There is no sorrow to those who are without desire but where that is, sorrow will incessantly come more and more.

கூ. † இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

பரி:—(இ - ள்.) அவாவென்று சொல்லப்படுகின்ற மிக்க துன்பம் ஒருவற்குக் கெடுமாயின், அவன் வீடு பெற்றவழியே அன்றி உடம்போடு நின்றவழியும் இன்பம் இடையறாது, (எ - று).

துன்பத்துட்டுன்பம் - ‡ எனைத்துன்பங்களெல்லாம் இன்பமாக வருந் துன்பம். வினையின் கண்ணே அன்றித் தோற்றத்தின்கண்ணுந் துன்பமாகலின், இவ்வாறு கூறப்பட்டது. ¶ காரணத்தைக் காரியமாக உபசரித்து 'அவாவென்னுந் துன்பத்துட்டுன்பம்' என்றும், அது கெட்டார்க்கு மனந்தடுமாறாது நிரம்பி நிற்றலான் ஈண்டுமின்ப மிடையறாது என்றுங் கூறினார். இனி ஈண்டும் என்பதற்குப் $ பெருகுமென் றுரைப் பாருமுளர்.

† "இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந், துன்பத்துட் டுன்பங் கெடின்" என்னுங் குறளுமீண்டுணர்தற்பாலதாம்.

‡ எனைத்துன்பங்க ளென்றது குட்டம், குன்மம், சூலை முதலிய வற்றாலாய துன்பங்களை.

¶ அவாவினால்வரும் துன்பத்தை 'அவாவென்னுந் துன்பத்துட் டுன்பம்' என்று ஒற்றுமைப்படுத்திக் கூறினமையின், இது காரணங்காரியமாய உபசார வழக்காம். $ பெருகும்—(இன்பமிடையறாது) அதிகரிக்கும்.

இதனால் அவாவறுத்தார் வீட்டின்பம் உடம்போடு நின்றே எய்துவரென்பது கூறப்பட்டது.

தெளி:—(இ - ள்.) அவாவென்னும் - ஆசையென்று சொல்லப்படுகிற, துன்பத்துட்டுன்பம் - (துன்பங்களுள்ளே) மிகுந்ததுன்பமானது, கெடின் - (ஒருவனுக்குக்) கெடுமாயின், (அவன் முத்திபெற்ற விடத்தேயல்லாமல்), ஈண்டும் - உடம்போடுகூடி நின்றவிடத்தும், இன்பம் - பேரின்பமானது, இடையறாது - நடுவே நீங்காது, (எ - று).

துன்பத்துட்டுன்பம்-மற்றைத் துன்பங்களெல்லாம் இன்பங்களாய்த் தோன்றும்படி வருங் கொடிய துன்பமாம். ஆசையானது பயனைக் கொடுக்கும்போதே யல்லாமல் தோன்றும்போதும் துன்பந்தருவதாகலால், 'அவாவென்னுந் துன்பத்துட் டுன்பம்' என்றிவ்வாறு சொல்லப்பட்டது. அவா வென்னுங் காரணத்தைத் துன்பத்துள் துன்பம் என்னுங்காரியமாக உபசரித்து'அவாவென்னுந் துன்பத்துட்டுன்பம்'என்றும்,அவ்வவா கெட்டவர்க்குமனந் தடுமாறுதலின்றி (பிரஹ்மாநந்தத்தினால்) நிரம்பி நிற்குமாகையால் ஈண்டும் இன்பம் இடையறாது என்றும் சொல்லினர். இதனால் அவாவறுத்தவர் முத்தியின்பத்தை உடம்போடு கூடி நின்றே யடைவாரென்பது சொல்லப்பட்டது.

(க - து.) ஆசையற்றவர்க்குப் பூரணாநந்த முண்டாமென்பது.

9. Even while in this body, joy will never depart from the mind in which desire has been destroyed.

---

கO. † ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

பரி:—(இ - ள்.) ஒருகாலும் ‡ நிரம்பாத இயல்பினையுடைய அவாவினை ஒருவன் நீக்குமாயின், அந்நீப்பு அவனுக்கு அப்பொழுதே எஞ்ஞான்றும் ஒரு நிலைமையனும் இயல்பைக் கொடுக்கும், (எ - று).

நிரம்பாமையாவது § தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின்,

† மனுதரும சாஸ்திரம் ஆறாவதத்தியாயத்தில் "எப்போது பிரமத்தியானத்தினால் தோஷத்தையே யுண்டுபண்ணுவதாய எல்லா விஷயங்களிலும் ஆசையை நீக்குகிறானோ அப்போது இம்மையிலும் மறுமையிலும் அழிவற்ற சுகத்தை யடைகிறான்'' என்று கூறுவதும், திருமந்திரம் "வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர், வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கையொழிந்திலர், வேதாந்த மாவது வேட்கை யொழிந்திடம், வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே'' என்று கூறுவதுமிங்கறியத் தக்கனவாம்.

‡ நிரம்பாத - திருப்தியடைதலில்லாத.

§ தாமேயன்றித் தம் பயனும் - பொருள்களே யல்லாமல் அப்பொருள்களால்வரும் (சிற்றின்பப்) பயன்களும்.

வேண்டாதனவாய பொருள்களை வேண்டிமேன்மேல் வளர்தல். ‡ அவ்வளர்ச்சிக்கு அளவின்மையின், நீத்தலை தக்கதென்பது கருத்து. † களிப்புக் கவர்சிகளும் பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களும் முதலாயினவின்றி உயிர் நிரதிசய வின்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் 'பேராவியற்கை' என்றும், அஃது அவா நீத்தவழிப் பெறுதல் ஒருதலையாகலின், அந்நிலையே தரும் என்றுங் கூறினார். ¶ "நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்

---

‡ அவ்வளர்ச்சிக்கு அளவின்மையின் - ஆசையின் பெருக்கத்திற்கு அளவில்லாமையால். ஆசையின் பெருக்கத்திற்கு அளவில்லை யென்பது "ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி யாளினுங் கடன்மீதிலே யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக வம்பொன்மிக வைத்தபேரும், நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர் நெடுநா ளிருந்தபேரும் நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி நெஞ்சுபுண் ணாவர்' என்று தாயுமானவர் கூறுவதனாலுமறியப்படும்.

† "களிப்புங்கவர்வு மற்றுப் பிறப்புப் பிணிமூப் பிறப்பற், றொளிக் கொண்ட சோதியுமா யுடன்கூடுவ தென்றுகொலோ" என்பது திருவாய் மொழி.

¶ திருவாய்மொழி, 78 - பதிகம் 6-வது செய்யுள். இதன்பொருள் (ஒருவன்) நன்றாய் - நன்றாக, ஞானம் - சப்தாதி விஷய ஞானங்களை, கடந்துபோய் - ஒழித்துச்சென்று, நல்லிந்திரிய மெல்லாம் - (சம்மைத் தலைமை யாகவுடையவனைச் சப்தாதிவிஷய வாயிலாகக் கெடுப்பதிற்) சிறந்தசெவி யாதி யிந்திரியங்களை யெல்லாம், ஈர்த்து - (சப்தாதி விஷயங்களிற்செல்லா வண்ணம்) நிக்கிரகித்து, ஒன்றாய்க்கிடந்த - (உயிரோடு அநாதியே) பொருந்திக்கிடந்த. அரும் - (மெய்யுணர் வுடையவர்க்கன்றி வேறெவராலும்) கடத்தற்கரிய, பெரும் - (மகத்தத்துவமுதலிய தத்துவங்களை நோக்க) வியாபகமான, உலப்பில் - (மெய்யுணர்வாலன்றி வேறெதனாலும்) கெடுதலில்லாத, பாழதனை - பிரகிருதியை, உணர்ந்து உணர்ந்து - (கேட்டல் சிந்தித்தல்களால் சந்தேக விபரீதமில்லாமல் தெளிக்கும் வகையை) நன்றாயறிந்து, ஆங்குச்சென்று - (எவ்வகையாலும் பிரகிருதிக்கு வேறு பட்டுள்ள) ஆத்மாவரையிற்சென்று, இன்பதுன்பங்கள் இன்பதுன்பங்களுக்குக் காரணமான தருமாதருமங்களை, செற்றுக்களைந்து - (பின்னும் பிறப்பை யுண்டாக்காதபடி) பற்றறவொழித்து, பசை - (விடப்பட்ட சப்தாதி விஷயங்களில் பழையபழக்க மிகுதியால் வருத்தம்பற்றி யுண்டாகும்) ஆசையை, அற்றால் - (பரம்பொருளை யொற்றுமையுற இடைவிடாது பாவிதலால்) ஒழித்தால், அன்றே - (அவ்வாசை யொழிந்த) அந்நாளிலேயே, அப்போதே - அம்முகூர்த்தத்திலேயே, வீடும் - காமம் வெகுளி மயக்கங்கள் நீங்கும், வீடதுவே - காமம் வெகுளி மயக்கங்கள் நீங்குமதுவே, வீடாம் - (அவனுக்கு) மோட்சமாம், என்பது. சிவஞானபோதச் சிற்றுரையில் "சூனியமாவது உள்ளதுமன்று, இல்லது மன்று, இரண்டுமாவது மன்று, வேறுமன்றெனப்படும் பாழ்" என்று கூறப்பட்டிருக்கிறதால், பாழின் தன்மையுணரப்படும்.

லாமீர்த், தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந் துணர்ந்து, சென்றாங் கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றா, லன்றே யப்போ தேவீடு மதுவே வீடு வீடாமே" என்பதூஉம் இக்கருத்தே பற்றி வந்தது. இந்நிலைமையுடையவனை வடநூலார் † சீவன் முத்தனென்ப. இதனால் வீடாவது ‡ இதுவென்பதூஉம், அஃது அவாவறுத்தார்க்கு அப்பொழுதே உளதாமென்பதூஉங் கூறப்பட்டன.

தெளி:—(இ - ள்.) ஆராவியற்கை - (ஒருபோதும்) நிரம்பாதவியல்பினையுடைய, அவா-அவாவை, நீப்பின்-(ஒருவன்) ஒழிப்பானாயின், (அவ்வொழித்தல் அவனுக்கு), அந்நிலையே-அப்போதே, பேராவியற்கை-எப்போதும் ஒரு நிலைமையனாந்தன்மையை, தரும் - கொடுக்கும், (எ-று).

அவா நிரம்பாமையாவது தாமேயல்லாமல் தம்பயனும் நிலையாமையால்வேண்டத்தகாதனவாய பொருள்களை வேண்டிமேலுமேலும்வளர்தல், அவ்வவாவின் வளர்ச்சிக்கு அளவில்லாமையால்,அதனை யொழித்தலேதக்கதென்பது கருத்து. களிப்புக் கவலைகளும், பிறப்புப் பிணி மூப்பு இறப்புகளும் முதலாயின வில்லாமல் உயிர் பேரின்பத்தை யுடையதாய் நிற்றலால் வீட்டினைப் 'பேராவியற்கை' என்றும், அவ்வீடு அவாவை யொழித்த விடத்துப் பெறுதல் நிச்சயமாதலால் அந்நிலையே தரும் என்றும் சொல்லினார். இந்நிலையையுடையவனை வடநூலார் சீவன்முத்தனென்பர். இதனால் வீடாவது இதுவென்பதும், அவ்வீடு அவாவை யொழித்தவர்க்கு அப்போதே உண்டாமென்பதும் சொல்லப்பட்டன.

(க - து.) ஒருவன் அவாவை யொழிப்பானாயின், அஃது அவனுக்குச் சீவன்முத்தியைத் தரும் என்பது.

10. The removal of desire, whose nature it is never to be satisfied, will immediately confer a nature that can never be changed.

துறவறவியல் முற்றிற்று.

பரி:—இவ்வாற்றான் இம்மை, மறுமை, வீடென்னு மூன்றனையும் பயத்தற் சிறப்புடைத்தாய அறங்கூறினார்; இனிப்பொருளும் இன்பமுங் கூறுவார், ¶ அவற்றின் முதற்காரணமாகிய ஊழின்வலி கூறுகின்றார்.

† சீவன்முத்தன்—சீவத்துவம் விடுபட்டவன்.

‡ இது-பேராவியற்கை (எஞ்ஞான்றும் ஒரு நிலைமையனாகு மியல்பு).

¶ "வாழ்வுக ளாலென் மறைநெறி ஞான மதனாலென், கேள்விக ளாலென் கிளர்மனு வாலென் கிளையாலென், வேள்விக ளாலென் விண்ணவ ராலென் வினைவெல்லாம், ஊழ்வினை தானே தருதலி னாலே யிறையென்றான்" என்பது பெருந் திரட்டு.

'அவற்றின் (பொருளின்பங்களின்) முதற்காரணமாகிய ஊழின் வலி கூறுகின்றார்' என்றமையின், ஊழ் பொருளுக்கும் இன்பத்திற்கும்

*தெளி:—இவ்விதத்தால் இம்மை, மறுமை, வீடு என்னும் மூன்றையுந் தருதற் சிறப்புடையதாகிய அறத்தை அருளிச்செய்தார்; இனிப்பொருளும், இன்பமும் அருளிச்செய்யத் தொடங்கியவர், அப்பொருளின்பங்களின் முதற்காரணமாகிய ஊழின்வலியைச் சொல்லுகின்றார்.*

## ஊழ்—Fate.

பரி:—அஃதாவது * இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய † நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம்.

*முதற்காரணமாமென்பது வெளிப்படையாம். "இயற்றலு மீட்டலும்" என்னுங்குறளின் விசேட வுரையில், "பொருள்களாவன—மணி, பொன், நெல் முதலாயின" என்றும், காமத்துப்பாலின் தொடக்கத்தில் "ஈண்டின்பமென்றது ஒருகாலத் தொருபொருளான் ஐம்புல னுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை" என்றும் பரிமேலழகரே கூறியிருத்தலால், ஊழ் பொருளின்பங்களுக்கு முதற்காரணமாகாதென்பது தெள்ளிதின் விளங்கும். "முதற்காரணமாவது காரியத்தோ டொற்றுமை யுடையது" என்று நச்சினார்க்கினியார் கூறுதலால்,மண் தனது காரியமாகிய கடத்தில் ஒற்றுமையுடையதாயிருத்தல் போல ஊழ் பொருளிலும் இன்பத்திலும் ஒற்றுமை யுடையதாயிருத்தல் வேண்டும்? மேலும், காரியத்தினொடுக்கம் அதனது முதற்காரணத்திலென்பது வெளிப்படையாமாகலின்,பொருளும் இன்பமும் ஊழின்கண் ஒடுங்கல்வேண்டும். மணி, பொன், நெல் முதலியன தமது முதற் காரணமான பிருதிவியிலும், இன்பம் தனது முதற்காரணமான மனம் அல்லது உயிர் என்னும் இரண்டனுள் யாதாவதொன்றிலும் ஒடுங்குவனவாயிருத்தலின், அவற்றிற்கு ஊழ் முதற்காரணமாமென்பது பொருந்தாது. முதற்காரணம் யாண்டும் திரவியமாயிருத்தல் வேண்டுமென்பது நியமமாதலின், உருவமுதலிய குணங்களுள் ஒன்றாய ஊழ் - (அதிருஷ்டம் - தருமாதருமம்) எக்காரியத்திற்கும் முதற்காரணமாதல் ஒருவாற்றானும் அமையாது. அவ்வாறாயின், பரிமேலழகர் கூறியது தவறோ எனின், கூறுதும்:-ஒருவனிடத்துப் பொருளின்பங்கள் வருவதற்கு ஊழ் காலம் திக்கு ஆகாயமுதலியனபோலச் சாதாரண காரணமாயிராது அசாதாரண காரணமா யிருக்கின்ற தென்ப துணர்த்துதற் பொருட்டு, பொருளின்பங்கட்கு ஊழை முதற்காரணமென்றுகூறினார். முதற்காரணமென்பதற்குத் தலைமைக்காரணம் அஃதாவது அசாதாரண காரணமென்று பொருள் கொள்ளல்வேண்டும். ஊழ் பொருளின்பங்கள் வருதற்கு நிமித்த காரணமாம். ஒன்றன் உற்பத்தி மாத்திரத்தின் சிறந்தகாரணம் நிமித்தகாரணமாம்.*

* "நிருவசனம் அல்லது நிருத்தி என்பதாவது ஊழ்: அஃதாவது இருவினைப்பயனை செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதி என ஒருசொற்கு வாக்கியத்தொடராகப் பொருளுணர்த்துவ தென்க." என்பது பிரயோகவிவேகவுரை.

† "பல்லாவுளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த, கிழவனை நாடிக் கொளற்கு" என்பது நாலடியார்.

நியதி, விதியென்பன ஒருபொருட் கிளவி. இது பொருளின்பங்கள் இரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படாமையானும், மேற்கூறிய † அறத்தோ டியையுடைமையானும், ‡ அதனது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

தெளி:—அஃதாவது நல்வினையின்பயனாகிய இன்பமும், தீவினையின் பயனாகிய துன்பமும், அவ்வவ்வினையைச் செய்தவனையே சென்றடைவதற்குக் காரணமாகிய நியதியாம். ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பவை ஒருபொருட் சொற்கள். இவ்வூழ் பொருளின்பங்களிரண்டிற்கும் பொதுவாய் ஒன்றனுள்வைக்கப் படாமையாலும், முன் சொல்லிய அறத்தோடு சம்பந்தமுடைமையாலும், அதனிறுதியில் வைக்கப்பட்டது.

க. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

பரி:—(இ - ள்.) ஒருவற்குக் § கைப்பொரு ளாதற்குக் காரணமாகிய ஊழான் முயற்சி உண்டாம்; அஃதழிதற்குக் காரணமாகிய ஊழான் மடி உண்டாம், (எ - று).

¶ ஆகூழ் போகூழென்னும் வினைத்தொகைகள் எதிர்காலத்தான் விரிக்கப்பட்டுக் காரணப்பொருளவாய் நின்றன. அசைவு—மடி † பொ

† இல்லறத்தின் பயனும் துறவறத்தின் பயனும் ஊழின் பயனாயிருத்தலின் 'அறத் தோடியையுடைமையானும்' என்று கூறப்பட்டது.

‡ அதனது இறுதிக்கண்—அறத்துப்பாலின் ஈற்றில் (முடிவில்).

§ கைப்பொருளாதற்கு-கையிற்பொருளுண்டாகிவிருத்தியடைதற்கு.

¶ கைப்பொருள் ஆதற்குக்காரணம் நல்லூழாயும் அப்பொருள் அழிதற்குக்காரணம் தீயூழாயுமிருத்தலால்ஆகூழ் என்பதும் போகூழ் என்பதும் காரணப்பொருளில் வந்த எதிர்கால வினைத்தொகைகளாயின; ஆகூழ்-ஆதற்குக் காரணமாகிய ஊழ் என்றும், போகூழ் - போதற்குக் காரணமாகிய ஊழ் என்றும் விரியும். வினைச்சொல்லின்பகுதியும் பெயர்ச்சொல்லும் புணர்ந்து வருவது வினைத்தொகை யெனப்படும். இங்கு ஆகுபோகு என்னும் வினைச்சொற்பகுதிகள் ஊழ் என்பதனோடு புணர்ந்து வினைத்தொகைகளாய் நின்றவாறறிக. இலக்கணக்கொத்து "வினைச்சொ லிலக்கணம்" என்னுஞ் சூத்திரத்தினுரையில் "நச்சினார்க்கினியார் நன்னூலார் முதலாயினோர் இயற்கை முதனிலை ஆபோ என்றே இருக்குமென்றார். திருவள்ளுவர் பரிமேலழகர் முதலாயினோர் இயற்கை முதனிலை ஆகு போகு என்றே இருக்குமென்றார்" என்று கூறியிருத்தலு மிங் கறியத்தக்கதாம்.

† பொருளின் ஆக்கத்திற்குத் துணைக்காரணம் முயற்சியென்றும், அதனழிவிற்குத் துணைக்காரணம் மடி (சோம்பல்) என்றும் கொள்க.

ருளின் ஆக்க வழிவுகட்குத் துணைக்காரணமாய முயற்சி மடிகளையுந் தானே தோற்றுவிக்கு மென்பது கருத்து.

தெளி:—(இ-ள்.) (ஒருவனுக்கு) கைப்பொருள்—, ஆகூழால் - ஆவதற்குக் காரணமாகிய ஊழினால், அசைவின்மை - முயற்சியானது, தோன்றும் - உண்டாகும், போகூழால் (அப்பொருள்) அழிதற்குக் காரணமாகிய ஊழினால், மடி - சோம்பலானது, தோன்றும் - உண்டாகும், (எ - று).

ஆகூழ் போகூழ் என்பன காரணப்பொருளில்வந்த எதிர்கால வினைத் தொகைகள். அசைவு—சோம்பல். ஊழானது பொருளினது ஆக்கவழிவுகளுக்குத் துணைக்காரணமாகிய முயற்சி சோம்பல்களையுந் தானே தோன்றச்செய்யு மென்பது கருத்து.

(க-து.) ஆகூழினால் முயற்சியும் போகூழினால் சோம்பலும் உண்டாம் என்பது.

1. Perseverance comes from a prosperous fate and idleness from an adverse fate.

உ. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

பரி:—(இ - ள்.) ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவாயினும் கைப்பொருளிழத்தற் கேதுவாகிய ஊழ் வந்துற்ற விடத்து, * அஃது அதனைப் பேதையாக்கும்;இனி அவனறிவு சுருங்கி யிருப்பினும் கைப்பொருளாதற் கேதுவாகிய ஊழ்வந்துற்ற விடத்து † அஃது ‡ அதனை விரிக்கும், (எ - று).

¶ கைப்பொருளென்பது அதிகாரத்தான் வந்தது. $ இழவூழ் ஆகலூழென்பன இரண்டும் வேற்றுமைத்தொகை. உற்றக்கடையென்பதுமுன்னுங் கூட்டப்பட்டது. இயற்கையானுய அறிவையும் வேறுபடுக்கு மென்பதாம்.

தெளி:—(இ - ள்.) (ஒருவனுக்கு) அறிவு - எல்லாவறிவும், (உண்டாயிருந்தாலும்), இழவு - (கைப்பொருளை) இழத்தற்குக் காரணமாகிய, ஊழ்-ஊழானது, (வந்து), உற்றக்கடை-பொருந்திய விடத்து, (அவ்வூழானது),

* அஃது - கைப்பொருளிழத்தற்குக் காரணமாகிய ஊழ்.

† அஃது-கைப்பொருள் விருத்தியாதற்குக் காரணமாகிய ஊழ்.

‡ அதனை - அச்சுருங்கியவறிவை.

¶ "ஆகூழாற்றோன்றும்" என்னும் குறளிலுள்ள கைப்பொருள் என்பது ஊழென்னு மதிகாரத்தினால் இக்குறளிலும் வந்தது.

$ இழவூழ் ஆகலூழ் என்னு மிரண்டும் இழத்தற்குக் காரணமாகிய ஊழ் என்றும், ஆதற்குக்காரணமாகிய ஊழ் என்றும் முறையே விரியும்.

பேதைப்படுக்கும் - (அவ்வறிவினை) அறியாமையாக்கும்,(இனி அவனறிவு சுருங்கியிருந்தாலும்), ஆகல் - (கைப்பொருள்) ஆவதற்குக் காரணமாகிய, ஊழ்-ஊழானது, (வந்து), உற்றக்கடை - பொருந்திய விடத்து, அகற்றும் - (அவ்வூழவ்வறிவினை) பெருகச் செய்யும், (எ - று).

கைப்பொருளென்பது ஊழென்னும் அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. இழவூழ் ஆகலூழ் என்பன நான்காம் வேற்றுமை யுருபும் பயனுமுடன்றொக்க தொகைகள். உற்றக்கடையென்பது இழவூழ் என்பதனோடுங் கூட்டப்பட்டது. ஊழ் இயற்கையாலாகிய அறிவையும் வேறுபடுத்துமென்பதாம்.

(க - து.) ஒருவன் அறிவிலியா யிருத்தற்கும் அறிவுடையவனா யிருத்தற்கும் காரணம் ஊழேயா மென்பது.

2. An adverse fate produces folly and a prosperous fate produces enlarged knowledge.

---

௩. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

பரி:—(இ - ள்.) பேதைப்படுத்தும் ஊழுடையான் ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல் பலவற்றையுங் கற்றானாயினும், அவனுக்குப் பின்னும் தன் னூழானாகிய பேதைமை யுணர்வே மேற்படும், (எ - று).

† பொருளின் நுண்மை நூலின்மேலேற்றப்பட்டது. மேற்படுதல் - கல்வியறிவைப் பின்னிரங்குதற்காக்கிச் செயலுக்குத் தான் முற்படுதல். ‡ "காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா, வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்" என்பதுமது. செயற்கையானாய அறிவையுங் கீழ்ப்படுத்துமென்பதாம்.

---

† பொருளினது நுட்பத்தை நூலின்மேலேற்றி 'நுண்ணியநூல்' என்று கூறப்பட்டது. நூலினது பொருள்நுட்பத்தை நூலின்மேலேற்றிக்கூறியது இடத்துநிகழ்பொருளின் குணம் இடத்தின் மேலாயஉபசார வழக்காம்.

‡ சீவகசிந்தாமணி கனகமாலையா ரிலம்பகம் ௭௬. இதன்பொருள் காதல் (ஆசை) மிக்கவிடத்து (துன்பத்திற்குத் துணையென்று) கற்றகல்வியும் (பிறர் குற்றம் நீக்குதற்கு உதவுதலன்றி என்குற்றம் நீக்குதற்கு) உதவா தொழிதல் கண்ணினுட் கிடந்த அஞ்சனத்தை (மையை) யொக்குமாயிருந்தது என்பது. இதனது விசேட வுரையில் நச்சினார்க்கினியர் "கண்ணினுட்கிடந்த அஞ்சனம் அதற்குப்பயன் கொடாதது போலக்கல்வி நெஞ்சிற்கிடந்தும் பயன் தந்ததில்லை என்றான்" என்று கூறியிருக்கின்றனர்.

தெளி:—(இ - ள்.) (அறியாமையை யுண்டாக்குவதாகிய ஊழுடையானொருவன்) நுண்ணிய-நுட்பமாய பொருள்களை (அறிவிக்கும்), நூல் பல-நூல்பலவற்றையும், கற்பினும்-கற்றாலும், (அவனுக்கு), மற்றும்-பின்னும், தன்னுண்மை - தனது ஊழினாலாகிய, அறிவே - பேதைமையறிவே, மிகும் - மேற்படும், (எ - று).

* பொருளினது நுண்மை நூலின்மேல் ஏற்றப்பட்டது. பேதைமையறிவு மேற்படுதல் - கல்வியறிவைப் பின்பு நினைத்து இதை யேன் செய்தோமென்று மனமிரங்கித் துன்பப்படுவதற் காக்கிச் செயலுக்குத் தான் முற்படுதல். ஊழ் செயற்கையாலாகிய அறிவையும் கீழ்ப்படுத்து மென்பதாம்.

(க - து.) நுட்பமான பொருள்களை நூல்வாயிலாக அறிந்திருப்பவனுக்கும் ஊழினாலாகிய அறிவே மேற்பட்டிருக்கும்.

3. Although a man may study the most polished treatises, the knowledge which fate has decreed to him will still prevail.

௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

பரி:—(இ-ள்.) உலகத்து ஊழினான் ஆய வியற்கை இரண்டுகூறு; ஆகலான், செல்வமுடைய ராதலும் வேறு, அறிவுடைய ராதலும் வேறு, (எ - று).

செல்வத்தினைப் படைத்தலும், காத்தலும், பயன்கோடலும் அறிவுடையார்க் கல்லது இயலா அன்றே, அவ்வாறன்றி அறிவுடையார் வறியராகவும் ஏனையார் செல்வராகவுங் காண்டலான், அறிவுடையராதற்காகும் ஊழ் செல்வ முடையராதற் காகாது, செல்வமுடையராதற் காகும் ஊழ் அறிவுடைய ராதற் காகா தென்றதாயிற்று. ஆகவே, செல்வஞ் செய்யுங்கால் அறிவாகிய துணைக்காரணமும் வேண்டா வென்பது பெற்றாம்.

தெளி:—(இ - ள்). உலகத்து - உலகத்தில், இயற்கை - (ஊழினாலாகிய) இயற்கையானது, இருவேறு - இரண்டு கூறாயிருக்கின்றது, (ஆதலால்), திரு - செல்வமுடையவ ராதலும், வேறு - வேறாம், தெள்ளியராதலும் - அறிவுடைய ராதலும், வேறு - வேறாம், (எ - று).

செல்வத்தைச்சம்பாதித்தலும், காப்பாற்றலும், பயன் கொள்ளுதலும், அறிவுடையவர்க் கல்லாமல் (ஏனையோர்க்கு) கூடாவன்றே, அவ்விதமல்லாமல் அறிவுடையவர் தரித்திரராகவும் மற்றவர் செல்வராகவும் காணுதலால், அறிவுடைய ராதற்குக் காரணமாகும் ஊழ் செல்வமுடைய ராதற்குக் காரணம் ஆகாது, செல்வமுடைய ராதற்குக் காரணமாகும் ஊழ் அறிவுடையராதற்குக் காரணமாகாதென்ற தாயிற்று. ஆகவே, செல்வத்தைத் தேடும்போது அறிவாகிய துணைக்காரணமும் வேண்டாமென்பது பெற்றாம்.

*(க - து.) ஊழின்காரிய மிருவகையாயிருத்தலால் அறிவிலாஞ் செல்வராயும் அறிவுடையார் தரித்திராயு மிருக்கின்றனர்.

4. There are through fate two different natures in the world ; hence the difference observable in men in their acquisition of wealth, and in their attainment of knowledge.

௫. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

பரி:—(இ - ள்.) செல்வத்தை ஆக்குதற்கு நல்லவை யெல்லாந் தீயவாய் அழிக்கும்; அதுவேயன்றித் தீயவைதாமும் நல்லவாய் ஆக்கும்; ஊழ்வயத்தான், (எ - று).

நல்லவை தீயவை யென்பன காலமும், இடனும், கருவியும், தொழிலும் † முதலாயவற்றை. ‡ ஊழ்வயத்தா னென்பது அதிகாரத்தாற் பெற்றும் * அழிக்கும் ஊழுற்றவழிக்காலமுதலிய நல்லவாயினும் அழியும்; ஆக்கும் ஊழுற்றவழி அவை தீயவாயினும் ஆகு மென்பதாயிற்று. ஆகவே, காலமுதலிய துணைக்காரணங்களையும் வேறுபடுக்கு மென்பது பெற்றும்.

தெளி:—(இ - ள்.) செல்வம்-செல்வத்தை, செயற்கு-சம்பாதிச்சற்கு, நல்லவை யெல்லாம் - நன்மையா யுள்ளவை யெல்லாம், தீயவாம் - தீயவையாய் அழிக்கும், (அதுமாத்திரமல்லாமல்), தீயவும்-தீயவைதாமும், நல்லவாம்-நல்லவையாய் ஆக்கும், (ஊழ்வசத்தால்), (எ-று).

நல்லவை தீயவை என்பன காலமும், இடமும், கருவியும், தொழிலும் முதலாயவற்றை. ஊழ்வசத்தாலென்பது ஊழென்னும் அதிகாரம் பற்றி வருவிக்கப்பட்டது. அழிக்குமூழ் உற்றவிடத்து காலமுதலாயின நல்லனவா யிருந்தாலும் செல்வம் அழியும், ஆக்கும் ஊழ் உற்றவிடத்து அக்கால முதலாயின தீயனவா யிருந்தாலும் செல்வம் ஆகுமென்பதாயிற்று. ஆகவே, ஊழ் காலமுதலிய துணைக்காரணங்களையும் வேறுபடுத்து மென்பது பெற்றாம். அழிக்குமூழ் - தீவினை, ஆக்குமூழ் - நல்வினை.

(க - து.) ஊழ்வசத்தால் நல்லவை கெட்டவையாயும் கெட்டவை நல்லவையாயும் மாறும் என்பது.

5. In the acquisition of property, everything favourable becomes unfavourable, and on the otherhand every thing unfavourable becomes favourable, through the power of fate.

† முதலாய என்றதனால் மெய்வருத்தம்பாராமை, பசிநோக்காமை, நித்திரை செய்யாமை, அவமதிப்பைக்கருதாமை முதலியனவுங் கொள்க.

‡ ஊழான் என்றும் பாடமுண்டு.

* தீவினை வந்தபோது பொன்னும் மண்ணும்; நல்வினை வந்தபோது மண்ணும் பொன்னு மென்க.

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

பரி:—(இ - ள்.) தமக்கூழல்லாத பொருள்கள் வருந்திக்காப்பினும், தம்மிடத்து நில்லாவாம்; ஊழால் தமவாயபொருள்கள், புறத்தே கொண்டுபோய்ச் சொரிந்தாலும், நம்மைவிட்டுப் போகா, (எ-று).

பொருள்களின் நிலையும் போக்கும் ஊழினன் ஆவதல்லது † காப்பிகழ்ச்சிகளான் ஆகா வென்பதாம். இவை ஆறுபாட்டானும் பொருட்குக் காரணமாய ஊழின்வலி கூறப்பட்டது

தெளி:—(இ - ள்.) பால்-ஊழினால், அல்ல - (தமக் குரியவை) ஆகாத பொருள்கள், பரியினும்-வருந்திக் காப்பாற்றினாலும், ஆகாவாம்-(தம்மிடத்து) நில்லாமற்போகும். தம-(ஊழினால்) தம்முடையனவாகிய பொருள்கள், உய்த்து-(புறத்தே) கொண்டுபோய், சொரியினும் - பெய்து விட்டாலும், போகா - (தம்மைவிட்டுப்) போகாவாம், (எ - று).

பொருள்களது நிலையும் போக்கும் ஊழினால் ஆவதல்லாமல் காப்பினாலும் இகழ்ச்சியினாலும் ஆகாவென்பதாம். இவை ஆறுபட்டாலும் பொருளுக்குக் காரணமாகிய ஊழின்வலி சொல்லப்பட்டது.

(க - து.) வருந்திக்காக்கும் பொருள் நில்லாமலொழிவதற்கும் அவ்வாறு காவாத பொருள் ஒழியாது நிற்பதற்கும் காரணம் ஊழேயாம் என்பது.

6. Whatever is not conferred by fate cannot be preserved, although it be guarded with most painful care; and that, which fate has made his, cannot be lost although one should even take it and throw it away.

---

எ. ‡ வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

பரி:—(இ - ள்.) § ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள் ¶ கோடியை முயன்று தொகுத்தார்க்கும் தெய்வம் வகுத்தவகையான் அல்லது நுகர்தலுண்டாகாது, (எ - று).

---

† காப்பிகழ்ச்சி - (பொருள்களைக்) காத்தல் காவாதிகழுதல்.

‡ இலக்கணக்கொத்து "அவைதா - மனமொழி" என்னுஞ்சூத்திரத்தினுரையில் "பரிமேலழகர் பயன்வினைவேறுவினையென இரண்டுகொண்டு பயன்வினையைப் பலவிடத்தினும் பலவாகவிரித்து வேறுவினையை 'வகுத்தான் வகுத்த வகையல்லாற்கோடி' என்பதனுட் கொண்டார்" என்று கூறுகின்றது.

§ ஐம்பொறிகள் - செவி முதலிய இந்திரியங்கள்.

¶ கோடியென்பது - (அனுபவிக்கப்படும் பொருள்கள்) பலவற்றை யுணர்த்தி நின்றது.

ஓருயிர் செய்த வினையின்பயன் பிறிதோருயிரின்கட் செல்லாமல் அவ்வுயிர்க்கே † வகுத்தலின் 'வகுத்தான்' என்றார்; * "இசைத்தலு முரிய வேறிடத் தான" என்பதனான் உயர்திணையாயிற்று. ‡ தொகாதார்க்கே யன்றித்தொகுத்தார்க்கும் என்றமையான், உம்மை எச்ச உம்மை. ¶ வேறு முயற்சிகளாற் பொருள்களைப் படைத்தலல்லது நுகர்தலாகாது, அதற்கு ஊழ் வேண்டுமென்பதாயிற்று.

தெளி:—(இ - ள்.) கோடி - (பஞ்சேந்திரியங்களால் அனுபவிக்கப் படும் பொருள்கள்) கோடியை, தொகுத்தார்க்கும்-முயற்சிசெய்து சேர்த்த வர்களுக்கும், வகுத்தான்-தெய்வம், வகுத்தவகை யல்லால்-வகுத்தவகையா லல்லாமல், துய்த்தல் - அனுபவித்தல், அரிது - உண்டாகாது, (எ - று).

தெய்வம் ஓருயிர் செய்த வினையின்பயனை மற்றோருயிரி னிடத்துச் செல்லாதபடி அந்த வுயிர்க்கே வகுத்தலால் அதனை 'வகுத்தான்' என்றார்; உயர்திணைப்பொருளை யுணர்த்திய தெய்வமென்னும் அஃறிணைச்சொல் "இசைத்தலு முரிய வேறிடத் தான" என்னும் சூத்திரத்தினால் வகுத்தான் என உயர்திணையாயிற்று. (இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் பொருள்கள் பலவற்றைத்) தொகாதாக்கே யல்லாமல் தொகுத்தார்க்கும் என்றதனால் (தொகுத்தார்க்கும் என்னும்) உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாம். வேறு முயற்சிகளால் பொருள்களைச் சேர்க்கலாமே யல்லாமல் அனுபவித்தல் முடியாது, அதற்கு ஊழ்வேண்டு மென்பதாயிற்று.

(க - து.) அனுபவிக்கும் பொருள்கள் பலவற்றைச் சேர்த்து வைத்திருப்பவர்க்கும் ஊழ் வகுத்ததற்குமேல் அனுபவித்தல் முடியாது என்பது.

7. Even those who gather together millions will only enjoy them, as it has been determined by the disposer of all things.

அ. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின்.

பரி:—(இ - ள்.) வறுமையான் நுகர்ச்சியில்லாதார் துறக்குங்கருத்துடையாராவர், ஊழ்கள் உறுதற்பாலவாய துன்பங்களை உறுவியா தொழியுமாயின், (எ - று).

† வகுத்தலின்-விதித்தலால்.

* தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவியாக்கம் - ருக. இதன் பொருள் காலமுதலாகியசொல் உயர்திணையா யிசைத்தலுமுரிய; ஈறு திரிந்துவாய்பாடு வேறுபட்டவழி என்பது.

‡ படையாதார்க்கேயன்றிப் படைத்தார்க்கு மென்றமையின் என்னும் பாடமுண்டு. ¶ வெறு என்றும் பாடமுண்டு.

துறப்பாரென்பது ஆரீற்றெதிர்கால முற்றுச்சொல். தம்மால் * விடப்படுவன தாமே விடப்பெற்று வைத்தும் † கருத்து வேறுபாட்டாற் றுன்புறுகின்றது ஊழின் வலியானென்பது எஞ்சிநிற்றலின், ‡ மன் ஒழியிசைக்கண் வந்தது.

தெளி:—(இ - ள்.) துப்புரவில்லார் - (வறுமையால்) அநுபவித்தலில்லாதவர், துறப்பார் - (இல்வாழ்க்கையைத்) துறக்குங் கருத்துடையவராவர், (ஊழ்கள்), உறற்பால - அடையுந் தன்மையனவாய துன்பங்களை, ஊட்டா - அடைவிக்காமல், கழியுமெனின் - நீங்குமாயின், (எ - று).

'துறப்பார் என்பது ஆர்விகுதிபெற்ற எதிர்கால வினைமுற்றுச்சொல். (துப்புரவில்லார்) தம்மால் விடப்படுவன வெல்லாம் தாமே விடப்பெற்றிருந்தும், கருத்துவேறுபாட்டால் துன்பமடைகின்றது ஊழினது வலியாலென்பது குறைந்து நிற்றலால், மன் என்னுமிடைச்சொல் ஒழியிசைப் பொருளில் வந்தது.

(க - து.) தரித்திரர் துறவறத்தை மேற்கொள்ளாது வருந்துவதற்குக் காரணம் ஊழேயாம் என்பது.

8. The destitute will renounce desire and become ascetics, if fate do not make them suffer the hindrances to which they are liable and they pass away.

௯. நன்றுங்கா னல்லவாக் காண்பவ ரன்றுங்கா
லல்லற் படுவ தெவன்.

பரி:—(இ-ள்.) நல்வினை விளையுங்கால் அதன் விளைவாய இன்பங்களைத் துடைக்குந்திறன் நாடாது இவை நல்லவென்று இயைந்தனுபவிப்பார் ஏனைத்தீவினை விளையுங்கால் அதன் விளைவாய துன்பங்களையும் அவ்வா றனுபவியாது துடைக்குந் திறன் நாடி அல்லலுழப்பது என் கருதி, (எ-று).

தாமே முன்செய்து கொண்டமையானும், ஊட்டாது கழியாமையானும் ¶ இரண்டும் இயைந்தனுபவிக்கற்பால; அவற்றுள் § ஒன்றற்கு

* விடப்படுவன - விடப்படும் பொருள்கள்.

† கருத்து வேறுபாட்டால் - விடாதனவாக எண்ணிக்கொண் டிருத்தலால்;

‡ மன்என்னு மிடைச்சொல் எச்சமாய்த் 'தம்மால் .................. துன்புறுகின்றது ஊழின் வலியான்' என்னும் ஒழிந்து நின்ற சொற்பொருளை யுணர்த்துதலால் ஒழியிசைப் பொருளதாயிற்று.

¶ இரண்டும்-நல்வினையின் பயனாகிய இன்பமும், தீவினையின்பயனாகிய துன்பமும்.

§ ஒன்றற்கு - நல்வினையின் பயனாகிய இன்பத்திற்கு.

